சுதந்திர சிந்தாமணி—II

# ஜவஹர்லால் நேரு

## சுயசரித்திரம்

இரண்டாம் பாகம்






சங்கு. கணேசன்
திருவல்லிக்கேணி : : சென்னை
1937

## பொருளடக்கம்

# XXXVIII

## வட்ட மேஜை மகாநாடு

மகாத்மா காந்தியுடன் இந்தியாவிலும், லண்டன் வட்டமேஜை மகாநாட்டிலும், அதிகமாகப்பேசிப் பழகியதாக பாத்தியம் கொண்டாடும் ஆங்கிலப் பத்திரிகாசிரியர் ஒருவர் தாம் எழுதிய நூலில் பின்வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்: "காங்கிரஸ் காரியக் கமிட்டிக்குள்ளாகவே காந்திஜிக்கு விரோதமாக சூழ்ச்சி நடப்பதாக "மூல்தான்" கப்பலில் இருந்த தலைவர்களுக்குத் தெரியும். காலம் கனிந்து நிற்கும் சமயத்தில் காங்கிரஸ் சபையிலிருந்து காந்திஜி வெளியே துரத்தப்படுவாரென்று அவர்கள் அறிவார்கள். காந்திஜியை காங்கிரஸ் வெளியே துரத்துமானால், காங்கிரசின்பேர்பாதி அங்கத்தினர்களையும் வெளியேதுரத்தவேண்டியதாயிருக்கும். இந்தப்பாதியைமிதவாதக்கட்சியோடுஇணைத்துக்கொள்ள ஸர் தேஜ்பகதூர் சாப்ருவும் ஜயகரும் விருப்பங்கொண்டார்கள். காந்திஜீ மதிக்குழப்பமுள்ள பேர்வழி என்று அவர்கள் தங்களுக்குள் வெளிப்படையாகப் பேசிக்கொண்டனர். ஆயினும் காந்திஜீ தம்மைப்போல லட்சக்கணக்கான குழம்பின சிஷ்யர்களைக் கொண்டுவந்து சேர்க்கக்கூடுமானால், அவரைத் தங்கள் பக்கம் இழுத்துக்கொள்வதில் லாபமுண்டாகும் என்று எண்ணினார்கள்.

1931-ம் ஆண்டில் லண்டனுக்குச் சென்ற வட்டமேஜை மகாநாட்டுப் பிரதிநிதிகளில், சாப்ருவும், ஜயகரும் என்ன எண்ணம் கொண்டிருந்தார்களென்று எனக்குத் தெரியாது. இந்திய அரசியலில் சிறிது அனுபவம் கொண்டவர் கூட இவ்விதம் எழுதியிருக்க முடியாது. நான் அதைப் படித்து வியப்படைந்தேன். இவ்வித யோசனை வதந்தியாகக் கூட என் காதிற்கு எட்டவில்லை. அந்தக்காலத்தில் நான் சிறையிலிருந்ததால் ஒருவேளை கேள்விப்படாமல் இருக்கலாம். சூழ்ச்சி செய்தவர்கள் யார்? அவர்களுடைய நோக்கம் என்ன? காரியக் கமிட்டிக்குள் நானும், வல்லபாய் படேலும்

31

மிகத் தீவிர வாதிகள் என்று சில சமயங்களில் சொல்லப் படுவதுண்டு. ஆகவே நாங்கள் இருவரும் சூழ்ச்சியின் தலை வர்கள் என்று மதிக்கப்பட்டிருக்க வேண்டும். வல்லபாய் படேல் மிகவும் சக்திபடைத்தவர்; வேலையிலே விடாமுயற்சி யுள்ளவர்; அவருக்குக் காந்திஜீயிடம் ஒப்பற்ற பக்தி உண்டு. காந்திஜீயின் லட்சியங்களையும், முறையையும் அப்படியே ஏற் றுக் கொண்டிருப்பவர். இந்தியா முழுதிலும் வல்லபாயைக் காட்டிலும் தீவிர காந்தி பக்தரைக் காண முடியாது. காந்தி ஜீயின் கொள்கைகளை, வல்லபாயைப் போல, நானும் பூர்ண மாக ஏற்றுக் கொண்டதாகச் சொல்ல முடியாது. ஆனால் காந்திஜீயோடு மிகவும் நெருங்கித் தொண்டு செய்யும் பாக்கி யத்தைப் பெற்றிருக்கிறேன். எந்த வகையிலும் அவருக்கு விரோதமாக நான் சூழ்ச்சிசெய்யக்கூடுமென்பது அபாண்ட மான பொய்யாகும். காங்கிரஸ் காரியக் கமிட்டியைப்பற்றி யும் இப்படியே கூறிவிடலாம். காரியக் கமிட்டி காந்திஜீயின் சிருஷ்டி ஆகும். சில தோழர்களைக் கலந்து கொண்டு அவர் அங்கத்தினர்களை நியமனம் செய்வார். தேர்தல் என்பது விதிகளை அனுஷ்டிப்பதற்கான பாவனைதான். காரியக் கமிட் டிக்கு முதுகெலும்பைப் போன்ற முக்கிய அங்கத்தினர்கள் அதில் பல வருஷங்கள் உழைத்து, அநேகமாக சாசுவத அங்கத்தினர்களாக ஆகிவிட்டார்கள். அவர்களுக்குள்ளே அரசியலில் அபிப்பிராய பேதங்கள் இருந்தன; நோக்கத்தி லும் தன்மையிலும் மாறுபாடுகள் இருந்தன. ஆனால் பல ஆண்டுகள் நெருங்கிப் பழகி, பொதுவான பொறுப்பைஏற்று, பொதுவான அபாயங்களை எதிர்த்துப் போராடியதால் அவர் கள் ஒருவரோடொருவர்நெருங்கி,பிரிக்கக்கூடாதஒருகூட்ட மாகிவிட்டார்கள். அவர்களுக்குள் நட்பும், தோழமையும் பரஸ்பர மதிப்பும் நிலவி வந்தன. காங்கிரஸ் காரியக் கமிட்டி பல கட்சித் தலைவர்கள் சேர்ந்த கூட்டமல்ல. அவர்கள் ஒரே உயிரை நம்பி வாழும் பொறிகளைப் போன்றவர்கள். ஆகவே ஒருவர் மற்றவருக்கு விரோதமாக சூழ்ச்சி செய்வ தென்பது கற்பனை கூட செய்ய முடியாதது. காந்திஜீ கமிட்டியில் சர்வாதிகாரம் பெற்றிருந்தார். வழி காட்டியாக ஒவ்வொருவரும்அவரைப்பின் தொடரசித்தமாகவிருந்தனர். பல ஆண்டுகளாக இவ்வாறுதான் நடந்து வந்தது. 1930-ம் வருஷப் போராட்டத்தின் வெற்றிக்குப் பிறகு, 1931-ம் ஆண்டில், காந்திஜீயின் தலைமையை இன்னும் அதிகமாக ஏற்றுக்கொண்டார்கள். காரியக் கமிட்டியிலிருக்கும் தீவிர

வாதிகள் அவரை வெளியே துரத்த முயல்வதின் நோக்கம் எதுவாக இருக்கலாம்? காந்திஜீ விரைவிலே ராஜியை விரும்பு பவர்; ஆகையால் தடையாக இருப்பவர் என்ற கருத்துக் கொண்டு அவரை வெளியே துரத்த யோசனை செய்தார்கள் என்று சொல்லக்கூடும். ஆனால் அவரில்லாமல் போராட்டம் எங்கே? சட்ட மறுப்பும் சத்தியாக்கிரகமும் எங்கே? உயி ருள்ள இயக்கத்தின் இன்றியமையாத அம்சமாக காந்திஜீ திகழ்ந்தார். சொல்லப் போனால் அவரேதான் இயக்கம் என் றும் சொல்லவேண்டிவரும். தேசியப்போராட்டம் அவரைப் பொருத்து நின்றது. விடுதலைப் போராட்டம் அவருடைய சிருஷ்டியல்ல. அது யாரையும் சார்ந்து நிற்கவில்லை. அதனு டைய வேர்கள் அதைவிட ஆழமாய்ப் பதிந்துகிடக்கின்றன. விடுதலைப் போராட்டத்தின் ஒரு முக்கிய அம்சமாயிருக்கும் சாத்வீகச் சட்டமறுப்பியக்கம் காந்திஜீயை முற்றிலும் சார்ந்ததாக இருந்தது. அவரை விட்டு விலகுவதென்றால் அந்த இயக்கத்தை அடியோடு உதறித்தள்ளிவிட்டு, வேறு அஸ்திவாரங்களைக் கொண்டு கட்ட வேண்டியதாய் வரும். எந்தக் காலத்திலுமே அவ்வாறு செய்வது மிகவும் கஷ்ட மான வேலையாகும். 1931-ல் அதைப் பற்றி யாருமே சிந்தனை செய்திருக்க முடியாது.

1931-ம் ஆண்டில் காந்திஜீயைக் காங்கிரசை விட்டுத் துரத்திவிட, எங்களில் சிலர் சூழ்ச்சி செய்துகொண்டிருந்தார் கள் என்று சிலர் கனவில்கூட எப்படி நினைக்கக்கூடும் என்பது தான் விசித்திரமா யிருக்கிறது. லேசாக ஜாடை காண்பித்தா லும் போதுமானது, காந்திஜீ தாமே விலகிக் கொள்வாரே! அப்படி யிருக்க நாங்கள் ஏன் சூழ்ச்சி செய்யவேண்டும்? தாம் காங்கிரசிலிருந்து விலகிக் கொள்வதாக காந்திஜீ சொன்னால், அது காரியக்கமிட்டிக்கும் பொதுவாக நாட்டுக்கும் மனக்கலக் கத்தை உண்டாக்கி விடும். அவர் எங்களுடைய இயக்கத்தின் முக்கியமான தலைவராக விளங்குபவர். அவர் விலகிக் கொள் வாரென்ற எண்ணமே எங்களுக்குப் பொறுக்க முடியாது. அவரை லண்டனுக்கு அனுப்புவதற்கு நாங்கள் தயங்கினோம். ஏனெனில் அவரில்லாத காலத்தில், இந்தியாவிலே பொறுப்பு எங்கள்பேரில் விழும். அந்த நிலைமையை நாங்கள் வரவேற் கத் தயாராயில்லை. பொறுப்பை அவருடைய தோள்களில் சுமத்திச்சுமத்திக் காரியம் செய்வதே எங்களுக்குப் பழக்கம். காரியக் கமிட்டியினுள்ளேயும் அதற்கு வெளியேயும் இருந்த

அன்பர்களுக்கும் காந்திஜிக்கும் இருந்த பாசப் பிணைப்புகள் விநோதமானவை. அவரில்லாமல் தற்காலிக வெற்றியைப் பெறுவதைக் காட்டிலும், அவருடன் சேர்ந்து தோற்பது மேலானதென்றுகூட எண்ணத் துணிந்தோம்.

காந்திஜி மூளை குழம்பிய பேர்வழியோ என்னவோ, அதைத் தீர்மானிக்கும் வேலையை நமது மிதவாத நண்பர்களுக்கு விட்டுவிடுவோம். அவருடைய அரசியலில் சில சமயங்களில் வேதாந்த விசாரங்கள் கலந்து கிடக்கின்றன வென்பதும், அதை விளக்கமாக அறிந்துகொள்வது கஷ்டமென்பதும் சந்தேகமின்றி உண்மைதான். ஆனால் காந்திஜியைப் போன்ற சிறந்த கர்ம வீரர் கிடையாது. அவருடைய தைரியத்துக்கு இணையே கிடையாது. சொன்ன சொற்படி காரியங்களை சாதித்துக் கொடுக்கும் வல்லபம் படைத்தவர். குழம்பின மூளையால் இத்தகைய பலன்கள் கிடைக்கக்கூடுமானால், அந்த மூளைக் குழப்பம், குறிப்பிட்ட சிலரோடு நாற்காலிகளில் சாய்ந்துகொண்டு நயமாக அரசியலைப்பற்றிப் பேசும் பேர்வழிகளுடைய மூளைத் தெளிவுக்குக் குறைந்ததில்லை என்று தோன்றுகிறது! கோடிக்கணக்கான அவருடைய பக்தர்கள் குழம்பின மூளைக்காரர்கள்தான். அவர்களுக்கு அரசியல் சூக்ஷ்மங்களையும், திட்டங்களையும் பற்றி அதிகமாகத் தெரியாது. ஆகாரம், குடிசை, உடை, நிலம் முதலிய சாதாரண தேவைகளைப் பற்றித்தான் அவர்கள் யோசிக்க முடியும்.

மனித இயற்கையைக் கண்டறிய பயிற்சிபெற்ற அந்நிய நாட்டுப் பத்திரிகாசிரியர்கள்கூட இந்தியாவைப் பற்றிய வரையில் தவருக எழுதுவதுதான் எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. கீழ்ப் பிரதேசங்களை, உலகத்துக்குப் பொதுவான சாதாரண அளவைக்கொண்டு அளக்கமுடியாதென்றும், கீழ் நாடுகள், மற்றைய நாடுகளிலிருந்து வேறுபட்டவையென்றும் சிறு பிராயத்தில் வெள்ளைக்காரர்களுக்குப் போதிக்கப்படுகிறது. அதனால் இவ்வாறு தப்பிதம் செய்கிறார்கள் போலும்! இங்கிலீஷ்காரர்கள் சம்பந்தப்பட்ட வரையிலும், சாம்ராஜ்ய மமதை அவர்களுடைய கண்களை மூடி, பார்வையைத் திரித்துவிடலாம். சாத்தியமில்லாத சங்கதிகளைக்கூட, அவர்கள் யாதொரு ஆச்சரியமுமின்றி நம்பி விடுகிறார்கள். ஏனென்றால், மாயமான கீழ்நாடுகளில், எது வேண்டுமானாலும் நேரக்

கூடும் என்பது அவர்களுடைய சித்தாந்தம். நல்ல ஆராய்ச்சி கலந்த வரலாறுகளை அவர்கள் சில சமயங்களில் எழுதுகிறார்கள். கீழ் நாடுகளைப்பற்றி நேர்த்தியான புஸ்தகங்களை வெளியிடுகிறார்கள். ஆனால் இடையிடையே மலைபோன்ற தப்பிதங்களையும் செய்கிறார்கள்.

1931-ம் வருடம் காந்திஜீ ஐரோப்பாவுக்குச் சென்றிருக்கையில் "டெய்லி ஹெரால்டு" பத்திரிகையின் கீர்த்தி பெற்ற பாரிஸ் நகர நிருபர் எழுதிய கட்டுரை யொன்றைப் படித்தேன். கட்டுரை இந்தியாவைப் பற்றியது. அதிலே அவர் ஒரு நிகழ்ச்சியைப் பற்றிக் குறிப்பிட்டிருந்தார். அந்த நிகழ்ச்சி 1921-ம் வருடத்தில் ஒத்துழையாமை நடைபெற்றுக் கொண்டிருந்த காலத்தில், வேல்ஸ் இளவரசர் இந்தியாவுக்கு விஜயம் செய்தபொழுது நேர்ந்ததாக அவர் குறிப்பிட்டார். ஏதோ ஒரு இடத்தில் (அந்த இடம் டில்லியாகவிருக்கலாம்.) மகாத்மாகாந்தி திடீரென்று இளவரசர் முன்னே யாதொரு முன்னறிவிப்புமில்லாமல் போய் நின்றாராம். இளவரசருடைய பாதத்தில் காந்திஜீ வீழ்ந்து, அதைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு, அழுதுகொண்டே "இந்தத் துர்ப்பாக்கியமான நாட்டுக்கு தாங்கள் அமைதி அளிக்கக் கூடாதா?" என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டாராம்! காந்திஜீ முதல், எங்களில் யாரும் இந்த வேடிக்கையான கதையைக் கேட்டதே இல்லை. அந்த நிருபருக்கு இதைப்பற்றி எழுதினேன். அவர் வருந்தி, மன்னிப்பு கேட்டுக்கொண்டு, தமக்கு இந்தக் கதை நம்பத் தகுந்த இடத்திலிருந்து கிடைத்ததாக எனக்கு எழுதினார். காங்கிரஸாவது, இந்தியாவாவது நம்பக்கூடாத ஒன்றை அவர் நன்றாக விசாரித்துப் பார்க்காமல், ஏற்றுக் கொண்டதுதான் எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. எவ்வளவோ காலம் இந்தியாவில் வசித்தாலும், இந்தியாவைப் பற்றியும், காங்கிரஸ், காந்திஜீயைப் பற்றியும் ஒன்றும் தெரிந்துகொள்ளாத பல இங்கிலீஷ்காரர்கள் இந்தியாவிலே இருக்கிறார்கள் என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. இந்தக் கதை நம்பத்தகாததும் அபத்தமானதுமாகும். காண்டர்பரியில் வசிக்கும் கிறிஸ்தவ மடாதிபதி (ஆர்ச் பிஷப்) திடீரென்று முஸோலினிக்கு முன்னே பிரவேசித்து, தலைகீழாக நின்று முஸோலினிக்கு மரியாதை செய்யும் பொருட்டு, தமது கால்களை ஆகாயத்தில் தூக்கி ஆட்டிக்கொண்டிருந்தார்

என்று கற்பனை செய்தால், அது எப்படி இருக்குமோ அப்படியே இருக்கின்றது இக்கதையும்.

சமீபத்தில் மற்றொரு பத்திரிகையில் இன்னொரு ரஸமான கதை வெளிவந்தது. காந்திஜீ, கோடிக்கணக்கான பவுன்களை வைத்துக் கொண்டிருக்கிறாராம்! அவர் இதை ரகஸியமாக நண்பர்களிடம் கொடுத்து வைத்திருக்கிறாராம். இந்தப் பணத்தைக் காந்திஜீயிடமிருந்து எப்படியாவது தட்டிவிடவேண்டுமென்று காங்கிரஸ் ஆசை கொண்டிருக்கிறதாம்! காந்திஜீ காங்கிரஸைவிட்டு விலகினால், இந்தப் பொக்கிஷம் போய்விடுமே என்று காங்கிரஸ் பயந்து கொண்டிருக்கிறதாம்! இந்தக் கதை தோற்றத்திலேயே அபத்தமென்பது யாருக்கும் தெரியும். ஏனெனில் காந்திஜீ மறைவாகவோ, சொந்தத்திலோ ஒருபைசாகூட வைத்துக்கொள்வதில்லை. அவர் வசூல் செய்யும் பணத்தை எல்லாம் பொது ஸ்தாபனங்களுக்குக் கொடுத்து விடுகிறார். ஒவ்வொரு பைசாவுக்கும் கணக்குச் சொல்லாவிட்டால், அவர் யாரையும் எளிதிலே விட்டுவிட மாட்டார். அவர் வசூலித்த பணங்களின் கணக்குகள்பகிரங்கமாக சோதிக்கப்படுகின்றன. இந்தவதந்தி, 1921-ம் வருடத்தில் காங்கிரஸ் வசூல்செய்த ஒரு கோடி ரூபாயை ஆதாரமாகக் கொண்டிருக்கலாம்! இந்தத்தொகை காகிதத்திலே பெரிதாக விழுகிறதேயல்லாமல், இந்தியா முழுதும் பரத்திப்பார்த்தால்மிக அற்பமாகக் காணப்படும். பள்ளிகளையும் தேசியக் கலாசாலைகளையும் நிறுவுவதற்காகவும், குடிசைத்தொழில்களை, முக்கியமாக கதரை, அபிவிருத்தி செய்வதற்காகவும், தீண்டாமையை ஒழிப்பதற்காகவும், நிர்மாண வேலையின் வேறுபல பகுதிகளிலும், இந்தத் தொகை செலவு செய்யப்பட்டது. இந்தத் தொகையில் பெரும்பான்மை சில விசேஷ வேலைகளுக்காக ஒதுக்கிவைக்கப்பட்டது. இன்றைக்கும் அந்தவேலைகள் இந்த நிதியின் மூலமாக நடந்துவருகின்றன. பாக்கி நிதி அங்கங்கே இருக்கும் காங்கிரஸ் கமிட்டிகளுக்கு காங்கிரஸ் ஸ்தாபனங்கள் அமைக்கவும், அரசியல் வேலைக்குச் செலவழிக்கவும் கொடுக்கப்பட்டது. இந்த நிதியினால் சில வருஷங்களுக்கு காங்கிரஸ் வேலை வெகு நன்றாக நடைபெற்றது. இந்த நிதியின்மூலமாகவே ஒத்துழையாமை இயக்கம் நல்ல வளர்ச்சியைப் பெற்றது. குறைந்த தொகையைக் கொண்டு நமது அரசியல் இயக்கத்தை நடத்தவேண்டுமென்று காந்திஜீ எங்களுக்கு சொல்லிக் கொடுத்தார்.

மேலும் நாட்டு வறுமையின் மூலமாகவும் இதை நாங்கள் தெரிந்து கொண்டோம். அநேகமாக எல்லா வேலையும் ஊதியம் கொடுக்காமலே நடைபெற்றது. ஏதோ ஊதியம் கொடுக்க நேர்ந்தாலும், அது பட்டினியைப் போக்கக்கூடிய அளவுக்குத் தான் கொடுக்கப்பட்டது. இங்கிலாந்திலே, வேலையற்றவர்களுக்குக்கொடுக்கிற சோற்றுப்படியைக்காட்டிலும் குறைவாக, பி. ஏ. பட்டதாரிகளான எங்களுடைய ஊழியர்களுக்கு ஊதியம்கொடுக்கப்பட்டது. இதைக்கொண்டு அவர்கள் தங்களுடைய பெரிய குடும்பங்களைக் காப்பாற்ற வேண்டும். சென்ற பதினைந்து வருஷங்களாக எவ்வளவு குறைந்த தொகையில் காங்கிரஸ் இயக்கம் நடைபெற்று வந்ததோ, அவ்வளவு குறைந்த தொகையில், உலகத்தில் வேறு எங்கேனும் அரசியல் இயக்கத்தையோ அல்லது தொழிலாளர் இயக்கத்தையோ நடத்தியிருக்கிறார்களா என்று நான் சந்தேகப்படுகிறேன். காங்கிரசின் நிதிகள் யாவும், அவைகளின் கணக்குகளும் ஆண்டுதோறும் பகிரங்கமாக சோதிக்கப்பட்டு வருகின்றன. எதையும் மறைப்பதில்லை; சட்டமறுப்பு காலத்தில் காங்கிரஸ் சட்டம் மீறிய ஸ்தாபனம் என்று அரசாங்கத்தாரால் அறிவிக்கப்பட்ட ஒரு சந்தர்ப்பத்தில்தான் கணக்கு மறைக்கப்பட்டது.

காந்திஜி காங்கிரசின் தனிப்பிரதிநிதியாக லண்டன் வட்டமேஜை மகாநாட்டுக்கு சென்றார். நீண்ட நேரம் வாதம் செய்து, அவரோடு வேறுயாரையும் சேர்த்தனுப்பத் தேவையில்லையென்று நாங்கள் தீர்மானித்தோம். இந்தியாவின் அப்போதைய நிலைமை தராசு முனையில் இருந்ததால், அந்த நெருக்கடிகாலத்தில் எங்களுக்குள் இருக்கும் முக்கிய தலைவர்கள் இந்தியாவிலேயே இருக்க வேண்டுமென்பது எங்கள்விருப்பம். லண்டனில் வட்டமேஜை மகாநாடு நடைபெற்றபோதிலும் உண்மையான போர்க்களம் இந்தியாவிலேதான் இருக்கிறதென்றும், இங்கே நடைபெறும் நிகழ்ச்சிகள் லண்டன் வட்டமேஜை மகாநாட்டைப் போய்த்தாக்குமென்றும் நாங்கள் எண்ணினோம். தகாதமுறையில் நிகழ்ச்சிகள் நேருவதைத் தடுப்பதற்கும், எங்களுடைய அமைப்புகளைத் தக்க நிலைமையில் வைத்துக்கொள்வதற்கும் நாங்கள் விரும்பினோம். தனிப்பிரதிநிதியை நாங்கள் அனுப்பினதற்கு இதுவே முக்கியமான காரணமல்ல. தேவையென்றும் உசிதமென்றும் தோன்றியிருந்தால் நாங்கள்நிச்சயமாக வேறுசில

ரையும் அனுப்பியிருப்போம். ஆனல் வேண்டுமென்றே நாங்கள் அந்த மாதிரி செய்யவில்லை. அரசியலமைப்பின் சில்லரை விவரங்களைப்பற்றி முடிவில்லாமற் பேசுவதற்காக நாங்கள் வட்டமேஜை மகாநாட்டில் கலந்து கொள்ளவில்லை. அந்தக்கூட்டத்தில் இத்தகைய விவரங்களில் எங்களுக்கு சிரத்தை கிடையாது. மூலாதாரமான விஷயங்களில் காங்கிரசுக்கும் அரசாங்கத்துக்கும் ஒற்றுமை ஏற்படுமானல், அதன் பின்னர் விவரங்களை யோசித்துக் கொள்ளலாம். ஜனநாயக இந்தியாவுக்கு பிரிட்டிஷ் அரசாங்கத்தார் எவ்வளவு அதிகாரத்தை மாற்றிக் கொடுக்கப் போகிருர்கள் என்பது தான் நிஜமான கேள்வியாகும். இதைப்பற்றி முடிவு ஏற்பட்டுவிட்டால், நகல் எழுதுவதும், விவரங்களைக் குறிப்பிடுவதும் எளிதான வேலையாகும். சாதாரண வக்கீல் எவரும் இந்த வேலையைச் செய்துவிடக் கூடும். இந்த அடிப்படையான விஷயங்களில், காங்கிரசின் நோக்கம் மிகவும் தெளிவாயிருந்தது. அதைப்பற்றி வாதம் செய்ய அதிகமாக இடமே கிடையாது. ஆகவே தனிப்பிரதிநிதியை அனுப்புவது தான் கௌரவமான முறையென்றும் எங்களுடைய தலைவர்போய், அந்த கட்சியை விளக்கிக் காட்டி அதனுடைய பொருத்தத்தையும் தேவையையும் மெய்ப்பித்து, கூடுமானல், பிரிட்டிஷ் அரசாங்கத்தாரைக் காங்கிரஸ் கட்சிக்கு இணங்கச்செய்வது தான் உசிதம் என்றும் எங்களுக்குத் தோன்றிற்று. இது மிகவும் கஷ்டமென்று எங்களுக்குத் தெரியும். அப்பொழுது விஷயங்கள் இருந்த நிலைமையில் அசாத்தியமென்றும் அறிந்தோம்; ஆனல் வேறு வழியில்லை.

எங்களுடைய லட்சியங்களையும் நோக்கங்களையும், நாங்கள்உறுதியாக நம்பியிருந்த கொள்கைகள் எல்லாவற்றையும், விட்டுக்கொடுக்க எங்களால் ஆகாது. இந்த அடிப்படையான தத்துவங்களை ஒப்புக்கொண்டு, ஏதோ அதிர்ஷ்ட வசத்தால் ஒற்றுமை ஏற்படக்கூடுமோகில், மற்றதெல்லாம் ஓடுகிற ஓட்டம். இவ்வாறு ஒற்றுமை யேற்படும் பொழுது காந்திஜீ காரியக்கமிட்டி அங்கத்தினர்களில் சிலரையோ அல்லது எல்லாரையுமோ, லண்டனுக்கு வரவழைத்துக் கொள்வதென்றும் அப்பொழுது ராஜியில் நாங்கள் கலந்துகொண்டு விவரங்களைப் பூர்த்தி செய்ய வேண்டுமென்றும், எங்களுக்குள் தீர்மானம் செய்யப்பட்டது. அழைப்புக்கு நாங்கள் தயாராய் இருக்க வேண்டுமென்றும், தேவையானல் ஆகாயமார்க்கமாக பிரயா

ணம் செய்யவேண்டுமென்றும் எங்களுக்குள் பேசிமுடித்துக் கொண்டோம். அழைப்பு வந்தால் நாங்கள் பத்து நாட்களுக்குள் காந்திஜீயுடன் லண்டனில் இருந்திருக்க முடியும். ஆனல் அடிப்படையான விஷயங்களில், துவக்கத்திலேயே ஒற்றுமை ஏற்படாவிட்டால் பின்னர் விவரமான ராஜிப் பேச்சுகளுக்கு இடமே இல்லை. வேறு சில காங்கிரஸ் பிரதிநிதிகளும் வட்டமேஜை மகாநாட்டுக்குச் செல்லவேண்டிய தேவையும் கிடையாது. ஆகவே காந்திஜீயை மாத்திரம் அனுப்புவதாக நாங்கள் தீர்மானித்தோம். காரியக் கமிட்டியின் வேருெரு அங்கத்தினர் ஸ்ரீமதி சரோஜினி நாயுடுவும் வட்டமேஜை மகாநாட்டிற்குச் சென்ருர். அனல் அவர் காங்கிரஸ் பிரதிநிதியாகச் செல்லவில்லை. அவர் இந்திய ஸ்திரீகளின் பிரதிநிதியாக அழைக்கப்பட்டார். அந்த முறையில் வட்டமேஜை மகாநாட்டிற்குச் செல்ல, அவருக்கு காரியக் கமிட்டி அனுமதியளித்தது. இந்தியாவின் அரசியலமைப்பை அமைக்கும் விஷயமாக எங்களுடைய விருப்பத்துக்கிணங்கி நடக்கவேண்டுமென்ற எண்ணமே பிரிட்டிஷ் அரசாங்கத்தாருக்குக் கிடையாது. மூலாதாரப் பிரச்னைகளை யோசனை செய்ய இடம் கொடுக்காமல் தள்ளிப் போட்டு, மகாநாடு, சாரமில்லாத சில்லரை விஷயங்களில் வாதம் செய்து அலுத்துப்போகச் செய்வதுதான் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் நோக்கமாகும். முக்கியமான பிரச்னைகள் கவனிக்கப்பட்டாலும், எந்த வழியிலும் உறுதியாக ஒன்றைச்சொல்லாமல் பிறகு ஆழ்ந்து யோசித்து தனது அபிப்பிராயத்தைக் கொடுப்பதாக பிரிட்டிஷ் அரசாங்கம் சொல்லி விட்டது. வகுப்பு வாதப் பிரச்னையை தங்களுக்கு வெற்றித் துருப்பாக வைத்துக் கொண்டு, அதை எவ்வளவு தூரம் உபயோகப்படுத்திக்கொள்ளலாமோ அவ்வளவு தூரம் உபயோகப்படுத்திக் கொண்டது. மகாநாட்டில் எந்த நேரமும் நடமாடிய பிரச்னை இது ஒன்றேதான்.

விருப்பத்துடனே இல்லாமலோ, வட்டமேஜை மகாநாட்டு இந்திய அங்கத்தினர்களில் பெரும்பான்மையோர் அதிகாரிகள் செய்த இந்த சூழ்ச்சியில், வீழ்ந்து சிக்கிக் கொண்டார்கள். அங்கத்தினர்கள் பல ரகமானவர்கள். சிலர் தங்களுக்குத் தவிர வேறு யாருக்குமே பிரதிநிதிகள் அல்லர். சிலர் புத்திசாலிகள்; மரியாதைக்குரியவர்கள்; மற்றும் பலரைப் பற்றி இவ்வாறு சொல்ல முடியாது. மொத்தத்தில்இங்

தியாவில் அரசியலிலும், சமூக சீர்திருத்தத்திலும் மிகவும் பிற்போக்கான நிலைமையிலிருந்த ஜனங்களுக்கு அவர்கள் பிரதிநிதிகளாயிருந்தார்கள். அவர்களுடைய பிற்போக்குத் தன்மையினால், மகா நிதானஸ்தர்களான முன்னெச்சரிக்கையோடும் வேலை செய்யும் இந்திய மிதவாதிகள்கூட அந்தக் கூட்டத்தில் தாராள நோக்கு உள்ளவர்களைப்போல விளங்கினார்கள். பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தோடு, தங்கள் சுயநலத்திற்காகவும் சொத்துரிமைக்காகவும் ஒட்டிக்கொண்டிருக்கிற கூட்டங்களுக்கு இவர்கள் பிரதிநிதிகள். வகுப்புப் பிரச்னைகளைப் பெரிதாகக் கொண்டு அல்லல்படும் சிறுபான்மை, பெரும்பான்மைக் கூட்டங்களிலிருந்து இவர்கள் பொறுக்கி எடுக்கப்பட்டவர்கள். மேல் வகுப்பு என்று கூறப்படும் கூட்டத்திலிருந்து வந்தவர்களாதலால், இவர்களுக்குள் ஒற்றுமையே இருக்க முடியாது. அரசியல் சம்பந்தப்பட்ட வரையில் இவர்கள் பழுத்த பிற்போக்காளர்கள். அரசியலபிவிருத்தியைப் பறிகொடுத்துவிட்டு, வகுப்பு வாத சம்பந்தமாக கொஞ்சம் லாபம் கிடைத்தாலும் போதுமென்று நினைத்து, அதற்காக தங்களுடைய முழு ஊக்கத்தையும் செலுத்துபவர்கள். தங்களுடைய வகுப்புவாதக் கோரிக்கைகளைப் பூர்த்திசெய்து கொடுத்தாலொழிய, அரசியல் சுதந்திர விஷயத்தில் ஒரு அங்குலம்கூட தாங்கள் முன்னே அடியெடுத்து வைக்க மாட்டார்களென்றும் அரசியல் முற்போக்கில் தங்களுக்குச் சிரத்தையில்லையென்றும் அவர்கள் பகிரங்கமாகத் தெரிவித்து விட்டார்கள். இது ஒரு சாதாரணமான காட்சியாகவிருந்தது. அடிமை ஜனங்கள் விழக்கூடிய படுகுழியின் ஆழம் இவ்வளவென்றும், சாம்ராஜ்ய சூதாட்டத்தில் இவர்களை எவ்வளவு வரையில் காய்களாகவைத்து விளையாட முடியுமென்றும், இது தெளிவாக விளக்கிக் காண்பித்து விட்டது. காட்சி மிகவும் துக்ககரமானது; இந்த மகாராஜாக்களும், பிரபுக்களும், பட்டம் பெற்றவர்களும், பெரிய மனிதர்களும் இந்தியப் பொது மக்களுக்குப் பிரதிநிதிகள் அல்ல. வட்ட மேஜை மகா நாட்டின் அங்கத்தினர்கள் பிரிட்டிஷ் அரசாங்கத்தாரால் நியமனம் செய்யப்பட்டவர்கள். வட்ட மேஜையைப் பூர்த்தி செய்வதற்கு இந்த அங்கத்தினர்கள் சரியான பேர்வழிகள்தான்.

இவ்வளவு எளிதிலே நம்மை பிரிட்டிஷ் அதிகாரிகள் கையாண்டு காரியத்தைச் சாதித்துக்கொள்ள முடியும் என்ற

செய்தி நம்முடைய ஜனங்களின் பலவீனத்தைக் காண்பிப்ப தாகும். தவறான சுவட்டிலே நம்மவர்களைச் செல்லச்செய்து, ஒருவர் செய்யும் வேலைக்கு மற்றவர்களை தடையாகச் செய்ய முடியும் என்பதையும் எளிதிலே விளக்கிக் காண்பித்தது. நம்முடைய பெரிய மனிதர்கள் நம்மை யாளும் சாம்ராஜ்ய அதிகாரிகளின் மனப்பான்மையோடு கலந்து, நம்முடைய எஜமானர்களின் வேலையை நேர்த்தியாகச் செய்து வந்தார் கள். தாங்கள் செய்வது சரியா இல்லையா என்ற அறியாமை யினலா? அல்லது உண்மையைத் தெரிந்துகொண்டும், இந்தி யாவுக்கு ஜனநாயகமும், சுதந்திரமும் வந்துவிடுமோ என்று பயந்து இவ்வாறு செய்தார்களா? இந்த சுயநலக்காரர் களின் கூட்டத்திலே பிரிட்டிஷ் இந்தியப் பிரதிநிதிகளுக்கு, ஆகாகான் தலைவரானது மிகப் பொருத்தமானதுதான். வட்ட மேஜை மகாநாட்டில் நடனம் செய்த பிற்போக்கான உரிமைகள் பல திறப்பட்டவை யாகும். சாம்ராஜ்ய உரிமை, ஜமீன்தார் உரிமை, முதலாளி உரிமை, தொழில் உரிமை, மத உரிமை, வகுப்புவாத உரிமை இவைகள் மகாநாட்டில் காணப்பட்டன. இவைகள் ஒவ்வொன்றுக்கும் சிறிதளவு பிரதிநிதியாக விளங்குபவர் ஆகாகான். அவர் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தோடும், பிரிட்டிஷ் அதிகார இனத்தோடும் ஒரு தலைமுறைக்கு அதிகமாக நெருங்கிப் பழகி வருகிறார். அநேக மாய் இங்கிலாந்திலேயே வசித்து வருகிறார். ஆகவே நம்மை ஆளுபவர்களின் நோக்கமும், நலங்களும் அவருக்கு முழு தும் தெரியும். அவர் அந்த வட்ட மேஜை மகாநாட்டில் சாம்ராஜ்ய பிரிட்டனுக்கு சக்தி வாய்ந்த பிரதிநிதியாக இருக்க, நிறையத் தகுதிபடைத்தவர். அவர் இந்தியாவுக்குப் பிரதிநிதியாக விளங்கியது தான் விபரீதம்.

அந்த மாகநாட்டில் எங்களுக்கு விரோதமாக சூழ்ச்சி கள் பலமாகச் செய்யப்பட்டன. அதிலிருந்து நாங்கள் எதை யும் எதிர் பார்க்காவிடினும், அதன் நடவடிக்கைகளை வியப்பு டனும், வெறுப்புடனும், கவனித்து வந்தோம். தேசீயப் பொருளாதாரப் பிரச்னைகள் சரிவர கவனிக்கப்படவில்லை. ஓயாமல் சூழ்ச்சிகளும், ஒப்பந்தங்களும் செய்யப்பட்டன. நம்முடைய தேசத்தாரில் சிலர் கன்ஸர்வேடிவ் கட்சியின் பிற்போக்காளர்களோடு சேர்ந்துகொண்டார்கள். சில்லரைச் சங்கதிகளைப்பற்றி முடிவில்லாத பேச்சு! உண்மையான பிரச்னைகளை வேண்டுமென்றே ஒதுக்கித் தள்ளிப் போட்

டார்கள். பிரிட்டிஷ் சாம்ராஜ்ய வாதிகளின் நோக்கப்படி நர்த்தனம் செய்தார்கள். பரஸ்பர வாக்குவாதங்கள்; இடையிடையே விருந்துகள்; நடுநடுவே பரஸ்பர ஸ்தோத்திரம்; இவைகள்தான் வட்டமேஜை மகாநாட்டு நடவடிக்கைகள்! எல்லா நடவடிக்கைகளும் உத்தியோக வேட்டைகளாகவே இருந்தன. சின்ன வேலைகள், பெரிய உத்தியோகங்கள், சட்ட சபையில் தேவையான ஸ்தானங்கள் ஹிந்துக்களுக்கு வேண்டும்; முஸ்லிம் மக்களுக்கு வேண்டும்; சிக்கியர்களுக்கு வேண்டும். அவ்வாறே ஆங்கிலோ-இந்தியர்களுக்கும், ஐரோப்பியர்களுக்கும் வேண்டும். ஆனால் இந்தக் கூட்டங்களுக்குள்ளேயே எல்லா உத்தியோகங்களும் இம்மதத்தினர்களின் மேல் வகுப்பாருக்குத்தான் வேண்டும். சாதாரண ஜனங்களோ இதை எட்டிக் கூடப் பார்க்கக் கூடாது. சமயோஜித சுயநலம் தாண்டவமாடிற்று. புதிய அரசியல் திட்டத்தினால் கிடைக்கக் கூடிய வேட்டைகளுக்காக, பசிவந்த ஓநாய்களைப்போல, ஒவ்வொரு கூட்டமும், நாக்கைத் தொங்கப் போட்டுக்கொண்டு, உலவிக் கொண்டிருந்ததுபோல் தோன்றிற்று. சுதந்திரம் என்பது இந்தியர்களுக்கு அதிக உத்தியோகம் என்ற கருத்தோடு விளங்கலாயிற்று. சேனையிலும் மற்ற இலாகாக்களிலும் அதிகமான உத்தியோகங்கள் இந்தியர்களுக்கு வேண்டும். இது தான் வட்ட மேஜை மகாநாட்டில் கூப்பாடு. இந்தியாவின் விடுதலையைப் பற்றி, உண்மையான சுதந்திரத்தைப் பற்றி, ஜனநாயக இந்தியாவுக்கு அதிகாரம் மாற்றிக் கொடுப்பது பற்றி, இந்திய மக்களைத் தொல்லைப்படுத்தி வரும் அவசரமான, ஜீவாதாரமான, பொருளாதாரப் பிரச்னைகளைப்பற்றி, யாரும் நினைக்கவேயில்லை. இந்தியா ஆண்மையுடன் போராடியது இந்தக் கொலுவுக்காகவா? தியாகத்தையும், நேர்த்தியான லட்சியத்தையும் விட்டுவிட்டு, மூச்சுத் திணறும் இந்த விஷக் காற்றை உட்கொள்ள வேண்டுமா?

அந்த அலங்காரமானமண்டபத்திலே(எவ்வளவுகூட்டமிருந்தால் என்ன?) காந்திஜீ தனி உருவமாக வீற்றிருந்தார். அவருடைய உடையோ அல்லது உடையின்மையோ அவரை மற்றவர்களிடமிருந்து பிரித்துக் காண்பித்துவிட்டது. அவரைச் சுற்றி, ஆடை அலங்காரத்தோடு வீற்றிருந்தவர்களுக்கும், அவருக்கும் இடையேமகத்தானவித்தியாசம்இருந்தது. மகாநாட்டிலே அவருடைய நிலைமை மிகவும் கஷ்டமானதாக

விருந்தது. அவர் அதை எப்படிப் பொறுத்துக்கொண்டிருந்தார் என்று நாங்கள் எட்டத்திலிருந்து ஆச்சரியப்பட்டுக் கொண்டிருந்தோம். ஆனால் வியக்கத்தக்க பொறுமையோடு அவர் நடவடிக்கையில் கலந்துகொண்டு, ஏதாவதொரு வகையில் ஒற்றுமையைக் காண முடியுமாவென்று முயற்சிமேல் முயற்சி செய்து பார்த்தார். வகுப்பு வாதிகள் உண்மையான அரசியல் பிற்போக்காளர்கள் என்று தெளிவாக வெளிக்குக் காண்பிக்கக் கூடியவாறு காந்திஜீ திடீரென்று ஒரு யுக்தி செய்தார். மகாநாட்டுக்கு வந்திருந்த முஸ்லீம் பிரதிநிதிகளின் வகுப்புவாதக் கோரிக்கைகள் அவருக்குப் பிடித்தமில்லை. அவைகள் ஜனநாயகத்துக்கும், சுதந்திரத்துக்கும் தடைகள் என்பது அவருடைய கருத்து ஆகும். காந்திஜீயின் தேசிய முஸ்லீம் தோழர்களும் இந்தக் கருத்தை ஏற்றுக்கொண்டார்கள். முஸ்லீம்பிரதிநிதிகள் தம்மோடும், காங்கிரஸோடும் சேர்ந்து இந்தியாவின் பூரண விடுதலைக்காகப் போராடுவார்களாகில், யாதொரு ஆட்சேபமும், எதிர் வாதமு மின்றி, அவர்களுடைய கோரிக்கைகள் யாவற்றையும் ஏற்றுக்கொள்வதாக காந்திஜீ சொல்லிப் பார்த்தார். அது அவர் சொந்தத்தில் செய்த பேரமாகும். அது காங்கிரஸைக் கட்டுப்படுத்த முடியாது. ஆனால் காங்கிரஸைத் தூண்டி, அதை ஏற்றுக்கொள்ளுமாறு செய்வேனென்று அவர் உறுதி கொடுத்தார். காங்கிரஸில் அவருக்கு இருக்கும் செல்வாக்கை நன்றாக அறிந்துகொண்டவர்கள், அவரால் காங்கிரஸின் சம்மதத்தைப் பெற்றிருக்க முடியும் என்பதைச் சந்தேகித்திருக்கவே மாட்டார்கள்.

காந்திஜீயின் கொடை ஏற்றுக் கொள்ளப்படவில்லை. ஆகாகானையும், இந்தியாவின் பூரண விடுதலையையும் சேர்த்துக் கற்பனை செய்து பார்க்க முடியுமா? இதிலிருந்து வகுப்பு வாதத்திற்கும், சுதந்திரத்திற்கும் சம்பந்தமில்லை என்பது தெளிவாகி விட்டது. அரசியல் பிற்போக்காளர்கள் அரசியல் முற்போக்கைக் கண்டு பயந்து, வகுப்பு வாதத்துக்குள்ளே ஓடி ஒளிந்துகொண்டார்கள். கவனமாக இத்தகைய ஆட்களை பிரிட்டிஷ் அரசாங்கத்தார் பொறுக்கி எடுத்து, மகாநாட்டின் நடவடிக்கைகளை அடக்கியாண்டு, வகுப்பு வாதத்தை முக்கியமான பிரச்னையாக ஆக்கிவிட்டார்கள். இந்தப்பிரச்னையால் மகாநாட்டில் ஒற்றுமை ஏற்பட முடியாது என்பது வெளிப்படை. பிரிட்டிஷ் அரசாங்கம் தனது முயற்சியில்

வெற்றி பெற்றுவிட்டது. தனது சாம்ராஜ்யத்தைக் காப்பாற்றிக்கொள்ள, தனக்கு ராணுவம் முதலிய வல்லமைகள் இருக்கின்றன என்று ருஜுப்படுத்திக் காண்பித்ததுமல்லாமல் இன்னும் சிறிது காலத்திற்கு சாம்ராஜ்ய பரம்பரையை நீடிக்கச் செய்ய தன்னிடம் போதுமான ராஜ தந்திரமும், வஞ்சகமும் இருக்கின்றன என்பதையும் தெளிவாகக் காண்பித்துவிட்டது. வட்ட மேஜை மகாநாடு இந்தியாவின் பிரதிநிதியல்ல; இந்தியாவின் சக்தியை வட்ட மேஜை மகாநாட்டைக்கொண்டு அளக்கவும் முடியாது. இருந்தாலும் இந்திய மக்கள் தோற்றுப் போனார்கள். தாங்கள் எதற்காகப் போராடுகிறார்கள் என்பதைப்பற்றி இந்திய மக்களுக்கு தெளிவான அறிவு இல்லை. அவர்கள் மனதைக் கலக்கி, எளிதிலே யாரும் அவர்களை மாறுபாதையில் நடத்திச் செல்ல முடிந்தது. அபிவிருத்திக்குத் தடையாய் இருந்த பலவேறு அபத்தமான பாரம்பரை உரிமைகளை உதறித் தள்ளிவிட, அவர்களிடம் வலுவில்லாமற் போய்விட்டது. அவர்களிடம் மதவெறி அதிகமாகக் காணப்பட்டது. வகுப்புவாத உணர்ச்சிகளை வெகு எளிதிலே புகுத்தி விட முடிந்தது. இந்தக் காரணங்களால் அவர்கள் தோற்றுப் போனார்கள். சுருங்கச் சொல்லுமிடத்து, வெற்றிக்குத்தேவையான முற்போக்கான கொள்கைகளும், சக்தியும் அவர்களிடமில்லை. இந்த வட்டமேஜை மகாநாட்டில் வெற்றி தோல்வியைப் பற்றிய கேள்வியே எழ இடமில்லை. அதனின்றும் எதையும் எதிர் பார்க்கவில்லை. ஆனால் ஒரு வகையில் அதில் வித்தியாசம் ஏற்பட்டது. முதலாவதுவட்ட மேஜை மகாநாடு நடக்கையில், இந்தியாவில் சட்ட மறுப்பு இயக்கம் தீவிரமாக நடைபெற்றுக்கொண்டிருந்ததால், இந்தியர்கள் வட்டமேஜை மகாநாட்டின் பேரில் சிறிதுகூடக் கவனம் செலுத்தவில்லை. 1930-ஆம் வருடத்தில் மகாநாட்டிற்குச் சென்ற பிரிட்டிஷ் அரசாங்கத்தாரின் நியமனதார்கள் கறுப்புக் கொடிகளும், நிந்தையான கோஷங்களும் பின் தொடர, கப்பல் ஏறினார்கள்.

ஆனால் 1931-ல், எல்லாம் மாறிவிட்டது. காங்கிரஸின் பிரதிநிதியாக, கோடிக்கணக்கான இந்தியர்களின் தலைவராக, காந்திஜீ சென்றமையால் மாறுதல் உண்டாயிற்று. இதனால் மகாநாட்டுக்கு மதிப்பு உண்டாயிற்று. வட்டமேஜை மகாநாட்டு நடவடிக்கைகளை அதிகமான ஊக்கத்துடன், இந்தியா கவனித்து வந்தது. எந்தக் காரணத்தால் தோல்வி

நேர்ந்தாலும், அதுஇந்தியாவின் அபகீர்த்திக் கணக்கில் எழுதப்பட்டு விடும். காந்திஜீ மகாநாட்டில் கலந்து கொள்ள வேண்டு மென்று பிரிட்டிஷ் அரசாங்கத்தார் ஆத்திரப்பட்டதன் காரணத்தை நாங்கள் அப்பொழுதுதான் தெரிந்து கொண்டோம். மகாநாட்டிலே ஏகப்பட்ட சூழ்ச்சியும் சுயநலயோசனையும் வீணான வாதமும் நிறைந்து நின்றாலும்,அதனால் இந்தியாவுக்குத் தோல்வி ஏற்படவில்லை. மகாநாடு நிஷ்பலனாக போவதற்கென்றே அமைக்கப் பட்டதாகும். அதனுடைய குறைபாடுகளுக்கு இந்திய மக்கள் பொறுப்பு ஏற்றுக் கொள்ள முடியாது. ஆனால் இந்தியாவின் உண்மையான பிரச்னைகளை உலகம் கவனிக்காதவாறு, மகாநாடு செய்துவிட்டது. இந்தியாவிலே, ஒருவகைத் தோல்விஉணர்ச்சியையும், தளர்ச்சியையும், ஏமாற்றத்தையும், அது உண்டாக்கிற்று. அதன்மூலமாக, பிற்போக்காளர்கள் தங்கள்தலைகளை மீண்டும் நிமிர்த்திக்கொண்டு நிற்க இடம் ஏற்பட்டது.

இந்தியாவில் நடக்கிற சம்பவங்களினால்தான் இந்திய மக்களுக்கு தோல்வியும் வெற்றியும் ஏற்படவேண்டியதாகும். எட்டத்திலிருக்கிற லண்டனில் சூழ்ச்சி செய்ததால், வலிமை பொருந்திய இந்திய தேசிய இயக்கம் வாடிவதங்கிப் போய்விடாது. நடுத்தர வகுப்பார்கள், குடியானவர்கள், இவர்களுடைய உண்மையான கஷ்டங்களின்பேரில் தேசிய இயக்கம் அமைக்கப் பட்டிருந்தது. தேசிய இயக்கம் சிறிதளவு ஜயித்து தன்னுடைய வேலையைப் பூர்த்தி செய்து கொண்டு, இன்னொரு இயக்கத்துக்கு இடம் கொடுத்துவிடலாம்; அல்லது தேசிய இயக்கம் தாற்காலிகமாக பலவந்தமாக ஒடுக்கப்படலாம். விரைவிலே இந்தியாவில் அடுத்த போராட்டம் ஏற்பட்டு, தாற்காலீகமாக அது ஒடுக்கப்பட்டது. இரண்டாவது வட்டமேஜை மகாநாட்டினால் அதிகமாக இரண்டாவது சட்டமறுப்புப் போர் பாதிக்கப் படவில்லையாயினும், அதற்குப் பாதகமான நிலைமையை இந்தியாவில் சிறிதளவு உண்டாக்கி விட்டது.

# XXXIX

## ஐக்கிய மாகாண விவசாயிகளின் கஷ்டங்கள்

நான் காங்கிரசின் பொதுக் காரியதரிசிகளில் ஒருவனுக வும், காரியக்கமிட்டியின் அங்கத்தினனுகவும், இருந்தபடியால் அகில இந்தியாவில் நடைபெற்ற அரசியல் கிளர்ச்சியில் தொடர்பு வைத்துக் கொண்டிருந்தேன். சுற்றுப் பிரயாணம் போவதை கூடுமானவரையில் நான் நிறுத்திக்கொண்டாலும் சில சமயங்களில் நாட்டில் சுற்றுப்பிரயாணம் செய்யவேண் டியதாயிற்று. எங்களுடைய பொறுப்பும் வேலைகளும் வளர வளர காரியக்கமிட்டிக் கூட்டங்கள் நீண்டநேரம்வரையிலும் கூடவேண்டியதாயிற்று. கடைசியாக இரண்டு வாரத்துக் கொருதரம் தவருமல் கூடுவது வழக்கமாகப் போய்விட்டது. வெறும் தீர்மானங்களை நிறைவேற்றி வைக்கும் காலம்போய் விட்டது. காங்கிரசின் பலதிறப்பட்ட வேலைகளை ஒன்று படுத்தி அவற்றை அடக்கியாண்டு நிர்வாகம் செய்யவும், ஒவ் வொருநாளும் தோன்றும்படியான கடுமையான பிரச்னைகளை தீர்த்துவைக்கவும், காரியக் கமிட்டி கூடவேண்டியதாயிற்று. காரியக்கமிட்டி தேசத்தின் நிலைமையை நிர்வாகம் செய்யும் முறைமையைத்தான், எதிர் காலத்தில் நாட்டிலே போராட் டம் எழுமா அல்லது சமாதானம்நிலவுமாஎன்பது,பொறுத் திருந்தது. எனக்கு ஏற்பட்ட முக்கியமான அலுவல்கள் ஐக்கிய மாகாணங்களிலேதான். அங்கே விவசாயிகளின் நிலைமை காங்கிரசின் கவனத்தை மிகுதியும் கவர்ந்தது. ஐக்கிய மாகாண காங்கிரஸ் கமிட்டியில் நூற்றைம்பது அங்கத்தினர் களுக்குமேல் இருந்தார்கள். கமிட்டி இரண்டுமூன்று மாதங் களுக்கொரு தடவை கூடிற்று. அதனுடைய நிர்வாக சபை யில் பதினைந்து அங்கத்தினர்கள். நிர்வாக சபை அடிக்கடி கூடும். நிர்வாக சபையின் கையில் நிலசம்பந்தமான இலாகா ஒப்படைக்கப்பட்டிருந்தது. 1931-ம் வருஷப் பிற்பகுதியில் இந்த நிர்வாக சபை தனி விவசாயக் கமிட்டி யொன்றை நியமனம் செய்தது.

இந்தத் தனிக்கமிட்டியில் பலஜமீன்தார்கள் சேர்ந்து ஒத்துழைத்தார்கள் என்பது குறிப்பிடத்தக்கது. கமிட்டியின் தீர்மானங்களெல்லாம் இவர்களுடைய சம்மதத்தைப் பெற்றவையாகும். எங்கள் மாகாண கமிட்டியின் அந்த ஆண்டுத் தலைவர் தாஸ்துக் அகமதுகான் ஷெர்வானி என்பவர். அவர் ஒரு பிரபல ஜமீன்தாரி குடும்பத்தைச் சேர்ந்தவர். மாகாணக் கமிட்டியின் காரியதரிசி ஸ்ரீ பிரகாசரும், நிர்வாக சபையின் வேறு பல அங்கத்தினர்களும் ஜமீன்தார்கள் அல்லது ஜமீன்தார் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். மற்ற அங்கத்தினர்கள் நடுத்தர வகுப்பைச் சேர்ந்தவர்கள். எங்களுடைய மாகாண காரியக் கமிட்டியில் ஏழை விவசாயிகளின் பிரதிநிதி ஒருவருமே இல்லை. எங்களுடைய ஜில்லாக் கமிட்டிகளிலே விவசாயிகள் அங்கத்தினர்களாக இருந்தார்கள். ஆனல் அவர்கள் மாகாணக் கமிட்டிக்கு, தேர்தல் மூலமாக வந்துசேர முடியவில்லை. நடுத்தர வகுப்பைச் சேர்ந்த படிப்பாளிகளும், ஜமீன்தார்களும் தேர்தல் மூலமாக எப்படியோ விவசாயிகளைத் தள்ளிவிட்டு மாகாணக் கமிட்டிக்கு வந்துவிடுவார்கள். எனவே மாகாண காரியக் கமிட்டியில் தீவிரமான கொள்கைகள் கொண்டவர்கள் இல்லையென்பது வெளிப்படை. விவசாயிகளின்பிரச்னை சம்பந்தப்பட்ட வரையிலும், இந்தக்கூட்டம் மிகவும் மிதவாதக் கூட்டமாகவிருந்தது. எங்கள் மாகாணத்தில் நான் காரியக் கமிட்டியிலும், விவசாயக் கமிட்டியிலும் வெறும் அங்கத்தினனுக மட்டுமிருந்தேன். கமிட்டிகளின் ஆலோசனைக் கூட்டங்களிலும், வேறு வேலையிலும் மற்றவர்களோடு நான் முக்கிய பங்கெடுத்துக்கொண்டேன். ஆனல் எதையும் தலைமை வகித்து நடத்தவில்லை. உண்மையிலேயே எங்களுடைய மாகாணத்தில் எதையும் யாரும் தலைமை வகித்து நடத்தினதே இல்லை. நாங்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து காரியம் செய்வதையே நீண்ட காலமாகப் பழக்கிக்கொண்டு வந்தோம். எங்களுக்கு அமைப்புதான் பெரிது; ஆள் பெரிதல்ல. ஒவ்வொரு ஆண்டிலும் மாகாணக் கமிட்டியின் தலைவர் எங்களுடைய தற்காலீகத் தலைவர். ஆனல் அவருக்குக்கூட விசேஷ அதிகாரம் எதுவும் கிடையாது.

அலகாபாத் ஜில்லா காங்கிரஸ் கமிட்டியிலும் ஒரு அங்கத்தினனுக நான் வேலை பார்த்தேன். இந்தக் கமிட்டிக்கு புருஷோத்தம தாஸ் தாண்டன் தலைவர். அவருடைய தலைமையின் கீழ், ஜில்லாக் கமிட்டி நில சம்பந்தமான கிளர்ச்சியை

பிரபலமாக ஆரம்பித்தது. 1930-ஆம் வருஷத்தில் மாகாணத்தில் நடைபெற்ற வரி கொடா இயக்கத்தை இந்த ஜில்லாக் கமிட்டி ஆரம்பித்து வழி காண்பித்தது. விவசாயிகளுக்கு அலகாபாத் ஜில்லாவிலேதான் மிகுந்த கஷ்டங்கள் என்பதல்ல. அயோத்தி பிராந்தியத்தைச் சேர்ந்த தாலுக்தாரி ஜில்லாக்களிலெல்லாம் விவசாயிகளுக்கு கஷ்டங்கள் மிகவும் அதிகம். ஆனால் அலகாபாத் ஜில்லாவில் காங்கிரஸ் கமிட்டிகள் நன்றாக அமைக்கப்பட்டிருந்தன. மேலும் அந்த ஜில்லா அரசியல் கிளர்ச்சியில்முன்னணியில் நின்றுகொண்டிருந்தது. அலகாபாத் நகரம் அரசியல் கிளர்ச்சிகளுக்கு நடுநாயகமாக் விளங்கிற்று. அநேக முக்கியமான ஊழியர்கள் அடிக்கடி கிராமங்களுக்குச் சென்று பிரசாரம் செய்தார்கள். எனவே அலகாபாத் ஜில்லா வழிகாட்டியாக விருந்தது. 1931ஹு மார்ச்சீ டில்லி ஒப்பந்தம் கையெழுத்தானவுடனே, துண்டுப் பிரசுரங்களையும், ஊழியர்களையும் கிராமாந்திரங்களுக்கு நாங்கள் விரைவில் அனுப்பிவைத்து சட்ட மறுப்பு இயக்கமும், வரிகொடா இயக்கமும் நிறுத்தப்பட்டு விட்டனவென்று விவசாயிகளுக்கு அறிவிக்கும்படியாகச் செய்தோம். இனி அவர்கள் வரி கொடாமலிருப்பதற்கு அரசியல் சம்பந்தமான காரணங்கள் இல்லை. எனவே வரி கொடுத்துவிடும்படியாக நாங்கள் அவர்களுக்கு யோசனை கூறினோம். ஆனால் தானியங்களின் விலை தலை குப்புற விழுந்துவிட்டபடியால், வரி வஜா செய்யப்பட வேண்டுமென்றும், நாங்களும், விவசாயிகளும் சேர்ந்து வரி வஜாவைப் பெறுவதற்காகக் கிளர்ச்சி செய்ய வேண்டுமென்றும் செய்தியைச் சேர்த்து அனுப்பினோம். சாதாரண காலங்களிலேயே வரி தாங்க முடியாத சுமையாக இருந்தது. அகவிலை சம்பலாகப் போன பிறகு, வரியை முழுதுமோ அல்லது சற்றுக் குறைவாகவோ கொடுப்பது சாத்தியமில்லாமற் போய் விட்டது. நாங்கள் விவசாயிகள் பிரதிநிதிகளுடன் கலந்து பேசினோம். அதன் பயனாக தற்காலிக பரிகாரமாக பொதுவாக நூற்றுக்கு ஐம்பதும், சில இடங்களில் சற்று கூடவும் வரி தள்ளுபடி செய்யப்பட வேண்டும் என்று அரசாங்கத்தாருக்கு அறிவித்தோம்.

நில சம்பந்தமான பிரச்னையைப் பொதுவான சட்ட மறுப்புப் பிரச்னையிலிருந்து பிரிக்க நாங்கள் முயன்றோம். 1931ஹு சம்பந்தப்பட்ட வரையில், அரசியலைக் கலக்காமல் பொருளாதாரத் துறையிலே மட்டும் விவசாயிகளின் பிரச்னை

கவனிக்கப்பட வேண்டுமென்றும் நாங்கள் விரும்பினோம். ஆனால் இது கஷ்டமாயிருந்தது. இரண்டு பிரச்னைகளும் ஒன்றோடொன்று பிணைந்து கிடந்தன. காங்கிரஸ் அமைப்பு என்ற முறையில் எங்களுடைய கிளர்ச்சிகள் யாவும் நிச்சயமாக அரசியல் தன்மை கொண்டவையாகும். சிறிது காலத்திற்கு நாங்கள் விவசாயிகளின் சங்கத்தைபோல உழைத்துப் போராட முயன்றாலும், எங்களுடைய அரசியல் தன்மையை எங்களால் விட்டுவிட முடியவில்லை. அவ்வாறு செய்ய எங்களுக்கு விருப்பமும் இல்லை. மேலும் நாங்கள் செய்த எதையும் அரசியலில் பொருத்தித்தான் அரசாங்கம் மதிப்பிட்டு வந்தது. எதிர்காலத்திலே வரப்போகும் சட்ட மறுப்புத் தோற்றம் எங்கள் கண் முன்னே நின்றுகொண்டே இருந்தது. இது நேருமாகில் பொருளாதாரமும், அரசியலும் ஜோடியாக ஒன்றிற்கொன்று பலம் கொடுத்துக் கொண்டு செல்லுமென்பதில் சந்தேகமில்லை. இந்த மாதிரி கஷ்டங்கள் இருந்தபோதிலும் டில்லி ஒப்பந்தக் கால முதல், விவசாயிகளின் பிரச்னையை அரசியல் போராட்டத்திலிருந்து பிரித்து வைக்க வேண்டுமென்று நாங்கள் எங்களாலான முயற்சியைச் செய்தோம். இதற்கு உண்மையான காரணம் என்னவெனில், டில்லி ஒப்பந்தத்தினால் விவசாயிகளின் கிளர்ச்சி தடுக்கப்பட வில்லை. அரசாங்கத்தாருக்கும், ஜனங்களுக்கும் இதை நன்றாகத் தெளிவுபடுத்திவிட வேண்டுமென்று நாங்கள் விரும்பினோம். டில்லியில் வைஸிராய் இர்வினோடு பேசிக்கொண்டிருக்கையில், காந்திஜீ "நான் வட்ட மேஜை மகாநாட்டுக்குப் போகாவிட்டாலும்கூட மகாநாடு நடந்துகொண்டிருக்கும் வரையில், சட்ட மறுப்பை மீண்டும் துவக்கமாட்டேன். மகாநாடு வெற்றி பெறுவதற்கு ஒரு சந்தர்ப்பம் கொடுத்து, அதன் விளைவை எதிர் பார்த்துக்கொண்டிருக்குமாறு நான் காங்கிரஸுக்கு யோசனை சொல்வேன்" என்று இர்வின் பிரபுவுக்கு உறுதி கொடுத்தாராம். ஆனால் ஏதேனும் ஒரு பகுதியில், பொருளாதார நெருக்கடியால் போராட்டம் ஏற்படுமாகில் அந்தப் போராட்டத்தைக் காங்கிரஸ் விட்டுவிட முடியாது என்றும் காந்திஜீ தெளிவுபடுத்தியிருந்தார்.

ஐக்கிய மாகாணத்தில் விவசாயிகளின் நிலைமை மிகவும் நெருக்கடியாக இருந்தது. விவசாயிகள் இந்த மாகாணத்தில் கட்டுப்பாடாக நின்று போராடினார்கள். பொதுவாகஇந்தியா முழுதும் விவசாயிகளின் பொருளாதார நிலைமை மிகவும்

கேவலமாகத்தானிருந்தது. சிம்லாவில் காந்திஜீ அதிகார வர்க்கத்தினரோடு பேசுகையில், இதைத் திருப்பித் திருப்பிச் சொல்லியிருந்தார். மேலும் காந்திஜீக்கும் அதிகாரிகளுக்கும் நடந்த கடிதப் போக்கு வரத்தில் இதைப்பற்றி குறிப்பிடப் பட்டிருந்தது. காந்திஜீ ஐரோப்பாவுக்குப் பிராயணமாகும் தருவாயில், மீண்டும் இதைத் தெளிவுபடுத்தி யிருக்கிறார். "வட்டமேஜை மகாநாடும் அரசியல் பிரச்னைகளும் ஒரு புற மிருக்க, ஜனங்களின் முக்கியமாக விவசாயிகளின் உரிமைகளைப் பொருளாதாரப் போராட்டங்களில் பாதுகாத்துக் கொடுக்கவேண்டிய பொறுப்பு காங்கிரசுக்கு ஏற்பட்டு விடலாம். இத்தகைய போராட்டத்தில் சிக்கிக்கொள்ள எனக்கு விருப்பமில்லை. கூடுமான வரையில் அதைத் தடுக்க முயலுவேன். ஆனால் அதைத் தடுக்க முடியாவிடில் அந்தப் போராட்டத்தை ஏற்று நடத்துவேன். பொது ஜனங்களை நாங்கள் கைவிடமுடியாது" என்று காந்திஜீ தெளிவுபடுத்தி இருந்தார். டில்லி ஒப்பந்தத்தை, பொதுவாகவும் அரசியல் சட்டமறுப்புக்கும் பொருத்திப் பார்க்கலாமே யொழிய, விவசாயிகளின் பொருளாதார நிலைமைக்குச் சம்பந்தப்படுத்திப் பார்க்கலாகாது என்பது காந்திஜீயின் கட்சியாகும். நான் இதை ஏன் குறிப்பிடுகிறேன் என்றால், வரி கொடா இயக்கத்தை மீண்டும் துவக்கி, டில்லி ஒப்பந்தத்தை முறித்து விட்டார்களென்று ஐக்கிய மாகாண காங்கிரஸ் கமிட்டியின் பேரிலும், அதன் தலைவர்கள் பேரிலும் சர்க்கார் அடிக்கடி பழி சுமத்துகிறார்கள். இந்தப் பழியை சமாதானகாலத்தில் சுமத்தவில்லை. இரண்டாவது சட்ட மறுப்புக் காலத்தில் காங்கிரஸ் தலைவர்கள் சிறைக் கூட்டத்திலடைக்கப்பட்டு, அவர்கள் இந்தக் குற்றச் சாட்டுகளுக்கு பதில் சொல்லமுடியாத நிலைமையில் இருக்கையில், பத்திரிகைகளுக்கும் அச்சுக் கூடங்களுக்கும் வாய்ப்பூட்டு போட்டபின்னர், அதிகாரிகள் இந்தக் குற்றச் சாட்டுகளைச் செய்தார்கள்.

1931-ம் வருஷம் ஐக்கிய மாகாண காங்கிரஸ் கமிட்டி வரி கொடா இயக்கத்தை ஆரம்பிக்கவே இல்லை என்பது உண்மையாக இருந்தாலும், அப்படியே பொருளாதார நோக்கம்கொண்டு வரிகொடா இயக்கம் நடத்தப் பெற்றால், அது டில்லி ஒப்பந்தத்தை மீறியதாக ஆகாது என்ற விஷயத்தை நான் தெளிவுபடுத்த விரும்புகின்றேன். வரிகொடா இயக்கத்தினால் பயன் ஏற்படுமா ஏற்படாதா என்பது வேறு சங்

கதி. பொருளாதாரத் துறையில் பரிகாரத்துக்காக வேலை நிறுத்தம் செய்ய, ஆலைத் தொழிலாளர்களுக்கு எவ்வளவு உரிமை உண்டோ, அவ்வளவு உரிமை விவசாயிகளுக்கும் வரிகொடா இயக்கத்தை ஆரம்பிப்பதற்கு உண்டு. டில்லியிலிருந்து சிம்லா வரையிலும் இதுதான் எங்கள் கட்சி. இதை அரசாங்கத்தார் அறிந்து கொண்டதுமல்லாமல் ஏற்றும் கொண்டார்கள். 1929-ம் வருஷத்திய பொருளாதார அகவிலை வீழ்ச்சி ஏற்கனவே கேவலமாயிருந்த நிலைமையை ஒரு முட்டுக்குக் கொண்டுவந்து விட்டது. சென்ற பல ஆண்டுகளாக உலகத்தில் விவசாய பொருள்களின் விலைவாசி ஏறிக்கொண்டே போயிற்று. உலகச் சந்தையில் இணைக்கப்பட்டிருந்த இந்திய விவசாயமும் இதனல் லாபம் அடைந்தது. விவசாயத்துக்கும் தொழில் அபிவிருத்திக்கும் ஏராளமான தாரதம்ய வேற்றுமைகள் உலக முழுதுமிருந்ததால், விவசாயப் பொருள்களின் விலை தூக்கி நிற்க ஆரம்பித்தது. இந்தியாவிலும் விலைகள் தூக்கி விற்றன. இதனல் அரசாங்கத்தாரின் வரியும் நிலச்சுவான்தார்களின் குத்தகைப் பணமும் ஜாஸ்தியாகி விட்டன. எனவே, இந்த விலைவாசியின் ஏற்றத்தால், உழுது பயிர் செய்யும் குடியானவனுக்கு சிறிது கூட லாபம் ஏற்படவில்லை.

மொத்தத்தில் ரொம்ப வசதிகளிருந்த சில பகுதிகளைத் தவிர, ஏனைய பகுதிகளிலிருந்த விவசாயிகள் சீர்குலைந்து கொண்டே போனர்கள். ஐக்கிய மாகாணங்களில் சர்க்காரின் வரியைக் காட்டிலும் ஜமீன்தாரின் குத்தகைப் பணம் விஷத்தைப்போல் ஏறிக்கொண்டே போயிற்று. சென்ற 30 ஆண்டுகளாக ஏறிக்கொண்டே போய், இப்பொழுது கிஸ்தி ஒரு பங்கும் குத்தகைப்பணம் ஐந்து பங்கும் ஏற்றமடைந்து நிற்கின்றது. எனவே சர்க்காரின் நில வருமானம் இரட்டித்து விட்டது. ஜமீன்தார்களின் குத்தகை வருமானம் ஐந்து மடங்காகிவிட்டது. ஆனல் குடியானவர்களோ எப்பொழுதும்போல பட்டினி கிடந்துகொண்டே இருக்கிருர்கள். விலை வீழ்ந்தாலும் சரி, வரட்சி, வெள்ளம், தத்துக்கிளி, பனி முதலியவைகளால் பயிருக்கு சேதம் ஏற்படினும் சரி, தாற்காலிகமாக சில சமயங்களில் மிகவும் கருமித்தனமாக சிறிதளவு தள்ளுபடி செய்யப்படுவது தவிர, குத்தகைப் பணமும் சர்க்கார் வரியும் பழைய நிலைமையிலேயே இருந்தன. நல்ல காலங்களிலேயே குத்தகைப் பணம் மிகவும்

ஜாஸ்தி. மற்றக் காலங்களில் பொறுக்க முடியாததாக ஆயிற்று. கடன் வாங்கித்தான், குத்தகைப்பணம் செலுத்த முடியும். எனவே, விவசாயிகளின் கடன் வளர்ந்தது. விவசாய சம்பந்தமான எல்லா வகுப்பார்களும்—ஜமீன்தார்கள், சில்லரை மிராசுதார்கள், குடியானவர்கள் எல்லோரும் லேவாதேவிக்காரருக்கு இரையானார்கள். தற்போதைய நிலைமையில், லேவாதேவிக்காரர் கிராமங்களுக்கு மிகவும் தேவையான பேர்வழியாக ஆகிவிட்டார். அவர் இந்தத் தேவையைத் தன் சொந்த லாபத்துக்கு மிகுதியும் உபயோகப்படுத்திக் கொண்டார். நிலத்திலும், அதோடு சம்பந்தப்பட்டவர்களிடத்திலும் அவருடைய சுருக்குக்கயிறு நன்றாக விழுந்து விட்டது. அவரைத் தடை செய்வதற்கு எதுவுமே இல்லை. சட்டம் அவருக்கு ஒத்தாசையா யிருந்தது. தஸ்தாவேஜுப் பிரகாரம் அவர் தொகைக்குப் பாத்தியம் கொண்டாடி; அவருக்குச் சேரவேண்டியதைப் பூராவும் அடைந்து கொண்டிருந்தார்.

கொஞ்சம் கொஞ்சமாக சில்லரை ஜமீன்தார்களிடமிருந்தும் மிராசுதார்களிடமிருந்தும் நிலம் அவருடைய கைக்குப் போய்ச் சேர்ந்தது. லேவாதேவிக்காரர், பெருவாரியான நிலத்துக்கு உடைமைக்காரராகி, கௌரவமான பெரிய ஜமீன்தாராக மலர்ந்துவிட்டார். தனது நிலத்தைத் தானே உழுது பயிர் செய்துகொண்டு வந்த குடியான - மிராசுதார், இப்பொழுது சாவுகார் - ஜமீன்தாரின் கீழ் அநேகமாக அடிமையாகி விட்டார். பயிர்த் தொழில் செய்யும் வெறும் குடியானவன் நிலைமை இன்னும் கேவலமாகப் போய்விட்டது. அவனும் சாவுகாரின் அடிமையாக ஆனான்; அல்லது நிலமின்றித் தவிக்கும் ஏராளமான குடியானவர்களோடு அவனும் சேர்ந்து கொண்டான். மிராசுதாராக மாறிய பாங்கி முதலாளி மண்ணோடாவது விவசாயிகளோடாவது உண்மையான சம்பந்தத்தை வைத்துக் கொள்ளவில்லை. சாவுகார் அநேகமாக நகரத்தில் வசித்து தனது பாங்கித் தொழிலை நடத்தி வந்தார். குத்தகைப் பணத்தை வசூலிப்பதற்காக ஏஜண்டுகளை நியமிப்பார். அவர்கள் கருணையும் பொறுப்பும் சிறிதுமின்றி யந்திரங்களைப் போல வசூல் வேலையைச் செய்வார்கள். விவசாயிகளுக்குக் கடன் அதிகப்பட்டு வளர்ந்து கொண்டு போவதனாலேயே, நிலத் திட்டம் சரியாக நிலைத்து நிற்கமுடியாது என்று உறுதியாகச்

சொல்லலாம். பெரும்பான்மையான மக்கள் எதையும் மீத்து வைக்க முடிவதில்லை. நோய்களை எதிர்த்துப் போராடும் உடல்வலிமையும் அவர்களுக்கு இருப்பதில்லை. எக்காலமும் பட்டினிக்குப் பங்காளிகளாக வாழ்ந்துவந்தனர். அசாதாரண மான நிலைமையால், ஏதேனும் விபரீதம் ஏற்படுமாகில், அவர் களால் அதைத் தாங்கமுடியாமற் போயிற்று. ஏதாவது தொத்து நோய் தோன்றினால், அது அவர்களை லட்சக் கணக் கில் அள்ளிக் கொண்டு போய்விடும். 1929-30-ம் ஆண்டு களில் மாகாண வங்கி விசாரணைக் கமிட்டியில் தயார் செய்த புள்ளி விவரத்திலிருந்து இந்தியாவுக்கும் பர்மாவுக்கும் சேர்த்து 860 கோடி ரூபாய் விவசாயிகளுக்குக் கடன் என்று மதிப்பிடப்பட்டது. இந்தத் தொகை ஜமீன்தார்கள், சில் லரை மிராசுதார்கள், குடியானவர்கள், இவர்கள் எல்லோ ரையும் சேர்த்துக் குறிப்பிட்ட கடன் தான். ஆனால் இந்தக் கடனில் பெரும்பான்மை உழுது பயிர் செய்யும் குடியான வர்களுடையதாகும்.

அரசாங்கத்தினுடைய நாணயச் செலாவணியின் போக் கினால், கடன் கொடுக்கும் வகுப்பினருக்குத்தான் லாபம். இதனால் கடன் சுமையும் கனத்துப் போய்விட்டது. நாணயமாற்று ரூபாய்க்கு பதினெட்டு பென்ஸ் என்று அர சாங்கத்தார் தீர்த்துவிட்டார்கள். பதினாறு பென்ஸாகத் தானிருக்க வேண்டுமென்று இந்தியாவில் எல்லோரும் ஆட் சேபித்தார்கள். இந்த ஆட்சேபணையை அரசாங்கத்தார் கவனிக்கவேயில்லை. ஆகவே விவசாயிகளின் கடன் நூற் றுக்கு பன்னிரண்டரை வீதம் அதிகமாயிற்று. அதாவது நூற்றேழுகோடி ரூபாய் ஏற்கனவே சொன்ன கடனோடு சேர்ந்துகொண்டது. போருக்குப்பின்னால் சிறிதுசிறிதாக விலை வாசி குறைந்து கொண்டே வந்தது. விவசாயிகளின் நிலைமை மிகவும் சீர்கேடு அடைந்தது. எல்லாவற்றிற்கும் சிகரமாக 1929-ம் வருஷத்திய பொருளாதார நெருக்கடியும் விலைவீழ்ச் சியும் ஏற்பட்டன. 1931-ம் வருஷத்தில் ஐக்கிய மாகாணங் களில் நாங்கள் கேட்டது அகவிலைக்குத் தக்கபடி குத்த கையும் நிர்ணயிக்கப் படவேண்டும் என்பதே. 1931-ம் வரு ஷத்தில் விலை குறைந்திருந்ததுபோல, முன்காலத்தில் அதே அகவிலை யிருந்த சமயத்தில் ஏற்பட்டிருந்த விகிதத்திற்கு குத் தகையைக் குறைத்து விடவேண்டும் என்று சொன்னோம். 1901-ம் வருஷத்தில் விற்ற விலையும், 1931-ம் வருஷத்திய

விலையும் அநேகமாக ஒன்றாயிருந்தன. இந்தக் கணக்கை அநுபவத்தில் உபயோகப் படுத்துவது எளிதல்ல. ஏனெனில் குடியானவர்களில் பல ரகமானவர்கள் இருந்தார்கள். சாசுவதக் குத்தகைக்காரர்கள், சாதாரணக் குத்தகைக்காரர்கள், உள் குத்தகைக்காரர்கள் முதலியவர்கள்; இவர்களில் பயிர் செய்யும் குடியானவர்களுக்குத் தான் கஷ்டம் அதிகம்.

இன்னொரு அளவைக்கொண்டு குத்தகையை நிர்ணயிக்கலாம். இந்த வழி நியாயமென்று படுகிறது. விவசாயத்துக்கான செலவையும் குடியானவனுடைய வாழ்க்கைக்காக அவசியமான செலவையும் நீக்கிப் பார்த்து, அவனால் எவ்வளவு கொடுக்கமுடியும் என்று தெரிந்துகொண்டு குத்தகையை நிர்ணயிக்கலாம். ஆனால் இக்கணக்குப் பிரகாரம் ஜீவனத்துக்கு வேண்டிய செலவை மிகக் குறைவாக வைத்துப் பார்த்தாலும், இந்தியாவில் பல பகுதிகளிலே விவசாயத்தினால் லாபமே கிடையாது. குத்தகைப் பணம் செலுத்த வேண்டுமானால் விற்பதற்கு சொத்து ஏதாவதிருப்பின் அதை விற்றுக் கொடுக்க வேண்டும். அல்லது அதிக வட்டிக்குக் கடன் வாங்கிக் குத்தகை செலுத்தவேண்டும். இதை நாங்கள் 1931-ம் வருஷத்தில் ஐக்கிய மாகாணங்களில் நிதரிசனமாகக் காண்பித்து விட்டோம். குடிவார பாத்தியமுள்ள குடியானவர்களுக்கு பொதுவாக நூற்றுக்கு ஐம்பது வீதம் வரி வஜா செய்ய வேண்டுமென்றும், இன்னும் கேவலமான ஸ்திதியிலிருக்கும் மற்ற விவசாயிகளுக்கு அதிகமாகத் தள்ளுபடி செய்யவேண்டுமென்றும் எங்களுடைய ஐக்கிய மாகாண காங்கிரஸ் கமிட்டி தற்காலிகமாக சிபார்சு செய்தது. 1931-ம் வருஷம் மே மாதம் காந்திஜீ ஐக்கிய மாகாணங்களுக்கு வந்து கவர்னர் ஸர் மால்கம் ஹெய்லியைச் சந்தித்துப் பேசியபொழுது அவர்களுக்குள் சிறிய அபிப்பிராய பேதம் ஏற்பட்டது. அவர்களால் ஒத்துப்போக முடியவில்லை. உடனே காந்திஜீ ஐக்கிய மாகாண ஜமீன்தார்களுக்கும் குடியானவர்களுக்கும் மனுச்செய்து கொண்டார். குடியானவர்களுக்கு மனுச் செய்து கொண்டதில், அவர்களால் முடிந்த வரியைக் கொடுக்க வேண்டுமென்று சொல்லி ஒரு தொகையைக் குறிப்பிட்டார். அது நாங்கள் ஏற்கனவே தீர்மானித்த தொகையைக் காட்டிலும் கொஞ்சம் அதிகமானதாகும். எங்களுடைய மாகாண கமிட்டி

காந்திஜீயின் தொகையை ஏற்றுக் கொண்டது. ஆனல் அரசாங்கம் இந்தத் தொகைக்கு சம்மதிக்காததனுல், நிலைமைக்கு பரிகாரம் ஏற்படவில்லை.

மாகாண அரசாங்கத்தின் நிலைமையும் கஷ்டமானதாகத் தான் இருந்தது. அதனுடைய முக்கியமான வருமானம் நில வரி. எனவே அந்த வரியை மிகவும் குறைத்துவிட்டால் அரசாங்கம் திவாலாகப் போய்விடக்கூடும். ஆகவே தள்ளுபடிக்கு அவர்களால் இடம் கொடுக்க முடியாது. ஆனல் குடியானவர்களின் எழுச்சியைப்பற்றி எப்பொழுதும் அரசாங்கத்துக்கு திகில் உண்டு. இதனல் கணிசமான தொகையைத் தள்ளுபடி செய்து, கூடுமானவரையில் விவசாயிகளைச் சமாதானப்படுத்த அரசாங்கம் விரும்பிற்று. இரண்டு லட்சியங்களையும் பூர்த்திசெய்து கொள்ளப்பார்ப்பது முடியாத காரியம். அரசாங்கத்துக்கும் குடியானவனுக்கும் இடையே நிற்பவர் ஜமீன்தார். பொருளாதாரத் துறையில் நோக்கினல், ஜமீன்தார் அவசியமில்லாத உபயோகமற்ற ஒரு சுமையாவார். அவருடைய செலவில்(அவரது லாபத்தைக் குறைத்து) அரசாங்கத்தையும் குடியானவனையும் பாதுகாத்து அவர்களுக்கு ஒத்தாசை செய்ய முடியும். ஆனல் அரசியல் காரணங்களால், அரசாங்கம் இப்பொழுதிருக்கும் அமைப்பிலே தனக்கு முட்டுக்கட்டையாகவிருக்கும் ஜமீன்தார்களின் பக்தியை இழக்க முடியாது. கடைசியாக ஜமீன்தார்களுக்கும் குடியானவர்களுக்கும் இவ்வளவு தள்ளுபடி யென்று வஜாத்திட்டத்தை மாகாண அரசாங்கத்தார் அறிவித்தார்கள். இந்தத் திட்டம் சிக்கலான கணக்கைக்கொண்டுபோடப்பட்டதாகும். அவைகள் என்னவென்று விளக்கிக்கொள்வது எளிதான வேலையல்ல. ஆனல் தள்ளுபடிகள் போதுமானவை அல்லவென்பது மட்டும் தெளிவாகத் தெரிந்தது. மேலும் இந்த அறிவிப்பு நிகழ்கால வசூலைப்பற்றி குறிப்பிட்டதே யன்றி, விவசாயியிடமிருந்து வரவேண்டிய பாக்கியைப்பற்றியாவது அல்லது அவனது கடனைப் பற்றியாவது வாய் திறக்கவே இல்லை. தற்போதைய அரை வருஷப் பகுதியையே விவசாயியால் கட்ட முடியவில்லை யென்றால் அவனல் தன் பழைய கடன்களையும் பல வருஷப் பாக்கியையும் கொடுக்கமுடியாதென்பது வெளிப்படை. பொதுவாக வசூலாகும் பணத்தை பழைய பாக்கிக்கு வரவு வைத்துக்கொள்வது மிராசுதார்களின் வழக்கம். விவசாயி சம்பந்தப்பட்ட

வரையிலும் இந்த நடவடிக்கை மிகவும் ஆபத்தானதாகும். அவனிடத்திலிருந்து வசூலாகவேண்டிய பாக்கித் தொகைக்காக என்று காரணம் காட்டி அவன்மீது வழக்குபோட்டு அவனிடமிருந்து நிலத்தைப் பிடுங்கிக் கொள்ள முடியும்.

மாகாண காங்கிரஸ் காரியக் கமிட்டி மிகவும் கஷ்டமான நிலைமையில் அகப்பட்டுக் கொண்டது. குடியானவர்கள் நேர்மையாக நடத்தப்படவில்லை என்று எங்களுக்கு நிச்சயமாகத் தெரிந்தது. என்றாலும் எங்களால் ஒன்றும் செய்யமுடியாத நிலைமையில் நாங்கள் இருந்தோம். பாக்கியைக் கொடுக்க வேண்டாமென்று விவசாயிகளுக்கு யோசனைசொல்லும் பொறுப்பை ஏற்றுக்கொள்ளவும் நாங்கள் விரும்பவில்லை. அவர்களால் முடிந்ததைக் கொடுக்க வேண்டுமென்று திருப்பித் திருப்பிச்சொல்லிக் கொண்டிருந்தோம். அவர்களுடையதுர்ப்பாக்கியத்தில் எங்களுக்கு அனுதாபம் உண்டு என்று காட்டிக் கொண்டு, அவர்கள் நெஞ்சைத் திடப்படுத்த முயன்று வந்தோம்; தள்ளுபடி செய்த பிறகும் அவர்களிடமிருந்து வசூல்செய்ய வேண்டுமென்று குறிப்பிடப்பட்ட தொகை அவர்களால் கொடுக்க முடியாதபடி அதிகமானதென்று நாங்கள் அவர்களோடு ஒத்துக் கொண்டோம். சட்டப்படிக்கும் அதை மீறியும் வேலைசெய்யும் அடக்குமுறை இயந்திரம் நகர ஆரம்பித்தது. விவசாயிகளை வெளியேற்றுவதற்காக வழக்குகள், பசு மாடுகள், எருதுகள், நகை, தட்டுமுட்டுச் சாமான்கள் முதலியவைகளின் ஜப்தி; ஜமீன்தார்களின் ஏஜெண்டுகளால் அடிப்பிரயோகம்! இவைகள் துவக்கமாயின. கேட்டதில் ஒருபகுதியை பெரும்பான்மையோரான விவசாயிகள் கொடுத்தார்கள். இவ்வளவுதான் தங்களால் அப்பொழுது கொடுக்கமுடியும் என்பது அவர்களுடைய கட்சி. சிலர் இன்னும் கொஞ்சம் கூடக் கொடுத்திருக்க முடியும். ஆனால் பெரும்பான்மையோருக்கு, அரசாங்கத்தார்கேட்ட தொகை பளுவாக இருந்தது. பகுதியைக் கொடுத்து விட்டதால் அவர்களது தொல்லைகள் ஒழிந்து போகவில்லை. சட்டம் மூலியமாக அவர்கள் சின்னாபின்னப் படுத்தப்பட்டார்கள். ஏற்கனவே ஒரு பகுதி வரியைச் செலுத்தி விட்டபோதிலும், அவர்களுடைய இருப்பிடங்களிலிருந்து வெளியேற்றுவதற்காக தொடரப் பெற்ற வழக்குகளில் அவர்களுக்கு விரோதமாகத் தீர்ப்பு ஆயிற்று. கால்நடைகளின் ஜப்தியும், ஏலமும், சொந்த சொத்தின்

ஜப்தியும், ஏலமும் நடந்துகொண்டே போயின. ஒரு பகுதி கூட விவசாயிகள் வரியைச் செலுத்தியிராவிட்டால், அவர்கள் சிறிது நல்ல நிலைமையிலிருந்திருக்க முடியும். ஏனெனில் அவர்கள் கொடுத்த பணத்தையாவது மிச்சப்படுத்தியிருக்க முடியும்.

குடியானவர்கள் திரளாக எங்களிடம் வந்து "உங்களுடைய யோசனையைக் கேட்டு எங்களுக்கும் முடிந்ததைச் செலுத்தினோம். அதன் பயன் இதுவாயிற்று" என்று நொந்துகொண்டு, எங்களிடம் முறையிட்டார்கள். அலகபாத் ஜில்லாவில் மட்டும் பல ஆயிரக்கணக்கானவர்களின் நிலம் பிடுங்கிக் கொள்ளப்பட்டது. இன்னும் பல ஆயிரக்கணக்கானவர்கள் பேரில் ஏதாவதொருவகையில்வழக்குதொடரப்பட்டது. மதி மயங்கிப்போன இந்த ஜனங்கள் ஜில்லா காங்கிரஸ் கமிட்டி காரியாலயத்தில் தினமும் வந்து அதைச் சூழ்ந்து கொண்டார்கள். என் வீடும் இவ்வாறே முற்றுகை போடப்பட்டது. இந்தப் பயங்கர நிலைமையிலிருந்து தப்பித்துக் கொள்வதற்காக, எங்கேனும் ஓடி ஒளிந்து கொள்ளலாமா வென்றுகூட நான் அடிக்கடி எண்ணினதுண்டு. என்னிடம் வந்த குடியானவர்களில் பலருக்கு உடம்பிலே காயங்கள் காணப்பட்டன. ஜமீன்தாரின் ஏஜண்டுகள் அடித்ததினால் ஏற்பட்ட காயங்கள் என்று சொல்லப்பட்டது. அவர்களை ஆஸ்பத்திரியில் கொண்டுபோய் சிகிச்சை செய்தோம். அவர்கள் என்ன செய்வார்கள்? நாங்கள் தான் என்னசெய்ய முடியும்? நீள நீளக் கடிதங்களை ஐக்கிய மாகாண அரசாங்கத்துக்கு நாங்கள் அனுப்பி வைத்தோம். காங்கிரஸ் கமிட்டிக்கும் அரசாங்கத்தாருக்கு மிடையே தூது போகும் அதிகாரியாக கோவிந்த வல்லப பந்த் அவர்களை எங்களுடைய கமிட்டி நியமனம் செய்திருந்தது. அவர் அரசாங்கத்துக்கு விடாமல் எழுதிக்கொண்டேயிருந்தார்; எங்களுடைய மாகாண கமிட்டித் தலைவர் தாஸ்துக் ஏ. கே. ஷெர்வானியும் அடிக்கடி அரசாங்கத்துக்கு எழுதி வந்தார்; நானும் அவ்வாறே செய்தேன்.

ஜூன், ஜுலை மாதங்களில் பருவமழை வருகிற காலம் நெருங்கிவிட்டதால், இன்னொரு கஷ்டம் தோன்றிற்று. அது உழுது விதைக்கும் பருவமாகும். வெளியேற்றப்பட்ட குடியானவர்கள் தங்கள் முன்னே இருக்கும்நிலத்தைத் தரிசாகப்

போட்டுக் கொண்டு சும்மா இருக்கிறதா? குடியானவனுக்கு அது சாத்திய மில்லாத காரியம். அவனுடைய இயற்கைக்கு மாறுனதாகும். வெளியேற்றம் என்பது சட்டப்படி நடந் தேறியதேயல்லாமல் குடியானவர்களை அவர்கள் பயிர்செய்து வந்த இடங்களிலிருந்து உண்மையில் வெளியேற்றிவிட வில்லை. கோர்ட்டில் தீர்ப்பு ஆகிவிட்டது. அதன் பிறகு யாதொரு நடவடிக்கையும் எடுத்துக் கொள்ளப் படவில்லை. அவர்கள் நிலத்தைச் சாகுபடி செய்து அத்துமீறி பிரவேசித் தார்கள் என்ற குற்றத்துக்கு ஆளாவதா? இதனுல் சிறிய கலகம் நேர்ந்தாலும் நேரலாம். மற்றவர்கள் வந்து தாங்கள் பயிர் செய்துவந்த நிலங்களை உழுது பயிர்செய்வதைப்பார்ப் பது குடியானவர்களுக்கு பொறுக்கமுடியாத தொன்ருகும். அவர்கள் யோசனைகேட்க எங்களிடம் வந்தார்கள். நாங்கள் என்ன யோசனையைச் சொல்வது? அந்த வருஷம் கோடை யில் காந்திஜியோடு நான் சிம்லாவுக்குப் போயிருந்தபொழுது, இந்திய அரசாங்கத்தின் நிர்வாகி ஒருவரிடம்நான் இந்தக்கஷ் டத்தைத் தெரிவித்துக் கொண்டேன். அவர் எங்களுடைய நிலைமையிலிருந்தால் குடியானவர்களுக்கு என்ன யோசனை சொல்லி இருப்பார் என்று நான் அவரைக்கேட்டேன். அவ ருடைய மறுமொழி அவருடைய உள்ளத்தை நன்குதிறந்து காண்பிப்பதாக இருந்தது. வெளியேற்றப்பட்ட குடியான வன் இந்தக் கேள்வியைத் தன்னிடம் கேட்டால், அவர் அவ னுக்குப் பதிலே சொல்லியிருக்க மாட்டாராம். சட்டப்படி நிலம் குடியானவனிடமிருந்து பிடுங்கிக் கொள்ளப்பட்டும், அந்த நிலைமையில் கூட அந்த நிலத்தை அவன் உழக்கூடா தென்று அவனிடத்தில் நேரடியாகச்சொல்ல அவர் தயாரா யிருக்க வில்லை. சிம்லா மலையுச்சியில் அமர்ந்து கொண்டு தஸ்தாவேஜிக் கட்டுகளை முன்னே வைத்துப் பார்த்துக் கொண்டு, உத்தரவு பிறப்பிப்பது அவருக்கு எளிதாயிருக்க லாம். ஏதோ கணிதத்தில் ஒரு கணக்கு போடுவதுபோல உத்தரவைப் போட்டு விடமுடியும். அவராவது நைனிடாலி லிருக்கும் மாகாண அதிகாரிகளாவது நேருக்குநேராகமனித உருவத்தில் குடியானவர்களைச் சந்தித்ததில்லை; அவர்களு டைய நிலத்தையும் பார்த்ததே இல்லை.

குடியானவர்களுக்கு நாங்கள் ஒரே ஒரு யோசனையைத் தான்சொல்லவேண்டுமென்று சிம்லாவில் உபதேசம்செய்தார் கள். விவசாயிகள் பூராக் குத்தகையையும் செலுத்திவிட

வேண்டும், அல்லது அவர்களால் முடிந்ததைச் செலுத்திவிட வேண்டும் என்று நாங்கள் யோசனை சொல்லவேண்டுமென்றார்கள். அதாவது ஜமீன்தார்களின் ஏஜெண்டுகளாக நாங்கள் வேலை செய்யவேண்டுமாம்! உண்மையிலேயே தங்களால் முடிந்ததைக்கொடுக்கவேண்டுமென்று நாங்கள் அவர்களுக்கு ஏற்கனவே சொல்லிவிட்டோம். கடன் வாங்கியோ அல்லது கால்நடைகளை விற்றோ அவர்கள் வரியைக் கட்டலாகாதென்று நாங்கள் சேர்த்துச் சொன்னது உண்மைதான். அந்த யோசனையின் பயனையும் பார்த்தாகி விட்டது. கடுமையான கோடை. அதை நாங்கள் தாங்க முடியவில்லை. அதனால் ஏற்பட்ட அலுப்பு அதிகமாயிருந்தது. துர்ப்பாக்கியத்தைச் சகித்துத் கொள்வதற்கு, இந்திய விவசாயியிடம் வியக்கத் தக்க வல்லமை இருக்கிறது. அவனுக்கு நேரும் துர்ப்பாக்கியங்கள் ஒன்றிரண்டா? பஞ்சம், வெள்ளம், வியாதி, அவனை விடாமல் அலைத்துக் கொண்டு வரும் வறுமை, இவைகளை அவர்கள் பொறுக்கமுடியாமற்போய் நிலைமைமீறிப்போனால், அவர்கள் சாந்தமாக, முணுமுணுக்காமல் கீழே படுத்துக் கொண்டு லட்சக்கணக்கில் உயிரை விட்டு விடுவார்கள். இது அவர்கள் தப்பித்துக் கொள்ளும் வழி. வழக்கமாக நேர்ந்துவரும் மகத்தான துர்ப்பாக்கியங்களோடு ஒப்பிடும்படியாக 1931-ம் வருஷத்தில் எதுவும் நேர்ந்துவிட வில்லை. ஆனால் 1931-ம் வருஷத்தில் நேர்ந்தவைகள் ஆண்டவன் கட்டளைகள் அல்ல வென்றும், அவைகளைப் பொறுமையுடன் சகித்துக் கொண்டிருக்கக் கூடாதென்றும் அவனுக்குத் தோன்றிற்று. இவைகள் மனிதக் கோளாறுகள் என்று எண்ணினன்; எனவே ஆத்திரப் பட்டான்; அவனுடைய புதிய அரசியல் பயிற்சி இத்தகைய பலனை அவனுக்கு கொண்டுவந்து கொடுத்து விட்டது. 1931-ம் வருஷத்திய நிகழ்ச்சிகளைக் குறித்து நாங்களும் மிகவும் வருத்தப்பட்டோம். ஏனென்றால் அந்த நிகழ்ச்சிகளுக்குப் பொறுப்பு எங்களைச் சேர்ந்ததென்று நாங்கள் எண்ணினோம். குடியானவர்கள் இந்த விஷயத்தில் எங்களுடைய யோசனையைக்கேட்டு நடக்கவில்லையா? ஆனால் நாங்கள் அவர்களுக்கு அடிக்கடி ஒத்தாசை செய்திராவிட்டால், குடியானவர்களின் நிலைமை இன்னும் கேவலமாகப் போயிருக்கும் என்றும் நான் உறுதியாய் நம்புகிறேன். நாங்கள் அவர்களைக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்தோம். எனவே அவர்களை அரசாங்கத்தார் அலட்சியம் செய்ய முடியாமற் போயிற்று. ஆகையால்தான்

சாதாரணமாக அவர்களுக்குக் கிடைத்திருக்கக் கூடிய வரி வஜாவைக் காட்டிலும் அதிகமான வஜா இப்பொழுது கிடைத்தது. அவர்கள் பல வகையான அடக்கு முறைகளுக்கும் தண்டனைகளுக்கும் ஆளானார்கள். ஆனால் இந்தத் தூர்ப்பாக்கிய ஜனங்களுக்கு அவைகள் புதிதல்ல.

முந்திய கஷ்டங்களுக்கும் தற்போதைய கஷ்டங்களுக்கும் கொஞ்சம்தான் வித்தியாசம். இப்பொழுது இத்தகைய கஷ்டங்கள் விளம்பரமாகி விடுகின்றன. முந்தியோ ஒரு கிராமத்தில் ஜமீன்தாரின் ஏஜெண்டு குடியானவனைக் கொடுமையாக நடத்திச் சித்திரவதை கூடச் செய்யலாம். அதைப்பற்றி கேள்வி முறையே கிடையாது. கொடுமையாக நடத்தப்பெற்ற குடியானவன் செத்துப்போனால் ஒழிய, அவனிருந்த வட்டத்துக்கு வெளியே அதைப்பற்றி யாருக்குமே தெரிய முடியாது. ஆனால் நிலைமை இப்பொழுது மாறி விட்டது. விவசாயிகள் புத்துயிர் பெற்று ஒன்று சேர்ந்து கட்டுப்பாட்டுடன் இருக்கத் துவங்கி விட்டார்கள். தங்களுக்கு நேரும் இன்னல்களைக் காங்கிரஸ் காரியாலயங்களுக்கு அவ்வப்போது தெரிவித்துக்கொண்டதால், விளம்பரம் ஏற்பட்டு விட்டது. கோடை செல்லச்செல்ல பலவந்தமாக வரிவசூல் செய்யும் முயற்சிகள் தளர்ந்து வந்தன. அடக்கு முறை நடவடிக்கைகளும் குறைந்தன. தங்கள் நிலங்களிலிருந்து துரத்தப்பட்ட குடியானவர்களுடைய கதி என்ன ஆவது என்பதைப்பற்றித் தான் நாங்கள் கவலைப் பட்டோம். அவர்களுக்குஎன்ன செய்வது? அவர்கள் நிலங்களை திரும்பிக் கொடுக்குமாறு நாங்கள் அரசாங்கத்தாரை வற்புறுத்தினோம். அந்த நிலங்களில் பெரும்பான்மை தரிசாகக் கிடந்தது. எதிர்காலத்தைப் பற்றிய பிரச்னை இதைவிட முக்கியமானதாகவும் சிக்கலானதாகவும் இருந்தது. சென்ற வருஷத்துக்காக இப்பொழுது வரி தள்ளுபடி செய்யப்பட்டது. எதிர்காலத்தைப் பற்றி இன்னும் யாதொன்றும் தீர்மானிக்கப்படவில்லை. அக்டோபர் மாதம் தொட்டு அரசாங்கத்தார் புது வசூலுக்கு ஆரம்பித்து விடுவார்கள். அப்பொழுது என்ன நேரிடும்? "அடியைப்பிடியடா பாரத பட்டா" என்று திருப்பியும் நாங்கள் பழைய வேலையைச் செய்துகொண்டிருப்பதா? விவசாயிகளின் பிரச்னையைப்பற்றி யோசிப்பதற்காக ஒரு சிறு கமிட்டியை மாகாண அரசாங்கம் நியமனம் செய்தது. அரசாங்க அதிகாரிகளும் சட்டசபை மெம்பர்களாயிருந்த சில

ஜமீன்தார்களும் அந்தக்கமிட்டியில் அங்கத்தினர்களாக இடம்பெற்றிருந்தார்கள். கமிட்டியில் விவசாயிகளின் பிரதிநிதிகள் யாருமே இல்லை. கடைசி நிமிஷத்தில் கமிட்டி தன் வேலையைத் துவக்கியான பின்னர், எங்களின் சார்பாக கோவிந்த வல்லப பந்த் அவர்களை அந்தக் கமிட்டியிலிருக்கும்படி அரசாங்கத்தார் கேட்டுக்கொண்டார்கள். ஏற்கனவே கமிட்டி முக்கியமான முடிவுகளுக்கு வந்துவிட்ட பின்னர், அந்தக் கமிட்டியில் சேர்ந்து உழைப்பது லாபமில்லை என்று கோவிந்த வல்லப பந்த் தீர்மானம் கொண்டு கமிட்டியில் சேர மறுத்து விட்டார்.

ஐக்கிய மாகாண காங்கிரஸ் கமிட்டியார் இன்னொரு சிறு கமிட்டியை நியமனம்செய்திருந்தார்கள். விவசாயிகளின் தற்கால நிலைமையை ஆராய்ந்து, நில சம்பந்தமான சகல விவரங்களையும் சேகரிப்பதற்காக இந்தக் கமிட்டி நியமிக்கப்பட்டது. ஐக்கிய மாகாணத்திலுள்ள நிலைமைகளைப் பற்றி நீண்டதொரு யாதாஸ்தை இந்தக் கமிட்டி சமர்ப்பித்தது. விலைவாசியின்வீழ்ச்சியால் ஏற்பட்ட கொடுமைகளையும் ஆராய்ந்து முடிவு கூறிற்று. அவர்களுடைய சிபார்சுகள் தூரதிருஷ்டியுடன் நிலைமைக்குத் தகுந்த பரிகாரம் செய்யக் கூடியவைகளாகவிருந்தன. கோவிந்த வல்லப பந்த், ராபி அகமது கித்வாய், வெங்கடேச நாராயண் திவாரி இந்த மூன்று பேர்களின் கையெழுத்துடன் இந்த யாதாஸ்து புஸ்தகமாகவெளியாயிற்று. இந்த யாதாஸ்து வெளியாவதற்குவெகு கால முன்னரே, காந்திஜீ வட்ட மேஜை மகாநாட்டுக்காக லண்டனுக்குப் போய்விட்டார். அவர் மிகவும் தயங்கிக் கொண்டே தான் போனார். அவருடைய தயக்கத்துக்கு ஐக்கிய மாகாண விவசாயிகளின் நிலைமையும் ஒரு காரணமாகும். வட்ட மேஜை மகாநாட்டுக்காக லண்டன் போகாமலிருந்தால், அவர் ஐக்கிய மாகாணத்துக்கு வந்து இந்தச் சிக்கலான பிரச்னையில் ஈடுபட்டுழைப்பதாக தீர்மானம் செய்துகொண்டிருந்தார். அரசாங்கத்தாரோடு ஸிம்லாவில் பேசிய பொழுது ஐக்கிய மாகாணப் பிரச்னை குறிப்பிடப்பட்டது. அவர் இங்கிலாந்துக்குப் புறப்பட்டுப் போன பின்னர் நேர்ந்த நிகழ்ச்சிகளை தொடர்ந்து முழுதும் அவருக்கு எழுதி வந்தோம். முதல் இரண்டொரு மாதங்களில் ஒவ்வொருவாரமும் சாதாரணத் தபாலிலும், ஆகாயத் தபாலிலும் நான் அவருக்கு கடிதம் எழுதி வந்தேன். அவர் இங்கிலாந்தில் தங்கி யிருந்த பின்

பகுதிக்காலத்தில், அவ்வளவு ஒழுங்காகக் கடிதமெழுதவில்லை. ஏனெனில், அவர் விரைவில் திரும்பி வந்துவிடுவாரென்று எதிர் பார்த்துக்கொண்டிருந்தோம். அதிகப்பட்டால் மூன்று மாதங்களுக்குள், அதாவது நவம்பர் மாதத்தில் தாம் திரும்பி வந்துவிடுவதாக அவர் எங்களிடம் சொல்லிப் போனர். அதற்குள் இந்தியாவில் யாதொரு நெருக்கடியும் நேராது என்றுநம்பியிருந்தோம். காந்திஜீ இல்லாதநேரத்தில் அரசாங்கத்தாரோடு நெருக்கடியை விளைவித்துக்கொண்டு போராட நாங்கள் விரும்பவில்லை. ஆனல் அவர் திரும்புவதற்குத் தாமதமாகிவிட்டதாலும் நிலசம்பந்தமான நிலைமையில்வெகு சீக்கிரமாகமாறுதல்கள் ஏற்பட்டுக்கொண்டு வந்தமையாலும் நிகழ்ச்சிகளைக் குறிப்பிட்டு எவ்வாறு அரசாங்கத்தாரால்நிர்ப் பந்தப்படுத்தப்படுகிறோம் என்பதை விபரமாக அவருக்குத் தந்தி மூலம் அனுப்பி வைத்தோம். இந்த விஷயத்தில் லண்டனிலிருந்துதம்மால் ஒன்றும் செய்ய முடியாதென்றும்,எது உசிதமென்று தோன்றுகிறதோ அவ்வாறு நாங்கள்செய்யலா மென்றும் மகாத்மா எங்களுக்குப் பதில் தந்தி கொடுத்து விட்டார்.

ஐக்கிய மாகாண காங்கிரஸ் காரியக் கமிட்டி முழு விவரங்களையும் காங்கிரஸ் காரியக் கமிட்டிக்கு தெரிவித்துக் கொண்டே வந்திருந்தது. அகில இந்திய காங்கிரஸ் காரியக் கமிட்டியில் நான்ஒரு அங்கத்தினனுக இருந்தபடியால்நானே நேரிலே எப்பொழுதும் எல்லாவற்றையும் சொல்லிவந்தேன். ஆனல் விஷயங்கள் தீவிரமாகப் போய்க்கொண்டிருந்தபடியால், காரியக்கமிட்டி மாகாணக் கமிட்டித் தலைவர் டி. ஏ.கே. ஷேர்வானியையும், அலகாபாத் ஜில்லா கமிட்டித்தலைவர் புருஷோத்தமதாஸ் தாண்டனையும் கூட கலந்து யோசித்தது. அரசாங்க நிலக்கமிட்டியும் தன்னுடைய யாதாஸ்தை வெளியிட்டது. அதனுடைய சிபார்சுகள் சிக்கலாயும் மூடமந்திரமாயும் இருந்தன. ஸ்தல அதிகாரிகளுக்கு இந்தச் சிபார்சுகளில் பூரண அதிகாரம் கொடுக்கப் பட்டிருந்தது.மொத்தத்தில் கமிட்டி சிபார்சு செய்த வரி தள்ளுபடிகள்,சென்ற பசலியைக் காட்டிலும் அதிகமாகத்தானிருந்தன. ஆனல் அவைகள் போதாதென்பது எங்களுடைய எண்ணம். சிபார்சுகளுக்கு அடிப்படையாய் நின்ற கொள்கைகளையும் அவைகளின் பிரயோகங்களையும் நாங்கள் ஆட்சேபித்தோம். மேலும் யாதாஸ்து எதிர்கால வரியைப்பற்றித்தான் சிபார்சுசெய்தது.



பண்டித ஜவஹர்லால் நேரு அவர்களும்
ஸ்ரீமதி கமலா நேரு அவர்களும்
வெற்றிமாலை அணிந்து உப்பு சத்தியாக்கிரகத்திற்கு
புறப்படுதல்

பழைய பாக்கி, கடன், நிலப்பறிமுதல் செய்யப்பட்ட விவசாயிகளின் பிரச்னை இவைகளைப்பற்றி யாதாஸ்து கவனிக்கவே இல்லை. இந்த நிலைமையில் நாங்கள் என்ன செய்வது?

சென்ற கோடையில் நாங்கள் சொன்னதுபோல முடிந்ததைக் கொடுத்துவிட்டு, நேர்ந்ததைப் பொறுத்துக் கொள்ளுங்கள் என்று குடியானவர்களுக்கு யோசனை சொல்லுவதா? அந்த யோசனை மிகவும் முட்டாள் தன்மானதென்று நாங்கள் அனுபவத்தில் தெரிந்துகொண்டோம். அதையே மீண்டும் வற்புறுத்த முடியாது. கூடுமானல் அரசாங்கக் கமிட்டி சிபார்சு செய்திருக்கும் தொகையை பாக்கியின்றி கொடுத்து விடுவதற்கு, குடியானவர்கள் பெரும் முயற்சி செய்யவேண்டும்; இல்லாவிட்டால் தற்காலிகமாக அவர்கள் ஒன்றுமே கொடுக்காமல் என்ன நடக்கும் என்று எதிர்பார்த்துக்கொண்டிருக்கவேண்டும். கேட்ட வரியில் ஒரு பகுதியைச் செலுத்துவதில் புண்ணியமே இல்லை. குடியானவர்களின் கையிருப்பு எல்லாம் தொலைந்துபோனதுமல்லாமல், அவர்கள் நிலத்தையும் இழக்கவேண்டியதாகும். எங்களுடைய மாகாண காங்கிரஸ் காரியக்கமிட்டி அப்போதய நிலைமையை நீண்ட காலம் மிகுந்த சிரத்தையுடனே ஆலோசித்துப் பார்த்தது. அரசாங்கத்தின் சிபார்சு, முன்கோடையில் செய்த வஜாக்களைக் காட்டிலும் அதிகமாயிருந்த போதிலும் அவைகள் தற்போதைய நிலைமையில் ஒப்புக்கொள்ளத்தக்க தல்லவென்று தீர்மானித்துவிட்டது. வஜாக்களைக் குடியானவர்களுக்கு சாதகமாக மாற்றிவைக்க அரசாங்கத்தால் முடியும். எனவே நாங்கள் அரசாங்கத்தை வற்புறுத்திப் பார்த்தோம். ஆனால் பயனில்லையென்று தோன்றிற்று. எந்தப் போராட்டம் வேண்டாமென்று நாங்கள் முயற்சிசெய்து தடுக்கப்பார்த்தோமோ, அந்தப்போராட்டமே வேகமாக வந்துகொண்டிருந்ததாகத் தோன்றிற்று. இந்திய அரசாங்கமும் மாகாண அரசாங்கமும் காங்கிரசை நம்பிக்கைக் கண்களோடு பார்க்கவில்லை. காங்கிரஸிடம் அவைகள் கடுமையான நோக்கம் கொண்டதாகத் தெரிந்தது.

நாங்கள் அரசாங்கத்துக்கு நீளமாக கடிதங்கள் எழுதினோம். "ஸ்தல அதிகாரிகளுக்கு தெரியப்படுத்திக்கொள்ளவும்" என்று சுருக்கமாக எங்களுக்கு பதில் வரும். எங்களை எந்த வகையிலும் ஆதரிக்க அரசாங்கத்துக்கு நோக்கம்

இல்லை யென்பது வெளியாயிற்று. குடியானவர்களுக்கு அதிக மாக வரியைத் தள்ளிக் கொடுத்து விட்டால், காங்கிரஸின் செல்வாக்கு உயர்ந்துவிடுமோவென்றெண்ணி, அரசாங்கம் தடுமாறிக் கொண்டிருந்தது. தன் செல்வாக்கைப் பற்றியே தியானம் செய்துகொண்டிருப்பது அரசாங்கத்தின் நீண்ட கால வழக்கம். காங்கிரஸின் மூலமாக வரி வஜா ஏற்பட்ட தென்று குடியானவர்கள் எண்ணிவிடுவார்களோ என அர சாங்கம் ஆத்திரப்பட்டது. கூடுமான வரையில், இவ்வித எண்ணம் ஏற்படாமல் இருக்கவேண்டுமென்று விரும்பிற்று. காங்கிரஸ் இயக்கத்தையே அடியோடு தாக்கி அடக்க, இந் திய அரசாங்கத்தார் விரைவிலே பிரயத்தனம்செய்யப்போவ தாக, டில்லியிலிருந்தும் வேறு இடத்திலிருந்தும் எங்களுக் குத் தகவல்கள் வந்துகொண்டிருந்தன. முன்னே குறிப்பிட்ட "அந்தச் சின்னச் சுண்டுவிரல்" இப்பொழுது துடிதுடித்துக் கொண்டிருந்தது. தேள்களைப்போல் எங்களைக் கொட்டத் தயாராக காத்துக்கொண்டிருந்தன. அரசாங்கத்தாரின்சூழ்ச் சியின் விவரங்களும் எங்களுக்குக் கிடைத்தன. நவம்பர் மாதத்திலென்று நினைக்கிறேன்; எனக்கும் காங்கிரஸ் தலை வர் வல்லபாய் படேலுக்கும் தனித் தனியே டாக்டர் அன் ஸாரி செய்தி அனுப்பிவைத்தார். ஏற்கனவே எங்களுக்குக் கிடைத்த தகவல்கள் உண்மையென்றும், எல்லைப்புறத்திற் கும், ஐக்கிய மாகாணங்களுக்கும் புதிதாக ஆர்டினன்ஸ்(அவ சரச் சட்டங்கள்) தயாரித்துக்கொண்டிருக்கிறார்கள் என்றும் விவரங்களுடன்செய்தி அனுப்பிவைத்தார். இதற்குள்வங்கா ளத்துக்கு ஏற்கனவேபுதிய ஆர்டினன்ஸ்ஒன்றுசன்மானமாக கிடைத்துவிட்டதோ, கிடைக்கும் தருவாயிலிருந்ததோ சரி யாக ஞாபகமில்லை. சில வாரங்கள் கழிந்து, புதிய ஆர்டி னன்ஸ்கள் வெளித்தோன்றியபொழுது, டாக்டர் அன்ஸாரி யின் செய்தி எல்லா விவரங்களிலும் உண்மையென்று ஸ்தா பிக்கப்பட்டது. எதிர் பாராதபடி வட்ட மேஜை மகாநாடு வளர்ந்துகொண்டே போனதால், அரசாங்கத்தார் அடக்கு முறையைக் கையாளத் தாமதித்தார்கள் என்றுசொல்லப்பட் டது. ஏதேதோ இனிப்பாக, சாரமில்லாத சங்கதிகளைவட்ட மேஜை மகாநாட்டு அங்கத்தினர்கள் ஒருவர்காதில் மற்றொரு வர் ஓதிக்கொண்டிருக்கையில், இந்தியாவில் பெருவாரியான அடக்குமுறையைக் கையாள வேண்டாமென்று அரசாங்கத் தார் விரும்பினார்கள். இவ்வாறாக மனஸ்தாபம் வளர்ந்து கொண்டே போயிற்று. நிகழ்ச்சிகளின் பிரவாகம் தன்

வழியே செல்லும் என்றும், எங்கள் சிறிய முயற்சிகளால் அதைத் தடுக்க முடியாதென்றும் உணர ஆரம்பித்தோம். இந்த ராஜீய நாடகத்தின் முடிவு எப்படியிருப்பினும், அதை தைரியமாய் வரவேற்க தனித்தும், கூட்டமாயும் தயார் செய்துகொள்வதுதான் சாத்தியப்பட்ட வேலைஎன்றுதோன்றிற்று. இருந்தாலும் இந்தப் போராட்டம் நேர்ந்து, திரை தூக்கப்படு முன்னர், காந்திஜீ இந்தியாவுக்கு வந்து சமாதானத்துக்கோ சண்டைக்கோ, பொறுப்பை ஏற்றுக் கொள்வார் என்று இன்னும் நாங்கள் எதிர் பார்த்தோம். அவர் இல்லாத சமயத்தில், அந்தச் சுமையை, மேமேலே போட்டுக்கொள்ள எங்களில் எவரும் தயாராய் இருக்கவில்லை.

ஐக்கிய மகாணங்களில் அரசாங்கத்தார் வேறொரு யுக்தி செய்தார்கள். அதனால் கிராமாந்தரங்களில் பரபரப்பு உண்டாயிற்று. ஒவ்வொரு குடியானவனுக்கும் கொடுக்கப்படும் வஜா தொகையைக் குறிப்பிட்டு சீட்டுகள் வழங்கினார்கள். குறிப்பிட்ட தொகையை ஒருமாதத்துக்குள் (சில சமயங்களில் இதற்குக் குறைந்தும் காலம் குறிப்பிடப் பட்டிருக்கும்) செலுத்தாவிட்டால், வஜா ரத்துசெய்யப்படுமென்றும் சட்டத்தின் மூலமாக, அதாவது ஜங்கமஜப்தி, நிலத்திலிருந்து அப்புறப்படுத்தல்முதலியநடவடிக்கைகளால், முழுத்தொகையும் வசூலிக்கப்படு மென்றும் அந்தக் காகிதங்களில் காணப்பட்டது. சாதாரண வருஷங்களில் குடியானவர்கள் இரண்டு மூன்று மாதகாலத்திற்குள் தவணைகளாக தங்களுடைய குத்தகைப் பணத்தை செலுத்தி விடுவது வழக்கம். இந்தக் கால எல்லையும் தவணைகளும்கூட இப்பொழுது அனுமதிக்கப்படவில்லை. எனவே கிராமாந்தரங்களில் திடீரென்று நெருக்கடி உண்டாயிற்று. கையில் துண்டுக் காகித சகிதமாக, குடியானவர்கள் ஆட்சேபித்துக்கொண்டும் முறையிட்டுக் கொண்டும் அங்குமிங்கும் யோசனை கேட்பதற்காக ஓடியலைந்தார்கள். அரசாங்கமும் அதனுடைய ஸ்தல்அதிகாரிகளும் இவ்வாறு பயமுறுத்தினது மிகவும் முட்டாள்தனமானதாகும். அது போலி மிரட்டல் என்றும் பின்னர் எங்களுக்கு தெரிவிக்கப்பட்டது. என்றாலும், அந்த மிரட்டல் ராஜியைத் தடுத்து படிப்படியாக போராட்டத்தில் கொண்டு போய் விட்டு விட்டது.

என்ன செய்வதென்று காங்கிரசும் குடியானவர்களும் வெகு சீக்கிரத்தில் தீர்மானம் செய்யவேண்டி யிருந்தது,

காந்திஜி திரும்பி வரும் வரையில், எங்களுடைய தீர்மானத்தை ஒத்திப்போடமுடியாது. நாங்கள் என்ன செய்வது? குடியானவர்களில் பெரும்பான்மையோருக்கு செலுத்தமுடியாதென்று எங்களுக்கு நன்ருகத் தெரிந்திருந்தும், குறிப்பிடப்பட்டிருந்த சிறிது காலத்துக்குள், கேட்ட தொகையைச் செலுத்திவிட வேண்டுமென்று நாங்கள் நியாயமாக யோசனை சொல்ல முடியுமா? அவர்களுடைய பழைய பாக்கிகளைப்பற்றி என்ன நேரும்? கேட்ட தொகையில் பெரும்பகுதியையோ அல்லது பூராவையுமோ அவர்கள் செலுத்தி, அது பழைய பாக்கிக்கு வரவு வைக்கப்பட்டால், இந்த நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு நிலத்திலிருந்து துரத்தப்படும் சங்கடம் மறுபடியும் நேராதென்று எப்படி நம்பமுடியும்? அலகாபாத் ஜில்லா காங்கிரஸ் கமிட்டியில் விவசாயிகள் பலர் அங்கத்தினர்களாக இருந்ததால், அக்கமிட்டி அரசாங்க உத்திரவை எதிர்த்துப் போராடத் தீர்மானித்தது. வரி செலுத்துமாறு குடியானவர்களுக்கு யோசனை சொல்லக்கூடாதென்று அது தீர்மானித்தது. அகில இந்திய காரியக் கமிட்டியிடமும் மாகாண காரியக் கமிட்டியிடமும் அனுமதிபெருமல் எத்தகைய போராட்ட நடவடிக்கையும் எடுத்துக்கொள்ளக்கூடாது என்று முடிவாயிற்று. எனவே இவ்விஷயம் அகில இந்திய காங்கிரஸ் காரியக்கமிட்டி முன்னிலையில் வைக்கப்பட்டது. மாகாணத்தின் பிரதிநிதியாக தாஸ்துக் ஷெர்வானியும், ஜில்லாப் பிரதிநிதியாக புருஷோத்தமதாஸ் தாண்டனும் நிலைமையைத் தெளிவாக எடுத்துரைக்க அங்கே பிரசன்னமாயிருந்தார்கள். அலகாபாத் ஜில்லாவைப் பொறுத்த மட்டும்தான் நாங்கள் இப்பொழுது கவனிக்க வேண்டியிருந்தது. அது ராஜீயக் கலப்பில்லாத பொருளாதாரப் பிரச்னை. ஆனல் அப்பொழுதிருக்கும் அரசியல் தகராறு நிலைமையில் போராட்டத்தைத் துவக்கினல், எதிர்பாராத பல விளைவுகள் நேரலாமென்று நாங்கள் கருதினேம். மேற்கொண்டு ராஜிப் பேச்சுநடந்து லாபகரமான ஷரத்துக்கள் கிடைக்கும் வரையில் தற்காலிகமாக குத்தகையையோ வரியையோ கொடுக்க வேண்டாமென்று அலகாபாத் ஜில்லா காங்கிரஸ்கமிட்டி விவசாயிகளுக்கு யோசனை சொல்ல அனுமதி கொடுக்கப்படலாமா? கேள்வி இதுதான்; மிகவும் குறுகியதுதான்; இந்த எல்லைக்குள்ளாகவே இருந்து தீர்ப்புச் சொல்ல வேண்டுமென்று எங்களுக்கு எண்ணம். ஆனல் அவ்வாறு சாத்தியப்படுமா?

காந்திஜீ திரும்பி வருமுன்னர் அரசாங்கத்தாரோடு உறவை முறித்துக் கொள்ளாமலிருப்பதற்கு தன்னாலான முயற்சியனைத்தும் செய்ய வேண்டுமென்று காரியக் கமிட்டி விரும்பிற்று. தவிரவும் முதலாளி தொழிலாளி என்ற போராட்டத்தில் கொண்டு போய் விட்டு விடக்கூடிய ஒரு பொருளாதாரப் பிரச்னையில் காரியக் கமிட்டி தற்போது முறிவை விரும்பவில்லை. அரசியலில் தீவிரப்போக்கு கொண்டிருந்தாலும், சமூகத் திருத்தத்தில் காரியக்கமிட்டி தீவிரம் கொண்டதல்ல. ஜமீன்தார் விவசாயிக் கேள்வியைக் கிளப்பி விடுவதற்கு அதற்கு இஷ்டமேயில்லை. நானோ அபேத வாதத்தை ஒப்புக் கொண்டவன். எனவே சமூக பொருளாதார விஷயங்களில் யோசனை சொல்ல, நான் சரியான பேர்வழி அல்லவென்று கருதினார்கள். விருப்பம் சிறிதும் இல்லாவிடினும் நிகழ்ச்சிகளால் வரி கொடாப் போராட்டத்துக்கு, காங்கிரஸ் அங்கத்தினர்களில் நிதானஸ்தர்களும்கூட நிலைமையைக் கருதி இணங்க வேண்டியதுதான் என்று முடிவுக்கு வரவேண்டுமென்பது என் விருப்பம். எனவே எங்களுடைய மாகாணத்திலிருந்து ஷெர்வானியும் மற்றவர்களும் காரியக் கமிட்டிக் கூட்டத்தில் பிரசன்னமாயிருப்பதை வரவேற்றேன். எங்களுடைய மாகாணத் தலைவர் ஷெர்வானி. தீவிழுங்கும் தீவிர வாதியல்ல. சாதாரணமாகவே காங்கிரசுக்குள் அவர் அரசியலிலும் சரி, சமூகத் திருத்தத்திலும் சரியே, நிதானஸ்தராக இருந்தார். அந்த வருஷத்துவக்கத்தில் ஐக்கிய மாகாண காங்கிரஸ் கமிட்டி நில சம்பந்தமாகக் கொண்டிருந்த திட்டத்தை அவர் ஏற்றுக் கொள்ளவில்லை. ஆனால் கமிட்டிக்குத் தலைவராகி அவர் பொறுப்பை யேற்றுக் கொள்ளவேண்டி வந்தபொழுது, வேறு எதுவும் சாத்தியமில்லை யென்ற முடிவுக்கு வந்துவிட்டார். பின்னர் மாகாணக் கமிட்டி எடுத்துக் கொண்ட ஒவ்வொரு நடவடிக்கையும் அவரைப் பூரணமாக கலந்துகொண்டு எடுத்துக் கொள்ளப் பட்டதாகும். தலைவரென்ற முறையில் அவரே செய்ததாகவும் சொல்லலாம்.

காங்கிரஸ் காரியக் கமிட்டியில் தாஸ்தூக் ஷெர்வானி அவர்களின் பேச்சால் காரியக் கமிட்டி அங்கத்தினர்களின் மனம் வெகுவாக மாறிற்று. நான் பேசியிருந்தாலும் அத்தகைய மாறுதல் ஏற்பட்டிருக்குமோ என்பது சந்தேகம். காரியக் கமிட்டியார் ரொம்பவும் தயங்கினார்கள். ஆனால்

அவர்களால் மறுக்க முடியவில்லை. வரியை நிறுத்திவைப்பதற்கு ஐக்கிய மாகாணத்தில் எந்தப் பிரதேசத்திற்கும் யோசனை சொல்ல, ஐக்கிய மாகாண கமிட்டிக்கு காரியக் கமிட்டியார் அதிகாரம் கொடுத்தார்கள். ஆனாலும் கூடுமான வரையில் இந்த அனுமதியை உபயோகிக்காமலிருக்குமாறும் மாகாண அரசாங்கத்தோடு ராஜியாக காரியத்தை முடித்துக் கொள்ளுமாறும்,காரியக்கமிட்டியார் ஐக்கியமாகாணக் கமிட்டியை வற்புறுத்தி வேண்டிக் கொண்டார்கள்.

சிறிது காலம் அரசாங்கத்தோடு ராஜி பேசிப் பார்த்தோம்; பயனில்லை. அலகாபாத் ஜில்லாவில் வஜாத் தொகைகளைச் சிறிதளவு உயர்த்தினார்கள் என்று நான் நினைக்கிறேன். சாதாரண காலங்களில் சண்டையின்றி ராஜியாகத் தீர்த்துக் கொள்வது சாத்தியமாக இருக்கலாம். வித்தியாசங்கள் குறைந்துகொண்டு வந்தன. ஆனால் தற்போதய நிலைமையிலோ, சந்தர்ப்பங்கள் அசாதாரணமானவையாக இருந்தன. இருதரப்பினும்(அரசாங்கத்துக்கும் காங்கிரஸுக்கும்) போராட்டம் வந்து கொண்டிருக்கிறதென நம்பிக்கை இருந்தது. ராஜிப் பேச்சுகளில் உண்மையான நல்லெண்ணம் இல்லையென்றும் பரஸ்பரம் அவநம்பிக்கை கொண்டோம். ஒருகட்சி செய்யும் ஒவ்வோர் காரியமும் வரப்போகும் சண்டையில் பலம் பெறுவதற்கான சூழ்ச்சி என்றும் மற்றக் கக்ஷியால் கருதப்பட்டது. இதற்கான முயற்சிகளை அரசாங்கத்தார் இரகசியமாகச் செய்து பூர்த்தி பண்ணி விட்டார்கள். எங்களுடைய சக்தியோ ஜனங்களின் மன உறுதியை முற்றிலும் பொறுத்து நின்றதாகும். அந்த உறுதியை இரகசிய வேலைகளால் கெட்டிப்படுத்த முடியாது. விடுதலைப் போராட்டம் முடிவு பெற்றுவிடவில்லை யென்றும் விரைவில் நாம் பல சோதனைகளுக்கும் கஷ்டங்களுக்கும் ஆளாகவேண்டுமென்றும் மேடைப் பிரசங்கங்களில் எங்களிற் சிலர் திருப்பித் திருப்பிச் சொல்லிக்கொண்டே வந்திருக்கிறார்கள். அப்படி அடிக்கடி சொல்லிக் கொண்டு வந்த குற்றவாளிகளில் நானும் ஒருவன். இந்தச் சோதனைகளுக்கு ஜனங்கள் தயாராயிருக்கவேண்டுமென்று நாங்கள் சொல்லி வந்தோம். இப்படிச் சொல்லி வந்ததற்காக போரை விரும்பும் கலகக்காரர் என்று நாங்கள் ஏசப்பட்டோம். நடுத்தர வகுப்பார்களைச் சேர்ந்த காங்கிரஸ் ஊழியர்களுக்கு நிலைமையையும் நிகழ்ச்சிகளையும் உள்ளபடியே மதிப்பிட மனமே இல்லை. எப்படி

யாவது போராட்டத்தைத் தடுத்துவிடலாமென்று அவர்கள் நம்பியிருந்தார்கள். காந்திஜி லண்டனிலிருந்ததினால் பத்திரிகை படிக்கும் கூட்டத்தாரின் கவனம் அங்கேயே சென்றுகொண்டிருந்தது. படித்தவர்கள் சும்மா இருப்பினும், நிலைமை நாளுக்கு நாள் முறுக்கேறிக்கொண்டு வந்தது. வங்காளத்திலும், எல்லைப்புற மாகாணத்திலும், ஐக்கிய மாகாணங்களிலும் வேகமாக சம்பவங்கள் நேர்ந்து கொண்டே வந்தன. நெருக்கடி வந்துகொண்டிருக்கிறதென்ற தோற்றம் அநேகருக்கு நவம்பர் மாதத்தில் உதயமாயிற்று. எதிர்பாராமல் எதுவும் நேர்ந்துவிடக் கூடாதே என்ற முன்னெச்சரிக்கையுடன், போராட்டத்தை எதிர்பார்த்து, சில சில்லரை ஏற்பாடுகளை ஐக்கிய மாகாண காங்கிரஸ் கமிட்டி செய்து வைத்துக் கொண்டது. அலகாபாத் கமிட்டி பெரிய விவசாயிகள் மகாநாடு ஒன்றைக் கூட்டி வைத்தது. அதிலே தற்காலிகமாக தீர்மானமொன்று நிறைவேற்றிவைக்கப்பட்டது. லாபகரமான ராஜி ஏற்படாவிட்டால் வாடகையையும் வரியையும்கொடுக்கவேண்டாமென்று காங்கிரஸ் காரியக்கமிட்டி குடியானவர்களுக்கு யோசனை சொல்லவேண்டி வரும் என்பது அந்தத் தீர்மானத்தின் சாராம்சம். இந்தத் தீர்மானத்தினால் மாகாண அரசாங்கம் மிகுதியும் ஆத்திர மடைந்தது. இதையே, போருக்குக் காரணமாக வைத்துக்கொண்டு, எங்களுடன் அப்புறம் ராஜி பேச மறுத்துவிட்டது.

அரசாங்கத்தின் மறுப்பு மாகாண கமிட்டிக்கு ஆத்திரத்தை உண்டாக்கிற்று. எனவே இதை வரப்போகும் போராட்டத்துக்கு அறிகுறியாகக் கொண்டு, மாகாண கமிட்டி விரைவாக தன்னுடைய சொந்த ஏற்பாடுகளைச் செய்தது. அலகாபாத்தில் வேறொரு விவசாயிகள் மகாநாடு நடைபெற்றது. மீண்டும் சமரஸம் ஏற்பட்டு லாபகரமான ஷரத்துக்கள் கிடைக்காத வரையிலும், குடியானவர்கள் கிஸ்தித்தொகையைக் கட்டவேண்டியதில்லையென்று தீர்மானம்செய்யப்பட்டது.இப்பொழுதும் எப்பொழுதும்,கடைசி வரைக்கும், வரி கொடாமை எங்களுடைய நோக்கமல்ல. நியாயமான வரியைத்தான் கொடுக்கவேண்டும் என்பது எங்கள் கட்சியாகும். மீண்டும் ராஜிபேசப் பார்த்தோம். ஆனால், எதிர்க்கட்சி படாடோபத்துடன் மறுத்து ராஜிக்கு இணங்கவில்லை. அலகபாத் தீர்மானம் ஜமீன்தார், குடியானவர்

இருவருக்கும் பொதுவானதாகும்; ஆனாலும், முக்கியமாக அது குடியானவர்களையும் சில்லரை மிராசுதார்களையும் தான் கட்டுப்படுத்துமென்று எங்களுக்குத் தெரியும். ஐக்கிய மாகாணத்தில், 1931-ம் வருஷம் நவம்பர் மாத முடிவிலும் டிசம்பர் மாதத் துவக்கத்திலும், நிலைமை இவ்வாறு இருந்தது. இதற்கிடையே, வங்காளத்திலும் எல்லைப்புற மாகாணத்திலும், விஷயங்கள் நெருக்கடிக்கு வந்து விட்டன. வங்காளத்தில் புதியதும் பயங்கரமானதுமான அவசரச் சட்டமொன்று பிரயோகம் செய்யப்பட்டது. இவைகள் யாவும் போரின் அறிகுறிகளாகும்; சமாதான அறிகுறிகளல்ல. காந்திஜீ எப்பொழுது திரும்புவார் என்ற கவலை நாடெங்கும் மிகுந்தது. நீண்டகாலமாக தயார்செய்து கொண்டிருந்த போராட்டத்தை அரசாங்கம் துவக்கு முன்னர், காந்திஜீ இந்தியாவுக்குத் திரும்பி வந்துவிடுவாரா? அல்லது அவர் திரும்பிவருமுன்னரே, போராட்டம் ஏற்பட்டு அவரது தோழர்களில் பலர் சிறையிலிருப்பார்களா?

அவர் இந்தியாவுக்கு திரும்பி விடுவார் என்றும், அந்த வருஷக்கடைசி வாரத்தில் பம்பாய்க்கு வந்து சேர்ந்துவிடுவாரென்றும் எங்களுக்குத் தெரிந்தது. அவர் திரும்பிவரும் வரையில் போராட்டத்தைத் தடுத்து வைக்க நாங்கள் எல்லோரும் ஆசைப்பட்டோம். காங்கிரஸ் தலைமைக் காரியாலயத்திலும் சரி, மற்ற இடங்களிலும் சரி முக்கியமான காங்கிரஸ் ஊழியர் ஒவ்வொருவருக்கும் இதே விருப்பம்தான். போராட்டம் நடைபெற்றாலுமே, அவரை நாங்கள் சந்தித்து அவருடைய யோசனையையும் நோக்கங்களையும் தெரிந்து கொள்ளுவது உசிதமாகும். அரசாங்கத்துக்கும் காங்கிரஸுக்கும் பந்தய ஓட்டம்; போராட்டத்தை முதலில் துவக்குவதால் ஏற்படும் லாபம் அரசாங்கத்துக்குபோய்ச் சேர்ந்து விட்டது.

# XL

## ராஜியின் முடிவு

ஐக்கிய மகாணங்களில் எனக்கு எவ்வளவோ வேலையிருந்தபோதிலும், ராஜீயச் சுழல்காற்றுவீசும் வேறு இரண்டு பகுதிகளான எல்லைப்புற மாகாணத்தையும், வங்காளத்தையும் போய்ப் பார்க்கவேண்டுமென்று நான் ஆவல்பட்டேன். நேரே ஸ்தலத்துக்குப்போய் நிலைமையைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்றும், பழைய தோழர்களைச் சந்திக்கவேண்டுமென்றும் நான் விரும்பினேன். தோழர்களில் அநேகரைச் சென்ற இரண்டு வருஷங்களாக நான் பார்க்கவே இல்லை. தேசியப் போராட்டத்தில் இந்த மாகாணங்களின் ஜனங்கள் காட்டிய தீரத்தையும் தியாகத்தையும் பாராட்டி தலைவணங்குவதற்காக, அந்த மாகாணங்களுக்குப் போகவேண்டுமென்பதே முக்கியமான காரணம். தற்சமயம் எல்லைப்புற மாகாணத்துக்குப் போக முடியாது. முக்கியமான எந்தக் காங்கிரஸ் காரர்களும் எல்லைப்புற மாகாணத்தைப் பார்வையிடுவதில் இந்திய அரசாங்கத்தாருக்கு விருப்பம் இல்லை. இந்தக் காரணத்தினால் அங்கே செல்ல முயற்சி செய்து வீண் தகராறை உண்டாக்குவதில் எங்களுக்கு விருப்பம் இல்லை. வங்காளத்தில் நிலைமை கேவலமாகிக்கொண்டே வந்தது. அந்த மாகாணத்தின்பேரில் எனக்கு மிகுதியும் பிரேமை. ஆனாலும் போவதற்குத் தயங்கினேன். அங்கே நான் போனால் சிறிதளவுகூட நன்மை ஏற்படாது என்பதை உணர்ந்தேன். அந்த மகாணத்தில் நீண்டகாலமாக காங்கிரஸ் காரர்களுக்குள் இரண்டு கட்சிகள். இரண்டுக்குள்ளும் வருந்தத்தக்கதான நீடித்த சச்சரவு இருந்துகொண்டே வந்தது. எனவே வேறு மாகாண காங்கிரஸ்காரர்கள் அங்கே போவதற்கு பயப்பட்டார்கள். ஏதாவது ஒருகட்சிக்குள் சிக்கிக்கொள்ள நேருமோ என்று அஞ்சி, வெளிக் காங்கிரஸ்காரர்கள் வங்காளத்துக்குப் போகாமலிருந்து விட்டனர். இது எதிர்வரும் அபாயத்தைக்கண்டு மண்ணில் முகத்தைப் புதைத்துக்கொள்ளும் நெருப்புக்கோழி நியாயமாகும். இதனால் வங்காளத்

துக்கு ஆறுதல் அளிக்கவாவது அதன் பிரச்னைகளைத் தீர்க்கவாவது முடியாது. காந்திஜீ லண்டனுக்குப் போன சிறிது காலத்துக்கெல்லாம் வங்காளத்தில் இரண்டு சம்பவங்கள் நேர்ந்தன. அவைகளின்பேரில் திடீரென்று அகில இந்தியாவின் கவனம் முழுதும் சென்றது. இந்த இரண்டு நிகழ்ச்சிகளும் ஹிஜ்லியிலும், சிட்டகாங்கிலும் நேர்ந்தன.

விசாரணையின்றி காவலில் வைக்கப்பட்டவர்களுக்கு ஹிஜ்லி ஒரு முக்கிய விடுதியாக இருந்தது. விடுதிக்குள் கலகம் நேர்ந்து, காவலிலிருந்தவர்கள் சிறைசிப்பந்திகளைத் தாக்கியதாகவும், அதனால் சிறைச் சிப்பந்திகள் அவர்கள்பேரில் சுட நேர்ந்ததென்றும் உத்தியோக முறையில் அறிவிக்கப்பட்டது. துப்பாக்கிப் பிரயோகத்தால் ஒரு "காவல் தேசபக்தர்" கொல்லப்பட்டார்; பலருக்கு காயம்; சம்பவம் நடந்தவுடனே ஸ்தல அதிகாரி விசாரணைசெய்து துப்பாக்கிப் பிரயோகத்துக்காகவும் அதன் விளைவுகளுக்காகவும் சிறைச் சிப்பந்திகளின்பேரில் பழி சுமத்துவதற்கு ஆதாரமில்லையென்று அவர்களைத் தோஷத்தினின்றும் நீக்கிவிட்டார். ஆனால்இந்த நிகழ்ச்சியில் விநோதமான பல அம்சங்கள் இருந்தன. உத்தியோக அறிக்கைக்கு விரோதமாக சிலவிஷயங்கள் வெளிவந்தன. பூராவாக விசாரிக்க வேண்டுமென்று நாடு முழுதும் கடுமையாகக் கூக்குரல் போட்டார்கள். விசாரணை செய்வது இந்திய அதிகாரிகளுக்கு வழக்கமே இல்லை. இந்த வழக்கத்தை மீறி வங்காள அரசாங்கத்தார் உயர்தர நீதிபதிகளைக் கொண்ட விசாரணைக்கமிட்டியொன்றை நியமனம் செய்தார்கள். அது சுத்தமாக அதிகார தோரணையில் அமைக்கப்பட்ட கமிட்டியாகும். ஆனால் கமிட்டி சாட்சி விசாரணை செய்து விஷயத்தைப்பற்றி பூராவாக யோசித்தது. ஹிஜ்லி காவல் விடுதி சிப்பந்திகள்தான் இந்த நிகழ்ச்சிகளுக்கு குற்றவாளிகள் என்று கமிட்டி தீர்ப்புச்சொல்லி விட்டது. துக்க சம்பவத்தின் பொறுப்பு பெரும்பான்மையில் சிப்பந்திகளுடையதென்றும் துப்பாக்கிப் பிரயோகத்துக்கு தேவையே ஏற்படவில்லையென்றும் தீர்ப்புக் கூறப்பட்டது. இந்தத் தீர்ப்புஅரசாங்கத்தாரால் ஏற்கனவே வெளியிடப்பட்டஅறிவிப்பை முழுதும் பொய்யென்று நிரூபித்துவிட்டது ஹிஜ்லி சம்பவத்தில் அசாதாரணமான அம்சம் ஒன்றுமில்லை. இத்தகைய விபத்துக்களோ நிகழ்ச்சிகளோ இந்தியாவில் சாதாரணமானவை. அடிக்கடி சிறையில் கலகமென்றும் நிராயுதபாணி

களாகவும் திக்கற்றவர்களாகவு மிருக்கும் கைதிகளை ஆயுதந் தாங்கிய வார்டர்களும் மற்றவர்களும் வீரத்தனமாயும் தைரியத்துடனும் அடக்கிவிட்டார்கள் என்றும் அடிக்கடிசெய்திகளைப் பத்திரிகைகளில் படிக்கலாம். இத்தகைய சம்பவங்களைப்பற்றி அரசாங்க அறிவிப்புகள் ஒரு தலை பட்சமாயும் பொய்யாயும் தான் விஷயத்தைத் திரித்துச் சொல்லும் வழக்கத்தை, உத்தியோக முறையில் நேர்த்தியாக வெளிக்காண்பித்துவிட்டதே ஹிஜ்லி சம்பவத்தின் விசேஷம். கடந்த காலங்களில் இத்தகைய அறிவிப்புகளில் யாரும் நம்பிக்கை வைத்ததே இல்லை. ஆனால் அவற்றின் பொய் இப்பொழுது நிச்சயமாக ஸ்தாபிக்கப்பட்டது.

ஹிஜ்லி சம்பவத்துக்குப் பின்னர் சிறைச் சம்பவங்கள் பல இந்தியா முழுவதிலும் நேர்ந்திருக்கின்றன. இந்தச்சம்பவங்களில் சில சமயம் துப்பாக்கிப் பிரயோகம் நடந்திருக்கிறது. சில சமயம் சிப்பந்திகள் வேறு வகைகளில் பலாத்காரத்தை உபயோகப்படுத்தி யிருக்கிறார்கள். இந்தச் சிறைக் கலகங்களின் விநோதம் என்னவெனில் கைதிகளுக்குத்தான் காயம் ஏற்படும். கைதிகளின்பேரில் அநேகபழிகளைச் சுமத்தி சிப்பந்திகளின்பேரில் யாதொரு பழியுமில்லையென்று உடனே உத்தியோகமுறையில் அறிவிப்பு வெளியாகிவிடும். சிப்பந்திகளுக்கு இலாகா விசாரணையால் தண்டனைகள் கிடைப்பது அபூர்வம். இலாகாவுக்குள்ளாகவே விசாரணை செய்தால் போதுமென்று வாதித்து பூரண விசாரணைக்கு அரசாங்கத்தார் ஒருபொழுதும் இணங்கினதில்லை. இத்தகைய பக்ஷபாதமுள்ள இலாகா விசாரணைகளின் ஆதாரத்தைக்கொண்டு நம்முடைய தலைவர்களில் மிகுந்த மரியாதைக்கு உரியவர்கள் பேரிலும் பொய்க்குற்றம் சாட்டி அவர்களைக் கண்டிக்க ஸர் சாமுவேல் ஹோர் தயங்கவே இல்லை. சரியான பட்சபாதமில்லாத விசாரணைகள் செய்வது ஆபத்தானதென்றும், குற்றம் சாட்டுபவன்தான் அதை விசாரிக்க சிறந்த நீதிபதி என்றும் ஹிஜ்லியிலிருந்து அரசாங்கத்தார் நன்றாகப் பாடம் கற்றுக்கொண்டார்கள். நடந்ததைச் சொல்லாமல் அரசாங்கத்தார் ஜனங்கள் எதை நம்பவேண்டும்என்று விரும்புகிறார்களோ, அதுதான் உத்தியோகமுறை அறிவிப்புகளில் காணப்படுகின்றது என்ற பாடத்தையும் ஜனங்கள் ஹிஜ்லியிலிருந்து படித்துக்கொண்டார்கள் என்றால் ஆச்சரியம் ஆகுமா! சிட்டகாங் சங்கதியோ இதைவிட கவலைக்கிடமானது. பயங்கரப்

புரட்சிக்காரர் ஒருவர் முஸ்லீம் போலீஸ் இன்ஸ்பெக்டர் ஒருவரைச் சுட்டு வீழ்த்திவிட்டார். இதற்கடுத்தாற்போல ஹிந்து—முஸ்லீம் கலவரம் ஒன்று நேர்ந்தது. இந்தக் கலவரம் சாதாரணமான வகுப்புவாதக் கலவரத்திலிருந்துமிகுதியும் மாறுபட்டதாகும். புரட்சிக்காரர்களுடைய செயல்களுக்கும் வகுப்பு வாதத்துக்கும் யாதொரு சம்பந்தமுமில்லையென்பது வெளிப்படை; சுடவேண்டுமென்று நினைத்தது ஒரு போலீஸ் உத்தியோகஸ்தரை. அவர் ஹிந்துவா முஸ்லீமா என்பதைப்பற்றி புரட்சிக்காரர் கவலைப்படவே இல்லை. இருந்தாலும் பின்னால் ஹிந்து—முஸ்லீம் கலவரம் ஏற்பட்டது என்பது உண்மையே.

இது எவ்வாறு ஆரம்பித்தது? அதற்குச் சந்தர்ப்பம் என்ன? என்பவைகளைப்பற்றி, விவரங்கள் வெளிவரவே இல்லை. பொறுப்புவாய்ந்த பொதுஜன ஊழியர்கள் கடுமையாக, இது சம்பந்தமாக குற்றச் சாட்டுகள்செய்தபோதிலும் விவாதங்கள்மூடுமந்திரமாகவே இருந்தன. இந்தக் கலகத்தில் இன்னொரு விசேஷம் என்னவென்றால், ஆங்கிலோ இந்தியர்கள் (முக்கியமாக ரெயில்வே உத்தியோகஸ்தர்கள்) மற்றும் அரசாங்க சிப்பந்திகள்(இந்த இரண்டு கூட்டத்தாரும்)கலவரத்தில் கலந்துகொண்டு ஏராளமாக பழிவாங்கினார்களாம். சிட்டகாங் சம்பவங்களைக் குறித்து சென்குப்தாவும்மற்றும் பிரபலமான வங்காளத் தலைவர்களும் குறிப்பான குற்றச் சாட்டுகளைச்செய்து விசாரணை வேண்டுமென்றார்கள். இந்தக் குற்றச் சாட்டுகளுக்காக தங்கள் பேரில் மான நஷ்ட தாவா போடலாமென்றும் அரசாங்கத்தாரைத் தூண்டிப் பார்த்தார்கள். ஆனால் அரசாங்கத்தார் இத்தகைய நடவடிக்கையொன்றும் எடுத்துக் கொள்ள விரும்பவில்லை. சிட்டகாங்கில் நேர்ந்த இந்த அசாதாரணமான நிகழ்ச்சிகளால் இரண்டு வித ஆபத்துகள் நேரும் என்று வெளியாயிற்று. பயங்கர பலாத்காரச்செயல் பல காரணங்களைக்கொண்டு கண்டிக்கப்பட்டு வருகிறது. நவீன பலாத்காரப் புரட்சித் திட்டத்தில் அதற்கு இடமே இல்லை. ஆனால் அதனால் ஏற்படக்கூடிய ஒரு விளைவைக் கண்டு நான் எப்பொழுதுமே மிகவும் திகிலடைந்துபோயிருக்கிறேன். இத்தகைய பலாத்காரச் செயலால் வகுப்புவாதக் கலவரம் இந்தியா முழுதும்பரவிவிடுமோ என்று நான் பயப்பட்டுக்கொண்டே இருக்கிறேன். எனக்கு நிச்சயமாகவே பலாத்காரத்தில் வெறுப்புத்தான்.என்றாலும்

பலாத்காரத்தைக்கண்டுநடுங்கும்படியான அவ்வளவு "கோழை ஹிர்து" நானல்ல. ஜனசமூகத்தைப் பிரித்துப் பிரித்து பிளவு படுத்திக்கொண்டே இருக்கும் சக்திகள் இந்தியாவில் நிறைந்திருக்கின்றன என்பது என் எண்ணம். ஏதாவது தனித்து பலாத்காரச்செயல் நேர்ந்தாலும், இந்தச் சக்திகளுக்கு வலுவுண்டாகி இந்தியாவை ஒன்றுபடுத்தி கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவரும் வேலையைக் கஷ்டமாக்கிவிடும் என்றும் எனக்குத் தோன்றுகிறது.

மதத்தின் பேரைச் சொல்லிக் கொண்டோ அல்லது சுவர்க்கத்தில் தங்களுக்காக ஒரு இடத்தை ஒதுக்கி வைத்துக் கொள்வதற்காகவோ ஜனங்கள் கொலை செய்வார்களாகில், அவர்களைப் பலாத்காரப் புரட்சி முறையில் பயிற்சி செய்விக்கப் பார்ப்பது ஆபத்தான வேலையாகும். அரசியல் கொலை கண்டிக்கத்தக்கது. என்றாலும் அரசியல் புரட்சிக்காரனோடு வாதம்செய்து அவன் மனதைத் திருப்பிவிடலாம். ஏனெனின் அவன் போராடும் லட்சியமெல்லாம் இவ்வுலக சம்பந்தமானது. அது தன்னலம் கொண்டதல்ல. ஆனால் மத சம்பந்தமான கொலையோ இதைவிடக் கோரமானது. ஏனெனில் அது பரலோக சம்பந்தம் கொண்டது. பரலோக விஷயங்களைப்பற்றி வாதம்செய்ய முயற்சி செய்யவேகூடாது. சில சமயங்களில் இந்த இரண்டு கொலைகளும் ஒன்றுபோல் தோன்றலாம். அரசியல் கொலையை மத சம்பந்தப்படுத்தி தத்துவ வாதம் செய்து, அதற்கு மத வர்ணத்தைத் தீட்டிவிடலாம். பலாத்காரப் புரட்சிக்காரர் ஒருவர் சிட்டகாங்கில் ஒரு போலிஸ் உத்தியோகஸ்தரைக் கொலை செய்ததும் அதன் பின் நிகழ்ந்ததும் பலாத்காரப் புரட்சி வேலையால் வரும் ஆபத்துக்களையும் அதனால் இந்தியாவின் விடுதலைக்கும் ஒற்றுமைக்கும் ஏற்படும் ஏராளமான தீமைகளையும் மிகவும் தெளிவாக உணரும்படி ஒவ்வொருவரையும் செய்துவிட்டன. அந்தக் கொலையின் பின்னர் பழிவாங்குவதற்காக செய்யப்பட்ட செயல்கள் பாஸிஸ்டு கட்சியாரின் வழிகள் இந்தியாவிலும் தோன்றிவிட்டன என்பதை நமக்கு எடுத்துக் காண்பித்துவிட்டன. இந்தச் சம்பவத்திற்குப்பின், இத்தகையபழிவாங்கும் சம்பவங்கள் பல வங்காளத்திலேயே நேர்ந்திருக்கின்றன. ஐரோப்பிய ஆங்கிலோ இந்திய வகுப்பார்களுக்குள் பாஸிஸ்டு மனப்பான்மை நிச்சயமாய் பரவிவிட்டது. ஆங்கில சாம்ராஜ்யத்தைப் பிடித்துத் தொங்

கிக் கொண்டிருக்கும் இந்தியர்களில் சிலருக்கும் இந்த மனப் பான்மை ஏற்பட்டிருக்கிறது.

பயங்கரப் புரட்சிக்காரர்களுக்கும் இத்தகைய பாஸிஸ்டு மனப்பான்மை ஏற்பட்டிருப்பது வியக்கத்தக்கது. ஆனால் இவர்கள் இந்த மனப்பான்மையை வேறு லட்சியத்துக்காகப் பிரயோகம் செய்கிறார்கள். ஐரோப்பியர்கள் ஆங்கிலோ இந்தியர்கள், உயர் தர இந்தியர்களிற் சிலர் இவர்கள், காண் பிக்கும் சாம்ராஜ்ய பாஸிஸ்டு மனப்பான்மையை எதிர்த்து இவர்களுடைய தேசிய பாஸிஸ்டு மனப்பான்மை போராடி வருகின்றது. 1931-ம் வருஷம் நவம்பர் மாதத்தில் கல்கத் தாவுக்குப் போய் அங்கே சில நாட்கள் தங்கினேன். நான் அங்கே பார்க்கவேண்டிய அலுவல்களின் திட்டம் கொஞ்சம் கடுமையாக இருந்தது. தனி நபர்களையும் கூட்டங்களையும் தனியாக சந்திப்பதோடு கூட, பல பொதுக் கூட்டங்களில் பிரசங்கமும் செய்ய வேண்டியதாயிற்று. இந்தக் கூட்டங் களில் எல்லாம் நான் பயங்கர பலாத்காரத்தைப்பற்றி வாதம் செய்தேன். அந்த முறையினால் இந்தியாவின் விடுதலைக்குத் தீமையென்றும் அந்த முறை வீண் என்றும், தவறு என் றும் நான் எடுத்துக் காண்பிக்க முயன்றேன்.

பயங்கர வாதிகளை நான் ஏசவில்லை. ஆபத்துக்கிட மான எதையும், தீரமான எதையும் செய்ய துணிச்சலே பெறாத நமது நாட்டாரிற் சிலர், வழக்கமாக பயங்கர வாதி களைக் கோழைகள் என்றும் அயோக்கியர்களென்றும் சொல்லுவது போல நான் சொல்லவில்லை. ஒவ்வொரு நிமிஷ மும் தன்னுடைய உயிரை எமனுக் கிரையாக வைத்துக் கொண்டிருக்கும் ஆணையோ பெண்ணையோ, கோழை என் றழைப்பது மிகவும் முட்டாள்தனமான காரியம் என்பது எப் பொழுதுமே எனது அபிப்பிராயம். இவ்வாறு சொல்வதால், யாதொன்றும் செய்ய சக்தியற்றவர்களாய் எட்டத்திலிருந்து கூச்சல் போடுகிற இந்தக் கோழைகளைப்பற்றி, பயங்கரவாதி இன்னும் அதிகமான நிந்தனையோடு எண்ணத் துவக்குகின் றான். கல்கத்தாவில் தங்கியிருந்த கடைசி நாள் மாலை ஊருக்குப் புறப்படுவதற்காக ஸ்டேஷனுக்குப் போகத்தயாரா யிருந்தேன். அப்பொழுது இரண்டு இளைஞர்கள் என்னிடம் வந்தார்கள். அவர்கள் இருவரும் மிகவும் வாலிபர்கள். சுமார் இருபது வயது இருக்கலாம், அவர்களுடைய முகம் வெளுத்

திருந்தது. ஆனல் கண்களிலோ ஒளி வீசிற்று. அவர்கள் யார் என்று எனக்குத் தெரியாது. ஆனல் அவர்கள் வந்த காரியம் இன்னதென்று சீக்கிரத்தில் ஊகித்துக்கொண்டேன். பயங்கர பலாத்கார முறைக்கு விரோதமாக நான் பிரசாரம் செய்ததற்காக, அவர்கள் என்னிடம் ரொம்பவும் ஆத்திரப் பட்டார்கள். "உங்கள் பிரசாரத்தினல் எங்களுடைய இளை ஞர்கள் மனம் மாறி கெட்டுப் போகிருர்கள். தயவுசெய்து நீங்கள் எங்கள் வழிக்கு வரவேண்டாம். அதை நாங்கள் பொறுத்துக்கொண்டிருக்க மாட்டோம்" என்று சொன்னர் கள்.

நாங்கள் சிறிது வாதம் செய்தோம். நான் புறப்பட வேண்டிய நேரம் நெருங்கி வந்துவிட்டதால் சாவதானமாகப் பேச முடியவில்லை. எங்களுடைய குரல்களும் கோபமும் உச்ச நிலைக்குப் போய்விட்டன. சில கடுமையான விஷயங் களை அவர்களுக்குச் சொன்னேன். நான் அவர்களை விட்டுப் பிரியும் பொழுது "இதே மாதிரி எதிர் காலத்திலும் நீங்கள் தவருக நடந்து கொள்வீர்களாகில், நாங்கள் மற்றவர்களைச் செய்வது போலவே உங்களையும் செய்து விடுவோம்" என்று கடைசியாக எனக்கு எச்சரிக்கை செய்தார்கள். கல்கத்தாவி லிருந்து புறப்பட்டு அன்றிரவு ரெயிலில் நான் என்படுக்கை யில் படுத்துக்கொண் டிருக்கையில், அந்த இரண்டு பையன் களுடைய துடிதுடித்த முகங்கள் என் மனக்கண்ணை விட்டு அகலவே இல்லை. அவர்களிடம் உயிரும் ஊக்கமும்நிறைந்து நின்றன. சரியான பாதையில் மட்டும் அவர்கள் திரும்பினல் எப்பேர்ப்பட்ட நல்ல 'சரக்கு!' அவர்களிடம் அவசரமாய்ப் பேசி முரட்டுத்தனமாய் நடந்து தொண்டதைப்பற்றி மிகவும் வருத்தப்பட்டேன். அவர்களோடு நீண்டநேரம் பேச முடிய வில்லையே என்றும் வருத்தம். பேசியிருந்தால் அவர்களைத் திருப்பி யிருக்கக்கூடும். அவர்களுடைய வேகம் நிறைந்த இளமைப் பருவத்தைக் கொண்டு, இந்தியாவுக்குத் தொண்டு செய்து அதனுடைய விடுதலைக்காகப் பாடுபடக்கூடிய பல வழிகள் இருப்பதையும் அந்த வழிகளில் துணிவுக்கும் தியா கத்துக்கும் போதிய சந்தர்ப்பங்கள் இருக்கின்றன என்பதை யும் அவர்களுக்கு நான் விளக்கியிருப்பேன். பிறகு அடிக்கடி ஞல் அவர்களைப்பற்றி நினைத்திருக்கிறேன். அவர்களுடைய பெயர்களைக் கண்டு பிடிக்க முடியவில்லை. அவர்கள் எங்கே இருக்கிருர்கள் என்றும் அறியமுடியவில்லை. அவர்கள் இறந்து

போயினரோ அல்லது அந்தமான் தீவில் சிறையில் இருக்கிறார்களோ தெரியாது.

டிசம்பர் மாதம் இரண்டாவது விவசாயிகள் மகாநாடு அலகாபத்தில் நடைபெற்றது. அதற்குப்பின் ஹிந்துஸ்தானி சேவாதளத்தைச் சேர்ந்த என்னுடைய பழையதோழரான டாக்டர் என்.எஸ்.ஹர்திகர் அவர்களுக்குநீண்டகாலத்துக்குமுன் நான் கொடுத்திருந்த வாக்கைப் பூர்த்தி செய்யும் பொருட்டு, தெற்கே கர்னடகத்துக்கு விரைந்து சென்றேன். சேவாதளம் தேசிய இயக்கத்தின் தொண்டர் படையைச் சேர்ந்தது. அது தனியான அமைப்பாய் இருந்தபோதிலும் வெகு காலமாக காங்கிரசைச் சேர்ந்ததாக இருந்தது. ஆனால் 1931-ம் வருஷம் கோடையில், அதை முழுதும் காங்கிரஸ் அமைப்புக்குள்ளே சேர்த்து, அதைக் காங்கிரசின் தொண்டர் படை இலாகாவாகச் செய்துவிடவேண்டு மென்று காரியக் கமிட்டி தீர்மானம் செய்தது. இவ்வாறு செய்யப்பட்டு அது சம்பந்தமானபொறுப்புஎனக்கும் ஹார்திகருக்கும்விடப்பட்டது. தளத்தின் தலைமைக் காரியாலயம் கர்னடக மாகாணத்தில் ஹூப்ளி நகரிலேயே இருந்து வந்தது. தளசம்பந்தமாக நடத்தப்பெற்ற பலவிழாக்களில்கலந்து கொள்வதற்காக ஹூப்ளிக்குப் போகவேண்டுமென்று ஹார்திகர் என்னை வற்புறுத்தினர். நானும் அவரும் சிலநாட்கள் கர்னடகத்தில் சுற்றுப் பிரயாணம் செய்தோம். ஒவ்வொரு இடத்திலும் ஜனங்கள் காண்பித்த மகத்தான உற்சாகத்தைக் கண்டு, நான் ஆச்சரியம் அடைந்தேன். திரும்புகாலில் இராணுவ அமுலால் கீர்த்தி பெற்ற ஷோலாப்பூர் நகரத்தைப் பார்த்தேன்.

கர்னடகத்தில் நான் செய்த சுற்றுப்பிரயாணம் அந்த ஜனங்களிடமிருந்து விடைபெற்றுக் கொள்ளும் விழாவாக விருந்தது. என்னுடைய பேச்சுகள் அழுத்தமாயிருந்தாலும் அவைகள் கிளிப்பிள்ளைப் பாடங்களைப்போல் ஆய்விட்டன. அந்தப் பல்லவிகளில் இன்னிசை இருக்குமென்றும் நான் நினைக்கவில்லை. ஐக்கிய மாகாணத்திலிருந்து அரசாங்கத்தார் தாக்குகின்றார்கள்; அதுவும் கடுமையாகத் தாக்குகின்றார்கள் என்றதிட்டமான செய்திகிடைத்தது. அலகாபாத்திலிருந்து கர்னடகத்துக்குப் போகும்பொழுது நான் கமலாவோடு பம்பாய்க்குப் போயிருந்தேன். அவளுக்கு மீண்டும்

தேக அசௌகரியமாகவிருந்தபடியால் பம்பாயில் அவளுக்கு வைத்தியம் பார்க்க ஏற்பாடு செய்தேன். அலகாபாத்தி லிருந்து பம்பாய்க்கு வந்தவுடனே, ஐக்கியமாகாணத்துக்காக விசேஷ அவசரச் சட்டம் ஒன்றை இந்திய அரசாங்கத்தார் பிறப்பித்தார்கள் என்று கேள்விப்பட்டோம். காந்திஜீ இப் பொழுது நடுக்கடலில் இருந்தார். வெகு சீக்கிரம் அவர் பம்பாய்க்கு வந்து விடுவார். இது தெரிந்திருந்தும், அர சாங்கத்தார் அவருடைய வருகைக்காக காத்துக்கொண் டிருக்கவேண்டாம் என்று தீர்மானித்தார்கள். நில சம்பந்த மான கிளர்ச்சியை நிர்வகிக்க, நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளும் பொருட்டு, இந்த அவசரச் சட்டம் பிறப்பிக்கப் பட்டதென்றும் சொல்லப்பட்டது. ஆனால் அவசரச் சட் டத்தின் ஷரத்துகளோ மிகவும் விரிவானவையாக விருந் தன. அவை யாவற்றையும் சேர்த்துப் பிடித்து கவ்விக்கொள் ளும் தன்மை வாய்ந்தவை. எனவே மாகாணத்தில் எத் தகைய பொதுஜன வேலையையும் சாத்திய மில்லாதபடி ஆகிவிட்டது. மாதா பிதாக்களின் பாவம் மக்கள் தலை யிலே என்பது பழைய வசனம். ஆனால் அரசாங்கத்தார் இதைத் திருப்பிப்படிக்க ஆரம்பித்து, மக்களின் பாவத்துக் காக பெற்றோர்கள் தண்டிக்கப் படவேண்டும் என்ற ஷரத்தை அந்த அவசரச் சட்டத்தில் புகுத்தியிருந்தார்கள்.

ரோம் நகரத்தில் "ஜீயோர்னில்டி இதாலியா" என்ற பத்திரிகைக்கு காந்திஜீ பேட்டியளித்ததாக இந்தச் சமயத்தில் தான் நாங்கள் கேள்விப்பட்டோம். இந்தப் பேட்டி எங்க ளுக்கு ஆச்சரியமாக இருந்தது. ரோமாபுரியில் இத்தகைய பேட்டி ஒன்றை காந்திஜீ கொடுத்திருப்பார் என்று நாங்கள் நம்பவே இல்லை. ஊன்றிப் பார்த்ததில் பேட்டியில் காணப் பெற்ற பல வார்த்தைகளும், தொடர்களும் காந்திஜீ வழக்க மாக உபயோகப்படுத்துபவைகள் அல்ல. மறுப்பு வருவதற்கு முன்னமேயே, பிரசுரிக்கப்பட்டிருக்கும் முறையிலே காந்திஜீ பேட்டியில் பேசி யிருக்கமாட்டார் என்பது எங்களுக்கு நிச் சயமாயிற்று. காந்திஜீ சொன்ன எதையோ இவ்வளவு கேவலமாக ஆபாசப்படுத்தி யிருக்கவேண்டும் என்று நாங் கள் எண்ணினோம். இதற்குள் காந்திஜீயின் அழுத்தமான மறுப்பும் வெளி வந்தது. தாம் ரோமாபுரியில் யாதொரு பேட்டியும் எந்தப் பத்திரிகைக்கும் கொடுக்கவே இல்லை யென்று அவர் சொல்லி விட்டார், யாரோ ஒருவன்

அவர் பேரில் அபாண்டத்தைச் சுமத்திவிட்டான் என்பது தெளிவாயிற்று. ஆனால் பிரிட்டிஷ் பத்திரிகைகளும், பிரபலஸ்தர்களும் காந்திஜீயின் மறுப்பை நம்பவே யில்லை. அவர் பொய்யர் என்று மிகவும் உதாஸீனமாக குறிப்பிடப் பட்டதுதான் எங்களுக்கு விந்தையா யிருந்தது. இதனால் நாங்கள் வருத்தம் அடைந்தோம்; ஆத்திரப்பட்டோம்.

கர்னாடக சுற்றுப் பிரயாணத்தை நிறுத்திக்கொண்டு அலகாபாத்துக்குத் திரும்பிப் போக எனக்கு ஆவல். இப்பொழுது ஐக்கிய மாகாணத்தில் எனது தோழர்களோடு நான் இருக்க வேண்டியது என்னுடைய கடமை யாகும். எங்கள் மாகாணத்தில் எவ்வளவோ நேர்ந்துகொண்டிருக்கிற இந்த சமயத்தில் எட்டத்திலிருப்பது மனவேதனையைக் கொடுத்தது. இருந்தாலும் கர்னாடக சுற்றுப் பிரயாணத்தை பூர்த்தி செய்துவிடுவதென்று தீர்மானம் கொண்டேன். பம்பாய்க்கு நான் திரும்பி வந்ததும் சில நண்பர்கள் "அடுத்தவாரம் காந்திஜீ வந்து விடுவார். அவரைப் பார்த்து விட்டுப் போகலாம். அதுவரை இங்கே தங்கி யிருங்கள்" என்று எனக்கு யோசனை சொன்னார்கள்.

ஆனால் இது சாத்தியப்படவில்லை. புருஷோத்தம தாஸ் தண்டனும் ஏனையோரும் கைது செய்யப்பட்டதாக அலகாபாத்திலிருந்து செய்தி கிடைத்தது. மேலும் அந்த வாரத்திலே ஈடாவாவில் எங்களுடைய மாகாண மகாநாடு கூடுவதாக இருந்தது. ஆகவே அலகாபாத்துக்குப் போய் சுதந்திரத்துடனிருந்தால் காந்திஜீயைச் சந்திக்கவும், காரியக் கமிட்டிக் கூட்டத்தில் ஆஜரா யிருக்கவும், ஆறுநாள் கழித்து பம்பாய்க்குத் திரும்பி வரலாமென்று தீர்மானித்தேன். படுத்த படுக்கையிலிருந்த கமலாவை பம்பாயிலேயே விட்டுவிட்டுப் போனேன். அலகாபாத்துக்குப் போய்ச் சேரு முன்னமேயே சியோகி ஸ்டேஷனில் புதிய அவசரச் சட்டத்தின் கீழ் ஒரு உத்திரவு என்பேரில் சாதராச் செய்யப்பட்டது. அலகாபாத் ஸ்டேஷனில் இந்த உத்திரவின் நகலையே இன்னொரு தரம் என்பேரில் சாதரா செய்வதற்கு முயற்சி செய்யப்பட்டது. என்னுடைய வீட்டிலே மூன்றாவது பேர்வழி மூன்றாவது தடவை முயற்சி செய்தார். யாதொரு தவறும் நேரலாகாதென்பது அரசாங்கத்தின் எண்ணம் போலும்! "அலகாபாத் நகரசபை எல்லைக்குள் நீங்கள் வசிக்க வேண்டும்,

பொதுக் கூட்டத்திலோ, விழாவிலோ கலந்து கொள்ளக் கூடாது. பொது ஜனக் கூட்டத்தில் பேசப்படாது. துண்டுப் பிரசுரம் எழுதி வெளியிடப்படாது. பத்திரிகைக்கு எதையும் எழுதி யனுப்பக்கூடாது.'' இன்னும் அந்த உத்தரவில் எத்தனையோ தடைகள் குறிப்பிடப்பட்டிருந்தன. இதே மாதிரி உத்தரவு தாசதுக் ஷெர்வானி உள்ளிட்ட என்னுடைய தோழர்கள் பலர் பேரிலும் சாதரா செய்யப்பட்டதென்று தெரிந்தது. அடுத்த நாள் உத்திரவைப் பிறப்பித்த ஜில்லா மாஜிஸ்ட்ரேட் அவர்களுக்கு, "ஐயா, தங்கள் உத்திரவு கிடைத்தது. ஆனல் நான் என்ன செய்யவேண்டும் அல்லது செய்யவேண்டாம் என்பதைப் பற்றி தங்களிடமிருந்து உத்திரவு வாங்கிக்கொள்ளுவதாக எனக்குயோசனை இல்லை. என்னுடைய வழக்கமான வேலையை, நான் எனக்கு வழக்கமாயுள்ள வழியில் செய்து கொண்டே போவேன். இந்த வேலையி னடுவே பம்பாய்க்கு விரைவில் போய் காந்திஜீயைச் சந்தித்து காரியக் கமிட்டிக் கூட்டத்தில் கலந்து கொள்வதாக உத்தேசம். காரியக் கமிட்டிக்கு நான் காரியதரிசி'' என்று எழுதி யனுப்பினேன்.

எங்கள் முன்னல் புதியதொரு பிரச்னை வந்து நின்றது எங்களுடைய ஐக்கிய மாகாண மகாநாடு அந்தவாரம் ஈடாவாவில் கூடுவதாகத் தீர்மானிக்கப்பட்டிருந்தது. அந்த வாரத்தில்தான் காந்திஜீ இந்தியாவுக்கு வருவதாலும் அரசாங்கத்தாரோடுபோராடாமல் ஒதுங்கிக்கொள்ளும்பொருட்டும் மகாநாட்டை ஒத்திப் போடலாமென்ற யோசனையுடன் பம்பாயிலிருந்து நான் வந்தேன். ஆனல் நான் அலகாபாத்துக்குத் திரும்பி வருமுன்னரே எங்களுடைய மகாநாட்டில் நில சம்பந்தமான பிரச்னை ஆலோசிக்கப் படுமாவென்றும், அவ்வாறு ஆலோசிக்கப்படுமானல் அரசாங்கத்தார் மகாநாட்டைத் தடுத்துவிடுவார்களென்றும் அவசரச் செய்தி ஒன்று ஐக்கிய மாகாண அரசாங்கத்தாரிடமிருந்து எங்கள் தலைவர் ஷெர்வானிக்கு கிடைத்தது. மாகாண முழுதையும் கலக்கிக் கொண்டிருந்த நில சம்பந்தமான பிரச்னையைப் பற்றி ஆலோசனை செய்வதுதான் மகாநாட்டின் முக்கியமான நோக்கம் என்பது வெளிப்படையாக விருந்தது. மகாநாடு கூடி அதைப் பற்றி ஆலோசிக்காம லிருந்தால் அது ரொம்பவும் மானக்கேடாக விருக்கும். தவிரவும், மகாநாட்டின் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்த எங்களுடைய தலைவருக்காவது

வேறு யாருக்காவது அதிகாரம் கிடையாது. அரசாங்கத்தாரின் பயமுறுத்தலுக்கு முன் மகாநாட்டை ஒத்திவைக்கலாமென்று எங்களிற் சிலர் யோசித்தார்கள். ஆனால் இந்தப் பயமுறுத்துதலால் வித்தியாசம் ஏற்பட்டு விட்டது.

எங்களில் பலருக்கு இத்தகைய விஷயங்களில் அதிக பிடிவாதமுண்டு. அரசாங்கத்தாரால் கட்டளையிடப்பட நாங்கள் சம்மதிக்கவில்லை. நீண்ட நேரம் வாதம் செய்தோம். சத்தப்படாமல் எங்களுடைய கர்வத்தை விழுங்கிக்கொண்டு மகாநாட்டை ஒத்திவைப்பதென்று தீர்மானித்தோம். போராட்டம் ஏற்கனவே அரசாங்கத்தாரால் துவக்கப்பட்டு விட்டது. இருந்தாலும் காந்திஜீ வரும்வரையில் போராட்டத்தை விருத்தி செய்யாமல் என்ன நேர்ந்தாலும் அடக்கி வைத்திருக்க வேண்டுமென்ற எண்ணத்தினால்தான் நாங்கள் இவ்வாறான முடிவுக்கு வந்தோம். தலைமை வகித்து நடத்த முடியாமல் நிலைமையை மீறிப் போகவிட்டு அவரை சங்கடத்தில் கொண்டு வந்து நிறுத்த நாங்கள் விரும்பவில்லை. மாகாண மகாநாட்டை ஒத்திப் போட்டுவிட்டாலும் போலீஸும் இராணுவமும் கூடிக்கொண்டு ஈடாவாவில் ரொம்பவும் ஆர்ப்பாட்டம் செய்தன. இராணுவத்தார் சுதேசிக் கண்காட்சியைக் கைப்பற்றிக் கொண்டார்கள்.

ஷெர்வானியும் நானும் டிசம்பர் மாதம் 26-ந்தேதி காலையில் அலகாபாத்திலிருந்து பம்பாய்க்குப் புறப்படுவதாகத் தீர்மானித்தோம். ஐக்கிய மாகாண நிலைமையைப்பற்றி கலந்து பேசுவதற்காக ஷெர்வானி காரியக் கமிட்டியால் அழைக்கப்பட்டிருந்தார். அலகாபாத் நகரத்தைவிட்டு வெளியே போகக் கூடாதென்றுஎங்கள் இருவர்பேரிலும் அவசரச்சட்டத்தின் கீழ் உத்திரவுகள் சாதராச்செய்யப்பட்டிருந்தன. அலகாபாத் ஜில்லா கிராமாந்திரங்களிலும் ஐக்கியமாகாணத்திலும் வேறு பல ஜில்லாக்களிலும் நடைபெற்று வந்த வரிகொடா இயக்க வேலைகளைத் தடுப்பதற்காக இந்த அவசரச் சட்டம் ஆக்கப்பட்டது என்று சொல்லிக்கொண்டார்கள். இந்த கிராமாந்திரப் பகுதிகளுக்கு நாங்கள் செல்லக்கூடாது என்று அரசாங்கத்தார் எங்களைத் தடுத்திருப்பார்களாகில் அதை எளிதிலே அர்த்தம் செய்து கொள்ளலாம். பம்பாய் நகரில் இந்த நில சம்பந்தமான கிளர்ச்சியை நாங்கள் செய்ய முடியாது என்பது நிச்சயம். உள்ளபடியே, அவசரச் சட்டம் நில சம்பந்த

மான கிளர்ச்சியை மட்டும் அடக்கி சமாளிப்பதற்காக ஆக்கப் பட்டிருக்குமாகில், மாகாணத்திலிருந்து நாங்கள் வெளிப் போவதை அரசாங்கத்தார் வரவேற்றிருக்கவேண்டும். புதிய அவசரச் சட்டம் ஆக்கப்பட்டது முதல், நாங்கள் எங்களு டையஇயக்கத்தை காப்பதற்கான காரியங்கள் மட்டும்செய்து கொண்டு வந்தோம். அந்த அவசரச் சட்டத்தை சிற்சிலர் மீறி நடந்தபோதிலும், பொதுவாக, அதோடு மல்யுத்தம் செய்ய எங்களுக்கு அப்பொழுது இஷ்டமில்லை. ஐக்கிய மாகாண காங்கிரஸ் கமிட்டி சம்பந்தப்பட்டவரையிலும் அச்சமயம் அரசாங்கத்தாரோடு போராடாமல், போராட்டத்தை எட் டிப் போடவேண்டும் என்ற நோக்கம்தான் பொதுவாக இருந்து வந்தது. நானும் ஷெர்வானியும் பம்பாய்க்குப் போய்க்கொண்டிருந்தோம். பம்பாயிலேதான் இந்த விஷ யங்களைப்பற்றி காந்திஜியாலும் காரியக்கமிட்டியாலும் ஆலோசனை செய்யப்படும். முடிவாக, காரியக் கமிட்டியில் எத்தகைய தீர்மானம் நிறைவேறுமென்று யாருக்குமே தெரியாது. நிச்சயமாக எனக்குக்கூடத் தெரியாது.

இவ்வாறெல்லாம் யோசித்து பம்பாய்க்குச் செல்ல நாங் கள் அனுமதிக்கப்படலாமென்றும் இந்த உத்திரவு மீறுதலை அரசாங்கத்தார் தற்காலீகமாகவேனும் குற்றமாகப்பாராட்ட மாட்டார்களென்றும் நான் எண்ணினேன். ஆனால், என்னு டைய உள்ளத்து உணர்ச்சி மட்டும் வேறு விதமாயிருந்தது. நாங்கள் ரயில் ஏறியதும், எல்லைப்புற மாகாணத்துப் புதிய அவசரச் சட்டத்தையும் அப்துல் கபார்கான், டாக்டர் கான் சாகிப் முதலிய பலர் கைது செய்யப்பட்டதையும் காலைப் பத்திரிகைகளில் படித்தோம். வெகு சீக்கிரத்தில் எங்களு டைய ரயில் வண்டி (பம்பாய் மெயில்) இராதத்கஞ்ஜ் என்ற வழியிலிருந்த சின்ன ஸ்டேஷனில் திடீரென்று நிறுத்தப் பட்டது. இராதத்கஞ்ஜில் வழக்கமாக பம்பாய் மெயில் நிற் பதில்லை. (ரெயில்வண்டி நின்றதும்) போலீஸ் உத்தியோகஸ் தர்கள் எங்கள் வண்டியிலேறி எங்களைக் கைது செய்தார் கள். கறுப்பு மேரியா என்ற சிறை மோட்டார் பஸ் ஸ்டேஷனுக்குப் பக்கத்திலே நின்று கொண்டிருந்தது. ஷெர் வானியும் நானும் கைதிகளின் இந்த மூடுவண்டியில் ஏறிக் கொண்டோம் விரைவில் நைனி சிறைக்கு வந்து சேர்ந்தோம். அன்று காலையில் எங்களைக் கைது செய்த போலீஸ் சூபரின் டெண்டண்டு ஒரு இங்கிலீஷ்காரர். அவர் முகத்திலே சங்

தோஷமே இல்லை. வருத்தப்படுவதுபோல் காணப்பட்டார். நாங்கள் அவருடைய கிறிஸ்மஸ் பண்டிகையைக் கெடுத்து விட்டாற்போல தோன்றிற்று. இவ்விதம் மீண்டும் சிறை புகுந்தேன். கவியின் வாக்கு என் ஞாபகத்திற்கு வந்தன: 'சுகத்தை விட்டு, அபாக்கியனே, உன் சுவாசத்துடன் துக்கத்தை சிலகாலம் நுகரக்கடவாய்.'

# XLI

## சிறை-அவசரச்சட்டம்-பிரசுரத்தடை

நாங்கள் கைதியான இரண்டு நாட்கள் கழித்து, காந்திஜி பம்பாயில் வந்திறங்கினர். கடைசியாக நேர்ந்தனவற்றை அவர் அப்பொழுது தான் தெரிந்துகொண்டார். வங்காள அவசரச் சட்டத்தைப்பற்றி லண்டனிலேயே கேள்விப் பட்டு அவர் மிகவும் மனங்கலங்கிப்போனர். ஐக்கிய மாகாண எல்லைப்புற மாகாண, அவசரச் சட்டங்களாக புதிதான கிறிஸ்மஸ் பரிசுகள் அவருக்காகக் காத்துக்கொண்டிருக்கின்றன வென்றும், எல்லைப்புறமாகாணத்திலும் ஐக்கியமாகாணங்களிலும் அவரது நெருங்கிய தோழர்களிற் சிலர் கைதுசெய்யப் பட்டார்களென்றும் அவர் தெரிந்துகொண்டார். போர் துவக்கி விட்டதென்றும் இனி சமாதானத்தைப்பற்றி கனவு காண வேண்டுவதில்லை யென்றும் அவருக்குத் தோன்றிற்று. இருந்தாலும் இந்த நிலைமையிலிருந்து வெளிவர மார்க்கம் இருக்கிறதா என்று கடைசியாக முயற்சிசெய்து பார்த்தார். இந்த நோக்கத்துடன் வைசிராய் வில்லிங்டன் பிரபுவோடு பேட்டியை நாடினர். சில நிபந்தனைகளின் பேரிலேதான் பேட்டி நடைபெற முடியும் என்று புதுடில்லியிலிருந்து அவருக்கு பதில் கிடைத்தது. வங்காளம், எல்லைப்புற மாகாணம், ஐக்கிய மாகாணம், இவைகளில் நேர்ந்திருக்கும் சமீபகால நிகழ்ச்சிகளையும் புதிய அவசரச் சட்டங்களையும் அதன்கீழ் கைது செய்யப்பட்டதையும் பற்றி காந்திஜி பிரஸ்தாபம் செய்யக்கூடாது என்று அந்த பதிலில் குறிப்பிடப்பட்டிருந்தது. (நான் என்னுடைய ஞாபகத்தைக்கொண்டு இதை எழுதுகிறேன். வைஸ்ராயின் மறுமொழி நகல் என்னிடமில்லை.)

நாட்டைக் கலக்கிக்கொண்டிருந்த இந்த விஷயங்களைப் பற்றி அல்லாமல் வேறு எந்த விஷயத்தைப்பற்றி காந்திஜியோ அல்லது காங்கிரஸ் தலைவரோ வைசிராயுடன் பேசக்கூடும் என்பது ஒருவருக்கும் விளங்காது. இந்திய

அரசாங்கத்தார் காங்கிரஸை நசுக்க தீர்மானித்துவிட்டார்கள் என்றும் காங்கிரசோடு யாதொரு நடவடிக்கைகளும் வைத்துக் கொள்ள விரும்பவில்லையென்றும் இப்பொழுது மிகவும் தெளிவாகத் தெரிந்துவிட்டது. மீண்டும் சட்டமறுப்பைக் கைக்கொள்வதைத் தவிர காரியக் கமிட்டிக்கு வேறு வழியில்லை. எந்த நிமிஷத்திலும் தாங்கள் கைது செய்யப்படுவார்கள் என்று எதிர்பார்த்தார்கள். அவர்கள் அடைக்கப்படு முன்னர் நாட்டுக்கு வழிகாட்ட வேண்டுமென்று எண்ணினார்கள்.

அப்படியிருந்தும், காரியக் கமிட்டி உடனே அமுலுக்குக் கொண்டுவரும்படியான சட்ட மறுப்புத் தீர்மானம் செய்யவில்லை. பின்னால் அவசியமிருந்தால் கையாளக்கூடிய ஒரு திட்டத்தை மட்டும் முன் ஜாக்கிரதையாகச் செய்து கொண்டது. பிறகு வைசிராயைக் காண காந்திஜீ மீண்டும் ஒருமுறை முயற்சி செய்தார். நிபந்தனையில்லாத பேட்டி வேண்டுமென்று காந்திஜீ இரண்டாவது தந்தி அனுப்பினார். இந்தத் தந்திக்கு பதிலாக, அரசாங்கத்தார் காந்திஜீயையும் காங்கிரஸ் தலைவர் வல்லபாயையும் கைதுசெய்து நாடுமுழுதும் பயங்கரமான அடக்கு முறையை ஏவினார். போராட்டத்தில் பிறருக்கு விருப்பமிருக்குமோ இருக்காதோ அரசாங்கத்தார் ஆவலுடன் கண்கொட்டாமல் காத்துக்கொண்டிருந்தார்கள் என்பது தெளிவாகும்.

நாங்கள் சிறையிலிருந்தோம். எனவே இந்தச் செய்திகளெல்லாம் தலைகாலில்லாமல் எங்களுக்குக் கிடைத்தது. எங்களுடைய விசாரணை புதுவருஷத்திற்கு ஒத்திவைக்கப்பட்டது. எனவே நாங்கள் விசாரணைக் கைதிகள். சாதாரணக் கைதிகளைக் காட்டிலும் அதிகமான பேட்டிகளுக்கு எங்களுக்கு உரிமையிருந்தது. வைசிராய் பேட்டிக்கு இணங்கி இருக்கவேண்டுமா இணங்கி இருக்கக்கூடாதா என்பதைப் பற்றி, அது மகத்தான காரியத்தைப்போல, பெரிய விவாதம் நாட்டில் நடைபெற்றதாகக் கேள்விப்பட்டோம். இந்த பேட்டிப் பிரச்னை மற்ற எல்லா விஷயங்களையும் அமுக்கி எறிந்துவிட்டது. இர்வின் பிரபு மாத்திரம் இருந்திருந்தால் அவர் பேட்டிக்கு இணங்கியிருப்பார் என்றும் அவரும் காந்திஜீயும் சந்தித்திருந்தால் எல்லாம் நல்லதனமாக முடிந்திருக்குமென்றும் சொல்லப்பட்டது. நிலையைப்பற்றி இவ்

வளவு மேலெழுந்தவாரியாக இந்தியப் பத்திரிகைகள் எழுதியதைப் பற்றியும் உண்மையான விஷயங்களை அவை கள் மறந்துவிட்டதைப் பற்றியும் நான் ஆச்சரியப்பட் டேன்.

இந்திய தேசியத்துக்கும் பிரிட்டிஷ் சாம்ராஜ்பத்துக்கும் இடையே நேரவேண்டிய போராட்டம் (இந்திய தேசியமும் பிரிட்டிஷ் சாம்ராஜயமும் ஒன்று சேர முடியாத இரண்டு முரண்களாகும்) இரண்டு தனி மனிதர்களைப் பொறுத்ததாக இருக்கமுடியுமா? புன்னகை புரிவதாலும் பரஸ்பரம் இரு வர் மரியாதையாக நடந்துகொள்வதாலும் இரண்டு பெரிய சக்திகள் மோதிக்கொள்வதைத் தடுத்துவிட முடியுமா? இந் தியதேசியம் தற்கொலை செய்துகொள்ள முடியாது. ஜீவாதார மான விஷயங்களில் அந்நியர்களின் தாக்கீதுகளுக்கு இந்திய தேசியம் விருப்புடன் கட்டுப்பட்டு நடக்கமுடியாது. இந்தக் காரணங்களால் காந்திஜீ ஒருமுறையில் காரியம் செய்ய வேண்டியதாயிற்று. பிரிட்டிஷ் நலங்களைக் காப்பாற்றுவதற் காகவும் இந்திய தேசியத்தின் பலத்தை எதிர்த்து அதை நசுக்குவதற்காகவும் இந்தியாவின் பிரிட்டிஷ் வைஸ்ராய் வேறொரு வகையில் காரியம் செய்யவேண்டியதாயிற்று. எனவே அந்தக் காலத்தில் யார் வைஸ்ராயாக இருந்தாலும் அதனால் யாதொரு வித்தியாசமும் ஏற்பட்டிருக்காது.

வில்லிங்டன் பிரபு செய்ததுபோலவே, இர்வின் பிரபு வும் செய்திருப்பார். ஏனெனின் அவர்கள் இருவரும் பிரிட்டிஷ் சாம்ராஜ்பக் கொள்கையின் கருவிகளாவர். அவர் களால் சாரமில்லாத சிறிய மாறுதல்களைத் தான் பொது வான திட்டத்திலிருந்து பிரித்துச் செய்யமுடியும். இர்வின் பிரபு பிரிட்டிஷ் மந்திரி சபையில் பின்னர் ஒரு அங்கத்தினர் ஆனார். இந்தியாவில் அதிகாரிகள் எடுத்துக் கொள்ளும் நடவடிக்கைகளில் தமக்குப் பூரண சம்மதம் உண்டு என்று தெரிவித்துக் கொண்டிருக்கிறார். இந்தியாவில் நடைபெறும் பொதுவான பிரிட்டிஷ் நிர்வாக முறைக்கு தனி வைஸ்ராய் களைப் புகழுவதோ கண்டிப்பதோ பயனற்ற காரியம் என்று எனக்குத் தோன்றுகிறது. உண்மையான பிரச்னைகளை நாம் அறியாததாலோ அல்லது மழுப்புவதாலோ மேற்சொன்ன வினோத விளையாட்டில் நாம் வீழ்ந்து தவிக்கிறோம் என்பது என் எண்ணம்.

1932ம் வருஷம் ஜனவரி மாதம் 4-ந்தேதி ஒரு சிறப்பான நாள் ஆகும். அன்று கட்சிவாதங்களுக்கு முடிவு ஏற்பட்டது. அன்று காலையிலே, காந்திஜீயும், காங்கிரஸ் தலைவர் வல்லபாய் படேலும் கைது செய்யப்பட்டு, விசாரணையில்லாமல் அரசாங்கக் கைதிகளாக காவலில் வைக்கப்பட்டார்கள். போலீஸ் உத்யோகஸ்தர்களுக்கும் மாஜிஸ்திரேட்டுகளுக்கும் எல்லை கடந்த அதிகாரங்களைக் கொடுக்கும் மூன்று புதிய அவசரச் சட்டங்கள் பிறப்பிக்கப்பட்டன. பிரஜைகளின் மூல சுதந்திரங்கள் அறவே இல்லாமற் போய்விட்டது. அதிகாரிகள் ஆளையும் சொத்தையும் தாராளமாகப் பிடித்து கைப்பற்றிக் கொள்ளமுடியும். இந்தியா முழுதும் முற்றுகை போடப்பட்டு விட்டது என்று அறிவிக்கப் பட்டதாகத் தோன்றிற்று. அந்த முற்றுகையதிகாரத்தை சமயோசிதமாக அமுலுக்குக் கொண்டுவர ஸ்தல அதிகாரிகளின் இஷ்டத்திற்கு விட்டுவிடப்பட்டது.

ஜனவரி மாதம் 4-ந்தேதியன்றே, நைனி சிறையில் நாங்களும் ஐக்கிய மாகாண அவசர அதிகார ஆர்டினன்ஸின் கீழ் விசாரணை செய்யப்பட்டோம். ஷெர்வானிக்கு ஆறு மாதக் கடுங்காவலும் நூற்றைம்பது ரூபாய் அபராதமும் கிடைத்தன. எனக்கு இரண்டு வருஷக் கடின காவலும் 500 ரூபாய் அபராதமும், அபராதம் செலுத்தாவிட்டால், மேற்கொண்டு ஆறுமாதம். எங்கள் இருவர்களுடைய குற்றங்களும் ஒன்று தான். ஒரே ரீதியான உத்தரவுகள் தான் எங்கள் பேரில் அலகபாத் நகரில் சாதரா செய்யப்பட்டன. பம்பாய்க்கு போக இருவரும் சேர்ந்து முயற்சி செய்து ஒரே வகையில் நாங்கள் இருவரும் உத்தரவை மீறினோம். ஒரே பிரிவின் கீழ் கைது செய்யப்பட்டோம். ஒரே பிரிவின் கீழ் விசாரணையும் செய்யப்பட்டோம். என்றாலும் எங்களுடைய தண்டனைகள் மட்டும் வெவ்வேறு!

ஆனால், ஒரு வித்தியாசம் மட்டும் இருந்தது. உத்தரவை மீறி பம்பாய்க்குப்போக உத்தேசித்திருக்கிறேன் என்று ஜில்லா மாஜிஸ்டிரேட்டுக்குக் கடிதம் எழுதி அவருக்கு நான் தெரிவித்துக் கொண்டேன். ஷெர்வானி இத்தகைய அறிவிப்பு ஒன்றும் செய்யவில்லை. ஆனால், அவர் பம்பாய்க்கு புறப்பட்டுப் போகப் போகிறார் என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயமாகும். இதைப்பற்றி பத்திரிகைகளிலும்

பிரஸ்தாபம் செய்யப்பட்டது. தீர்ப்பு சொன்னவுடன், ஷெர்வானி நீதிபதியைப் பார்த்து "என்னுடைய சின்ன தண்டனை நான் முஸ்லீம் என்ற வகுப்புவாதக் காரணத்தாலா?" என்று கேட்டார். மாஜிஸ்திரேட் திகைத்துப் போனர். கோர்ட்டில் இருந்த மற்றவர்களுக்கு வேடிக்கையாகவிருந்தது.

ஜனவரி மாதம் 4-ந்தேதியாகிய அந்தப் பெருநாளில் நாடு முழுதும் என்னென்னவோ நேர்ந்தது. நாங்கள் இருந்த சிறையிலிருந்து சிறிது தூரத்தில், அலகபாத் நகரில் திரளான கூட்டங்களுக்கும், போலீஸ் ராணுவங்களுக்கும், கலவரம் நேர்ந்தது. வழக்கமான தடியடிப் பிரயோகங்கள் நடைபெற்றன. பலர் மாண்டனர். மற்றும் பலர் காயமடைந்தார்கள். சிறைகள் சட்ட மறுப்புக் கைதிகளால் நிரம்பத் துவங்கிவிட்டன. ஆரம்பத்தில், இந்தக் கைதிகள் ஜில்லாச் சிறைகளுக்கு சென்றார்கள். அங்கே, இடமில்லாமற் போனதால், நைனி முதலிய பெரிய மத்திய சிறைகளுக்கு அழைத்துச் செல்லப்பட்டார்கள். பின்னர், எல்லாச் சிறைகளும் நிரம்பி விட்டன. தாற்காலிக சிறை முகாம்களை ஏற்படுத்த வேண்டியதாயிற்று.

நைனியில் எங்களுடைய அடைப்புக்குள் ஒரு சிலரே கொண்டு வரப்பட்டார்கள். என்னுடைய பழைய தோழன், நர்மதா பிரசாத் வந்து சேர்ந்தான். ரஞ்சித பண்டிட்டும் என்னுடைய (ஒன்று விட்ட) சகோதரர் மோஹன்லால் நேருவும் பின்னர் வந்து சேர்ந்தார்கள். எங்களுடைய ஆறும் நம்பர் சிறிய விடுதியிலே எதிர்பாராத ஒரு நண்பரும் வந்து சேர்ந்தார். அவருக்கு பர்னர்டு அலுவிஹாரா என்று பெயர் ; இலங்கையிலிருந்து வந்த இளைஞர் நண்பர். ஆங்கில நாட்டில் அப்பொழுது தான் பாரிஸ்டர் பட்டத்தைப் பெற்று, இந்தியாவுக்கு திரும்பி வந்து கொண்டிருந்தார். இந்தக் கூட்டங்களில் கலந்துகொள்ள வேண்டாமென்று என்னுடைய சகோதரி அவரிடம் சொல்லிப் பார்த்தாள். ஆனல், உற்சாக மேலீட்டால் அவர் காங்கிரஸ் ஊர்வலம் ஒன்றில் கலந்து கொண்டார். கறுப்பு மேரியாவில் அவரை சிறைக்கு ஏற்றிக் கொண்டு வந்துவிட்டார்கள்.

காங்கிரஸ், சட்டம் மீறிய சங்கமென்று பகிரங்கப் படுத்தப்பட்டது. உச்சியிலிருக்கும் காரியக்கமிட்டி, மாகாணக்

கமிட்டிகள், ஆயிரக் கணக்கான ஸ்தலக் கமிட்டிகள் எல்லாம் சட்டமீறிய அமைப்புகள் என்று அறிவிக்கப்பட்டன. காங்கிரசோடு அதனிடம் அபிமானம் கொண்டிருந்த ஏனைய ஸ்தாபனங்களும் சட்டம் மீறியவை என்று அறிவிக்கப்பட்டது. விவசாயிகளின் சங்கம், இளைஞர்களின் லீக்குகள், மாணவர்களின் சங்கங்கள், தீவிர அரசியல் அமைப்புகள், தேசியப் பல்கலைக் கழகங்கள், பள்ளிகள், ஆஸ்பத்திரிகள், சுதேசி ஸ்தாபனங்கள், வாசகசாலைகள் இவை யாவும் சட்டம் மீறியவைகளாயின. ஜாப்தாக்களைப் பார்த்தால் பயங்கரமாகத்தானிருந்தது. ஒவ்வொரு பெரிய மாகாணத்திலும் நூற்றுக் கணக்கான சங்கங்கள் இந்த ஜாப்தாக்களில் தாக்கல் செய்யப்பட்டிருந்தன. இந்தியா முழுதுக்கும் தொகை பல ஆயிரக் கணக்கு எட்டியிருக்கவேண்டும். இத்தனை ஆயிரம் அமைப்புகள் சட்டம்மீறியவை யென்று சொல்லுவதே தேசிய இயக்கத்துக்கும் காங்கிரசுக்கும் வாழ்த்தாகவிருந்தது.

சட்டமறுப்பு இயக்கத்தில் கலந்துகொள்ள முடியவில்லையே என்று நொந்துகொண்டு வியாதியாக என்னுடைய மனைவி பம்பாயில் படுக்கையில் இருந்தாள். என்னுடைய தாயாரும் இரண்டு சகோதரிகளும் மிகுந்த ஊக்கத்துடன் இயக்கத்தில் பிரவேசித்து வேலை செய்தார்கள். விரைவில் ஒவ்வொரு வருஷம் தண்டனை பெற்று சகோதரிகளிருவரும் சிறைக்குச் சென்றார்கள். புதிதாக சிறைக்கு வருபவர்களிடமிருந்தும், எங்களுக்கு அனுமதிக்கப் பெற்றிருந்த வாரப் பத்திரிகையிலிருந்தும் துண்டு துணுக்கு செய்திகள் கிடைக்கும். என்ன நேர்ந்துகொண்டிருக்கிறது என்பதைப்பற்றி எங்களால் யூகம் செய்யத்தான் முடிந்தது. சட்ட மறுப்புச் செய்திகள் பத்திரிகைகளில் வரவொட்டாமல் கடுமையாகத் தடுக்கப்பட்டன. பிரசுரித்தால் மிகவும் கனமாகத் தண்டனைகள் கிடைத்துவிடுமோ என்று பத்திரிகைகள் பயந்துகொண்டிருந்தன. செய்தி அனுப்பும் பேர்வழிகளுக்கும் இவ்வாறே அச்சம். கைது செய்யப்பட்டவன் அல்லது தண்டனை அடைந்தவன் பெயரைச் சொல்லுவதே சில மாகாணங்களில் குற்றமாகக் கருதப்பட்டது.

வெளிப் போராட்டத்திலிருந்து ஒதுக்கப்பட்டு நாங்கள் நைனி சிறையில் வாழ்ந்துவந்தோம். இருந்தாலும் வெளிப் போராட்டத்தில்தான் எங்களுக்கு எல்லாவகைகளிலும்

கருத்து சென்று கொண்டிருந்தது. சிறையில் நூற்போம்; படிப்போம்; வேறு ஏதேனும் செய்வோம். சிலசமயங்களில் வேறு விஷயங்களைப்பற்றி பேசுவோம். ஆனால் சிறை மதிலுக்கு வெளியே என்ன நடந்துகொண்டிருக்கிறது என்பதைப் பற்றித்தான் எங்களுக்குச் சதா காலமும் தியானம். போராட்டத்துக்கு வெளியே இருந்தோம் என்றாலும் அதற்குள்ளும் இருந்தோம் என்று கூறுவது மிகையாகாது. சிலசமயங்களில் சில விஷயங்களை எதிர்பார்த்து மனம் சஞ்சலத்தால் தளர்ந்தது. தவறாக ஏதாவது வெளியே செய்துவிட்டால் எங்களுக்குக் கோபம். பலவீனத்தையும் படாடோபத்தையும் கண்டு வெறுப்பு. வேறு சிலசமயங்களில் போராட்டத்தில் கலந்துகொள்ளாதது போல ஒதுக்கமான மனப்பான்மையோடிருப்போம். அப்பொழுது அமைதியுடன் நடு நிலைமை வகித்து காட்சியை நோக்குவோம். பொதுஜன சக்தி திரண்டு வேலை செய்து, தெய்வீக சக்திகள் தாண்டவமாடும் சமயத்தில் தனி நபர்களின் தப்பிதங்களோ சில்லரை பலவீனங்களோ என்ன செய்யமுடியும் என்று எண்ணுவோம்.

அடுத்தநாள் போராட்டத்தில் என்ன நேரும்? பூசலா? கலகமா? வீரத்தனம் நிறைந்த உற்சாகமா? கொடுமையான அடக்குமுறையா? வெறுக்கத்தக்க கோழைத்தனமா? எதுவரும்? என்று ஆவலுடன் இருப்போம். இவைகளின் முடிவுதான் என்ன? நாங்கள் எங்கே போய்க் கொண்டிருக்கிறோம்? எதிர்காலம் எங்கள் கண்ணில் படவில்லை. எங்கள் கண்ணில் படாமல் மறைந்து நின்றதே நல்லதாகும். நாங்கள் சம்பந்தப்பட்டவரையிலும் நிகழ்காலம்கூட ஓரளவு எங்களிடமிருந்து மறைக்கப்பட்டுக் கிடந்தது. ஆனால் நிகழ்காலத்திலும் எதிர்காலத்திலும் பூசலும் துயரமும் தியாகமும்தான் எங்கள் பாகதேயம் என்று எங்களுக்கு செவ்வையாகத் தெரியும். கவி கூறியிருப்பது போலவே 'போர்க்களத்தில் வீரர் நாளை மறுபடியும் போர் துவக்குவர்; ரத்த வெள்ளம் பாயும்; பீமனும் அர்ஜுனனும் அங்கு கர்ஜிப்பார்கள். திரௌபதி தூரத்தில் மாடிமேல் நின்று நோக்குவாள்' ஒரு வேளை நிழலில் நின்று மனம் புண்ணுவோம். அடுத்த நிமிஷம் வீராவேசம் பூண்டு பிரகாசிப்போம். ஆசைக்கும், துக்கத்திற்கும் நடுவே எங்கள் உயிர் ஊசலாடி, ஆன்மாவின் கதியென்னவாகுமென்று திகைப்போம்.

# XLII

## குழப்பமும் கூச்சலும்

1932-ம் வருஷத்தின் ஆரம்ப மாதங்கள் பல வகைகளிலும் சிறப்பு படைத்தவையாகும். அந்த மாதங்களில் பிரிட்டிஷ் அதிகாரிகள் விநோதமாக டம்பம் பேசிக்கொள்ளத் தலைப்பட்டார்கள். சிறிய பெரிய அதிகாரிகள் யாவரும் தாங்கள் எவ்வளவு யோக்கியர்கள் என்றும் சாந்தஸ்வரூபிகள் என்றும் காங்கிரஸ் எவ்வளவு பாபியென்றும் போக்கிரி என்றும் கூப்பாடு போட்டார்கள். அவர்கள் ஜனநாயகத்துக்காகப் பாடுபடுகிறார்களாம்! ஆனால் காங்கிரசுக்கோ சர்வாதிகாரிகளில் நம்பிக்கையாம். காங்கிரசின் தலைவர் சர்வாதிகாரி என்று அழைக்கப்படவில்லையா? தங்கள் சொந்த கல்யாணகுணங்களின் உற்சாகமேலீட்டால் அரசாங்க அதிகாரிகள் அவசரச் சட்டங்கள், சொத்துப் பறிமுதல், பத்திரிகைகளுக்கும் அச்சுக்கூடங்களுக்கும் வாய்ப்பூட்டு, விசாரணையில்லாமல் ஜனங்களுக்கு காவல், முதலிய விநோதமான பல சங்கதிகளை சில்லரை விஷயங்களென்று அடியோடு மறந்து விட்டார்கள். இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி அமைக்கப்பட்டிருக்கும் மூலாதார தத்துவத்தையும் அவர்கள் மறந்து விட்டார்கள். காங்கிரஸ்காரர்கள் சிறையில் தங்கள் சுயநலத்தைத் தேடி வருகிறார்கள் என்றும், மாதா மாதம் சில ஆயிரங்கள் கொண்ட அற்பமான சம்பளத்தை வாங்கிக்கொண்டு, பொது நலத்துக்காக தாங்கள் எவ்வாறு உழைக்கிறார்கள் என்றும் நம்முடைய தேசத்தார்களான மந்திரிமார்கள் பிரசங்கம் செய்தார்கள்.

கீழ் அதிகாரிகள் எங்களுக்கு கடுமையான தண்டனை கொடுத்ததுமல்லாமல், எங்களுக்கு உபதேசம் வேறு செய்ய ஆரம்பித்துவிட்டார்கள். சில சமயங்களில் காங்கிரசையும் அதில் சம்பந்தப்பட்டவர்களையும் ஏசினார்கள். இந்தியா மந்திரியின் உயர்ந்த பீடத்திலிருந்து ஸர். சாமுவேல் ஹோரும் "நாய்கள் என்ன குலைத்தாலும் வியாபாரக் குழாங்கள் நகர்ந்து போய்க்கொண்டே தான் இருக்கும்'' என்று அறி

வித்தார். நாய்கள் சிறையிலிருக்கின்றன என்றும், அங்கே அவைகள் எளிதில் குலைக்க முடியாதென்றும் வெளியே இருக்கும் நாய்களுக்கு முற்றிலும் வாய்ப்பூட்டு போடப் பட்டது என்பதையும் அவர் மறந்து போய்விட்டார்.

கான்பூர் கலகத்துக்கு காரணம் காங்கிரஸ்தான் என்று பழி சுமத்தப்பட்டது தான் எங்களுக்கு எல்லாவற்றைக் காட்டிலும் ஆச்சரியமாக இருந்தது. இந்தக் கொடிய கலகத்தின் பயங்கர நிகழ்ச்சிகள் விரிவாக வர்ணிக்கப்பட்டு இவைகளுக்கெல்லாம் காங்கிரஸ்தான் பொறுப்பாளி என்று அடுத்தடுத்துச் சொல்லப்பட்டது. உண்மை என்னவெனில், காங்கிரஸ் ஒன்றுதான் இந்தக் கலகங்களில் நேர்மையான பங்கு எடுத்து நடந்து கொண்டது. கான்பூரில் எல்லா வகுப்பார்களாலும், எல்லாக் கூட்டத்தார்களாலும் துக்கம் கொண்டாடப்படியாக காங்கிரஸின் உத்தமப் புதல்வர்களில் ஒருவர் அந்தக் கலகங்களிலே மாண்டு போனார்.

இந்தக் கலகங்களைப்பற்றிக் கேள்விப்பட்டவுடனே, கராச்சி காங்கிரஸ் விசாரணைக் கமிட்டி ஒன்றை நியமனம் செய்தது. இந்தக் கமிட்டி மிகவும் விரிவான விசாரணையைச் செய்தது. பல மாதங்கள் உழைத்து கமிட்டி மிகவும் விரிவான யாதாஸ்தை வெளியிட்டது. ஆனால் அரசாங்கத்தாரோ அந்த யாதாஸ்து அத்துமீறியதென்று தடுத்து யாதாஸ்தின் அச்சுப் பிரதிகளைப் பறித்துக்கொண்டு அவைகளை அழித்துவிட்டார்கள் என்று நினைக்கிறேன். விசாரணையின் விளைவுகளை அமுக்கிவிட இவ்வாறு முயற்சி செய்தும் கலகங்கள் காங்கிரஸின் வேலை என்று அடிக்கடி திருப்பிச் சொல்லுவதை மட்டும் நம்முடைய அதிகாரிகளும் பிரிட்டிஷ் பத்திரிகைகளும் நிறுத்திவிடவில்லை இதிலும் ஏனைய விஷயங்களிலும் இறுதியில் சத்தியமே ஜயிக்கும் என்பது நிச்சயம். ஆனால் சில சமயங்களில் பொய் வெகு நேரம் முன்னடியே பிரயாணத்துக்கு புறப்பட்டு விடுகிறதே! எல்லாம் முடிந்ததும் பொய் அழுகிப்போய் நாறும். உண்மை மகத்தானது; அது நிலைத்துத்தான் தீரும்; அது நிலைக்குமா நிலைக்காதா என்று யாரும் கவலைப்படத் தேவையில்லை.

இந்த நிலைதடுமாறிய போர்மனப்பான்மை சகஜம் என்று தான் நினைக்கிறேன். இந்தச் சந்தர்ப்பங்களில் உண்

மையையும் அடக்கத்தையும் யாரும் எதிர்பார்க்க முடியாது. ஆனால் எதிர்பார்த்ததற்கு மீறியே அபத்தமாகப் போய்விட்ட தென்று தோன்றிற்று. சற்றேனும் பொறுப்பில்லாமல் ஒன்றை ஆயிரமாக மிகைப்படுத்திச் சொல்வதைக் காண ஆச்சரியமாக இருந்தது. இந்தியாவிலே ஆட்சி நடத்தும் கூட்டத்தாரின் நரம்புகள் எந்த நிலைமையில் இருந்தனவென்றும் அவர்கள் சிறிது காலத்துக்கு முன்னர் எவ்வாறு கஷ்டப்பட்டு அவைகளை அடக்கி வைத்துக்கொண்டிருந்தார்கள் என்றும் இது காண்பித்தது. நாங்கள் சொன்னதிலும் செய்ததிலும் அவர்களுக்கு ஆத்திரம் ஏற்பட்டதனால் அவர்கள் இவ்வாறு மதியிழக்கவில்லை. ஆனால், தங்களுடைய சாம்ராஜ்யத்தை இழக்க நேரும் என்று அவர்கள் ஏற்கனவே அச்சம்கொண்டிருந்ததை நினைத்து அவர்கள் ஆத்திரப்பட்டிருக்க வேண்டும்.

தங்களுடைய சொந்த வல்லமையில் நம்பிக்கைகொண்டு ஆளுபவர்கள் இவ்வகையில் நெஞ்சம் கலங்கிப்போவதில்லை. இந்தக் காட்சியையும் அதற்கெதிரான மற்றொரு காட்சியையும் ஒப்பிட்டுப் பார்த்தால் வியக்கத் தக்கதாயிருக்கும். ஏனெனில் தேசத்தில் மௌனமே ஆட்சி புரிந்து வந்தது. ஜனங்களின் சொந்த வலுவாலும், கம்பீரமான அடக்கத்தாலும் ஏற்பட்ட மௌனம் அல்ல. சிறையாலும், அச்சத்தாலும், எங்கும் நிறைந்து நின்ற அடக்குமுறையாலும், ஏற்பட்ட மௌனம் ஆகும். இந்தத் தடைகள் மட்டும் இல்லாதிருந்தால், அவர்களும் கூச்சல் போட்டிருப்பார்கள்; அவர்களும் ஏசியிருப்பார்கள்; மிகைப்படுத்திக் கூறவும் செய்திருப்பார்கள். ஒவ்வொரு நகரத்திலும் அச்சுச் சட்டத்தை மீறி செய்தித் தாட்கள், வெளியிடப் பட்டுவந்த சட்டத்தை மீறிய துண்டுப்பத்திரிகைகள் மட்டும் இந்த மௌனத்தைச் சிறிது குலைத்தன.

இந்தியாவிலிருக்கும் பிரிட்டிஷ்காரர்களுக்குச் சொந்தமான ஆங்கிலோ-இந்தியப் பத்திரிகைகள் இந்தப் போலி தரும நெறிக் கூச்சலில் கலந்து கொண்டு, தாங்கள் நீண்ட நாட்களாக, இரகசியமாக அடக்கி வைத்துக்கொண்டு வளர்த்துவந்த எண்ணங்களை எல்லாம் பகிரங்கப்படுத்தி வந்தன. சாதாரணமாக, தாங்கள் எழுதும் விஷயங்களைப்பற்றி அவைகள் சிறிதும் எச்சரிக்கையோடுதான் இருக்கவேண்டும்,



ஜவஹரின் புதல்வி

ஸ்ரீமதி இந்திரா பிரியதர்ஷனி

ஏனெனில், அந்தப் பத்திரிகைகளை வாங்கிப் படிப்பவர்களில் பெரும்பான்மையோர் இந்தியர்கள். ஆனால் இந்தியாவில் இப்பொழுது நெருக்கடி ஏற்படவே, அந்த எச்சரிக்கைகளும் அடக்கமும் தொலைந்துபோய், இங்கிலீஷ்காரர்களும் இந்தியர்களும் உண்மையாக நினைப்பவை யாவும் வெளிவந்தன. இந்தியாவிலே இப்பொழுது அதிகமாக ஆங்கிலோ-இந்தியப் பத்திரிகைகள் இல்லை. அவைகள் ஒவ்வொன்றாக செத்துப் போய் விட்டன.

பாக்கி இருப்பவைகளிற் பெரும்பான்மை செய்திகளைக் கொடுப்பதிலும் பொதுவாக விஷயங்களை வரிசைப்படுத்தி நேர்த்தியாக அச்சடித்துக் கொடுப்பதிலும், உயர்ந்த ரகத்தைச் சேர்ந்தவைகள். உலக விஷயங்களைப்பற்றி அந்தப் பத்திரிகைகளில் காணப்பெறும் தலையங்கங்கள் பிற்போக்கான வைதீக மனப் பான்மையைத் தழுவி இருந்தாலும் திறமையோடு எழுதப்படுபவையாகும். அவைகளில் விஷயங்கள் நிறைய இருக்கின்றன. விஷயங்களை ஊன்றிக் கவனிக்க வல்லமையுண்டு என்பதையும் காண்பிக்கின்றன. பத்திரிகைகள் என்ற முறையில் பார்த்தால் இந்தியாவில் அவைகள்தான் மிகச் சிறந்தவை என்று சொல்ல வேண்டும். ஆனால் இந்திய அரசியல் பிரச்னைகளைப் பற்றி எழுதும் பொழுது அவைகள் தலைக்குப்புற விழுந்து விடுகின்றன. ஒருதலைப் பட்சமாக எழுதுகின்றன. நெருக்கடி காலத்தில் இந்தப் பட்சபாதம், வெறிபிடித்த தடுமாற்றமாகவும், படாடோபமாகவும் மாறி விடுகின்றது. அவைகள் இந்திய அரசாங்கத்தின் பக்தர்கள் என்றாலும், அரசாங்கத்தின் சார்பாகச் செய்யும் இடைவிடா பிரசங்கத்தை, ஆடம்பரமின்றி நாஸூக்காக செய்ய அவைகளுக்குத் தெரியவில்லை.

மேலே குறிப்பிட்ட சில ஆங்கிலோ-இந்தியப் பத்திரிகைகளோடு ஒப்பிட்டுப் பார்த்தால் இந்தியப் பத்திரிகைகள் அநேகமாக மட்டரகமானவை. அந்தப் பத்திரிகைகளுக்கு பணவசதி ரொம்பக் குறைவு. பண வசதிகளை விருத்தி செய்வதற்கு இந்தப் பத்திரிகைகளின் சொந்தக்காரர்கள் முயற்சி செய்வதில்லை. இவைகள் கஷ்டத்தோடு கைக்கும் வாய்க்குமாக ஒவ்வொரு நாளையும் கழித்து வந்தன. அவைகளின் துர்ப்பாக்கியமான ஆசிரியர் கூட்டத்தாரும் கஷ்டப்பட்டு ஜீவனம்செய்து வருகிறார்கள். இந்தப் பத்திரிகை

களின் பார்வை கவர்ச்சி கொடுப்பதல்ல. அவைகளில் பிரசுரிக்கப்படும் விளம்பரங்கள் அடிக்கடி ஆட்சேபத்துக் குரியவைகளாக இருக்கும். அரசியலைப்பற்றி வெறிபிடித்தாற்போல் எழுதும். இந்தியர்களுக்கு உணர்ச்சி அதிகம் என்பதனால் இதிருக்கலாம். அல்லது ஆங்கிலம் அந்நிய பாஷையாகவிருப்பதால் அதில் சரளமாகவும், சக்தியுடனும் எழுதுவது இந்தியர்களுக்குக் கடினமாயிருப்பதாலும் இருக்கலாம். நீண்டகால அடிமைத் தனத்துக்கும் அடக்குமுறைக்கும் நாம் எல்லோரும் ஆட்பட்டுக் கிடப்பதனாலே, அநேக வகைகளில் சிறியவர்கள் என்ற எண்ணத்தால் எதைச்சொன்னாலும் நாம் கீழ்ப்பட்ட உணர்ச்சி மிதமிஞ்சிக் கலந்து சொல்லவேண்டி யிருக்கிறது என்பது உண்மையான காரணமாக இருக்கலாம்.

இந்தியர்களுக்குச் சொந்தமான ஆங்கிலப் பத்திரிகைகளுக்குள் பத்திரிகை அமைப்பிலும் செய்திகளை வழங்குவதிலும் சென்னை "ஹிந்து" பத்திரிகை மிக உயர்ந்தது. "ஹிந்து" பத்திரிகையைப் பார்த்தால் கலியாணமாகாத கிழவியின் ஞாபகம் எனக்கு வருகிறது. அதாவது கிழவி மிக சுத்தமாகவும் சரியான வழியிலும் நடந்து கொள்வாள். ஆனால் அவள் முன்னிலையிலே குறும்பு வார்த்தை சொல்லிவிட்டால் அவள் திக்குமுக்காடிப்போவாள். வாழ்க்கையிலே சுக ஜீவிகளாக இருக்கும் நடுத்தர வகுப்பார்களுக்கு உகந்த பத்திரிகை "ஹிந்து" ஆகும். அதற்குப் பணமுடை கிடையாது. வாழ்க்கைப் போராட்டத்தைப் பற்றியும் கவலைகிடையாது. இப்பேர்ப்பட்ட கலியாணமாகாத கிழவியின் திட்டப்படிக்கு மிதவாதப் பத்திரிகைகள் பல நடைபெற்று வருகின்றன. ஆனால் அவைகளுக்கு "ஹிந்து"வின் சிறப்பு இல்லை. கிழவியைப்போல நடப்பதுதான் அவைகளுக்கு மிச்சமாகும். அவைகள் ஒவ்வொரு அம்சத்திலும் வியக்கத்தக்க அளவு மந்தமாயிருக்கின்றன.

காங்கிரசைத் தாக்குவதற்கு அரசாங்கம் நீண்டகாலமாகத் தயார் செய்துகொண்டிருந்தது என்பது தெளிவாகும். எனவே துவக்கத்திலேயே பயங்கரத்தோடு அடிக்க வேண்டும் என்று விருப்பம் கொண்டது. 1930-ம் வருஷத்தில் சிறிது சிறிதாக கேவலமாகிக்கொண்டு வந்த நிலைமையை சமாளித்துக்கொள்ள அவ்வப்போது புதிய புதிய அவசரச் சட்டங்களை அரசாங்கம் ஆக்கிவந்தது. அப்பொழுது தாக்

கும் லாபம் காங்கிரஸினிடம் இருந்தது. ஆனால் 1932-ம் வருஷத்திய முறைகள் வேறு. எல்லாத் துறைகளிலும் அரசாங்கம் கடுமையாகத் தாக்க ஆரம்பித்தது.

அகில இந்தியாவுக்கும் தனித்தனி மாகாணங்களுக்கும் சேர்ந்தாற்போல் அவசரச்சட்டங்களை அரசாங்கத்தார் ஆக்கிக்கொண்டார்கள். அவர்களுடைய கற்பனைக்கேற்றபடி எல்லாம், இந்த அவசரச் சட்டங்கள் மூலமாக அதிகாரங்களைப் பெற்றுக் கொண்டார்கள். பல அமைப்புகள் சட்டத்துக்கு மீறியவை என்று அறிவிக்கப்பட்டன. கட்டிடங்கள், சொத்துகள், மோட்டார்கார்கள், வங்கிக்கணக்குகள் கைப்பற்றப்பட்டன. பொதுக் கூட்டங்களும் ஊர்வலங்களும் தடுக்கப்பட்டன. பத்திரிகைகளையும் அச்சுக்கூடங்களையும் அரசாங்கத்தார் முற்றிலும் அடக்கிவிட்டார்கள். மேலும் 1932-ல் சட்டமறுப்பு வேண்டாமென்பது காந்திஜீயுடைய திட்டமான விருப்பமாகும். அவரைப் போலவே காரியக்கமிட்டி அங்கத்தினர்களில் பெரும்பான்மையோரும் கருதினார்கள்.

நாங்கள் விரும்பினாலும் விரும்பா விட்டாலும் போராட்டம் வந்தே தீருமென்றும் அதற்குத் தயாராக இருக்க வேண்டுமென்றும் நான் உள்பட எங்களில் சிலர் கருதினார்கள். ஐக்கியமாகாணங்களிலும் எல்லைப்புறமாகாணத்திலும் தகராறு முற்றிப்போனதால் போராட்டம் விரைவில் வருமென்று ஜனங்கள் எச்சரிக்கை செய்யப்பட்டு வந்திருந்தார்கள். ஆனால் மொத்தத்தில் அறிவாளிகளும் நடுத்தர வகுப்பார்களும் போராட்டம் என்ற ரீதியில் யோசித்துப் பார்க்கவில்லை. போராட்டம் வந்து கொண்டிருப்பதை அவர்கள் அறியாமலில்லை. ஆனால் காந்திஜீ திரும்பி வந்ததும் இந்தப் போராட்டம் தடுக்கப்பட்டு விடும் என்று அவர்கள் எண்ணினார்கள். அவர்களுடைய ஆசையே இந்த எண்ணத்துக்குக் காரணமாக விருந்தது.

எனவே, 1932-ம் வருஷத்தில் அரசாங்கத்தார் முதலில் தாக்கத்துவக்கினார்கள். காங்கிரஸ் எப்பொழுதும் இந்தத் தாக்கை சமாளிக்கும் வேலையிலேயே இருந்து வந்தது. அவசரச்சட்டங்களும் சட்டமறுப்பும் விரைவில் ஒன்றையொன்று பின்னிக்கொண்டு வருவதினால், ஏற்பட்ட நிகழ்ச்சி

களைப் பார்த்து ஸ்தல காங்கிரஸ் தலைவர்கள் பல இடங்களில் வியப்படைந்து போனார்கள். என்றாலும் காங்கிரஸின் அழைப்புக்குத்தக்க பதில் இருந்தது. சட்டம் மீறுகிறவர்கள் தொகை ஏராளமாக பெருகிக் கொண்டே வந்தது. 1932-ம் வருஷத்தில் பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு விரோதமாக காண்பித்த எதிர்ப்பு, 1930 ம் ஆண்டைக் காட்டிலும் அதிகம் என்பதில் சந்தேகமே இல்லை. ஆனால் 1930-ம்வருஷத்தில் போராட்ட ஆடம்பரம் அதிகமாயிருந்தது. அதற்கு நல்ல விளம்பரம் கிடைத்தது. முக்கியமாக பெரிய நகரங்களில் இவை இரண்டும் இருந்தன.

1932ல் ஜனங்கள் அதிகமான பிடிவாதத்தைக் காண்பித்தார்கள். அவர்கள் மிகுதியும் அமைதியுடன் போரை நடத்தினார்கள் என்றாலும் துவக்க ஆவேசம் 1930-ம் வருஷத்தை விடக் குறைவாயிருந்தது. விருப்பமில்லாமல் நாம் சண்டைக்குப் போவதாகத் தோன்றிற்று. 1930ம் வருஷத்திலிருந்த ஜோதிமயமான போராவேசம் இரண்டுவருஷத்தில் கொஞ்சம் குறைந்து போய்விட்டது. தன் கையிலிருந்த ஒவ்வொரு உபாயத்தைக்கொண்டும் அரசாங்கம் காங்கிரசைத்தாக்கிற்று. இந்தியா அநேகமாக இராணுவ அமுலின் கீழ் இருந்தது எனலாம். காங்கிரசுக்கு வேலை செய்யும் சுதந்திரம் எந்த அளவிலும் கிடைக்கவில்லை. துவக்கத்திலே வாங்கின அடிகளால் காங்கிரஸ் கலங்கிப் போயிற்று. காங்கிரசை ஆதரித்த நடுத்தர வகுப்பார்களும் கலங்கிப் போனார்கள். அவர்களுடைய வருமானத்திலும் இடிவிழுந்தது. சட்டமறுப்பியக்கத்தைச் சேர்ந்தவர்களும் அல்லது அதை ஏதேனும் ஒருவகையில் ஆதரிப்பதாகத் தெரிகிறவர்களும் தங்கள் சுதந்திரத்தை இழப்பதோடல்லாமல் அநேகமாகத் தங்கள் சொத்தையும் இழக்க நேருமென்பது தெளிவாயிற்று.

ஐக்கிய மாகாணத்தில் எங்களுக்கு இதைப்பற்றி அதிகம் கவலையில்லை. ஏனெனில் எங்கள் மாகாண காங்கிரஸ் ஏழைகளுடைய காங்கிரசாகும். ஆனால் பம்பாயைப்போன்ற பெரிய நகரங்களில் மகத்தான வேற்றுமை ஏற்பட்டது. அங்கே வியாபாரிகளுக்கு அழிவும், சில்லரைத் தொழில் நடத்துபவர்களுக்கு பெருத்த நஷ்டமும் ஏற்பட்டன. மேற்சொன்னவகையில் பயமுறுத்தப்பட்டதும் நகரத்தில் வசித்த தனவந்தர்கள் ஸ்தம்பித்துப் போனார்கள். பின்னர்

ஒரு செய்தி கேள்விப்பட்டேன். ஒரு வியாபாரி, பெரிய தனவந்தர், ஆனால் மிகவும் கோழை; அவருக்கும் அரசியலுக்கும் சம்பந்தம் இல்லை. ஒரே ஒரு சமயம் காங்கிரசுக்கு நன்கொடையாக ஏதேனும் அவர் கொடுத்திருக்கக் கூடும். "உமக்கு ஐந்து லட்சரூபாய் அபராதமும் நீண்ட கால சிறைவாசமும் வரப்போகின்றன" என்று அவரைப் போலீசார் பயமுறுத்தினார்களாம். இத்தகைய பயமுறுத்தல்கள் சாதாரணம். அவைகள் குருட்டு மிரட்டலுமல்ல. ஏனெனில் போலீசார் அப்பொழுது சர்வாதிகாரிகளாயிருந்தார்கள். அவர்கள் மிரட்டினாற்போல், தினசரி காரியம் செய்து காண்பித்தார்கள்.

அரசாங்கத்தார் கையாண்ட நடவடிக்கையை ஆட்சேபிக்க எந்தக் காங்கிரஸ்காரருக்கும் பாத்தியம் உண்டென்று நான் நினைக்கவில்லை. அநேகமாக சாத்வீகத்தில் நடைபெற்றுவந்த இயக்கத்துக்கு விரோதமாக அரசாங்கத்தார் கையாண்டு வந்த பலாத்காரமும் அடக்குமுறைகளும் எந்த நாகரிக அளவுகளைக் கொண்டு மதிப்பிட்டாலும் கண்டிக்கத் தக்கவைகள்தான். ஆனால் புரட்சிச் சாதனங்களாகிய யுத்த முறைகளை நாம் கையாண்டால் அந்த முறைகள் எவ்வளவு சாத்வீகமாயிருந்தாலும், அரசாங்கத்தார் அவைகளை எல்லா வகைகளிலும் எதிர்ப்பார்கள் என்பதை நாம் எதிர்பார்க்கவேண்டியதே.

வீட்டினுள்ளே உட்கார்ந்து நாம் புரட்சி விளையாட்டு விளையாடமுடியாது. ஆனால் "வீட்டிலும் இருக்கவேண்டும்; புரட்சியும் தேவை" என்று பலருக்கு விருப்பம். புரட்சி முறைகளில் ஈடுபட்டுக் கிடக்கும் ஒருவன் தனக்கு சொந்தமாகவுள்ள எதையும் இழக்கத் தயாராக இருக்க வேண்டும். ஆகவே தனவந்தர்களும் உலக வாழ்க்கையின் செழிப்பை விரும்புவோர்களும், அநேகமாக புரட்சிக்காரர்களாக இருப்பதில்லை. இந்தக் கூட்டத்திலிருந்து ஓரிரண்டு பேர் புரட்சியில் கலந்துகொண்டு முட்டாள் பட்டம் வாங்கிக் கொள்ளலாம். அல்லது தங்கள் வகுப்புக்கு கோடரிக் காம்பாய் முளைத்தான் என்று வெறுக்கப்படலாம்.

ஏழை எளியவர்களுக்கோ மோட்டார்கார்கள் கிடையாது. வங்கியிலே கணக்கு இல்லை. பறிமுதல் செய்வதற்கு

சொத்து பூச்சியம். போராட்டத்தின் உண்மையான பளு இவர்கள் தலையிலேதான் சுமந்து நின்றது. இவர்களை அடக்குவதற்கு வேறு முறைகள் கையாளப்படவேண்டும். அரசாங்கத்தின் கொடுமையான அடக்குமுறையின் விளைவு, ஒன்று நேர்ந்தது. அது என்ன வெனில் இதுவரை சர்க்கார் தாசர்களாக பலர் இருந்து வந்தார்கள். அவர்களிற் சிலர் எதிர்காலத்தில் என்ன நேருமோ என்று காங்கிரஸினிடம் ஜாடைமாடையாகக் காதலைக் காண்பிக்க கொஞ்சகாலமாகத் துவக்கினார்கள். ஆனால் இந்தச் செயல் அரசாங்கத்தாருக்குப் பிடிக்கவில்லை. இவர்களுடைய தீவிரமான, கவைக்குதவாத ராஜபக்தி போதவில்லை; மருக்கலப்பில்லாத ராஜபக்திக்குக் குறைவாக இவர்கள் எதைக் காண்பித்தாலும் அதிகாரிகளுக்குத் திருப்தியாகவில்லை.

எனவே, சர்க்கார் தாசர்கள் சுறு சுறுப்பு காண்பிக்க ஆரம்பித்தார்கள். தங்களுடைய லிபரல் கட்சியை விட்டு விட்டு அரசாங்கத்தோடு சேர்ந்துகொண்ட பிரிட்டிஷ் தலைவர்களை சமயத்துக்குத் தக்கபடி தங்கள் நிறத்தை மாற்றிக் கொள்ளும் ஊர்வனவற்றின் உதாரணங்கள் என்று தம்முடைய பழைய லிபரல் கட்சித் தோழர்களை ஒரு வருஷத்துக்கு முன்னால் லாயிட் ஜார்ஜ் கேலி செய்தார். இந்தியாவில் ஏற்பட்ட புதிய நிலைமையில் யாரும் நடுநிலைமையாக இருக்க முடியாது. எனவே நம்முடைய தேசத்தாரில் சிலர், நேர்த்தியான வர்ணங்களைத் தீட்டிக் கொண்டு, விருந்தும் பாட்டும் கலக்க, தம்மை ஆளுபவர்களிடம் அன்பையும் பிரேமையையும் காண்பிப்பதாக பகிரங்கப்படுத்திக் கொண்டார்கள்.

அவசரச் சட்டம், தடை யுத்தரவுகள், மாலைத் தடைகள், இரவு எட்டு மணி தடை யுத்தரவுகள் முதலியவைகளைப்பற்றி இவர்களுக்கு அச்சமே இல்லை. இவை யாவும் கலகக்காரர்களுக்கும் ராஜத் துரோகிகளுக்கும் ஏற்பட்டவை என்றும், இதனால் ராஜபக்தர்கள் திகிலடையக் காரணமே இல்லையென்றும் உத்தியோக முறையில் அறிவிக்கப் படவில்லையா ? தேசத்திலே, அநேகரைப் பீடித்து வாதித்து வந்த அந்த அச்சம் துளிக்கூட இல்லாமல், நாற்புறமும் சுற்றி, தலை தூக்கி நின்றாடும் பூசலையும் போராட்டத்தையும் இவர்களால் மன அமைதியுடன் பார்க்க முடியுமல்லவா ?

"எனக்கு ஒரு அச்சத்தைப்பற்றி கவலையே யில்லை. என்னை யாரும் பலவந்தமாக கற்பழிக்க முடியாது. ஏனெனில், நான் எப்பொழுதும் யாருடனும் சேர விருப்பத்துடனேயே இருக்கிறேன்" என்று ஆங்கில கீதத்தில் இடைப் பெண் கூறிய நியாயப்படி, இவர்களும் ஆனந்தமாகச் சொல்ல முடியும்.

போராட்டத்தில் ஸ்திரீகளைக் கொண்டு நிறுத்தி சிறைகளை நிரப்ப காங்கிரஸ் உத்தேசித்திருக்கிறதாகவும் சிறைகளில் பெண்கள் நன்ருக நடத்தப்படுவார்கள் அல்லது அவர்களுக்கு லேசான தண்டனைகள் கிடைக்கும் என்ற ஆசையைக் காங்கிரஸ் கொண்டிருந்ததாகவும் சர்க்காருக்கு ஒரு எண்ணம் உண்டாயிற்று. இது ஒரு அசட்டுத்தனமான எண்ணமாகும். தமது பெண்டிர்களைச் சிறையிலே தள்ள யாராவது விரும்புவார்களா? சிறுமிகளோ அல்லது ஸ்திரீகளோ போராட்டத்தில் ஊக்கமாகக் கலந்துகொள்வாராகில் அது அவர்களுடைய தகப்பனர்கள் அல்லது சகோதரர்கள் அல்லது கணவர்களை மீறியே கலந்துகொண்டதாகும். இவர்களுடைய பூரண அனுமதியைப்பெற்று அவர்கள் அவ்வாறு செய்யவில்லை என்று திட்டமாகச் சொல்லலாம்.

பெண்கள் அதிகமாக சிறைக்கு வருவதைத் தடுப்பதற்காக அவர்களுக்கு நீண்டகால தண்டனை கொடுத்து சிறையில் அவர்களை நல்லதனமாக நடத்தக்கூடாதென்று அரசாங்கத்தார் முடிவு கட்டிக்கொண்டார்கள். என்னுடைய சகோதரிகள் கைது செய்யப்பட்டு தண்டனை பெற்றபின், பதினைந்து பதினறு வயதுள்ள சிறுமிகளான பலர் அலகாபாத்தில் கூடி என்ன செய்வதென்று யோசித்தார்கள். அவர்களுக்கு அனுபவம் கிடையாது. ஆனல் உற்சாகம் அதிகம். அவர்கள் பிறரிடமிருந்து யோசனையை வேண்டினர்கள். அவர்கள் ஒருவருடைய வீட்டில் கூடியிருக்கையில் கைது செய்யப்பட்டார்கள். அவர்களில் ஒவ்வொருவருக்கும் இரண்டு வருஷக் கடுங்காவல் கிடைத்தது. இது ஒரு சிறிய நிகழ்ச்சி. இதைப்போல அநேக நிகழ்ச்சிகள் இந்தியா முழுதும் ஒவ்வொரு நாளும் நடந்து வந்தன.

தண்டனையடைந்த சிறுமிகளில் பெரும்பான்மையோரும் ஸ்திரீகளும் சிறையில் மிகுந்த கொடுமையுடன் காலம்

கழிக்கவேண்டியதாயிற்று. ஆண்களைக் காட்டிலும் அவர்கள் கேவலமாக நடத்தப்பட்டார்கள். பல வருந்தத்தக்க சம்பவங்களை நான் கேள்விப்பட்டேன். ஆனால் இவைகள் எல்லாவற்றையும் தூக்கியடிப்பதான நிகழ்ச்சிகளைப் பற்றி மீரா பென் (மாடலின் ஸ்லேட்) தொகுத்து வருணித்து எழுதிய வரலாற்றை நான் படித்தேன். பம்பாய் மாகாணச் சிறையொன்றில் மீராபென்னும் ஏனைய சட்ட மறுப்புக் கைதிகளும் நடத்தப்பட்ட வகையும், அனுபவித்த அனுபவங்களும் அதில் வரையப்பட்டிருந்தன.

ஐக்கிய மாகாணத்திலே எங்களுடைய போராட்டம் கிராமாந்திரப் பகுதிகளிலே மும்முரமாய் நடந்து வந்தது. காங்கிரஸ் விவசாயிகளின் பிரதிநிதியாக இடைவிடாமல் அரசாங்கத்தைத் தாக்கி வற்புறுத்தியதினால் கணிசமான வஜாக்கள் செய்வதாக அரசாங்கத்தார் வாக்குக் கொடுத்தார்கள். ஆனால் அந்த வஜா போதாதென்பது எங்களுடைய எண்ணம். நாங்கள் கைது செய்யப்பட்டதும் அதிகமான தள்ளுபடிகள் அரசாங்கத்தாரால் அறிவிக்கப்பட்டன. இந்த அறிவிப்பை ஏற்கனவே செய்திருக்கக் கூடாதா? அதனால் மகத்தான வேற்றுமை ஏற்பட்டிருக்கலாம்.

நாங்களும் அதைக் கண் மூடித்தனமாகப் போதாதென்று சொல்லியிருக்க மாட்டோம். ஆனால் இந்தத் தள்ளுபடிகளுக்காக காங்கிரஸுக்கு கீர்த்தி கிடைக்கக் கூடாது என்பதுதான் அரசாங்கத்தாருடைய ஓயாக் கவலை. எனவே ஒருபுறம் அவர்கள் காங்கிரஸை நசுக்க ஏற்பாடு செய்தார்கள்; இன்னொருபுறம் விவசாயிகள் அமைதியுடன் இருப்பதற்காக போதுமான அளவு அவர்களுக்கு வரியைத் தள்ளிக் கொடுக்க வேண்டுமென்று தீர்மானித்தார்கள். எந்த எந்த பகுதிகளில் காங்கிரஸ் கிளர்ச்சி செய்து அரசாங்கத்தை வற்புறுத்தியதோ அந்தந்த இடங்களிலேதான் விவசாயிகளுக்கு அதிகமான வரி தள்ளுபடி கிடைத்தது.

இந்தத் தள்ளுபடிகள் தாராளமாகவிருந்தாலும் அவைகள் நில சம்பந்தமான பிரச்னையைத் தீர்க்கவில்லை. ஆனால் அவை நிர்பந்த நிலைமையைக் கொஞ்சம் தளர்த்தி விட்டன. அதனால் விவசாயிகள் தங்கள் எதிர்ப்பை ஓரளவு

குறைத்துக் கொண்டார்கள். இதைப் பெரிய தேசியப் போராட்டத்தோடு சேர்த்துப் பார்த்தால் போராட்டத்துக்கு ஒரு சிறிது பலவீனம் என்று சொல்லவேண்டும். இந்தப் போராட்டத்தால் ஐக்கிய மாகாணங்களிலே பல்லாயிரக்கணக்கான விவசாயிகளுக்குத் துன்பம் நேர்ந்து அவர்களில் பலர் அடியோடு அழிந்தே போய்விட்டார்கள். ஆனால் அந்தப் போராட்டத்தின் சக்தியால் நில சம்பந்தமான சட்ட திட்டத்திற்கு கட்டுப்பட்டு எவ்வளவு வரி தள்ளுபடி கிடைக்கக் கூடுமோ அவ்வளவும் லட்சக்கணக்கான விவசாயிகளுக்கு கிடைத்தது. மேலும் இதனால் அவர்கள் ஏராளமான தொந்தரவுகளினின்றும் தப்பினார்கள்.

விவசாயிகளுக்கு கிடைத்த இந்தச் சில்லரை லாபங்களினால் நிரந்தர நன்மை ஏற்பட்டு விடவில்லை. ஆனால் எங்கெங்கே இத்தகைய லாபங்கள் கிடைத்தாலும் அது விவசாயிகளுக்காக ஐக்கிய மாகாண காங்கிரஸ் கமிட்டி பிடிவாதமாக உழைத்ததின் பயனாகும். பொதுவாக விவசாயிகளுக்கு தாற்காலிக பரிகாரம் ஏற்பட்டது. ஆனால் அவர்களில் மிக்க தைரியசாலிகளாயிருந்தவர்கள் போராட்டத்தில் சின்னாபின்னப்பட்டு சீர்குலைந்துபோய் உயிரையும் இழக்க நேர்ந்தது.

1931-ம் வருஷம் டிசம்பர் மாதத்தில் ஐக்கிய மாகாண விசேஷ அவசரச் சட்டத்தை அரசாங்கத்தார் பிறப்பித்த பொழுது வியாக்கியானக் குறிப்பு ஒன்றையும் சேர்த்து வெளியிட்டார்கள். இந்தக் குறிப்பிலும் வேறு அவசரச் சட்டங்களுக்குப்பின் வந்த குறிப்புகளிலும் பிரசார நோக்கத்தைக்கொண்டு பல பொய்களும் பாதி உண்மைகளும் சேர்க்கப்பட்டிருந்தன; அவைகள் யாவும் இப்போர் துவக்கத்தில் ஜனங்களின் மனத்தைக் கலக்கச் செய்த சூழ்ச்சிகளைச் சேர்ந்தவை. அவைகளுக்கு பதில் சொல்லவோ அல்லது தவறுகளை எடுத்து விளக்கிக் காண்பிக்கவோ எங்களுக்கு சந்தர்ப்பமே இல்லை. ஷெர்வானியின் பேரில் ஒரு அபாண்டமான பொய்யைக் கட்டப் பார்த்தார்கள். அதை அவர் கைது செய்யப்படு முன்னர் திருத்தி விட்டார். இந்தப் பலவேறு குறிப்புகளையும் அரசாங்கத்தின் நொண்டிச் சமாதானங்களையும் படித்தால் மிகவும் விநோதமாக இருக்கும்.

அரசாங்கத்தாரின் நரம்பு எவ்வளவு வரையில் ஆட்டம் கண்டுபோயிருந்ததென்பதை இவைகள் தெளிவாக உணர்த்திவிட்டன. ஸ்பெயின் தேசத்தில் அரசாட்சி நடத்திய போர்போன் மூன்ருவது சார்லஸ் அவர்கள் தமது நாட்டில் "ஜெஸுட்'' மார்கள் (ரோமன் கதோலிக்க கிறிஸ்துவர்களுக்குள் ஒரு செல்வாக்கு படைத்த கூட்டத்தார்) தங்கலாகாது என்று தேசப்பிரஷ்டம் செய்த உத்தரவை நான் சமீபத்தில் படிக்கும்பொழுது இந்திய அரசாங்கத்தார் பிறப்பித்த உத்தரவுகளும் அவசரச் சட்டங்களும் அவைகளுக்காக அவர்கள் கொடுத்த சமாதானங்களும் என்னையும் அறியாமல் என் நினைவுக்கு வந்தன. 1767-ம் வருஷம் பிப்ரவரி மாதத்தில் பிறப்பிக்கப்பட்ட இந்த உத்தரவில் அந்த அரசன் "என்னுடைய ராஜ்யத்தில் குடிகளுக்கு மத்தியில் கீழ்ப்படிதலையும் அமைதியையும் நீதியையும் காப்பற்றவேண்டிய எனது கடமையால் ஏற்பட்ட காரணங்களாலும் எனது ராஜாங்கமான இதயத்தில் யாருக்கும் தெரியாமல் நான் ஒளித்துவைத்துக்கொண்டிருக்கும் இதர அவசரமான நியாயமான தேவையான காரணங்களாலும் இந்தக் காரியத்தைச் செய்கிறேன்'' என்று சமாதானம் கூறினர்.

ஆகவே அவசரச் சட்டங்களுக்கு உண்மையான காரணங்கள் (அவைகள் வெளிப்படையாயிருந்த போதிலும்) வைசிராயின் இதயத்திலோ அல்லது அவரது நிர்வாகக் கமிட்டியாரின் சாம்ராஜ்ய உள்ளங்களிலோ பூட்டப்பட்டுக் கிடந்தன. ஆனல் உத்யோக முறையில் அவர்கள் அறிவித்த காரணங்களைக் கொண்டு இந்தியாவில் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் புதியதொரு பிரசார முறையைக் கையாண்டு பக்குவப்படுத்திக்கொண்டு வருகிருர்கள் என்பதைத் தெரிந்துகொள்ளலாம். சில மாதங் கழித்து அரசாங்கத்தாரால் பல துண்டுப் பிரசுரங்கள் வெளியிடப்பட்டு அவைகள் கிராமாந்தரங்களிலே விநியோகம் செய்யப்பட்டன. அவைகளிலே கணக்கு வழக்கின்றி பொய்களைக் காணலாம். காங்கிரசினுலே அகவிலை கிராக்கி படுத்துப்போயிற்று என்றும் அதனுலேதான் விவசாயிகள் கஷ்டப்படுகிருர்களென்றும் ஒரு துண்டுப் பிரசுரத்தில் குறிப்பிடப்பட்டிருந்தது.

இது காங்கிரஸின் வல்லமைக்கு பெரியதொரு அத்தாக்ஷி கொடுப்பதுபோலிருக்கும். உலகப் பொருளாதார மந்

த்தையே காங்கிரஸ் உண்டாக்கக் கூடுமானால் அது காங்கிரஸின் வல்லமைக்கு பாராட்டுத்தானே! இந்தப் பொய்யைப் பிடிவாதமாகவும் விடாமலும் பரப்பிக்கொண்டே சென்று காங்கிரசின் நற்பெயரைக் கெடுக்கப் பார்த்தார்கள் அரசாங்கத்தார்.

எவ்வளவு எதிர்ப் பிரசாரம் செய்தாலும் ஐக்கிய மாகாணத்தில் சில முக்கியமான ஜில்லாக்களில் விவசாயிகள் ஏராளமாக சட்ட மறுப்பு இயக்கத்தில் கலந்து கொண்டார்கள். சட்ட மறுப்பு இயக்கமும், வரி தள்ளுபடிக் கிளர்ச்சியும் அநேகமாக பிணைந்து கிடந்தன. இது 1930-ம் வருஷத்தைக் காட்டிலும் அதிகமான கட்டுப்பாட்டுடனே நடைபெற்றது. துவக்கத்திலே விவசாயிகள் கொஞ்சம் வேடிக்கையாகக்கூட நடந்து கொண்டார்கள். ராய்பெரிலி ஜில்லாவில் பஹுலியா கிராமத்துக்கு போலீஸ் கூட்டம் ஒன்று படையெடுத்துச் சென்றது. இதைப்பற்றி ருசிகரமான கதை ஒன்றை நாங்கள் கேள்விப்பட்டோம். வரி செலுத்தாததற்காக சாமான்களை ஜப்தி செய்வதற்கு போலீஸ் கூட்டம் போயிருந்தது. கிராமம் கூடுமானவரையில் செழிப்புள்ளதுதான். அங்கே வசிப்பவர்களும் சிறிதளவு ரோஷக்காரர்கள்.

அவர்கள் ரெவின்யூ போலீஸ் உத்தியோகஸ்தர்களை மரியாதையாக வரவேற்று எல்லா வீட்டுக் கதவுகளையும் திறந்துவைத்து "நீங்கள் எங்கு வேண்டுமானாலும் தாராளமாகப் போகலாம்" என்று சொன்னார்கள். உத்தியோகஸ்தர்கள் கால்நடை முதலியவற்றை ஜப்தி செய்தார்கள். கிராமத்தார்கள் பிறகு போலீஸ் ரெவின்யூ உத்தியோகஸ்தர்களுக்கு வெற்றிலை பாக்கு கொடுத்தார்கள். இந்தக் காட்சியைக் கண்டதும் உத்தியோகஸ்தர்களின் முகங்கள் சிறிதாய்ப் போய் வெட்கம் குடிகொண்டது. ஆனால் இது ஒரு அபூர்வமான நிகழ்ச்சியாகும். வெகு விரைவிலே வேடிக்கையோ, தாராளமோ, கருணையோ நிகழ்ச்சிகளில் இல்லாமற்போய் விட்டது. எவ்வளவு மரியாதையாக நடந்து கொண்ட போதிலும் அதனுடைய ஹாஸ்யச்சுவைக்காக பஹுலியாவும் கஷ்டங்களை அனுபவிக்க வேண்டித்தான் இருந்தது.

குறிப்பிட்ட இந்த ஜில்லாக்களில் பல மாதங்களாக விவசாயிகள் வரி கொடுக்காமல் இருந்தார்கள். கோடை

காலத் துவக்கத்தில்தான் வரி வசூல் சிறிது சிறிதாக நடை பெற்றது. அநேகம்பேர்கள் கைதுசெய்யப்பட்டார்கள். ஆனால் கைது செய்வது அரசாங்கத்தின் நோக்கமில்லை. கைது செய்யப்பட்டது அரசாங்கத்தின் நோக்கத்துக்கு மீறியே செய்யப் பட்டதாகும். பொதுவாக கிராமத் தலைவர்களும், சிறப் பாக ஊழியர்களும் கைதுசெய்யப்பட்டார்கள். மற்றவர் களை அடிக்க மட்டும் செய்தார்கள். துப்பாக்கிப் பிரயோகத் தைக் காட்டிலும் சிறந்தது அடி என்று அரசாங்கத்தார் அனுபவத்தில் தெரிந்து கொண்டார்கள்.

தேவையான பொழுதெல்லாம் அதைக் கையாள முடியும். இது கிராமாந்தரங்களில் நடைபெறும் பொழுது வெளியார்களின் கவனத்துக்கு வருவதில்லை. இதனால் சிறை செல்பவர்களின் தொகையும் குறைந்தது. பல குடியான வர்கள் தங்கள் நிலத்திலிருந்து துரத்தப்பட்டார்கள். சொத்து, கால்நடை ஜப்தியும் ஏலமும் சாதாரணமாக நடைபெற் றன. தங்களிடமிருந்த சிறிய சொத்துக்கள்கூட பறிமுதல் செய்யப்பட்டு நகைக்கத்தக்க கேவலமான விலைகளுக்கு ஏலம் போடப்படுவதை விவசாயிகள் கண்டு மிகவும் மனவேதனைப் பட்டார்கள்.

"ஸ்வராஜ்யபவனம்" அரசாங்கத்தாரால் கைப்பற்றப்பட் டது. நாடெங்கும் வேறு பல கட்டிடங்களும் கைப்பற்றப் பட்டன. "ஸ்வராஜ்யபவனில்" நடைபெற்றுவந்த காங்கிரஸ் ஆஸ்பத்திரிக்குச் சொந்தமான சாமான்களும், விலைமதிப்புப் பெற்ற மருந்துக் கருவிகள் முதலானவைகளும் கைப்பற்றப் பட்டன. சில நாட்கள்வரை ஆஸ்பத்திரி அடியோடு நடக் காமல் நின்றுபோயிற்று. பக்கத்திலே இருந்த ஒரு "பார்க் கில்" (பூங்காவனம்) யாதொரு கட்டிடமுமில்லாமல் ஆஸ் பத்திரி பின்னர் நடந்து வந்தது. பிறகு அது "ஸ்வராஜ்ய பவனு"க்குப் பக்கத்திலிருந்த வீட்டிக்குக் கொண்டுபோகப் பட்டு அங்கே சுமார் இரண்டரை வருஷகாலம் நடைபெற்று வந்தது. நாங்கள் குடியிருந்த "ஆனந்தபவன" வீடும் அர சாங்கத்தாரால் கைப்பற்றப்படப் போகின்றது என்ற வதந் தியும் உலவிற்று. ஏனென்றால் வருமான வரியாக பெரிய தொகையைச் செலுத்தாமல் நான் நிறுத்தி வைத்துக்கொண் டிருந்தேன். 1931-ம் வருஷம் தகப்பனருக்கு வந்த வருவா யின்பேரில் இந்த வரி விதிக்கப்பட்டது. சட்டமறுப்பியக்

கத்தால் அந்த வருஷம் அவர் ஒன்றும் கொடுக்கவில்லை. 1931-ல் டில்லி ஒப்பந்தத்திற்குப் பிறகு வருமான வரி அதிகாரிகளோடு கட்சி பேசினேன். ஆனால் கடைசியில் கொடுப்பதாக ஒப்புக்கொண்டு ஒரு தவணையும் செலுத்தினேன்; அந்தச் சமயத்தில் தான் அவசரச் சட்டங்கள் தோன்றின; இனி ஒரு பைசாக்கூடக் கொடுக்கக்கூடாதென்று தீர்மானித்துக் கொண்டேன்.

வருமான வரி கொடுப்பதே தவறு என்பது என் எண்ணம். நான் வருமான வரியைக் கொடுத்துவிட்டு "கிஸ்தியை நீங்கள் கொடுக்கவேண்டாம்" என்று விவசாயிகளிடம் சொல்லுவது மிகவும் தவறானது, அதர்மமானதென்று நினைத்தேன். எனவே அரசாங்கத்தார் எங்களுடைய வீட்டை ஜப்தி செய்வார்களென்று எதிர்பார்த்தேன். இந்த ஜப்தியைப்பற்றி எனக்கு அதிக மனக்கசப்பு உண்டாயிற்று. ஏனென்றால் வீடு ஜப்தி செய்யப்பட்டால் என் தாயார் வெளியே போகும்படி நேரிடும். நாங்கள் பல ஞாபகங்களால் பிரியம் வைத்திருந்த சாமான்கள் யாவும், எங்களுடைய புஸ்தகங்களும், தஸ்தவேசுகளும் மற்றும் தட்டுமுட்டுச் சாமான்களும் யாருடைய கைக்குப்போய்ச் சேருமோ? ஒருக்கால் அவைகள் அடியோடு தொலைந்தே போகவும் கூடும். எங்களுடைய தேசீயக்கொடியை கீழே இறக்கிவிட்டு யூனியன்ஜாக் கொடியைப் பறக்க விடுவார்கள்.

இந்த வெறுப்பு ஒருபுறமிருக்க வீட்டை இழப்பது என்ற எண்ணம் மற்றோர் புறம் இன்பத்தையும் கொடுத்தது. வீடில்லாமல் தவிக்கும் விவசாயிகளோடு நான் நெருங்கிப் பழகி அவர்களுடைய உள்ளத்தை உறுதிபடுத்தக்கூடும் என்று சந்தோஷப்பட்டேன். நம்முடைய இயக்கத்தின் வளர்ச்சிக்காகவும் இந்த ஜப்தி நிச்சயமாக விரும்பத்தக்க சங்கதிதான். ஆனால் அரசாங்கத்தார் வேறு விதமாக தீர்மானம் செய்தார்கள். என்னுடைய தாயாருக்கு கஷ்டம் கொடுக்க விரும்பாமலிருந்திருக்கலாம்; அல்லது வீட்டைத் தொட்டால் சட்டமறுப்பியக்கத்துக்குத் தூண்டுதல் அதிகமாக ஏற்படும் என்று அரசாங்கத்தார் சரியாக நிதானித்திருக்கலாம். எந்த நோக்கத்துடனேயோ அவர்கள் வீட்டைத் தொடவே இல்லை. வருமானவரி கொடுக்காமலிருந்ததற்காக பல மாதங்கள் கழித்து எனக்கு சொந்தமான ரெயில்வே

பங்குகள் சிலவற்றைக் கண்டுபிடித்து ஜப்தி செய்தார்கள். என் மோட்டார் காரும், என் மைத்துனருடையதும் ஏற்கெனவே ஜப்தி செய்யப்பட்டு விற்கப்பட்டன.

இந்த ஆரம்ப மாதங்களில் சம்பவித்த ஒரு விஷயத்தால் எனக்கு மிகவும் வருத்தம் உண்டாயிற்று. அநேக நகர சபைகளும் பொது ஸ்தாபனங்களும் நம்முடைய தேசியக் கொடியைக் கீழே இறக்கி விட்டன. பெரும்பான்மையான காங்கிரஸ் அங்கத்தினர்களிருந்த கல்கத்தா கார்ப்பொரேஷன்கூட கொடியைக் கீழே இறக்கிவிட்டது. கொடியைக் கீழே இறக்காமல் விட்டால் கடுமையான நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்படும் என்று போலீஸாரும் அதிகாரிகளும் நிர்ப்பந்தம் செய்யவே கொடி கீழே இறக்கப்பட்டது. நகர சபையைத் தற்காலிகமாக அரசாங்கத்தார் கலைத்து வைத்திருக்கலாம்; அல்லது நகரசபை அங்கத்தினர்களைத் தண்டனைக்குள்ளாக்கி யிருக்கக்கூடும்.

சொத்தும் பரம்பரை உரிமைகளும்கொண்ட அமைப்புகள் கோழைகளாகத்தான் இருக்கமுடியும். இப்படித்தான் அவைகளால் செய்யமுடியும். இருந்தாலும் அது எனக்கு பெரிய வேதனையைத் தந்தது. நாங்கள் அருமையாக மதித்த பலவற்றின் அறிகுறியாக அந்தக் கொடி திகழ்ந்தது. அதனுடைய நிழலின் கீழ் நின்றுகொண்டு அதனுடைய கௌரவத்தைக் காப்பாற்றுவோமென்று நாம் பல சமயங்களில் விரதமெடுத்துக் கொண்டிருக்கிறோம். நம் சொந்தக் கைகளாலே அதை இறக்குவதோ அல்லது நம்முடைய உத்தரவின்பேரிலே யாராவதொருவர் அதை இறக்கவோசெய்வதுஅந்த விரதத்தை முறிப்பதாகமட்டுமல்லாமல் அது ஒரு மகத்தான பாபமாகவும் எனக்குத் தோன்றிற்று. ஆத்மா அழிந்து விட்டதாகவும், நம்மிடம் சத்தியமில்லை யென்று சொல்வது போலவும் தோன்றிற்று. ஏராளமாக தேகவலுவைக் காண்பித்து பயமுறுத்தினல் பொய்யை ஒப்புக்கொள்ளவேண்டும் என்பதுபோல தொனித்தது. இந்த வகையில் வணங்கிக் கொடுத்த யாவரும் நாட்டின் நற்பெயரைக் கெடுத்து அதனுடைய தன்மதிப்பை பங்கப்படுத்தி விட்டார்கள்.

அவர்கள் வீரர்களாக நடந்துகொண்டு தீயில் குதிக்க வேண்டும் என்று ஒருவரும் எதிர்பார்க்கவில்லை. முன்ன

ணியில் நின்று ஜெயிலுக்குப் போகவில்லையென்றுவது வேறு எவ்வித துன்பத்தையோ நஷ்டத்தையோ ஏற்கவில்லையென்று வது யாரையும் குறை கூறுவது அபத்தமாகும். ஒவ்வொரு வருக்கும் எத்தனையோ கடமைகளும் பொறுப்புகளும் உண்டு. எனவே அவர்மீது தீர்ப்பு சொல்ல யாருக்கும் பாத்தியம் கிடையாது. பின்னால் நின்று வேலை செய்வதோ அல்லது சும்மா இருப்பதோ ஒரு சங்கதி. ஆனால் உண்மையை மறுத்து அதைக் கைவிட்டுவிடுவது மிகவும் கேவலமான சங்கதியாகும். தேசநலத்துக்கு விரோதமாக ஒன்றைச் செய்யவேண்டுமென்று நகரசபை அங்கத்தினர்கள் ஏவப்பட்டார்களாகில் அவர்கள் தங்கள் ஸ்தானங்களை ராஜினமா செய்திருக்கலாம். ஆனால் அந்த ஸ்தானங்களைக் கெட்டியாகப்பற்றிக்கொண்டு அவர்கள் அமர்ந்திருந்தார்கள். "வண்டுகள் பூவில் உட்கார்ந்ததும் தங்கள் ரீங்காரங்களை நிறுத்திவிடுகின்றன. அதுபோலவே சீர்திருத்தக்காரர்களுக்கு பதவிகள் கிடைத்தால் அவர்கள் வாயடைத்துப் போகிறார்கள்".

திடீரென்று நெருக்கடியான நிலைமை எதிர் நின்று பயமுறுத்துங் காலையில் ஏதோ ஒருவகையாக ஒருவன் நடந்துகொண்டால் அவனைக் கண்டிப்பது அநியாயமாக இருக்கலாம். மகா தைரியசாலிகள்கூட சில சமயங்களில் கலங்கிப் போகிறார்கள் என்பது சென்ற மகா யுத்தத்தில் அடிக்கடி நிரூபணமாயிற்று. அதற்கு முன் 1912-ம் வருஷத்தில் "டைடானிக்" என்ற பெரிய கப்பல் மூழ்கும்பொழுது கோழை என்று ஒருகாலும் சொல்லமுடியாத பெரியார்களிற் சிலர் கப்பல் சிப்பந்திகளுக்கு லஞ்சம் கொடுத்து தப்பித்துக்கொண்டு மற்றவர்கள் மூழ்கிப்போகும்படியாக விட்டுவிட்டார்கள். சமீப காலத்தில் "மோரோகேஸில்" என்ற கப்பலில் தீப்பிடித்து எரிந்தபொழுது மிகவும் கேவலமான நிலைமை வெளித்தோன்றிற்று. விவேகத்தையும், அடக்கத்தையும் அழிக்கும்படியான மிருக உணர்ச்சிகள் மேலெழுகிற காலையில் நெருக்கடியில் ஒருவன் எவ்வாறு நடந்துகொள்வான் என்று யாருக்குமே தெரியாது.

எனவே நாம் யாரையும் குறை கூறவேண்டாம். ஆனால் சரியான நடத்தையிலிருந்து தவறிப்போனதைக் குறித்துக் கொண்டு எதிர்காலத்தில் நாட்டை நடத்தும் பொறுப்பை

அச்சத்தால் நடுங்கும் கைகளில் கொடுக்கக்கூடாதென்பதை அறிந்துகொண்டு அதன்படி நடக்கவேண்டியது அவசியம். இவ்வாறு தவறிப்போனதற்கு சமாதானம் சொல்லி அதைச்சரியான செயல் என்று கொண்டு செலுத்தப்பார்ப்பதுதான் மகாக்கேவலமாகும். அது தோல்வியைக்காட்டிலும் மகத்தான குற்றமாகும்.

எதிரிடையான இரண்டு சக்திகள் ஒன்றையொன்று தாக்கிக்கொண்டு போராடுமாகில் வெற்றி உறுதியான நெஞ்சமும், திடமான நரம்பும் படைத்தோருக்கே கிடைக்கும். பயங்கரமான யுத்தத்திலும் இதைத்தான் காணலாம். இறுதிக்கட்டத்தில் சண்டைகள் கெட்டியான நரம்புகளைக் கொண்டு ஜயிக்கப்படுகின்றன என்று பிரஞ்சு சேனாபதி பாக் சொன்னார். சாத்வீக யுத்தத்தில் இத்தகைய கெட்டி நரம்புக்கும், உறுதி உள்ளத்துக்கும் அதிகமாகத் தேவை இருக்கிறது. தன்னுடைய நடத்தையால் அந்த உறுதியைக் கெடுத்து நாட்டின் நரம்பைத் தளர்ச்சி செய்கின்றவன் இயக்கத்துக்கு மகத்தான கேட்டைச்செய்தவன் ஆகின்றான்.

இந்த மாதங்களில் ஒவ்வொரு நாளும் நல்ல செய்தியும் வரும்; கெட்ட செய்தியும் கிடைக்கும். எங்களுடைய வழக்கமான, சாரமில்லாத சிறை வாழ்க்கைக்கு எங்களைச் சரிப்படுத்திக்கொண்டோம். ஏப்ரல் 6-ந் தேதியிலிருந்து 13-ந் தேதிவரை தேசீய வாரம். இந்த வாரத்தில் பல அசாதாரண நிகழ்ச்சிகள் நேரும் என்று எங்களுக்குத் தெரியும். அவ்வாறே நடைபெறவும் செய்தன. ஆனால் அவைகள் எல்லாம் என் மனதில் பதியவில்லை. ஒரே ஒரு நிகழ்ச்சி மட்டும் என் மனதிலிருந்து வேறு எல்லாவற்றையும்விரட்டியடித்துவிட்டது.அலகபாத்தில்என் தாயார் ஒரு ஊர்வலத்திலிருந்தார். அந்த ஊர்வலத்தைப் போலீசார் தடுத்தார்கள். பின்னர் தடியடிப் பிரயோகமும் செய்தார்கள். ஊர்வலம் நிறுத்தப்பட்டவுடனே யாரோ ஒருவர் அம்மாவுக்கு நாற்காலியொன்றை கொண்டுவந்து போட்டார். ஊர்வலத்தின் முன்னணியில், ரஸ்தாவில் நாற்காலியில் அம்மா உட்கார்ந்திருந்தார். தாயாரைக் கவனித்து பந்தோபஸ்தாக வைத்துக்கொண்டிருந்த சிலர் என் காரியதரிசியுள்பட கைது செய்யப்பட்டு அவ்விடத்திலிருந்து



பண்டித மோதிலால் நேருவின் மனைவி ஸ்ரீமதி ஸ்வரூப ராணி

வெளியேற்றப்பட்டார்கள். பிறகு போலீசார் தடியடிப் பிரயோகம் செய்தார்கள்.

என்னுடைய தாயாரை அவள் உட்கார்ந்திருந்த நாற்காலியிலிருந்து கீழே தள்ளிவிட்டார்கள். அவருடைய தலையில் விடாமல் பிரம்புகளால் அடித்தார்கள். தலையிலே காயம் ஏற்பட்டு அதனின்றும் இரத்தம் பெருகிற்று. அவர் மூர்ச்சையாகி ரஸ்தாவில் கிடந்தார். ரஸ்தாவிலே அப்பொழுது ஊர்வலமாவது பொது ஜனங்களாவது இல்லை. எல்லோரையும் போலீசார் அடித்துத் துரத்திவிட்டார்கள். கொஞ்ச நேரம் கழித்து போலீஸ் அதிகாரி ஒருவர் அவரைத் தூக்கி தமது காரில் வைத்துக்கொண்டு ஆனந்தபவனம் சேர்த்தார்.

என்னுடைய தாயார் இறந்துபோனதாக பொய்வதந்தி ஒன்று அலகபாத்தில் அன்றிரவு பரவியது. ஆத்திரம் கொண்ட கூட்டங்கள் சேர்ந்துகொண்டு சாத்வீகத்தையும், அமைதியையும் அடியோடு மறந்து விட்டு போலீசாரைத் தாங்கினார்கள். போலீசார் துப்பாக்கிப் பிரயோகம் செய்தார்கள்; சிலர் மாண்டுபோனார்கள்; இந்தச்செய்தி எல்லாம் இது நிகழ்ந்த சில நாட்கள் கழித்து ஒரு வாரப்பத்திரிகை மூலமாக எனக்குத் தெரிந்ததும், அந்தத் தூசி நிறைந்த ரஸ்தாவில் என்னுடைய மெல்லிய கிழப் பருவம் வாய்ந்ததாயார் இரத்தம் வரும்படியாக படுக்க நேர்ந்ததே என்ற எண்ணம் என்னை மிகுதியும் வருத்தியது. நான் அங்கே இருந்திருந்தால் எவ்வாறு நடந்திருப்பேன் என்பதைப்பற்றி ஆலோசித்துப்பார்த்தேன். என்னுடைய சாத்வீகம் என்னை எவ்வளவு வரையில் கட்டுப்படுத்தி இருக்கும்? கொஞ்ச அளவில் கூட இருக்கமுடியாது. சென்ற பன்னிரண்டு வருஷங்களாக நான்சாத்வீகத்தில்அதிகமாகப் பயிற்சிசெய்துகொண்டிருந்த போதிலும், அதைமறந்து விடும்படியாக அந்தக் காட்சி என்னைச் செய்திருக்கும். எனக்கோ தேசத்துக்கோ என்ன நேருமென்பதைப்பற்றி, அத்தருணம் நான் கவலைப்பட்டிருக்கமாட்டேன்.

சிறிது சிறிதாக தாயார் குணமடைந்தார். அடுத்த மாதம் பாரில்லி ஜெயிலுக்கு அவர் என்னைப் பார்க்க வந்தபொழுது தலைக்கட்டுடன்தான் இருந்தார். ஆனால் நம்

முடைய தொண்டர் பையன்களோடும் சிறுமிகளோடும் தடி யடிப் பிரயோகத்தில் கலந்து கொண்டு அடியை அனுபவிக் கும் பாக்கியம் தமக்குக் கிடைத்ததற்காக அவர் மகிழ்ச்சி நிறைந்து, கர்வத்தோடு இருந்தார். தோற்றத்திலே அவர் குணமடைந்தாரேயொழிய,உண்மையாக குணமடையவில்லை. அந்த வயதில், நரம்புகள் பயங்கரமாக ஆட்டப்பட்டதால், அவருடைய தேகமே உருக்குலைந்து போய், காயமான சில உபாதிகளை வெளித்தோற்றிவிட்டது. இந்த உபாதிகள் ஒருவருஷம் கழித்து பயங்கரமான நிலைமைக்கு வந்துவிட் டன.

# XLIII

## பெரில்லி, டேராடூன் சிறைகளில்

நைனி சிறையில் ஆறு வாரமிருந்த பிறகு, நான் பெரில்லி ஜில்லா ஜெயிலுக்கு மாற்றப்பட்டேன். மீண்டும் இப்பொழுதுகொஞ்சம் உடம்பு சரியாயில்லை. ஒவ்வொருநாளும் சிறிதளவு காய்ச்சல். இதைக்கண்டு எனக்கு ஆத்திரம். கடுங்கோடையாயிருந்த காலத்தில் நான்கு மாதம் பெரில்லியில் கழித்தபின்னர் இமயமலையின் அடிவாரத்திலிருக்கும் சீதளமான டேராடூன் சிறைக்கு மீண்டும் மாற்றப்பட்டேன். அங்கேயே நிலைத்ததாக, என்னுடைய இரண்டுவருஷ தண்டனையில் சுமார் $14\frac{1}{2}$ மாதம் வரையில் இருந்தேன். பேட்டி, கடிதங்கள், பொறுக்காக வந்த பத்திரிகைகள் இவைகளின் மூலமாக எனக்கு செய்திகள் கிடைத்துக்கொண்டிருந்தன. ஆனால் வெளியே நடப்பது ஒன்றும் எனக்குத் தெரியவில்லை. முக்கியமான நிகழ்ச்சிகள் தான் அப்படியும் இப்படியும் தெரியும்.

நான் விடுதலையானபொழுது என் சொந்த விஷயங்களில் சிறிது ஈடுபட்டு இருந்தேன். அப்பொழுதிருந்த அரசியல் நிலைமையையும் கவனித்துக் கொண்டிருந்தேன். ஐந்து மாதகாலம் சுதந்திரத்தோடு இருந்த பின்னர் மீண்டும் சிறைக்குக் கொண்டுவரப்பட்டு இப்பொழுது இங்கே வசித்து வந்தேன். எனவே, சென்ற மூன்று வருஷங்களில், பெரும்பான்மைக் காலத்தை சிறையிலே போக்கி வந்தேன். ஆதலால் வெளியே நடந்தது சரிவரத் தெரியாது. இந்தக் காலத்தில் நேர்ந்த எல்லாவற்றையும் விவரமாகத் தெரிந்து கொள்வதற்கு எனக்கு சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. காந்திஜீ போயிருந்த இரண்டாவது வட்டமேஜை மகாநாட்டில், திரைக்குப் பின்னே என்ன நேர்ந்தது என்பது விவரமாக இப்பொழுதும் எனக்குத் தெரியாது. இது சம்பந்தமாக காந்திஜீயிடம் கலந்து பேசவும், பொதுவாக அவரிடமும் மற்றவர்களிடமும் பின்னர் நாட்டில் நேர்ந்தவைகளைப்

பற்றி கலந்துகொள்ளவும் எனக்குச் சந்தர்ப்பமே கிடைக்கவில்லை.

நம்முடைய தேசிய இயக்கம் 1932-33-ம் வருஷங்களில் எவ்வாறு போய்க்கொண்டிருந்தது என்பதைத் திட்டமாக நிர்ணயிக்க போதுமான விவரங்கள் எனக்குத் தெரியாது. ஆனால் நிகழ்ச்சிகளின் போக்கும், அதற்கு இருந்த பின்வலுவும், போராட்டமேடையில் நடித்த பேர்வழிகளும், எனக்குத் தெரியும். எனவே நேர்ந்த பல சிறு நிகழ்ச்சிகளைக்கூட உள்ளபடியே மதிப்பிட என்னால் முடிந்தது. பொதுவாக போராட்டம் இப்படித்தான் போயிருக்குமென்று என்னுள் நிதானம் செய்துகொண்டேன். முதல் நான்கு மாதகாலம் வரையில் சட்டமறுப்பு திறமையோடும் சுறுசுறுப்போடும் நடந்து வந்தது. பிறகு சிறிது சிறிதாக குறைந்துபோய் இடையிடையே தலைதூக்கிற்று. நேர் போராட்டத்தில் சிறிது காலத்துக்குத்தான் புரட்சி யுற்சாகத்தை வைத்துக்கொண்டிருக்க முடியும். அந்த உற்சாகம் நிலைத்ததாக ஒரே படியில் இருக்க முடியாது. அது ஏற வேண்டும் அல்லது இறங்கவேண்டும். முதல் பிரவாகத்துக்குப் பின்னர், சட்டமறுப்பு சிறிது தளர்ந்து போயிற்று. ஆனால் அதே ரீதியில் இருந்து கொண்டு நீண்ட காலம் அது நடைபெற்றிருக்க முடியும். சட்டம் மீறியது என்று அறிவிக்கப்பட்டபோதிலும், அகில இந்திய காங்கிரஸ் அமைப்பு ஓரளவு வெற்றியோடு வேலை செய்துகொண்டே வந்தது. அதற்கும் மாகாண ஊழியர்களுக்கும் தொடர்பு விட்டுப் போகவில்லை. அடிக்கடி யோசனை சொல்லிக் கொண்டே வந்தது. சில சமயங்களில் மாகாணங்களுக்கு பண உதவியும் செய்தது. மாகாண நிகழ்ச்சிகளைப்பற்றி அதற்கு அடிக்கடி ரிப்போர்ட்டுகள் வந்து கொண்டிருக்கும்.

மாகாண அமைப்புகளும் கூடுமான வரையில் ஒழுங்காக வேலை செய்து கொண்டு வந்தன. நான் சிறையிலிருந்த வருஷங்களில் மற்றைய மாகாணங்களைப்பற்றி எனக்கு அதிகமாகத் தெரியாது. ஆனால் நான் விடுதலையான பிறகு ஐக்கிய மாகாணங்களில் நேர்ந்தவைகளைப்பற்றிய விவரங்களைச் சேகரித்தேன். ஐக்கிய மாகாண காங்கிரஸ் காரியாலயம் 1932-ம் வருஷம் முழுதும் 1933-ம் வருஷம் மத்தி வரையிலும் ஒழுங்காக வேலை செய்து கொண்டு வந்தது.

1933-ம் வருஷ மத்தியிலேதான் காந்திஜீயின் யோசனையின் பேரில் அப்பொழுதிருந்த தாற்காலிக காங்கிரஸ் தலைவர் முதன் முதலாக சட்ட மறுப்பை நிறுத்தி விட்டார்.

இந்தக் காலத்தில் அடிக்கடி ஜில்லாக்களுக்கு தாக்கீதுகள் அனுப்பப்பட்டு வந்தன. அச்சடித்தோ, கையால் எழுதியோ பிரசுரங்கள் ஒழுங்காக வெளிப் படுத்தப்பட்டன. ஜில்லாக்களின் வேலை காலா காலங்களில் சோதிக்கப்பட்டு வந்தது. நம்முடைய தேசத் தொண்டர்களுக்கு ஒழுங்காக சம்பளம் கொடுக்கப்பட்டு வந்தது. இந்த வேலையைப் பெரும்பான்மை இரகசியமாகவே செய்ய நேர்ந்தது. ஆனால் மாகாண கமிட்டியின் காரியதரிசி (காரியாலய நிர்வாகி) காரியதரிசி என்ற ஹோதாவில் பகிரங்கமாக வேலை செய்து வந்தார். அவர் கைது செய்யப்பட்டு சிறைக்கு கொண்டு செல்லப்பட்டதும் இன்னொருவர் அவரிருந்த ஸ்தானத்திற்கு வந்து சேருவார்.

இந்தியா முழுதும் இரகசிய அமைப்புகள் மூலமாக செய்திகளை எளிதிலே பரப்ப முடியும் என்பது நம்முடைய 1930-32-ம் வருஷத்திய அனுபவத்தினின்றும் நன்ருகத் தெரிந்தது. அதிகமான முயற்சி இல்லாமல் சிறிதளவு எதிர்ப்பு இருந்த போதிலும் நல்ல பயன்கள் கிடைத்தன. ஆனால் இரகசியத்துக்கும் சட்ட மறுப்பின் நோக்கத்துக்கும் பொருந்தியதல்ல வென்றும் பொது மக்களின் மனதில் இரகசிய நடவடிக்கைகளால் குழப்பம் உண்டாகிறதென்றும் எங்களில் பலர் எண்ணினர்கள். இந்த இரகசியத்தை மகத்தான பொதுஜன இயக்கத்தின் ஒரு சிறு பகுதியாக வைத்துக்கொண்டு வேலை செய்தால் அது உபயோகமாயிருக்கலாம். ஆனல் இயக்கம் தளர்ந்து வருகிற சமயத்தில் ஆபத்து உண்டாகிவிடும். பெரிய பொதுஜன இயக்கத்துக்குப் பதிலாக இரகசியமாக பயனற்ற சில சில்லறை நிகழ்ச்சிகள் நேர்ந்து விடும். எத்தகைய இரகசியமும் கூடாதென்று 1933-ம் வருஷம் ஜூலை மாதம் காந்திஜீ கண்டித்தார்.

வரிகொடா இயக்கங்கள் சில காலத்துக்கு ஐக்கிய மாகாணத்தில் தவிர, குஜராத்திலும் கர்னடகத்திலும் நடைபற்று வந்தன. குஜராத்திலும் கர்னடகத்திலும் சில்லரை மிராசுதார்கள் ஏராளம். அவர்கள் அரசாங்கத்துக்கு

வரி கொடுக்க மறுத்து விட்டார்கள். அதனால் அதிகமான கஷ்டத்தை அவர்கள் அனுபவிக்க நேர்ந்தது. சொத்து பறிமுதலாலும் வெளியேற்றங்களாலும் ஏற்பட்ட துயரத்தைப் போக்கி கஷ்டப்படுபவர்களுக்கு ஒத்தாசை செய்வதற்காக காங்கிரஸ் சிறிது முயற்சி செய்து பார்த்தது. உதவி போதவில்லை. ஐக்கிய மாகாணத்திலோ, காங்கிரஸ் இத்தகைய ஒத்தாசையை நிலமிழந்த விவசாயிகளுக்குச் செய்ய முயலவில்லை. ஐக்கிய மாகாணத்தில் சில்லரை மிராசுதார்களைவிட பயிரிடும் குடியானவர்கள்தான் அதிகம். எனவே இந்த மாகாணத்தில் பிரச்னை வேறு வகையானது. மேலும் ஐக்கிய மாகாணம் மிகவும் விஸ்தாரமான பிரதேசம். எங்கள் கையிலிருந்த பணமோ ரொம்ப சொற்பம். ஒத்தாசையைப் பற்றி நினைக்கவே முடியாது.

போராட்டத்தினால் கஷ்டத்துக்காளான ஆயிரக்கணக்கானவர்களுக்கு ஒத்தாசை செய்வதென்பது எங்களுக்கு சாத்தியப்படாத சங்கதியாகும். இவர்களையும், எப்பொழுதுமே அநேகமாக பட்டினி கிடக்கும் குடியானவர்களையும், வித்தியாசப்படுத்தி ஒத்தாசை செய்வதென்பதும் முடியாத காரியம். சில ஆயிரம் பேர்களுக்கு மட்டும் ஒத்தாசை செய்வதாயிருந்தால் அதனால் மனக் கசப்பும், இரத்தக் கொதிப்பும் ஏற்பட்டிருக்கும். எனவே பண ஒத்தாசை செய்ய முடியாதென்று நாங்கள் தீர்மானித்துக் கொண்டோம். இந்த சங்கதியை துவக்கத்திலேயே நாங்கள் நன்றாக விளம்பரப்படுத்தி விட்டோம். எங்களுடைய நிலைமையை விவசாயிகள் நன்றாக உணர்ந்து கொண்டு சரியென்று சொல்லி விட்டார்கள். யாதொரு குறை கூறுதலும் முணுமுணுப்புமின்றி, அவர்கள் எவ்வளவு சகித்துக் கொண்டிருந்தார்கள் என்பது ஆச்சரியமாகும். ஏதோ எங்களால் முடிந்ததை சிலருக்கு செய்தோம். சிறைக்குச் சென்ற சிலரின் மனைவிகளுக்கும் குழந்தைகளுக்கும் கொஞ்சம் பண உதவியளித்தோம். இந்த துர்ப்பாக்கியமானதேசத்தின் தரித்திரத்தை என்னவென்று சொல்லுவது? மாதம் ஒரு ரூபாய் கொடுத்து ஒத்தாசை செய்தால்கூட, அது மிகவும் பெரிதாகக் கருதப்படுகிறது.

ஐக்கிய மாகாண காங்கிரஸ் கமிட்டி தன் கீழ் சம்பளம் வாங்கி வேலைசெய்யும் ஊழியர்களுக்கு இந்தக் காலம்

முழுதும் தவருமல் (கொஞ்சமாயிருந்தாலும்) சம்பளப் படியை நிறுத்தாமல் கொடுத்துக் கொண்டே வந்தது. ஊழியர்கள் சிறைக்குச் சென்ருல் (அவர்கள் எல்லோரும் சிறைக்குப் போய்விட்டார்கள்) அவர்களுடைய சம்பளம் அவர்களுடைய குடும்பங்களுக்குக் கொடுக்கப்பட்டு வந்தது. எங்களுடைய வரவு செலவு திட்டத்தில் இதுதான் முக்கியமான இனம். பிரசுரங்களை அச்சடிப்பதற்கும் ஆயிரக் கணக்கில் கையெழுத்துப் பிரதிகளைத் தயார் செய்வதற்கும் பணம் செலவாயிற்று. இந்தத் தொகையும் பெரிய தொகைதான். பிரயாணச் செலவுகளினுல் கொஞ்சம் பணம் செலவாயிற்று. செழிப்பில்லாத சில ஜில்லாக்களுக்கு கொஞ்சம் அதிகமாக பண ஒத்தாசை செய்ய வேண்டி வந்தது.

காங்கிரசோ வல்லமை பொருந்திய அரசாங்கத்தோடு நீண்டகாலம் சாத்வீகப் போர் நடத்தி வந்தது. இதற்காக மேலே குறிப்பிட்ட பல இனங்களில் பணம் செலவழிக்க நேர்ந்தது. அப்படிக்கிருந்தும் 1932 ஜனவரியிலிருந்து 1933 ஆகஸ்ட்டு வரையிலும் ஐக்கிய மாகாண காங்கிரஸ் கமிட்டி மொத்தத்தில் 63000 ரூபாய் செலவழித்தது. அதாவது மாதம் 3140 ரூபாய் (அலகபாத் ஆக்ரா கான்பூர் லக்ஷ்மணபுரிபோன்ற செழிப்பான ஜில்லாக்களில் வலுவான காங்கிரஸ் கமிட்டிகள் துண்டாக செலவழித்த பணம் மேற்சொன்ன தொகையில் சேரவில்லை.) 1932-33 வருஷங்களில் சட்டமறுப்புப் போராட்டம் நிறுத்தப்படும்வரையில், ஐக்கிய மாகாணம் முன்னணியில் நின்று போராடிற்று. போராட்டத்தின் நிகழ்ச்சிகளைத் தொகுத்துப் பார்த்தால், அவைகளுக்கான செலவு எவ்வளவு குறைவு என்பதை நினைக்க ஆச்சரியமாக இருக்கிறது.

சட்டமறுப்பு இயக்கத்தை நசுக்க மாகாண அரசாங்கத்தார் எவ்வளவு பணம் செலவழித்தார்கள்? அந்தத் தொகையோடு காங்கிரஸின் அடக்கமான தொகையை ஒப்பிட்டுப் பார்த்தால் ரொம்ப வேடிக்கையாய் இருக்கும். வேறு சில பெரிய காங்கிரஸ் மாகாணங்கள் அதிகமாகப் பணம் செலவழித்திருக்கக் கூடுமென்று நான் எண்ணுகிறேன். இதைப்பற்றித் திட்டமாக நான் ஒன்றும் சொல்ல முடியாது. காங்கிரஸின் மதிப்பில் பீகார் மாகாணம் ஐக்

கிய மாகாணத்தைவிட மிகவும் ஏழையானதாகும். ஆனல் போராட்டத்தில் அது வியக்கத்தக்க முறையில் பங்கெடுத்துக் கொண்டது.

சட்ட மறுப்பு இயக்கம் கொஞ்சம் கொஞ்சமாக தளர்ந்து கொண்டே போயிற்று. என்ருலும் அடியோடு நின்று போகவில்லை. குறிப்பிடத்தக்க நிகழ்ச்சிகளும் நேர்ந்தன. ஆனல் கொஞ்சம் கொஞ்சமாக பொதுஜனப் போராட்டம் என்ற தன்மை மாறிவிட்டது. அரசாங்கத்தின் அடக்குமுறை ஒரு புறமிருக்க, ஹரிஜன பிரச்னைக்காக முதன்முதலாக காந்திஜீ 1932-ம் வருஷம் செப்டம்பர் மாதம் உண்ணுவிரத மிருந்தபொழுது, சட்டமறுப்பியக்கத்துக்கு கடுமையாக முதல் அடி விழுந்தது. அந்த விரதத்தினுல் பொதுஜனக் கிளர்ச்சி ஏற்பட்டது; ஆனல் அது வேறு துறையில் சென்றது.

1933-ம் வருஷம் மே மாதத்தில் சட்டமறுப்பை நிறுத்தியபொழுது, அது அநேகமாக கொல்லப்பட்டு விட்டது என்றே சொல்லலாம். அதன் பின்னர் வாசா கைங்கரியத்தில் நடைபெற்றதே ஒழிய, அநுபவத்தில் நடைபெறவில்லை. போராட்டத்தை நிறுத்தாமல் போனலுமே, அது தாளுகவே கொஞ்சம் கொஞ்சமாய் மங்கிப் போயிருக்குமென்பது உண்மைதான். அடக்குமுறையின் கொடுமையாலும் பலாத்காரத்தாலும் இந்தியா ஸ்தம்பித்துப் போய் நின்று விட்டது. நரம்பின் சக்தி, தாற்காலிகமாக, நாட்டாருக்கு இல்லாமற் போய்விட்டது. அந்தச்சக்தியை மீண்டும் கொண்டு வந்து தாக்கவில்லை. சட்ட மறுப்பியக்கம் என்று பேர் வைத்துக் கொண்டு, தனிப் பேர்வழிகள் சிறைக்குச் சென்று கொண்டிருக்கலாம்; ஆனல் அது சாரமில்லாத வேலையாக இருந்திருக்கும்.

நமது பெரிய இயக்கம் இவ்வாறு மெதுவாக சீர்குலைந்து வருவதை நாங்கள் சிறையில் கேட்டபொழுது எங்களுக்குத் துயரமுண்டாயிற்று. என்ருலும் மின்னலைப்போல வெற்றி கிடைக்கும் என்று நாங்கள் எதிர்பார்க்கவுமில்லை. பொதுஜனங்களுக்குள் அடக்கமுடியாத அளவில் எழுச்சி ஏற்பட்டு ஏதேனும் படீரென்று நேரலாமோ என்பதற்கு சந்தர்ப்பம் இருக்கக்கூடும் என்று மட்டும் நாங்கள் எண்ணு

வோம். ஆனால் அந்தச் சந்தர்ப்பத்தை நம்பி எதுவும் செய்யவில்லை. எனவே, மேடுபள்ளம் நிறைந்த கடுமையான போராட்டத்தைத்தான் கருத்தில் நினைத்துக் கொண்டோம். அடிக்கடி போராட்டம் செய்து பொதுஜனங்களைக் கட்டுப் பாட்டுக்கும் தெளிந்த லட்சியத்துக்கும் ஆளாக்கி அவர்கள் ஒன்று சேர்ந்து காரியம் செய்யவேண்டும் என்பதைப் பழக்கிக் கொடுப்பது தான் எங்கள் நோக்கம்.

சில சமயங்களில், 1932-ம் வருஷத் துவக்கத்தில், விரைவில் ஆடம்பரமான வெற்றி நேர்ந்துவிடுமோ என்று நான் பயப்பட்டதுமுண்டு. இவ்வாறு வெற்றி கிடைத்தால் சர்க்கார் தாஸர்களும் சமயோஜித வாதிகளும் உச்சியில் நின்று கொண்டு அதிகாரம் செலுத்தத் துவக்கிவிடுவார்கள். 1931-ம் வருஷத்திய அனுபவத்திலிருந்து இது நன்ருகத் தெரிந்த சங்கதி. ஜனங்கள் பொதுவாக வல்லமையுடனிருந்து, தெளிவான கருத்துகளுடன், கிடைக்கும் வெற்றியை நல்ல லாபகரமாக உபயோகப்படுத்தத் தெரிந்துகொண்டிருந்தால்தான் வெற்றியால் நன்மை உண்டு. அப்படி இல்லாவிட்டால் பொது ஜனங்கள் போராடி தியாகம் செய்துகொண்டிருக்கையில், சரியான சந்தர்ப்பம் பார்த்து, மற்றவர்கள் நேர்த்தியாகப் பிரவேசம் செய்து கிடைத்த பலன்களைத் தாங்கள் அனுபவிக்கத் துவக்கி விடுவார்கள். இந்த ஆபத்து எப்பொழுதும் இருந்தது. காங்கிரஸிலும் தெளிவான யோசனை இல்லை. வரப்போகிற அரசியலை எப்படி அமைக்கவேண்டும் என்றும் ஜனசமூகத்தில் எத்தகைய மாறுதல்களைச் செய்ய வேண்டுமென்றும் தெளிவாக யாரும் யோசனை செய்யவே இல்லை. இப்பொழுது இருக்கும் அரசியல் முறையை அதிகமாக மாற்றுவதற்கு சில காங்கிரஸ் வாதிகள் விரும்பவில்லை. வெள்ளைக்கார உத்தியோகஸ்தர்களுக்குப் பதிலாக சுதேசிப் பேர்வழிகளைப் போடுவதே ஸ்வராஜ்ய மென்பது அவர்களின் கருத்து.

சுத்தமான சர்க்கார் தாசர்களைப்பற்றி அதிகக் கவலை இல்லை. அவர்களுடைய முதல் கொள்கை, எத்தகைய அரசியல் அமைப்பு இருந்தாலும், அதற்குப் பணிந்து நடக்க வேண்டும் என்பதுதான். மிதவாதிகளும் பரஸ்பர ஒத்துழைப்பாளர்களும்கூட பிரிட்டிஷ் அரசாங்கத்தின் திட்டத்தையே அநேகமாக ஒப்புக் கொண்டார்கள். எனவே

அவர்கள் ஏதோ சில சமயம் அரசாட்சியைக் கண்டித்தாலும் அந்தக் கண்டனம் மதிப்பில்லாமலும் பயனற்றும் போய் விடுகிறது. அவர்கள் எக்காலத்திலும் சட்டத்துக்கு பக்தர்கள். எனவே அவர்கள் சட்டமறுப்பை வரவேற்க முடியாது. ஆனால் அத்தோடு நிற்காமல், அவர்கள் எல்லை கடந்து, அரசாங்கத்துடன் இரண்டறக்கலந்துவிட்டார்கள்.

சுதந்திரங்கள் முழுதும் பறிபோவதைக் கண்டு, அவர்கள் திகிலடைந்து போனார்கள்; ஆனால் மௌனம் சாதித்தார்கள். சட்ட மறுப்பை எதிர்த்து அதை நசுக்கவேண்டும் என்பதுமட்டும் அரசாங்கத்தாரின் நோக்கமல்ல. எல்லாப் பொதுஜனக் கிளர்ச்சியையும் ஊக்கத்தையும் தடுத்துவிட வேண்டுமென்பது அரசாங்கத்தாரின் கருத்து ஆகும். மிதவாதிகள் இதைக் கண்டிக்கவில்லை. இத்தகைய உரிமைகளை வேண்டி வழக்கமாக அவைகளுக்காகப் பாடுபடுபவர்கள் போராட்டத்தில் சிக்கிக்கொண்டுவிட்டார்கள். அரசாங்கத்தின் பலாத்காரத்துக்கு பணியமுடியாதென்று அவர்கள் மறுத்து விட்டதால், அவர்கள் தண்டனை பெற்றார்கள். மற்றவர்களோ அரசாங்கத்தின் பயமுறுத்துதலால் திகிலடைந்துபோய் கண்டிப்பதற்குக்கூடத் தங்கள் குரல்களை உயர்த்தவில்லை. லேசாக அவர்கள் கண்டித்தபொழுதும்கூட மன்னிப்புகேட்பதுபோலிருந்தது. காங்கிரசையும் போராட்டத்தை நடத்துபவர்களையும் வாய்கொண்ட மட்டும் திட்டிவிட்டு, பிறகு அரசாங்கத்தை இவர்கள் ஜாடையாகக் கண்டிப்பார்கள்.

மேனாடுகளில் உரிமைகளின் பொருட்டு வலுவான பொதுஜன அபிப்பிராயம் ஆக்கப்பட்டிருக்கிறது. நபர் உரிமைக்கு எங்கேனும் பழுதுநேருமாயின் அங்கே ஆத்திரத்தையும் எதிர்ப்பையும் காணலாம். (ஒருக்கால் இது பழைய சரித்திரமாயிருக்கலாம்) பலர் தாங்களே நேர்முறைப் போராட்டத்தில் கலந்துகொள்ளத் தயாராயில்லாவிட்டாலும் பேச்சு சுதந்திரத்திலும் எழுத்து சுதந்திரத்திலும் போதுமான அளவு அக்கரை கொண்டிருக்கிறார்கள். கூட்டம் கூட்டும் உரிமை, அமைப்பை அமைத்துக்கொள்ளும் உரிமை, நபர் உரிமை, அச்சுக்கூடஉரிமை இவைகளுக்காக இடைவிடாமல் கிளர்ச்சிசெய்து. இவைகளின்பேரில் அரசாங்கம் ஆக்ரமிப்பு செய்து, ஒடுக்க முயற்சி செய்யுமாகில், அதைத் தடுக்க இவர்கள் உதவியாயிருப்பார்கள்.

இந்தியாவிலிருக்கும் மிதவாதிகள் பிரிட்டிஷ் லிபரல் கட்சி பரம்பரையைச் சேர்ந்தவர்களென்று சொல்லிக் கொள்ளுகிறார்கள். பெயரைத் தவிர இந்த இரண்டு கூட்டத்தாருக்கும் யாதொரு ஒற்றுமையும் கிடையாது. நபர் சுதந்திரங்கள் ஒடுக்கப்படும் பொழுது, மிதவாதிகள் அதைக் கொஞ்சமாவது எதிர்த்துப் போராடியிருக்கலாம். ஏனெனில் இந்தச் சுதந்திரப் பறிமுதலுக்கு இவர்களும் ஆளாகியிருக்கவில்லையா? ஆனால் இவர்கள் அந்தமாதிரி ஒன்றும் செய்யவில்லை. "நீ சொல்வதை நான் கொஞ்சம்கூட ஒப்புக்கொள்ளமாட்டேன். ஆனால் அதைச் சொல்வதற்கு உனக்கு உரிமை இருக்கிறதே, அந்த உரிமையை என் உயிரைக் கொடுத்தேனும் காப்பாற்றுவேன்" என்று வால்டேர் சொன்னதுபோல இவர்களால் சொல்ல முடியவில்லை.

இதற்காக அவர்களைக் குறைகூறுவது ஒருக்கால் நேர்மையில்லாமலிருக்கலாம். சுதந்திரம், ஜனநாயகம் முதலியவைகளின் ரக்ஷகர்கள் தாங்கள் என்று சொல்லிக் கொண்டு அவர்கள் வெளி வந்ததேயில்லை. மேலும் சட்ட மறுப்பு நெருக்கடியில், அவர்கள் ஏதாவதொரு வார்த்தையை யோசிக்காமல் பிரயோகம் செய்திருந்தாலும் அவர்களுக்குக் கஷ்டம் உண்டாயிருக்கலாம். சுதந்திர அபிமானிகளென்று நீண்டகாலமாக உலகக் கீர்த்திபெற்ற பிரிட்டிஷ் தொழிற்கட்சியாரும் இந்தியாவில் அடக்குமுறை கையாளப்பட்டதைப்பற்றி, என்ன நினைத்தார்கள் என்பதைக் கவனிப்பது பொருத்தமானதாகும். இந்தியாவில் கையாளப்பட்ட அடக்குமுறைகளை மனநிம்மதியோடு அவர்கள் நோக்கினார்கள். மாஞ்செஸ்டர் கார்டியன் பத்திரிகையின் நிருபர் ஒருவர் எழுதியதுபோல, அடக்குமுறை சாஸ்திரோக்தமாகக் கையாளப்பெறுவதைக் கண்டு அவர்கள் சில சமயங்களில் சந்தோஷப்பட்டார்கள்.

சமீபகாலத்துக்குமுன் பிரிட்டிஷ் தேசீய அரசாங்கத்தார் ராஜ நிந்தனைச் சட்டம் ஒன்றை ஆக்கிக்கொள்ள முயன்றார்கள். லிபரல்களும் தொழிற்கட்சியாரும் இதை மிகுதியும் எதிர்த்தார்கள். அவர்கள் கூறிய காரணம் என்ன? இந்தச் சட்டத்தினால் பேச்சு சுதந்திரம் குறைக்கப்படுகிறதென்றும் சோதனை போடுவதற்கு வாரண்டு விட மாஜிஸ்டிரேட்டுகளுக்கு அதிகாரம் கொடுக்கப்படுகின்றது என்றும்

காரணங்கள் சொல்லி எதிர்த்தார்கள். இந்த ஆட்சேபனையை நான் படித்தபோதெல்லாம், அதனிடம் எனக்கு அனுதாபம் ஏற்பட்டது. அதோடுகூட இந்தியாவின் காட்சியும் என் கண்முன்னே வந்தது. பிரிட்டிஷ் ராஜநிந்தனைச் சட்டத்தால் கேட்கும் அதிகாரங்களைக் காட்டிலும், நூறு மடங்கு அதிகமான கொடுமை கொண்ட அதிகாரங்களை அரசாங்கத்தாருக்குக் கொடுக்கும் சட்டங்கள் இன்றைக்கு இந்தியாவில் அமுலிலிருக்கின்றன.

ஒரு சிறிய பூச்சிக்காக இங்கிலாந்தில் வருந்தும் பிரிட்டிஷ்காரர்கள் மயிர் சிலிர்க்காமல் இந்தியாவில் ஒட்டகத்தை எவ்வாறு விழுங்குகிறார்கள் என்பதை நினைக்க ஆச்சரியமாயிருக்கிறது. தங்களுடைய இகலோக லாபங்களுக்குத் தக்கபடி தங்களுடைய தர்மசாஸ்திரங்களைப் பொருத்திவைத்துக்கொள்ளக்கூடிய அதிசயமான சக்தி பிரிட்டிஷ் பொது மக்களிடம் இருப்பதையும் அவர்களுடைய சாம்ராஜ்ய நோக்கங்களைப் பூர்த்தி செய்யக்கூடிய ஒவ்வொன்றிலும் தர்மம் நிறைந்திருப்பதாக அவர்கள் லாகவகமாக எண்ணிக் கொண்டிருப்பதையும் கண்டு நான் எப்பொழுதுமே ஆச்சரியப்படுகிறேன். நபர் சுதந்திரத்தைத் தாக்கிஜனநாயகத்தை அழித்துவிட்டார்கள் என்று பிரிட்டிஷார் நல்லெண்ணத்தோடும், ஆத்திரத்தோடும் முசோலினியையும், ஹிட்லரையும் கண்டிக்கிறார்கள். இதேமாதிரி இந்தியாவிலும் நபர் சுதந்திரம் பறிமுதல் செய்யப்படுகிறதென்றால் அதை "தேவை" என்று நினைக்கிறார்கள். இங்கிலீஷ்காரர்கள் யாதொரு பிரதிப் பிரயோஜனமுமில்லாமல் இவைகளையெல்லாம் செய்யவேண்டியிருக்கிறதென்று உயர்ந்த தர்ம சாஸ்திரம் பேசுகிறார்கள்.

இந்தியா தீப்பட்டு எரிந்து கொண்டிருக்கையில், நாட்டாரின் ஆத்மாக்கள் சோதனையில் ஈடுபட்டுக் கிடக்கையில், எட்டத்திலிருக்கிற லண்டன்மா நகரில் "பொறுக்கி எடுத்த பேர்வழிகள்" கலந்துகொண்டு, இந்தியாவுக்கு அரசியல் திட்டம் ஒன்றை வரைய ஏற்பாடு செய்துகொண்டிருந்தார்கள். மூன்றாவது வட்ட மேஜை மகாநாடு 1932-ம் வருஷத்தில் நடைபெற்றது. அங்கே அநேக கமிட்டிகள் வேலை செய்தன. இந்தக் கமிட்டிகளில் ஸ்தானங்கள் பெறுவதற்காக இந்தியா சட்டசபை அங்கத்தினர்களில்

பலர் தூண்டில் போட்டுக் கொண்டிருந்தார்கள். ஏனென்றால் பொதுஜன வேலையில் இங்கிலாந்துக்குப்போய், ஆனந்தமாக ஓய்வெடுத்துக் கொள்ளலாம் என்று எண்ணினார்கள்.

பொதுஜனப் பணத்தில் ஏகப்பட்ட கூட்டம் இந்தியாவை விட்டு பிரயாணமாகிப் போயிற்று. பின்னர் 1933-ம் வருஷத்தில் கூட்டுக்கமிட்டி நியமிக்கப்பட்டது. அதற்கு இந்தியாவிலிருந்து யோசனை கூறுபவர்கள் பலர் செல்ல வேண்டுமென்று மறுபடியும் காருண்ய கவர்ன்மெண்டார் அந்தக் கமிட்டியின் முன்னர் சாட்சியம் கொடுக்கச் சென்றவர்களுக்கு பிரயாணப் படிச்செலவு கொடுத்தார்கள். இந்தியாவுக்கு தொண்டுசெய்ய வேண்டுமென்ற உண்மையான ஆவலுடன் பொதுஜனப் பணத்தில் பலர் மீண்டும் கடல் கடந்து சென்றார்கள். பிரயாணப்படி அதிகமாக வேண்டுமென்று சிலர் பேரம் செய்தார்கள் என்றும் கேள்வி.

இந்தியாவில் நடைபெற்று வந்த பொதுஜனப் போராட்டங்களினால் திகிலடைந்து சொத்து பரம்பரை உரிமை முதலியவைகளுக்கு பிரதிநிதிகளாக இருந்த இவர்கள் பிரிட்டிஷ் சாம்ராஜ்யப் பாதுகாப்புக் கொடியின் கீழ், லண்டனில் சேர்ந்துகொண்டதில் ஆச்சரியமில்லை. எனினும், நமது தாய்நாடு உயிருக்காகப் போராட்டத்தில் ஈடுபட்டுக் கலங்கி நின்று தவிக்கையில், இந்தியன் ஒருவன் லண்டனுக்குச் சென்று இவ்வாறு நடந்து கொள்வதைக் காண நமது தேசீயத்தைக் கோல்கொண்டு குத்தினதுபோல் ஆயிற்று.

இன்னொரு நோக்கத்தைக் கொண்டு பார்த்தால், இந்த மாதிரி நேர்ந்தது நல்ல சங்கதி என்று எங்களில் பலருக்குத் தோன்றிற்று. இந்தச் செயலால் பிற்போக்காளர்கள் யார், தாராள நோக்கம் கொண்டவர்கள் யார் என்பதைக் கடைசி முடிவாகப் பிரிப்பது சுலபமாகிவிடும் என்று எங்களுக்குத் தோன்றிற்று.

இவ்வாறு பிரிக்கப்படுவதால் பொது ஜனங்களுக்கு அரசியல் அனுபவம் அதிகமாகக் கிடைத்து பூரண விடுதலையின் மூலமாகத் தான் ஜனசமூகப் பிரச்னைகளுக்குப் பரிகாரம் தேடி, பொது ஜனங்களை வருத்திவரும் சுமைகளை நீக்க

முடியும் என்பதை எல்லோருக்கும் தெளிவாக அறிவுறுத்த முடியும்.

தங்களுடைய தினசரி வாழ்க்கைகளில் மட்டுமல்லாமல் மனப்போக்கிலும், நடைப்போக்கிலும் இவர்கள் இந்தியப் பொது மக்களிடமிருந்து எவ்வளவு தூரம் விலகிப் போய்விட்டார்கள் என்பதைக் காண ஆச்சரியமாயிருந்தது. பொது ஜனங்களோடு அவர்களுக்கு தொடர்புகள் இல்லை. பொது ஜனங்களை அவர்கள் நேரே அறிந்து கொள்ளவுமில்லை. தியாகத்துக்கும், துன்பத்தை அனுபவிப்பதற்கும் தூண்டும் உள் வலிமைப் பிரவாகம் அவர்களிடம் துளிக் கூட இல்லை. ஒன்றே ஒன்றுதான் இந்தக் கீர்த்திபெற்ற ராஜ தந்திரிகளுக்கு உண்மையென்று கண்களில் பட்டது. "பிரிட்டிஷ் சாம்ராஜ்ய வல்லமையை எதிர்த்துப் போராடி வெற்றிபெற முடியாது. எனவே அதை முகமலர்ச்சியோடோ அல்லது முகச்சுளிப்புடனே ஒப்புக்கொண்டுதான் ஆகவேண்டும்" என்பது இவர்கள் கண்ட உண்மையாகும். இந்தியப் பொதுமக்களின் சம்மதத்தைப் பெறுமல் உயிருள்ள அரசியல் திட்டத்தை வரையவும், இந்தியாவின் பிரச்னையைத் தீர்க்கவும் அவர்களால் சற்றேனும் சாத்தியப்படாது என்பது இவர்களுக்கு மனத்தில் பட்டதாகத் தெரியவில்லை.

ஜே. எஸ். ஸ்பெண்டர் அவர்கள் "நம்முடைய காலத்திய சுருக்கமான சரித்திரம்" என்ற நூலைச் சமீபகாலத்துக்கு முன் எழுதியிருக்கிறார். அந்த நூலில் 1910-ம் வருஷம் கூடிய ஐரிஷ் கூட்டு மகாநாடு அரசியல் நெருக்கடியைத் தவிர்க்க முடியாமல் தோற்றுப்போனதைப் பற்றி அவர் குறிப்பிடுகிறார். "நெருக்கடியின் மத்தியில் அரசியல் அமைப்புத் திட்டத்தை வரைய முயலுபவர்கள் வீடு தீப்பற்றி எரியும்பொழுது இன்ஷ்யூர் செய்ய முயலும் மனிதர்களைப் போன்றவர்கள்" என்று அவர் சொல்லுகிறார். 1910-ம் ஆண்டில் அயர்லாந்திலிருந்ததைவிட 1932-33-ம் வருஷங்களில் இந்தியாவில் எரிந்துகொண்டிருந்த தீ மிகவும் பெரிதானதாகும். ஜ்வாலைகள் நின்றுபோனாலும், தகதகவென்று எரிந்து கொண்டிருக்கும் தணல் நீண்ட காலத்துக்கு நிலையாக இருந்து விடுதலைக்கு இந்தியாவின் மன உறுதித் தூண்டுதலாக அழியாமல், இருந்து கொண்டே இருக்கும்.

இந்தியாவில் அதிகாரிகளின் குழாத்தில் பலாத்கார உணர்ச்சி அபரிமிதமாக வளர்ந்து கொண்டே வந்தது. இந்த பலாத்காரப் பரம்பரை உணர்ச்சி மிகவும் புராதன மான சரக்குத்தான். இந்தியாவை போலீஸ் அரசாங்க மாகக் கருதி பிரிட்டிஷார் அநேகமாக ஆண்டு வந்தார்கள். சாதாரண அதிகாரியின் மனப்பான்மையில் கூட இராணு வத் தன்மைதான் தாண்டவமாடிற்று. ஜெயித்த நாட் டில் வெற்றி பெற்றவர்களின் சேனை இருந்துவரும் திருக் கோலக் காட்சியை சாதாரணமாக இந்தியாவில் காணலாம். அவர்களுடைய அரசியலமைப்புக்கு ஆபத்து வருமென்று தோன்றியபொழுது, இந்த இராணுவ மனப்பான்மை அதிகாரிகளிடம் வளர்ந்தது. வங்காளத்திலோ வேறு எங்கேயோ புரட்சிக்காரர்கள் ஒரொரு சமயம் காண்பித்த பலாத்காரம் அதிகாரிகளின் பலாத்கார மனப்பான்மையை வளர்த்து, அடக்குமுறைச் செயல்களுக்கு சமாதானம் சொல்லுவதாக இருந்தது. அரசியல் போக்கினாலும் அவ சரச் சட்டங்களாலும் அதிகாரிகளுக்கும் போலீஸ்காரர் களுக்கும் ஏராளமான அதிகாரங்கள் கொடுக்கப்பட்டு, இந்தியா போலீஸ் அரசாட்சியின் கீழ் வந்துவிட்டதென லாம். இந்த அதிகாரங்களுக்குத் தடைகளே இல்லை.

அநேகமாக இந்தியாவிலிருந்த எல்லா மாகாணங் களும் அடக்குமுறைத் தீயை மிதித்துச் செல்லவேண்டி யிருந்தது. ஆனால் எல்லைப்புற மாகாணமும், வங்காளமும் தான் மிகுதியும் கஷ்டப்பட்டன. எக்காலத்திலும் ராணு வத் திட்டத்தின்கீழ் நிர்வாகம் செய்யப்படும் மாகாணம் எல்லைப்புற மாகாணம். எல்லைப்புற மாகாணத்தின் இருப் பிடம் அந்நியப் படையெடுப்பு சம்பந்தமாக முக்கியமான தாகும். செஞ்சட்டை இயக்கம் அரசாங்கத்தை முழுதும் நிலைதடுமாறச் செய்துவிட்டது. மாகாணத்தை அமைதிப் படுத்துவதிலும், கலகக்கார கிராமங்களை அடக்குவதிலும் ராணுவம் ஏராளமாக உபயோகப் படுத்தப்பட்டது. பொதுவாக கிளர்ச்சி மிகுந்த கிராமங்களின் பேரில் கன மான கூட்டு அபராதங்களை அரசாங்கத்தார் விதிப்பது இந்தியா முழுதும் ஒரு பொதுவான பழக்கமாயிருந்தது. சிற்சில சமயங்களில் வங்காளத்தின் நகரங்களுக்கும் இந்த அவதி நேரும். இந்த ஸ்தலங்களில் போலீசாரை வைத்தி ருப்பார்கள். போலீசாரின் செலவை, அந்த ஊர்கள் கொடுக்க

வேண்டும். ஏராளமான விசேஷ அதிகாரங்களும் இருந்து யாதொரு தடையில்லாமலும் போனால், போலீசாரின் அக்கிரமங்கள் தானாக ஏற்படக்கூடியவை. இந்தச் சட்டமீறிய ஒழுங்கீனங்களை வெளிக்காண்பிக்க பல நிகழ்ச்சிகள் நேர்ந்தன.

வங்காளத்தில் அநேக பகுதிகளில் அசாதாரணமான காட்சி கண்ணுக்குப் பட்டது. அந்தப் பகுதிகளிலுள்ள பொது ஜனங்களை (உண்மையைச் சொல்லுமிடத்து ஹிந்துக்களை) எதிரிகளாக அரசாங்கத்தார் கருதினார்கள். பன்னிரண்டிலிருந்து இருபத்தைந்து வயதுள்ள ஆண், பெண், சிறுவன், சிறுமி எல்லோரும் அடையாளக் கார்டுகளை எப்பொழுதும் தூக்கிக்கொண்டு போகவேண்டும். கூட்டம் கூட்டமாக ஜனங்கள் வெளியேற்றப் பட்டார்கள் அல்லது காவலில் வைக்கப்பட்டார்கள். இப்படித்தான் உடை உடுத்திக்கொள் வேண்டும் என்று அரசாங்கத்தார் உத்திரவுபோட்டார்கள். பள்ளிக்கூடங்கள் மூடப்பட்டன. அல்லது அதிகாரிகளின்மேற் பார்வையின் கீழ் கொண்டு வரப்பட்டன. சைக்கிள்களை உபயோகப்படுத்தக்கூடாது. நடமாட்டங்கள் போலீசாருக்கு அறிவிக்கப்பட வேண்டும். இரவு 8 மணி உத்தரவு, அந்திச் சட்டம், இராணுவத்தாரின் ஆடம்பர ஊர்வலம், தண்டப்போலீஸ், கூட்டு அபராதங்கள் இன்னும் எத்தனையோ உத்தரவுகளும் திட்டங்களும் நிறைந்து நின்றன.

வங்காளத்தின் சில பாகங்கள் நிரந்தரமான முற்றுகையில் இருப்பதாகக் காணப்பட்டன. அங்கே வசிக்கும் ஜனங்களை போலீஸார் கடுமையாகக் கண்காணித்து வந்தார்கள். ஆண்களும் பெண்களும் அனுமதிச் சீட்டுக்களைக் காண்பித்துத்தான் உள்ளே வரமுடியும்; வெளியே போக முடியும். இத்தகைய நிபந்தனைகளும் சட்டங்களும் சர்க்காரின் நோக்கங்களுக்குக் கூட தேவையா இல்லையா என்பதைப்பற்றி தீர்ப்புக்கூற என்னால் முடியாது. அவைகள் தேவையில்லையென்றால் பல பிரதேசங்களில் உள்ள ஜனங்களை அடக்கி ஒடுக்கி அவமானப்படுத்தி, மகத்தான நஷ்டத்தை யுண்டாக்கிய பெரிய குற்றத்தை அரசாங்கத்தின்பேரில் சுமத்த வேண்டியிருக்கும். அந்த நிர்ப்பந்த நிபந்தனைகள் தேவையானால், இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி ஜனங்களால் வெறுக்கப்பட்ட தென்பதற்கு அது முடிவான தீர்ப்பாகும்.

அதிகாரிகளின் பலாத்கார மனப்பான்மை நம்முடைய ஜனங்களை சிறைக்குள்கூடத் துரத்திக் கொண்டு வந்தது. கைதிகளை மூக்கூறுகளாகப் பிரித்தது கேலிக் கூத்தாகவிருந்தது. இவ்வாறு கூறு போட்டது மேல் வகுப்புக்காரர்களுக்கு சித்திரவதையைப்போல அடிக்கடி தோன்றியிருக்கிறது. இந்த மேல் வகுப்புகளுக்கு ஒரு சிலரே சென்றார்கள். இடைவிடாமல் வேதனை கொடுக்கும் நிலைமைகளுக்குத் தன்மதிப்புள்ள ஆண்களிலும் பெண்களிலும் பலர் பணிய வேண்டியிருந்தது. சாதாரணக் கைதிகளின் வாழ்க்கையைக் காட்டிலும் கேவலமாக அரசியல் கைதிகளின் நிலைமையைச் செய்துவிடவேண்டுமென்பது அரசாங்கத்தாரின் பிடிவாத நோக்கமாகக் காணப்பட்டது. சிறைகளின் தலைமையதிகாரி ஒருவர் எல்லாச் சிறைகளுக்கும் இரகசிய சுற்றறிக்கை விடுக்கும்பொழுது, சட்டமறுப்புக் கைதிகள் பயங்கரமாக நடத்தப்பட வேண்டும் என்று குறிப்பிட்டிருக்கிறார்.

கசையடி அடிப்பது சிறையில் மாமூலாகிவிட்டது. 1933ம் வருடம் ஏப்ரல் மாதம் 27-ந்தேதி காமன்ஸ் சபையில் உதவி இந்தியா மந்திரி இந்தியாவில் சட்டமறுப்பு இயக்க சம்பந்தமான குற்றங்களுக்கு 500 பேர்களுக்குமேல் கசையடி அடிக்கப்பட்டார்கள் என்று ஸர் சாமுவேல் ஹோர் [இந்தியா மந்திரி] அவர்களுக்குத் தெரியும் என்று அறிவித்தார். சிறைத் திட்டத்துக்கு விரோதமாக நடந்ததற்காக சிறைகளில் கசையடி அடிக்கப்பட்ட சம்பவங்கள் மேற்சொன்ன தொகையில் சேர்ந்ததாவென்பது தெளிவாயில்லை. 1932-ம் வருடத்தில் சிறையில் கசையடி அடித்ததாக எங்களுக்கு அடிக்கடி செய்தி வந்து கொண்டிருந்தது. இரண்டொரு கசையடிகள் நேர்ந்ததை ஆட்சேபித்து நாங்கள் 1930-ம் வருடம் டிசம்பர் மாதம் மூன்று நாள் உண்ணாவிரதமிருந்தது எனக்கு நினைவுக்கு வந்தது. அப்பொழுது இந்த நிகழ்ச்சியின் மிருகப் பிராயத்தைக் கண்டு திடுக்கிட்டுப் போனேன். இப்பொழுதும் நான் திடுக்கிட்டுப் போனது உண்மை. எனக்கு உள்ளூர வருத்தமும் துன்பமும் குடிகொண்டிருந்தன. ஆனால் மீண்டும் இவைகளை ஆட்சேபித்து உண்ணாவிரதம் இருக்கவேண்டும் என்று எனக்குத் தோன்றவில்லை. இந்த விஷயத்தில் இப்பொழுது முந்தியதைக்காட்டிலும் திக்கற்ற நிலைமையிலிருந்தேன். சிறிது காலத்திற்குப்

பிறகு இத்தகைய மிருகத்தன்மையைக் கண்டு மனம் மழுங்கிப்போய் பழக்கமாய்ப் போய்விட்டது. கெட்ட பழக்கம் ஒன்று நீண்டகாலம் இருக்குமாகில், அதோடு உலகம் பழகிவிடத்தான் செய்யும்.

சிறையில் ஆண்களுக்கு எண்ணெய் இயந்திரங்களிலும், வேறு இயந்திரங்களிலும் கடுமையான வேலை கொடுக்கப்பட்டது. அவர்களை எவ்வளவு கொடுமையாக நடத்த வேண்டுமோ அவ்வளவு கொடுமையாக நடத்தினார்கள். எதற்காக? அவர்கள் மன்னிப்புக் கேட்டுக்கொள்ள வேண்டும்; சர்க்காருக்கு உறுதிமொழிப் பத்திரம் எழுதிக் கொடுத்துவிட்டு விடுதலை பெறவேண்டும் என்பது உத்தேசம். இப்படி நேர்ந்தால் அது சிறை அதிகாரிகளுக்கு மகத்தான வெற்றியாகக் கருதப்பட்டது.

இந்தச் சிறைத்தண்டனைகளில் பெரும்பான்மை, சிறுவர்களுக்கும் இளைஞர்களுக்கும் கிடைத்தது. இந்த இளைஞர்கள் சிறையில் நேர்ந்த பலவந்தத்தையும் அவமானத்தையும் கண்டு ஆத்திரப்பட்டார்கள். எப்பேர்ப்பட்ட நேர்த்தியான ரோஷமுள்ள இளைஞர்கள்! அவர்கள் தன்மதிப்பும் ரோஷமும் துடிதுடிப்புத் தன்மையும் நிறைந்தவர்கள். இத்தகைய இளைஞர்களை ஆங்கில நாட்டில் இங்லீஷ் பள்ளிகளிலும் பல்கலைக் கழகத்திலும் வெகுவாக ஆதரித்துப் புகழ்ந்திருப்பார்கள். இந்தியாவிலேயோ அவர்களுடைய இளமைப் பருவமும், லட்சிய ஆவலும் அவர்களுக்கு விலங்குகளையும், கசையடியையும், தனிக்காவலையும் சன்மானங்களாகக் கொண்டுவந்து கொடுத்தன.

சிறையிலிருந்த நமது பெண் தொண்டர்களின் கதியும் நினைக்கக்கூடாதபடி கொடுமையாயும் துக்ககரமாயும் இருந்தது. அவர்களிற் பெரும்பான்மையோர் நடுத்தர வகுப்புப் பெண்மணிகள். ஒதுக்கமாக பாதுகாக்கப்பட்ட வாழ்க்கை வாழ்ந்துவந்தவர்கள். தன்னலத்துக்காக அதிகாரம் செலுத்தின ஆண்களின் எதேச்சாதிகாரி ஜனசமூகத்திலே ஏற்பட்ட பல பழக்கங்களாலும் அடக்குமுறைகளாலும் கஷ்டப்பட்டுக்கொண்டு கிடப்பவர்கள். விடுதலை யழைப்பு என்றால் அவர்களுக்கு எப்பொழுதுமே இரண்டு அர்த்தங்களைக் கொடுத்தது. இந்தப் போராட்டத்தில் அவர்கள் ஊக்கத்

துடனும் உற்சாகத்துடனும் குதித்ததற்கு அஸ்திவாரமான காரணமொன்றைச் சொல்லலாம். அதை அவர்கள் அறிந்து செய்யாமல் இருக்கலாம். ஆனால் அந்தக் காரணம் ஒரு வகையில் உண்மையானது. வீட்டு அடிமைத் தனத்திலிருந்தும் விடுபட வேண்டுமென்ற ஆவலினால் அவர்கள் போராட்டத்தில் கலந்துகொண்டிருக்கலாம்.

ஒரு சிலரைத் தவிர இவர்கள் எல்லோரும் சாதாரணக் கைதிகளாகக் கருதப்பட்டு, சாதாரணப் பெண் குற்றவாளிகளிடையே வைக்கப்பட்டார்கள். பயங்கரமான நிர்ப்பந்தங்களுக்காளானார்கள். பெண்கள் வைக்கப்பட்டிருந்த விடுதிக்குப் பக்கத்திலே நான் ஒரு சமயம் இருந்தேன். என் விடுதிக்கும் அவர்கள் இருந்த இடத்துக்கும் நடுவே ஓரே ஒரு சுவர்தான். அந்த அடைப்புக்குள் சாதாரண கைதிகளோடு சில அரசியல் பெண் கைதிகளும் இருந்தார்கள். இந்த அரசியல் கைதிகளுள் ஒருவர் எனக்குத் தெரிந்தவர். இந்த அம்மாளின் வீட்டில் முன்னொரு சமயம் நான் விருந்தாளியாக இருந்தேன். நடுவிலே, பெரிய சுவர் இருந்தாலும் அங்கே அவர்கள் பேசிக்கொள்ளுகிற சத்தம் என் காதில் விழாமலிருக்கமுடியாது. பெண் கைதிவார்டர்கள் என்ன கேவலமாகப் பேசுகிறார்கள்! என்ன திட்டு திட்டுகிறார்கள்! என்ன சாபம் கொடுக்கிறார்கள்! இவைகளையெல்லாம் நமது அரசியல் கைதிப் பெண்மணிகள் பொறுத்துக்கொண்டிருக்க வேண்டியிருந்தது!

1930-ம் வருஷம் அதாவது இரண்டு வருஷத்துக்கு முன்னர் நடத்தப்பட்டதைக் காட்டிலும் கேவலமாக 1932-33-ம் வருஷங்களில் அரசியல் கைதிகள் நடத்தப்பட்டார்கள் என்பது குறிப்பிடத்தக்கது. இது அதிகாரிகளின் தனித்தனி மனப்போக்குகளின் பயனாக இருக்கமுடியாது. இது அரசாங்கத்தின் திட்டமான கொள்கை என்று ஊகிப்பதுதான் நியாயமானதாகும். அரசியல் கைதிகள் ஒருபுறமிருக்க, கருணை மணம் வீசும் எதற்கும் விரோதமாக அந்தக் காலத்தில் நடந்துகொண்டார்கள் என்ற கீர்த்தி ஐக்கிய மாகாண சிறை இலாகாவுக்கு கிடைத்துவிட்டது. நம்பத்தகுந்த இடத்திலிருந்து இதற்கு விநோதமான ஆதரவும் கிடைத்தது.

கீர்த்திபெற்ற ஜெயில் விஸிட்டர் ஒருவர், ஸர் பட்டம் பெற்ற வீரர், எங்களைப்போல கலகக்காரரும் ராஜ நிந்தனை வாதியுமில்லாத ஒருவர், அரசாங்கத்தார் பட்டமளித்து மரியாதை செய்து மகிழ்ச்சிபெற்ற ஒருவர், அவர் எங்களைச் சிறையில் வந்து கண்டார். சில மாதங்களுக்கு முன்பு, வேறொரு சிறையைத் தாம் பார்த்ததாயும் ஜெயிலரைப்பற்றி "கருணை நிறைந்த கண்டிப்புக்காரர்" என்று தாம் சோதனைக் குறிப்பில் எழுதியதாயும் அவர் என்னிடம் சொன்னார். பிரஸ்தாப ஜெயிலர் தமது காருண்யத்தைப் பற்றி ஒன்றுமே சொல்ல வேண்டாமென்றும் அதிகாரிகள் இந்த காருண்யத்தை விரும்பமாட்டார்கள் என்றும் அவரிடம் சொல்லிக் கெஞ்சிக் கேட்டுக்கொண்டாராம். இவ்வாறு வருணித்து எழுதுவதால், யாதொரு கெடுதியும் ஜெயிலருக்கு நேருமென்று தாம் கருதாததால் அவ்வாறுதான் செய்யவேண்டுமென்று ஸர் பட்டம்பெற்ற வீரர் "அழுத்தி" எழுதிவிட்டார். இதன் பயன் என்னவெனில், பிரஸ்தாப ஜெயிலர் கண் காணாத எட்டத்திலிருந்த சிறைக்கு மாற்றப்பட்டார். இந்த மாற்றம் தண்டனையாகப் பாவிக்கப்பட்டது என்று சொல்லத்தேவை இல்லை.

பயங்கரமாயும் தர்மா தர்ம விவேகமின்றியும் நடந்துகொண்ட சில ஜெயிலர்களுக்கு பதவி உயர்வும் பட்டங்களும் அளிக்கப்பட்டன. சிறையில் லஞ்சம் என்பது சர்வசாதாரண நிகழ்ச்சியாகும். அதனின்றும் யாரும் விலகிநிற்கமுடியாது. என்னுடைய அனுபவமும், என்னுடைய தோழர்களில் பலரது அனுபவமும் என்னவென்றால், சிறையில் கண்டிப்புக்காரர்கள் என்று பெயர் வாங்கும் சிறைநிர்வாகிகள்தான் கூசாமல் லஞ்சம் வாங்குகிற பேர்வழிகளாகும்.

சிறையிலும் வெளியேயும் நான் ஒரு பாக்கியசாலியாகவிருந்தேன். என்னோடு கலந்து பழகியவர்கள் எல்லோரும் எனக்குத் தகுதி இல்லாமலிருந்தாலும் கூட, எனக்கு மதிப்பும் மரியாதையும் கொடுத்திருக்கிறார்கள். சிறையில் நேர்ந்த ஒரு நிகழ்ச்சி எனக்கும் என்னுடைய வீட்டார்களுக்கும் மிகுந்த வருத்தத்தைக் கொடுத்தது. என்னுடைய தாயார், கமலா, என்மகள் இந்திரா மூவரும் எனது மைத்துனர் ரஞ்சிட் பண்டிட்டை அலகபாத் ஜில்லா சிறையில் பேட்டி

காணப் போயிருந்தார்கள். அவர்கள் பேரில் யாதொரு தவறும் இல்லாமலிருக்கையிலேயே, ஜெயிலர் அவர்களை அவமானப்படுத்தி வெளியே அனுப்பி விட்டார். இதைக் கேள்விப்பட்டதும் நான் மிகவும்வருத்தப்பட்டேன். இதை மாகாண அரசாங்கத்தார் சகித்துக் கொண்டதைப்பற்றி, எனக்கு இன்னும் அதிகமான துயரம் உண்டாயிற்று. சிறையதிகாரிகளால் என் தாயாருக்கு இனி எத்தகைய அவமானமும் நேராமலிருப்பதற்காக பேட்டியே வேண்டா மென்று தீர்மானித்தேன். ஏழு மாத காலம் நான் டேராடூன் சிறையிலிருக்கையில் ஒரு பேட்டியுமே இல்லை.

நானும் கோவிந்த வல்லப பந்த் அவர்களும் பரிலி ஜில்லா சிறையிலிருந்து டேராடூன் சிறைக்குச் சேர்ந்தாற் போல் மாற்றப்பட்டோம். ஜனங்கள் கூடிக்கொள்வார்களோ என்று அஞ்சி, பரிலியில் நாங்கள் ரெயிலில் ஏற்றப்படவில்லை. அதற்கப்பால் 50 மைல் தூரத்திலுள்ள ஒரு சின்ன ஸ்டேஷனில் ரெயிலில் ஏற்றப்பட்டோம். இரவில் இரகசியமாக எங்களை மோட்டாரில் ஏற்றிச் சென்றார்கள். பலமாதங்கள் அடைக்கப்பட்டு வாழ்ந்துவந்த எங்களுக்கு அன்றிரவு குளிர்காற்றினடுவே மோட்டார் கார் பிரயாணம் செய்தது அபூர்வ ஆனந்தமாக இருந்தது.

நாங்கள் பரிலி சிறையை விட்டுச்செல்லுமுன் சிறிய நிகழ்ச்சி ஒன்று நேர்ந்தது. அது என்னை மிகுதியும் உருக்கி விட்டது. இன்றைக்கும் என்னுடைய நினைவில் அது பசுமையாக இருக்கிறது. பரிலி போலீஸ் சூப்பரிண்டு ஒரு ஆங்கிலேயர்; அங்கே பிரசன்னமாயிருந்தார்; நான் மோட்டாரில் ஏறினதும் மிகவும் கூச்சத்தோடு என்னிடம் வந்து ஒரு சிறிய மூட்டையை என் கையில் கொடுத்து, ஜெர்மன் சித்திரப்படப் பத்திரிகைகள் அதில் இருப்பதாகச் சொன்னார். நான் ஜெர்மன் பாஷை கற்றுக்கொள்வதாக அவர் கேள்விப்பட்டு, இந்தப் பத்திரிகைகளை என்பொருட்டு கொண்டுவந்ததாக அவர் சொன்னார். அதற்கு முன் நான் அவரைச் சந்தித்ததே இல்லை. பின்னரும் பார்த்தது கிடையாது. அவருடைய பெயரும் எனக்குத் தெரியாது. தன்னை அறியாமலே செய்த மரியாதையும் அதற்குக் காரணமாயிருந்த நல்லெண்ணமும் என்னை உருக்கி விட்டன. நான் அவருக்கு மிகுதியும் நன்றிகொண்டேன்.

அன்றிரவு நீண்டநேரம் மோட்டாரில் பிரயாணம் செய்துகொண்டிருக்கையில், இங்கிலீஷ்காரர்களுக்கும் இந்தியர்களுக்கும் உள்ள உறவைப்பற்றியும் ஆளுகிறவன் ஆளப்படுகிறவன் இவர்கள் உறவைப்பற்றியும் அதிகாரப் பதவியில் இருப்பவர்களையும் அவர்களுக்குக் கீழ்ப்படிய வேண்டியவர்களைப் பற்றியும், உத்தியோகஸ்தர்களையும் உத்தியோகமில்லாதவர்களையும் பற்றியும் சிந்தனை செய்துபார்த்தேன். இந்த இரண்டு கூட்டத்தார்களிடையே எவ்வளவு பெரிய பிளவு இருக்கிறது? இந்த இரண்டு கூட்டத்தாரும் பரஸ்பரம் நம்பிக்கையற்று ஒருவரை ஒருவர் எவ்வளவு தூரம் வெறுக்கின்றார்கள்? வெறுப்பையும் அவநம்பிக்கையையும் காட்டிலும் ஒருவரையொருவர் அறிந்துகொள்ளாததுதான் விசேஷமாக இருக்கிறது. இதனால் ஒரு கூட்டம் மற்றதைக் கண்டு அஞ்சி, மற்ற கூட்டத்தின் முன்னிலையில் ஜாக்கிரதையுடன் இருக்கப்பார்க்கின்றது. ஒருவரைப் பார்த்தால் மற்றவர் துர்முகியாகவும் பழகக்கூடாதவராகவும் கண்ணில் படுகிறார். இந்தத் திரைக்குப்பின்னே நயமும் சிநேகபாவமும் இருக்கின்றன என்பதை இருவரும் உணருவதில்லை.

நாட்டை ஆளுபவர்கள் இங்கிலீஷ்காரர்கள். இந்த ஹோதாவில் அவர்கள் யாருக்கும் எத்தகைய லாபத்தையும் செய்துவைக்க முடியும். ஆகவே பதவிக்கு ஆசைப்படும் பிச்சைக்காரர்களையும் சமயோசித வாதிகளையும் அவர்கள் தங்களிடம் இழுத்துக்கொள்ளுகிறார்கள். இந்த வெறுக்கத்தக்க பேர்வழிகளைக் கொண்டுதான், அவர்கள் இந்தியாவைப் பொதுவாக மதிப்பிடுகிறார்கள். இயந்திரத்தைப்போல் கொடுமையாகவும் தன்னுடைய சலுகைகளை எவ்வகையாலும் காப்பாற்றிக்கொள்ள ஆவல்படைத்தவனாகவும் உழைக்கும் அதிகாரியாக இங்கிலீஷ்காரன் இந்தியன் கண்ணில் படுகிறான். சொந்தமுறையில் தன்னுடைய சொந்தமனப்போக்காக ஒவ்வொருவன் நடப்பதற்கும், அவனே அதிகாரியாகவோ அல்லது சேனையில் ஒரு அம்சமாகவோ இருந்து நடந்துகொள்வதற்கும் எவ்வளவு வித்தியாசம் இருக்கின்றது! உத்தரவைக் கேட்டு விரைத்து நிற்கிற சிப்பாய் தன்னுடைய காருண்யத்தை இழந்து, இயந்திரத்தைப்போல வேலைசெய்து, அவனுக்கு யாதொரு தீமையும்செய்யாத நிரபராதியான சாதுக்களைச் சுட்டுக் கொன்றுவிடுகிறான். இப்படியே தனிப்பேர்வழி ஒருவனுக்கு எந்தக் கொடுமையை

யும் சொந்த முறையில் இழைக்கத் தயங்குபவன் போலீஸ் உத்தியோகஸ்தனுக நிரபராதியின் பேரில் தடியடிப் பிரயோகத்தை உத்தரவு செய்யத் தயங்குவதே இல்லே. அப்பொழுது தன்னே அவன் மனிதனுகவே நினைத்துக் கொள்வதில்லே. அவன் அடித்து வீழ்த்துகிற அல்லது கொல்லுகிற அந்தக் கூட்டங்களேயும் மனிதக்கூட்டம் என்றும் அவன் கருதுவதில்லே.

ஒருவன் எதிர்க்கட்சியை ஒரு கும்பலாகவோ அல்லது ஒரு உருவமில்லாத பொருளாகவோ எண்ணத் துவங்கிவிட்டால், அதனிடம் மனிதஉணர்ச்சி போய்விடுவதாகத் தோன்றுகிறது. கூட்டங்கள் ஒருவரை ஒருவர் நேசித்துப் பகைத்தும் கஷ்டப்படும் ஆண்களும் பெண்களும் குழந்தைகளும் கொண்டது என்பதை மறந்து விடுகிறோம். உள்ளதைச் சொல்ல விருப்பமிருந்தால் இந்தியர்களுக்குள் சில நயமான பேர்வழிகள் இருக்கிறார்கள் என்று ஒவ்வொரு இங்கிலீஷ்காரனும் சொல்லுவான். ஆனல் இத்தகைய இந்தியர்கள் விதிவிலக்குகள் என்றும் பொதுவாக இந்தியர்கள்வெறுக்கத் தக்கூட்டத்தார் என்றும் அவன் சொல்லக்கூடும். தனக்குத் தெரிந்த சில இங்கிலீஷ்காரர்கள் மிகவும் சிரேஷ்டமான பேர்வழிகளென்றும், ஆனல் இந்தச் சிலரைத் தவிர பொதுவாக இங்கிலீஷ்காரர்கள் அகம்பாவம்பிடித்த, மிருகத் தனம் வாய்ந்த கெட்ட பேர்வழிகளென்றும் சராசரி இந்தியன் சொல்லுவான். தான் நெருங்கிப் பழகிய ஆளேக்கொண்டு ஒரு சமூகத்தை மதிப்பிடாமல், தான் காணுமலும் அவர்களேப் பற்றி ஒன்றுமே தெரியாமலும் இருக்கும் ஏனேயோரைக்கொண்டு, ஒரு சமூகத்தை ஒவ்வொருவரும் மதிப்பிடுவது விநோதமானதே.

என் சம்பந்தப்பட்ட வரையில், அதிர்ஷ்டவசமாக என்னுடைய தேசத்தாரும் சரி, இங்கிலீஷ்காரர்களும் சரி என்னிடம் அநேகமாக மரியாதையுடன் நடந்துகொண்டிருக்கிறார்கள். என்னுடைய ஜெயிலர்களும் என்னேக் கைது செய்து, ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்கு அழைத்துச் சென்றபோலீஸ்காரர்களும் என்னுடன் மிருந்த பிரியமாகத் தான் இருந்தார்கள். போராட்டத்தின் கசப்பும், சிறை வாழ்க்கையின் கசப்பும் இந்த மனிதத்தன்மை வாய்ந்த காட்சியால் ஒருவாறு குறைந்துபோயிற்று. என்னுடைய சொந்த நாட்டார் என்னே அவ்வாறு மதிப்பது ஆச்சரியம்

அல்ல. ஏனெனில் நான் அவர்களுக்கு மத்தியில் ஓரளவு செல்வாக்கு பெற்றிருக்கிறேன். இங்கிலீஷ்காரர்கள் கூட என்னை ஒரு தனி ஆளாகவும், கூட்டத்தில் சேர்ந்த ஒரு சிறு அணு அல்ல என்றும் மதிக்க நேர்ந்ததற்குக் காரணம் நான் என்னுடைய கல்வியை ஆங்கில நாட்டில் கற்றேன் என்பது என்று நினைக்கிறேன். ஆங்கிலப் பள்ளியில் பயின்றவன் என்ற முறையில் நான் அவர்களோடு சேர்ந்தவன் ஆனேன். என்னுடைய பொதுஜன அலுவல்கள் எவ்வளவு கோணல் கொண்டவையா யிருந்தபோதிலும், நான் அவர்களுடைய நாகரிகத்தில்பயிற்சிபெற்றவன் என்றதனுல்அவர்கள்எனக்கு மரியாதை செலுத்தாமலிருக்க முடியவில்லை போலும்! என்னுடைய தோழர்களிடமிருந்து என்னைப் பிரித்து எனக்குத் தனியான சலுகை காண்பிக்கப்பட்ட பொழுதெல்லாம் நான் சிறிதளவு வெட்கப்பட்டு நொந்துகொண்டிருக்கிறேன்.

இத்தகைய சலுகைகள் பல எனக்கு இருந்தபோதிலும் சிறை சிறையாகத்தான் இருந்தது. சிறையின் கொடுமையான தன்மைகள் சில சமயங்களில் தாங்கமுடியாததாகவே இருந்தன. சிறையில் பலாத்காரமும் அற்பத்தனமும் லஞ்சமும் பொய்யும் நிறைந்திருந்தன. அங்கேஒன்று கெஞ்ச வேண்டும் அல்லது சபிக்க வேண்டும். கொஞ்சம் ரோஷக்காரராயிருந்து விட்டால், சதா மானபங்கம் நேரிடுமோ வென்று கிலேசப்பட்டுக் கொண்டிருக்கவேண்டும். சிறிய சம்பவங்கள் ஒருவனைத் தடுமாறச் செய்துவிடும். கடிதத்தில் வந்த சிறிய செய்தியும், பத்திரிகையில் படிக்கும் சிறிய சம்பவமும் அவனை கவலைக் கடலிலும் கோபசமுத்திரத்திலும் ஆழ்த்தி பரிதபிக்கச் செய்யும். சிறைக்கு வெளியே இருந்தால் இந்தக் கோபத்தையும் கவலையையும் ஏதேனும் செயலில் ஈடுபட்டு, ஆற்றிக்கொள்ள முடியும். பலவேறு அலுவல்களாலும், ருசிகளாலும் உடம்பிலும் உள்ளத்திலும் அமைதி உண்டாகலாம். ஆனல் சிறையிலோ இத்தகைய போக்கு கிடையாது. ஒருவன் தன்னை புட்டியில் போட்டு அடைத்து வைத்திருப்பதாக எண்ணிக் கொள்ளுகிறன். எதையும் ஒரு தலைப்பட்சமாகப் பேசுவான். எந்த நிகழ்ச்சிக்கும் கோணலாக அர்த்தம் செய்வான். சிறையில் நோயின் கொடுமையும் மிகவும் அதிகரிக்கிறது.

இருந்தாலும், சிறைத் திட்டத்துக்கு என்னை பழக்கப் படுத்திக் கொண்டேன். தேகப் பயிற்சியாலும் நல்ல கடுமை

யான மூளை வேலையாலும், என்னை தக்க நிலைமையில் வைத்துக் கொண்டிருந்தேன். வெளியிலே தேகப்பயிற்சியாலும் மூளை வேலையாலும், என்ன நன்மை இருக்குமோ இருக்காதோ, சிறையிலே அவைகள் முக்கியமானவை. அவைகள் இல்லாமற்போனால், ஒருவன் நிலை தடுமாறிப்போய் விடுவான். நான் கண்டிப்பான கால அட்டவணை ஒன்றை ஏற்படுத்திக் கொண்டேன். அவைகளைத் திட்டபடி நிறைவேற்றி வைப் பதற்காக, சாதாரணமாக வெளியேயிருந்த பழக்கங்களை எல்லாம் உள்ளேயும் வைத்துக் கொண்டிருந்தேன். தினம் க்ஷவரம் செய்துகொள்வேன். இந்தச் சின்ன விஷயத்தை ஏன் குறிப்பிடுகிறேன் என்றால், பொதுவாக சிறையில் இதையும் மற்ற பழக்கங்களையும் விட்டுவிட்டு சோம்பிக்கிடந்து விடுகிறார்கள். நாள் முழுதும் கடுமையாக வேலை செய்தபின், அந்திப்பொழுது சமீபித்தால் எனக்கு ஆனந்தமாக இருக்கும். அப்பொழுது நான் சோர்ந்து போவேன். தூக்கம் தானாக என்னைக் கவ்விக் கொண்டு விடும்.

இவ்வாறு நாட்கள் கழிந்தன; வாரங்களும் மாதங்களும் கழிந்தன; ஆனால் சில சமயங்களில் ஒரு மாதம் பயங்கரமாக நீடித்துக் கொண்டே இருந்து முடிவடையாது போல் தோன்றும். சில சமயங்களில் எனக்கு அலுப்பு உண்டாகி விடும். எதைக் கண்டாலும் யாரைப் பார்த்தாலும் கோபப்படுவேன். சிறையிலிருக்கும் என் தோழர்களோடும், சிறை சிப்பந்திகளோடும் ஆத்திரப்படுவேன். வெளியே இருக்கிற ஜனங்கள் சில காரியங்கள் செய்ததற்கும் அவைகளைச் செய்யத் தவறியதற்காகவும், அவர்களின் பேரில் ஆத்திரப் படுவேன். பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தை நினைத்து குமுறுவேன். இந்தக் குமுறல் மட்டும் எக்காலமும் என்னிடம் குடிகொண்டிருந்தது. என்னுடைய தன்மையைப் பற்றியும் கோபமடைவேன். சிறை வாழ்வினால் ஏற்பட்ட பலவகையான மனோ நிலைமைகளுக்கு ஆட்பட்டு, நான் ஒரு துடிதுடிக்கும் நரம்பு மூட்டையாக ஆகிவிடுவேன். அதிர்ஷ்ட வசமாக இந்த மனோ நிலைமையினின்றும் விரைவில் நீங்கி அமைதியடைவேன்.

சிறையில் பேட்டி நாட்கள் எல்லாம் உற்சவதினங்கள்; அந்த நாட்களுக்காக ஆவல்கொண்டு காத்திருந்து நாட்களை எவ்வாறு எண்ணிக் கொண்டிருப்போம்! பேட்டிகளால் ஏற்

பட்ட பரபரப்புக்குப்பின்னர், தனிமை யுணர்ச்சியும், சிறை வாழ்க்கையின் சாரமின்மையும் அவற்றின் எதிர்மறைப் பயன்களாகத் தோன்றும். சில சமயங்களில் ஒரு கெட்ட செய்தியாலோ, வேறு காரணத்தாலோ பேட்டி அதிருப்திகாமாக முடிந்தால், பலநாட்கள் நான் மிகவும் வேதனைப்படுவேன். பேட்டிகளில் சிறைஅதிகாரிகள் பிரசன்னமாயிருப்பார்கள். ஆனால் டெல்லியில் இரண்டு மூன்று தடவை உளவுப்போலீஸ்காரன் ஒருவன் காகிதமும் பென்சிலும் கையுமாக இருந்து நாங்கள் பேசிக்கொள்ளும் ஒவ்வொரு வார்த்தையையும் அப்படியே எழுதிக்கொள்வான். இது எனக்கு மிகுந்த ஆத்திரத்தை உண்டாக்கிற்று. இந்தப் பேட்டிகள் அத்தனையும் பயனற்றவையாகப் போய்விட்டன.

அலகபாத் சிறையில் பேட்டிக்குப் போய் என் தாயாருக்கும் மனைவிக்கும் நேர்ந்த அவமானத்தாலும் அதற்காக அரசாங்கத்தார் பரிகாரம் தேட மறுத்ததாலும், இந்த விலை மதிக்கமுடியாத பேட்டிகளே எனக்கு வேண்டாமென்று சொல்லிவிட்டேன். சுமார் ஏழுமாத காலம்வரையில் பேட்டியே கிடையாது. இந்தக்காலம் எனக்கு மிகவும் பயங்கரமாக இருந்தது. இந்தக் காலத்தின் இறுதியில் பேட்டியை மீண்டும் கோர நான் தீர்மானித்து, எனது ஜனங்கள் என்னைப் பார்க்க வந்தபொழுது, ஒரே ஆனந்த மயக்கம் உண்டாயிற்று. என்னுடைய சகோதரியின் சிறிய குழந்தைகளும் என்னைப்பார்க்க வருவார்கள். சிறிய குழந்தைகளது தோள்களின் பேரில் வழக்கமாக ஏறுவதுபோல் ஏற யத்தனிக்கையில், அதை உணர்ச்சிப்பெருக்கால் தாங்க முடியாது. நீண்ட காலம் மனிதத் தொடர்புகளுக்காக ஆசைப்பட்டுத் தவித்துக்கொண்டிருந்த பின்னர், இத்தகைய குடும்ப வாழ்க்கையின் ஸ்பரிசம் என்னைத் தாக்கித் தடுமாறச் செய்யும்.

பேட்டிகள் நின்ற உடனே, வீட்டிலிருந்தோ, அல்லது வேறு சிறைகளிலிருந்தோ (அப்பொழுது எனது இரண்டு சகோதரிகளும் சிறையிலிருந்தார்கள்) பதினைந்து நாள் தவணையில் வரும் கடிதங்கள் மிகவும் தேவையாகிவிட்டன. அவைகளுக்காக நான் ஆவலுடன் காத்துக்கொண்டிருப்பேன். குறிப்பிட்ட நாளில் கடிதம் வராவிட்டால் நான் மிகுதியும் தள்ளப்பட்டுப்போவேன்; ஆனால் கடிதம் வந்தால், அதைத் திறக்காமல் வைத்துக்கொண்டே இருப்

பேன். நிச்சயமாய்க் கிடைத்த மகிழ்ச்சியுடன் ஒருவன் விளையாடுவதுபோல் நானும் அந்தக்கடிதத்துடன் விளையாடு வேன். இவ்வளவுக்கும் பின்னால் துளி பயமும் என்மனதில் துள்ளி ஓடும். அந்தக் கடிதத்தில் எனக்கு ஆத்திரம் மூட்டும் படி ஏதேனும் இருந்துவிட்டால்? சிறையில் கடிதம் எழுது வதும் கடிதம் பெறுவதும் அமைதியுடன் போய்க்கொண்டி ருக்கும் வாழ்க்கையைக் கலக்கும் ஆக்கிரமிப்புகளாகவிருந் தன. அவைகளினால் மிதமிஞ்சிய உணர்ச்சிப்பெருக்கு உண் டாகிவிடுகின்றது. இரண்டொருநாள் வரையிலும் மனது எங்கேயோ திரிந்தலைகிறது. தினசரி வேலைக்கு மனதைத் திருப்பிக்கொண்டுவரக் கஷ்டப்படுகிறது.

நைனி சிறையிலும் பரிலி சிறையிலும் என்னோடு பலதோழர்கள் இருந்தார்கள். டேராடூன் சிறையில் துவக் கத்தில் கோவிந்த வல்லப பந்த், காசிபூர் கன்வார் ஆனந்த சிங் நாம் மூன்று பேரும் இருந்தோம். ஆனால் அவருடைய ஆறுமாத தண்டனை முடிவடையவே, இரண்டு மாதங் களுக்குப் பின்னர், கோவிந்த வல்லப பந்த்ஜீ விடுதலை அடைந்தார். பின்னர் வேறு இருவர் வந்து சேர்ந்து கொண்டார்கள். 1933-ம் வருஷம் ஜனவரி மாதம் துவக் கத்தில், என்னுடைய தோழர்கள் எல்லோரும் என்னை விட் டுப்பிரிந்துபோனார்கள். நான் மட்டும் தனியாக இருந்தேன். சுமார் எட்டுமாத காலம் வரையில் அதாவது ஆகஸ்டுமாதக் கடைசியில், நான் விடுதலையாகும் வரையில் டேராடூன் சிறை யில் நான் தனித்து வாழ்ந்து வந்தேன். இச்சிறைச் சிப்பந்தி கள் சிலர், தினசரி இரண்டொரு நிமிஷங்கள் என்னிடம் பேசினதைத் தவிர, என்னிடம் பேசுவதற்குக் வேறு யாருமே கிடையாது. இதைச் சட்டப்படி தனிக் காவல் என்று சொல்ல முடியாது. ஆனால், அநேகமாக அந்த ரகத்துக்கு வந்துசேர்ந்து விட்டது. அந்தக்காலம் எனக்கு மிகவும் பயங்கரமாகவும் வெறுப்பாகவும் இருந்தது.

நல்ல வேளையாக, பேட்டிகளை மறுபடியும் வைத்துக் கொண்டேன். அவைகளினால் சிறிதளவு ஆறுதல் ஏற் பட்டது. வெளியிலிருந்து புது மலர் கொண்டு வந்து கொடுக்கவும், சில படங்களை வைத்துக்கொள்ளவும் விசேஷ சலுகைகளாக எனக்கு கிடைத்தன. அவைகள் எனக்கு மிகுதியும் உற்சாகத்தை ஊட்டின. சாதாரணமாக படங்

களும் பூக்களும் சிறைக்குள் அனுமதிக்கப்படுவதில்லை. பல சமயங்களில் எனக்கு அனுப்பப்பட்ட பூக்களை வாங்கிக் கொள்ள முடியாதென்றும் சொல்லிவிட்டார்கள். அறைகளை நன்ருக வைத்துக் கொள்ள முயற்சி செய்வது சிறை அதிகாரிகளுக்குப் பிடிப்பதில்லை. எனக்குப் பக்கத்தறையிலிருந்த நண்பர் ஒருவர், தமது "ஸ்நான பானத்துக்குரிய சாமான்களை மிகவும் நேர்த்தியாக வரிசைப்படுத்தி வைத்திருந்தார். அதைக் கண்ட சிறை சூபரிண்டு ஒருவர், மிகவும் ஆட்சேபித்தது எனக்கு ஞாபகம் இருக்கிறது. உம்முடைய அறையைக் கவர்ச்சி பொருந்தியதாகவும் ஆடம்பர நேர்த்தி கொண்டதாயும் வைத்துக்கொள்ளக்கூடாது" என்று சூப்ரெண்டு சொன்ஞர். ஆடம்பர நேர்த்தி என்று அவர் குறிப்பிட்ட சாமான்கள் பின்வருமாறு:—பல்லுக்கு ப்ருஷ், பல் விளக்கும் பசை, பவுண்டன் பேஞ மை, ஒரு புட்டித் தைலம், ஒரு புருஷ், சீப்பு ஒன்று இன்னும் இரண்டொரு சிறிய சாமான்களும் இருக்கலாம்.

சிறிய சாமான்களின் மதிப்பையும் தேவையையும் சிறையிலே தான் ஒருவன் நன்ருகத் தெரிந்து கொள்ளமுடியும். சிறையிலே, ஒருவனுக்கு சொந்தமான சாமான்கள் ரொம்பக் கொஞ்சம். அவைகளை எளிதிலே அதிகரிக்கவும் முடியாது; பழுதாய்ப்போன சாமான்களுக்குபதில்சாமான்களைக் கொண்டு வருவதும் எளிதல்ல. சிறையிலே இந்த சாமான்களோடு ஒட்டிக்கொண்டு, சில்லரையாக பலசாமான்களை ஒருவன் சேர்ப்பான். வெளியிலே இருந்தால், இதே சாமான்களை, அவன் அழுக்குக் கூடையில் போடுவதற்குத் தயாராக இருந்திருப்பான். அனுபவிப்பதற்குத் தகுதிபெற்ற வஸ்து சிறையில் இல்லாமல்போஞலும், சொத்து உணர்ச்சி மட்டும் நீங்கிப் போவதில்லை.

சில சமயங்களில், வாழ்க்கையில், மிருதுவான இன்பம் தரும் சாமான்களுக்கு ஒரு ஆவல் உண்டாகி விடும். தேக சுகம், இனிமையான சுற்றுப்புறம், நண்பர்களின் கூட்டம், ருசியான சம்பாஷணை; குழந்தைகளோடு விளையாட்டுகள்; இவைகளைப்போன்றவைகளில் மனதிற்கு ஆசை உண்டாகும். சில சமயத்தில், பத்திரிகையில் சித்திரத்தையோ அல்லது போட்டோப் படத்தையோ பார்ப்பேன். அதஞல், கவலை இல்லாத எனது இளமைப்பருவம், என் கண்முன்னே

வந்து நிற்கும். உடனே ஒருவித பரபரப்பு என்னைக் கவ்விக் கொள்ளும். அந்த நாள் முழுதும் அமைதியே இருக்காது.

தினம் சிறிதளவு நான் நூற்பது வழக்கம், கடுமையான மூளை வேலையிலிருந்து மாற்றும் ஆறுதலும் ஏற்படுவதற்கு, கையால் வேலை செய்வது தேவை என்பதைக் கண்டுகொண்டேன். என்னுடைய முக்கியமான வேலை படிப்பதும் எழுதுவதுமாகும். எனக்கு வேண்டுமென்கிற புஸ்தகங்கள் கிடைக்காது. அதற்குக் காரணம் சிறைத் தடைகள் தான். இவ்வாறு தடைசெய்யும் அதிகாரத்தைப் பெற்றவர்கள் அநேகமாக அந்த வேலைக்குத் தகுதியற்றவர்களாகவே இருக்கிறார்கள். "மேனாட்டின் க்ஷயம்" என்று ஸ்பெங்ளர் எழுதிய நூலைத் தடுத்து விட்டார்கள். அப் புஸ்தகத்தின் பெயர் அபாயகரமாகவும், ராஜ நிந்தனையாகவும் தோன்றிற்றும். ஆனால் நான் குறைகூறக்கூடாது. ஏனெனில், மொத்தத்தில் எனக்கு பல ரகமான நல்ல நூல்கள் கிடைத்தன.

எனக்கு சிறப்பான சலுகைகள் காண்பித்தார்கள் என்றே சொல்ல வேண்டும். ஏ. வகுப்புக் கைதிகளான எனது தோழர்களிற் பலருக்கு நவீன கால சம்பந்தமான விஷயங்களைப்பற்றி எழுதப்பட்ட நூல்கள் கிடைப்பதே இல்லை. பிரிட்டிஷ் அரசாங்கத்தார் இந்தியாவுக்கு அளிக்கப்போகும் அரசியல் திட்டத்தைப்பற்றிய உத்தியோக முறை "வெள்ளைக் காகித அறிக்கையைச் சேர்ந்த" தஸ்தாவேஜுகள்கூட காசி சிறையில் வரக்கூடாதென்று தடுக்கப்பட்டதாக நான் கேள்விப்பட்டேன். "வெள்ளைக் காகித அறிக்கை" அரசியல் சம்பந்தம் கொண்டதாம். பிரிட்டிஷ் சிறை அதிகாரிகள் மனப்பூர்வமாக சிபார்சு செய்த புஸ்தகங்கள் மத சம்பந்தமான நூல்கள் அல்லது நாவல்களாகும். பிரிட்டிஷ் சர்க்கார் மத சம்பந்தமான விஷயத்தை எவ்வளவு அருமையாகத் தங்கள் உள்ளத்தில் போற்றிவருகிறார்கள் என்பதும், மதத்தில் எத்தனையோ ரகங்களிருந்தாலும், அவைகளைப் பட்சபாதமில்லாமல் ஆதரிக்கின்றார்கள் என்பதும் ஆச்சரியப்படத்தக்கதல்லவா ?

தனி மனிதர்களின் சாதாரண உரிமைகள்கூட இந்தியாவில் பறிமுதல் செய்யப்பட்டபொழுது கைதிகளின் உரிமைகளைப்பற்றிப் பேசுவது பொருத்தமாகவே இராது.

இருந்தாலும், இந்த விஷயம் யோசனைக்குரியதாகும். ஒருவனுக்கு கோர்ட்டார் சிறைத் தண்டனை விதித்தால் அவனுடைய உடம்பைச் சிறைப்படுத்துவதுமல்லாமல் அவனுடைய மனதையும்சேர்த்து சிறைப்படுத்தவேண்டுமென்பதுண்டா? கைதிகளுடைய உடம்புகளுக்கு சுதந்திரம் கிடையாது. அவர்களுடைய மனதுக்கு ஏன் சுதந்திரம் இருக்கக் கூடாது? இத்தகைய கேள்வியைக் கண்டு இந்தியாவிலே சிறை நிர்வாகம் செய்யும் அதிகாரிகள் ஆத்திரப்பட்டாலும் படலாம். ஏனென்றால் தீர்க்கமாக யோசிப்பதற்கும் புதுக் கருத்துக்களை ஏற்பதற்கும் அவர்களுக்கு அதிகமான சக்தி கிடையாது.

நூல்களையும் பிரசுரங்களையும் அரசாங்கத்தார் கண்காணிப்பதென்பது எப்பொழுதுமே கூடாத காரியமாகும். அது ஒரு தலைப்பக்ஷமாகும்; முட்டாள்தனமுமாகும். பிரசுரங்களை கண்காணிக்கும் வேலையினால் இந்தியாவிலே நவீன இலக்கியமும் தீவிரக்கொள்கைகள்கொண்ட பத்திரிகைகளும் வார, மாத வெளியீடுகளும் அதிகமாக வளராமல் நின்று விட்டன. தடுக்கப்பட்ட புஸ்தகங்களின் ஜாப்தா ஏற்கனவே விரிவானது. அது இன்னும் வளர்ந்து கொண்டே இருக்கிறது. இதோடுகூட கைதிகளுக்கு இரண்டாம் முறையாக கண்காணிப்பு ஏற்பட்டு சிறைக்கு வெளியே சட்டப்படி வாங்கிப் படிக்கக்கூடிய புஸ்தகங்களும் பத்திரிகைகளும்கூட சிறையிலே அவர்களுக்குக் கிடைப்பதில்லை. சிறிது காலத்துக்கு முன்பு அமெரிக்க ஐக்கிய மாகாணங்களில் நியூயார்க் நகரத்தின் பிரசித்தி பெற்ற சிங்சிங் சிறையில் இந்தப் பிரச்னை எழுந்தது. அந்த சிறைக்குள் பொது உடமைப்பத்திரிகைகள் வரலாகாதென்று தடுக்கப்பட்டன. அமெரிக்காவில் ஆளும் வகுப்பர்களுக்குள் சமதர்மிகளுக்கு விரோதமாக உணர்ச்சி மிகவும் வலுவாக இருந்தது. இவ்வாறு இருந்தபோதிலும் பொது உடமைப்பத்திரிகைகள், பிரசுரங்கள் உள்பட வேண்டுமான நூல்களையும் பிரசுரங்களையும் கைதிகள் சிறைக்குள் வரவழைத்துக் கொள்ளலாமென்று சிறை அதிகாரிகள் முடிவுசெய்தார்கள். மனதைப் புகைத்து தீப்பற்றிக்கொள்ளச் செய்யும் கூடார்த்தப் படங்களை மட்டும் விலக்கிவைக்க வேண்டும் என்று உத்தரவு கொடுத்தார்கள். இந்தியாவிலே சிறையில் கைதிகளுக்கு சாதாரண பத்திரிகைகளும் எழுத்துக்கருவிகளும் கொடுக்கப்படா

மலிருக்கும்பொழுது சிறையில்மனதின் சுதந்திரத்தைப்பற்றி விவாதம் செய்வது கொஞ்சம் அபத்தமானதுதான். ஏதோ சிலவற்றைத் தடுத்தார்கள் என்பதல்ல. இந்தியாவிலே கைதிகளுக்கு ஒன்றையுமே கொடுப்பதில்லை. வங்காளத்திலே முதல் வகுப்புக் கைதிகளுக்கும் பொதுவாக ஏ. வகுப்புக் கைதிகளுக்கும் வழக்கமாக எழுத்துக்குத் தேவையான கருவிகள் கொடுக்கப்படுகின்றன. ஆனால் இவர்களுக்குக்கூட தினசரிப்பத்திரிகைகள் உத்தரவாவதில்லை. ஏதேனும் தினசரிப்பத்திரிகை கொடுக்கப்பட்ட போதிலும் அது அரசாங்கத்தார் இச்சைப்படி அனுப்பியதாகும். பி. ஸி. வகுப்பு அரசியல் கைதிகளுக்கும் மற்றக்கைதிகளுக்கும் எழுத்துக் கருவிகள் கொடுக்கப்படுவதில்லை. பி. வகுப்புக் கைதிகளுக்கு சில சமயங்களில் அவைகள் தனிச் சலுகையாக கொடுக்கப்படும். ஆனால் அவைகள் அடிக்கடி வாபஸ் வாங்கிக்கொள்ளவும் படுகின்றன. ஏ. வகுப்பில் ஒரு கைதி இருந்தால் மற்றைய வகுப்புகளிலும் ஆயிரம் கைதிகள் இருப்பார்கள். இந்தியாவில் பொதுவாக கைதிகளின் நிலைமையைப்பற்றி யோசிக்கும்பொழுது ஆயிரத்தில் ஒருவர்கூட இல்லாத ஏ. வகுப்பு கைதிகளை ஒதுக்கிவிடலாம். எனினும் மற்ற நாடுகளில் சாதாரணக் கைதிகளுக்கு நூல்கள், பத்திரிகைகள் சம்பந்தமாக இருக்கும் உரிமைகளுக்கு, குறைவாகவே இந்தியாவில் ஏ வகுப்புக் கைதிகளுக்குக்கூட உரிமைகள் இருக்கின்றன என்பது ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டிய விஷயமாகும்.

ஆயிரத்தில் பாக்கியிருக்கும் தொளாயிரத்துத் தொண்ணூற்றென்பது பேர்களுக்கும் ஒவ்வொரு சமயமும் இரண்டு மூன்று புத்தகங்கள் அனுமதிக்கப்படும். ஆனால் அவர்களின் நிலைமையில் இந்த உரிமையை அவர்களால் எப்பொழுதும் பயன்படுத்திக் கொள்ள முடியாது. சிறையில் எழுதுவதும் படித்த புஸ்தகங்களைப்பற்றி குறிப்புகள் எடுப்பதும் தவறான ஜோலிகளாகும். இந்த விளையாட்டிலே கைதிகள் ஈடுபடலாகாது. வேண்டுமென்றே இவ்வாறு அறிவு அபிவிருத்தியைத் தடுக்கப்பார்ப்பது விநோதமாய் இருக்கிறது. அது அரசாங்கத்தின் நோக்கத்தை வெளியிடுவதாகவும் இருக்கிறது. கைதியைச் சீர்திருத்தி அவனை நாகரீகத்தில் உயர்த்த வேண்டுமானல் அவனுடைய மனதைத் திருத்தி வேறு வழியில் திருப்ப

வேண்டும். அவனுக்கு எழுதப் படிக்க கற்றுக் கொடுக்க வேண்டும். ஏதேனும் ஒரு தொழிலைக் கற்பிக்க வேண்டும்.

ஆனால் இத்தகைய கருத்து ஒன்றும் இந்தியாவிலிருக்கும் சிறை அதிகாரிகளுக்குத் தோன்றினதாகத் தெரியவே இல்லை. நிச்சயமாக இத்தகைய கருத்து ஐக்கிய மாகாணங்களில் இல்லவே இல்லை. சமீபகாலமாக இளைஞர்களுக்கும் வாலிபர்களுக்கும் சிறையில் எழுதப்படிக்க கற்றுக்கொடுக்க முயற்சிகள் செய்யப்பட்டுவருகின்றன. ஆனால் அவைகள் முழுதும் பயனற்றவையாகும். இவைகளை நிர்வகித்து நடத்தும் மனிதர்கள் சிறிது கூட அந்த வேலைக்குத் தகுதி பெறாதவர்கள். கைதிகளுக்கு கற்றுக் கொள்ள விருப்பமில்லை யென்று சில சமயம் சொல்லப்படுகிறது. ஆனால் என் அனுபவமோ இதற்கு நேர் விரோதமானதாகும். கற்றுக் கொள்வதற்காக என்னிடம் வந்தவர்களில் பெரும்பான்மையோருக்கு எழுதப்படிக்க ஆவல் நிறைந்திருந்ததைக் கண்டேன். எங்களிடம் வந்த கைதிகளுக்கு நாங்கள் சொல்லிக் கொடுப்பது வழக்கம். அவர்கள் நன்றாக உழைத்துக் கற்றுக் கொண்டார்கள். சில சமயங்களில் நடுநிசியில் நான் எழுந்திருந்தால் அப்பொழுதுகூட இரண்டொருவர்கள் விடுதியில் மங்கிய விளக்கு வெளிச்சத்தில், தங்களுடைய மறுநாள் பாடங்களைக் கற்றுக் கொண்டிருப்பதை நான் ஆச்சரியத்துடன் பார்த்திருக்கிறேன். ஒரு ரகத்திலிருந்து மற்றொரு ரகமாக நான் பல புஸ்தகங்களைப் படித்தேன். ஆனால் வழக்கமாக கஷ்டமான புஸ்தகங்களைத்தான் படித்தேன். நாவல்களைப் படித்தால் மனதில் சோம்பேறித்தனம் உண்டாகின்றது. எனவே அதிகமாக அவைகளை நான் படிப்பதில்லை. சில சமயங்களில் கனமான நூல்களை அதிகமாகப்படித்து அலுத்துப் போவேன். அப்பொழுது எழுதத் துவக்குவேன். நான் என்னுடைய மகளுக்கு எழுதிய சரித்திர சம்பந்தமான தொடர் கடிதங்கள் என்னுடைய இரண்டு வருஷ வேலை. அதற்குப் பொழுது சரியாக இருந்தது. எனது மனத்திறமை கெடாமலிருப்பதற்கு அது பெரிதும் உதவியாக இருந்தது. நான் பண்டைக் காலங்களைப்பற்றி சரித்திரமாக எழுதிக்கொண்டிருந்ததால் அந்தக் காலத்தில் வாழ்ந்து வந்ததாக எண்ணிக்கொண்டு என்னுடைய சிறை வாழ்க்கையை அநேகமாக மறந்துபோனேன்.

உலக சஞ்சார நூல்களைப் படிப்பதில் எனக்கு எப்பொழுதுமே பிரியம். பண்டைக்காலத்து சஞ்சாரிகளான ஹியூன்த்பொங், மார்க்கோபோலோ, இபனேபட்டுட்டா முதலியவர்கள் எழுதிய வரலாறுகளையும் மத்திய ஆசியாவில் பாலைவனங்கள் வழியாகப் பிரயாணம் செய்த ஸ்வென் ஹெடின் திபேத்தின் விநோத சம்பவங்களைக் கண்ட ரோரிக் முதலிய நவீனர்கள் எழுதிய வரலாறுகளைப்படிக்க ஆசை. மலைகளையும், பனிக்குன்றுகளையும், பாலைவனங்களையும்பற்றி சித்திரங்களுடன் எழுதியிருக்கும் நூல்களிலும் பிரியம். ஏனெனில் சிறையில் அடைபட்டிருக்கையில் விஸ்தாரமான பிரதேசங்களையும் சமுத்திரங்களையும் மலைகளையும் காண தாபம் ஏற்படுகிறது. இமயமலை, ஆல்ப்ஸ் மலை இவைகளைப் பற்றிய நேர்த்தியான சித்திர நூல்கள் சில என்னிடம் இருந்தன. என்னுடைய விடுதியில் உஷ்ணம் 115 டிகிரிக்கு மேல் இருக்கும் பொழுதெல்லாம் இந்தப் படப்பனிக் குன்றுகளை உற்று நோக்கி அழகு பார்த்து ஆறுதல் அடைவேன். அட்லாஸைப் பார்த்தால் எனக்குப் பரபரப்பு உண்டாகும். பழையஞாபகங்கள் எல்லாம் வரும். நாங்கள் போய்ப் பார்க்க எண்ணிய இடங்களைப்பற்றி கனவு காண்பேன். சென்ற காலத்தில் நாங்கள் போயிருந்த இடங்களை மீண்டும் காணவும், படத்தில் புள்ளிபுள்ளியாக பொறிக்கப்பட்டிருக்கும் பெரிய நகரங்களைக் காணவும், தடித்த கோடுகளில் குறிப்பிடப்பட்டிருக்கும் மலைகளின்பேரில் ஏறிச் செல்லவும், நீல வர்ணங்களில் தீட்டிக்காண்பித்திருக்கும் கடல்களைத்தாண்டவும், உலகத்தின் அழகுகளைக் காணவும் மனித வர்க்கம் போராட்டத்தாலும் துன்பங்களாலும் மாறிக் கொண்டு வரும் காட்சியைக் கவனித்துப் பார்க்கவும் பேராவல் உண்டாகும். உடனே மிக்க துயரத்தோடு அட்லாஸைக் கீழே வைத்து விட்டு எங்களுடைய சாரமில்லாத தினசரி வாழ்க்கையையும், எங்களைச் சூழ்ந்து நிற்கும் மதில் களையும் நினைப்பூட்டிக் கொள்வோம்.

. . . . . . . . . . . . .

. . . . . . . . . . . . .

## XLV

### சிறைப் பிராணிகள்

பதினுலரை மாதங்கள் டேராடூன் சிறையில் என்னுடைய சிறு அறையில் வசித்து வந்தேன். நான் அந்த அறையோடு கலந்து அதன் ஒரு பகுதியாக ஆகிவிட்டேன் போல் தோன்றிற்று. அந்த அறையில் ஒவ்வொரு சிறு பாகமும் எனக்குத் தெரியும். ஒவ்வொரு குழியும் தெரியும். வெள்ளையடித்த சுவர்களிலும், மேடுபள்ளமான தரையிலும், செல்லரித்த அட்டைகளின்பேரில் இருந்த கூரையிலும் இருந்த ஒவ்வொரு அடையாளமும் குழியும் எனக்குத் தெரியும். வெளியே இங்கு மங்கும் முளைத்துக் கிடக்கும் புல்லையும் சிறு சிறு துண்டுக் கற்களையும் பழைய நண்பர்களாகப் பாவித்து ஆனந்தம் அடைவேன். என்னுடைய அறையில் நான் தனியாக வசிக்கவில்லை. ஏனென்ருல் குழவிகளும் பூச்சிகளும் ஏராளமாகக் குடியேறி இருந்தன. உத்தரங்களின் பின்னே வீடு கட்டி வாழ்ந்த பல்லிகளில் பல சாயங்கால வேளைகளில் இரை தேடிக் கொண்டு வெளியே வரும். மனித எண்ணங்களாலும் உணர்ச்சிகளாலும், வெளியுலகில் அடையாளங்கள் ஏற்படுமாகில் அந்த அறைக்குள் முன் வசித்தவர்களின் ஏராளமான அடையாளங்கள் இருக்க வேண்டும். அந்தச் சிறு இடத்தில் இருந்த ஒவ்வொரு பாகத்திலும், அதன் காற்றிலுங்கூட அந்த அடையாளங்கள் ஒட்டிக் கொண்டிருக்க வேண்டும்.

வேறு சிறைகளில் எனக்கு நல்ல அறைகள் இருந்தன, ஆனல் டேராடூன் சிறையில் நான் மிகுதியும் பாராட்டிய உரிமையொன்று எனக்கு கிடைத்தது. பக்கா சிறை, ரொம்பச் சிறிய இடம். எனவே ஜெயில் காம்பவுண்டுக்குள், ஆனல் சிறை மதில்களுக்கு வெளியே இருந்த பழைய விடுதி ஒன்றில் வைக்கப்பட்டிருந்தோம். இந்த இடம் மிகவும் சிறிது. அதற்குள்ளே நடப்பதற்கு இடமே இல்லை. ஆகையால்

காலையிலும் மாலையிலும் வாயிற்படிக்கு முன்னால் நூறு கஜ தூரம் வரையில் போய் வர எங்களுக்கு அனுமதி கிடைத்தது. நாங்கள் சிறைக் காம்பவுண்டுக்குள்தான் இருப்போம். ஆனால் மதில்களுக்கு வெளியே வந்துவிட்டதால் மலைகளையும் கழனிகளையும் எட்டத்திலிருந்த ரஸ்தாவையும் பார்க்க வசதி ஏற்பட்டது. இது எனக்கு மட்டும் கிடைத்த தனி உரிமை அல்ல. டேராடூனில் வைக்கப்பட்டிருந்த ஏ. வகுப்புக் கைதிகள் எல்லோருக்கும் பொதுவான உரிமையாகும். காம்பவுண்டுக்குள் ஆனால் சிறை மதில்களுக்கு வெளியே வெள்ளைக்கார விடுதி என்று இன்னொரு சிறிய கட்டிடம் இருந்தது. இதைச்சுற்றி சுவர் கிடையாது. இந்த விடுதிக்குள் இருக்கும் யாரும் மலைகளையும் வெளியே நடக்கும் எல்லாவற்றையும் பார்க்க முடியும். இங்கே காவலில் வைக்கப்பட்டிருந்த ஐரோப்பியக் கைதிகளும் மற்றவர்களும் சிறைவாயிற்படி வரையிலும் காலையிலும் மாலையிலும் நடக்க அனுமதிக்கப்பட்டிருந்தார்கள்.

நெடு மதில் சூழ்ந்த சிறைக்குள்ளே நீண்ட காலம் வசித்துவந்த கைதிக்குத்தான் வெளி உலகக் காட்சியாலும் வெளியே நடமாடுவதாலும் ஏற்படும் மனமலர்ச்சி நன்கு விளங்கும். இந்த வெளி சஞ்சாரங்களில் எனக்கு ரொம்ப பிரியம். மழை தாரைதாரையாகக் கொட்டினாலும், கணுக்கால் வரையில் தண்ணீரில் நடந்துபோக நேர்ந்தாலும் மழைகாலத்தில்கூட நான் வெளியில் உலாத்தாமல் இருந்ததில்லை. எந்த இடத்திலுமே வெளி சஞ்சாரம் என்றால் எனக்கு ரொம்பப் பிடித்தம். அதுவும் பக்கத்திலே இருக்கும் இமயமலைக் காட்சியைக் கண்டுவிட்டால் சும்மா இருக்கமுடியுமா? என்னுடைய ஆனந்தம் பெருக்கடைந்து சிறையின் அலுப்பை இந்த வெளி நடை வெகுவாக நீக்கிற்று. நீண்ட காலம் பேட்டி இல்லாமல் நான் தனியாக வசித்துவந்த மாதங்களிலும் இந்த மலைகளை எப்பொழுதும் பார்க்கக் கொடுத்து வைத்தது எனது பாக்கியமே ஆகும். என்னுடைய அறையிலிருந்து மலைகளைப் பார்க்க முடியாது. ஆனால் என்னுடைய மனதில் அவைகள் நிறைந்து கிடந்தன.

அவைகள் என் பக்கத்திலே இருக்கின்றன என்ற எண்ணம் என்னைவிட்டு ஒரு நிமிஷமும் அகன்றதில்லை. எங்களுக்குள்ளே இரகசியக் காதல் வளர்ந்து வந்ததாகத் தோன்

றிற்று. "கூட்டம் கூட்டமாக பட்சிகள் வந்து உயரப் பறந் தோடிப்போயின. வான வீதிகளிலே, தனித்து நின்ற மேக மும் தனது சஞ்சாரத்திற்குக் கிளம்பி விட்டது. நானும் எனக்கு எதிரே வானளாவி நிற்கும் சிங்டிங் சிகரமும் தான் தனித்து நிற்கின்றோம். நாங்கள் இருவரும், மலையும் நானும் ஒருவரைக் கண்டு மற்றொருவர் அலுத்துப் போகவே இல்லை." இவ்வாறு பாடிய கவி லீடாய்ப்போ அவர்கள் மலையை சதா கண்டு அலுத்துப்போக வில்லை. அவரைப்போல நானும் ஒருக்காலும் அலுக்கவில்லை என்று கூற முடியாது. பொதுவாக நான் அலுத்துப் போவதில்லை என்று தான் சொல்லுவேன். மலை கிட்ட இருப்பதால் எனக்கு அதிகமான ஆறுதல் உண்டாயிற்று. மலை அசையாமல் அலுக்காமல் இரு ந்த இடத்திலேயே கோடிக்கணக்கான வருஷங்களாக இருப்ப தால் அந்த மலை தனது நீண்டகால ஞானத்தைக்கொண்டு அடிக்கடி மாறும் என்னுடைய மனதைக் கேலி செய்தது போலிருந்தது. டேராடூனில் வசந்தகாலம் மிகவும் இன்ப மாய் இருக்கும். பள்ளத்தாக்கை விட டேராடூனில் நீண்ட காலம் வசந்த காலப்பருவம் இருக்கும். மழையினால் எல்லா மரங்களும் இலையுதிர்ந்து போய் மொட்டையாயும் முண்ட மாயும் இருந்தன. சிறைவாசலுக்கு எதிரில் நின்று கொண்டி ருந்த நாலு கம்பீரமான அரசமரங்களும் அப்படியே இலை கள் எல்லாம் கொட்டிப் போய் நின்று கொண்டிருந்த காட்சி எனக்கு ஆச்சரியமாயிருந்தது. வானளாவி இன் பமே இல்லாமல் அவைகள் அங்கே நின்று கொண்டிருந்தன. வசந்தகாலத்தின் காற்று அவைகளின் மேலே பட்டு துன் பத்தைப் போக்கி அவைகளின் உள்ளுக்குள்ளே இருந்த பரமாணுக்களுக்கும் உயிர்ச்சத்தைஊட்டிவிட்டது. உடனே அரசமரங்களிலும் மற்ற மரங்களிலும் ஒருவிதமான பரப ரப்பு தோன்றிற்று. திசைகளுக்குப்பின்னால் ஏதோ இரகசிய மாக வேலைகள் நடக்கிறதைப்போல அவைகளைச்சுற்றி யெல் லாம் மூடு மந்திரமாய் இருந்தது. அந்த மரங்களிலெல்லாம் பச்சைப்பசேல் என்று முளை கிளம்புவதைப்பார்த்து திடுக் கிட்டுப்போனேன். பார்க்கப் பார்க்க ஆனந்தக் காட்சியாக இருந்தது. விரைவிலே இலைகள் கோடிக் கணக்கில் வெளியே வந்து சூரிய வெளிச்சத்தில் பிரகாசித்து காற்றில் அலைந்து விளையாடிக்கொண்டிருந்தன. பொட்டிலிருந்து இலைக்கு இவ்வளவு விரைவிலே மாறுதல் ஏற்படுவது எவ்வளவு ஆச்சரியமாக இருக்கிறது! இள மாந்தளிர்கள் பழுப்புச்

சிவப்பு வர்ணம் கொண்டதென்று அது வரையிலும் எனக்குத் தெரியாது. காஷ்மீரக் குன்றங்களில் இலையுதிர் காலத்தில் காணுவது அதே வர்ணம். ஆனால் இந்த இளந் தளிர்கள் சீக்கிரமாக நிறம் மாறி பச்சையாக ஆகிவிடுகின்றன. பருவக்கால மழைகள் எப்பொழுதும் வரவேற்கப்பட வேண்டியவைகளாகும். ஏனென்றால் அவைகள்தான் கோடைச்சூட்டைத் தணிக்கின்றன. ஆனால் நல்ல சாமான் அதிகமாகப் போய்விட்டாலும் கஷ்டமாகத்தான் இருக்கின்றது. டேராடூன் பகுதி வருண பகவான் பிரியத்தோடு "டேரா" அடிக்கும் இடங்களில் ஒன்று. பருவக்காலம் ஆரம்பித்து ஐந்தாறு வாரங்களுக்குள்ளாகவே ஐம்பது அல்லது அறுபது அங்குல மழை பெய்துவிடும். மேலே இருந்து ஒழுகுகிறதா அல்லது ஜன்னல் மூலமாக சாரல் அடிக்கிறதா என்று கவனமாகப்பார்த்து ஜலமில்லாத சிறிய இடத்தில் காலைக் கட்டிக் கொண்டு எப்பொழுதும் உட்கார்ந்திருப்பதென்பது இனிப்பான காரியமல்ல.

மறுபடியும் இலையுதிர்காலம் இன்பமாகத்தானிருந்தது. ரொம்பவும் மழை பெய்தாலொழிய மாரிகாலமும் இன்பமாக இருந்தது. ஆனால் இடியும் மழையும் தொளைக்கிற காற்றோடு சேர்ந்து கொள்ளும்பொழுது நல்லவீடும், உஷ்ணமும் வேண்டுமென்று ஆசை உண்டாகும். சில சமயம் ஆலங்கட்டிமழை பெய்யும். ஆலங்கட்டி சாதாரண கோலிக் குண்டுகளைக் காட்டிலும் பெரிதாக இருக்கும். அவைகள் இரும்புத் தகட்டுக்கூரையிலே விழும்பொழுது ஒரே சத்தமாக இருக்கும். போர்க் களத்தில் துப்பாக்கிப் படைகள் சண்டை போடுவது போல அவ்வளவு சத்தம் கேட்கும். ஒருநாள் எனக்கு நன்றாக ஞாபகம் இருக்கிறது. அது 1932-ம் வருடம் டிசம்பர் மாதம் 24-ந்தேதி. அன்றைக்கு நாள்முழுதும் இடியும் புயலும் மழையும். குளிர் பொறுக்க முடியவே இல்லை. தேக சுகத்தைப் பொறுத்த மட்டிலும் சிறையில் நான் கழித்த மகாகஷ்டமான நாட்களில் அது ஒன்று. மாலையில் திடீரென்று வெக்காளித்தது. உடனே என்னுடைய மனத்துயரம் எல்லாம் நீங்கி கனமான பனிப் போர்வையைப் போர்த்துக்கொண்டிருந்த பக்கத்து மலைகளையும் குன்றுகளையும் பார்த்தேன். அடுத்த நாள்—கிறிஸ்மஸ் பண்டிகை நாள். மிகவும் தெளிவாகவும் நேர்த்தியாகவும் இருந்தது. பனிமலைகளின் அழகான காட்சி கண்ணில்பட்டது.

சாதாரண அலுவல்கள் செய்யமுடியாததனல், இயற்கையின் மர்மங்களை நாங்கள் நுட்பமாகக் கவனித்து வந்தோம். எங்கள் கண்ணுக்குத் தென்பட்ட அநேக மிருகங்களையும் பூச்சிகளையும் கவனித்தோம். கவனித்துப் பார்த்ததும் என்னுடைய அறையிலும் அதற்கு வெளிப்புறத்திலும் எல்லாவிதமான பூச்சிகளும் இருப்பதைக் கண்டேன். தனியாக இருக்கிறேன் என்று நான் முறையிட்டுக்கொண்டிருந்த காலத்தில் ஒன்றுமே இல்லாததுபோலவும், காலியாக இருந்ததுபோலவும் தோன்றின, அந்த முற்றத்தில் உயிர்கள் நிறைந்து நின்றதைக் கண்டேன். இந்த ஊர்வனவும் பறப்பனவும் நடப்பனவும் என் வழிக்கு வராமல் தங்கள் வாழ்க்கையை நடத்திவந்தன. எனவே அவைகளின் வழிக்கு நான் ஏன் போகவேண்டும்? ஆனால் எனக்கும் மூட்டைப் பூச்சிகளுக்கும் கொசுக்களுக்கும் ஈக்களுக்கும் இடைவிடாமல் போர் நடந்து கொண்டே இருந்தது. குளவிகளை நான் பொறுத்துக்கொண்டிருந்தேன். என்னுடைய அறையில் அவைகள் நூற்றுக்கணக்கில் இருந்தன.

ஒரு நாள் அகஸ்மாத்தாக ஒரு குளவி என்னைக் கொட்டிவிட்டது. உடனே எங்களுக்குள் சண்டை. என்னுடைய கோபத்திலே குளவிப் பூண்டையே அழிக்க முயற்சி செய்தேன். அவைகள் முட்டை இட்டிருந்த தங்களுடைய தற்காலிக வீட்டைக் காப்பாற்றிக்கொள்வதற்காக குளவிகள் என்னோடு தைரியமாக யுத்தம் செய்தன. கடைசியாக, அவைகள் என் பாதையில் குறுக்கிடாமல் இருந்தால், அவைகளை சமாதானமாக விட்டு விடுவதாகத் தீர்மானம் கொண்டேன். ஒரு வருஷத்துக்கு அதிகமாக, இந்தக் குளவிகளுக்கு மத்தியில், நான் அந்த அறையில் வசித்து வந்தேன். ஆனல், எங்களுடைய சண்டைக்குப் பிறகு, அவைகள் என்னை ஒரு பொழுதும் தாக்கியதே இல்லை. நாங்கள் ஒருவருக்கொருவர் மரியாதையாக இருந்தோம். வௌவால்களைக் கண்டால் எனக்குப் பிடிப்பதில்லை. ஆனல், அவைகளைச் சகித்துத் தொலைக்கவேண்டி இருந்தது. மாலையில் வெளிச்சம் மறைகிற சமயத்தில் அவைகள் சத்தம் செய்யாமல் பறக்கும். இருள் பரவி வரும் வானத்தில் அவைகளை நன்ருகக் காணலாம். ஆகாயப் பிசாசுகள்! அவைகளைக் கண்டால் எனக்கு வெறுப்பு. அவைகள் என் முகத்தைத் தொட்டுக் கொண்டு போவதைப் போலத் தோன்றும். அவை

கள் என்னை இடித்துவிடுமோ என்று நான் எப்பொழுதும் பயப்படுவேன். ஆகாயத்தில் உயரத்தில் ராஜா வௌவால்கள் பறந்து செல்லும். எறும்புகளையும் கரையான்களையும் ஏனைய பூச்சிகளையும் மணிக்கணக்கில் கவனித்துப் பார்த்துக் கொண்டிருப்பேன். மாலை வேளைகளில் தங்களுடைய இரையில் குறி வைத்து, பல்லிகள் சத்தப்படாமல், நகருவதையும் பல்லிகள் விநோதமாகத் தங்களுடைய வால்களை ஆட்டிக்கொண்டு ஒன்றையொன்று வேட்டையாடுவதையும் பார்த்திருக்கிறேன். சாதாரணமாக பல்லிகள் குளவிகளிடம் செல்லுவதில்லை. ஆனால், இரண்டுதடவை மட்டும் அவைகள் மிகுந்த எச்சரிக்கையுடன் குளவிகளிடம் சென்று, அவைகளை முன்புறத்திலிருந்து பிடித்துக்கொள்வதைப் பார்த்தேன். குளவி கொட்டுவதைத் தடுக்க பல்லிகள் தெரிந்தே முயலுகின்றனவோ அல்லவோ, என்பது எனக்குத் தெரியாது.

அப்புறம் அணில்கள்; பக்கத்திலிருக்கும் மரங்களில் அவைகளைக் கூட்டமாகக் காணலாம். அவைகளில் பல மிக்க துணிவுடன் எங்களுக்கு அருகாமையில் கூட வந்துவிடும். லக்ஷ்மணபுரி சிறையில் அநேக மணி நேரம் நான் அசையாமல் உட்கார்ந்து கொண்டே படிப்பேன். அணில் ஒன்று என் கால்கள் மீது ஏறி முழங்காலில் உட்கார்ந்து கொண்டு நாலா பக்கங்களிலும் பார்த்தது. பிறகு, அது என்னுடைய கண்களுக்குள்ளே பார்த்தது. பார்த்துவிட்டு நான் மரமில்லை என்று தெரிந்து கொண்டது. அல்லது என்னை எதுவாக அது நினைத்துக் கொண்டிருந்ததோ, அந்தப் பொருளல்லவென்று கண்டு கொண்டிருக்க வேண்டும். பயத்தினால் ஒரு நிமிஷம், அது ஸ்தம்பித்து நின்ற பிறகு ஓரே நாலுகால் பாய்ச்சல்தான்! சிறிய அணில் குஞ்சுகள் சில சமயங்களில் மரங்களிலிருந்து பொத்தென்று விழும். அவைகளின் பின்னே தாய் அணில் வந்து, சிறிய பந்தைப் போல் அவைகளைச் சுருட்டி பத்திரமாக எடுத்துச் செல்லும். சில சமயம் குஞ்சு வழி கெட்டு வந்து விடும். இவ்வாறு வழி கெட்டுவந்த குஞ்சுகளில் மூன்றை என்னுடைய தோழர்களில் ஒருவர் எடுத்து வளர்த்தார். அவைகள் மிகச் சிறியவை. அவைகளுக்கு எப்படி ஆகாரம் கொடுப்பது என்பது பெரிய பிரச்னையாகப் போய்விட்டது. அந்தப் பிரச்சனையை ஒருவாறு புத்திசாலித்தனமாக தீர்த்து விட்டோம். பவுண்டன் பேனாவுக்கு மை அடைக்கும் ரப்பர் குழாயில் கொஞ்சம் பஞ்சைவைத்து

அடைத்து அதை ஆகாரம் ஊட்டும் புட்டியாகச் செய்யப் பட்டது. ஆல்மோரா மலைச்சிறையைத் தவிர நான் இருந்த சிறைகளில் எல்லாம் புறாக்கள் ஏராளமாக இருந்தன. அவை களை ஆயிரக் கணக்கில் காணலாம். சாயந்திர வேளைகளில் ஆகாயத்தில் அவைகள் ஒரே கூட்டமாக இருக்கும். சில சமயங்களில் சிறை அதிகாரிகள் அவைகளைச் சுட்டு வீழ்த்தி சாப்பிட்டு விடுவார்கள். எந்த இடத்திலும் மைனாக்களைப் பார்க்கலாம். என்னுடைய டேராடூன் சிறையறையின் கத வில் ஒரு ஜோடி கூடு கட்டிக் கொண்டிருந்தன. அவை களுக்கு நான் தீனி போடுவது வழக்கம். அவைகள் மிகவும் பழகிப்போய்விட்டன. காலையிலோ மாலையிலோ தீனிபோட நான் தாமதித்துவிட்டால் அவைகள் என் பக்கத்தில் வந்து உட்கார்ந்துகொண்டு தீனிக்காக உரக்கச் சத்தமிடும். அவை கள் செய்யும் ஜாடைகளைக் கவனிப்பதும் அவைகளுடைய ஆத்திரக் குரல்களைக் கேட்பதும் வேடிக்கையாக இருக்கும்.

நைனியில் ஆயிரக் கணக்கான கிளிகள் இருந்தன. அவைகளிற் பல என்னுடைய விடுதியின் சுவர்களிலே இருந்த வெடிப்புகளில் குடியிருந்து வந்தன. அவைகள் கொக்கரித்து காதல் செய்யும் காட்சி மிகவும் கவர்ச்சி பொருந்தியதாகும். சில சமயங்களில் ஒரு பெண் கிளிக்காக இரண்டு ஆண் கிளிகளுக்குள் கடுமையான போர் நடக்கும். சண்டையை மிகவும் அமைதியுடன் அந்தப் பெண்கிளி பார்த்துக்கொண்டிருக்கும். வெற்றிபெற்ற ஆணுக்கு முத்தம் கொடுக்க தயாராகக் காத்துக்கொண்டிருக்கும். டேராடூனில் பலவகைப் பறவைகள் இருந்தன. அவைகள் போடும் சத்தம் ஒரே கதம்பச் சத்தம்தான். ஒரு குருவி ஒரு மாதிரி கத்தும். இன்னொன்று சரபிரவென்று சத்தம் செய்யும். இந்தச் சத்தங்களுக்கு மேலாக குயிலின் சோகக் குரல் தெளிவுடன் கேட்கும். மழைக்காலத்தில் அதற்குச் சற்று முன்னேடும் மூளைக்காய்ச்சல் பட்சி நாங்கள் இருந்த இடத்துக்கு வந்து சேர்ந்தது. அதற்கு ஏன் மூளைக்காய்ச் சல் பட்சியென்று பெயர் கொடுத்தார்கள் என்பதை சீக்கிரம் தெரிந்துகொண்டேன். இரவிலும் பகலிலும் சூரியவெளிச்சத் திலும் கொட்டுகிற மழையிலும் அது ஒரே மாதிரியாகத் திருப்பித் திருப்பி சத்தம்போடும் பிடிவாதம் ஆச்சரியமாக இருந்தது. இந்தப் பறவைகளில் பலவற்றை எங்களால் பார்க்கமுடியாது. எங்களுடைய சிறிய முற்றத்தில் மரங்கள்

இல்லாமையால் அவைகள் வருவதில்லை. அவைகள் செய்யும் சத்தத்தைத்தான் எங்களால் கேட்கமுடியும். ஆகாயத்தில் நேர்த்தியாக ஊர்வதைப்போல வல்லூறுகளும் பருந்துகளும் பறப்பதைப் பார்ப்பேன். திடீரென்று அவைகள் கீழே வரும். பின்னர் காற்றடித்து அவைகளை இழுத்துச் சென்றாலும் சும்மா காற்று வாடையிலேயே போய்க் கொண்டிருக்கும். அடிக்கடி கூட்டம் கூட்டமாக நாரைகள் எங்கள் தலைக்குமேலே பறந்து செல்லும்.

பெரில்லி சிறையில் குரங்குகள் கூட்டம் கூட்டமாக இருந்தன. அவைகள் அடிக்கிற கூத்துக்களைக் கவனித்துப் பார்த்தால் எப்பொழுதும் தமாஷாக இருக்கும். ஒரு சம்பவம் எனக்கு நன்றாக ஞாபகம் இருக்கிறது. சிறிய குரங்குக்குட்டி ஒன்று எங்களுடைய விடுதி அடைப்புக்குள் எப்படியோ வந்துசேர்ந்து விட்டது. ஆனால் அதனால் மீண்டும் சுவரின்பேரில் ஏறமுடியவில்லை. வார்டரும் சில கைதிகளும் கைதி வார்டர்களும் சேர்ந்து அதைப்பிடித்து அதன் கழுத்தில் ஒரு கயிற்றைக் கட்டினார்கள். குட்டியின் பெற்றோர்கள். (என்று நினைக்கிறேன்) இதை எல்லாம் சுவர் உச்சியிலிருந்து பார்த்துக்கொண்டே இருந்தன. அவைகளுடைய ஆத்திரம் வளர்ந்துகொண்டே இருந்தது. திடீரென்று அவைகளில் ஒன்று (பெரிய குரங்கு) கீழேகுதித்து குரங்குக்குட்டியைச் சுற்றிக்கொண்டிருந்த கூட்டத்தில் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து தாக்கிற்று. அப்படிப் பாய்ந்தது மிகவும் துணிகரமான செயல்தான். ஏனென்றால் வார்டர், கைதிகள் முதலிய எல்லோரிடத்திலும் கம்புகளும் தடிகளும் இருந்தன. அவர்கள் இந்தத் தடிகளை நாலாபக்கமும் சுற்றி குரங்கைத் தாக்கினார்கள். இவர்களில் பல பேர்கள் இருந்தார்கள். இருந்தாலும் உயிரை மதிக்காத துணிவு வெற்றி பெற்றது. மனிதக் கூட்டமோ திகிலடைந்து தங்கள் கம்புகளை விட்டுவிட்டு ஓட்டம் எடுத்தது. குட்டியைக் குரங்கு காப்பாற்றிக் கொண்டு போயிற்று.

எங்களுடைய அறைக்கு சில சமயங்களில் வேறுவகையான விருந்தாட்கள் அழையாமலே வருவார்கள். அவர்கள் வருவது எங்களுக்குப் பிடிப்பதில்லை. இடி இடித்து மழை பெய்து ஓய்ந்தவுடனே தேள்கள் அடிக்கடி எங்கள் அறைகளுக்கு வந்து விடும். அவைகளால் நான் கொட்டப்படாதது

மிகவும் ஆச்சரியப்படத்தக்க சங்கதி. ஏனென்றால் தேளும் நானும் எங்கெல்லாமோ சந்திப்போம். சில சமயத்தில் தேள் என் படுக்கையில் இருக்கும். அல்லது அப்பொழுது தான் நான் கையில் எடுத்துக்கொண்ட புஸ்தகத்தில் அதி உல்லாசமாக வீற்றிருக்கும். கொஞ்ச காலம் பயங்கரமான கருந்தேள் ஒன்றைக் குப்பியில் அடைத்து ஈக்கள் முதலியவற்றை ஆகாரமாக புட்டிக்குள் போட்டு வளர்த்து வந்தேன். பிறகு ஒரு கயிற்றைக் கொண்டு அதைச் சுவரில் கட்டி வைத்திருந்தேன். ஆனால் மாயமாய் அது தப்பி ஓடிவிட்டது. அந்தத் தேளை மீண்டும் என் அறையில் சந்திக்க எனக்கு விருப்பம் இல்லை. ஆகவே என்னுடைய அறையை ஒரு இடம் பாக்கி வைக்காமல் முழுதும் தேடிப்பார்த்தேன். ஆனால் தேள் அகப்படவில்லை.

எங்களுடைய அறைகளிலோ அல்லது அறைகளின் பக்கத்திலோ மூன்று நான்கு பாம்புகளும் வந்து சேர்ந்தன. இவைகளில் ஒன்றைப்பற்றி எப்படியோ செய்தி சிறைக்கு வெளியே போய்விட்டது. இந்தச் செய்தி பத்திரிகைகளில் கொட்டை எழுத்துக்களில் பிரசுரிக்கப்பட்டது. உள்ளபடியே இந்த அதிசய சம்பவத்தை நான் வரவேற்றேன். ஏனென்றால் சிறைவாழ்வு சாரமில்லாத மந்தமான வாழ்வாகும். அந்த இனிப்பில்லாத தன்மையை போக்கக் கூடிய எதுவும் நேர்ந்தால் சந்தோஷமாய் இருந்தது. இதற்காக பாம்புகளை வரவேற்று அவைகளுடன் குலவினேன் என்பதல்ல. ஆனால் சிலர் பாம்பைக் கண்டு பயப்படுவதைப்போல எனக்கு அவ்வளவு திகில் கிடையாது. அவைகள் நடித்தால் எனக்குப் பயந்தான். ஒரு பாம்பைக் கண்டு விட்டால் என்னைக் காத்துக்கொள்ளத்தக்க ஏற்பாடு செய்துகொள்வேன் என்பது உண்மை. ஆனால் அவைகளைக்கண்டால் உடல் நடுக்கமும் வெறுப்பும் எனக்குக் கிடையாது. மரவட்டைகளைக் கண்டால் எனக்குக் கொஞ்சம் அதிக பயம். பயத்தைக்காட்டிலும் அருவருப்பு என்று சொல்லுவது பொருந்தும். கல்கத்தா அலிப்பூர் ஜெயிலில் ஒருநாள் நடுநிசியில் எழுந்திருந்தேன். என்னுடைய காலில் ஏதோ ஒன்று ஊர்ந்து செல்வதாகத் தோன்றிற்று. என்னுடைய மின்சார விளக்கைப் போட்டுப் பார்த்தேன். படுக்கையிலே ஒரு மரவட்டையைக் கண்டேன். என்னை யறியாமலே வியக்கத்தக்க வேகத்துடன் படுக்கையிலிருந்து ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து

அறையின் சுவரின்பேரில் அநேகமாக மோதிக் கொண்டேன். பாவ்லாவ் என்ற மனோதர்ம ஞானியின் தத்துவங்கள் அப்பொழுதுதான் எனக்கு விளங்கிற்று. (ஒருவன் தன்னையறியாமலே செய்யும் காரியங்களைப்பற்றி பாவ்லாவ் எழுதியிருக்கிறார்).

டோராடோனில் நான் ஒரு புதிய மிருகத்தைக் கண்டேன். அதாவது எனக்குப் புதிதாயிருந்த ஒரு மிருகம். சிறைவாயிலுக்குப் பக்கத்தில் நின்று கொண்டு ஜெயிலரோடு பேசிக்கொண்டிருந்தேன். அப்பொழுது விநோதமான விலங்கு ஒன்றைக் தூக்கிக் கொண்டு ஒருவன் போவதைக் கண்டேன். ஜெயிலர் அவனைக் கூப்பிட்டுவிட்டார். அந்த மிருகம் பல்லிக்கும் முதலைக்கும் இடையே இருந்த இனத்தைச் சேர்ந்தது போலத் தோன்றிற்று. அது இரண்டு அடி நீளம். நகங்கள் இருந்தன; உடம்பின் மேல் முள் முள்ளாய்ப் போர்வை; இந்த அவலட்சணமான பிராணி உயிரோடுதான் இருந்தது. அதை ஒரு விநோதமான முடிச்சாக எப்படியோ முறுக்கி, அந்த முடிச்சுக்குள் ஒரு கம்பைவிட்டு கம்பைத் தோளின் மீது சார்த்தித் தூக்கிக்கொண்டு போனான். அதற்கு அவன் "போ" என்று பேர் சொன்னான். ஜெயிலர் அவனை "இதை நீ என்ன செய்யப்போகிறாய்" என்று கேட்டார். அவன் சிரித்துக்கொண்டு "இதிலிருந்து பஜ்ஜி செய்யப்போகிறேன்" என்று பதில் கூறினான். அவன் காட்டில் வசிப்பவன். எப். டப்ளியு. சாம்பியன் அவர்கள் காட்டைப்பற்றி எழுதிய நூலிலிருந்து இந்த மிருகத்துக்கு பங்கோலின் (உடும்பு) என்று பெயர் என்று பின்னர் தெரிந்து கொண்டேன்.

கைதிகள் முக்கியமாக நீண்ட காலதண்டனை பெறும் கைதிகள், தங்கள் உணர்ச்சிகளுக்கு அவகாசமில்லாமல் இருதயம் வரண்டு போகிறார்கள். அவர்கள் எதன் பேரிலும் பிரியம் காண்பிக்க வழி இல்லாமல் அன்புப் பெருக்கை அழித்துக்கொள்ளவேண்டியதாயிருக்கிறது. இதை அழியாமல் காத்துக்கொள்வதற்காக செல்லமாக சில மிருகங்களை அவர்கள் வளர்க்கிறார்கள். சாதாரணக் கைதிகள் இவ்வாறு செய்ய முடியாது. ஆனால் கைதி வார்டர்களுக்குக் கொஞ்சம் சுதந்திரம் உண்டு. கைதி வார்டர்கள் இவ்வாறு மிருகங்கள் வளர்ப்பதை சிறை சிப்பந்திகள் ஆட்சேபிப்பதில்லை. சாதாரணமாக செல்லமாக வளர்க்கப்படும் பிராணிகள் அணில்

கள். கிரிப்பிள்ளைகளை வளர்ப்பதைக் கண்டு எனக்கு விநோத தமாக இருந்தது. நாய்களைச் சிறைக்குள்ளே விடுவதில்லை. ஆனால் பூனைகளைப் பற்றி அவ்வளவு ஆக்ஷேபனை இல்லை. பூனைக்குட்டி ஒன்று ஒருசமயம் என்னிடம் சிநேகம் கொண்டது. அது சிறை அதிகாரி ஒருவருக்குச் சொந்தமானது. அவர் சிறையை விட்டு மாற்றப்படுகையில் அதை அவர் தம்மோடு எடுத்துக் கொண்டு போய் விட்டார். ஒரு நண்பன் போய் விட்டதுபோல் தோன்றிற்று.

நாய்களைச் சிறைக்குள் விடாவிட்டாலும் டேராடூன் சிறையில் அகஸ்மாத்தாக சில நாய்கள் என்னை அண்டிப் பிழைக்க நேரிட்டது. சிறை அதிகாரி ஒருவர் பெண் நாய் ஒன்றைக்கொண்டு வந்திருந்தார். பிறகு அவர் மாற்றப்படவே இந்த நாயை அவர் எடுத்துக் கொண்டு போகாமல் போய் விட்டார். அது இங்கேயே தங்கி விட்டது. அந்த நாய்க்கு இருப்பிடமில்லாமல் தவித்து பாலங்களுக்கடியில் இருந்து கொண்டு வார்டர்கள் போட்ட சிறு சிறு துண்டங்களைச் சாப்பிட்டுவிட்டு அநேகமாக பட்டினி கிடந்தது. சிறைக்கு வெளியே நான் லாக்கப்பில் இருந்ததால் அது வாலைக்குழைத்துக்கொண்டு என்னிடம் வந்து தீனிக்காக கெஞ்சிற்று. தவறாமல் அதற்கு ஆகாரம் கொடுத்துவந்தேன். பாலத்தடியிலே அது குட்டிகள் போட்டது. குட்டிகளில் பல மற்றவர்களால் எடுத்துக்கொண்டு போகப்பட்டன. பாக்கியிருந்த மூன்றையும் நான் வளர்த்துவந்தேன். குட்டிகளில் ஒன்றுக்கு கடுமையாக நோய் கண்டுவிட்டது. அதனால் எனக்கு அதிக தொந்தரவு உண்டாயிற்று. ரொம்ப ஜாக்கிரதையாக பராமரித்து வந்தேன். சில சமயங்களில் இரவில் பத்துப் பன்னிரண்டு தரம் எழுந்திருந்து பார்ப்பேன். நல்ல வேளையாக அது பிழைத்துக்கொண்டது. நான் கவலையோடு அதைப் பாதுகாத்ததால் பிழைத்துக் கொண்டது என்ற காரணத்தால் சந்தோஷம் அடைந்தேன்.

சிறைக்கு வெளியே நான் அதிகமாக மிருகங்களோடு பழகினதில்லை. சிறையிலே அதிகமாகப் பழகினேன். நாய்களின்பேரில் எனக்கு எப்பொழுதுமே ரொம்பப் பிரியம். நான் வெளியிலிருக்கையில் சில நாய்களை வைத்துக்கொண்டிருந்தேன். வேறு அலுவல்களில் என் கவனம் சென்றுவிட்டபடியால் நான் அவைகளைச் சரியாகப் பார்த்து பராமரிக்க

முடியவில்லை. சிறையில் நாய்கள் என்னுடன் கூட இருந்த தால், நான் மிகுதியும் ஆறுதல் அடைந்தேன். இந்தியர்கள் பொதுவாக வீட்டிலே எதையும் செல்லமாக வைத்து வளர்ப்பதில்லை. இந்தியர்கள் பொதுவாக ஜீவஜந்துக்களை ஹிம்சை செய்ய விரும்பா விட்டாலும் அவர்கள் அஜாக் கிரதை உள்ளவர்களாயும் அவைகளிடத்தில் காருண்யமில் லாமலும் இருக்கின்றார்கள். ஹிந்துக்கள் தெய்வமாகப் பாவித்து வணங்குகிற பசுவும்கூட, எதன் காரணமாக அடிக் கடி கலகங்கள் நேருகின்றனவோ அந்தப் பசுவும்கூட, கரு ணையுடன் நடத்தப் படுவதில்லை. பூசை வேறு, தயை வேறு போலும்! அவைகள் இரண்டும் சேர்ந்திருக்காதோ என் னவோ! பல நாடுகள் தங்கள் நடத்தைக்கோ அல்லது ஆசைக்கோ அறிகுறியாக பலமிருகங்களை வைத்துக் கொண் டிருக்கின்றன. அமெரிக்க ஐக்கிய மாகாணங்களும் ஜெர் மனியும் வல்லூறைப் போற்றுகின்றன. இங்கிலாந்துக்குப் பிடித்தவை சிங்கமும், கடிநாயும். பிரான்சுக்கு சண்டைக் கோழி, பழைய ருஷியாவுக்கு கரடி. இந்த மிருகங்களுக்கும் அந்த நாட்டாரின் நடத்தைக்கும் எவ்வளவு தொடர்பு என்பது தெரியாது. ஆனால் அந்த மிருகங்கள் யாவும் தாக் கிப் போரிடும் ஜந்துக்கள்; மாமிச பட்சிணிகள். எனவே இவைகளைக் கொண்டாடி வாழ்க்கையில் வளரும் மக்கள், இவைகளைப் போலவே அநேகமாகி ஆகிவிட்டு பிறரைத் தாக்கியும் கூச்சல் போட்டும் அவர்களை ஆகாரமாகச் செய்து கொள்ள நினைப்பதுவும் ஆச்சரியப் படத்தக்கதே அல்ல. ஹிந்துக்கள் போற்றிக் கொண்டாடும் பிராணி பசு ஆகும். எனவே அவர்கள் சாதுக்களாயும் அஹிம்ஸா வாதிகளா யும் இருப்பதிலும் வியப்பு ஒன்றுமில்லை.

# XLVI

## போராட்டம்

சிறைக்கு வெளியே போராட்டம் நடந்து கொண்டிருந்தது. தற்சமயத்திலோ அல்லது சமீபத்திலோ தாங்கள் கோரிய காரியம் கை கூடப் போவதில்லையென்று நன்றாகத் தெரிந்து கொண்டிருந்தாலும் தைரியசாலியான ஆண்களும் பெண்களும் வலுவான அரசாங்கத்தின் உத்தரவுகளை சாத்வீக முறையில் தொடர்ந்து மீறிக் கொண்டே இருந்தார்கள். கொஞ்சம்கூட குறைக்காமலும் இடைவிடாமலும் அடக்கு முறையை அரசாங்கத்தார் கையாண்டதால், இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி எத்தகைய தன்மை கொண்டது என்பது விளக்கமாகப் போயிற்று. பாசாங்குகள் ஒழிந்து பிரிட்டிஷ் ஆட்சியின் உண்மையான தன்மை வெட்ட வெளியானதைக் கண்டு நாங்கள் சிறிதளவு திருப்தி யடைந்தோம். எந்த இடத்திலும், சிப்பாய்களின் ஈட்டிகள் தன் வெற்றியோடு திகழ்ந்தன. ஈட்டிகளோடு நீங்கள் எதை வேண்டுமானாலும் செய்யலாம். ஆனால் அவைகளின் பேரில் உட்கார மட்டும் முடியாது" என்று பேர் பெற்ற போர்வீரரொருவர் ஒரு சமயம் சொல்லியிருக்கிறார். நம்முடைய ஆத்மாக்களை விற்றுவிட்டு அந்நிய ஆட்சியுடன் விபசாரத்தனம் செய்வதைக் காட்டிலும் நாம் பலாத்காரத்தால் ஆட்சி செய்யப்படுவது உயர்ந்ததென்று நாங்கள் எண்ணினோம். சிறையிலே எங்களால் ஒன்றும் செய்யமுடியாது. ஆனாலும் வெளியிலே இருக்கும் பலரைக் காட்டிலும் சிறைக்குள்ளே சென்று நம்முடைய இயக்கத்துக்குத் தொண்டு செய்து வருகிறோம் என்ற எண்ணம் எங்களுக்கு இருந்தது.

இப்பொழுது நாம் பலவீனர்கள் என்பது உண்மைதான். அதன் பொருட்டு நம்மை பத்திரமாகக் காப்பாற்றிக் கொண்டு இந்தியாவின் எதிர்கால வாழ்க்கையை நாம் பறிகொடுத்துவிடவேண்டுமென்பது சரியா? மனிதர்களின் சக்

திக்கும், சகிப்புத்தன்மைக்கும் குறுகியஎல்லைகள் இருப்பது உண்மை. எனவே போராட்டத்தில் பலர் கைகால் முறிந்து போயிருக்கலாம். சுகக்கேடு அடைந்திருக்கலாம்; இறந்திருக் கலாம்; இயக்கத்தை விட்டு விலகியிருக்கலாம். இயக்கத் துக்கே துரோகம் செய்துமிருக்கலாம். ஆனால் எத்தனையோ இடையூறுகள் நேர்ந்தாலும் போராட்டம் மட்டும் நிற்கா மல் நடைபெற்றுக்கொண்டே இருந்தது. லக்ஷியத்தில் மாசு படியாமல் உறுதி தளராமலிருந்தால் தோல்வியே ஏற்பட முடியாது. என்றைக்கு நமது கொள்கையை விட்டுக் கொடுக் கிறோமோ, என்றைக்கு நம்முடைய உரிமையை இழக்கச் சம்மதிக்கிறோமோ,என்றைக்கு அநியாயத்துக்கு அவலமாகக் கீழ்ப்படிகின்றோமோ அன்றைக்கு உண்மையான தோல்வி உண்டாகும். எதிரி உண்டாக்கிய காயம் விரைவில்ஆறிவிடும். தானே உண்டாக்கிக் கொண்ட காயங்கள்தான் சீக்கிரமாக ஆறமாட்டா. நம்முடைய பலவீனங்களைக் கண்டும் நாட் டாரின் தவறான போக்குக்களைப் பார்த்தும் நாம் அடிக்கடி அலுப்படைந்தோம். ஆனால் இதுவரையில் சாதித்த காரியத் தால் கர்வமும் அடைந்தோம். ஏனென்றால் இந்திய மக்கள் எவ்வளவு கம்பீரமாக நடந்துகொண்டார்கள்! அந்த வீரர் களின் கூட்டத்தில் நானும் ஒருவன் என்று சொல்லிக் கொள்வது இந்தியர்களில் யாருக்கும் கர்வப்படத் தக்க விஷ யம்தான். சட்டமறுப்பு நடைபெற்ற அந்த வருஷங்களில் பகிரங்கமாக காங்கிரஸை நடத்த இரண்டு முயற்சிகள் செய்யப்பட்டன. ஒன்று டில்லியில்; மற்றொன்று கல்கத்தா வில். சட்டத்திற்கு மீறிய கூட்டம் சமாதானத்துடன் பகி ரங்கமாக கூடமுடியாது என்பது வெளிப்படை. பகிரங்க மாக கூடுவதற்கு முயற்சி செய்தால் போலீஸார் நிச்சயம் தடுப்பார்கள். போலீஸார் இந்தக் கூட்டங்களைப் பலவந்த மாகத் தடிகொண்டு தாக்கிக் கலைத்தார்கள். பலரைக் கைது செய்தார்கள். சட்டம்மீறிய இக் கூட்டங்களுக்குப் பிரதி நிதிகளாக இந்தியாவின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் ஆயி ரக்கணக்கானவர்கள் வந்திருந்தது குறிப்பிடத்தக்கது. இந்த இரண்டு கூட்டங்களிலும் ஐக்கிய மாகாணத்து ஜனங்கள் சிறப்பான பங்கு எடுத்துக் கொண்டார்கள் என்பதைக் கேட்க எனக்கு சந்தோஷமாக இருந்தது.

**1933**-ம் வருஷம் மார்ச்சு மாதக் கடைசியில் நடந்த கல் கத்தா காங்கிரஸுக்குப் போவதென்று என்னுடையதாயார்

தீர்மானம் செய்துகொண்டார். பண்டித மாளவியா முதலிய பலரோடும் கல்கத்தாவுக்குப் போகிற வழியில் கைது செய்யப்பட்டு, அவர் அஸென்ஸால் சிறையில் சில நாட்கள் வைக்கப்பட்டிருந்தார். அவர் அசௌகரியமான தேகத்துடன் காண்பித்த ஊக்கத்தையும் பிடிவாதத்தையும் கண்டு நான் ஆச்சரியப்பட்டேன். அவருக்கு சிறையைப்பற்றி லக்ஷியமே இல்லை. சிறையைக் காட்டிலும் கடுமையான கஷ்டங்களை எவ்வளவோ அனுபவித்திக்கிறார். அவருடைய மகன் சிறையிலிருந்தான். அவருடைய மகள்கள் இருவரும் சிறையில் இருந்தார்கள். அவர் அன்போடு நேசித்துவந்த வேறு பலரும் சிறையில் இருந்தார்கள். அவர் வசித்து வந்த காசி வீடு பேயடைந்த வீடுபோல் ஆகிவிட்டது.

நம்முடைய போராட்டம் வேகத்தில் தணிந்து, குறுகிய அளவுக்குள் நடந்து கொண்டிருந்ததனால், அதனிடம் இருந்த பெருவாரியான உற்சாகம் குறைந்து நீண்ட காலத்துக் கொருதரம் ஏதோ கொஞ்சம் பரபரப்பு தோன்றிற்று. என்னுடைய எண்ணங்கள் அதிகமாக வேறு நாடுகளின் போக்கில் சென்றுகொண்டிருந்தன. வனுவான பொருளாதாரமந்தத்தில் அகப்பட்டுக்கொண்டு கிடக்கும் உலகம் எவ்வாறு சமாளித்துக் கொண்டுவருகிறது என்பதை சிறையிலிருந்துகொண்டு என்னால் கூடுமான வரையிலும் கூர்ந்து கவனித்து வந்தேன். இந்த விஷயம் சம்பந்தமாக எனக்குக் கிடைத்த புஸ்தகங்களையெல்லாம் படித்தேன். எவ்வளவு அதிகமாகப் படித்தேனோ அவ்வளவு அதிகமாக அவைகளின் பேரில் எனக்கு கவர்ச்சியும் உண்டாயிற்று. உலகத்திலே நடைபெறும் மகத்தான இந்த நாடகத்தின் ஒரு பகுதியாகவும் எல்லா நாடுகளிலும் நடைபெற்றுக்கொண்டிருந்த மகத்தான அரசியல் பொருளாதாரப் போராட்டங்களின் ஒருபகுதியாகவும் இந்தியாவின் பிரச்னைகளும் போராட்டமும் இருப்பதாக எனக்குத் தோன்றின. இந்தப் போராட்டத்தில் என்னுடைய சொந்த அனுதாபங்கள் அதிகமாக பொது உடமையின் சார்பாகச் சென்றன.

நீண்ட காலமாகவே எனக்கு அபேதவாதத்திலும் சமதர்மக் கொள்கையிலும் பிடித்தம் உண்டாயிருந்தது. ருஷியா என்னை ஜாடை காட்டி அழைத்தது. ஸோவியத் ருஷியாவில் நேர்ந்த பல நிகழ்ச்சிகளில் பலவற்றை வெறுத்

தேன். எதிர்கட்சியைக் காருண்யமில்லாமல் அடக்குதல், அநேக திட்டங்களை அமுலுக்குக் கொண்டுவருவதில் தேவையில்லாத அளவுக்கு பலாத்காரத்தை உபயோகப்படுத்துதல், எல்லோரையும் ஒரே வித பொம்மைகளாக ஆக்கப்பார்த்தல், இவைகள் எனக்குப்பிடிக்கவில்லை. ஆனால் முதலாளி அரசாங்கங்களிலும் இந்தக் கொடுமைகளுக்கும் அடக்குமுறைகளுக்கும் குறைவில்லை. சொத்து உரிமை எந்த ஜனசமூகத்தில் கொண்டாடப்படுகிறதோ அங்கே,பலாத்காரத்தை அஸ்திவாரமாகக் கொண்டுதான் அந்த உரிமையைக் காப்பாற்ற முடியும் என்பதைத் தெளிவாக இப்பொழுது உணர்ந்தேன். பலாத்காரமின்றி அந்த ஜனசமூகமும் சொத்துரிமையும் நிலைத்திருக்க முடியாது. பெரும்பான்மையோர் சதா ஏழைகளாகவும், தங்கள் பட்டினியைப் போக்க சிறுபான்மையோருக்கு அடிமைகளாக இருந்து அவர்களின் பெருமைக்கும், தன்மைக்கும் கட்டாயமாகப் பாடுபடவேண்டியிருக்கும் நிலைமையில்ஓரளவுஅரசியல்சுதந்திரம்இருப்பதால் அதிகலாபமில்லை.

முதலாளி, சமதர்ம உலகங்கள் இரண்டிற்கும் பலாத்காரம் பொதுவானது. ஆனால் முதலாளி உலகத்தின் பலாத்காரம் அதன் சுபாவத்திலிருந்து தோன்றுகிறது. ருஷியாவின் சமதர்மக் கொள்கையால் ஏற்படும் பலாத்காரம் கெட்டதுதான். என்றாலும், அந்த தாற்காலிக பலாத்காரத்தின் மூலமாக பொது மக்களுக்கு உண்மையான சுதந்திரமும் சகோதரத்துவமும் சமாதானமும் நாட்டப்படுகின்றன. சோவியத் ருஷியா எத்தனையோ தவறுகள் செய்திருக்கின்றது. என்றாலும் எத்தனையோ இடையூறுகளைக் காலில் மிதித்துத் தேய்த்து, வெற்றி பெற்று புதுப் பாதையில் வெகு தூரம் சென்றிருக்கிறது. உலகத்தின் ஏனைய பகுதிகள் எல்லாம் பொருளாதார மந்தத்தில் சிக்கிக்கொண்டு பின்னே போய்க்கொண்டிருக்கிற தருணத்தில் ருஷியாவில் மட்டும் நமது கண்களின் முன்னாலேயே மகத்தான புதிய உலகம் ஒன்று அமைக்கப்பட்டு வருகின்றது. மற்றைய தேசங்கள் இறந்த காலத்தைக் கட்டியழுது கொண்டு, பண்டைக் காலத்தின் உயிரற்ற சின்னங்களைக் காப்பாற்றுவதற்காக தங்களுடைய ஊக்கத்தைச் செலவழித்து வருங்காலையில், லெனின் மகானைப் பின்பற்றி ருஷியா தூரதிருஷ்டிக் கண்களுடன் வருங்காலத்தை நோக்கி அதற்காகத் தம் மக்களைப் பக்குவப்படுத்தும் வேலையில் ஈடுபட்டிருந்தது. மிகவும் பிற்போக்கு

கொண்ட மத்திய ஆசியாவில் சோவியத் திட்டத்தால் மிகுதியும் முற்போக்கடைந்து வருகிறது என்பதைக் கேட்டு நான் மகிழ்ச்சியுற்றேன். மொத்தத்தில் இரண்டையும் எடைபோட்டுப் பார்த்தால் ருஷியா பக்கம்தான் எனக்கு பூரணமான அனுதாபம். பயங்கரமும் அறியாமையும் குடி கொண்டிருக்கும் இந்த உலகத்தில் சோவியத் ருஷியாவின் உதாரணம், பிரகாசத்தையும் தைரியத்தையும் கொடுக்கக் கூடிய தோற்றமாக இருக்கின்றது.

சமதர்ம திட்டத்தைத் தழுவிய அரசாட்சியை நிர்மா ணம் செய்ய முயலுகையில், ருஷியாவின் வெற்றி தோல்வி யைப்பற்றி கவனிப்பது பொருத்தமானதாக இருந்தாலும் அதனல் பொது உடமைத் தத்துவங்களின் உண்மையில் எத்தகைய பழுதையும் கண்டு பிடிக்க முடியாது. தேசியக் காரணங்களாலோ அல்லது மற்ற தேசங்களால் ஏற்பட்ட தடைகளினலோ ருஷ்யாவின் போல்ஷ்விக் கக்ஷி தவறு செய்யலாம்; அல்லது தோற்றுப்போகலாம். இருந்தாலும் பொதுஉடமை சாஸ்திரம் சரியாய் இருக்கக்கூடும். அந்த சாஸ்திரத்தை ஆதாரமாகக் கொண்டு பார்த்தாலுமே, ருஷியா செய்கிறது போலவே, குருட்டுத்தனமாக எல்லா நாடுகளும் செய்ய வேண்டுமென்பது அபத்தமாகும். ஒவ் வொரு நாட்டிலும் அப்பொழுதிருக்கும் விசேஷ நிலைமை களையும், சரித்திரப் போக்கையும் பொருத்து, அந்தந்த நாடு களுக்கேற்றவாறு, சமதர்ம ச்ாஸ்திரத்தைப் பிரயோகம் செய்ய வேண்டும். மேலும் போல்ஷ்விக்கர்களின் வெற்றி களையும், நிர்ப்பந்தத்தால் செய்த தவறுகளையும் கொண்டு இந்தியாவும் மற்ற நாடுகளும் நன்மை அடையக் கூடும்.

தங்களைச் சூழ்ந்துகொண்டு நாலா பக்கங்களிலும் எதிரி கள் வளைத்துக் கொண்டிருந்தால், அவர்கள் தங்களைத் தாக் குவார்களோ என்று பயந்து வெகு விரைவில் தாங்கள் முற் போக்கு அடைய வேண்டுமென்று போல்ஷ்விக்கர்கள் ருஷி யாவில் முயற்சி செய்திருக்கலாம். மெதுவாக முயன்றிருந் தால் ருஷியக் கிராமாந்திரங்களில் ஏற்பட்ட துன்பங்களில் பெரும்பான்மை நேராமலே இருந்திருக்கும். ஆனல், மற்றொரு கேள்வி பிறந்திருக்கின்றது. ஆத்திரத்துடன் வேக மாகச் செல்லாவிட்டால், உண்மையாக புரட்சிப் பயன்களை அடைய முடியுமா? ஜன சமூகத்தின் அடிப்படையையே

மாற்றவேண்டிய நெருக்கடியில், வெறும் சீர்திருத்தத்தைக் கொண்டு புரட்சி செய்யப் பார்ப்பது முடியாத காரியம். தனது நன்மையழிந்து முற்போக்குக்குத் தடையாக இருந்து வரும் பண்டை அமைப்பை அடியோடு உடைத்தெறிந்து விட்டு புதிய அமைப்பை விரைவில் கட்ட முயலத்தான் வேண்டும்.

இந்தியாவில் காணப்பெறும் முக்கியமான நிலம் கைத் தொழில் சம்பந்தமான பிரச்னைகளையும், இதரப்பிரச்னை களையும், புரட்சித் திட்டத்தைக் கொண்டுதான் தீர்க்க முடியும். உலகப் போரைப் பற்றித் தான் எழுதியிருக் கும் வரலாறுகளில் லாயிட் ஜார்ஜ் சொல்லியிருப் பது போல் "கிடுகிடு பள்ளத்தை இரண்டு தாண்டு களால் தாண்ட முயலுவதைக் காட்டிலும் முட் டாள்தனமான முயற்சி வேறொன்றுமே இல்லை." ருஷியா வையே விட்டுவிடுவோம். மார்க்ஸ் அவர்களின் திட்டமும் தத்துவமும் இருளடர்ந்திருந்த எனது மனத்தின் பல பகு திகளுக்கு வெளிச்சத்தைக்கொடுத்தன. அதனால் உலகத்தின் சரித்திரப் பிரவாகத்திற்குப் புதிதாக அர்த்தம் தோன் றிற்று. மார்க்ஸின் தத்துவ போதம் சரித்திர சம்பந்தமான பிரகாசத்தை எனக்குக் கொடுத்து உதவியது. உலக சரித்திரத் தில்,தன்னை அறியாமலேஒருவித நோக்கத்துடனும்ஒழுங்குட னும் காரியங்கள் நடந்து வருவதைக் கண்டேன். பண்டைக் காலத்திலும் இப்பொழுதும் உலகத்தில் துன்பமும், வீண் முயற்சியும், பயங்கரமாக நிறைந்து நின்றபோதிலும் எதிர் காலம் நன்றாயிருக்க முடியுமென்று நம்பினேன். எத்தனையோ ஆபத்துகள் குறுக்கிட்டாலும் பாதகமில்லை. மார்க்ஸ் அவர்க ளுடைய தத்துவம் மூட நம்பிக்கையைத் தவிர்த்து பகுத்தறி வுக்கும், தர்க்க சாஸ்திரத்துக்கும் பொருத்தமாக இருக்கிற படியால் அது என் உள்ளத்தைக் கவர்ந்தது. "இதை நம்பு" என்று அந்தத் தத்துவம் எதையும் குருட்டுத்தனமாகக் குறிப்பிடவே இல்லை. அதிலே எனக்கு மகிழ்ச்சி. ருஷ்யாவி லும் மற்ற இடங்களிலும் சமதர்மக் கொள்கை சம்பந்த மாக வைதீக மனப்பான்மை உண்டாகி அதை எதிர்த்தவர் களை "எதிரிகள்" எனக்கொண்டு அவர்களைத் துன்புறுத்தியது உண்மைதான். அவ்வாறு செய்தது வருந்தத்தக்கதே. ஆனல் பொது உடமை நாடுகளில் விரைவிலே மகத்தான மாறுதல் கள் நேர்ந்துகொண்டிருந்தபடியால் அப்பொழுது எதிர்க்கட்

சியைச் சும்மா விட்டுக் கொண்டிருந்தால் அது சமதர்மக் கொள்கைக்கு ஆபத்தாக முடிந்திருக்கும். இதைக் கொண்டு அந்த அக்கிரமத்தை ஒருவாறு, அறிந்து கொள்ளலாம்.

உலகப்பொருளாதார மந்தமும் நெருக்கடியும் பொது உடமைத் தத்துவத்துக்கு அத்தாக்ஷிகளாக அமைந்து கிடந்தனபோல் தோன்றிற்று. ஏனைய சாஸ்திரங்களும் திட்டங்களும் இருளிலே விஷயம் புரியாமல் தடவிக் கொண்டிருக்கையில், பொதுவுடமை தத்துவத்தினால்தான் திருப்திகரமான காரண விளக்கமும் வழிகாட்டியும் கிடைத்தன. இத்தகைய உறுதி என் மனதிலே வளர ஆரம்பிக்கவே எனக்குள்ளே புதியதொரு பரபரப்பு நிறைந்து சட்ட மறுப்பு இயக்கம் வெற்றிபெறவில்லையே என்ற ஏக்கம் கொஞ்சம் கொஞ்சமாகத் தணிந்தது. நான் விரும்பிய லக்ஷியத்தைப்நோக்கி உலகம் முன்னேறிச் செல்கின்றது என்று நினைத்து ஆறுதலடைந்தேன். போர்களும் ஏனைய ஆபத்துகளும் குறுக்கிடலாம். என்றாலும் உலகமும் நாமும் முன்னே சென்றுகொண்டு தான் இருக்கிறோம்; தேக்கமுற்று நின்றுபோய் விடவில்லை. அந்தப் பெரிய பிரயாணத்தில் நம்முடைய தேசீயப்போராட்டமும் ஒரு கட்டமாகும். அடக்குமுறையும் கஷ்டங்களும் நேருவது நல்லது தான். அவைகளினால் நம்முடைய ஜனங்கள் எதிர்காலப் போராட்டங்களுக்கு வலுவும், தகுதியும் பெற்று விடுவார்கள். அவைகளினால் நமது ஜனங்கள் உலகத்தையாட்டிவைக்கும் புதிய கருத்துகளைப்பற்றி யோசிப்பதற்கு கட்டாயமான சந்தர்ப்பம் ஏற்பட்டுவிடும். இந்தப் போராட்டங்களினால் பதர்களும், பலவீனர்களும் ஒதுங்கிப் போய் வலுவுள்ளவர்கள் கெட்டிப்பட்டு கட்டுப்பாட்டுக்குள் வந்து விடுவார்கள். கால சக்கரம் நமக்குத்தான் சாதகமாயிருக்கிறது.

எனவே நான் ருஷியா, ஜெர்மனி, இங்கிலாந்து, அமெரிக்கா, ஜப்பான், சைனா, பிரான்சு, ஸ்பெயின், இத்தாலி, மத்திய ஐரோப்பா முதலிய நாடுகளில் நேர்வனவற்றை ஜாக்கிரதையாகக் கவனித்து வந்தேன். நவீன நிகழ்ச்சிகளின் சிக்கல்களை அறிந்து கொள்ள முயற்சிசெய்தேன். எதிர்காலத்தில் வரப்போகிற "புயலைத்" தடுப்பதற்காக ஒவ்வொருநாடும் தனித்தனியே செய்யும் முயற்சிகளைக் கவனித்து வந்தேன். எல்லாநாடுகளும் சேர்ந்து செய்வதையும்கவனித்து வந்தேன்.

அரசியல் பொருளாதார நோய்களுக்குப் பரிகாரம் தேடுவதற்காக கூட்டப்பெற்ற சர்வதேச மகாநாடுகளில் ஒன்றுவது உருப்படியாகவில்லை. ஆயுதப் பரிகரணத்தைப் பற்றி யோசிப்பதற்காகக் கூடிய மகாநாடுகளும் யாதொரு பிரயோசனமுள்ள முடிவுக்கும் வரவில்லை. இந்த மகாநாடுகள் தோற்றதிலிருந்து வகுப்புவாத ப்ரச்னையைத் தீர்க்க நம் முயற்சிகள் வீணானது எனக்கு நினைவு வந்தது. நம்முடைய வகுப்பு வாதப் பிரச்னையைத்தீர்ப்பதற்காக எவ்வளவு மகாநாடுகளைக் கூட்டினோம்! நம்மிடத்தில் நல்லெண்ணத்துக்குக் குறைவா? இருந்தாலும் அந்தப்பிரச்னைக்கு நாம் இதுவரையிலும் பரிகாரம் தேட முடியவில்லை. சர்வதேச மகாநாடுகள் கூடி ஒன்றும் செய்ய முடியாமல் கலைந்துபோனால் உலகத்துக்கு மகத்தான ஆபத்து நேரும் என்ற உணர்வு பொதுவாக எல்லோருக்கும் இருந்த போதிலும் பெரிய பெரிய அமெரிக்க ஐரோப்பிய ராஜ தந்திரிகள்கூட ஒன்றுகூடி உழைக்க முடியவில்லையே? இரண்டு பிரச்னைகளிலும், பரிகாரத்தை நாடிய மார்க்கம் தவறுகும். இப்பிரசனைகளைத் தீர்க்க முயன்றவர்களுக்கு சரியான பாதையில் செல்லத் துணிவு உண்டாகவில்லை.

பொதுவாக உலகத்தின் கஷ்டங்களையும் போராட்டங்களையும் பற்றி ஆராய்ந்து கொண்டிருந்ததில், என்னுடைய சொந்த வருத்தங்களையும் நமது நாட்டின் கஷ்டங்களையும் ஓரளவு மறந்துபோனேன். உலக சரித்திரத்தில் மகத்தான புரட்சி நடக்கும் இக்காலத்தில் நான் உயிரோடு இருக்கிறேனே என்பதை நினைத்து ஓரோர் சமயத்தில் ஏராளமான உற்சாகம் கொள்ளுவேன். வரப்போகிற பெரிய மாறுதல்களில் என்னுடைய சிறிய உலகத்தில் நானும் கொஞ்சம் வேலை செய்யும் பாக்கியம் பெறக்கூடுமென்று எண்ணுவேன். வேறு சில சமயங்களில் "ஐயோ, இந்த உலகம் பாழாய்ப் போய்க்கொண்டு வருகிறதே! என்ன அனுவசியமான பலாத்காரம்! என்ன அனுவசியமான சண்டைகள்" என்றுநினைத்து மனம் ஏங்குவேன். உலகத்திலே துன்பமும் அறியாமையும் கொடுமையும் நிறைந்திருப்பதைக்கண்டும், ஆத்திரப்படாமல் மனிதர்கள் அவல வாழ்க்கை வாழ்ந்து அடிமைகளாக இருப்பதைப் பார்த்து பொறுத்துக்கொண்டிருக்கக்கூடிய அளவில் புத்திசாலிகளான ஆண்களும், பெண்களும் உணர்ச்சியற்றிருப்பதை நினைக்கும்போது, எனக்குத் துயரமாயிருக்கும். படாடோபமான டம்பமும், திட்டமாக

வேண்டுமென்றே செய்யும் வஞ்சகமும், மேற்சொன்ன நிலைமையில் வளருவதற்கு என்ன தடை இருக்கிறது? நல்ல மனிதர்களோ, வாயைப் பொத்திக்கொண்டு மௌனம் சாதித்தார்கள். ஹிட்லரின் வெற்றியும், அதன் பின்னுல் நேர்ந்த பயங்கர அடக்கு முறையும், என்னைத் திடுக்கிடச் செய்தன. என்ருலும் அவைகள் தற்காலிகமாகத்தான் இருக்க முடியும் என்று எண்ணி ஆறுதலடைந்தேன். மனித முயற்சியால் பயனில்லையோ என்ற எண்ணம்கூட ஒரொரு சமயம் வந்துவிடும். குருட்டுத்தனமாக இயந்திரம் இயங்கிக் கொண்டே இருக்கிறது. அதற்குள்ளே இருக்கும் ஒரு சிறிய சக்கரம் இயந்திரத்தின் போக்கைத் தடுத்து நிறுத்த முடியுமா?

இருந்தாலும் மனிதவாழ்க்கையின் சொரூபத்தைவிளக்கிக்காட்டும் சமதர்ம தத்துவம் எனக்கு ஆறுதலைக்கொடுத்து நம்பிக்கையை ஊட்டிற்று அந்தத் தத்துவத்தை இந்தியாவில் எவ்வாறு பிரயோகம் செய்வது? நாம் இன்னும் அரசியல் சுதந்திரப் பிரச்னையைத் தீர்த்தபாடில்லை. தேசியநோக்கமே நமது உள்ளங்களில் நிரம்பி நிற்கிறது. அரசியல் சுதந்திரத்தோடு சேர்த்து பொருளாதார விடுதலைக்கும் நாம் பாடுபடுவதா? அல்லது இவ்விரண்டிற்கும் நடுவில் உள்ள சிறிதாக விருப்பினும்—ஒவ்வொன்றுக்காகவும் தனித்தனியாகப் பாடுபடுவதா! உலகநிகழ்ச்சிகளும் சரி, இந்தியாவில் நேரும் நிகழ்ச்சிகளும் சரி, அவைகள் சமூக நிர்மாணப் பிரச்னையை முன்னணிக்குக் கொண்டு வந்து விட்டன. எனவே அரசியல் சுதந்திரத்தையும் சமூக நிர்மாணத்தையும் இனியும் பிரித்து வைத்திருக்கக் கூடாது என்று தோன்றிற்று.

இந்தியாவில் நடைபெறும் பிரிட்டிஷ் ஆட்சிமுறையால் ஜனசமூகத்தின் பிற்போக்காளர்களாய் இருக்கும்படியான கூட்டத்தார்கள் அரசியல் சுதந்திரத்துக்கு விரோதிகளாக ஆகிவிட்டார்கள். அவசியம் இப்படித்தான்நேரும். இந்தியாவில் பல கூட்டங்களும் வகுப்புகளும் தங்கள் இயல்புக்குத் தகுந்தபடிக்கு தெளிவாகப் பிரிந்து நிற்பதை நான் வரவேற்கின்றேன். இதை மற்றவர்கள் அங்கீகரிப்பார்களா? அநேகர் மாட்டார்கள். இந்தியாவின் பெரிய நகரங்கள் சிலவற்றில் வைதிக சமதர்மிகள் சிலர் இருந்தார்கள் என்பது உண்மை. ஆனுல் அவர்கள் தேசிய இயக்கத்துக்கு நேர்விரோதமா

யிருந்து அதை மிகவும் கடுமையாகத் தாக்கினர்கள். பம்பாயிலும் ஓரளவு கல்கத்தாவிலும் இருக்கும் தொழிற்கட்சிகள் அபேதவாதக் கொள்கைகொண்டவை எனலாம். ஆனால் தொழிலாளர் இயக்கம் துண்டு துணுக்குகளாகப் பிளவுபட்டுப்போய் பொருளாதார மந்தத்தால் கஷ்டப்பட்டுக் கொண்டு வருகிறது. எனினும் தெளிவற்ற சமதர்ம அபேதவாதக் கருத்துகள் அறிவாளிகளின் மத்தியில் பரவி சர்க்கார் அதிகாரிகளில் பல புத்திமான்களையும் கவர்ந்து வருகின்றன.

முன்னர் மார்லி, மாஜினி, பிரைஸ், கீத் முதலியவர்கள் ஜனநாயகத்தைப் பற்றி எழுதிய நூல்களைப் படித்த காங்கிரஸ் வாலிபர்கள் இப்பொழுதெல்லாம் அபேதவாத சமதர்மத்தைப்பற்றியும் ருஷியாவைப்பற்றியும் எழுதப்பட்டுள்ள நூல்களைப் படித்துக்கொண்டிருக்கிறார்கள். மீரட்டு சதிவழக்கால் ஜனங்கள் இந்தப்புதிய கருத்துக்களின் பால் தங்கள் கவனத்தைச் செலுத்த வாரம்பித்தனர். மேலும் உலகநெருக்கடி இந்தக் கருத்துக்களைக் கவனிக்கும்படி கட்டாயப்படுத்தி விட்டது. எல்லா இடங்களிலும் இந்தப் புதிய ஆராய்ச்சி மனப்பான்மை காணப்பட்டது. பழைய அமைப்புகளை எப்படி மாற்றுவது என்பதைப்பற்றி தீவிரமாக யோசிக்கத் தலைப்பட்டார்கள். மனதிலே அடித்துக் கொண்டிருந்த காற்றின் திக்கு நன்கு புலப்பட்டது. ஆனால் அந்தக் காற்று மிகவும் சாந்தமாக விருந்தது. தன்னைப்பற்றியே நம்பிக்கையில்லாத காற்று. சிலர் பாஸிஸ்டு கருத்துக்களைத் தழுவிப் புரண்டுகொண்டிருந்தார்கள். தெளிவான, திட்டமான கருத்துக்களே இல்லை. தேசீயம் ஒன்றுதான் இப்பொழுதும் இந்தியர்களின் உள்ளத்தில் அரசு செலுத்திவரும் எண்ணமாகும்.

அரசியல் சுதந்திரம் கிடைக்கப்பெறும் வரையில் முக்கியமாக தேசீயத்திலேதான் பெரும்பான்மையோர் அழுத்தமாக நிற்பார்கள் என்று எனக்குத் தெளிவாகத் தோன்றிற்று. இதனாலேதான் காங்கிரஸ் தீவிரகொள்கைகொண்ட அமைப்பாகவும், மிகவும் வலுவான ஸ்தாபனமாகவும் இந்தியாவில் இப்பொழுது இருந்து வருகிறது. சென்ற பதின்மூன்று வருஷமாக காந்திஜீயின் தலைமையின்கீழ் காங்கிரஸ் வியக்கத்தக்கவகையில் பொதுஜனங்களுக்குள் கண்விழிப்பை

உண்டாக்கிவிட்டது. மத்தியதர வகுப்பாரின் நோக்கத்துடன் காங்கிரஸ் வேலைசெய்து வந்தாலும் அது நாட்டிலே புரட்சி மனப்பான்மையை உண்டாக்கி விட்டது. காங்கிரஸின் உபயோகம் இன்னும் ஒழிந்துபோய்விடவில்லை. தேசிய நோக்கம் நிறைவேறி சமூக நிர்மாண நோக்கம் ஏற்படுகிற வரையில் காங்கிரஸின் உபயோகம் அழிந்து போய்விட முடியாது. கருத்திலும் சரி, காரியத்திலும் சரி, எதிர்காலத்தில் அபிவிருத்தி ஏற்பட வேண்டுமானால் அவை இரண்டையும் வேறு சில வசதிகளைக் கொண்டு சாதிக்க முயன்றாலும் முக்கியமாக காங்கிரஸைக் கொண்டுதான் சாதித்துக் கொள்ள வேண்டியதாயிருக்கும்.

காங்கிரஸைக் கைவிடுவது கூடாது என்று எனக்குத் தோன்றிற்று. நாட்டாரின் ஜீவாதாரமான உணர்ச்சியினின்றும் பிரிந்துபோய் நம்மிடத்திலிருக்கும் மிக வல்லமை பொருந்திய ஆயுதத்தை மழுங்கச் செய்து பயனற்ற புதுப் பாதையில் ஊக்கத்தை வீணாகச்செய்ய வேண்டுமானால் காங்கிரஸை விட்டு விலகிக் கொள்ளலாம். காங்கிரஸ் இப்பொழுது அமைக்கப்பட்டிருக்கும் வகையிலிருந்து தீவிரமான உண்மையான சமூக நிர்மாணத்தை நாடுமாவென்பது சந்தேகம். சமூக நிர்மாணப் பிரச்னையைக் காங்கிரஸின் முன்னால் வைத்தால் காங்கிரஸ் இரண்டு மூன்று கூறுகளாக உடைந்துபோகும் அல்லது காங்கிரஸினின்று பெரும் பகுதியான மக்களைத் துரத்திவிடுவதாக ஆனாலும் ஆகும். இந்த மாதிரி நேர்ந்தாலும் பாதகமில்லை. பிரச்னைகள் தெளிவாக உணரப்பட்டு காங்கிரஸுக்குள் மிகுந்த கட்டுப்பாட்டுடன் மெஜாரிட்டியோ அல்லது மைனாரிட்டியோ தீவிரமான ஜன நிர்மாணதிட்டத்தை அங்கீகரித்து அதற்காக பாடுபடத் தீர்மானம் கொண்டால் காங்கிரஸில் பிளவு ஏற்பட்டாலும் பாதகமில்லை.

ஆனால் இப்பொழுது காங்கிரஸ் என்றால் காந்திஜி என்று அர்த்தம். அவர் என்ன செய்வார்? கொள்கைகளில் சில சமயங்களில் திகைத்துப் போகும்படியாக அவர் பிற்போக்கு கொண்டவர். ஆனால் காரியத்திலோ அவர் சமீப காலங்களில் இந்தியாவில் தோன்றிய புரட்சிக்காரர்களுக்குள் முதன்மையானவர். அவருடைய வசீகரத்தன்மை ஒப்பற்றது. வழக்கமாயுள்ள அளவுகளைக்கொண்டு அவரை

மதிப்பிடவே முடியாது. தர்க்க சாஸ்திர சூத்திரங்களைப் பிரயோகம் செய்து, மதிப்பிடப் பார்ப்பது பயனற்ற வேலையாகும். அவர் அந்தராத்மாவில் புரட்சிக்காரர். இந்தியாவின் அரசியல் விடுதலைக்காக அவர் கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிறார். அந்த சுதந்திரத்தை அடையும் வரையில் அவர் கத்தி முனையில் இருப்பதுபோல எந்தப் பக்கத்திலும் அசையாமல் கடுமையாகப் போராடித்தான் தீருவார். இந்தப் போராட்டத்தால் பொதுமக்களின் ஊக்கத்தை மிகுதியும் கிளப்பி விடுவார். ஒவ்வொரு படியாக சமூக நிர்மாண லட்சியத்திலும் அவர் தாமாகவே வந்து சேர்ந்து விடுவார் என்று எனக்கு அறைகுறையாக நம்பிக்கை இருந்தது.

இந்தியாவிலும் வெளியேயும் இருக்கும் வைதீக சமதர்மிகள் சென்ற சில வருஷங்களாக காந்திஜியையும் காங்கிரசையும் கடுமையாகத் தாக்கி வருகிறார்கள். காங்கிரஸ் தலைவர்களிடம் என்னவெல்லாமோ அற்பத்தனமான எண்ணங்களைக் கற்பிக்கிறார்கள். அவர்கள் தங்கள் சாஸ்திர ரீதியாககாங்கிரஸையும் காங்கிரஸின் லட்சியத்தையும் கருத்துக்களையும் கண்டித்திருக்கிறார்கள். அவர்களுடைய கண்டனம் ஓரளவு நியாயமாகவும் உண்மை கொண்டதாயுமிருந்தது. பின்னே நேர்ந்த நிகழ்ச்சிகளால் ஓரளவு அது ருசுவாயிற்று. பொதுவாக இந்திய அரசியல் நிலைமையைப்பற்றி சமதர்மிகள் துவக்ககாலத்தில் சொன்ன யூகமெல்லாம் மிக்வும் சரியாகப் போய்விட்டது. ஆனால் சமதர்மிகள் தங்களுடைய பொதுவான கொள்கைகளை விட்டுவிட்டு, விவரங்களில் புகுந்து கொண்டால், அதுவும் காங்கிரஸ் செய்து வரும், செய்யவேண்டிய வேலையைப்பற்றி அவர்கள் யோசிக்கையில் அவர்கள் மோசமாக தவறிப் போகிறார்கள்.

இந்தியாவில் சமதர்மிகள் தொகையிலும் செல்வாக்கிலும் குன்றந்திருப்பதற்கான காரணங்களிலொன்று, அவர்கள் சமதர்மக் கொள்கைகளை சாஸ்திர ரீதியாகப் பரப்பி, மக்களுடைய மனதைமாற்ற முயற்சிசெய்யாமல், மற்றவர்களைச் கண்டபடி திட்டத் துவக்கி விடுகிறார்கள் என்பது. இது அவர்கள் தலையிலேயே வந்துவிடிந்து, அவர்களுக்குப் பெருத்த தீமையை உண்டாக்கி விட்டது. அவர்களிற் பெரும்பான்மையோர் தொழிலாளர்களின் கூட்டங்களில்

உழைப்பவர்கள். அந்தக் கூட்டங்களில் வழக்கமான இரண்டொரு சூத்திரங்களைச் சத்தம் போட்டுச் சொல்லிவிட்டால், தொழிலாளியின் மனதை எளிதிலே மாற்றிவிட முடியும். ஆனால், அறிவாளிகளிடம் இந்தச் சூத்திரங்களை மட்டும் சொன்னால் பிரயோஜனமில்லை. இந்தியாவில் இப்பொழுது, நடுத்தர வகுப்பார்களுக்குள் படித்தவர்கள் தான் மிகுதியும் புரட்சி மனப்பான்மையைக் கொண்டிருக்கிறார்கள் என்பதை சமதர்மிகள் இன்னும் உணரவில்லை. வைதிக சமதர்மிகளை மீறியே அறிவாளிகளிற் பலர் பொது உடமைத் திட்டத்தை ஏற்று வருகிறார்கள். ஆனால் சமதர்மிகளுக்கும் இவர்களுக்குமிடையே அதிக வித்தியாசம் இருக்கிறது. பொது ஜனங்களைக் கொண்டு அரசாங்கத்தைத் தாக்கி இந்திய முதலாளிகளுக்காகவும் ஜமீன்தார்களுக்காகவும் தொழில் துறையிலும் வியாபாரத்துறையிலும் சிறப்பான சலுகைகளை வாங்கிக் கொடுப்பதுதான் காங்கிரஸ் தலைவர்களின் நோக்கமென்று சமதர்மிகள் கருதுகிறார்கள்.

“விவசாயிகள், தொழிற்சாலைத் தொழிலாளர்கள், ஏழைகளான நடுத்தர வகுப்பார்கள், இவர்களுடைய பொருளாதார அரசியல் அதிருப்தி வேகத்தை பம்பாய், ஆமதாபாத், கல்கத்தா நகரங்களின் முதலாளிகளுடைய இரதத்தில் பூட்டுவதுதான்” காங்கிரஸின் நோக்கமாம்! இந்திய முதலாளிகள் திரைக்குப்பின்னே சௌக்கியமாய் உட்கார்ந்து கொண்டு, காங்கிரஸ் காரியக்கமிட்டிக்கு உத்தரவு போடுவார்களாம். காங்கிரஸ் காரியக் கமிட்டி அந்த உத்தரவைத் தலைமேற்கொண்டு பொதுஜனப் போராட்டத்தைத் துவக்குமாம். பொதுஜனப் போராட்டம் விரிவாகப் போய் ஆபத்துக்கிடமானதாக ஆகிவிடும் போலிருந்தால் அப்பொழுது காரியக் கமிட்டி இயக்கத்தை நிறுத்தி விடுமாம். அல்லது இயக்கத்துக்கு வேறு போக்கு காண்பித்து விடுமாம். மேலும் பிரிட்டிஷ்காரர்களை வெளியேற்றுவதில் காங்கிரஸ் தலைவர்களுக்கு உண்மையிலேயே எண்ணமில்லையாம். பிரிட்டிஷாரின் உதவியைக் கொண்டுதான் முதலாளிகளும், காங்கிரஸ் தலைவர்களும், ஏழைஎளியவர்களின்பணத்தைச் சுரண்ட முடியுமாம். பிரிட்டிஷார் இல்லாமல் இந்திய நடுத்தர வகுப்பார்களுக்கு இந்த வேலையில் அவ்வளவு தோது தெரியாதாம்.

இத்தகைய நகைக்கத்தக்க கட்சி வாதத்தை சமதர்மி களுள் புத்திசாலிகள் கூட நம்பினார்களே என்பதுதான் ஆச்சரியமாய் இருக்கிறது. இத்தகைய நம்பிக்கையோடு அவர்கள் இருந்ததனாலேதான் அவர்களுடைய பிரசாரம் இந்தியாவிலே வெகுவாகப் பரவவே இல்லை. எனவே இதைப்பற்றி ஆச்சரியப்படவேண்டிய தேவை யில்லை. இந்திய தேசிய இயக்கத்தை அவர்கள் ஐரோப்பியத் தொழிற் கட்சி அளவுகளைக் கொண்டு அளக்கப் பார்ப்பதுதான் அவர்கள் செய்யும் அடிப்படையான தவறாகும். மேனாடு களில் தொழிற்கட்சித் தலைவர்கள் தங்கள் கட்சிக்கு அநேக தடவைகளில் துரோகம் செய்திருக்கிறார்கள். அந்தச் சரித்தி ரத்தை சமதர்மிகள் இந்தியாவுக்குப் பொருத்திப்பார்க்கி றார்கள். இந்திய தேசிய இயக்கம் தொழிலாளர் இயக்க மல்ல; பாமரர்களின் புரட்சி இயக்கமுமல்ல.

இந்திய தேசிய இயக்கம் நடுத்தர வகுப்பார்களின் இயக் கமாகும். அதன் பெயரிலிருந்தே அதனுடைய லட்சியத்தைத் தெளிவாகத் தெரிந்து சொள்ளலாம். அதனுடைய லட்சியம் அரசியல் விடுதலையாகும். சமூக நிர்மாணம் அல்ல. இந்தலட் சியம் விரிவாயும் போதுமானதாயும் இருக்கவில்லையென்று கண்டனம் செய்யலாம். தேசீயமே இக்காலத்திற்குப் பயனற் றலட்சியம் என்று நிராகரிக்கப்படலாம். ஆனால் இந்திய தேசீய இயக்கத்தின் அடிப்படையான தன்மையையும் லட் சியத்தையும் ஏற்றுக் கொண்டபின்னர் தலைவர்கள் பொது ஜனங்களுக்குத் துரோகம் செய்கிறார்கள் என்றும் நிலசம் பந்தமான ஜமீன்தாரித்திட்டத்தையும் முதலாளித்தத்துவத் தையும் அவர்கள் மாற்றமுயற்சி செய்யாமல் துரோகம்செய் கிறார்களென்றும் கூறுவது அபத்தமாகும். இவ்வாறு தாங் கள் செய்யப்போவதாகக் காங்கிரஸ் தலைவர்கள் சொல்லிக் கொண்டதே இல்லை. காங்கிரஸில் சிலர் நிலத்திட்டத்தையும் முதலாளித் தத்துவத்தையும் மாற்ற விரும்புகிறார்கள்.ஆனால் அவர்கள் காங்கிரஸின் பேரால் பிரசாரம் செய்யமுடியாது. இப்பொழுது இவர்களுடைய எண்ணிக்கை சிறிதுசிறிதாக பெருகிக் கொண்டுவருகின்றது.

தேசீய இயக்கத்தினால் இந்திய ஆலை முதலாளிகள் மிக வும் லாபமடைந்தார்கள் என்பது உண்மை. ஏனென்றால் பிரிட்டிஷ் சாமான்களும் அந்நிய நாட்டுச் சாமான்களும்

பகிஷ்காரம் செய்யப்படவே சுதேசி சாமான்களுக்கு மிகவும் கிராக்கி ஏற்பட்டது. இவ்வாறு நேருவது இயல்புதான். ஏனென்றால் ஒவ்வொரு தேசீய இயக்கத்திலும் தேசக் கைத்தொழில்கள் ஆதரிக்கப்படவேண்டுமென்றும் அந்நிய சாமான்களை விலக்க வேண்டுமென்றும் பிரசாரம் செய்யப் படுகிறதல்லவா? சட்டமறுப்பு நடைபெற்றுக்கொண்டு நாம் பிரிட்டிஷ் சாமான்களை விலக்கவேண்டுமெனப் பிரசாரம் செய்து கொண்டிருக்கையிலேயே லங்காஷயரோடு ஒப்பந் தம் செய்து கொள்ளும்படியாக பம்பாய் ஆலை முதலாளிக ளுக்கு ஒரு அசட்டுத்துணிவு ஏற்பட்டது. காங்கிரசின் நோக் கம் சம்பந்தப்பட்டவரையிலும் இது தேசத்துரோகமாகக் கருதப்பட்டது. அவ்வாறே குறிப்பிடவும் பட்டது. பம்பாய் ஆலை முதலாளிகளின் டில்லி சட்டசபைப் பிரதிநிதி எங்க ளிற் பெரும்பான்மையோர் சிறையிலிருக்கும்பொழுது காங் கிரசையும் தீவிர வாதிகளையும்பற்றி மூச்சுவிடாமல் உதா சீனமாகப் பேசிக்கொண்டே இருந்தார்.

சென்ற சில வருஷங்களாக, இந்தியாவில் பெரும்பான் மை முதலாளிமார்கள் நடந்து கொண்டவகை மிகவும் கேவ லமானதாகும். காங்கிரஸின் தேசீய லட்சியத்துக்குக்கூட அவர்கள் செய்தது பொருத்தமானதல்ல. ஒட்டாவா ஒப் பந்தம் தற்காலிகமாக சிற்சில சிறிய கூட்டங்களுக்கு நன் மையை அளித்திருக்கலாம். ஆனால் பொத்தத்தில் அது இந் தியத் தொழிலுக்கே தீமையானதாகும். அந்த ஒப்பந்தத்தி னால் இந்தியத் தொழில்களை பிரிட்டிஷாரின் முதலுக்கும், தொழிலுக்கும் அடங்கிநடக்க வேண்டியதாகச்செய்து விட்டது. பொதுஜனங்களுக்கோ அது பொல்லாத தீமை யாகும். நமது போராட்டம் நடந்துகொண்டு, பல ஆயிரக் கணக்கான தேசபக்தர்கள் சிறையிலிருக்கையில் இந்த ஒப் பந்தம் கையெழுத்தாயிற்று. ஒவ்வொரு குடியேற்ற நாடும், தங்களுக்கு வேண்டுமென்ற அளவில் இங்கிலாந்தினிட மிருந்து சலுகைகளையும் நிபந்தனைகளையும் பலவந்தப்படுத்திப் பெற்றுக்கொண்டன. ஆனால் இந்தியாவோ எல்லாவற்றை யும் இங்கிலாந்துக்கு தானமாக அளிக்கும் உரிமையைப் பெற்றது. சென்ற சில ஆண்டுகளாக பணக்கார சூதர்கள் இந்தியாவுக்கு நஷ்டம் வருகிறவகையில், தங்கத்திலும், வெள்ளியிலும் வியாபாரம் செய்தார்கள்.

பெரிய ஜமீன்தார்களும் தாலுக்தார்களுமோ வட்ட மேஜை மகாநாட்டில் காங்கிரசுக்கு விரோதமாக எதிர்ப்பதில் வரிசையாக நின்று கொண்டார்கள். சட்டமறுப்பு ஆரம்பித்து நிறுத்தப்படுகிறவரையிலும், தாங்கள் சர்க்கார் வாதிகள் என்று அவர்கள் பகிரங்கமாயும் ஆபாச டம்பத்துடனும் சொல்லிக்கொண்டார்கள். அவர்களுடைய ஒத்தாசையைக்கொண்டுதான் அநேக மாகாணங்களில் அவசரச் சட்டங்களின் போக்கைத்தழுவிகிரந்தரமாக அடக்குமுறைச் சட்டங்களை அரசாங்கத்தார் ஆக்கிக் கொண்டார்கள். ஐக்கிய மாகாண சட்ட சபையில் ஜமீன்தார் அங்கத்தினர்களிற் பெரும்பான்மையோர் சட்டமறுப்புக் கைதிகளை விடுதலை செய்ய வேண்டுமென்ற தீர்மானத்துக்கு விரோதமாக வோட்டு போட்டார்கள்.

பொதுஜன அபிப்பிராயம் திரண்டு வந்த கட்டாயத்தினுல் தான், 1921-லும் 1930-லும் சட்டமறுப்பு போராட்டங்களை காந்திஜீ துவக்கவேண்டியதாயிற்று என்பதும் சுத்தத் தவருகும். பொதுஜன பரபரப்பு இரண்டு தடவைகளிலும் இருந்தது என்பது உண்மை. ஆனுலும் அவைகளை அந்த இரண்டு தடவைகளிலும் துரிதப்படுத்தி, வேகத்தைத் தூண்டியவர் காந்திஜீதான். 1921-ம் வருஷத்தில் வேறு யாருடைய ஒத்தாசையுமில்லாமல் தம்முடைய சொந்த வல்லமையைக் கொண்டு காங்கிரஸை வசப்படுத்தி, தமது சாத்வீக ஒத்துழையாமைத் திட்டத்தை ஏற்கும்படியாகச் செய்தார். 1930-ம் வருஷத்தில்அவர் மனதில் ஏதேனும் தோன்றி எதிர்த்திருப்பாரேயாகில் காங்கிரஸ்எத்தகைய நேர்ப் போராட்டத்தையும் துவக்கி இருக்கவே முடியாது.

காந்திஜீயை சிலர் முட்டாள்தனமாகவும், விஷயங்களை நேரே அறிந்து கொள்ளாமலும் தாக்குகிருர்கள். இது விசனிக்கத்தக்கது. ஆளைத் தாக்கினுல், உண்மையான பிரச்னைகள் கண்ணினின்றும் மறைபட்டுப் போகின்றன. காந்திஜீயின் நல்லெண்ணத்தைத் தாக்கிக் குறை கூறுவது நம்மையும் நம்முடைய இயக்கத்தையும் தாக்கிக் க்ஷயப்படுத்தி கெடுத்துக் கொள்வதாகும். இந்தியாவில் கோடிக்கணக்கானவர்கள் அவரை சத்தியத்தின் திரு அவதாரமாகப் போற்றுகின்ருர்கள். அவருடன் நெருங்கிப் பழகிய யாரும், காந்திஜீ எப்பொழுதும் நியாயமானதையே செய்ய

ஆவல் படைத்தவராக இருக்கிறார் என்பதைத் தெளிவாக அறிவார்கள்.

இந்தியாவிலுள்ள சமதர்மிகள் பெரிய நகரங்களிலிருக்கும் ஆலைத்தொழிலாளர்களுடன் பழகிவந்தவர்கள். அவர்களுக்கும் கிராமாந்தரங்களுக்கும் தொடர்பு கிடையாது. அவர்களுக்கு கிராமாந்தரங்களைப்பற்றி அதிகமாக ஒன்றும் தெரியாது. ஆலைத் தொழிலாளிகள் முக்கியமான ஒரு கூட்டத்தாராக இருந்தபோதிலும் அவர்களுக்கு முதன்மை ஸ்தானம் கிடையாது. இந்தியாவில் விவசாயிகளைத் தான் முதலாவதாக கவனிக்கவேண்டும். இந்தியாவின் இன்றைய பிரச்னை விவசாயிகளின் பிரச்னையாகும். காங்கிரஸ் ஊழியர்களோ கிராமாந்தரங்களில் பரவி நின்று பிரசாரம் செய்து வந்திருக்கிறார்கள். காலக்கிரமத்தில், காங்கிரஸ் விவசாயிகளின் மகத்தான ஸ்தாபனமாக மாறவேண்டிய அமைப்பாகும். விவசாயிகளின் தற்காலிக லட்சியம் பூர்த்தியானதும் அவர்கள் புரட்சி மனப்பான்மையுடன் இருப்பதில்லை. சமீப காலத்துக்குள் நகரத்துக்கும் கிராமத்துக்கும் போட்டி ஏற்பட்டு விவசாயிகளும் ஆலைத் தொழிலாளிகளும் இந்தியாவில் கூட எதிர்க்கட்சியாளர்களாக ஆகவும் கூடும்.

பெரும்பான்மையான காங்கிரஸ் தலைவர்களோடும் ஊழியர்களோடும் நெருங்கிப் பழகும் பாக்கியம் எனக்குக் கிடைத்திருந்தது. என்னுடைய கூட்டுறவுக்கு அவர்களைக் காட்டிலும் நேர்த்தியானவர்கள் எனக்கு கிடைத்திருக்கவும் முடியாது. ஜீவாதாரமான பிரச்னைகளில் அவர்களுக்கும் எனக்கும் கடுமையான வித்தியாசங்கள் இருந்தன. எனக்கு எது மிகவும் வெளிப்படையான சங்கதியென்று தோன்றுகிறதோ, அதை அவர்கள் அறிந்து கொள்வதுமில்லை மதிப்பதுமில்லையென்பதைக் கண்டு, நான் அவர்களிடம் பல தடவைகளில் அலுத்துக் கொண்டிருக்கின்றேன். அவர்களுக்கு புத்திக் குறைவு என்பதல்ல. என்னுடைய வழி வேறு; அவர்கள் சென்று கொண்டிருந்த பாதை வேறு. இந்த எல்லைகளைத் திடீரென்று கடப்பது கஷ்டமென்று எனக்குத் தெரியும். அந்த வித்தியாசங்கள் மாறுபட்ட தத்துவங்களின் விளைவுகளாகும். சிறிது சிறிதாக நம்மையறியாமலே அந்த வேற்றுமைகள் நமக்குள் ஏறி வளர்ந்துவிடுகின்றன. எதிர்க் கட்சியைக் குறை கூறுவது வீணான வேலையாகும்.

அபேதவாதத்துக்கு ஒருவித மனப்பான்மை வேண்டும். வாழ்க்கையையும் அதன் பிரச்னைகளையும் தனி முறையில் கவனிக்கக் கூடிய மனப்பான்மை வேண்டும். வெறும் தர்க்கம் போதாது. பரம்பரை, பயிற்சி, பண்டைக்காலத்தின் சம்பிரதாய வாழ்க்கை முதலியவைகளால் ஏற்படும் மனப்பான்மைகள் வெறும் தர்க்க சாஸ்திரத்துக்குக் கட்டுப்பட்டவைகள் அல்ல. வாழ்க்கையில் சிக்கலான சம்பவங்கள் நேரநேர புது வழிகளில் செல்ல நாம் கட்டாயப்படுத்தப்படுகிறோம். இறுதியில் வேறு வகையான விஷயங்களைப்பற்றி யோசிக்க அதனால் அவசியம் ஏற்படுகிறது. இப்படிச் சிந்திப்பதால் நாமும் புதிய சரித்திரத்தை ஆக்குவதில் பங்காளிகளாக ஒருக்கால் ஆகக்கூடும். விதியின் போக்கை நன்கறிந்த ஒருவன் அதனை எதிர்த்து அதையும் தன் வழிப்படுத்துவான் என்று ஒரு கவி கூறியிருக்கிறார்.

# XLVII

## மதம் என்பது யாது?

1932-ம் வருஷம் செப்டம்பர் மாதம் மத்தியில் திடீரென்று எங்களுடைய வழக்கமான சாரமற்ற சிறைவாழ்வில் வெடிகுண்டு வீழ்ந்ததுபோல் ஒரு செய்தி எட்டிற்று. ராம்சே மாக்டனால்டு அவர்கள் கொடுத்தவகுப்புவாதத் தீர்ப்பில் தீண்டாதார்களுக்கு அளித்த தனித்தொகுதித் தேர்தலை ஆட்சேபித்து மரணம் வரையில் உண்ணாவிரதமிருக்க காந்திஜீ தீர்மானங் கொண்டதாக செய்தி எட்டிற்று. ஜனங்களைத் திடுக்கிடச் செய்ய அவருக்கு எத்தகைய சக்தி இருக்கிறது! திடீரென்று எத்தனையோவகை கற்பனைகள் என் மூளையில் மோதின பலவித பயங்கரமான நிலைமைகளும், சம்பவங்களும் ஏற்படக்கூடும் என்று நினைத்து நினைத்து மன அமைதியை இழந்து கிலேசப் பட்டேன். இரண்டு நாட்கள் பூராவும் ஒரே அந்தகாரமாக விருந்தது. வழியொன்றும் புரியவே இல்லை. காந்திஜீயின் செயலினால் நேரக்கூடிய சில பலன்களைப்பற்றி நான் யோசிக்கும்பொழுது எனது உள்ளம் தவித்துப்போய் விட்டது. அவரிடம் எனக்கு அளவில்லா பிரேமை இருந்தது. அவருடன் சென்று அவரை இங்கிலாந்துக்கு வழியனுப்பிவிட்டு வந்து ஒருவருஷத்துக்கு மேலாயிற்று. அதுதான் எனக்குக் கிடைத்த கடைசித் தரிசனமாகப்போய் விடுமோ? நான் அவரை இனிப்பார்க்க முடியாதோ என்று துயரத்தில் ஆழ்ந்தேன்.

சிறிய சங்கதியான தனித்தொகுதி விஷயத்தில், தமது உயிரை மாய்த்துக்கொள்ள அவர் தீர்மானித்தாரே என்று எனக்கு ஆத்திரமும் மற்றோர் பக்கம் உண்டாயிற்று. நம்முடையவிடுதலைஇயக்கம் என்னஆகும்? தற்காலீகமாகவேனும், முக்கியமான பிரச்னைகள் மதிப்பிழந்து, பின்னே போய் விடாதா? அவருடைய தற்காலீக நோக்கம் பலித்து, தீண்டாதார்களுக்காக, கூட்டுத் தொகுதியை அடைந்துவிட்டாலும், அதனால் லேசான வெற்றி மயக்கம் ஏற்பட்டு, இனி சிறிது

காலத்துக்கு எதுவும் செய்யவேண்டியதில்லை யென்ற எண்ணம் நாட்டில் உண்டாகிவிடாதா? அரசாங்கத்தாரால்தோற்றுவிக்கப்படும் வகுப்புத் தீர்ப்பையும் பொதுவாக அமைக்கப்படும் திட்டத்தையும் காந்திஜீ தமது இந்தச் செயலால் ஏற்றுக்கொண்டதாக ஆகிவிடாதா? இது சட்ட மறுப்புக்கும் ஒத்துழையாமைக்கும் பொருத்த முள்ளதாகுமா? மிக்க துணிவுடன் எவ்வளவோ தியாகம் செய்ததற்குப் பின்னர் நம்முடைய இயக்கம் ஒரு சின்ன விஷயத்துக்காகவா வழி பிளந்துபோகவேண்டும்? காந்திஜீ அடிக்கடி கடவுள் பெயரைக் குறிப்பிடுவது எனக்குப் பிடிக்கவில்லை. அரசியல் பிரச்னையை மத சம்பந்தமான உணர்ச்சிப் பெருக்கைக் கொண்ட பார்வையுடன் அவர் பார்ப்பதில் ஆத்திரப்பட்டேன். உண்ணாவிரதத்துக்கு நாள் முதற்கொண்டு கடவுள் குறிப்பிட்டுவிட்டதாக, அவர் சொன்னதுபோல் எனக்குத் தோன்றிற்று. அவர் இப்படியா உதாரணம் கற்பிப்பது? பாபு (மகாத்மாஜீ) இறந்துபோனால் அப்பொழுது இந்தியா எப்படி இருக்கும்? அதனுடைய அரசியல் போக்கு எப்படி இருக்கும்? எதிர்காலம் பயங்கரத் தோற்றமாக என் கண்ணில் பட்டது. நான் அதைப்பற்றி நினைக்கையில், என்னுடைய உள்ளத்தில் ஏக்கம் குடிகொண்டது. இப்படியாக, எண்ணி, எண்ணிக் கவலைப்பட்டேன். மூளை குழம்பிப் போயிற்று. ஆத்திரம், திக்கற்றநிலைமை, இந்த மனத் துயரத்துக்குக் காரணமாயிருந்தவர் பேரில் அன்பு இவைகள் மாறி மாறித் தோன்றின. என்ன செய்வதென்று எனக்குத் தெரியவே இல்லை. எனக்கு ஆத்திரம். கண்டவர்களிடமெல்லாம் கோபம். எல்லாரிடத்திலும்விட என்னிடத்திலேயே தான் எனக்கு அதிகக்கோபம்.

பின்னர் விநோதமான ஒரு மாறுதல் நேர்ந்தது எனக்குள்ளே உணர்ச்சி வேகம் கரையேறிப் போய் அதன் இறுதியில் ஓரளவு அமைதி ஏற்பட்டது. எதிர்காலம் அவ்வளவு இருள் சூழ்ந்ததாகக் காணப்படவில்லை. சரியான 'சமயத்தில், பக்குவமான காரியத்தைச் செய்யும் விநோதமான ஆற்றல் காந்திஜீக்கு உண்டு. காந்திஜீயின் இந்தச் செயலை என்னுடைய நோக்கப்படி நான் ஆதரிக்கவே முடியாது. என்றாலும் இந்தச் செயலால் காந்திஜீயின் தற்காலிக நோக்கம் பலிப்பதோடு கூட, நம்முடைய தேசியப் போராட்டத்திலும் மகத்தான

விளைவுகளை உண்டாக்கினாலும் உண்டாக்கிவிடலாம். பாபு இறந்துபோனாலுமே நம்முடைய விடுதலைப் போராட்டம் நடந்து கொண்டிருக்கும். ஆகையால் எது நேர்ந்தாலும் அதற்காக நாம் தயாராய்த்தான் இருக்க வேண்டும். காந்தீஜி இறந்துபோனாலும் பாதகமில்லையென்று ஒருவாறு என்னுடைய மனதைத் தேற்றிக்கொண்ட பின்னர்தான் எனக்கு அமைதி ஏற்பட்டது. எது நேர்ந்தாலும், அதைச் சந்திக்க நான் தயாராக ஆய்விட்டேன். நாடு முழுதும் மகத்தான எழுச்சி ஏற்பட்டதாக செய்தி கிடைத்தது. ஹிந்து ஜன சமூகத்தில் மந்திரம் செய்தது போல, உற்சாக அலை மோதிற்று. தீண்டாமைக்கு சாவு மணி அடித்துவிட்டதாக தோன்றிற்று. எரவாடா சிறையில் வீற்றிருக்கும் இந்தச் சிறிய மனிதன் என்ன மந்திரவாதி என்று எண்ணினேன். ஜனங்களின் உள்ளங்களை ஆட்டி வைக்கும் கயிறுகளை இழுப்பதற்கு இவருக்கு எவ்வளவு சாமர்த்தியம்.

அவரிடமிருந்து எனக்கு ஒரு தந்தி வந்தது. நான் சிறைக்குச் சென்றபின் இதுதான் அவரிடமிருந்து கிடைத்த முதல் தந்தியாகும். இவ்வளவு நீண்டகாலத்துக்குப்பின், அவரிடமிருந்து செய்தி வந்ததில் எனக்கு ஆறுதலாயிருந்தது. அவருடைய தந்தி பின்வருமாறு:—

"மனம் புண்ணாயிருக்கும் இந்த நாட்களிலெல்லாம், நீ என்னுடைய மனக் கண்ணின் முன்னே இருந்துவருகிறாய். உன்னுடைய அபிப்பிராயத்தைத் தெரிந்து கொள்ள நான் மிகுந்த ஆவல்கொண்டிருக்கிறேன். உன்னுடைய அபிப்பிராயத்தை நான் எவ்வளவு மதிக்கிறேன் என்பது உனக்குத் தெரியும். இந்துவைப் பார்த்தேன். ஸ்வரூபின் குழந்தைகளையும் பார்த்தேன். இந்து சந்தோஷமாயிருப்பதாகக்காணப்பட்டாள். அவளுக்கு இப்பொழுது கொஞ்சம் சதை போட்டிருக்கிறாப்போல் தோன்றுகிறது. சுகமாக இருக்கிறேன். பதில் தந்தி கொடு. அன்பு."

அவர் உண்ணாமை வேதனையிலும் வேறு எவ்வளவோ தொல்லைகளிலும் சிக்கிக்கொண்டு தவித்துக்கொண்டிருந்தார். இருந்தாலும் என்னுடைய மகளும் எனது சகோதரியின் குழந்தைகளும் அவரைப் போய்ப் பார்த்ததைப்பற்றி குறிப்பிட்டிருந்தார். அதுமட்டுமா? இந்திராவுக்கு சதை போட்

டிருக்கிறது என்பதையும் அவர் குறிப்பிடவேண்டுமாம்! இது மிகவும் விநோதமாக விருந்தபோதிலும், இப்படிச் செய்வதுதான் அவரது வழக்கம். என்னுடைய சகோதரியும் அப்பொழுது சிறையிலிருந்தாள். இந்தக் குழந்தைகள் எல்லாம் அப்பொழுது பூனவில் பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருந்தன பார்வைக்கு வாழ்க்கையிலே சிறிதாகத் தோன்றினாலும். மகத்தான ஆறுதல் உண்டாக்கும் சங்கதிகளை காந்திஜி ஒரு நாளும் மறப்பதே இல்லை.

தொகுதிப் பிரச்னை சம்பந்தமாக ஒருவகையில் ராஜி ஏற்பட்டுவிட்டதென்று அப்பொழுது எனக்குச் செய்தி கிடைத்தது. காந்திஜீக்கு பதில் தந்தி அனுப்புவதற்கு சிறை சூப்ரிண்டு எனக்கு அனுமதித்தார். கீழ் காணும் தந்தியை நான் காந்திஜிக்கு அனுப்பினேன்:—

“தங்கள் தந்தி கிடைத்தது ஒருவகையில் முடிவு ஏற்பட்டுவிட்டது என்ற செய்தி கேட்டு எனக்கு ஆறுதலும் ஆனந்தமும் ஏற்பட்டுவிட்டன. உண்ணாவிரதம் இருக்கத் தாங்கள் தீர்மானங்கொண்டீர்கள் என்ற செய்தியை முதல் முதல் கேட்டதும் எனக்கு குழப்பமும் மனவேதனையும் உண்டாயின. ஆனால் இறுதியில் எல்லாம் நல்லதாய் முடியும், வெற்றியாக முடியும் என்று எண்ணி, மீண்டும் மன அமைதியைப் பெற்றேன். தாழ்த்தப் பட்டவர்களுக்காக எவ்வளவு தியாகம் செய்தாலும் போதாது. ஜன சமூகத்திலே, அடித்தட்டுகளில் கிடக்கும் மக்களுக்கு இருக்கும் சுதந்திரத்தைக் கொண்டுதான், நாட்டின் சுதந்திரத்தை மதிப்பிட முடியும். ஆனால் நமது பூர்ண சுதந்திர லட்சியத்தை மறைக்கும்படியான ஏனைய பிரச்னைகள் குறுக்கிட்டு ஆபத்து நேரிடுமோ என்று அஞ்சுகிறேன். உண்ணாவிரதத்தை மத சம்பந்தமான நோக்குடன் மதிப்பிட என்னால் முடியாது உங்களுடைய முறைகளை மற்றவர்கள் தங்கள் சொந்த நலத்துக்காக உபயோகப்படுத்திக் கொள்வார்கள் என்ற ஆபத்தும் இருக்கிறது. ஆனால் மந்திரவாதிக்கு யோசனை சொல்ல நான் யார்? அன்பு.”

பூனவில் அப்பொழுது வந்து கூடிய பலவேறு பிரமுகர்களால் ஒப்பந்தம் ஒன்று கையெழுத்திடப்பட்டது. அவசர அவசரமாக பிரிட்டிஷ் பிரதம மந்திரி அதை ஏற்றுக்

கொண்டு, தம்முடைய முந்திய தீர்ப்பை இதற்கிணங்க மாற்றிக்கொண்டார். ஒப்பந்தங்களிலும் ராஜிகளிலும் எனக்கு அதிகமானவெறுப்பு. ஆனால் அதன் ஷரத்துக்களின் பிரயோசனம் ஒருபுறமிருக்க காந்திஜீயின் உண்ணாவிரதத்தை முடித்ததற்காகவே இந்த பூனா ஒப்பந்தத்தில் எனக்கு ரொம்ப பிரியம்.

பரபரப்பெல்லாம் அடங்கிப் போய், மறுபடியும் எங்களுடைய சிறைத் திட்ட வாழ்க்கைக்கு திரும்பி வந்து விட்டோம். ஹரிஜன இயக்கச் செய்திகளும் அந்த இயக்கசம்பந்தமாக காந்திஜீ சிறையிலிருந்து கொண்டே செய்து வந்த அலுவல்களைப்பற்றிய தகவல்களும் எங்களுக்கு வந்து கொண்டிருந்தன. இவைகளைப்பற்றி எனக்கு மனத்திருப்தி உண்டாகவில்லை. தீண்டாமையை ஒழித்துதுர்ப்பாக்கியமான தீண்டாதார்களை உயரக் கொண்டுவர நினைக்கும் இயக்கத்துக்கு மகத்தான சக்தியளிக்கப்பட்டது. ஒப்பந்தத்தால் அல்ல. தீண்டாமையை ஒழிக்கவேண்டும் என்ற மனப்பான்மையை நாடுமுழுதும் கிளப்பிவிட்டதால் அது வரவேற்கப் படவேண்டியதுதான். ஆனால் இதனால் சட்டமறுப்பு வேகம் தணிந்துவிட்டது என்பதும் வெளிப்படையாகும். நாட்டின் கவனம் வேறு துறைகளில் செலுத்தப்பட்டது. காங்கிரஸ் ஊழியர்களில் பலர் ஹரிஜன இயக்கத்திலே ஈடுபட்டு விட்டார்கள்.

சிறைக்குப் போகாமலும், தடியடிபடாமலும், சொத்துப் பறிமுதலுக்கு ஆளாகாமலும் பத்திரமான வேலைகளைச் செய்ய இது ஒரு சாக்காக அநேகருக்கு அமைந்து போயிற்று. இது இயல்புதான். ஆயிரக்கணக்கான நமது ஊழியர்கள் யாவரும் கோரமான துன்பத்துக்கும், குடும்பம் சிதைந்து உடைந்து போகும்படியான நிலைமைக்கும் எப்பொழுதுமே தயாராக இருக்க வேண்டுமென்று எதிர்பார்ப்பது நேர்மையானதல்ல. இருந்தாலும் நம்முடைய மகத்தான சட்டமறுப்பு இயக்கம் சிறிது சிறிதாக நசித்து வருவதைக் கண்டு நான் துக்கம் அடைந்தேன். சட்ட மறுப்பு இப்பொழுதும் நடந்துகொண்டுதான் இருந்தது. 1933-ம் வருஷத்தில் மார்ச் ஏப்ரல் மாதத்தில் கல்கத்தாவில் நடந்த காங்கிரசைப்போல, சில சமயங்களில் கூட்டச் சட்டமறுப்பும் நடைபெற்றது. காந்திஜீ எரவாடா சிறையில் இருந்தார்.

ஹரிஜன இயக்கங்கள் சம்பந்தமாக ஜனங்களைச் சந்திக்கவும் வெளியே யோசனை சொல்லியனுப்பவும் அவருக்கு சிறப்பாக உரிமைகள் அளிக்கப்பட்டிருந்தன. இந்தச் சலுகைகளால் காந்திஜீ சிறையில் இருக்கிறார் என்று ஜனங்களுக்கிருந்த மனவேதனை பெரிதும் குறைந்து போய்விட்டது. இவைகளை எல்லாம் கண்டு என்மனதிலே மிகுதியும் துக்கமேற்பட்டது.

பல மாதங்கள் கழித்து, 1933-ம் வருஷம் மேமாதத் துவக்கத்தில் காந்திஜீ தமது 21 நாள் உண்ணாவிரதத்தை ஆரம்பித்தார். இதைப்பற்றியும் முதன்முதலாக எனக்குச் செய்தி கிடைத்ததும் நான் திடுக்கிட்டுப்போனேன். ஆனால், தவிர்க்கமுடியாத நிகழ்ச்சி என்று அதை ஏற்றுக்கொண்டு என்னைத் தேற்றிக் கொள்ள பயிற்சி செய்துகொண்டேன். அவர் தமது மனதில் தீர்மானித்துக்கொண்ட விரதத்தைப் பற்றி பொது ஜனங்களுக்கு அறிவித்த பின்னர், அதை நிறுத்திவிட வேண்டுமென்று மற்றவர்கள் போய் அவரைக் கேட்டதில் நான் மிகவும் ஆத்திரப்பட்டேன். என்சம்மந்தப்பட்டவரையிலும், உண்ணாவிரதமென்பது அர்த்தமாகாத சங்கதியாகும். தீர்மானம் செய்வதற்குமுன் காந்திஜீ என்னைக் கேட்டிருந்தால் நான் அதற்கு விரோதமாக நிச்சயமாக தீர்ப்பு சொல்லியிருப்பேன். காந்திஜீ தம்முடைய வார்த்தையைக் காப்பாற்ற வேண்டும் என்பதில் எனக்கு ரொம்ப அக்கறை. அவர் சொன்ன வார்த்தை ஒரு நாளும் கீழே போகக் கூடாது என்பது என்னுடைய சங்கல்பம். தமது சொந்த முறையில், மிகவும் முக்கியமான சங்கதியென்று அவர் நினைத்துக் கொண்டிருப்பதை மீறி அவர் நடக்கவேண்டுமென்று யாரும் அவரிடத்தில் போய்ச்சொல்வது தவறு என்று எனக்குத் தோன்றிற்று. காந்திஜீயின் உண்ணாவிரதத்தைப் பற்றி நான் துயரப்பட்டபோதிலும் அதைச் சகித்துக் கொண்டிருந்தேன்.

தமது உண்ணாவிரதத்தை ஆரம்பிப்பதற்கு இரண்டொரு நாட்களுக்குமுன், காந்திஜீ எனக்கு ஒரு கடிதம் எழுதினார். அது அசல் காந்தி கடிதம். அது என்னை மிகவும் உருக்கி விட்டது. அவர் என்னிடமிருந்து பதில் கேட்டிருந்ததால் கீழ்க்கண்ட தந்தியை நான் அவருக்கு அனுப்பி வைத்தேன்:—

"தங்கள் கடிதம்; எனக்கு விளங்காத சங்கதிகளைப் பற்றி நான் என்ன சொல்வது? திக்குத் திசை தெரியாமல் நான் அலைந்து கொண்டிருக்கிற இந்த நாட்டிலே, எனக்கு வழியைப் புலப்படுத்துவதற்காக, தாங்கள் ஒருவர்தான் பிரகாசமாகக் காணப்படுகிறீர்கள். நான் இருளில் என்னுடைய பாதையைத் தடவிப் பார்த்துக் கொண்டு கீழும் மேலுமாக விழுந்து கொண்டிருக்கிறேன். என்ன நேர்ந்தாலும் என்னுடைய அன்பும்எண்ணங்களும் தங்களிடத்திலே இருக்கும்."

அவரது உண்ணுவிரதம் எனக்குக் கொஞ்சம் கூடப் பிடிக்கவில்லை. ஆனால், அதற்கு விரோதமாகக் கடுமையாக எதையும் சொல்லி, அவருடைய மனதைப் புண்படுத்தவும் இஷ்டமில்லை. இந்த இரண்டு உணர்ச்சிகளுக்கும் நடுவே, நின்று திண்டாடிக் கொண்டிருந்தேன். நான் அவருக்கு சரியான, ஆறுதலான செய்தியை அனுப்பவில்லை என்று கருதினேன். அவருடைய மரணத்திலே கொண்டு போய்விடக் கூடிய இந்த பயங்கரமான விரதத்தை, அவர் மேற்கொள்ளத் தீர்மானித்த பின்னர், என்னால் கூடிய அளவு அவருக்கு உத்சாகத்தை அளிப்பது என்னுடைய கடமையாகும். சிறிய சங்கதிகளால் மனதில் மகத்தான மாறுதல்கள் ஏற்பட்டு விடுகின்றன. அவர் இந்த விரதத்தைப் பூர்த்தி செய்து பிழைப்பதாயிருந்தால், அவருக்குள்ள முழு சக்தியையும் அவர் உபயோகப்படுத்த வேண்டியதாயிருக்கும். என்ன நேர்ந்தாலும் அதை நாம் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று எண்ணினேன். துர்பாக்கியவசமாக, அவருக்கு மரணம் சம்பவித்தாலும், அதையும் மன உறுதியுடன் ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும். எனவே அவருக்கு இன்னொரு தந்தியும் கொடுத்தேன்.

"மகத்தான பிரயத்தனத்தில் தாங்கள் ஈடுபட்டிருக்கிற இந்தத் தருணத்தில், மீண்டும் தங்களுக்கு எனது அன்பையும் நல்வாழ்த்தும் அனுப்பிவைக்கின்றேன். எது நேர்ந்தாலும், அது நன்மைக்குத்தான் என்றும், எது நேரிடினும் அது உங்களுக்குத்தான் வெற்றி என்றும், நம்புகிறேன் என்பதை நான் தங்களுக்கு உறுதி கூறுகின்றேன்."

காந்திஜி உண்ணு விரதத்திலிருந்து தப்பிப் பிழைத்து விட்டார். உண்ணுவிரதத்தின் முதல் நாளிலேயே, அவர்

சிறையிலிருந்து விடுதலை செய்யப்பட்டார். அவருடைய யோசனையின் பேரில், சட்ட மறுப்பு ஆறு வாரங்களுக்கு நிறுத்தி வைக்கப்பட்டது.

[காந்திஜீயின்] உண்ணாவிரத காலத்தில் நாட்டில் உணர்ச்சிப்பெருக்கு எழுந்ததை கவனித்துக்கொண்டிருந்தேன். அரசியல் போராட்டத்தில் இது சரியான முறைதானா என்று எனக்குள்ளாகவே யோசிக்கலானேன். பண்டைய மூட நம்பிக்கைகள் திரும்பிவருவதாகத் தோன்றிற்று. இதனால் மூளையைக்கொண்டு தெளிவாக யோசிப்பதற்கு இடமில்லாமலே போய்விடுமோ என்று எண்ணினேன். இந்தியா முழுதும் மகாத்மாவை பயபக்தியுடன் நோக்கி நின்றது. அவர் அற்புதங்களைச் செய்து தீண்டாமையை ஒழித்து ஸ்வராஜ்யத்தைக் கொண்டுவந்து கொடுக்கவேண்டுமென்று எதிர்பார்த்து நின்று, தான் அதிகமாக ஒன்றுமே செய்யவில்லை. காந்திஜீ, பிறர் தமக்குத்தாமே யோசிக்கும்படியாகத் தூண்டவில்லை. தூய்மையும் தியாகமும் தேவையென்றுதான் அவர் வற்புறுத்திக்கொண்டே இருப்பார். அவரிடத்தில் எனக்கு மகத்தான பிரியமிருந்தபோதிலும், எங்களிருவருடைய மனப்பான்மைகளும் வெவ்வேறு என்பதை உணர்ந்தேன். அவர் அரசியல் சம்பந்தமாக காரியங்கள் செய்யும்பொழுது குறி தவறினதே இல்லை. அவர் அசாதாரணமான கர்மவீரன். ஆனால் "நம்பிக்கை" முறையில் ஒரு நாட்டை பயிற்சி செய்வதுதான் சரியான வழியாகுமா? அதனால் தாற்காலிகமாக நன்மை ஏற்படலாம். நிலைத்த பயன் கிட்டுமோ என்பதுதான் சந்தேகம்.

பலாத்காரத்தையும் அநியாயத்தையும் அடிப்படையாகக்கொண்ட தற்போதைய ஜனசமூகத் திட்டத்தை காந்திஜீ எவ்வாறு ஏற்றுக்கொண்டார் என்பது எனக்கு விளங்கவே இல்லை. எனக்குள்ளேயும் போராட்டம் நிகழ்ந்தது. இருவித எதிரிடையான பக்திகளுக்கு நடுவே நின்று நான் ஊசலாடினேன். சிறையில் எனக்கு தற்காலிகமான ஒரு பாதுகாப்பு இருந்தது. நான் சிறையைவிட்டு வெளியே போனவுடனே, எனக்குத் துன்பம் நிறைய நேரும் என்று எனக்குத் தெரியும். வீடும் தோழமையும் இல்லாமல் தவிப்பவனைப்போல ஆனேன். எந்த இந்தியாவுக்கு எனது அன்பைக் கொடுத்து பாடுபட்டு உழைத்து வருகின்றேனோ அந்த இந்தியா எனக்கு

திக்கு திசை தெரியாத நாடாக கண்ணில் பட்டது. என்னுடைய நாட்டாரின் மனப்பான்மையில் புகுந்துகொண்டு அவர்களைப்போல நான் எண்ண முடியாமற்போனது என்னுடைய தவரு? . என்னுடன் நெருங்கிப் பழகிய தோழர்களுக்கும் எனக்கும் கூட மத்தியில் கண்ணுக்குத் தெரியாத சுவர் ஒன்று எழுந்து விட்டதாக எனக்குத் தோன்றிற்று. அந்தத் தடையைத் தாண்டமுடியாமல் துயரங்கொண்டு நான் எனக்குள்ளேயே புகுந்துகொண்டேன். பண்டைய உலகம் அவர்களைச் சூழ்ந்துகொண்டதாக எனக்குத் தோன்றிற்று. புதிய உலகமோ கண்ணுக்குத்தெரியாத தூரத்தில் சைகை காட்டிக்கொண்டு நின்றது. கவி கூறியவாறு "ஒரு உலகம் இறந்து மடிந்துவிட்டது. மற்ருெரு உலகமோ பிரசவ வேதனைப்பட்டுச்கொண்டு வெளி வருவதற்கு சக்தியில்லாமல் தவிக்கின்றது. இந்த இரண்டு உலகங்களில் எந்த இடத்திலே என்னுடைய தலையை வைத்துக் கவலைதீரப் போகின்றேன்?"

இந்தியா மதபக்தியுள்ள நாடாகக் கருதப்படுகின்றது. ஹிந்துக்களும் முஸ்லீம்களும் சீக்கியர்களும் தங்களுடைய மதங்களின்பேரால் கர்வப்படுகின்றார்கள். அந்த கர்வம் உண்மையென்று ருஜூப்படுத்த மண்டைகளை உடைக்கிறார்கள். இந்தியாவிலும் சரி, வேறு எங்கேயும் சரி, மதம் என்று கட்டுப்பாடாக வகுக்கப்பட்டு அனுஷ்டிக்கப்பட்டு வரும் ஏற்பாட்டில் எனக்கு வெறுப்பு. அதை நான் அடிக்கடி கண்டித்திருக்கிறேன். அதை அடியோடு ஒழித்துவிட வேண்டுமென்பது என் ஆசை. மதம் என்றால் குருட்டு நம்பிக்கை பிற்போக்கு, ஆராய்ச்சிக்கு அடங்காத கொள்கை, வெறி, மூடபக்தி, சுரண்டல், பரம்பரை பாத்தியப் பாதுகாப்பு என்று எனக்கு எப்பொழுதுமே தோற்றும். இருந்தாலும், அதற்குள்ளே வேறொரு பொருளும் இருக்கிறதென்று எனக்கு நன்றாகத் தெரியும். மனித வர்க்கத்தின் தீராத தாபத்தைத் தீர்த்து வைக்கக்கூடிய சக்தி அதனுள் இருக்கிறதென்று எனக்குத் தெரியும். இந்த சூக்ஷ்மமான ஒன்று மதத்தினுள் இல்லாவிட்டால் அது ஒரு மகத்தான சக்தியாக ஓங்கி துன்பசாகரத்தில் மூழ்கித் தவிக்கும் கோடிக்கணக்கான ஆன்மாக்களுக்கு அமைதியையும் ஆறுதலையும் எவ்வாறு கொடுத்திருக்க முடியும்? நடுக்கடலில் புயலால் மோதப்பட்டுப் பின்னர் துறைமுகம் சேர்ந்ததைப்போல், சிந்தாசாகரத்தின்

அலைகளிலிருந்து தப்பி, குருட்டு நம்பிக்கைகளான துறை முகத்தில் சேர்ந்த அமைதியா? அல்லது இதைவிட மேலான தோர் சாந்தியா? சிலருக்கேனும் மதத்திலிருந்து மேலான அமைதி கிடைக்கிறதென்பது நிச்சயம். பண்டைக்காலத்தில் எப்படி இருந்தபோதிலும் இப்பொழுது ஸ்தாபனங்களாக வழங்கிவரும் மதத்தில் ஓடுதான் இருக்கின்றது. உயிர் இல்லை. ஒரு கூட்டில் அதனுடைய இயற்கையான சத்து போய்விட்டபிறகு அந்தக் கூட்டுக்கு இயல்பாயில்லாத சாமான்கள் வந்து வெளியே அடைந்துகொண்டு அந்தக் கூட்டின் பழைய உருவமும் அமைப்பும் கெடாமல் இருப்பதுபோல், மதமும் இருக்கின்றது. ஆனல் அது உயிரில்லாத பழங்கூடு என்று தன்னுடைய மதத்தைத் தவிர ஏனையோரின் மதங்களைப்பற்றி ஜி. கே. செஸ்டர்டன் உவமை கூறியிருக்கிறுர். சத்தான சங்கதி ஒன்றிரண்டு இருந்தபோதிலும் அவைகள் விஷத்தன்மை கொண்ட மற்ற பொருள்களால் பூராவும் மூடப்பட்டு விடுகின்றன. நம்முடைய கீழ்நாட்டு மதங்களுக்கும் சரி, மேனுட்டு மதங்களுக்கும் சரி, இந்தக் கதி ஏற்பட்டு விட்டதாகத் தோன்றுகிறது. இங்கிலாந்தில் அரசாங்கத்தின் ஆதரவில் இருந்துவரும் மதத்தை அலசிப் பார்த்தால் மதமென்ற சொல்லின் உண்மையான அர்த்தத்துக்கு அது கொஞ்சம்கூடப் பொருத்தமானதல்லவென்பது தெளிதாக விளங்கும். பிராடஸ்டாண்ட் (கிறிஸ்துவ புதிய சுவிசேஷம்) மதத்தின் எல்லாப் பிரிவுகளுக்கும் இதே கதி நேரிட்டிருக்கிறது. ஆனல் இங்கிலாந்திலே வழங்கிவரும் சர்ச் ஆப் இங்கிலண்ட் மதம் ராஜீய இலாகாவாக நீண்டகாலமாக வேலை செய்து வருகிறபடியால் அதற்கு மதம் என்ற பெயரே கொடுக்க முடியாது.

அந்த மதத்தைத் தழுவி நிற்பவர்களிற் பலர் உயர்ந்த குணமுடையவர்களாக இருக்கிறுர்கள் என்பதில் சந்தேகமில்லை. ஆனல் அந்த மதம் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்துக்காக குற்றேவல் செய்து உழைத்து வந்தது. முதலாளி தத்துவம் சாம்ராஜ்யதத்துவம் இவைகளால் ஏற்பட்ட கொடுமைகளை மறைத்து மூடுவதற்காக மதரீதியில் ஆங்கிலநாட்டில் வழங்கிவரும் சமயம் நேர்த்தியான போர்வையொன்றை ஆக்கிச் சித்தரித்துக் கொடுத்துவிட்டது. ஆசியாவிலும் ஆப்பிரிக்காவிலும் கொள்ளையடிப்பதற்காக பிரிட்டிஷார் சென்றுலும்

அந்தச் செயலையும் உயர்ந்த தர்மசாஸ்திர அளவைக்கொண்டு சமாதானம் சொல்லப் பார்க்கின்றது. இங்கிலீஷ்காரர்கள் எப்பொழுது எதை எங்கே செய்தாலும் அது சரியாகத்தானிருக்கும் என்ற சௌகரியமான உணர்ச்சியை வளர்த்ததற்கும் இந்த மதமே மூலகாரணமாகும். இந்த உணர்ச்சியை வளர்த்தது பிரிட்டிஷாரின் மதமா அல்லது பிரிட்டிஷார் கைக்கொண்டிருக்கும் மதம் இந்த உணர்ச்சியின் பயனா என்பது எனக்குத் தெரியாது.

பிரிட்டனைப்போல் அவ்வளவு அதிர்ஷடமில்லாத ஐரோப்பிய அமெரிக்க நாடுகள் வஞ்சகம் நிறைந்த பிரிட்டிஷார் என்று குற்றம் சாட்டுகின்றன. ஆனால், இந்தக் குற்றச் சாட்டு பிரிட்டிஷ் வெற்றியினால் ஏற்பட்ட பொறாமையின் பயனாகவும் இருக்கலாம். வேறு எந்த சாம்ராஜ்ய வல்லரசும் இங்கிலாந்தின்பேரில் கற்களை விட்டெறிவதென்பது கூடாத காரியமாகும். ஏனென்றால், அவைகளின் சரித்திரமும் பிரிட்டிஷ் சரித்திரத்தைப்போல் கேவலமானது தான். வேண்டுமென்றே வஞ்சகமாக இருக்கும் நாட்டாருக்கு மூலபலமே இருக்கமுடியாது. ஆனால் இத்தகைய மூலபலத்தை பிரிட்டிஷார் அடிக்கடி வெளிக் காண்பித்திருக்கிறார்கள். எங்கே அவர்களுடைய சொந்த நலங்கள் பாதிக்கப்படுகின்றனவோ, அங்கே அவர்களுடைய நியாய உணர்ச்சிகள் விநோதமான வகையில் மழுங்கிப் போய்விடுகின்றன இவ்வாறு மழுங்கிப் போவது அவர்களுடைய மதத்தினால் ஏற்பட்டிருக்கலாம். ஏனைய நாட்டார்களும், மக்களும், பிரிட்டிஷாரைக் காட்டிலும் கேவலமாக நடந்துகொண்டிருக்கிறார்கள். ஆனால் தங்களுக்கு லாபம் தரக்கூடியவைகளை தர்மமாக பாவனை செய்துகொண்டு நடப்பதற்கு அவர்களால் முடிவதில்லை. நம்முடைய கண்ணை மறைக்கும் கட்டையை கவனிக்காமல், பிறர் கண்ணில் படர்ந்திருக்கும் தூசியைக் குற்றமாகக் காணும் சக்தி எல்லோரிடத்திலுமே இருக்கின்றது. ஆனால் இத்தகைய சக்தி பிரிட்டிஷாரிடம் இருப்பதுபோல வேறு யாரிடத்திலுமே இருக்க முடியாது.

பிராடஸ்டண்டுக் கிறிஸ்துவமதம் புதியநிலைமைகளுக்கு தக்கபடி தன்னைத் திருத்தி அமைத்துக்கொண்டு, இகத்திலும் பரத்திலும் நன்மைகளை வேண்டிநின்றது. இந்த உலக லாபம் சம்பந்தப்பட்ட வரையிலும் அதற்கு மகத்தான

வெற்றி ஏற்பட்டது. ஆனல் மத சம்பந்தமான நோக்குடன் பார்த்தால், பிராடஸ்டண்டு கிறிஸ்துவமதம் இரண்டு உலகத்துக்கும் சேராமல் கீழே விழுந்துவிட்டது. மதம் என்றுல் பெரிய தொழிற்சாலே யென்றும் ஞாயிற்றுக்கிழமைத் தொழுகை யென்றும் ஆகிவிட்டது. ரோமன் கத்தோலிக் கிறிஸ்துவ மதம் பழைய பிடிப்பை விடாமல்பிடித்துக்கொண்டிருக்கிறமையால் இந்தக் கதிக்கு ஆளாகவில்லே. அந்தப் பிடிப்பு இருக்கிற வரையில் அது செழிப்புடன் இருக்கும். மேனுட்டில், மதம் என்பதற்கு குறுகிய அர்த்தம் கொடுத்துப்பார்த்தால் ரோமன் கத்தோலிக்க மதம்தான் இன்றைக்கு உயிருள்ள மதமாகக் காணப்படுகின்றது.

ரோமன் கத்தோலிக்க நண்பர் ஒருவர் கத்தோலிக்க மதத்தைப்பற்றியும், போப்பின் ஸ்ரீமுகங்களேப் பற்றியும் வரையப்பட்ட நூல்களே எனக்கு சிறைக்கு அனுப்பிவைத்தார். அவைகளேப் படித்துப் பார்த்தேன். ஏராளமான ஜனங்களுக்கு அந்த மதத்தின் பேரிலிருக்கும் மோகத்தின் காரணத்தை அறிந்துகொண்டேன். ஹிந்து மதத்தையும் இஸ்லாத்தையும்போலவே ரோமன் கத்தோலிக் மதம் மனிதர்களுக்கு ஒருவித ஆறுதலேயளிக்கிறது. சந்தேகத்திலிருந்தும் மனப் போராட்டத்திலிருந்தும் அவனே விடுவித்து அவனுக்கு அது ஒரு பாதுகாப்பு அடைக்கலமாக விளங்குகின்றது. இந்த ஜன்மத்தில் ஏற்பட்ட குறைகளெல்லாம் அடுத்த வாழ்வில் நிவர்த்தியாகும் என்று உறுதி கூறுகின்றது.

இந்த வழியில் நான் அடைக்கலம்தேட சிறிதுகூட விருப்பம்கொள்ளவே இல்லே. புயல்களும் காற்றும் மோதி வீசும் நடுக்கடலே எனக்குத் தேவை. செத்த பிறகு சிவலோகமா வைகுந்தமா என்பதைப்பற்றி எனக்குக் கொஞ்சம்கூட சிரத்தையே இல்லே. என்னுடைய உள்ளத்தில் நிரைந்து நிற்பதற்குப் போதுமான அளவில் ஏராளமான பிரச்னைகள் இந்த வாழ்க்கையிலே இருக்கின்றன. சீனசம்பிரதாயமே எனக்குப் பிடித்தமானதாகும். சீனர்களுடைய நோக்கம் அறத்தைத் தழுவியது; மதத்தை தழுவியதல்ல. எந்த முறையைப் பின்பற்றி வாழ்க்கையை இன்புற நடத்துவதென்பதிலே தான் எனக்கு சிரத்தை. வாழ்க்கையில் துறவு பூணுவது எனக்குப் பிடித்தம் இல்லே. வாழ்க்கையை அறிந்து அதை யேற்று அதற்குத் தக்கபடி நடந்து அதைச் சீர்

திருத்துவதிலேதான் எனக்கு விருப்பம். ஆனல் சாதாரண மாகமதம் என்பது இந்த உலகத்தைப்பற்றியே கவலைப்படுவ தில்லை. தெளிவாக யோசனை செய்யும் சக்திக்கு மதம் விரோதி யாயிருக்கும். மதத்தை யேற்பதென்றால் யாதொரு கேள்வி யும் கேட்காமல் மாற்ற முடியாத சில சூத்திரங்களையும் கட் டுப்பாடு விதிகளையும் ஏற்றுக்கொள்ள வேண்டியதாயிருக் கிறது. உணர்ச்சி வெறி, பரம்பரை, முதலியவைகளால் ஆக் கப்பட்ட கட்டுப்பாடு விதிகள் மதத்துக்கும் அத்யாத்மிகத் தன்மைக்கும் வெகுதூரம் என்பது என் கருத்து. மதத்துக் கும் ஆன்மவளர்ச்சிக்கும் வெகு தூரம். கண்ணுக்குத் தெரி கிறவைகளை வேண்டுமென்றே பார்க்காமல், மதம் கண்ணை மூடிக் கொள்கிறது. ஏனென்றால், மதம் உபதேசம் செய் யும் கட்டுப்பாடுவிதிகளுக்கு உலகில் நடைபெறும் நிகழ்ச்சிக ளினல், ஆபத்துவந்துவிடுமோ என்று மதம் நிகழ்ச்சிகளைப் பார்ப்பதில்லை போலும்! மதம் குறுகியநோக்கம் கொண் டது. அதற்கு மாறுபட்ட அபிப்பிராயங்களையும் மனப் பான்மைகளையும் கண்டு, அதனல் பொறுத்துக்கொண்டிருக்க முடியாது. அது தன்னை மிகைப்படுத்திக்கொள்ளும் தன்மை கொண்டது. அகம்பாவம் கொண்டது. சுயநலக்காரர்க ளும் சமயோசித வாதிகளும் தங்கள் நலத்திற்காக தன்னை உபயோகப்படுத்திக் கொள்ள சாதகமாக விருக்கிறது.

மதப்பற்று கொண்டவர்கள், நியாயப்பற்று கொண்ட வர்களாகவும், உயர்ந்த ரக மனிதர்களாயும் இருக்கமாட் டார்கள் என்பது மேற்கூறியதற்கு அர்த்தமல்ல. ஆனல், மதப்பற்றுக்கொண்ட மனப்பான்மையினல், ஒரு நாட்டு மக்களின் முற்போக்கு மிகுதியாக தடைபட்டுவிடுகின்றது என்பது பொருளாகும். முற்போக்கு என்பதை இந்த உலக அளவைக்கொண்டு மதிப்பிடுகின்றேன். இந்த வாழ்வுக்கு பின்னே நேருவதைக் கொண்டு முற்போக்கைக் குறிப் பிடவே இல்லை. மதம் என்றால் கடவுளைக் காணுதல் என்று வழக்கமாகச் சொல்லப்படுகிறது. ஜனசமூக நன்மையைக் காட்டிலும் தன்னுடைய சொந்த மோட்சத்தைப்பற்றியே மதப்பற்றுகொண்ட மனிதன், அதிகமாகக் கவலைப்படுகின் றன். மதபக்தன், தான் என்ற மமதையைப் போக்கிக் கொள்ள முயலுகிறன். ஆனல், அந்த முயற்சியினலேயே, அவனுக்கு அதிகமான அகம்பாவம் ஏற்பட்டுவிடுகிறது. ஜன சமூகத் தேவைகளுக்குத் தகுந்தாற்போல், தர்ம சாஸ்திரங்

களையும் சட்டதிட்டங்களையும் ஏற்படுத்திக்கொள்ளாமல் பாபம் புண்ணியமென்று ஓர் அறிவுக்கெட்டாத தத்துவத்தை ஏற்படுத்தி அதன் பேரில் தர்ம சாஸ்திரம் ஆக்கப்படுகின்றது. அமைப்பாகக் கட்டுப்படும் மதம் இறுதியில் சொத்துரிமைச் சங்கமாக ஆகிவிடுகின்றது. எனவே மாறுதலையும் அபிவிருத்தியையும் எதிர்க்கும் பிற்போக்கான சக்தியாக அது உருவெடுத்து விடுகின்றது.

கிறிஸ்துவ மதம் கட்டுப்பாடாக மேலெழத் துவங்கிய காலத்தில், அடிமைகள் தங்கள் நிலைமையை உயர்த்திக் கொள்ளும்படியாக எத்தகைய ஒத்தாசையையும் செய்யவில்லையென்பது பிரசித்தியான சங்கதியாகும். மத்திய காலத்தில், ஐரோப்பாவில், பொருளாதார நிர்ப்பந்தங்களினால், அடிமைகள் பரம்பரை பண்ணையாட்களாக மாறிவிட்டார்கள். 1727-ம் வருஷத்தில் லண்டன் பிஷப், அமெரிக்காவின் தென் மாகாணங்களின் அடிமை முதலாளிகளுக்கு எழுதிய கடிதத்திலிருந்து அடிமைகள் சம்பந்தமாக, மதத்தை வியாக்கியானம் செய்தவர்களின் கருத்தைத் தெரிந்துகொள்ளலாம்.

“ஏசுவின் உபதேசத்தையேற்று, கிறிஸ்தவ மதத்தில் சேருவதால் சொத்துரிமை சம்பந்தப்பட்ட வரையிலும் எந்த மாறுதலும் ஏற்படமாட்டாது. அந்தந்தத் தரத்தில் உள்ளவர்கள் அவருக்குத் தகுந்தாற்போல், கடமைகளைச் செய்து கொண்டுதான் இருக்கவேண்டும். அதிலும் மாறுதல் இருக்க முடியாது. கிறிஸ்துவ மதத்தில் சேருவதற்குமுன் அவர்கள் இந்தத் துறைகளில் எவ்வாறு இருந்தார்களோ அப்படியேதான் கிறிஸ்துவர்களான பின்னும் இருக்கமுடியும். கிறிஸ்துவ மதம், இவர்களுக்கு எத்தகைய சுதந்திரத்தைக் கொடுக்கின்றது? பாபத்தினின்றும், சைத்தானினின்றும் விடுபடும் சுதந்திரமாகும். ஆனால் அவர்களுடைய வெளித்தோற்றத்தில், அவர்கள் முன்னே எப்படி இருந்தார்களோ, அடிமையாயிருந்தாலும் சரி, சுதந்திரர்களாயிருந்தாலும் சரி, அப்படியேதான் பின்னரும் இருக்க வேண்டும். ஞானஸ்நானம் பெற்று அவர்கள் கிறிஸ்தவர்களாக மாறிவிடுவதனால், வெளித்தோற்றத்தில் அவர்களுக்கு எத்தகைய மாறுதலும் ஏற்பட்டுவிட முடியாது” என்று அந்த பிஷப் எழுதினார். எந்த மதஸ்தாபனமும் இன்றைக்கு மேற்கூறியவாறு பட்டவர்த்தனமாகச் சொல்லாது.

ஆனல், சொத்தையும் தற்போதிருக்கும் ஜனசமூகப் படித் தரத்தையும்பற்றி எல்லா மதங்களுக்கும் மேற்கூறியவாறு தான் அபிப்பிராயம் இருக்கும்.

சொற்கள் இயற்கையாகவே குறைகொண்டவை. அவை களின் மூலமாக மனதிலிருப்பதை பூராவாக வெளியே சொல்ல முடியாது. ஒருவர் ஒரு சொல்லை ஒரு பொருளில் உபயோகப்படுத்துவார். அதையே மற்றவர்கள் பல பொருள் களில் கிரகித்துக்கொள்வார்கள். எந்தப் பாஷையிலும் மதம் என்ற சொல்லைப்போல பலவித அர்த்தங்களில் உபயோகப் படுத்தப்பட்டு வருகிற வேறொரு சொல் இருக்கமுடியாது. மதம் என்ற சொல்லைக் கேட்டதும், இரண்டு பேர்கள் ஒத் துப் போகும்படியாக மனதில் காட்சிகளும் கருத்துகளும் ஒரே மாதிரியாகத் தோன்றவே மாட்டா. மதம் என்று சொன்னவுடனே, பலருடைய உள்ளங்களில் பலவகையான காட்சிகளும் கருத்துக்களும் தோன்றும். விழாக்களும் கிரியைகளும், புனித நூல்களும், ஒருஜன சமூகமும், சில நம்பிக்கைகளும், சில தர்ம சூத்திரங்களும், மனதில் காட்சி களாகத் தோன்றக்கூடும். மேலும், மதம் என்றால், மரியாதை அன்பு, அச்சம், பகைமை, தயை, தியாகம், துறவு, உண்ணு விரதம், விருந்து, பிரார்த்தனை, பண்டைச்சரிதம், கலியா ணம், சாவு, அடுத்த உலகம், கலகங்கள், மண்டை உடைதல் முதலியன கருத்துக்களும் காட்சிகளும் தோன்றலாம்.

இத்தகைய பலதிறப்பட்ட காட்சிகளாலும் வியாக்கியா னங்களாலும் எழும் மகத்தான குழப்பம் ஒருபுறமிருக்க, மதம் என்ற சொல்லைக் கேட்டவுடனே, ஒருவகை வலு வான உணர்ச்சிப்பெருக்கு ஏற்பட்டுவிடுகிறது. அப்பொழுது நிதானம் தவறிப்போய், எதையும் நேர்மையான முறையில் யோசிப்பதற்கு சாத்தியப்படுவதில்லை. மதமென்ற சொல், அதனுடைய உண்மையான அர்த்தத்தை இழந்து விட்டது. எப்பொழுதேனும் அந்த சொல்லுக்குத் திட்டமாக ஒரு பொருள் உண்டோ என்பது சந்தேகம். திட்டமான பொரு ளில்லாததால், குழப்பம் உண்டாகின்றது. முடிவில்லாத கட்சியும் வாதங்களும் கிளம்பிவிடுகின்றன. எதனாலே? ஒரு வர் சொல்லுகிற அர்த்தத்தில் மதமென்ற சொல்லை இன் னொருவர் எடுத்துக்கொள்வதே இல்லை. அந்த வார்த்தையை உபயோகப்படுத்தாமல், அடியோடு விலக்கி விடுவது நல்ல

தென்று தோன்றுகிறது. மதம் என்ற சொல்லுக்குப் பதிலாக குறுகிய நிச்சயமான அர்த்தங்கொண்ட வேறு பல சொற்களை உபயோகப்படுத்தலாம். உதாரணமாக வேதநூல் தத்துவம், தர்மசூத்திரங்கள், நெறிமுறைகள், அத்யாத்மிகத் தன்மை, வேதாந்தம், கடமை, கிரியை என்ற சொற்களை உபயோகப்படுத்தலாம். இந்த சொற்கள்கூட சந்தேகாஸ்பதமாக இருக்கின்றன. ஆனால், இவைகள் மதம் என்ற சொல்லைக் காட்டிலும் திட்டமான குறுகிய பொருள்கொண்டவைகளாகும். மதம் என்ற சொல்லைச்சுற்றி சூழ்ந்துகொண்டிருக்கும் வெற்றிகளும் உணர்ச்சிகளும் மேற்கூறிய சொற்களை இன்னும் சூழ்ந்து வளைந்துகொள்ளாத லாபத்தால் அவைகளைத் தாராளமாக உபயோகப்படுத்தலாம்.

மதம் என்ற சொல்லை உபயோகப்படுத்துவதினால், பல கெடுதிகள் ஏற்படுவது ஒருபுறமிருக்க, மதம் என்பது என்ன என்று ஆராய்ச்சி செய்வோம். நல்லது என்று கருதப்படும் பாதையில் ஒரு மனிதனுடைய ஆத்மா அபிவிருத்தி அடைவது என்பதைத்தான் மதமென்று சொல்லலாம். மதமென்பது, ஒவ்வொருவருடைய உள்வளர்ச்சியாகும். அந்தப் பாதை, எதுவென்பது வாதத்திற்கிடமாகும். எனக்குத் தெரிந்தவரையிலும், மதம் இந்த உள்மாறுதலைத் தான் வற்புறுத்திச் சொல்லுகின்றது. வெளி மாறுதல்கள், உள் அபிவிருத்தியின் பயனாகக் கருதப்படுகின்றன. இந்த உள் அபிவிருத்தியால் வெளிவாழ்க்கை மிகுதியும் பாதிக்கப் படுகிறதென்பதில் சந்தேகமே இல்லை. ஒரு மனிதனுடைய சுற்றுப்புறத்தால் அவனுடைய உள்வளர்ச்சியும் பாதிக்கப் படாமலிருக்க முடியாது.

ஒன்று மற்றொன்றால் பாதிக்கப்படுகிறதென்பது உண்மை. தொழில் நாகரீகம் சிறந்து நிற்கும் மேனாடுகளில் வெளியுலகத்தின் அபிவிருத்தி ஏற்பட்டிருப்பதைப்போல, மனிதனுடைய உள்ளத்தில் அபிருத்தி ஏற்படவில்லை என்பது வெளிப்படை. ஆயினும், நமது நாட்டில் தொழிலபிவிருத்தி குறைவாய் இருந்து, வெளிப்புறத்தில் அபிவிருத்தி மந்தமாகக் காணப்படுவதால், உள்ளத்தில் நாம் மிகுதியும் அபிவிருத்தி அடைந்துவிட்டதாக நம்மில் பலர் எண்ணிக் கொண்டிருப்பது தவறாகும். நம்மிடத்திலிருக்கும் பல மயக்கங்களில் இது ஒன்றாகும். இந்த மயக்கத்தைக்கொண்டு

நாம் ஆறுதலடையப் பார்க்கிறோம். உள்ளபடியே நாம் கீழாக இருக்கிற நிலைமையை மறந்து, மேலே இருப்பதாக இந்த மயக்கத்தால் எண்ணிக்கொண்டிருக்கிறோம். சுற்றுப் புறத்தோடு போராடி வெற்றிபெற்று, உள்ளத்தில் மகோன்னத நிலையை சிலர் எளிதில் அடையக்கூடும். ஆனால் திரளான கூட்டங்கள் அத்தகைய நிலையை எளிதிலே அடைய முடியாது. வெளி நிலைமையில் மாறுதல் ஏற்பட்ட பிறகு தான் அவர்களுக்கு உள்ளே அபிவிருத்தி ஏற்படமுடியும்.

சோற்றுக்குத் திண்டாடுகிற ஒருவன், ஜீவனப் போராட்டத்தில் அங்குமிங்கும் அலைக்கப்பட்டு சீர்குலைந்து நிற்கும் ஒருவன் உள்ளத்தில் உயர்ந்த நிலையை அநேகமாகப் பெறமுடியாது. சதா பணம் சுரண்டப்பட்டு அமுத்தி மிதிக்கப்பட்டுக் கிடக்கும் கூட்டமும் உள்ளத்தில் முன்னேற்றமடைய முடியாது. அரசியலிலும் பொருளாதாரத் துறையிலும் வேற்று நாட்டுக்கு அடிமைப்பட்டுக் கிடக்கும் ஒரு தேசம், உள் வலியை அடைந்து முற்போக்கைப் பெறமுடியாது; உள்ளம் நேர்த்தியடைந்து முற்போக்கு பெறுவதற்குக்கூட வெளி சுதந்திரமும் ஒருவகைத் தகுதியான சுற்றுப்புறமும் தேவையாக இருக்கின்றன. இந்த வெளி சுதந்திரத்தைப்பெற்று, உள் அபிவிருத்திக்கு இடைஞ்சலாக இருக்கும் தடைகளை நீக்குவதற்காக சுற்று நிலையை மாற்ற வேண்டியிருக்கும் முயற்சியிலும்கூட உண்மையான லக்ஷியத்தைக் கெடுத்துவிடக்கூடாதபடிக்கு சாதனங்களைக் கைக்கொள்ளவேண்டியது அவசியமாகும். லக்ஷியத்தைக் காட்டிலும் சாதனங்களே முக்கியமானவைகள் என்று காந்திஜீ சொல்லும்பொழுது மேற்கூறியதைத்தான் குறிப்பிடுகிறார் என்று எனக்குத் தோன்றுகிறது. ஆனால் சாதனங்கள் லக்ஷியத்துக்குக் கொண்டு போய் விடக்கூடியவைகளாக இருக்க வேண்டும். அப்படி இல்லாவிட்டால் அவைகள் வீணான பிரயத்தனங்களாகவே முடியும். அவைகளினால் வெளியேயும் உள்ளேயும் இன்னும் கேவலமான சீர்குலைவு ஏற்பட்டாலும் ஏற்படக்கூடும்.

மதமில்லாமல் எந்த மனிதனும் வாழமுடியாது என்று காந்திஜீ ஓரிடத்தில் எழுதியிருக்கிறார். "தங்களுடைய அறிவின் அகம்பாவத்தினால் 'தங்களுக்கும் மதத்துக்கும் யாதொரு சம்பந்தமுமில்லையென்று சிலர் சத்தம் போடுகிறார்

கள். அவ்வாறு சொல்வது எப்படியிருக்கிற தென்றால், "நான் மூச்சு விடுகிறேன், ஆனால் மூக்கு எனக்கு இல்லை;" யென்று ஒரு மனிதன் சொல்லுவதைப் போலிருக்கிறது." என்று காந்திஜீ வேறொரு இடத்தில் சொல்லுகிறார். மீண்டும் அவர் "சத்தியத்தில் எனக்கு இருக்கும் பக்தியினால் தான் நான் அரசியல் போராட்டத்தில் இறங்க நேர்ந்தது. அரசியலுக்கும் மதத்துக்கும் யாதொரு சம்பந்தமு மில்லை யென்று சொல்லுபவர்களுக்கு மதம் இன்னதென்று தெரியா தென்று கொஞ்சங்கூடத் தயங்காமலும், மிகுந்த வணக்கத்துடனும் நான் சொல்லுவேன்" என்று கூறியிருக்கிறார். வாழ்க்கையிலிருந்தும் அரசியலிலிருந்தும் மதத்தை விலக்கிவிட வேண்டுமென்று விரும்பியவர்கள் அந்த மதத்துக்கு வேறு பொருள்கள் கொடுக்கின்றார்கள் என்று அவர் சொல்லியிருந்தால், இன்னும் அதிக பொருத்தம் உள்ளதாய் இருக்கும். மதம் என்ற சொல்லை அறம் என்ற பொருளில் காந்திஜீ உபயோகப்படுத்துகிறார் என்பது தெளிவு. ஆனால் மத பக்தர்கள் இந்தப் பொருளில் "மதத்தை" உபயோகப்படுத்துவதில்லை. பல பொருள்களில் மதம் என்ற இந்த ஒரு சொல்லை உபயோகப்படுத்துவதனால் தெளிவான அறிவு ஏற்படாமலே போய்விடுகின்றது. ஆச்சாரிய ஜான் டூயி என்பவர் புதிதாக மதத்துக்குப் பொருள் கொடுத்து, அதற்கு எல்லை கட்டி யிருக்கிறார். அந்தப் பொருளை சமய பக்தர்கள் ஏற்க மாட்டார்கள். துண்டு துண்டாக சிதறிக் கிடந்து அடிக்கடி மாறிக்கொண்டு செல்லும் வாழ்க்கையின் நிகழ்ச்சிகளுக்கு நிலைத்த லக்ஷியம் ஒன்றைக் கொடுப்பது மதம் என்று அவர் சொல்லுகிறார். தனது லக்ஷியம் நித்திய பொருளென்று நம்பி எத்தனையோ இடையூறுகள் குறுக்கிட்டாலும் லட்சியத்தின் பொருட்டு வினையாற்றுவதும் எல்லா கஷ்ட நஷ்டங்களையும் பொருட்படுத்தாமலும் இருக்கும் மனப்பான்மை, மதத்தைச் சார்ந்ததென்றும் கூறியிருக்கிறார். லட்சியத்தைக் கைவிடாமலும் இருப்பது மதமாகுமானால், மதத்தைப்பற்றி யாருக்குமே கொஞ்சம் கூட ஆட்சேபனை இருக்காது.

சம்பிரதாய மதஸ்தர்களுக்கு நடுக்கம் ஏற்படும்படியாக ரொமெயின் ரோலந்து அவர்களும் மத மென்ற சொல்லுக்கு பொருள் கொடுத்திருக்கிறார். அவர் எழுதிய ராமகிருஷ்ணரின் சரிதத்தில் அவர் கூறுவதாவது:—

"அநேகர் தாங்கள் மத நம்பிக்கையிலிருந்து விடுபட்டு வாழ்வதாக நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் அவர்கள் உள்ளபடியே, உள்ளத்தில் உயர்ந்த நிலையில் இருந்து கொண்டு எதையும் நோக்குகின்றார்கள். அபேதவாதம், பொது உடைமை, ஜீவகாருண்யம், தேசியம், பகுத்தறிவு, என்று விதவிதமாகச் சொல்லிக் கொண்டு, அவைகளிலே ஆழ்ந்த சிந்தனையோடு இருக்கின்றார்கள். மத உணர்ச்சியிலிருந்து ஒரு நிகழ்ச்சி தோன்றிற்றா இல்லையா என்பதை நாம் எதைக் கொண்டு தீர்மானிப்பது? எண்ணத்தின் தன்மையைக் கொண்டு தீர்மானிக்க வேண்டும். எண்ணத்தின் நோக்கமான பொருளையோ லட்சியத்தையோ கொண்டு முடிவு செய்யக் கூடாது. எத்தகைய தியாகத்தையும் மேற்கொண்டு ஏகாக்கிரசித்தத்துடனும், சிரத்தையுடனும், சத்தியமான பாதையில் அச்சமில்லாமல் கருத்துச் செல்லுமாகில், அந்த மனப்போக்கை நான் மதமென்று சொல்லுவேன். தற்போதைய ஜனசமூகத்தின் வாழ்க்கையைக் காட்டிலும் உயர்ந்ததாகவும் மனித வர்க்கத்தின் வாழ்வையே காட்டிலும் உயர்ந்ததாகவும் மனித முயற்சியால் ஒரு உன்னதமான லட்சியம் கைகூடுமென்ற நம்பிக்கை, அந்த ஏகாக்கிரசித்தத்தில் காணப்படுகிறது. அதனாலே, அதை நான் மதமென்று கூறுகிறேன். கடவுள் உண்டா இல்லையா, என்று நிச்சயமாக முடிவு செய்துகொள்ள முடியாதவர்கள் கூட, உள்ளத்தின் உறுதியோடு சத்திய சோதனைப் பாதையில் சென்று, பலவீனத்தை ஒழித்து உள்வலியைக் காண்பிப்பார்களாகில், அவர்களும் மத உணர்ச்சி கொண்ட ஆன்மாக்களின் பெரும் சேனையில் சேர்ந்தவர்களாவார்கள்."

இவ்வாறு ரோமேன் ரோலண்டு எழுதுகிறார். ரோமேன் ரோலண்டு அவர்கள் விதித்திருக்கும் நிபந்தனைகள் யாவையும் என்னால் பூர்த்திசெய்ய முடியும் என்று சொல்ல முடியாது. ஆனால் அந்த ஷரத்துகளை ஒப்புக்கொண்டு, அந்தப் பெரிய சேனைக்குத் தொண்டனாகப் பின்னால் செல்ல, நான் தயாராக இருக்கிறேன்.

# XLVIII

## பிரிட்டிஷ் அரசாங்கத்தின் இரட்டை முறை

நாட்டில் ஹரிஜன இயக்கம் மும்முரமாக நடந்து வந்தது. காந்திஜீ அதை முதலில் எரவாடா சிறையிலிருந்து நடத்தி வந்தார். பின்னர் சிறைக்கு வெளியே வந்து நடத்தினார். ஆலயப் பிரவேசத்துக்குத் தடைகளா யிருப்பவைகளை நீக்குவதற்காகக் கிளர்ச்சி செய்யப்பட்டது. இந்தியா சட்ட சபையில், இது சம்பந்தமாக மசோதா ஒன்றும் கொண்டு வரப்பட்டது. அந்த சமயம் ஒரு வேடிக்கையான காட்சி தோன்றிற்று. பிரசித்திபெற்ற காங்கிரஸ் தலைவர் ஒருவர், டில்லியில் வீடு வீடாகப்போய், அசெம்பிளி அங்கத்தினர்களைக் கண்டு, இந்த ஆலயப் பிரவேச மசோதாவிற்கு வாக்குக் கொடுக்கும்படியாக வேண்டிக்கொண்டார். காந்திஜீயே, இந்தத் தலைவரின் மூலமாக, அசெம்பிளி அங்கத்தினர்களுக்கு மனுச்செய்து கொண்டார். இந்த நிலைமையிலும், சட்ட மறுப்பு இன்னும் நடைபெற்றுக் கொண்டிருந்தது. ஜனங்களும் சிறைக்குப் போய்க் கொண்டிருந்தார்கள். காங்கிரஸ் சட்டசபையை பகிஷ்காரம் செய்ததால், நம்முடைய காங்கிரஸ் அங்கத்தினர்கள் யாவரும் அதனின்றும் வெளியேறியிருந்த சமயம்.

காலி ஸ்தானங்களுக்கு வந்தவர்களும் பழைய கூட்டத்தில் மிஞ்சினவர்களும் சேர்ந்து, இந்த நெருக்கடியில் காங்கிரசை எதிர்த்தும், அரசாங்கத்தாரை ஆதரித்தும் நல்ல பெயர் எடுத்துக் கொண்டார்கள். இந்த அங்கத்தினர்களில் பெரும்பான்மையோர், அவசரச் சட்டங்களின் கொடுமையான ஷரத்துக்கள் சாசுவதமாக இருக்கும்படியாக அடக்குமுறைச் சட்டம் ஒன்றை அரசாங்கத்தார் ஆக்கிக்கொள்ளத் துணையாக இருந்தார்கள். அவர்கள் ஒட்டாவா ஒப்பந்தத்தை ஏற்றுக் கொண்டார்கள். டில்லி, சிம்லா, லண்டன் இந்த நகரங்களில் இருந்த பெரியார்களுக்கு விருந்து வைத்தார்கள். இவர்களோடு விருந்து உண்டார்கள். இந்தி

யாவில் அதிர்ஷ்டவசமாக ஏற்பட்டிருக்கும் பிரிட்டிஷ் ஆட்சிக்கு வந்தனமளித்து, இந்தியாவில் அப்பொழுது நடை பெற்று வந்த இரட்டை முறையின் வெற்றிக்காக, பிரார்த் தனை செய்து கொண்டிருந்தார்கள்.

இப்படிப்பட்ட நிலைமையில் காந்திஜீ மனுச்செய்து கொண்டதைப்பற்றி, நான் வியப்படைந்தேன். அப்பொழுது தான், இரண்டு மூன்று வாரங்களுக்கு முன்பாக, காங்கிரசின் தாற்காலிக பிரசிடெண்டாய் அமர்ந்திருந்த ஸ்ரீமான் ராஜ கோபாலாச்சாரியின் இடைவிடா முயற்சிகளைக் கண்டு, இன்னும் ஆச்சரியப்பட்டுப் போனேன். இந்த அலுவல்களினால் சட்ட மறுப்புக்கு ரொம்பவும் நஷ்டமுண்டாயிற்று. இந்த நஷ்டத்தைக் காட்டிலும் இவர்கள் இவ்வாறு செய்தது நியாயமா என்பதில்தான் அதிகத் துயரமடைந்தேன். காந்திஜீயோ அல்லது வேறு காங்கிரஸ் தலைவரோ இத்தகைய அலுவல்களுக்கு ஆதரவளித்தது, அதர்மமான வேலை யென்றும் இயக்கத்தை நடத்தியும், சிறையில் வசித்தும், வருகிற பெரும்பான்மையான தேச பக்தர்களுக்குத் துரோகம் செய்ததாயும் எனக்குத் தோன்றிற்று. ஆனால் காந்திஜீயின் பார்வையே வேறு தன்மை கொண்டதென்பது எனக்குத் தெரியும்.

இந்த ஆலயப் பிரவேச மசோதா சம்பந்தமாக அப் பொழுதும் பின்னரும் அரசாங்கத்தார் காண்பித்த மனப் பான்மை மிகவும் வெளிப்படையாக தெரிந்தது. இந்த மசோதாவைத் தயாரித்தவர்களின் வழியில் எவ்வளவு முட்டுக்கட்டைகள் போடவேண்டுமோ அத்தனையும் போட்டு அதை ஒத்திப் போட்டுக்கொண்டே போய் அதற்கு விரோதமாக எதிர்ப்பையும் வளர்த்து கடைசியாக தானும் அதற்கு விரோதமென்று அறிவித்து அரசாங்கம் அதைக் கொன்றுவிட்டது. இந்தியாவில் ஆசாரத் திருத்த சம்பந்தமான திட்டங்களுக்கெல்லாம் இதே வித மனப்பான்மையை அரசாங்கம் காண்பித்துக்கொண்டு வந்திருக்கிறது. மத விஷயங்களிலே பிரவேசிக்கக் கூடாது என்னும் சாக்கைச் சொல்லி ஆசாரத் திருத்த முற்போக்கை அது தடுத்து விட்டது. ஆனால் நம்முடைய ஆசாரத் தீமைகளைக் கண்டிப்பதை அரசாங்கம் நிறுத்திவிட வில்லை. மற்றவர்கள் கண்டித்தாலும் அதற்கு அனுசரணையாய் இருந்தது. அகஸ்மாத்தாக சாரதா குழந்

யைக் கலியாணத் தடை மசோதா சட்டமாகி விட்டது. ஆனால் இந்தத் துர்ப்பாக்கியமான சட்டத்தின் பின் சரித்திரத்திலிருந்து இத்தகைய சட்டத்தை அமுலுக்குக்கொண்டு வருவதில் அரசாங்கத்தாருக்கு துளிக்கூட அக்கரையே இல்லை யென்பது தெளிவாயிற்று.

திடீர் திடீரென்று அவசரச் சட்டங்களை ஆக்கிக் கொண்டு விநோதமான குற்றங்களைச் சிருஷ்டி செய்து அவைகளுக்கு தண்டனையையும் வகுத்து அவசரச் சட்டத்தில் ஷரத்துக்களை மீறியதற்காக பதினாயிரக் கணக்கான ஜனங்களைச் சிறைக்கனுப்பக்கூடிய அரசாங்கத்தார் நடை முதல் வாழ்வுக்குத் தேவையான சாரதா சட்டத்தைப்போல ஒரு சட்டத்தை அமுலுக்குக் கொண்டு வருவதில் எவ்வளவு அசிரத்தை, எவ்வளவு நடுக்கம்? எந்தத் தீமையைத் தடுக்க வேண்டுமென்று இந்தச் சட்டம் ஆக்கப்பட்டதோ அதே தீமை துவக்கத்தில் ஏராளமாக அதிகரித்து விட்டதுதான் இந்தச் சட்டத்தின் துவக்கத்தில் கண்ட பயனாகும். இந்தச் சட்டம் அமுலுக்கு வருமுன் முட்டாள் தனமாக ஆறு மாத தவணை கொடுக்கப்பட்டது. இந்தக் காலத்துக்குள் கலியாணம் செய்து சட்டத்தை ஏய்த்து விட வேண்டுமென்று லக்ஷக் கணக்கான ஜனங்கள் தீர்மானம் கொண்டு விட்டார்கள். இந்தச் சட்டம் வெறும் விளையாட்டு என்றும், இதை மீறி நடந்தால் அரசாங்கத்தார் யாதொரு நடவடிக்கையும் எடுத்துக்கொள்ளமாட்டார்கள் என்றும் பின்னர் தெரிந்தது. உத்தியோக முறையில் இந்தச் சட்டத்தைப்பற்றி துளிக்கூட பிரசார முயற்சி நடைபெறவே இல்லை. கிராமங்களில் அநேகருக்கு இந்தச் சட்டம் என்னவென்றே தெரியாது. ஹிந்து-முஸ்லிம் கிராமப் பிரசாரகர்களிடமிருந்து கிராமத்தார்கள் இந்த சட்டத்தைப்பற்றி ஏதோ கேள்விப்பட்டார்கள். மேற்சொன்ன பிரசாரகர்களுக்குக் கூட சட்டத்தின் உண்மையான விவரங்கள் தெரியாது.

இந்தியாவிலிருக்கும் ஆசாரத்தீமைகளை பிரிட்டிஷ் அரசாங்கத்தார் ஏன் பொறுத்துக்கொண்டிருக்கவேண்டும்? இந்தியர்கள் கைக்கொண்டிருக்கும் ஆசாரங்களில் அரசாங்கத்தாருக்கு இருக்கும் பிரியத்தால் அல்ல. இந்தத் தீமைகளைத் தொலைத்துவிட வேண்டும் என்ற அக்கரையே அரசாங்கத்

தாருக்கு கிடையாது. பிரிட்டிஷார் இந்தியாவை ஆளுவதி லும் அவர்கள் இந்தியாவின் பணத்தைச் சுரண்டுவதிலும் இந்த ஆசாரத் தீமைகள் குறுக்கே நிற்பதில்லை. ஆசாரச் சீர்திருத்தங்களைச் செய்ய விருப்பம் கொண்டால் அரசாங் கத்தார் பல கூட்டங்களின் கோபத்தை சம்பாதித்துக் கொள்ள வேண்டியதாயிருக்கும். ஏற்கெனவே அரசியல் சம்பந்தமாக அதிக ஜனங்களின் வெறுப்பை அரசாங்கத் தார் சம்பாதித்துக் கொண்டு விட்டார்கள். எனவே, அரசி யல் வெறுப்போடு வைதீகர்களின் ஆத்திரத்தையும் வாங்கிக் கொள்ள அவர்களுக்கு விருப்பம் இல்லை.

ஆனால், இப்பொழுது ஆசாரத்திருத்தக் காரர்களின் நிலைமை மிகவும் கேவலமாகப் போய்விட்டது. ஏனென்றால் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் இந்தக் கெட்ட ஆசாரங்களை மௌனமாக ஆதரிக்கவேண்டிய நிலைமைக்கு வந்துவிட்டார் கள். ஏன்? இந்தியாவிலிருக்கும் மிகவும் பிற்போக்கான கூட்டத்தார்களோடு அரசாங்கத்தார் உறவை நாடிவருகின் றார்கள். பிரிட்டிஷ் ஆட்சிக்கு எதிர்ப்பு அதிகப்பட, அதி கப்பட, அரசாங்கத்தார் எத்தனையோ இடங்களிலிருந்து துணைவர்களைச் சேர்க்க வேண்டியதாயிற்று. இன்றைக்கு இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியைத் திடமாக ஆதரிப்பவர்கள் தீவிர வகுப்பு வாதிகளும் மதப்பற்றுகொண்ட பிற்போக்கா ளர்களும், மற்றும் பேர் ஊர் தெரியாத சிலருமே ஆவார்கள். முஸ்லிம் வகுப்புவாதச் சங்கங்கள் எந்த வகையிற் பார்த்தா லும், மிகுதியும் பிற்போக்கு கொண்டவைகள். அரசியல், பொருளாதாரம், ஜனநிர்மாணம், எல்லாத் துறைகளிலும் பிற்போக்குகொண்டவைகள். இவைகளுக்குப் போட்டியாக ஹிந்துமகா சபை விளங்குகின்றது. ஆனால், ஹிந்துமகா சபையைக்கூட ரொம்ப தூரம் தள்ளிவிட்டு, பிற்போக்குத் தன்மையைக் கொண்டிருப்பவர்கள் ஸனாதனிகள். இவர் கள் பிரிட்டிஷ் ஆட்சிக்கு எத்தகைய ராஜபக்திக் கூப்பாடுகள் போடுகின்றார்கள்! இவர்கள் என்ன கேவலமான மதவெறி கொண்டவர்கள்.

பிரிட்டிஷ் அரசாங்கத்தார் சாரதா சட்டத்தை ஜனங் கள் ஏற்கும்படி செய்து, அதை அமுலுக்குக் கொண்டுவரா விட்டாலும், காங்கிரசும் உத்தியோகப்பற்றில்லாத வேறு அமைப்புகளும் அந்த சட்டத்துக்குச் சாதகமாக ஏன் பிரசா

ரம் செய்யக்கூடாது? பிரிட்டிஷார்களும் மற்றும் அந்நிய நாட்டார்களும் இந்தக் கேள்வியை அடிக்கடி கேட்கிறார்கள். காங்கிரஸ் சம்பந்தப்பட்ட வரையிலும், சென்ற பதினைந்து ஆண்டுகளாக சிறப்பாக, 1930-ம் வருடம் முதல் பிரிட்டிஷ் அரசாங்கத்தாரோடு தேச விடுதலைக்காக அது கடுமையான போராட்டம் நடத்திக்கொண்டு வருகின்றது. வேறு அமைப்புகளுக்கு உண்மையான சக்தி கிடையாது. அவைகளுக்கு பொதுஜனங்களிடத்து தொடர்பு கிடையாது. லட்சியமும் பொதுஜனச் செல்வாக்கும், நடைநேர்மையும் உள்ள ஆண்களும் பெண்களும் காங்கிரஸில் சேர்ந்துகொண்டு நீண்ட காலம் சிறையில் இருக்க வேண்டியதாயிருந்தது.

பொதுஜனங்களோடு தொடர்பு வைத்துக்கொள்ள அஞ்சுகின்ற முக்கியஸ்தர்களான சிலர் சேர்ந்துகொண்டு, சில ஸ்தாபனங்கள் மூலமாக, வெறும் தீர்மானங்களை நிறைவேற்றி வைப்பார்கள். அவர்கள் கனவான்கள் முறையில் வேலை செய்வார்கள். அல்லது அகில இந்திய ஸ்திரீகளின் சங்கத்தைப்போல சீமாட்டிகள் முறையில் அவர்கள் வேலை செய்வார்கள். தீவிர பிரசாரத்துக்கும் அவர்களுக்கும் பொருத்தமே இல்லை. மேலும் அவசரச் சட்டங்களாலும், அவைகளின் பின்வந்த சட்டங்களாலும், பொதுஜனக் கிளர்ச்சிகள் கடுமையாகத் தடைபட்டுப்போனதைக் கண்டு, அவர்கள் ஸ்தம்பித்துப் போனார்கள். இராணுவ அமுல், புரட்சி வேலைகளை மட்டும் நசுக்கி விடுவதில்லை. ஆனால் அதோடுகூட நாகரிகத்தையும், நாகரிகத் தொண்டுகளையும் அது ஸ்தம்பிக்கும்படியாகச் செய்து விடுகின்றது.

காங்கிரசும் ஏனைய அமைப்புகளும் ஆசாரச் சீர்திருத்தத்துக்காக உழைக்க முடியாத உண்மையான காரணம் ஆழத்தில் பதிந்துகிடக்கின்றது. எங்களுக்குத் தேசியமென்ற நோய், பிடித்து எங்களை ஆட்டி வருகின்றது. அதிலேயே எங்களுடைய கவனமும் சென்றுவருகின்றது. எங்களுக்கு அரசியலில் பூரணசுதந்திரம் கிடைக்கும்வரையில், இப்படித்தான் நடந்து கொண்டிருக்கும். "ஜெயிக்கப்பட்ட ஜாதியார் வயிற்றுப் புற்றுநோய் கொண்டவனைப்போல; அவன் வேறு எதையும் நினைக்கவே முடியாது. தேசீய இயக்கத்தைக் காட்டிலும், ஒரு நாட்டுக்கு ஏற்படக்கூடிய பெரிய சாபம் வேறொன்றுமே இல்லை. ஜனங்களுக்கு இயற்கையாக எழும்

உயிரை அடக்கிவைத்தால், அப்பொழுது தேசியமென்ற நோய் அறிகுறியாகத் தோன்றும். உலகப் பிரயாணத்திலே சுதந்தரமிழந்த நாடுகள், பின்னடைந்து போகின்றன. ஏனெனின், தங்களுடைய சுதந்திரத்தைப்பெற்று, தங்களுடைய தேசிய இயக்கங்களிலிருந்து விடுபடும் முயற்சியிலேதான் அவைகள் ஈடுபட்டிருக்க முடியும்'' என்று பெர்னர்ட் ஷா கூறுகிறார்.

மந்திரிமார்களுக்கு சில அதிகாரங்கள் மாற்றப்பட்டுக் கொடுத்திருந்தாலும், தற்போதைய நிலைமையில் நாங்கள் ஆசாரத்திருத்தத்தில் அதிகமான அபிவிருத்தியைக் காண முடியாது என்று பழைய அனுபவத்திலிருந்து எங்களுக்குத் தெரியும். அரசாங்கத்தின் மகத்தான ஆலஸ்யம் ஆசாரத் திருத்தத்தில் பற்றில்லாத பிற்போக்காளர்களுக்கு எப்பொழுதுமே சாதகமாக இருந்து வந்திருக்கிறது. மேலும், தலைமுறை தலைமுறையாக, ஜனங்கள் தாமாக எதையும் செய்யும் ஆற்றலை அரசாங்கத்தார் நசுக்கிக் கொண்டே வந்து, எதேச்சாதிகாரத்துடன் ஆண்டுவருகின்றார்கள். உத்தியோக சம்பந்தமில்லாத யாரும் ஆசாரத்திருத்தத்தில் பெருமுயற்சி செய்வதை அரசாங்கத்தார் சந்தேகத்துடன் பார்த்து' அதற்கு ஆதரவளிப்பதில்லை. ஹரிஜன இயக்கத்தைத் துவக்கி நடத்துபவர்கள் எத்தனையோ எச்சரிக்கைகள் எடுத்துக்கொண்டபோதிலும், அது அதிகாரிகளோடு சில சமயங்களில் மோதிக்கொள்ளவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டுவிட்டது. நாட்டு மக்கள் ஏராளமாக சோப்பை உபயோகிக்க வேண்டுமென்று காங்கிரஸ் பிரசாரம் செய்யுமாகில், அதையும் அதிகாரிகள் பல இடங்களில் தடுத்துவிடுவார்களென்று எனக்கு நிச்சயமாகத் தெரியும்.

உள்ளபடியே அரசாங்கத்தார் ஆசாரச் சீர்திருத்த விஷயத்தைக் கையில் எடுத்துக் கொண்டு, சிரத்தையாக உழைப்பார்களானால், பொது ஜனங்களின் மனதையும் ஆசாரத்திருத்தத் தேவைக்கு திருப்பிவிடுவது கஷ்டமல்ல, என்று நான் நினைக்கிறேன். ஆனால், அரசாளும் அன்னியர்கள் எப்பொழுதுமே சந்தேகிகள். அவர்கள் ஜனங்களின் மனதைத் திருப்பும் வேலையில் அதிகமாக இறங்க முடியாது. அந்நிய ஆட்சி மாறி பொருளாதாரத் துறையில் மாறுதல்களை முதன்முதலாகச் செய்யவேண்டுமென்று

தீர்மானம் கொண்டால், மிகவும் தீவிரமான ஆசாரத்திருத் தங்களைக்கூட சுறு சுறுப்புக்கொண்ட அரசாங்கம் வெகு எளிதிலே அமுலுக்குக் கொண்டு வரமுடியும்.

ஆனால், ஆசாரச் சீர்திருத்தம், சாரதா சட்டம், ஹரிஜன இயக்கம் முதலியவைகள் ஜெயிலிலிருக்கும் எங்கள் மனதில் நிறைந்து போய் விடவில்லை. நான் மட்டும் ஹரிஜன இயக்கத்தைக் கண்டு, சிறிது ஆத்திரப்பட்டேன். ஏனென்றால் ஹரிஜன இயக்கத்தால், சட்டமறுப்புக்கு இடைஞ்சல் உண்டாகிவிட்டது என்பது என் எண்ணம். 1933-ம் வருஷம் மே மாதத் துவக்கத்தில் சட்டமறுப்பு ஆறுவார காலத்துக்கு நிறுத்தி வைக்கப்பட்டது. மேலே என்ன நடக்கிறது என்பதைப் பற்றி நாங்கள் ஆவலுடன் காத்திருந்தோம். அப்படி நிறுத்தி விட்டதால் இயக்கத்தைக் கடைசியாக மண்டையிலடித்தது போல் ஆகிவிட்டது. தேசப்போராட்டத்தோடு விளையாடலாமா? நினைத்தமாத்திரத்தில், அதை நிறுத்தவும் நடத்தவும் முடியுமா? போராட்டத்தை நிறுத்துவதற்கு முன்பே இயக்கத்தின் தலைமைப் பொறுப்பு பலவீனப்பட்டு பயனற்றுப் போய்விட்டது.

சில்லரை மகாநாடுகள் கூடின. அநேகவிதமான வதந்திகள் பரவி, சுறுசுறுப்பான வேலை நடக்கமுடியாமல் செய்துவிட்டன. காங்கிரசின் தற்காலிகத் தலைவர்களில் சிலர் மிகவும் மதிப்பு வாய்ந்தவர்கள். ஆனால் போராட்டத்தில் அவர்களை சேனாபதிகளாகச் செய்தது நியாயமல்ல. அவர்கள் களைத்துப் போயிருந்தார்கள். கஷ்டமான நிலைமையிலிருந்து விலகிக் கொள்ள வேண்டுமென்ற விருப்பம் கொண்டிருந்தவர்கள். இவ்வாறு தற்காலிக காங்கிரஸ் தலைவர்கள் திடசித்தமில்லாமல் தவித்துக்கொண்டிருப் பதைக்கண்டு பலருக்கு ஆத்திரம் உண்டாயிற்று. ஆனால் காங்கிரஸ் அமைப்புக்கள் யாவும் சட்டம் மீறிய கூட்டங்கள் என்ற காரணத்தினால், அந்த ஆத்திரத்தைக் கட்டுப்பாடாக வெளிக்காண்பிக்க முடியாமற் போய்விட்டது.

பிறகு காந்திஜீயின் இருபத்தொருநாள் உபவாசம் வந்தது. அவர் சிறையிலிருந்து விடுபட்டார். பிறகு சட்டமறுப்பு ஆறுவார காலத்துக்கு நிறுத்தி வைக்கப்பட்டது. உபவாசம் முடிந்தது; மிகவும் மெதுவாக, அவருடைய உடம்பு தேறி

வந்தது. ஜூன்மாத மத்தியில் சட்டமறுப்பு மீண்டும் ஒரு ஆறு வார காலத்துக்கு நிறுத்தி வைக்கப்பட்டது. இதற்கிடையே அரசாங்கத்தார், தங்களுடைய அடக்குமுறை வேகத்தை எந்த வகையிலும் குறைக்கவே இல்லை. அந்தமான் தீவில், அரசியல் கைதிகள் [பலாத்காரப் புரட்சிக்குற்றங்களுக்காக வங்காளத்தில் தண்டனை பெற்றவர்கள், இந்தத் தீவுகளுக்கு அனுப்பப்பட்டிருக்கிறார்கள்] சிறையதிகாரிகள் தங்களை நடத்தும் வகை சம்பந்தமாக உண்ணுவிரதம் கொண்டார்கள். அவர்களில் ஓரிருவர் பட்டினி கிடந்து இறந்தார்கள். மற்றவர்கள் சாகும் நிலைமையில் கிடந்தார்கள். அந்தமான் தீவுகளில் நேர்ந்ததைப்பற்றி கண்டித்து, இந்தியாவில் கூட்டங்களில் பேசியவர்கள் கைது செய்யப்பட்டுத் தண்டிக்கப் பட்டார்கள்.

நாம் கஷ்டப்படுவது மட்டும் போதாது; முறையிட்டுக் கொள்ளவும் கூடாது. தங்களுடைய ஆட்சேபனைகளைத் தெரிவித்துக்கொள்ள வேறு வழியில்லாமல் பட்டினி கிடந்து கைதிகள் இறந்துபோனாலும் அதைப்பற்றி நாம் வாய்திறக்கக்கூடாது. 1933-ம் வருடம் செப்டம்பர் மாதத்தில் அதாவது சில மாதங்கள் கழித்து, சிறையை விட்டுநான் வெளியே வந்ததும், ரவீந்திரநாத தாகூர் சி. எப். ஆண்ட்ரூஸ் முதலிய காங்கிரசில் சம்மந்தப்படாத பிரமுகர்கள் கையெழுத்து போட்டு அரசாங்கத்தாருக்கு மனுப்பண்ணிக் கொண்டு, அந்தமான் கைதிகளை ஜீவகாருண்யத்தோடு நடத்த வேண்டுமென்றும், அவர்களை இந்தியச்சிறைகளுக்கு மாற்றிக்கொண்டு வந்துவிட்டால் நலமாயிருக்குமென்றும் கேட்டுக்கொண்டார்கள். இந்திய அரசாங்கத்தின் உள்நாட்டு மெம்பர் இந்த விண்ணப்பத்தைக் கண்டு மிகுதியும் அதிருப்தி கொண்டார். கைதிகளிடம் அவர்கள் அனுதாபம் காண்பித்ததற்காக அவர்களை வறுவாக ஏசினர். இத்தகைய அனுதாபத்தைக் காண்பிப்பதே குற்றமென்று பின்னர் வங்காளத்தில் சட்டம் செய்துவிட்டார்கள் என்று என் நினைவு.

ஆறுவாரத்துக்கு நிறுத்தப்பட்டகாலம் முடிவடையு முன்பே, பூனவில் காந்திஜீ ஒரு மகாநாடு கூட்ட, ஏற்பாடு செய்திருக்கிறார் என்று எங்களுக்கு டேராடூன் சிறையில் செய்தி கிடைத்தது. இருநூறு, முந்நூறு பேர்கள் அங்கே சந்தித்தார்கள். காந்திஜீயின் யோசனைப்படிக்கு

கூட்ட சட்ட மறுப்பு நிறுத்தி வைக்கப்பட்டது. ஆனால், தனி நபர்கள் சட்டமறுப்பு செய்யலா மென்று அனுமதி தரப்பட்டது. இரகசிய முறைகள் எதையும் கையாளக் கூடாது என்று தீர்மானிக்கப்பட்டது. இந்தத் தீர்மானங்கள் மிகுதியும் உற்சாகம் தரக்கூடியவை அல்ல. என்றாலும் அவைகளைச் சிறப்பாக நான் ஆட்சேபிக்கவுமில்லை. ஏனெனின், அந்த சமயத்தில் உள்ளபடியே கூட்டச் சட்டமறுப்பு நடைபெறவில்லை. ஆகையால், அதை நிறுத்திவிடுகிறதென்பது உள்ளபடி நிலைமையை உணர்ந்துகொண்டு நிலவரங்களை வலுப்படுத்திக் கொள்வதாகும். இரகசிய வேலை என்பது நாங்கள் செய்த வெறும் பாசாங்கு. சட்ட மறுப்பின் பகிரங்கமான தன்மையைக் கருதி இரகசிய வேலை எப்பொழுதும் கூடாது தான். அதனால் பயனில்லாமல் போனதுமன்றி தீமையும் ஏற்பட்டது. சில யோசனைகளைச் சொல்லியனுப்புவதற்கும் பல பல கூட்டங்களுக்கிடையே தொடர்பு உண்டாக்கிக் கொள்வதற்கும் ஓரளவு இரகசிய முறை தேவையாய்இருந்தது. ஆனால் சட்ட மறுப்பை இரகசியமாக வைத்துக் கொள்ள முடியுமா?

பூனாவில் கூடிய கூட்டத்தில், தலைவர்கள் நம்முடைய லக்ஷியங்களையும் அப்போதைய நிலைமையையும்பற்றி சிரத்தையாக யோசிக்கவே இல்லை. அது எனக்கு விநோதமாயிருந்தது. எனக்கு துக்கத்தைக் கொடுத்தது. சுமார் இரண்டு வருஷப் போராட்ட அடக்குமுறைக்குப்பின்னர், காங்கிரஸ்காரர்கள் அப்பொழுது தான் கூடினார்கள். அந்த இரண்டு வருஷ காலத்தில், இந்தியாவிலும் வெளி உலகத்திலும் எவ்வளவோ நேர்ந்துவிட்டது. இந்தியாவின் அரசியல் சீர்திருத்தத்துக்காக தங்கள் யோசனைகளை பிரிட்டிஷ் அரசாங்கத்தார் வெள்ளைக் காகித அறிக்கையை வெளியிட்டுவிட்டார்கள். அந்த சமயத்தில் நாம் கட்டாயத்தினால் வாய்பொத்திக்கொண்டு இவைகளைச் சகிக்க வேண்டியிருந்தது. ஆனால், அரசாங்கத்தாரோ, உண்மையான பிரச்னைகளை மூட்டத்தில் வைத்து மறைத்து விடுவதற்காக இடைவிடாமல் தவறான பிரசாரங்களைச் செய்துகொண்டு வந்தார்கள். காங்கிரஸ் தனது லட்சியமான பூரண சுதந்திரத்தைக் கைவிட்டுவிட்டதென்று அரசாங்கதாசர்களும் மிதவாதிகளும் மற்றவர்களும் அடிக்கடி சொல்லிக்கொண்டிருந்தார்கள். அந்த சந்தர்ப்பத்தில் நாம், செய்திருக்க வேண்டியதென்ன? நம்மு

டைய பூரண சுதந்திர அரசியல் இலட்சியத்தை அழுத்திச் சொல்லி தெளிவு படுத்தியிருக்க வேண்டும். கூடுமானல் பொருளாதார ஆசாரத்திருத்த லட்சியங்களையும் அதோடு சேர்த்துச் சொல்லியிருக்க வேண்டும்.

இதை விட்டுவிட்டு கூட்டச்சட்ட மறுப்பு உசிதமா அல்லது நபர் சட்ட மறுப்பு தேவலையா என்பதைப்பற்றித் தான் வாதம் நடந்ததாகத் தெரிகிறது. மேலும், சட்ட மறுப்பியக்கத்தில் இரகசியம் தேவையா இல்லையா என் பதைப்பற்றியும் பேச்சு நடந்ததாம். அரசாங்கத்தோடு சமா தானம் என்ற வினேதப் பேச்சும் கிளம்பிற்று. பேட்டி வேண்டுமென்று வைசிராய்க்குக் காந்திஜீ தந்தி கொடுத்தார். வைசிராய் முடியாதென்று பதில் தந்தி கொடுத்துவிட்டார். கௌரவமான சமாதானம் தேவையென்று குறிப்பிட்டு இரண்டாவது தந்தியொன்றை, காந்திஜீ அனுப்பிவைத்தார். தேசபக்தர்களோ அந்தமான் தீவுகளில் பட்டினி கிடந்து இறக்கிருர்கள். நாட்டாரை எல்லா வகைகளிலும் வெற்றி மனப் பான்மையோடு அரசாங்கம் நசுக்கிக்கொண்டுவந்தது. இந்த சமயத்தில் கௌரவமான சமாதானம் எப்படி கிடைக் கும் என்பது எனக்கு விளங்கவே இல்லை. ஆனல் என்ன நேர்ந்தாலும் சமாதானத்திற்கு காந்திஜீ எப்பொழுதும் தயார் என்பது எனக்குத் தெரியும்.

அடக்கு முறை மும்முரமாகத் தாண்டவமாடிக் கொண்டிருந்தது. பொதுஜன அலுவல்களை அடக்குவதற் காக ஏற்பட்ட எல்லா பிரத்தியேக சட்டங்களும் அமு லில் இருந்தன. 1933-ம் வருஷம் பிப்ரவரி மாதத்தில் என்னு டைய தகப்பனரின் சிராத்த தினத்தன்று, ஞாபகார்த்தக் கூட்டம் கூடவேண்டுமென் றிருந்ததை, போலீஸ்காரர்கள் தடுத்துவிட்டார்கள். கூட்டம் காங்கிரஸ்காரர்கள் சம்பந்தப் படாதகூட்டமாகும். அந்தக் கூட்டத்துக்குக் கனிந்த மித வாதியான ஸர் தேஜ் பகதூர் சாப்ரூ அவர்கள் தலைமை வகிப்பதாக இருந்தது. இந்த சமயத்தில் எதிர்காலத்தில் கிடைக்கக்கூடிய வெகுமதிகளுக்கு அறிகுறியாக நமக்கு வெள்ளைக் காகிதத் திட்டம் கொடுக்கப்பட்டது.

பேர்பெற்ற வெள்ளைக் காகித தஸ்தவேஜியைப் படித் துப்பார்த்தேன். மூச்சு திணறும்போல் ஆகிவிட்டது. இங்

தியா முழுதையும் ஒரு பெரிய சுதேச சமஸ்தானமாக மாற்றி அந்த சமஷ்டி ஆட்சியில் சமஸ்தானத்து பிரதிநிதிகளை ஏராளமாகக் கொண்டு திணிக்கவேண்டுமாம். ஆனால், சமஸ்தானங்களின் ஆட்சியில் அந்நியர் எவரும் தலையிடவே கூடாதாம். சமஸ்தானங்களில் மருக்கலப்பில்லாத எதேச்சாதிகாரம் நடைபெற வேண்டுமாம். நமக்கும் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்துக்கும் உள்ள உண்மையான தொடர்பு எது வென்றால், சாசுவதமாக லண்டன்மா நகரத்திலிருக்கும் லேவா தேவிக்காரர்களோடு கடன் சுமைகள் என்ற சங்கிலிகளினால் பிணிப்பதே ஆகும். "பாங்க் ஆப் இங்கிலாந்" தினால், இந்தியாவில் ரிசெர்வ் பாங்க்மூலமாக, இந்தியாவின் நாணய நோட்டுத் திட்டங்களை அடக்கியாள வேண்டுமாம்! அத்தகைய கோட்டைகளைக் கட்டிக் கொண்டால், பிரிட்டிஷாருடைய உரிமைகளை அசைக்கமுடியாது. அவைகளோடு புதிய உரிமைகளையும் சிருஷ்டி செய்துகொள்ளலாம்.

இந்த உரிமைகளின் நன்மைக்காக, நமது நாட்டுவருமானம் யாவும் தொண்டைவரையிலும் அடமானம் வைக்கப்பட்டுவிட்டன. ஐ. சி. எஸ். போன்ற பெரிய சாம்ராஜ்ய உத்தியோக இலாக்காக்களை புதிய சீர்திருத்தப்படிக்கு அடக்கியாள முடியாது. அவைகள் என்றும் போல, நம்மை ஸ்வராஜ்ய வழியில் பயிற்சி செய்ய வேலைசெய்து கொண்டிருக்கும் மாகாண சுயஆட்சி உண்டு; ஆனால், அந்த சுயாட்சிக்கு கவர்னர் அவர்கள் சர்வ வல்லமையும் காருண்யமும் உள்ள சர்வாதிகாரியாக இருந்து, நாம் ஒருவரோடொருவர் சண்டை போட்டுக்கொள்ளாமல் பார்த்துக்கொள்வார். எல்லோருக்கும்உயரத்தில்இணையற்ற சர்வாவாதிகாரி வைஸ்ராய் அவர்கள் வீற்றிருப்பார். அவர் எதை வேண்டுமானாலும் செய்யலாம். எதை வேண்டுமானாலும் தடுக்கலாம். எல்லா அதிகாரமும் அவருக்கு உண்டு. பிரிட்டனில் குடிவாழும் "அரசாளும் வகுப்பாரின்" மேதாவித்தனம் முழுவதையும் இந்த வெள்ளைக்காகித தஸ்தாவேஜியில் காண முடியும். இந்தக் குடியேற்ற நாட்டு அரசியல் அமைப்பைக் கண்டு ஹிட்லர்களும், முஸ்ஸோலினிகளும் பிரேமை கொண்டு இந்திய வைஸ்ராயின்பேரில் ஏன் பொறாமை கொள்ளமாட்டார்கள் ?

இந்தியாவைக் கையையும் காலையும் சேர்த்துக் கட்டிவிடும்படியான அரசியலமைப்புத் திட்டத்தை உண்டாக்கிய

தோடு பாதுகாப்புகள், பிரத்தியேகப் பொறுப்புகள் என்ற முட்டைகளையும் மேற்கொண்டு, விலங்குகளாக சேர்த்து விட்டார்கள். இந்தியா நகர முடியாத கைதியாகி விடும். "மனித யுக்திக்கு உட்பட்ட பாதுகாப்புகளையெல்லாம் கொண்டு புதிய அரசியலமைப்பை வளைத்துக் கட்டிவிட்டோம்" என்று நெவில் சேம்பர்லேன் சொன்னது மிகவும் பொருத்தமானது. பிரிட்டிஷார் இத்தனை சலுகைகளும் இந்தியர்களுக்குக் காண்பித்தார்களே அதற்காக அவர்களுக்கு பிரதிப்பிரயோஜனம் வேண்டாமா? துவக்கத்தில் இந்தியா சிலகோடி ரூபாய்களை மொத்தமாக பிரிட்டனுக்கு கொடுத்துவிடவேண்டுமாம்! பிறகு, வருஷா வருஷம் வேறு கொடுக்கவேண்டுமாம்! போதுமான தக்ஷிணை கொடுக்காவிட்டால், நமக்கு ஸ்வராஜ்ய ஆசிர்வாதம் கிடைக்காதல்லவா? இந்தியா ஏழை நாடென்றும் அதனுடைய கடன் சுமை ஏற்கனவே அதிகமென்றும் அதைக் குறைக்க நமக்கு சுதந்திரம் கிடைக்குமென்றும் நினைத்து நாம் ஏமாந்து நின்றோம். ஸ்வராஜ்யத்துக்கு அடிப்படையான காரணமே அதுதான். ஆனால், அந்தச்சுமை இன்னும் பளுவாக போய்விடப் போவதாக இப்பொழுது தெரிந்தது.

இந்தியப் பிரச்னையை இவ்வாறு தீர்த்து, புதிய அரசியலமைப்பை பிரிட்டிஷார் கருணையோடு இந்தியாவுக்கு அளித்தார்களாம். நம்மை ஆளுபவர்கள் எவ்வளவு தாராள மனதுள்ளவர்கள் என்று நமக்குப் போதிக்கப்பட்டது. மகத்தான சாம்ராஜ்ய அதிகாரத்தைக் கைக்கொண்டிருந்த எந்த வல்லரசும், தானாகவே அடிமை ஜனங்களுக்கு இத்தகைய அதிகாரத்தையும் சந்தர்ப்பங்களையும் கொடுத்ததே இல்லையென்பதாகச் சொல்லப்பட்டது. இங்கிலாந்திலே பெரிய வாதம் நிகழ்ந்தது. இந்தியாவுக்கு சீர்திருத்தம் வழங்க விரும்பும் கொடையாளிகளுக்கும், இந்தியாவுக்குக் கொடுத்தது அதிகமென்று ஆட்சேபித்து, மற்றவர்களுக்கும் வாதம் இந்தியாவிலிருந்து இங்கிலாந்துக்கு போகவும், இங்கிலாந்திலிருந்து இந்தியாவுக்கு வருவதுமாக, மூன்று வருஷங்கள் நடைபெற்றது. மூன்று வட்டமேஜை மகாநாடுகள் நடந்தன. அநேக கமிட்டிகள்! பல யோசனைகள்! முதலியன.

ஆனால், இங்கிலாந்துக்குப்போய்க்கொண்டிருந்தது மட்டும் ஓயவில்லை. வெள்ளைக் காகிதத்தைப்பற்றி தீர்ப்புச்

சொல்ல, பிரிட்டிஷ் பார்லிமெண்டின் கூட்டுப் பொறுக்கு கமிட்டி கூடிற்று. இந்தகமிட்டிக்கு அசெஸர்களாக ஒத்தாசை செய்யவோ அல்லது சாட்க்ஷியம் கூறவோ, இந்தியர்கள் அங்கே சென்றார்கள். மேலும், லண்டனில் வேறு பல கமிட்டிகள் வேலை செய்து வந்தன. இங்கிலாந்துக்குச் சொந்த பணமில்லாமற்போய், அங்கே தங்குவதற்கு இந்தகமிட்டிகளின் அங்கத்தினர் பதவியால் வசதி ஏற்பட்டமையால், ஒவ்வொரு கமிட்டிக்கும் நான் நீ என்று போட்டி போட்டுக்கொண்டு, இந்தியர்கள் திரைமறைவில் நின்று, அவலட்சணமாக சண்டை போட்டுக்கொண்டிருந்தார்கள். வெள்ளைக் காகிதத்தின் நாற்றமெடுத்த ஷரத்துக்களைக்கண்டு அஞ்சாத இந்தத் தைரியசாலிகள், கப்பல் அல்லது ஆகாயப் பிரயாணங்களால் ஏற்படக்கூடிய ஆபத்துக்களையும் லண்டன் நகரத்தில் வசிப்பதால் நேரக்கூடிய இன்னும் மகத்தான ஆபத்துக்களையும் பற்றி கவலைப்படாமல், பிரயாணமானார்கள்! எல்லாம் எதற்காக? தங்களுடைய நாவன்மையினால் வெள்ளைக் காகிதத்தின் ஷரத்துக்களை மாற்றி வைப்பதற்காக! தாங்கள் கைக்கொண்ட காரியம் சாத்தியப்படாதென்று அவர்களுக்குத் தெரியும். அப்படியே சொல்லவும் செய்தார்கள். ஆனால், அவர்கள் கடமையைச் செய்யாமல் இருப்பார்களா? கேட்பதற்கு ஆளில்லாவிட்டாலும், அவர்கள் பேசிக்கொண்டே இருப்பார்கள்.

பரஸ்பர ஒத்துழைப்புக் கக்ஷியைச்சேர்ந்த தலைவர் ஒருவர் கடைசிவரையிலும் விடாமல், பிடிவாதமாக மற்றவர்கள் எல்லோரும் இங்கிலாந்தைவிட்டுப் போனபோதிலும், தங்கி பேட்டிக்குப்பின்னால் பேட்டி கண்டுகொண்டே இருந்தார் .லண்டனிலிருக்கும் பிரமுகர்களோடு விருந்துக்குப் பின் விருந்தாக சாப்பிட்டுக்கொண்டே இருந்தார்கள். இந்தியாவில் எத்தகைய அரசியல் மாறுதல்களை உண்டாக்க வேண்டுமென்றும் அவ்வாறு செய்துதான் அதிகாரிகளின் மனதில் பதியவைக்க முடியுமாம்! கடைசியாக, அவர் அவருடைய தாய் நாட்டுக்குத் திரும்பிவந்தும், தாம், மகாராஷ்டிரர்களுக்கு வழக்கமாயுள்ள பிடிவாதத்தைக்கொண்டு, லண்டனிலேயே தங்கி கடைசிவரையிலும் தாம் சொல்லவேண்டியதைச் சொன்னதாகவும் எந்தக் காரணத்தைக் கொண்டும் தாம் தொடங்கிய வேலையை நிறுத்திவிடவில்லை யென்றும் அவர் ஆவலுடன் காத்திருந்த ஜனங்களுக்கு அறிவித்தார்.

பரஸ்பர ஒத்துழைப்பு நண்பர்களுக்கு நகைச்சுவையே இல்லை என்று என் தகப்பனர் அடிக்கடி குறைகூறியது எனக்கு ஞாபகமிருக்கிறது. தகப்பனர் ஏதேனும் விகடமாக பேசிவிட்டால் அதை ரஸிக்கமுடியாமல், இந்த நண்பர்கள் கோபங் கொள்வார்களாம். இவர்களுடைய ஆத்திரத்தைத் தணிப்பதற்காக, தகப்பனர் சமாதானம் சொல்லிச் சாந்தப்படுத்துவார்! என்ன அலுப்பான வேலை! மகாராஷ்டிரர்களுடைய பண்டைக்காலத்து போர்த்திறனையும் நம்முடைய தேசியப் போராட்டக்காலத்தில் அவர்கள் வீரத்தனமாய் நடந்துகொண்டதையும், முறிந்தாலும் வளைந்து கொடுக்காத அஞ்சா நெஞ்சம் படைத்த பெரியார் திலகரையும் நான் நினைத்துக் கொண்டேன்.

மிதவாதிகள் வெள்ளைக் காகிதத்தை சுத்தமாகவெறுத்தார்கள். இந்தியாவில் நாளுக்குநாள் தணியாமல் நடைபெற்றுவந்த அடக்கு முறையிலும் அவர்களுக்கு பிடித்தமில்லை. அவர்கள் அரசாங்கத்தாரின் அடக்குமுறையைச் சில சமயங்களில் கண்டிப்பார்கள். ஆனல், அப்படி செய்வதற்கு முன், ஒரு அத்தியாயம் காங்கிரஸையும் அது செய்துவரும் வேலைகளையும் அவர்கள் திட்டுவார்கள். சிறையிலிருந்து சில முக்கியமான காங்கிரஸ்காரர்களை விடுதலை செய்ய வேண்டுமென்று அவர்கள் சில சமயங்களில் அரசாங்கத்துக்கு யோசனை சொல்லுவார்கள். அவர்களுக்குத் தெரிந்த தனி நபர்களைப்பற்றித்தான், அவர்களுக்குக் கவலையும் சிந்தனையும் பொதுவான போராட்டத்தையோ கொள்கையைப்பற்றியோ அவர்கள் யோசிப்பதே இல்லை. பொதுஜன அமைதிக்கு இனி ஆபத்து நேராது என்று தோன்றுவதால் சில பேர்களைக் குறிப்பிட்டு, அவர்களை விடுதலை செய்துவிடலாமென்று மிதவாதிகளும் பரஸ்பா ஒத்துழைப்பாளர்களும் வாதம் செய்தார்கள்.

விடுதலையடைந்த பேர்வழி தவருக நடந்துகொண்டால் அவரை அரசாங்கம் மீண்டும் கைது செய்து, அடக்கு முறைக்கு இன்னும் அதிகமான காரணங்களை அரசாங்கம் காண்பிக்க முடியும். மிதவாதிகளின் காரணங்களைக் கூறி, காரியக்கமிட்டி அங்கத்தினர்கள் சிலரையும் வேறு சில முக்கியஸ்தர்களையும் விடுதலை செய்யவேண்டியதாக இங்கிலாந்திலே நல்லவர்கள் சிலர் மனுப்பண்ணிக் கொண்டார்கள்,

நாங்கள் சிறையில் இருக்கும்பொழுது, எங்களைப்பற்றி சிரத்தையெடுத்துக்கொண்ட ஜனங்களுக்கு நாங்கள் கட்டாயம் நன்றி பாராட்டத்தான் வேண்டும். ஆனால், இத்தகைய நன்னோக்கம் கொண்ட நண்பர்கள் எங்களுக்கு இல்லாமலிருந்தால் நல்லதென்றும் நாங்கள் சில சமயம் எண்ணியதுண்டு. அவர்களுடைய நல்ல எண்ணங்களை நாங்கள் சந்தேகிக்கவே இல்லை. ஆனால், அவர்கள் எங்களுடைய விடுதலைக்காகக் காண்பித்த காரணங்கள் தவறாகும். அவர்கள் பிரிட்டிஷ் ஆட்சியை ஏற்றுக்கொண்டவர்களாகும். அவர்களுக்கும் எங்களுக்குமிடையே மகத்தான பிளவு இருந்தது.

மிதவாதிகளுக்கு இந்தியாவில் நேரும் பல சங்கதிகளில் பிடித்தமே இல்லை. அவர்கள் அவைகளைக் கண்டு மிகவும் துயரப்பட்டார்கள். ஆனால் அவர்கள் என்ன செய்வது? அரசாங்கத்துக்கு விரோதமாக பயன்தரக் கூடிய எதையும் செய்ய அவர்களால் முடியாது. தாங்கள் தனித்துண்டான பேர்வழிகளென்பதை உறுதிப்படுத்திக் காண்பிக்கும் பொருட்டு, பொது ஜனங்களையும் கிளர்ச்சிக்காரர்களையும்விட்டு விலகி, வெகுதூரத்திற்குப் பின்னால்போய், அவர்கள் நிற்க வேண்டியதாயிற்று. அந்த நிலைமையில் அவர்களுடைய மனப்பான்மையும் அரசாங்கத்தின் நடைமுறைக் கருத்துகளும் அநேகமாக ஒன்றுதான். அவர்கள் சிறு தொகையினர். பொது ஜனங்களிடம் அவர்களுக்கு செல்வாக்கு கிடையாது. பொதுஜனப் போராட்டம் சம்பந்தப்பட்ட வரையில் அவர்களால் யாதொன்றும் செய்ய முடியவில்லை.

ஆனால், அவர்களுக்குள் சில பிரசித்தி பெற்ற பிரமுகர்கள் இருந்தார்கள். அவர்கள் சொந்த ஹோதாவில் மிகுதியும் நன்குமதிக்கப்பட்டவர்கள். இந்தத் தலைவர்களும் மிதவாத பரஸ்பர ஒத்துழைப்புக் கூட்டத்தாரும் நெருக்கடி சமயத்தில் அரசாங்கத்தின் நிர்வாக முறையைப் பெரிதும் ஆதரித்து, அதற்கு அளவிடமுடியாத ஒத்தாசையைச் செய்தார்கள். அடக்குமுறையைக் கூட, சில சமயங்களில் மிதவாதிகள் ஆதரித்தார்கள். அரசாங்கத்தின் அடக்குமுறையையும் சட்டமில்லாத் தன்மையையும் அவர்கள் பயன் தரும் முறையில் கண்டித்ததே இல்லை. இதனால் அரசாங்கத்தாருக்கு லாபம். அரசாங்கத்தார் சமாதானம் சொல்ல

முடியாமல் தவித்துக் கொண்டிருக்கிற தருணத்தில், தேசத்தில் அமுலிலிருந்த பயங்காமான, முன்பின் கேட்டறியாத அடக்குமுறைக் கொள்கைக்கு மிதவாதிகளும், பரஸ்பர ஒத்துழைப்பாளர்களும் ஆதரித்து, அனுமதி கொடுத்தார்கள்.

"வெள்ளைக் காகிதம்" மிகவும் கெட்டது என்று மிதவாதத் தலைவர்கள் சொன்னார்கள். அப்படியானால் அதை என்ன செய்யவேண்டும்? 1933-ம் வருஷம் ஏப்ரல் மாதம் கல்கத்தாவில் கூடிய அகில இந்திய மிதவாத மகாநாட்டில் மிதவாதத் தலைவர்களுள் மிகவும் கீர்த்தி பெற்ற மகாகனம் ஸ்ரீநிவாச சாஸ்திரியார் "புதியசீர்திருத்த மாறுதல்கள் எவ்வளவு அதிருப்திகரமாக இருந்தபோதிலும் நாம் அவைகளை ஏற்று அமுலுக்குக்கொண்டுவரவேண்டும்" என்று சொன்னார். "விஷயங்கள் நேருவதை அப்படியே நேரும்படியாக விட்டுவிட்டு, சும்மா கை கட்டிக்கொண்டிருப்பதற்கு காலம் இதுவல்ல" என்றும் அவர் கூறினார். கொடுத்ததை வாங்கிக் கொண்டு அதை அமுலுக்குக் கொண்டுவர வேண்டிய வேலை தான் அவருடைய யோசனைக்குக் கட்டுப்பட்டது போலும்! சீர்திருத்தத்தை யேற்காவிட்டால் சும்மாதான் இருக்க வேண்டுமோ? "நமக்கு ஞானமும், நிதானமும், அனுபவமும், பிறரை நம்வழிக்குத் திருப்பும் ஆற்றலும், அமைதியான செல்வாக்கும், உண்மையான திறமையும்—இந்த நல்ல தன்மைகள் நம்மிடம் இருக்குமாகில்—அவைகளை பூரண வலுவுடன் வெளிக்காண்பிப்பதற்கு இதுவே தருணமாகும்" என்று சாஸ்திரியார் முடித்திருக்கிறார். அவருடைய பிரசங்கத்தை மதிப்பிடுகையில் "ஜோதிமயமான சொற்கள்" என்று கல்கத்தா "ஸ்டேட்ஸ்மன்" பத்திரிகைகுறிப்பிட்டிருக்கின்றது.

சாஸ்திரியார் எப்பொழுதுமே பிரசங்கத் திறமை படைத்தவர். நேர்த்தியான சொற்களிடம் பிரசங்கியார்களுக்கு இருக்கும் காதல் அவரிடமும் உண்டு. சொற்களை சங்கீத சுருதியில் அமைத்துப் பேச வேண்டுமென்ற ஆசை சாஸ்திரியாருக்கு உண்டு. ஆனால், அவருடைய பிரசங்க உற்சாக வெள்ளமே கரை காணாத இடத்திற்கு அவரை அடித்துக்கொண்டு போய்விடுகின்றது. அவரது சொல் மந்திர ஜால வித்தையினால் அவர் சொல்வதன் அர்த்தம் பிறருக்கு மங்கிப் போய்விடுகின்றது. ஒருக்கால் அவருக்கும் அப்படித்

தானே என்னவோ? சட்ட மறுப்புப் போர் நடந்துகொண்டிருக்கையில், 1933-ம் வருஷம் ஏப்ரல் மாதம் கல்கத்தாவில் அவர் சொன்ன யோசனையை நிதானமாக ஆராய்ச்சி செய்ய வேண்டியது அவசியமாகும். மூலாதாரக் கொள்கைகளும் லட்சியங்களும் ஒருபுறமிருக்கட்டும். கவனிக்கப்பட வேண்டிய விஷயங்கள் இரண்டு இருக்கின்றன.

என்ன நேர்ந்தாலும் நம்மை பிரிட்டிஷ் அரசாங்கத்தார் அவமானப்படுத்தி அடக்கி, நசுக்கி, ஒடுக்கி, பொருள் சுரண்டினாலும் அதற்கு நாம் கட்டுப்பட்டிருக்க வேண்டும் என்பது முதலாவது விஷயமாகும். இதற்கப்பால் நாம் போகக் கூடாது என்ற கோட்டை யாருமே வரைய முடியாது. நசுக்கப்பட்ட புழுவும் திரும்பிக் கடிக்கப் பார்க்கலாம். ஆனால், சாஸ்திரியாரின் யோசனையைக் கேட்டால், இந்திய மக்கள் புழு செய்வதைத் கூட செய்யாமல் சும்மா இருக்க வேண்டும். அவர் யோசனை சொல்லுகிறபடி வேறு எந்த வழியுமே கிடையாது. அதாவது அவர் சம்பந்தப்பட்ட வரையில், பிரிட்டிஷ் அரசாங்கத்தின் தீர்மானங்களை ஏற்று, அவைகளின்படி நடப்பது தமது மதம் என்று அவர் எண்ணிக்கொண்டிருக்கவேண்டும். நமக்கு விருப்பம் இருந்தாலும் இல்லாவிட்டாலும் அந்த விதிக்கு நாம் எல்லோரும் தலை குனிந்து கட்டுப்பட்டு நிற்க வேண்டும் என்று தான் அவருடைய யோசனைக்குப் பொருளாகும்.

திட்டமாகத் தெரிந்த ஒன்றைப்பற்றி அவர் யோசனை சொல்லவில்லை யென்பதைக் குறித்துக் கொள்ளவேண்டும். புதிய சீர்திருத்தங்கள் இன்னும் வெளிவரவில்லை. அவைகள் வெளிவந்தாலும் மிகவும் கெடுதலாகத்தான் இருக்கும் என்பது எல்லோருக்கும் தெரியும். "வெள்ளைக் காகித யோசனைகள் கெடுதல்தான்; இருந்தாலும், சந்தர்ப்பங்களை உத்தேசித்து, அவைகள் சட்டமாகும் பக்ஷத்தில் அவைகளை ஏற்று, அமுலுக்குக் கொண்டு வருவதுதான் என்னுடைய விருப்பம்'' என்று அவர் சொல்லி இருந்தாராகில், அந்த யோசனை நல்லதாயினும் கெட்டதாயினும் அதற்கு ஒரு பொருத்தம் உண்டு. அந்த யோசனைக்கும் நடைமுதல் நிலைமைகளுக்கும் ஒருவாறு தொடர்பு இருந்தாலும் இருக்கலாம். ஆனால் சாஸ்திரியாரோ அவ்வாறு சொல்லாமல் ஒரே அடியாக நீட்டி விட்டார். சீர்திருத்தங்கள் எவ்வளவு

அதிருப்திகரமாக விருந்தாலும், தம்முடைய யோசனை எப்பொழுதும் பொருத்தமாகும் என்று அவர் கூறுகிறார்.

நமது நாட்டார் சம்பந்தப்பட்டவரையிலும் மூச்சுக் காற்றைப்போல் விளங்கும் அரசியல் திருத்த விஷயத்தில் பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு பூரண அதிகாரம் கொடுத்து விட சாஸ்திரியார் தயாராயிருக்கிறார். தனி நபரோ அல்லது ஒரு கட்சியோ அல்லது ஒரு கூட்டமோ இவ்வாறு ஒரு மனப்பான்மையைக் கொண்டு எதிர்காலத்தில் என்ன நேர்ந்தாலும் அதைப் பொறுத்துக்கொண்டிருக்கவேண்டும் என்று நினைப்பது எனக்குக் கொஞ்சம்கூட விளங்கவே இல்லை. இத்தகைய மனப்பான்மை கொண்டவர்களுக்கு கொள்கை இருக்கமுடியாது; அரசியல் அளவு தெரியாது; அறமுறை விளங்காது. அரசாளுபவர்களின் ஏவல்களுக்கு பணிந்து நடப்பதுதான் அவர்களுடைய கொள்கையாகும்; அவர்களுடைய வாழ்க்கை முறையும் அதுவேயாகும்.

எனக்குப் படுகிற இரண்டாவது விஷயம், உபாயத்தைப் பொருத்ததாகும். புதிய சீர்திருத்தங்களைத் திட்டமாக அடிகோலுகிற முயற்சியில் வெள்ளைக்காகிதம் என்பது ஒரு முக்கியமான கட்டமாகும். அரசாங்கத்தாரின் நோக்கப்படிக்கு அது ஒரு முக்கியமான பகுதி. இன்னும் அநேக கட்டங்கள் பாக்கி இருந்தன. இந்தக் கட்டங்களில் வெள்ளைக் காகிதத்தை நல்லதாகவோ கெட்டதாகவோ மாற்றக்கூடிய சந்தர்ப்பம் இருந்தது. பலதரப்பட்ட கூட்டங்கள் தங்களுடைய நோக்கங்களை பிரிட்டிஷ் அரசாங்கத்தின் பேரிலும் பார்லிமெண்டின் பேரிலும் வற்புறுத்தி எவ்வாறு தெரிவித்துக்கொள்கிறார்கள் என்பதைப் பொருத்து வெள்ளைக் காகிதத்தில் மாறுதல்கள் ஏற்படமுடியும். இந்தக் கயிறிழுப்பில் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் இந்திய மிதவாதிகளைத் தங்கள் பக்கம் சேர்த்துக் கொள்ள விருப்பம் அடைந்திருக்கலாம். இந்த விருப்பத்தை, நெம்புகோலாக வைத்துக் கொண்டு வெள்ளைக்காகித யோசனைகளை விரிவுபடுத்தி தாராளமாக்குவதற்கோ அல்லது அவைகளைக் குறைக்காமலிருப்பதற்கோ இந்திய மிதவாதிகள் முயற்சி செய்திருக்க வேண்டும்.

ஆனால், வெள்ளைக்காகித யோசனைகளை ஏற்பதா இல்லையா என்றும், புதிய சீர்திருத்தங்களை வரவேற்பதா

கூடாதா என்றும் முடிவுக்கு வந்து அதை வெளியிடும்படியான தருணமும் பிரச்னையும் ஏற்படுவதற்கு முன்னேயே, சாஸ்திரியார் அழுத்தமாகச் சொன்னதிலிருந்து இந்திய மிதவாதிகளைக் கொஞ்சம்கூட லக்ஷியம் செய்ய வேண்டியதில்லையென்று அரசாங்கத்தாருக்குத் தெளிவாகத் தோன்றிவிட்டது. இந்திய மிதவாதிகளைத் தங்கள் பக்கம் இழுத்துக்கொள்ளவேண்டியதற்கு முயற்சி செய்யவேண்டிய சிரமமே அரசாங்கத்தாருக்கு ஏற்படவில்லை. இந்திய மிதவாதிகளை வெளியே பிடித்துத் தள்ளிவிட்டாலும், அவர்கள் தங்களை ஒருநாளும் கைவிடமாட்டார்கள் என்பது அரசாங்கத்தாருக்குத் தெரிந்து விட்டது. மிதவாதிகளின் கண்ணைக் கொண்டு பார்த்தாலுமே, கல்கத்தாவில் சாஸ்திரியார் செய்த பிரசங்கம் சரியான ராஜீய தந்திரமல்லவென்றும், மிதவாதிகளின் லக்ஷ்யத்துக்கு கேட்டை விளைவிக்கக்கூடியதென்றும் எனக்குத் தோன்றுகிறது.

சாஸ்திரியாரின் பழைய பேச்சைப்பற்றி இவ்வளவு அதிகமாக நான் ஏன் எழுதவேண்டும்? அந்தப் பிரசங்கம் மிகவும் உயர்ந்தது என்பதற்காக வல்ல. அகில இந்திய மிதவாதிகளின் கூட்டம் முக்கியமானதென்பதற்காகவல்ல. மிதவாதத் தலைவர்களின் மனப்பான்மையையும், மனப்போக்கையும் அறிந்துகொள்ள வேண்டுமென்று எனக்கு ஆசை. அதனால் இவ்வளவு நீளமாக எழுதிவிட்டேன். அவர்கள் ரொம்ப புத்திசாலிகள்; மதிப்புக்கு உரியவர்கள். எனக்கு அவர்களிடம் என்ன நல்லெண்ணம் இருந்தபோதிலும், அவர்கள் காரியம் செய்யும் முறையை என்னால் துளிக்கூட ஏற்றுக்கொள்ளவே முடிகிறதில்லை. சாஸ்திரியார் வேறொரு பிரசங்கம் செய்தார். அதை நான் சிறையில் படித்தேன். அதனால் என்னுடைய மனதில் மிகுதியும் உணர்ச்சி ஏற்பட்டது. 1933-ம் ஜூன் மீ, சாஸ்திரியார் தலைவர் என்ற முறையில் இந்திய ஊழியச் சங்கத்தில் ஒரு பிரசங்கம் செய்தார்.

"பிரிட்டிஷார், இந்தியாவைவிட்டு திடீரென்று வெளியே போய் விட்டார்களாகில், இந்தியாவில் என்னென்ன ஆபத்துக்கள் தோன்றும்? ஒரு கட்சி இன்னொரு கட்சியைத் துன்புறுத்தி, பகைத்து அடக்கி ஒடுக்க முயற்சி செய்யும். ஆனால் பிரிட்டிஷாரின் அரசியல் வாழ்க்கை

யில் எதிர்க்கட்சியைப் பொறுத்துக் கொள்ளுதல் என்பது ஒரு முக்கியமான பகுதியாகும். பிரிட்டிஷாரின் உதவியைக் கொண்டு இந்தியாவில் எதிர்காலத் தலைவிதி அமைக்கப்படுமாயின், நான் குறிப்பிட்ட எதிர்க் கட்சியைச் சகித்தல் என்ற நல்ல தன்மை அதிகமாக வளருவதற்கு இடமிருக்கிறது" என்று சாஸ்திரியார் சொன்னராம். நான் சிறையிலிருப்பதால், கல்கத்தா "ஸ்டேட்ஸ்மன்" பத்திரிகையில் பிரசுரிக்கப்பட்டதை நம்பித்தான் சாஸ்திரியாரின் பேச்சை மதிப்பிட வேண்டியிருக்கிறது. "இது ஒரு இன்பமான கொள்கை. இதே தொனியில் டாக்டர் மூஞ்சே அவர்களும் பேசியிருக்கிருர் என்று நாம் அறிகிறேம்" என்ற "ஸ்டேட்ஸ்மன்" பத்திரிகைஆசிரியர் குறிப்பொன்றை சேர்த்திருக்கிறது. ருஷியாவிலும், இத்தாலியிலும், ஜெர்மனியிலும் நிகழும் சுதந்திரப் பறிமுதலைப்பற்றியும் அங்கே நடக்கும் ஜீவ காருண்யமற்ற படுகொலைகளைப்பற்றியும் சாஸ்திரியார் மேலும் குறிப்பிட்டதாக பிரசுரிக்கப்பட்டது.

இதை நான் படித்ததும், பிரிட்டிஷ் கன்ஸர்வேடிவ் கட்சியில் குறுகிய மனப்பான்மை கொண்டவர்களுக்கும், சாஸ்திரியாரின் மனப்பான்மைக்கும் மிகுதியும் ஒற்றுமை இருப்பதாக எனக்குத் தோன்றிற்று. சில்லரை விபரங்களில் இருவருக்கும் சில வித்தியாசங்களிருக்கலாம். ஆனல் அடிப்படையான கருத்துக்கள் இருவருக்கும் பொதுவேயாகும். தம்முடைய மனச்சாட்சிக்கு யாதொரு விரோதமும் செய்யாமல், இதே பாஷையில் வின்ஸ்டன் சர்ச்சில் அவர்களும் தமது கருத்துக்களைத் தெரிவித்திருக்கக்கூடும். இருந்தாலும் சாஸ்திரியாருக்கு மிதவாதிகளுக்குள் தீவிரவாதியென்று பெயர். மிதவாதத் தலைவர்களுக்குள் அவர் தான் மிகச் சிறந்தவராகும். சாஸ்திரியார் சரித்திரத்தைப் படித்தது மாதிரி நானும் படித்தும் அவர் வந்திருக்கும் முடிவை என்னல் துளிக்கூட ஏற்றுக் கொள்ளவே முடியாது. உலக விஷயங்களைப்பற்றி அவரது அபிப்பிராயங்களையும் நான் கொள்ள முடியாது. முக்கியமாக அவர் பிரிட்டனையும் இந்தியாவைப்பற்றியும் வெளியிடும் கருத்தை நான் ஒப்புக்கொள்ளவே முடியாது. அநேகமாக இங்கிலீஷ்காரரல்லாத எந்த அந்நிய நாட்டானும் அவைகளை ஏற்க மாட்டான். தீவிரக்கொள்கைகள் கொண்ட பல இங்கிலீஷ்காரர்கள் கூட அவருடன் ஒத்துப்போகமாட்டார்கள். பிரிட்

டிஷ் அதிகார வர்க்கத்தினரின் பார்வைக் கண்ணாடிகளைக் கொண்டு உலகத்தையும் தமது தாய்நாட்டையும் பார்க்கும் படியான சக்தி அவருக்கு அதிர்ஷ்டவசமாகக் கிடைத்திருக்கிறது. இருந்தாலும் சென்ற 18 மாதங்களாக இந்தியாவில் தினேதினே நடைபெற்று வந்த அசாதாரணமான நிகழ்ச்சியையும் அவர் பிரசங்கம் செய்து கொண்டிருந்த காலத்தில் நிகழ்ந்தனவற்றையும்பற்றி அவர் தமது பிரசங்கத்தில் குறிப்பிடாமல் இருந்தது வியப்பாகும்.

அவர் ருஷிய, இத்தாலி, ஜெர்மனி இவைகளைப்பற்றி குறிப்பிட்டார். தமது சொந்த நாட்டில் எல்லா சுதந்தரங்களையும் அடக்கி ஒடுக்கிவிட்ட பயங்கரமான ஆட்சிமுறையைப்பற்றி அவர் குறிப்பிடவே இல்லை. எல்லைப்புற மாகாணத்திலும், வங்காளத்திலும் நேர்ந்த பயங்கரமான நிகழ்ச்சிகளைப்பற்றி அவருக்கு ஒன்றுமே தெரியாமலிருக்கலாம். அதிகாரிகள் செய்தி பிரசாரத்தைத் தடுத்து விட்டதால் ராஜேந்திர பாபு தமது காங்கிரஸ் தலைமையுரையில் குறிப்பிட்ட "வங்காளத்தின் பலவந்தக் கற்பழிவை"ப்பற்றி அவர் தெரிந்துகொள்ளாமலிருக்கலாம். ஆனால் இந்தியா படும் வேதனையை அவர் மறந்து விட்டாரா? தமது ஜனங்கள் வல்லமை பொருந்திய எதிரியோடு உயிருக்காகவும் சுதந்தரத்துக்காகவும் மன்றாடிப்போராடும் போராட்டத்தை அவர் மறந்துவிட்டாரா? இந்தியாவின் அநேக பகுதிகளிலே நடைபெற்றுவந்த போலீஸ் ஆட்சியமுல் அவருக்குத் தெரியாதா? இராணுவ அமுலையொத்த நிலைமைகளும், அவசரச் சட்டங்களும், உண்ணாவிரதங்களும், சிறையில் தேச பக்தர்கள்படும் பல்வேறு கஷ்டங்களும் அவருக்குத் தெரியாதா? எந்த சுதந்தரத்துக்காகவும் சகிப்புத்தன்மைக்காகவும் அவர் பிரிட்டனைப் புகழ்ந்தாரோ அதே சுதந்தரமும் சகிப்பும் இந்தியாவில் அதே பிரிட்டனால் நசுக்கப்பட்டுவிட்டன என்பதை அவர் உணர்ந்ததில்லையா?

அவர் காங்கிரசோடு ஒத்துப்போனரா இல்லையா என்பதைப்பற்றி கவலையே இல்லை. காங்கிரசின் முறையை மதிப்பிட்டு கண்டனம்செய்ய அவருக்கு பூரண சுதந்திரம் உண்டு. ஆனல் ஒரு இந்தியன், சுதந்தரப் பிரியன், ரோஷமுள்ளவன் என்ற முறையில் அவருடைய நாட்டு ஆண்களும் பெண்களும் செய்த தியாகத்தையும், காண்பித்த வியக்கத்தக்க

தைரியத்தையும்பற்றி அவருடைய உணர்ச்சிகள் எந்தப் போக்கில் தான்சென்றன? இந்தியாவின் இதயத்தில் கோடரியைக்கொண்டு தாக்கியதுபோல நம்மை ஆளுபவர்கள் செய்கைகளில் அவருக்கு வேதனையும், மனத்துயரமும் உண்டாகவில்லையா? வல்லமைபொருந்திய சாம்ராஜ்யத்தின் தேக வலுவைக் கண்டும் வணங்க மாட்டோம் என்று பதினாயிரக் கணக்கானவர்கள் உறுதி கொண்டு தங்களுடைய உடல்கள் நசுக்கப்பட்டாலும் சரி, தங்களுடைய வீடுகளை உடைத்துச் சிதறவடித்தாலும்சரி, தங்களுடைய உற்றார் உறவினர் துன்பப்பட்டாலும்சரியென்று மாண்புடன் நிமிர்ந்து நிற்பது அவருக்கு ஒரு கவனிக்கத்தக்க பொருளாகத் தோன்றவில்லையா? சிறையிலும், வெளியேயும் நாங்கள் முகத்தைத் தைரியமாக வைத்துக்கொண்டு புன்முறுவலுடன் நகைக்கவும் செய்தோம். ஆனால் நாங்கள் சிரித்தது நாங்கள் வடித்த கண்ணீர் மூலமாகும் அது அநேகமாக அழுகையுடன் கலந்திருந்தது.

வெர்ரீர் எல்வின் என்ற தைரியமும் ஜீவகாருண்யமும் நிறைந்த இங்கிலீஷ்காரர், இந்தக் காட்சிகளைக் கண்டு, தமது உணர்ச்சிகள் எப்படி இருந்தன என்று எழுதுகிறார். "தனது அடிமை மனத்தளைகளை அறுத்தெறிந்து கொண்டு, அச்சமில்லாமல், உறுதியான உண்மையான கௌரவத்தைக் கொண்டு பூரா நாடும் தலை நிமிர்ந்து நிற்கும் காட்சியைப் பார்ப்பது ஆச்சரியமான அனுபவமாகும்" என்று அவர் 1930-ம் வருஷத்தைப்பற்றிச் சொல்லுகிறார். "சத்தியாக்கிரகப் போராட்டத்தில் காங்கிரஸ் தொண்டர்களில் பெரும்பான்மையோர் காண்பித்த ஆச்சரியப்படத்தக்க கட்டுப்பாடும் பயிற்சியும் என்னே! என்னே!! இத்தகைய கட்டுப்பாட்டைப்பற்றி யாகாண கவர்னர்களில் ஒருவர் வாயாரப் புகழ்ந்திருக்கிறார்..." என்று மேலும் எல்வின் அவர்கள் எழுதியிருக்கிறார். ஸ்ரீநிவாச சாஸ்திரியார் சாமர்த்தியமுள்ளவர்; நேர்த்தியான உணர்ச்சியுள்ளவர்; அவருடைய நாட்டாரால் மிகுதியும் நன்கு மதிக்கப்படுபவர். எல்வின் அவர்களுக்கு ஏற்பட்ட உணர்ச்சி போல சாஸ்திரியாருக்கும் ஏற்பட்டு, போராட்ட காலத்தில் அவருடைய நாட்டார்களுக்காக அனுதாபம் காண்பிக்க முடியவில்லையென்று எண்ண சாத்தியப்படவில்லை. நபர் சுதந்திரத்தையும், எல்லாவித பொதுஜன வேலைகளையும் அரசாங்கத்தார் அடக்கி, ஒடுக்கி

விட்டதைக் கண்டித்து, அவர் தமது குரலை வெளியே காண்பிப்பார் என்று எல்லோரும் அவரைப்பற்றி எதிர்பார்த்தது இயற்கைதானே! மேலும் அவரும், அவரது சகாக்களும் வங்காளம், எல்லைப்புற மாகாணம் முதலிய கொடுமையாக பாதிக்கப்பட்ட பிராந்தியங்களைப் போய் நேரிலே பார்வையிடுவார்கள் என்று எதிர்பார்ப்பதும் இயல்பே. காங்கிரசுக்கோ, சட்ட மறுப்பியக்கத்துக்கோ எந்தவகையிலும் ஒத்தாசை செய்வதற்காக அவர்கள் செல்ல வேண்டியதில்லை. அதிகாரிகளுடையவும், போலீஸ்காரர்களுடையவும் அதிக்கிரமங்களை பகிரங்கப்படுத்தி, அதன் மூலமாகவேனும் அவைகளைத் தடுக்க அவர்கள் செல்லவேண்டாமா?

வேறு நாடுகளில், சுதந்திரப் பிரியர்களும் நபர் உரிமைகளுக்காக உழைப்பவர்களும் இவ்வாறுதான் செய்வது வழக்கம். ஆனால் சாஸ்திரியார் இவ்வாறு செய்யவில்லை. சாதாரண உரிமைகளையும் பறிமுதல் செய்து இந்தியாவின் ஆண்களின் பேரிலும் பெண்களின் பேரிலும் எதேச்சாதிகாரம் செய்து, அடக்கு முறையைக் கையாண்ட காலத்திலும் சாஸ்திரியார் அதிகார வர்க்கத்தினரைத் தடுக்க முயற்சி செய்யவில்லை. தேசத்தில் இன்னதுதான் நடக்கிறதென்று தெரிந்து கொள்ளவும் அவர் ஆசைப்படவில்லை. இதையொன்றையும் செய்யாமல், இந்தியாவில் பிரிட்டிஷ் ஆக்ஷியால் சுதந்திரம், எதிர்க்கட்சி சகிப்பு என்ற நல்ல தன்மைகள் மாயமாய்ப் பறந்துபோய்க் கொண்டிருக்கிற சமயத்தில், இந்த இரண்டு தன்மைகளுக்காக அவர் பிரிட்டிஷ்காரர்களுக்கு நற்சாக்ஷிப் பத்திரமொன்றை நல்கினர். அவர் தமது ஆதரவை அவர்களுக்குத் தந்து அவர்களுடைய அடக்கு முறை வேலையில் அவர்களுக்கு தைரிய மூட்டித் தேற்றிவிட்டார்.

இவை யெல்லாவற்றையும் அவர் எண்ணிச் செய்திருக்கமாட்டார் என்றும், தாம் இவ்வாறு செய்தால் இவ்வாறு நேரும் என்று அவர் சிந்தனை செய்திருக்கமாட்டார் என்றும் நான் நிச்சயமாகச் சொல்லுவேன். ஆனால் அவருடைய பேச்சுக்கு இந்தப் பலன்தான் உண்டாகும் என்பதைச் சந்தேகிக்கவே முடியாது. ஆகவே இந்த முறையில் அவர் ஏன் சிந்தனை செய்யவேண்டும்? இவ்வாறு ஏன் அவர் நடந்து கொள்ள வேண்டும்?

இந்தக் கேள்விக்கு தகுதியான சமாதானத்தை என்னால் காணமுடியவில்லை. ஒரு சமாதானம்தான் தோன்றுகிறது. மிதவாதத் தலைவர்கள் தங்களுடைய நாட்டார்களிடமிருந்தும் நவீனக் கருத்துகள் எல்லாவற்றிடமிருந்தும் அடியோடு தங்களை வெட்டி விலக்கிக்கொண்டு, தனித்துநின்றார்கள் என்பதுதான். அவர்கள் படித்த பழம்புஸ்தகங்களில் தூசிகள் ஏறிப்படிந்து கிடக்கின்றன. அந்த நூல்களிலே பொது ஜனங்களைப்பற்றி யாதொரு குறிப்புமே இல்லாத பொழுது, இவர்கள் பொதுஜன உறவை எவ்விதம் நாடுவார்கள்? அப்படி நாடவேண்டுமென்று இவர்கள் படித்த பழஞ் சுவடிகளில் இல்லையே! நாங்கள்சிறைக்குச்சென்றோம்; எங்களுடைய உடம்புகளை அரசாங்கத்தார் அறைகளில் பூட்டி வைத்தார்கள் என்பது உண்மைதான். ஆனால் எங்களுடைய மனதுகள் சுதந்தரத்துடன் எங்கேயெல்லாமோ சுற்றித்திரிந்தன. எங்களுடைய உறுதி தளரவேஇல்லை. ஆனால் மிதவாதிகளோ தாங்களாகவே தங்களுக்கு மனச்சிறைகளை ஏற்படுத்திக்கொண்டார்கள். அந்தச் சிறையில் அவர்கள் சுற்றிச் சுற்றி வந்தார்கள். அதிலிருந்து விடுதலையடைவதற்கு அவர்களுக்கு வழிதெரியவில்லை.

இருப்பதெல்லாம் ஈசன்செயல் என்று அவர்கள் கும்பிட்டார்கள். நிலைமையில் மாறுதல் தோன்றுமாயின், (எப்பொழுதும் மாறிக்கொண்டிருக்கும் உலகத்தில் அவ்வாறு நேருவதுஇயல்புதானே?) அவர்களுக்கு ஊன்றுகோலாக பிடித்துக்கொள்வதற்கு எதுவுமே கிடையாது. அவர்கள் உடலிலும் உள்ளத்திலும் திக்கற்று, தவித்துப்போகின்றார்கள். அவர்களுக்கு வாழ்க்கை லட்சியம் கிடையாது. அறமுறை அளவுகள் கிடையாது. நாம் எல்லோருமே, நாமாகவே முன்னேறிச் செல்லவேண்டும் அல்லது முன்னே தள்ளப்படவேண்டும். இரண்டிலொன்று நடந்தாகவேண்டும். மாறுதலே விதியாக விளங்கும் படைப்பில், யாரும் இருந்த இடத்திலேயே இருக்கமுடியாது. மிதவாதிகள் இயக்கத்தையும் மாறுதலையும் கண்டு அஞ்சுகிறார்கள். சட்ட மறுப்பு இயக்கத்தால் அவர்களைச் சூழ்ந்து கொண்ட புயற்காற்றுகளைக் கண்டு, அவர்கள் திகிலடைந்து போனார்கள். அவர்களுக்கு கைகால்களில் வலுக்கிடையாது. ஆகவே, தாங்களாக நடந்து செல்லும் வல்லமை அவர்களுக்கு இல்லை. அவர்களை அங்குமிங்கும் நிகழ்ச்சிகள் பலாத்காரமாகத் தள்

ளிக்கொண்டு போகின்றன. அவ்வாறு அவர்கள் அடித்துக் கொண்டு போகப்படுகையில், கையிலகப்படும் வைக்கோலைப் பிடித்துக் கொண்டு கரையேறப் பார்க்கிறார்கள். இந்திய அரசியலுலகில், அவர்கள் ஹாம்லட் என்னும் கதாநாயகருக்கு சமானமானவர்கள். அதாவது, எப்பொழுதும் எதிலும் அவர்களுக்குச் சந்தேகம்; எதிலும் தயக்கம்; மன உறுதியே கிடையாது. "காலம் கலி ஓங்கிக் கெட்டிருக்கின்றது; என்ன தலைவிதி! அதைச் சீர்திருத்த நான் ஏன் பிறக்க வேண்டும்?' என்று ஹாம்லட் புலம்பினதுபோல, மிதவாதிகள் ஓலமிடுகின்றனர்.

"இந்திய ஊழியன்" என்ற மிதவாத வாரப் பத்திரிகை, காங்கிரஸ்காரர்களின்பேரில் விநோதமான குற்றமொன்றைச் சாட்டிற்று. சட்டமறுப்பியக்கத்தின் பின்பகுதிக் காலத்தில் காங்கிரஸ்காரர்கள் முதலில் சிறைக்குள் போக ஆசைப்பட்டு சிறைக்குள் சென்றவுடனே, அதை விட்டு வெளியே வர வேண்டுமென்று ஆவல்கொண்டார்களாம்! இது தான் இப்போதைய காங்கிரஸ் உபாயம்போலும் என்று அந்தப் பத்திரிகை ஆத்திரத்துடன் கேட்டிருக்கிறது. காங்கிரஸின் உபாயத்துக்கு எதிராக, மிதவாதிகளின் உபாயம்தான் என்ன? இங்கிலாந்துக்கு தூது கோஷ்டியொன்றை யனுப்பி பிரிட்டிஷ் மந்திரிமார்களை பேட்டிகண்டும், இங்கிலாந்திலே மந்திரி சபை மாறவேண்டுமென்றும் கடவுளைப் பிரார்த்தித்துக் கொண்டு காத்திருக்கவும் வேண்டும் போலும்!

அந்தக்காலத்தில் காங்கிரசுக்கு முக்கியமாக ஒரு மார்க்கம் தான் இருந்தது என்பது உண்மை. அவசரச் சட்டங்களையும், மற்றும் அடக்குமுறைச் சட்டங்களையும் மீறுவதுதான் காங்கிரசுக்கு மீந்த உபாயமாகும். இதனால் சிறை சம்பவிக்கத்தானே செய்யும்? நீண்டகாலப் போராட்டத்தினால், காங்கிரசும் நாட்டாரும் சளைத்துப்போய், பயன்தரு முறையில் அரசாங்கத்தாரைத் தாக்க முடியவில்லை என்பதும் உண்மைதான். ஆனால் சட்டத்தை மீறி சிறை செல்லாமலிருப்பது, அந்தச் சந்தர்ப்பத்தில் எவ்வகையாலும் பொருத்தமில்லாததாகும்.

இந்தியா சகித்துக்கொண்டிருந்த அநியாயமான அடக்குமுறையால் அதிகாரவர்க்கத்தினருக்கு எல்லா வகையிலும்

மகத்தான நஷ்டம்தான். அடக்குமுறை யென்பது தங்களுடைய நரம்புகளை ஆட்டிவைக்கும் வேலையென்றும் அதனால் இறுதியில் தங்களுடைய ஆக்ஷியின் அடி வலுவே தளர்ந்துபோகுமென்பதும் அவர்களுக்கு நன்றாகத் தெரியும். அவர்களுடைய ஆக்ஷியின் உண்மையான தன்மையை ஒடுக்கப்பட்ட ஜனங்களுக்கும் உலகத்துக்கும் நன்றாக தொடர்ச்சியாக அது எடுத்துக் காண்பித்து விடுகின்றது. அநேகமாக அதிகாரவர்க்கத்தினர் அடக்குமுறையை உபயோகப்படுத்தாமல், மறைத்துக்கொண்டு, சமாதான முறையைக் கைக்கொள்ளத்தான் பிரியப்படுவார்கள். என்ன நேர்ந்தாலும் பணிவதில்லை என்று தீர்மானம் கொண்டிருக்கும் ஜனங்களிடம் அரசாங்கத்தார் பழகுவதில் அவர்களுக்கு ஆத்திரம்தான் வரச்செய்யும். முடிவிலே, அந்த அரசாட்சிக்கு அது தீமையாகவே முடியும். ஆகவே தொடர்ச்சியாக இல்லாமல், விட்டுவிட்டு அடக்குமுறைச் சட்டங்களை மீறினாலும் அதனால் பொது ஜனங்களுக்கு நன்மைதான். அது பொது ஜனங்களைக் கட்டுப்பாட்டுக்குள் வலுப்படுத்தி அரசாங்கத்தாரின் அஸ்திவாரத்தைத் தகர்த்து விடுகின்றது.

அறவழியைக் கருதிப் பார்த்தாலும், சட்டம் மீறுதல் என்பது முக்கியமாக கவனிக்கப்பட வேண்டிய விஷயமாகும். அமெரிக்கப் பேரறிஞர் தோரோ அவர்கள் அழியாப் புகழ்வாய்ந்த வாக்கியங்களில், அறவுபதேசம் செய்கின்றார். "ஆண்களும் பெண்களும் அநியாயமாக சிறைப்படும் காலத்தில், நியாயஸ்தர்களுக்கும் யோக்கியப் பொறுப்புள்ளவர்களுக்கும் தகுதியான இடம் சிறைதான்" என்று அவர் கூறுகிறார். மிதவாதிகளுக்கும் ஏனையோர்களுக்கும் இந்த உபதேசம் இனிக்காமல் இருக்கலாம். ஆனால் தற்போதுள்ள நிலைமையில் நீதியான வாழ்க்கை வாழமுடியாது என்பது எங்களில் பெரும்பான்மையோரானவர்களின் எண்ணமாகும். சட்டமறுப்பு இயக்கத்தினால் ஏற்பட்ட நிலைமைகள் ஒருபுறமிருக்க, நமது தோழர்களில்பலர் எப்பொழுதுமே சிறையில் இருக்கிறார்கள். அரசாங்கத்தின் அடக்குமுறை யந்திரம் இடைவிடாமல், நம்மை யொடுக்கிக் கொண்டு, அவமானப் படுத்தி வருகின்றது. அந்த அடக்குமுறை பயத்தைக் காண்பித்து நமது ஜனங்கள் எல்லா வகைகளிலும் சுரண்டப்படுகிறார்கள்.

நம்முடைய சொந்த நாட்டில் நாம் போலீசாரால் கண் காணிக்கப்பட்டும், பின் தொடரப்பட்டும் சந்தேகப் பேர்வழி களாக நடமாட வேண்டியிருக்கிறது. நம்முடைய வார்த்தை களை யெழுத்தில் எழுதி சட்டம் மீறுமலிருக்கின்றதா என்று பார்ப்பதாயிருக்கிறது. நம்முடைய கடிதப் போக்கு வரத்துகள் அலக்ஷியமாக அரசாங்கத்தாரால் உடைக்கப்படு கின்றன. எந்த நிமிஷத்திலும் அதிகார வர்க்கத்தினர் தடை யுத்தரவு போடுவார்களோ அல்லது கைதுசெய்வார்களோ என்ற நிலைமை இருந்து கொண்டே இருக்கிறது. எனவே இரண்டிலொன்றுதான் நாம் செய்யவேண்டும். அரசாக்ஷியின் வல்லமைக்கு கேவலமாகப் பணிந்து போய், மானத்தை யிழந்து, சத்தியத்தை மறந்து, கேவலமான காரியங்களுக்கு உடந்தையாயிருப்பது; இல்லாவிட்டால், என்ன நேர்ந்தா லும், அரசியல் முறையை எதிர்ப்பது. இரண்டில் ஒன்று தான் முடியும். துன்பத்தை வருவித்துக் கொள்ளவாவது, சிறைக்குச் செல்லவாவது, யாரும் விரும்ப மாட்டார்கள். ஆனல், வேறுவிதமாக நடப்பதைக்காட்டிலும் சிறை செல் லுவதையே பல சமயங்களில் விரும்பவேண்டியதாயிருக்கும். நீச காரியங்களுக்காக தன்னலப்பேய்களால் உபயோகப்ப டுத்திக் கொள்ளப்படுவது தான், வாழ்க்கையின் கொடுமை களில் மிக்கக்கொடியது. மற்றைய யாவும் வெறும் துரதிர்ஷ் டங்களாகும். ஆனல் இந்த ஒன்று மட்டும் சித்திரவதையா கும்; அடிமைத்தனமாகும்; பூமியில் நரகமாகும் என்று பெர்னுட் ஷா எழுதியிருக்கிறர்.

# XLIX

## நீண்ட சிறை வாசத்தின் முடிவு

எனது விடுதலைக்காலம் நெருங்கிக் கொண்டே வந்தது. நல்ல நடத்தைக்காக வழக்கமாக உள்ள வஜா எனக்கு கிடைத்தது. ஆகவே இரண்டு வருஷ தண்டனையிலிருந்து மூன்றரை மாதங்கள் குறைந்துபோயின. என்னுடைய மன அமைதி அதாவது சிறை வாழ்வினால் ஏற்பட்ட மனத்தின் மந்தம் விடுதலையடையப் போகிறேன் என்பதனால் ஒருவாறு பரபரப்பு ஏற்பட்டுக் கலைந்தது. வெளியே போனால் நான் என்ன செய்யவேண்டும்? மிகவும் கஷ்டமான கேள்வி. அதற்கு தெளிவான பதில் கிடைக்காததால், விடுதலையின் மகிழ்ச்சி மிகுதியும் குறைந்துவிட்டது. ஆனால், அதுகூட தற்காலிக உணர்சியாகப் போய்விட்டது. நீண்டகாலம் அடக்கி வைக்கப்பட்டிருந்த எனது ஊக்கம் பிதுங்கி குமிழி விட ஆரம்பித்தது. நான் வெளியே போக ஆவல்பட்டேன்.

1933-ம் வருஷம் ஜுலை மாதக்கடைசியில் கலக்கமும், துக்கமும் ஏற்படும்படியான செய்தியொன்று கிடைத்தது. ஜே.எம். சென் குப்தா அவர்கள் திடீரென மாண்டுபோனார். இருவரும் பல வருஷங்களாக காங்கிரஸ் காரியக்கமிட்டியில் நெருங்கிய தோழர்களாயிருந்ததோடு கூட அவருக்கும் எனக்கும் எனது கேம்பிரிட்ஜ் படிப்பு நாள் முதல் தொடர்பு இருந்துவந்தது. முதல் முதலாக நாங்கள் கேம்பிரிட்ஜில் சந்தித்தோம். நான் அப்பொழுதுதான் கல்லூரியில் போய்ச் சேர்ந்தேன். அவர் அப்பொழுது பட்டம் பெற்றுவிட்டார்.

சென்குப்தா காவலில் இருக்கையில் இறந்துபோனார். 1932-ம் வருஷத் துவக்கத்தில் ஐரோப்பாவிலிருந்து திரும்பி வந்துகொண்டிருக்கையில் பம்பாயில் கப்பலிலேயே அவர் அரசாங்கக் கைதியாக்கப்பட்டார். அது முதல் அவர் கைதியாகவோ அல்லது காவலிலோ இருந்து வந்தார். அவருடைய உடல் நலம் மிகவும் கெட்டுப்போய் விட்டது. அர

சாங்கத்தார் அவருக்கு பல வசதிகள் கொடுத்துப் பார்த்தார்கள். ஆனால் அவர்களால் நோயின் போக்கைத் தடுக்கமுடியவில்லை. அவரைக் கல்கத்தா நகரில் மயானத்துக்கு எடுத்துச் செல்லுகையில் கூடினகூட்டத்தை கணக்கிட முடியாது. அந்தக் கூட்டம் அவரது பெருமைக்கு அத்தாட்சியாகவிருந்தது. நீண்ட காலமாக அடக்கப்பட்டு துயருற்று வந்த வங்காள ஆத்மாவுக்கு திடீரென தாற்காலிக வெளிப்போக்கு ஏற்பட்டதுபோலத் தோன்றிற்று.

எனவே சென்குப்தாவும் மறைந்து போனார். சுபாஷ் போஸ் இன்னொரு அரசாங்கக் கைதி. நீண்ட கால சிறை வாசத்தாலும் காவலினாலும் அவருடைய உடல் நலமும் அறவே சிதைந்து போய்விட்டது. சிகிச்சைக்காக ஐரோப்பாவுக்குப்போக அரசாங்கத்தார் கடைசியாக அவருக்கு அனுமதி அளித்தார்கள். பழம்புலியான வித்தல்பாய் பட்டேலும் ஐரோப்பாவில் சுகவீனமாக படுக்கையிலே கிடந்தார். சிறை வாழ்க்கையின் அயர்வைத் தாங்க முடியாமலும் வெளியே இடைவிடாமல் வேலை செய்து தளர்ந்துபோனதாலும் இன்னும் வேறு எத்தனை பேர்களோ முறிந்து போனார்கள்; அல்லது இறந்து போனார்கள். இன்னும் பலர் வெளித்தோற்றத்தில் மாறுதல் அடையாவிட்டாலும் மனோ விகாரங்களைப் பெற்று சிறையில் தாங்கள் வாழ்ந்த அசாதரணமான வாழ்க்கைகளினால் சீர்குலைந்து போனார்கள்.

சென்குப்தா அவர்களின் மரணம் மூலமாக நாடு முழுவதும் மௌனமாகவும் பயங்கர முறையிலும் அனுபவித்துக்கொண்டிருக்கிற துன்பம் எனக்குத் தெளிவாக மனதில் பட்டது. எனக்குச் சோர்வு உண்டாயிற்று? ஏக்கமடைந்தேன். இந்தத் துன்பமெல்லாம் எதற்காக? எந்த முடிவைக் காண?

என்னுடைய தேக ஆரோக்கிய விஷயத்தில் நான் பாக்கியசாலிதான். காங்கிரஸ் வேலையால் திட்டமில்லாமல் தினசரி வாழ்க்கை வாழ்ந்து அயர்ந்து போனாலும், என்னுடைய உடம்பு அதிகமாக கெட்டுப்போக வில்லை. இதற்கு இரண்டு காரணங்கள் இருக்கலாம். எனக்கு என் பெற்றோர்கள் அளித்த உடம்பே நல்ல கெட்டியான உடம்பு ஆகும். மேலும் நான் என்னுடைய உடம்பைப்பற்றி கவலை யெடுத்

துக்கொண்டு, சரியான முறையில் வைத்துக் கொள்ள பாடு பட்டிருக்கிறேன். பலவீனம், சுகவீனம் அதிகச் சதை முதலியவைகள் எனக்குப் பிடிப்பதில்லை. அவைகள் யாவும் இருக்கத் தகாதவைகள் என்பது என் எண்ணம். ஆகவே எளிய உணவு, மிகுதியான நல்ல காற்று, தேகப்பயிற்சி முதலியவைகளின் ஒத்தாசையைக் கொண்டு பலவீனம் முதலியவற்றை என்னிடமிருந்து வெருட்டியடித்து வந்தேன்.

இந்திய நடுத்தர வகுப்பார்களுக்குக் காணும் பெரும் பகுதி நோய்களெல்லாம் தவறான ஆகாரத்தினால் ஏற்படுகின்றன என்பது என்னுடைய சொந்த அனுபவமாகும். ஆகாரத்தை அதிகமாக சாப்பிடுகிறார்கள்; அதிக கொழுப்புள்ள ஆகாரத்தை மிதமிஞ்சி சாப்பிடுகிறார்கள். (இத்தகைய கெட்ட வழக்கங்களுக்கு வசதி இருப்பவர்களைப்பற்றித் தான் இது குறிப்பிடுகின்றது.)

தித்திப்புப் பண்டங்களையும் நயமான உணவுகளையும் குழந்தை முதலே அதிகமாகக் கொடுக்க அன்புள்ள தாயார் ஆயுள்கால அஜீரணத்துக்கு கெட்டியாக அடிகோலி விடுகின்றாள். குழந்தைக்கு எத்தனை உடுப்புகள்! இந்தியாவுக்கு வருகிற இங்கிலீஷ்காரர்களும் அவர்களுடைய உணவுக்கு அதிகமாக செலவு ஏற்படாவிடினும் அளவுக்கு மிஞ்சி உண்ணுகிறார்கள் என்றே தோன்றுகிறது. முந்திய தலைமுறை இங்கிலீஷ்காரர்கள் அளவுக்கு மிஞ்சி கண்ட ஆகாரத்தைச் சாப்பிடுவார்கள். இந்தத் தலைமுறை இங்கிலீஷ்காரர்கள் இந்தியாவில் அவ்வளவு மோசமில்லை என்றுதோன்றுகிறது.

ஆகாரத் திட்டம் என்ற பித்திலே எனக்கு நம்பிக்கை கிடையாது. நான் அதிகமாக சாப்பிடுவதில்லை. கூடுமான வரையிலும் கொழுப்பான உணவுகளை ஒதுக்கி விடுவேன். அநேகமாக எல்லா காஷ்மீரி பிராமணர்களைப் போலவே எங்கள்குடும்பத்துக்கும் மாமிசப் பழக்கம் உண்டு. எனக்கு சிறு பிராயம்முதலே மாமிசம் சாப்பிட்டு பழக்கம். இருந்தாலும் அதனிடம் எனக்கு அதிகமான ருசி கிடையாது. 1920-ம் வருஷம் ஒத்துழையாமை வரவே, நான் மாமிசத்தைத் தள்ளி விட்டேன். ஆறுவருஷத்திற்குப்பிறகு, ஐரோப்பாவுக்குப் போகும் வரையில் நான் சைவம் தான். ஐரோப்பாவிலே மீண்டும் மாமிசப் பழக்கம் ஏற்பட்டது. இந்தியாவுக்குத்

திரும்பிவந்ததும் மீண்டும் நான் சைவமானேன். அதுமுதற் கொண்டு நான் அநேகமாக சைவம்தான். மாமிசம் எனக்கு நன்ருக ஒத்துக் கொள்ளுகிறது. ஆனல் அதன்பேரில் ஒரு வகை வெறுப்பை உண்டாக்கிக்கொண்டுவிட்டேன். எனவே மாமிசம் என்ருல் நாகரிகக் குறைவு என்ற உணர்ச்சி உண்டாகின்றது.

1932-ம் வருஷத்தில் சிறையில் சிறிதுகாலம் எனக்கு சுகக்கேடு உண்டாயிற்று. பலமாதங்கள் தினம் தினம் எனக்கு காய்ச்சல் வந்தது. அதிலே எனக்கு ஆத்திரம். நல்ல உடம்பு என்று நான் கர்வப்பட்டுக் கொண்டிருந்தது பொய்யாயிற்றே என்று எனக்கு ஆத்திரம்! எனது வாழ்வில் அந்த மாதிரி இருந்தது இதுதான் முதல் தடவையாகும். நான் எப்பொழுதும் திடகாத்திரத்துடன் சுகவாழ்வுவாழப் போவதாக எண்ணிவந்த நிலைமை மாறி நான் சிறிதுசிறிதாக மெலிந்து மாறிவரும் தோற்றம் என்னைத் திடுக்கிடச்செய்து விட்டது. எனக்கு மரணத்தில் பயமில்லை.

ஆனல் சிறித சிறிதாக உடலும் உள்ளமும் தேய்ந்து போவதென்பது வேறுவிஷயமாகும். என்ருலும் நான் அனு வசியமாகப் பயந்தேன் என்று பின்னர் தெரிந்தது. என்னுடைய நோயை எப்படியோ உதறித்தள்ளி விட்டு, எனது தேகத்தைக் கட்டுக்குள் கொண்டுவந்து விட்டேன். மாரி காலத்தில், நீண்ட நேரம் சூரிய ஸ்நானம் செய்ததால், மீண்டும் எனக்கு சுக உணர்ச்சி உண்டாயிற்று. எனது சிறைத் தோழர்கள் அங்கிகளையும் சால்வைகளையும் அணிந்துகொண்டும் குளிரால் விறைப்பார்கள். ஆனல் நானே தேகத்தில் ஒன்றுமில்லாமல் சூரியஸ்நானம் செய்து ஆனந்தமாக வீற்றிருப்பேன். மாரி காலத்தில் வட இந்தியாவில்தான் இவ்வாறு செய்ய முடியும். வேறு பகுதிகளில் சூரியன் எப்பொழுதும் கடுமையாகக் கொளுத்தும்.

எனது தேகப்பயிற்சி முறைகளில், ஒரு ஆசனம் எனக்கு மிகவும் இன்பமாக இருந்தது. அதற்கு சிர்ஸாசனம் என்று பெயர். அது தலைகீழாக நிற்பதாகும். முழங்கைகளைத் தரையில் வைத்துக் கொள்ள வேண்டும். விரல்களைக் கோத்துக் கொண்டு உள்ளங்கைகளால் தலையின் பின்புறத்தைக் தாங்கி தலைகீழாக இருக்கவேண்டும். தேகம் வளையாமல் குச்சிபோல்

இருக்கவேண்டும். இந்த அப்பியாசம் மிகவும் நல்லதென்று நான் நினைக்கிறேன். உடல் பயிற்சி ஒருபுறமிருக்க, இந்த ஆசனத்தால் மனதுக்கு உண்டான ஒரு நற்பயனைக் கண்டு, அதன்பேரில் எனக்கு விருப்பம் உண்டாயிற்று. தலைகீழாக நிற்கிற வேடிக்கையினால் எனக்கு மனதிலே இனிப்பு உண்டாகி, வாழ்க்கையில் குறும்புத்தனமான அம்சங்களைப் பொறுத்துக் கொள்ளும்படியான சகிப்புத்தன்மையும் ஏற்பட்டது.

சிறையிலே மனத்தளர்ச்சி ஏற்படுவது மிகவும் இயல்பானது. அந்த சோர்வைப் போக்குவதற்கு எனது வழக்கமான உடல் நலமும், நல்ல சுகத்தோடிருக்கிறேன் என்ற உணர்ச்சியும் எனக்குப் பெருந்துணைகளாக இருந்தன. சிறையிலோ வெளியிலோ, அவ்வப்போது மாறிக் கொண்டு வரும் நிலைமைகளுக்குத் தக்கவாறு, என்னை அமைத்துக் கொள்வதற்கும், அவைகள் ஒத்தாசையாக இருந்தன. என்னை உருட்டிப் புரட்டிக் கீழே தள்ளிவிடும்போல மனதிலே பல இடிகள் விழுந்திருக்கின்றன. ஆனால் நானே ஆச்சரியப்படும்படியாக, எதிர்பார்த்ததைக் காட்டிலும் சீக்கிரத்தில், அந்தத் தாக்குகளிலிருந்து தேறி யிருக்கிறேன். என்னுடைய நிதானத்துக்கும் அறிவுத் தெளிவுக்கும் அடையாளங்களைப்போல இருந்தவை என்னவெனில், எனக்குஒன்று தலைவலியே தெரியாது; இரண்டு தூக்கம் வரவில்லையே என்ற கவலையே இருந்ததில்லை.

நாகரிகத்துக்கு இயல்பாயுள்ள இந்த நோய்களிலிருந்து நான் தப்பித்துக் கொண்டேன். கண்ணும் கெட்டுப்போகவில்லை. சிறையில் வெளிச்சக்குறைவில், எவ்வளவோ படித்தும் எழுதியும் இருக்கிறேன். "கண் வைத்திய நிபுணர் ஒருவர் சென்ற வருஷம் என்னுடைய பார்வையைப் பார்த்துவிட்டு ஆச்சரியப்பட்டுப் போனார் "இன்னும் இரண்டொரு வருஷத்துக்குள் நீங்கள் கண்ணாடியை உபயோகப்படுத்த வேண்டியதாயிருக்கும்" என்று எட்டு வருஷங்களுக்குமுன், அவர் எச்சரிக்கை செய்தார். அவர் நினைத்தது தவறு. இப்பொழுதும் கண்ணாடியில்லாமலே நன்றாக எழுதிப்படித்து வருகின்றேன். இந்த விஷயங்கள் மூலமாக, எனக்கு பழக்க நிதானத்துக்கும் அறிவுத் தெளிவுக்கும் நல்ல பெயர் இருந்த போதிலும், மாறுதலே இல்லாமல் நிதானஸ்தர்களாக இருக்

கும் ஜனங்களிடம் எனக்கு ஒருவகை வெறுப்பு உண்டு என் பதையும் நான் சேர்த்துச் சொல்ல வேண்டும்.

சிறையிலிருந்து விடுதலைக்காக நான் காத்துக்கொண் டிருந்தபொழுது, தனி நபர் சட்டமறுப்பு வெளியே துவக் கப்பெற்றது. இந்தச் சட்டமறுப்பை எப்படிச் செய்வது என்று காண்பிக்கும் பொருட்டு, தாமே அதைச் செய்வ தென்று காந்திஜீ தீர்மானம் கொண்டார். அதிகாரிகளுக்கு பூரணமான அறிவிப்பு கொடுத்த பின்னர், ஆகஸ்டு மாதம் முதல்தேதி துவக்கி, குஜராத் விவசாயிகளுக்கு சட்ட மறுப்பைப் பிரசாரம் செய்யும் எண்ணம் கொண்டு பிரயாண மானார். அவர் உடனே கைது செய்யப்பட்டு ஒரு வருஷம் தண்டனையடைந்து, மீண்டும் எரவாடாவில் அவருடைய அறைக்கு அனுப்பப்பட்டார். அவர் சிறைக்குத் திரும்பிப் போனதில் எனக்குச் சந்தோஷம்.

ஆனால் சீக்கிரத்தில் புதியதொரு சிக்கல் தோன்றிற்று. தமக்கு முன்னே கிடைத்தது போலவே இப்பொழுதும் சிறையிலிருந்து கொண்டே ஹரிஜன வேலையைச் செய்ய அதே வசதிகள் வேண்டுமென்று பாத்தியம் கொண்டாடி னார். ஆனால் அரசாங்கத்தார் அவைகளை அவருக்குக் கொடுக்க மறுத்துவிட்டார்கள். இந்தப்பிரச்னையை வைத்துக் கொண்டு காந்திஜீ மறுபடியும் உண்ணாவிரதத்தைத் துவக்கி விட்டாரென்று திடீரென நாங்கள் கேள்விப்பட்டோம். இவ்வளவு பெரிய நடவடிக்கை எடுத்துக்கொள்வதற்கு அது மிகவும் அற்பமான விஷயமாகத் தோன்றிற்று. காந்திஜீ, அரசாங்கத்தாரோடு உரிமைக்காக பாத்தியம் கொண்டாடி வாதாடியது முழுதும் சரியாயிருக்கலாம். ஆனால் அவர் உண்ணாவிரதமிருக்கத் தீர்மானித்ததை சரியாக அறிந்து கொள்வதற்கு எனக்கு சாத்தியப்படவே இல்லை. எங்களால் ஒன்றும் செய்யமுடியாமல் நாங்கள் திகைத்துப் போய் வெறுமனே பார்த்துக் கொண்டிருந்தோம்.

ஒரு வார உபவாசத்துக்குப் பின்னர் அவருடைய நிலைமை மிகவும் கேவலமாகப் போய்விட்டது. அவரை ஆஸ்பத்திரிக்கு எடுத்துக் கொண்டு போனார்கள். ஆனால் அவர் அப்பொழுதும் கைதியாகவே இருந்தார்; ஹரிஜன வேலைக்கு வசதிகள் கொடுக்கும் விஷயத்தில் அரசாங்கம்

இணங்கி வரவே இல்லை. முந்தின உபவாசங்களில் உயிரோடு இருக்கவேண்டும் என்ற உறுதி காந்திஜிக்கு இருந்தது. அந்த உறுதி அவருக்கு இந்தத் தடவை இல்லாமற்போகவே உடம்பு கிடுகிடுவென்று இறக்கம்கொண்டு கேவலமாகிவிட்டது. முடிவு வந்துவிட்டாற்போல் தோன்றிற்று. அவர் எல்லோரிடத்திலும் விடை பெற்றுக்கொண்டார். ஆஸ்பத்திரி தாதிமார்களுக்கு தமக்குச் சொந்தமாயிருந்த சில சாமான்களை வெகுமதியாகக் கொடுத்துவிட்டு மற்ற சாமான்களை எப்படிச் செய்யவேண்டுமோ அப்படிசெய்து முடித்துவிட்டார். தங்கள் வசமிருக்கையில் காந்திஜி இறக்கும்படியாக விட்டுவிட அரசாங்கத்தாருக்கு நோக்கமே இல்லை. எனவே அன்று மாலையில் அவரை திடீரென்று விடுதலை செய்துவிட்டார்கள். காரணம் தப்பினல் மரணம். அவரை விடுதலை செய்கிறதற்கு அதுதான் தக்க தருணமாகும். ஒருநாள் தாமதித்திருந்தால் அநேகமாக விஷயம் மிஞ்சிப்போயிருக்கும். அவரைக் காப்பாற்றியதற்கு சிறப்பாக பாராட்டப்பட வேண்டியவர் ஸி. எப். ஆண்ட்ரூஸ் அவர்கள். காந்திஜீயின் யோசனைக்கு விரோதமாக அவர் இந்தியாவுக்கு விரைந்து வந்து தக்கன செய்தார்.

இதனிடையே ஆகஸ்டு மாதம் 23-ம் தேதி நான் டேராடூன் சிறையிலிருந்து மாற்றப்பட்டேன். வேறு சிறைகளில் ஒன்றரை வருஷத்துக்கு மேல் வாசம் செய்தபிறகு நான் நைனி சிறைக்கு திரும்பி வந்தேன். அந்த சமயத்தில் திடீரென்று என் தாயாருக்கு சுகவீனம் ஏற்பட்டதாயும் அவர் ஆஸ்பத்திரிக்கு எடுத்துச்செல்லப்பட்டதாயும் செய்தி கிடைத்தது. என் தாயாரின் நிலைமை நெருக்கடியாகப் போய்விட்டதென்று கருதப்பட்டபடியால் 1933-ம் வருடம் ஆகஸ்டுமாதம் 30-ம் தேதியன்று நான் நைனியிலிருந்து விடுதலை செய்யப்பட்டேன். சாதாரணமாக செப்டம்பர் மாதம் 12-ம் தேதி என்னுடைய தண்டனை பூர்த்தியாகி நான் விடுதலை செய்யப்பட்டிருப்பேன். எனவே மாகாண அரசாங்கத்தார் எனக்கு இன்னும் பதின்மூன்று நாட்கள் சேர்த்து வஜா செய்தார்கள்.

# L

## காந்திஜீயுடன் சம்பாஷணை

நான் விடுதலை யடைந்ததும் நேராக லக்ஷ்மணபுரிக்குப் போய், தாயாரைப் பார்த்தேன். அவர் படுக்கையில் இருந்தார். சில தினங்கள் அவருடன் தங்கியிருந்தேன். நீண்ட காலம் சிறையிலிருந்துவிட்டு, இப்பொழுது தான் வெளியே வந்ததால், எனக்கும் சுற்றுப்புறத்திற்கும் தொடர்பு அறுந்து போயிருந்தது. நான் சிறையிலே ஏக்கமுற்றுக் கிடக்கையில், உலகம் மாறிக்கொண்டே யிருந்ததைக் கண்டு சிறிது திடுக்கிட்டுப்போனேன். குழந்தைகளும் சிறுமிகளும் சிறுவர்களும் வளர்ந்துவிட்டார்கள். கலியாணம், பிரசவம், மரணம்; அன்பும் பகைமையும்; வேலையும் விளையாட்டும்; துயரமும் மகிழ்ச்சியும்; வாழ்க்கையிலே புது தினுசான தேவைகள்; சம்பாஷணைக்குப் புது விஷயங்கள்; நான் கண்டதிலும் கேட்டதிலும் ஆச்சரியப் படும்படியாக புதிய விஷயங்கள் இருந்தன.

என்னை மட்டும் குட்டையில் தள்ளிவிட்டு, வாழ்க்கைச் சக்கரம் சுழன்றுகொண்டே சென்று விட்டதாக தோன்றிற்று. இம்மாதிரி கருதுவது முற்றிலும் இனிப்பாக இல்லை. சீக்கிரம் என் சுற்றுப்புறத்தோடு நானும் ஒட்டிக் கொண்டு வாழ ஆரம்பித்திருக்க முடியும். ஆனல் அதற்கு ஆவல் எனக்கு உண்டாகவில்லை. நான் சிறைக்கு வெளியே இருக்கக்கூடிய காலம் சொற்பமென்றும், வெகு சீக்கிரத்தில் மீண்டும் சிறைக்குள் போகவேண்டுமென்றும் உணர்ந்தேன். நான் விரைவில் விட்டுவிட்டுப் போகவேண்டிய ஒன்றோடு ஒட்டிக்கொண்டு வாழ எதற்காக அனுவசியமாக முயற்சி செய்ய வேண்டும்?

அரசியல் சம்பந்தமாக இந்தியா அநேகமாக அடங்கிக் கிடந்தது. பொதுஜன வேலைகளை அரசாங்கத்தார் அநேகமாக அடக்கி ஒடுக்கிக் கொண்டுவந்து விட்டார்கள். வேளா வேளைகளில் கைது செய்வதும் நடைபெற்றுக் கொண்டிருந்-

தது. ஆனல் அப்பொழுது இந்தியாவில் இருந்த மௌனத்துக்குப் பூரணமான பொருள் உண்டு. அது கடுமையான அடக்குமுறையை அனுபவித்து அலுத்துப்போய் நிற்கும் தருணத்தில் ஏற்படும் பயங்கரமான மௌனமாகும். அந்த மௌனம் "ஆயிரம் நாவு படைத்த ஆதிசேஷனுகும்" ஆனல் அடக்குமுறையைக் கையாளும் அரசாங்கங்கள் இதையறிந்து கொள்ள முடியாது. இந்தியா எதேச்சாதிகாரிகளின் லக்ஷ்யமான போலீஸ் ராஜ்யமாக அப்பொழுது இருந்தது. அரசாங்கத்தின் எல்லா இலாக்காக்களிலும் போலீஸ் மனப்பான்மை ஊடுருவி நின்றது. அரசாட்சியின் போக்குக்கு ஒத்துப்போகாத நிகழ்ச்சிகள் யாவும் அடக்கப் பட்டன. இரகசியப் போலீஸ்காரர்களும் உளவர்களும் கூட்டங்கூட்டமாக காடு முழுவதும் நிறைந்து நின்றூர்கள். நாட்டிலே சிர்குலேவுத் தோற்றம் காணப்பட்டது. ஜனங்கள் நடுநடுங்கிப் போய்க் கிடந்தார்கள்.

கிராமாந்தரங்களில் எத்தகைய அரசியல் வேலே செய்தாலும் உடனே தடுக்கப்பட்டது. நகர சபைகளிலும் ஸ்தல ஸ்தாபனங்களிலும் வேலே பார்த்துக்கொண்டுவந்த காங்கிரஸ் காரர்களேக் கண்டு பிடித்து, வேட்டையாடி அவர்களே வெளியே துரத்த, மாகாண அரசாங்கங்கள் முயற்சிசெய்து கொண்டிருந்தன. சட்ட மறுப்பாளன் என்ற முறையில் சிறைக்குச் சென்ற ஒவ்வொரு பேர்வழியும் நகர சபைப் பள்ளியில் உபாத்தியாயராயிருப்பதற்கோ அல்லது வேறு எந்த வகையிலேனும் நகர சபையில் ஊழியம் செய்வதற்கோ லாயக்கில்லாதவர் என்று அரசாங்கம் தனது கருத்தைப் பகிரங்கப்படுத்தி விட்டது. நகர சபைகள் அதிகாரிகளால் பலவந்தப் படுத்தப்பட்டன. குறிப்பிட்ட காங்கிரஸ்காரர்களே வேலேயிலிருந்து நீக்காவிட்டால் அரசாங்க மான்யங்கள் நிறுத்தப்படும் என்று பயமுறுத்தினர்கள். இத்தகைய கேவலமான பலாத்காரம் கல்கத்தா கார்ப்பொரேஷனில் நேர்ந்தது. அரசியல் குற்றங்களுக்காகத் தண்டனே பெற்றவர்களேக் கார்ப்பரேஷன் வேலேக்கு வைத்துக்கொள்ளக்கூடாது என்று வங்காள அரசாங்கத்தார் கடைசியில் ஒரு சட்டம் செய்து விட்டார்களென்றும் நான் எண்ணுகிறேன்.

ஜெர்மனியில் நாஜிக் கட்சியார் செய்த அதிக்கிரமங்களேப்பற்றி இந்தியாவிலும் செய்திகள் கிடைத்ததும் அதனல்

பிரிட்டிஷ் அதிகாரிகளிடம் விநோதமான பலன் ஒன்று ஏற்பட்டது. இந்தியாவில் தாங்கள் செய்ததற்கெல்லாம் இதை ஒரு ஆதாரமாகக் காண்பித்தார்கள். இந்தியாவில் நாஜிக்கக்ஷியார் அரசு செலுத்துவார்களாகில் இந்தியர்களின் கதி எவ்வளவு மோசமாகப் போயிருக்கும் என்று கர்வத்துடனே அதிகாரிகளால் பேசப்பட்டுவந்தது. நாஜிக்கக்ஷியார் பல விநோதமானத் தண்டனைகளையுண்டாக்கி அவைகளை அமுலுக்குக் கொண்டு வருவதில் எல்லா நாட்டார்களையும் தோற்கடித்துவிட்டார்கள். யாரும் அவர்களோடு போட்டி போடுவது எளிதான காரியமல்ல. ஒருக்கால் அவர்கள் இந்தியாவை ஆண்டிருப்பின் நம் கதி இன்னும் மோசமாக இருந்திருக்கலாம். சென்ற ஐந்து வருஷங்களாக இந்தியாவின் பல பகுதிகளிலும் நேர்ந்தவைகளைப்பற்றி என்னிடம் குறிப்புகள் இல்லை. எனவே நாஜி அதிக்கிரமங்கள் மோசமா, அல்லது பிரிட்டிஷ் அதிகாரிகளின் அடக்குமுறை மோசமா என்று மதிப்பிடுவது எனக்கு மிகவும் கஷ்டமாய் இருக்கிறது.

சம்பவங்களைப் பற்றி விசாரிக்க கமிஷன்கள் ஏற்பட்டால் அவைகள் அநேகமாக அரசாங்கத்தாருக்குச் சாதகமாகவே தீர்ப்புச் சொல்லும். அப்படிக்கிருந்தும், இந்தியாவின் பலஇடங்களில் நேர்ந்த அக்கிரமங்களைப்பற்றி விசாரிப்பதற்கு கமிஷன்கள் நியமிக்கப்பட வேண்டுமென்று யோசனை கூறியபோதிலும், அரசாங்கத்தார் அதை ஏற்றுக்கொள்ளவே இல்லை. தன்னுடைய இடது கை செய்தது வலது கைக்குத் தெரியக்கூடாது என்ற உத்தமக் கொள்கையில் இந்தியாவில் நடைபெறும் பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு நம்பிக்கை போலும்! சராசரி இங்கிலீஷ்காரன் மிருகப் பிராயமான செயலை வெறுக்கிறான் என்று சொல்லுவது உண்மையென்றே நான் நினைக்கிறேன். நாஜிக் கட்சியார் மிருகப் பிராயமாக நட என்று பகிரங்கமாகச் சொல்லி ஆனந்தமடைவதுபோல இங்கிலீஷ்காரர்கள் செய்வார்கள் என்று என்னால் கருதமுடியவில்லை. அவர்கள் மிருகப் பிராயமான செயலில் ஈடுபட்டாலும், அதைப்பற்றி அவர்களிடம் கொஞ்சம் வெட்கம் காணப்படுகிறது. யாராயிருந்தாலென்ன-ஜெர்மனியன், இங்கிலீஷ்காரன், இந்தியன் யாராயிருந்தாலென்ன? எவரிடத்திலும் நாகரிக நடத்தையென்பது மெல்லிய மேல்போர்வைதான். வெறிபிடித்தால் நாகரிக

மென்ற தோற்றமே அழிந்துபோய் பார்ப்பதற்கு சகிக்கமுடியாத கோரக் காட்சியொன்று வெளித்தோன்றிவிடுகின்றது.

சென்ற ஐரோப்பிய யுத்தத்தினல் மனித வர்க்கமே மிகவும் பயங்கரமான மிருகப் பிராய நிலைமைக்கு வந்துவிட்டது. யுத்தம் நின்று சமாதானப் பேச்சு நடைபெறுகையிலும்கூட, ஜெர்மனியை வளைத்துக் கொண்டு அதைப் பட்டினிபோட்டுக்கொன்ற பயங்கரக் காட்சியை நாம் பார்க்கவில்லையா? "புத்தி இல்லாத, மிருகப் பிராயமான, பயங்கரமான கொடுமைகளில் இது ஒன்று" என்று இங்கிலீஷ் ஆசிரியர் ஒருவர் மேற்சொன்ன காட்சியை வருணித்திருக்கிறார். 1857-58ம் வருஷங்களை இந்தியா மறந்துவிடவில்லை. நம்முடைய சொந்த நலங்கள் தகர்த்து எறியப்படுவதாகத் தோற்றம் எழுகையில், நாம் நம்முடைய நாகரிகப் பயிற்சியையும் நடைநேர்மையையும் மறந்துவிடுகிறோம். பொய்தான் பிரசாரமாக விளங்கத் தலைப்படுகின்றது. மிருகப் பிராயச் செயலை சாஸ்திர ரீதியாக அடக்குதல் என்றும், சட்டத்தையும் ஒழுங்கையும் நிலைநாட்டுதல் என்றும் வர்ணிக்கிறார்கள்.

இது தனி நபர்களின் குற்றமல்ல; ஒரு சிறப்பான கூட்டத்தாரின் குறையுமல்ல. எல்லாரும் இத்தகைய சந்தர்ப்பங்களில் அநேகமாக இந்த மாதிரிதான் நடந்து கொள்வார்கள். இந்தியாவிலும் அந்நிய ஆக்ஷியின் கீழிருக்கும் ஒவ்வொரு தேசத்திலும், அதிகார வர்க்கத்தினருக்கு விரோதமாக மறைவில் எதிர்ப்பு இருந்து கொண்டே இருக்கும். அடிக்கடி இது வெளித்தோன்றி பயமுறுத்தும் நிலைக்கு வந்துவிடும். இதைக்கண்டு அதிகார வர்க்கத்தினர் ஆத்திரம் கொண்டு தங்களுக்குள் இராணுவத் தன்மைகளை வளர்த்துக் கொள்ளுகிறார்கள். இந்த இராணுவத் தன்மைகளுக்கு சாக்ஷியாக சென்ற சில வருஷங்களாக இந்தியாவில் கொடிய அடக்குமுறை தாண்டவமாடியதை நாம் கண்டிருக்கிறோம். ஏன் இந்தக் கொடிய அடக்கு முறை? நம்முடைய எதிர்ப்பு அவ்வளவு வல்லமையுடனும் பயன் தருமுறையிலும் பிரயோகம் செய்யப்பட்டது. ஆனல் ஓரளவு நாம் இந்தியாவில் எப்பொழுதுமே இராணுவ மனப்பான்மையைப் பொறுத்துக்கொள்ள வேண்டியதுதான். அது சாம்ராஜ்யப் பலன்களில் ஒன்ருகும். அது இரண்டு கட்சியாளரையும் மிகவும் இழிவு படுத்துகின்றது. இந்தியர்களின் இழிவு

நிலைமை பார்த்தால் நன்ருக கண்ணுக்குத் தெரிகிறது. ஆனால் சாம்ராஜ்ய நிர்வாகிகளான இங்கிலீஷ்காரர்களின் சீரழிவு சூக்ஷ்மமாக இருக்கிறது. ஆனால் நெருக்கடி காலங்களில் அந்தச் சீரழிவை வெளிப்படையாகக் காணலாம். மூன்ருவது கூட்டமொன்று இருக்கின்றது. அந்தக் கூட்டம் மேற்சொன்ன இருவகைச் சீரழிவுகளிலும் பங்கெடுத்துக் கொள்ளவேண்டிய துர்ப்பாக்கியத்தை அடைந்து நிற்கின்றது.

சிறையில் எனக்குப் போதுமான ஓய்வு நேரம் இருந்ததால் பெரிய அதிகாரிகளின் பிரசங்கங்களைப் படித்தேன். மாகாண சட்டசபைகளிலும் இந்தியா சட்டசபைகளிலும் கேட்கப்பட்ட கேள்விகளுக்கு அவர்கள் அளித்த பதில்களையும் படித்தேன். அரசாங்க அறிக்கைகளையும் படித்தேன். சென்ற மூன்று வருஷங்களாக அவர்களுடைய மனப்பான்மையில் குறிப்பான மாறுதல் ஏற்பட்டு வருவதைக் கண்டேன். இந்த மாறுதல் கொஞ்சம் கொஞ்சமாக நன்ருக வெளித்தோன்றிற்று. அவர்கள் ஜனங்களைப் பயமுறுத்தும் மனப்பான்மையைக் கொண்டு விட்டார்கள். சார்ஜண்டு மேஜர் தனது சிப்பாய்களைக் கூப்பிட்டுப் பேசுவதுபோல், இராணுவ அதிகார தோரணையில் பேச ஆரம்பித்து விட்டார்கள்.

1933-ம் வருஷம் நவம்பர் அல்லது டிசம்பரில் வங்காளத்தில் மிதுனபுரி டிவிஷன் கமிஷனர் பேசினது இதற்கு ஒரு "சாம்பிள்" ஆகும். தோற்றவனுக்கு கதியில்லை என்பதுதான் இந்தப் பேச்சுகளின் முக்கிய கருத்து. வங்காளத்தில் அதிகாரிகளைக் காட்டிலும் உத்தியோகப் பற்றில்லாத ஐரோப்பியர்கள் ஒரு படி அதிகமாகவே சென்ருர்கள். அவர்களுடைய பிரசங்கங்களிலும் செயல்களிலும் அவர்கள் தீர்மானமான பாஸிஸ்டு தன்மையைக் காண்பித்தார்கள்.

அதிகாரிகளுக்கு மிருகப்பிராயமான தன்மை ஏற்பட்டு வந்தது என்பதற்கு அறிகுறியாக ஒரு சம்பவம் நடந்தது. சிந்து பிராந்தியத்தில் தண்டனைபெற்ற கைதிகள் சிலரை பகிரங்கமாகத் தூக்குப்போட்டார்கள். சிந்து பிராந்தியத்தில் குற்றங்கள் அதிகரித்துப் போனபடியால், மற்றவர்களுக்கு எச்சரிக்கையாக இருக்கும்பொருட்டு, இந்தக் குற்றவாளி

களை பகிரங்கமாகத் தூக்குப்போட வேண்டுமென்று அங்கே இருந்த அதிகாரிகள் தீர்மானம் கொண்டார்கள். இந்தக் கோரமான காட்சியைப் பார்த்து அனுபவிப்பதற்கு, பொதுஜனங்களுக்கு எல்லா வசதிகளும் அளிக்கப்பட்டன. பல ஆயிரம் ஜனங்கள் இந்தக் காட்சியைப் பார்க்க வந்ததாகச் சொல்லப்படுகிறது.

சிறையிலிருந்து நான் விடுதலையடைந்தவுடனே, இந்தியாவிலிருக்கும் அரசியல் பொருளாதார நிலைமைகளை வெள்ளோட்டமாகக் கவனித்தேன். அவைகளினால் உற்சாகம் ஏற்படவில்லை. எனது தோழர்களிற் பலர் சிறையிலிருந்தார்கள். புதிதாக அரெஸ்டுகள் நடைபெற்று வந்தன. எல்லா அவசரச் சட்டங்களும் அமுலில் இருந்தன. கண்காணிப்பினால் பத்திரிகைகள் ஒடுக்கப்பட்டன. எங்களுடைய கடிதப்போக்குவரவும் கண்காணிப்பினால் மிகுதியும் தடை செய்யப்பட்டது. என்னுடைய தோழர் ஒருவர் ராபி அகமது கித்வாய் என்பவர் தம்முடைய கடிதப் போக்கு வரத்து சம்பந்தமாக கண்காணிப்பு செய்யப்பட்டதைக் குறித்து மிகுதியும் ஆத்திரப்பட்டார். சில கடிதங்கள் அவருக்கு வந்துசேரவே இல்லை. சில கடிதங்கள் தாமதித்து வந்தன. இதனால் அவருடைய அலுவல்களுக்குக் குழப்பம் உண்டாகி விட்டது.

கண்காணிப்பு செய்யும் உத்தியோகஸ்தருக்கு எழுதி, தம்முடைய வேலையைத் திறம்படச் செய்யும்படி மனுப்பண்ணிக்கொள்ள வேண்டும் என்பது கித்வாயின் கருத்து. ஆனால் அவர் யாருக்கு எழுதுகிறது? கண் காணிப்பு உத்தியோகஸ்தர், பொதுஜன அதிகாரியல்ல. அவர் அநேகமாக ஒரு இரகசியப்போலீஸ் உத்தியோகஸ்தராக இருக்கலாம். அவர் மறைவிலே வேலை செய்துவந்தார். அந்த மாதிரி ஒரு உத்தியோகஸ்தர் இருப்பதாகவும், வேலை செய்வதாகவும் கூட, அரசாங்கத்தார் பகிரங்கமாக ஒப்புக் கொள்ள மாட்டார்கள். ராபி அகமது இதற்கு ஒரு யுக்தி செய்தார். கண்காணிக்கும் உத்தியோகஸ்தருக்கு கடிதத்தை எழுதிவிட்டு அந்தக் கடிதத்தின் விலாசத்தை மட்டும் தன் பேருக்கு எழுதிக் கொண்டார். உடனே கடிதம் கண்காணிப்பு உத்தியோகஸ்தருக்குப் போய்ச் சேர்ந்தது. உத்தியோகஸ்தர் கடிதத்திலுள்ளதைப் படித்துப்பார்த்தார். அதிலிருந்து ராபி

அகமதின் கடிதப் போக்குவரத்தில் கொஞ்சம் சீர்திருத்தம் உண்டாயிற்று.

மீண்டும் சிறைக்குச் செல்ல எனக்கு விருப்பமில்லை. போதும் போதுமென்றாகிவிட்டது. ஆயினும், அரசியல் வேலையிலிருந்து பூராவும் நான் விலகிக்கொண்டாலொழிய, தற்போதைய நிலைமையில் நான் எவ்வாறு சிறைக்குச் செல்லாமல் இருக்கமுடியும் என்று எனக்குத் தெரியவில்லை. அரசியலைவிட்டு விலகுவதாக எனக்கு எண்ணமே கிடையாது. ஆகவே அரசாங்கத்தோடு மோதவேண்டி வரும் என்று உணர்ந்துகொண்டேன். எந்த நிமிஷத்திலும், "ஒன்றைச் செய்யவேண்டும், அல்லது மற்றொன்றைச் செய்யக்கூடாது" என்று ஒரு உத்தரவு என்பேரில் சாதரா செய்யப்படலாம். எதையும் செய்ய நான் கட்டாயப்படுத்தப்பட்டால்,அதைப் பூரா பலம் கொண்டு எதிர்க்க எண்ணுவதுதான் என்னுடைய இயற்கையாகும்.இந்தியாவின் மக்களைப் பயமுறுத்தி அடக்க முயற்சி நடந்துகொண்டு வந்தது. இந்திய ஜனங்களுக்கு ஊக்கம் அளிக்கக்கூடிய நிலைமையில் நான் இல்லை. பொதுவாக, எல்லோரையும் கூட்டி எதிர்க்கச் செய்யும் நிலையிலும் நான் இல்லை. ஆனால் என்மட்டிலும், என்னைப் பயமுறுத்தி அடக்கி ஆளமுடியாமல் நான் பார்த்துக்கொள்ளலாமல்லவா?

நான் மீண்டும் சிறைக்குச் செல்லுமுன் சில விஷயங்களைக் கவனிக்க விரும்பினேன். என்னுடைய தாயாரின் சுகவீனத்துக்காக ஏதேனும் செய்யவேண்டியது என்னுடைய முதற் கடமையாகும். அவர் மிகவும் மெதுவாக குணமடைந்து வந்தார். ஒரு வருஷம் வரையிலும் அவர் படுக்கையில் இருந்தார். பூனாவில் தமது கடைசி உண்ணாவிரதத்திலிருந்து தேறிக்கொண்டு வந்த காந்திஜீயைச் சந்திக்க எனக்கு ஆவல். அவரைச் சந்தித்து இரண்டு வருஷங்களுக்கு மேல்ஆயிற்று. என்னுடைய மாகாணத் தோழர்களில் எத்தனை பேர்களைச் சந்திக்க முடியுமோ அத்தனை பேர்களையும் சந்தித்து, இந்தியாவின் அப்போதைய அரசியல் நிலைமையை மட்டும் அல்ல, உலக நிலைமையையும் என்னுடைய உள்ளத்தில் நிறைந்து கிடந்த எண்ணங்களையும் கலந்து பேச எண்ணினேன். அப்பொழுது அரசியலிலும், பொருளாதாரத் துறையிலும் உலகமே எங்கேயோ போய் மோதிக்கொள்ளப் போவதாக

நான் நினைத்தேன். ஆகவே, நம்முடைய தேசியத் திட்டங்களை வகுக்கும்போது, உலக நெருக்கடியையும் கவனித்துச் செய்யவேண்டும் என்பது என் எண்ணம்.

என்னுடைய குடும்ப சங்கதிகளும் என்னுடைய கவனத்தை இழுத்தன. இதுவரையிலும் அவைகளை நான் கொஞ்சங்கூட கவனிக்கவே இல்லை. என் தகப்பனார் இறந்த பிறகு அவர் வைத்துவிட்டுப்போன தஸ்தவேஜுகளை நான் சோதிக்கக் கூட இல்லை. எங்களுடைய செலவை நாங்கள் எவ்வளவோ குறைத்துக் கொண்டோம். இருந்தாலும் தற்போதைய செலவு கூட எங்களுடைய சக்திக்கு மீறியதாக இருந்தது. எங்களுடைய வீட்டில் நாங்கள் குடியிருக்கும் வரையிலும் எங்கள் செலவை இன்னும் குறைப்பதற்கு சாத்தியப்படாது. எங்களுடைய சக்திக்கு மீறியதென்றும் எந்த நிமிஷத்திலும் அரசாங்கத்தார் அதை ஜப்தி செய்யக் கூடுமென்றும் நாங்கள் மோட்டார் கார் வைத்துக்கொள்ளவில்லை. நாட்டிலோ பொருளாதார மந்தம் அதிகம். எனவே, பண ஒத்தாசை செய்யும்படியாக எனக்கு கட்டுக்கட்டாக கடிதங்கள் வந்து குவிந்தன. (கண்காணிப்பவர் இந்தக் கடிதங்களை மட்டும் நிறுத்திவிடாமல் அப்படியே அனுப்பி வந்தார்) நான் ஒரு பெரிய தனவந்தன் என்ற தவறான எண்ணம் பொதுவாக இந்தியாவில் இருந்து வருகிறது. இந்த எண்ணம் சிறப்பாக தென்னிந்தியாவிலே தான் அதிகம்.

எனக்கு விடுதலையானதும் என்னுடைய சிறிய தங்கை கிருஷ்ணாவுக்குக் கலியாணம். என்னைக் கட்டாயப்படுத்தி சிறைக்குக் கொண்டுபோகு முன்னரே, கலியாணத்தை முடித்துவிட வேண்டுமென்று ஆவல்பட்டேன். கிருஷ்ணாவோ, தனது தண்டனையை அனுபவித்துவிட்டு இரண்டொரு மாதங்களுக்கு முன்னே தான் சிறையிலிருந்து வெளியே வந்திருந்தாள்.

ஒரு வகையாகத் தாயாரின் உடம்பு குணமானதும், நான் பூனாவுக்குப் போய் காந்திஜீயைப் பார்த்தேன். அவரை மீண்டும் பார்ப்பதில் எனக்கு சந்தோஷம். அவர் பலவீனமாயிருந்தாலும் கொஞ்சம் கொஞ்சமாகத் தேறிக்கொண்டு

வந்தார். நாங்கள் பல சமயங்களில் நீண்ட நேரம் சம்பாஷணை செய்தோம். வாழ்க்கை, அரசியல், பொருளாதாரம் முதலியவைகளில் எங்களிருவருக்குள்ளும் மகத்தான வேற்றுமைகள் இருந்தது வெளியாயிற்று. ஆனல் என்னுடைய நோக்கத்துக்கு ஒத்து வர காந்திஜீ மன விசாலத்துடன் முயற்சிசெய்ததற்காக நான் அவருக்கு மிகுதியும் கடமைப்பட்டிருக்கிறேன். பிறகு எங்கள் கருத்துக்கள் கடித உருவமாகப் பிரசுரம் செய்யப்பட்டன. என்னுடைய கருத்துக்கள் பொதுப்பட குறிப்பிடப்பட்டிருந்தாலும் அதில் கண்ட திட்டம் தெளிவானதுதான்.

பரம்பரை உரிமைகள் பரிசோதிக்கப்பட் அந்த உரிடு மைகளை எல்லோருக்கும் கொடுக்கவேண்டும் என்று காந்திஜீ சொன்னதில் எனக்குச் சந்தோஷம். இதை அமுலுக்குக் கொண்டு வருவதில் பலாத்காரத்தை உபயோகப்படுத்தக் கூடாது என்றும் மனமாறுதலால்தான் காரியத்தைச் செய்யவேண்டுமென்றும் அவர் வற்புறுத்திக் கூறியிருக்கிருர். அவரது மனமாற்ற முறைகள் சில சமயங்களில் மரியாதையான பலாத்காரமாக இருக்கின்றன என்று எனக்குத் தோன்றுகிறபடியால் அந்த வித்தியாசம் எனக்குப் பெரிதாகப்படவில்லை. மோகமாக தெளிவில்லாமல் எதையும் யோசிப்பதற்கு காந்திஜீ உடன்படுவதே இல்லை. ஆனல் ஒன்றன்பின் ஒன்ருய் நிகழ்ச்சிகள் நடைபெறுவதைக் கண்டு காந்திஜீ தமது மனதை மாற்றிக்கொண்டு புரட்சித் தன்மை கொண்ட ஜன நிர்மாணத் திட்டத்துக்கு இணங்குவார் என்று இதற்கு முன் தோன்றியதுபோல இந்தச் சம்பாஷணை காலத்திலும் எனக்குத் தோன்றிற்று.

காந்திஜீ ஒரு விநோதமான பேர்வழி. வெர்ரீர் எல்வின் சொன்னதுபோல அவர் நடுக் காலத்து கத்தோலிக்க சாது வைப்போன்றவர். ஆனல் கர்மவீரர். எப்பொழுதும் இந்திய விவசாயிகளின் நாடியைப் பிடித்துப் பார்த்துக்கொண்டே இருப்பார். நெருக்கடி காலத்தில் அவர் எந்தப் பக்கம் சாய்வார் என்று நிச்சயமாகச் சொல்வது கஷ்டமாகும். ஆனல் அவர் எந்தப் பக்கம் சாய்ந்தாலும் அது மகத்தான வேற்றுமையை உண்டாக்கி விடும். நாங்கள் நினைக்கிறபடி அவர் தவருன பாதையில் செல்லலாம். ஆனல் அது நேரடியான பாதையாகத்தானிருக்கும். அவருடன் சேர்ந்து

மைப்பது எப்பொழுதுமே நேர்த்தியாக இருக்கும். ஆனல் தேவை யேற்பட்டால் பிறகு வெவ்வேறு பாதைகளில் செல்லவேண்டியதாய் ஏற்படலாம்.

தற்போது இந்தக் கேள்வி எழுவில்லையென்று நான் எண்ணினேன். நாம்நமது தேசியப் போராட்டத்தின் நடுவே இருந்தோம். அது நபர் சட்டமறுப்பாக மாற்றப்பட்டாலும் சட்ட மறுப்பே இன்னும் காங்கிரஸின் திட்டம் ஆகும். சட்டமறுப்பை நடத்திக்கொண்டே சென்று ஜனங்களுக்குள் அபேதவாத எண்ணங்களைப் பரப்ப வேண்டும். முக்கியமாக அரசியலுணர்ச்சி பெற்ற காங்கிரஸ் ஊழியர்களுக்குள் அபேதவாதக் கொள்கைகளைப் பரப்பவேண்டும். ஏனென்ருல் சமயம் வரும்பொழுது நம்முடைய லக்ஷியத்தில் இன்னெரு அடி முன்னே எடுத்து வைக்க நாம் தயாராய் இருப்போம். ஆனல் இப்பொழுதோ காங்கிரஸ் சட்டம் மீறிய அமைப்பாக இருக்கின்றது. அதை நசுக்க பிரிட்டிஷ் அரசாங்கத்தார் முயற்சி செய்து வருகின்ருர்கள். அந்தத் தாக்குதலை நாம் எதிர்த்துப் போராட வேண்டும்.

காந்திஜீ உடனே பரிகாரம்தேட வேண்டியிருந்த முக்கியமான பிரச்னை தாம் என்னசெய்வது என்பதுதான், அவர் ஒரு சுழலில் அகப்பட்டது போலிருந்தார். மீண்டும் அவர் சிறைக்குச்சென்ருல் "ஹரிஜன பிரசார உரிமைகள்" என்ற அதே பிரச்னை எழும். அநேகமாக அந்த உரிமைகளை அளிக்க அரசாங்கத்தார் இணங்க மாட்டார்கள். மறுபடியும் அவர் உண்ணுவிரத மிருக்கவேண்டி வரும். மீண்டும் அதே சக்கரத்தைச் சுற்றிக்கொண்டு வருவதா? இந்த எலி-பூனைச் சண்டைக்கு உடன்பட காந்திஜீ தயாராக இல்லை. அந்த உரிமைகளுக்காக தாம் மீண்டும் உண்ணுவிரத மிருப்பதாயிருந்தால், அந்த விரதம் தாம் விடுதலையடைந்தாலும், அநுஷ்டிக்கப்படும் என்று அவர் சொன்னர். அதாவது, மரண பரியந்தம் உபவாசம் என்று அர்த்தம். (இது ஒரு வழி)

இரண்டாவது வழி என்னவென்ருல், அவருடைய ஒரு வருஷ தண்டனையில் பாக்கியிருந்த பத்தரை மாத காலத்திற்குள், மீண்டும் சிறை செல்லாமல் அந்தக் காலத்தை அவர் ஹரிஜன வேலைக்கு செலவிடலாம் என்பதாகும்.

ஆனால் அதே காலத்தில் அவர் காங்கிரஸ் ஊழியர்களைச் சந்தித்து, தேவையானபொழுது அவர்களுக்கு யோசனை சொல்லலாம்.

மூன்றாவது யோசனையாக அவர் என்னிடம் ஒன்று சொன்னார். தாம் சிறிது காலம் காங்கிரசைவிட்டு அறவே விலகிக்கொண்டு அதை "இளம் வாரிசு"களிடம் ஒப்புவிக்க வேண்டும் என்பதாகும்.

முதல் யோசனைப்படி மரணம் நிச்சயம். ஆகவே அதை எவரும் ஒப்புக்கொள்ளமுடியாது. காங்கிரஸ் சட்டம் மீறிய கூட்டமாகக் கருதப்பட்டிருக்கையில் காந்திஜீ, காங்கிரசை விட்டு விலகிக்கொள்ளுவது என்ற மூன்றாவது யோசனை மிகவும் விரும்பத்தகாததென்று தோன்றிற்று. அதனால் சட்டமறுப்பும் நேர்முறையான போராட்டங்கள் யாவும் நின்றுபோய், காங்கிரஸ் சட்டவரம்புக்குட்பட்ட கிளர்ச்சிப் பாதையில் செல்ல நேரலாம். அல்லது இப்பொழுது காந்திஜீயிடமிருந்துகூட காங்கிரஸ் ஒதுங்கிப்போய், சட்டம் மீறிய கூட்டம் என்ற நிலையில் அது, அரசாங்கத்தால் இன்னும் கொடுமையாக அடக்கப்படலாம். மேலும் பலர் கலந்துயோசிக்க முடியாத நிலைமையில் சட்டம் மீறிய ஒரு ஸ்தாபனத்தை எந்தக் கூட்டமும் ஏற்று நடத்துவதென்பதும் முடியாத காரியமாகும்.

இவ்வாறு ஒவ்வொன்றாக ஒதுக்கித்தள்ளிவிட்டு அவர் சொன்ன இரண்டாவது யோசனைக்கு வந்து சேர்ந்தோம். எங்களில் பலருக்கு அந்த யோசனை பிடிக்கவில்லை. பாக்கி இருக்கும் சட்டமறுப்புத் திட்டத்திற்கும் அதனால் பெரிய பங்கம் நேரிடுமென்று எங்களுக்குத் தெரியும். தலைவரே போராட்டத்திலிருந்து விலகிக்கொண்டால்உற்சாகத்துடன் பல காங்கிரஸ் ஊழியர்கள் போராட்டத் தீயில் குதிக்கப் போகிறார்களா? ஆனால் சுழலிலிருந்து வெளியேற வேறு வழியில்லை போல் தோன்றிற்று. எனவே இரண்டாவது யோசனைக்குத் தகுந்தாற்போல் காந்திஜீ தமது அறிவிப்பை வெளியிட்டார்.

சட்டமறுப்பை வாபஸ் வாங்கிக்கொள்ளுவதற்கு இது தருணமல்லவென்றும், வேகம் தணிந்த நிலையிலும் அதை

நாம் நடத்திக்கொண்டு செல்லவேண்டுமென்றும் காந்திஜீயும் நானும் வெவ்வேறு காரணங்களைக்கொண்டு முடிவுக்கு வந்தோம். மற்றபடி ஜனங்களின் கவனத்தை அபேதவாதக் கொள்கைகளுக்கும் உலக நிலைமைக்கும் மாற்றி இழுக்கவேண்டும் என்று நான் விரும்பினேன்.

திரும்புகையில் பம்பாயில் சில நாட்கள் தங்கினேன். நல்லவேளையாக, அங்கே உதயசங்கரைச் சந்தித்தேன். அவருடைய நர்த்தனத்தையும் பார்த்தேன். இது ஒரு எதிர்பாராத விருந்து ஆகும். அதை நான் மிகுதியும் அனுபவித்தேன். நாடகங்கள், சங்கீதம், சினிமா பேசும் படங்கள், ரேடியோ முதலிய யாவையும் நான் அனுபவித்து வெகு ஆண்டுகள் ஆயின. என்னுடைய விடுதலைக் காலங்களில்கூட வேறு அலுவல்களில் கவனம் அதிகம். இதுவரையிலும் ஒரே ஒரு தடவைதான் பேசும் படத்துக்குப் போயிருக்கிறேன். சினிமா நக்ஷத்திரங்களின் பெரிய பேர் வழிகளை பெயரளவிலேதான் எனக்குத் தெரியும். நாடகங்களுக்குப் போகாததில் எனக்குக் கொஞ்சம் வருத்தம்தான். அந்நிய நாடுகளில் புதிது புதிதாக நாடகங்கள் தோன்றிவருகின்றன என்று அடிக்கடி படித்து பொறுமைப்படுவேன்.

வட இந்தியாவில், நான் சிறைக்கு வெளியே இருந்த காலத்திலும் நல்ல நாடகங்களைக் காண சந்தர்ப்பமே இல்லை. ஏனென்றால், பார்க்கும்படியான நல்ல நாடகங்களே இருக்கவில்லை. வங்காளி, குஜராத்தி, மராத்தி நாடகங்கள் கொஞ்சம் முற்போக்கு அடைந்திருப்பதாக நான் எண்ணுகிறேன். ஹிந்துஸ்தானி நாடகம் அந்த அளவுக்குக்கூட இன்னும் வரவில்லை. அவைகள் இன்னும் தெருக்கூத்து மயமாகவும் அவலட்சணமாகவும் இருக்கின்றன. இந்திய சினிமாப் படங்களில் பெரும்பான்மை நன்றாயில்லை என்று கேள்விப்படுகிறேன். பழைய புராணக் கதைகளிலிருந்தோ அல்லது பண்டை இந்திய. சரித்திரத்திலிருந்தோ படங்களுக்குக் கதைகள் எடுத்து சங்கீதக்கூத்தாக அடித்து வருகிறார்கள்.

நகரத்தில் வசிப்பவர்களுக்கு எது ருசியோ அந்த ருசிக்கேற்றவாறு இந்தப் படங்கள் எடுக்கப்படுகின்றன. இந்தப் படங்கள் அவலட்சணமானவை. இந்தத் துக்ககரமான காட்சிகளைக் காட்டினும் கொப்பி கொட்டிப்பாடும்

கிராமப் பாட்டுகளும் கிராமத் தெருக்கூத்தும்கூட மிக உயர்ந்தவையாகும். வங்காளத்திலும், குஜாராத்திலும் தெற்கேயும் கிராமத்தார்களிற் பெரும்பான்மையோர் தங்களை அறியாமலே கலையுணர்ச்சிபெற்றிருக்கிறார்கள். அதைக் கண்டு ஆச்சரியமடைய வேண்டியிருக்கிறது. ஆனால் நடுத்தர வகுப்பார்களுக்கு இத்தகைய உணர்ச்சி இல்லை. அவர்கள் தங்களுடைய பரம்பரையை இழந்து விட்டு, தங்களுக்கென்று சொந்தமான கலா சம்பிரதாயமில்லாதவர்போல் வாழ்கின்றார்கள். ஜெர்மனியிலும், ஆஸ்திரியாவிலும் மூட்டை மூட்டையாக அச்சடித்து வரும் அவலட்சணமான, மலிவான படங்களைக்கண்டு இந்தியர்கள் ஆனந்தப்படுகிறார்கள். சில சமயங்களில் ரவிவர்மாப் படங்கள் வாங்குவதே அவர்களின் கலைஞானத்திற்கு உயர்ந்த அறிகுறி.

இவர்களுக்குப் பிடித்த வாத்தியக் கருவி ஹார்மோனியம் ஆகும். (ஸ்வராஜ்யம் வந்ததும் இந்த அநியாய ஹார்மோனியத்தைத் தொலைக்க முதல்முதலிலே சட்டம் செய்ய வேண்டுமென்பது என் ஆசை.) ஆனால், சித்திரக் கலைக்குச் சிறிதுகூட ஒவ்வாமல் எல்லாவிதமான அவலக்ஷணங்களையும் லக்ஷ்மணபுரியிலும், வேறு இடங்களிலும் வசிக்கும் பெரிய தாலுக்தார்களின் வீடுகளில் காணலாம். செலவழிக்க அவர்களிடம் பணம் இருக்கிறது. டம்பமாக இருக்க வேண்டும் என்ற ஆசை அவர்களிடம் இருக்கிறது. எனவே அவர்கள் அந்த மாதிரி செய்கிறார்கள். தாலுக்தார்கள் தங்களுடைய இந்த ஆசையைப் பூர்த்தி செய்துகொண்டு தங்கள் வாழ்க்கையை நடத்துகையில், அதைப்பார்த்து ஜனங்கள் துக்கப்பட வேண்டியதாயிருக்கிறது.

சமீபகாலமாக சித்திரக் கலையின் மறுமலர்ச்சி ஏற்பட்டிருக்கிறது. இந்த மறுமலர்ச்சிக்குக் காரணஸ்தர்கள் தாகூர் குடும்பத்தார்கள். இந்த மறுமலர்ச்சியின் வேகத்தை இந்தியா முழுதும் இப்பொழுது காணலாம். நாட்டின் ஜனங்கள் எல்லாவகைகளிலும் அடக்கி ஒடுக்கித் துன்புறுத்தப்பட்டு, அச்ச உணர்ச்சியிலேயே வாழ்ந்து கொண்டிருக்கையில் எந்தக் கலை செழிப்பாக வளர முடியும்?

பம்பாயில் பல நண்பர்களையும், தோழர்களையும் சந்தித்தேன். அவர்களிற் சிலர், அப்பொழுதுதான் சிறையிலி

ருந்து வெளியே வந்திருந்தார்கள். அவர்களில் பெரும்பான்மையோர் அபேதவாதிகள். சமீபத்தில் நேர்ந்த நிகழ்ச்சிகளைப்பற்றி, காங்கிரஸ் ஊழியர்களின் மேல்தர வகுப்பார்களுக்குள் மிகுந்த ஆத்திரம் இருந்து வந்தது. வேதாந்தத்தையும், அரசியலையும் காந்திஜீ இணைக்கப் பார்க்கிறார் என்று அவர்கள் காந்திஜியைக் கடுமையாகக் கண்டித்தார்கள். அவர்களுடைய கண்டனத்தின் பெரும்பகுதியை நானும் ஒப்புக்கொண்டேன். ஆனால் "நாம் தற்போதிருக்கும் நிலையில் நமக்கு வேறு வழிகிடையாது; இருப்பதை ஏற்றுக் கொண்டுதான் போகவேண்டும்" என்று எனக்குத் தெளிவாகத் தோன்றிற்று. சட்டமறுப்பை வாபஸ் வாங்குவதால் நமக்கு சௌகரியம் ஒன்றும் ஏற்படப்போவதில்லை. ஏனென்றால் அரசாங்கத்தின் அடக்குமுறை நடைபெற்றுக் கொண்டுதானிருக்கும். பயன்தரும் வேலையைச் செய்தால் கண்டிப்பாக சிறைசெல்ல நேரிடும்.

நம்முடைய தேசிய இயக்கம் இப்பொழுது வளர்ந்து வந்திருக்கிற நிலையில் அதை அரசாங்கத்தார் அடக்கியாக வேண்டும். இல்லாவிட்டால் நமது இயக்கம் தன்னுடைய வலிமையை பிரிட்டிஷ் அரசாங்கத்தின் பேரில் காண்பித்து, தன் காரியத்தைச் சாதித்துக் கொள்ளும். அதாவது நம்முடைய இயக்கம் எப்பொழுதும் சட்டம் மீறியது என்று அரசாங்கத்தார் அறிவிக்கவேண்டிய நிலைமைக்கு வந்துவிட்டது. எனவே சட்டமறுப்பு வாபஸ் வாங்கிக் கொள்ளப்பட்டாலும் இயக்கம் தன்மைமாறி உள்ஒடுங்கிப்போக முடியாது. சட்டமறுப்பை நீடிக்கச் செய்வதால், அனுபவத்தில் வித்தியாசம் ஒன்றும் ஏற்படாது. ஆனால் ஏதேச்சாதிகாரம் எதிர்க்கப்பட்டது என்ற உணர்ச்சியினால் சட்டமறுப்புக்கு ஒரு பயன் உண்டு. போராட்டம் நடந்து கொண்டிருக்கையில் புதிய கருத்துக்களைப் பரப்புவது எளிதாகும். போராட்டம் நிறுத்தப்பட்டு சீர்குலைவு தோன்றுமாகில், அவ்வளவாகப் புதுக்கருத்துகளைப் பரப்பமுடியாது. போராட்டத்துக்கு ஒரே ஒரு மாற்றுதான் உண்டு. பிரிட்டிஷ் ஆட்சியை எதிர்க்காமல் சட்ட சபைகளுக்குள் சட்ட வரம்புக்குட்பட்ட வேலையைச் செய்வதுதான்.

இந்த கஷ்டமான நிலைமைக்கு மாற்றுக் கண்டுபிடிப்பது எளிதல்ல, என்னுடைய தோழர்களின் மனவேதனை

களை நான் உணர்ந்தேன்; மதித்தேன். ஏனென்றால், அதே வித வேதனைகள் எனக்கும் உண்டு. ஆனால் பம்பாயில், நான் இந்தியாவில் வேறு பகுதிகளில் கண்டதுபோல ஒன்றைக் கண்டேன். சிலர் தீவிரமாக சமதர்மக் கொள்கைகளைப் பிரசாரம் செய்து கொண்டு, யாதொரு வேலையும் செய்யாததற்கு அதையே காரணமாகச் சொன்னார்கள். தாங்கள் ஒன்றும் செய்யாமலே, கடுமையான போராட்டத்தின் நடுவே நின்று பொறுப்பை யேற்றுக்கொண்டு நடத்தியவர்களைப் பிற்போக்காளர்கள் என்று கூசாமற் கூறும் ஜனங்களைக் காணும்பொழுது எனக்குக் கொஞ்சம் ஆத்திரமாகத்தான் இருக்கிறது. இந்த அறையிலாடும் அபேதவாதிகள் காந்திஜீயை முதல் நம்பர் பிற்போக்காளர் என்று கண்டிக்கிறார்கள். தர்க்க சாஸ்திரப்படி கட்சி சொல்லுகிறார்கள். கட்சியைக் கேட்டால் பொருத்தமாயிருப்பதாகக்கூடத் தோன்றும். ஆனால் ஒரு சின்ன விஷயம் மாத்திரம் தெளிவாக நிற்கிறது. இந்தப் பிற்போக்குப் பேர்வழியோ இந்தியாவை நன்றாக உணர்ந்திருக்கிறார். அவருக்கு இந்தியா நன்றாகத் தெரிகிறது. அநேகமாக அவர்தான் விவசாய இந்தியா. எந்தப் புரட்சிக்காரனும் இதுவரையிலும் செய்யாத அளவில் அவர் இந்தியாவைக் கலக்கி விட்டிருக்கிறார். அவருடைய சமீபகாலத்து ஹரிஜன் அலுவல்களும் வைதிக ஹிந்து மதத்தைச் சாந்தமாக ஆனால் இணையில்லாத வலுவுடன் தகர்த்தெறிந்து அதனுடைய அஸ்திவாரங்களையே ஆட்டிவிட்டன.

வைதிகக்கூட்டம் முழுதும் அவருக்கு விரோதமாகச் சேர்ந்துகொண்டது. தங்களுடைய மிகவும் அபாயகரமான எதிரியென்று வைதிகக் கூட்டம் அவரைக் கருதுகிறது. ஆனால் அவரோ ரொம்ப மரியாதையுடனும் சாந்தத்துடனும் அந்தக் கூட்டத்துடன் நடந்து கொள்ளுகிறார். அவருடைய தனிமுறையால் மூல சக்திகளைக் கிளப்பிவிடும் வல்லமை அவருக்கு இருக்கிறது. நீரின்பேரில் அலைகள் மோதி மோதி நீளப்பரவுவதுபோல் இந்த மூலசக்திகள் கோடிக்கணக்கானவர்களைப் பாதிக்கின்றன. பிற்போக்குப் பேர்வழியோ, புரட்சிக்காரரோ அவர் எதுவாயிருந்தாலென்ன? அவர் இந்தியாவின் தன்மையையே மாற்றி விட்டார். பல்லைக்காட்டி சீர்குலைந்து வாழ்ந்த மக்களுக்கு கவுரவத்தைத்தந்து நடைநேர்மையையும் அளித்தார். பாமர

மக்களிடம் சக்தியையும், தன்னம்பிக்கை யுணர்ச்சியையும் உண்டாக்கிவிட்டார். இந்தியப் பிரச்னையை உலகப் பிரச்னையாக மாற்றி விட்டார். சாத்விக ஒத்துழையாமையின் லக்ஷியங்களும், அதனுடைய பரலோக நோக்குகளும் ஒருபுறமிருக்க அந்தவழி ஓர் ஒப்பற்ற தனி வழியாகும். அது அவர் இந்தியாவுக்கும் உலகத்துக்கும் உவந்து அளித்த வல்லமை பொருந்திய சாதனமாகும். அந்த வழி சிறப்பாக இந்தியாவின் நிலைமைக்கு மிகவும் பொருத்தமானதென்பதில் சந்தேகமே இல்லை.

நல்ல முறையில் எக்கொள்கையையும் ஆலோசனைசெய்யும் பழக்கத்தையும் விருத்தி செய்துகொள்ள வேண்டியது அவசியமாகும். கூடுமான வரையில் நம்முடைய பிரச்னைகளைப் பகிரங்கமாக ஆராய்ச்சி செய்து வாதம் செய்ய வேண்டும். காந்திஜீயின் அளவற்ற செல்வாக்கினால் இத்தகைய பகிரங்கவாதத்திற்கு இடமில்லாமல் போனது துர்ப்பாக்கியமாகும். எதற்கும் அவரே முடிவு செய்ய வேண்டுமென்று விட்டுவிடும் மனப்பான்மை பரவி விட்டது. இது தவறு. லக்ஷ்யங்களையும் முறைகளையும் தெளிவாக ஆராய்ந்து கொண்டு வினையாற்றினால்தான் நாடு முன்னே செல்ல முடியும். நாட்டின் முற்போக்குக்கு மக்களுக்குள் ஒத்துழைப்பும் கட்டுப்பாடும் இருக்க வேண்டும். லட்சியங்களையும் உபாயங்களையும் அறிந்து தெளிந்த கட்டுப்பாடு வேண்டும்; குருட்டுத்தனமாக கீழ்ப்படியும் குணம் கூடாது.

ஒருவர் எவ்வளவு உயர்ந்தவராயிருந்தபோதிலும் அவருடைய கொள்கைகளைப்பற்றி வாதம் செய்யக்கூடாது என்ற எண்ணமே இருக்கக் கூடாது. ஆனால் வாதமானது செயலற்று சோம்பலாயிருப்பதற்கு வெறும் சாக்காகப் போய்விட்டால் அந்தக் கண்டனத்தில் ஏதோ தவறு இருக்கிறது. இத்தகைய கண்டனத்தில் விளையாடுகிற அபேதவாதிகளை பொதுஜனங்கள் கண்டிக்காமல் இருக்கமாட்டார்கள், ஏனென்றால் பொதுமக்கள் ஒருவரை செயல்களின் மூலமாகத்தான் மதிப்பிடுகின்றார்கள். "எதிர்காலத்தில் நயமான வேலைகள் இருக்கின்றனவென்று கனவு கண்டு இன்றைய கடுமையான வேலைகளைச் செய்யாமல் சோம்பிக் கிடப்பவன் சமயோசித வாதியாகின்றான். வாழ்க்கையில் நேரும் உண்மையான மாறுதல்களைக் கவனித்து வேலைசெய்யாமல்

கனவை நினைத்துக் கொண்டு அந்த மாறுதல்களினின்றும் தன்னை விலக்கிக்கொண்டு சம்பந்தப்படாமல் சும்மா இருத்தல் என்பது அதற்குப் பொருளாகும்" என்று லெனின் சொல்லுகிறார்.

தொழிற்சாலைகளில் வேலை செய்யும் தொழிலாளிகள் சம்பந்தமாக எழுதப்பட்டிருக்கும் நூல்களைக் கொண்டு இந்திய அபேதவாதிகளும் சமதர்மிகளும், தங்கள் வேலைத்திட்டங்களை ஏற்படுத்திக் கொள்ளுகிறார்கள். பம்பாய், கல்கத்தா முதலிய சில குறிப்பிட்ட பிராந்தியங்களில் ஆலைத் தொழிலாளர்கள் ஏராளமாக இருக்கிறார்கள். ஆனால் இந்தியாவின் மற்றைய பகுதிகளில் விவசாயிகள்தான் வாழ்கின்றார்கள். ஆகவே, இந்தியப் பிரச்னையை ஆலைத்தொழிலாளர்களைக் கொண்டு யோசிக்கும் பாஷையையும் திட்டத்தையும் வைத்துக்கொண்டு தீர்த்துவிட முடியாது. இந்தியாவில் முக்கியமாக கவனிக்கப்பட வேண்டியவைகள் தேசீயமும் கிராமப்புனருத்தாரணமும் தான். ஐரோப்பிய அபேதவாதத் திட்டம் இவைகளைப்பற்றி சரியாக ஆராய்ச்சி செய்யவில்லை.

சென்ற ஐரோப்பிய யுத்தத்துக்கு முன், ருஷியாவிலிருந்த நிலைமைகளும் இந்தியாவில் இப்பொழுதிருப்பதும் அநேகமாக ஒன்றுதான். ஆனால் ருஷியாவில் அசாதரணமான, எதிர்க்கமுடியாத பல நிகழ்ச்சிகள் நேர்ந்தன. அதே மாதிரி வேறு எங்கேயும் நேரவேண்டுமென்று எதிர்பார்ப்பது அபத்தமாகும். சமதர்ம தத்துவத்தால், எந்த நாட்டிலிருக்கும் நிலைமைகளையும் அறிந்து, ஆராய்ச்சி செய்யமுடியுமென்றும், அதன்மூலமாக எதிர்கால முற்போக்குக்கு பாதையைக் காணமுடியுமென்றும் நான் உறுதியாக நம்புகிறேன். ஆனால் நிலைமைகளையும் நிகழ்ச்சிகளையும் சரிவர கவனிக்காமல், குருட்டுத்தனமாக அந்தத் தத்துவத்தைப் பிரயோகம்செய்வது அந்தத் தத்துவத்துக்கு நியாயம்செய்ததாக ஆகாது.

வாழ்க்கையோ மிகவும் ஒரு சிக்கலான சங்கதி. வாழ்க்கையின் போராட்டங்களையும் முரண்களையும் கண்டு, சில சமயங்களில் ஏக்கம் கொள்ள வேண்டியதாயிருக்கிறது. ஜனங்களுக்குள் அபிப்பிராய பேதமிருப்பது வியப்பிற்குரியதே அல்ல. பிரச்னைகளைத் தீர்ப்பதற்கு பொதுவான சாத

ளங்களைக் கைக்கொள்ளும் தோழர்கள் கூட மாறுபட்ட முடிவுகளுக்கு வரலாம். இதைப்பற்றியும் ஆச்சரியப்படத் தேவையில்லை. தன்னுடைய சொந்த பலவீனத்தை, சத்தம் நிறைந்த வாக்கியங்களிலும் உயர்ந்த கொள்கைகளிலும் வைத்து மறைக்க முயற்சி செய்கிற பேர்வழியைப்பற்றி ரொம்பவும் சந்தேகப்படவேண்டும். அரசாங்கத்துக்கு ஒப் பந்தமோ வாக்குறுதியோ கொடுத்துவிட்டு, அல்லது வேறு சந்தேகாஸ்பதமான செயலால் சிறைக்குச் செல்லாமல் தப் பித்துக்கொண்டு, மற்றவர்களைக் கண்டிக்க அசட்டுத் தைரி யம் கொள்ளுகிறவன், தான் பிரசாரம் செய்யும் கட்சிக்குத் தீமையைத்தான் செய்யமுடியும்.

பம்பாய் ஒரு மிகப் பெரிய நகரம். அதிலே பல ரக மான ஜனங்கள் வாழ்ந்து வருகிறார்கள். அந்தப் பல ரகங் களில், முக்கியஸ்தரொருவர் இருக்கிறார். அவர் தமது அர சியல், பொருளாதார, ஜனநிர்மாண, மத மனப்பான்மையில் மிகவும் தாராளத் தன்மைகொண்டு வாழ்கின்றார்! அவர் தொழிலாளர்களுக்குத் தலைவர் என்ற ஹோதாவில் தம்மை அபேதவாதி என்று சொல்லிக் கொள்ளுவார். அரசியலில் அவர் ஜனநாயக வாதி! ஹிந்துமகாசபைக்கு மிகவும் வேண் டியவர். பழைய ஆசாரங்களையும், மதச் சடங்குகளையும் சட்டசபைகள் மாற்றாமல் பார்த்துக்கொள்ளுவதாக அவர் ஹிந்து மகாசபைக்கு வாக்குக் கொடுத்தார். தேர்தல் காலத்தில் சநாதனிகளின் சார்பாக அபேக்ஷகராய் நின்றார். இத்தகைய விநோதமான மாறுபட்ட மனப்பான்மையும் அலுவல்களும் போதாதென்று பாக்கி இருந்த ஊக்கத்தைக் கொண்டு அவர் காங்கிரசைக் குறைகூறி, காந்திஜீ பிற்போக் காளர் என்று கண்டித்தார். இதனிடையே இரண்டொரு வர்களைச் சேர்த்துக் கொண்டு, காங்கிரஸ் ஜனநாயகக்கக்ஷி யென்று ஒன்றை ஆரம்பித்தார். அந்தக் கக்ஷிக்கும் ஜனநாய கத்துக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை. அந்தக் கக்ஷி காங்கிரசைத் திட்டுவதிலேதான், அதற்கும் காங்கிரசுக்கும் தொடர்பு. இத்தனையும் போதாதென்று புதிய களங்களை நாடி, அவர் ஜினிவா தொழில் மகாநாட்டுக்கு தொழிலாளர் பிரதிநிதியாகவும் போய்ச் சேர்ந்தார். ஆங்கில நாட்டில் நேர்ந்ததுபோல, "தேசிய அரசாங்கத்துக்கு" முதல் மந்திரி யாக ஆவதற்கு இவர் தம்மைப் பயிற்சி செய்து கொண்டு வருகிறார் போலும்!

இவரைப்போல மற்றவர்களுக்கு இவ்வளவு விநோத மான அலுவல்களால் ஏற்பட்ட சௌகர்யம் இருக்கமுடியாது. இருந்தாலும் காங்கிரசைக் குறை கூறுபவர்களில் மேற்சொன்ன கனவானைப்போல் பல களங்களிலும் பயிற்சி பெற்று எல்லாவற்றிலும் ருசிபார்த்துக்கொண்டிருந்த பெரியார்கள் பலர் இருந்தனர். இவர்களில் சிலர் தங்களை அபேத வாதிகளென்று சொல்லிக் கொண்டார்கள். இவர்களால் அபேதவாதத் திட்டத்துக்கு கெட்ட பெயர்தான் என்று சொல்லவும் வேண்டுமா?

## LI

## மிதவாத மனப்பான்மை

காந்திஜீயைப் பார்க்க நான் பூனுவுக்குச் சென்றிருந்த பொழுது ஒருநாள்மாலையில் அவரோடுகூட இந்திய ஊழியர் சங்கத்தின் விடுதிக்குப்போயிருந்தேன். சங்கத்தின் அங்கத்தினர்களிற் சிலர் அரசியல் விஷயங்களைப்பற்றி காந்திஜீயை ஒரு மணி நேரம்வரையில் கேள்வி கேட்டார்கள். காந்திஜீ அவைகளுக்குப் பதில் சொன்னார். சங்கத்தின் தலைவரான திரு. ஸ்ரீனிவாசசாஸ்திரி அங்கே இல்லை. மற்றைய அங்கத்தனர்களுக்குள் மிகவும் திறமைசாலியான பண்டிட் ஹிருதயநாத் குன்ஸ்ரூ அவர்களும் அப்பொழுது அங்கே இல்லை. ஆனால் சில முக்கிய அங்கத்தினர்கள் பிரசன்னமாயிருந்தார்கள். அந்தச் சந்தர்ப்பத்தில் அங்கே இருந்த நாங்கள் இந்தக் கேள்விகளையெல்லாம் ஆச்சரியத்தோடு கேட்டுக் கொண்டே இருந்தோம். ஏனென்றால் கேட்ட கேள்விகள் எல்லாம் அற்ப சங்கதிகளைப்பற்றியே கேட்கப்பட்டன. "தாங்கள் வைசிராயோடு பேட்டி கேட்டீர்களே? அதை வைஸ்ராய் மறுத்துவிட்டாரே" 'என்பதையே சுற்றிச்சுற்றி அவர்கள் கேள்விகேட்டு தகவல்களை விரும்பினார்கள்.

இவை முக்கியமான விஷயங்களா? இந்த உலகத்திலே இப்பொழுது எத்தனை பிரச்னைகள் நிறைந்து நிற்கின்றன? தங்களுடைய தேசத்திலேயே ஒரு கடுமையான விடுதலைப் போராட்டம் நடந்து நூற்றுக்கணக்கான ஸ்தாபனங்கள் சட்டம் மீறியவையென்று அறிவிக்கப்பட்டது அவர்களுக்குத் தெரியாதா? விவசாய நெருக்கடியாலும், தொழில் மந்தத்தாலும் நாடு முழுதும் வேலையில்லாத் திண்டாட்டம் பரவிநிற்கின்றது. வங்காளத்திலும், எல்லைப்புற மாகாணங்களிலும், இந்தியாவின் வேறு பகுதிகளிலும் கருத்து சுதந்தரம், பேச்சு சுதந்தரம், எழுத்து சுதந்தரம், கூடும் சுதந்தரம் முதலியவைகள் பறிமுதல் செய்யப்பட்டு கொடுமையான நிகழ்ச்சிகள் நேர்ந்துகொண்டிருக்கின்றனவே! இதைத்

தவிர இன்னும் எத்தனையோ நாட்டுப் பிரச்னைகளும் உலகப் பிரச்னைகளும் இருக்கவில்லையா? ஆனால் அவர்கள் கேட்ட கேள்விகள் எல்லாம் முக்கியமில்லாத நிகழ்ச்சிகளைப்பற்றியே ஆகும். காந்திஜீ அரசாங்கத்தை ராஜிக்கு நெருங்கிப் பார்த்தால் வைசிராயும் இந்திய அரசாங்கத்தாரும் எத்தகைய மனப்பான்மையில் இருப்பார்கள் என்பதைப்பற்றித்தான் அவர்கள் தொணதொணவென்று கேட்டார்கள்.

நான் ஏதோ ஒரு மடத்துக்குள் நுழைந்துவிட்டதாகத் தோன்றிற்று. வெளி யுலகத்துக்கும் தங்களுக்கும் துளிக்கூட நீண்டகாலமாகத் தொடர்பு இல்லாத துறவிகள் வாழுமிடத்துக்கு நான் வந்ததாகத் தோன்றிற்று. இருந்தாலும் இந்த நண்பர்கள் தற்போதும் அரசியல் வாதிகள்; கெட்டிக்காரர்கள்; தேசத்துக்கு நீண்டகாலமாக உழைத்து வந்திருக்கிறார்கள். மிதவாதக் கட்சிக்கு இவர்களும் மற்றும் சிலரும்தான் முதுகெலும்பைப் போன்றவர்கள். இந்தக் கட்சியைச் சேர்ந்த மற்றவர்கள் வெறும் பேர்வழிகள். அவர் தங்களுக்கும் அரசியல் கிளர்ச்சிக்கும் சம்பந்தம் உண்டு என்று காண்பித்துக் கொள்வதற்காக கட்சியில் சேர்ந்து கொண்டவர்கள். பம்பாயிலும், சென்னையிலும் இருக்கும் இந்தக் கக்ஷியின் அங்கத்தினர்களுக்கும், அரசாங்க அதிகாரிகளுக்கும் வேற்றுமையே இல்லையென்று சொல்லலாம்.

ஒரு நாடு தன்னைத்தானே கேட்டுக்கொள்ளும் கேள்விகளைப் பொறுத்து அந்த நாட்டின் அரசியல் வளர்ச்சியை அளந்துவிடலாம். ஒரு நாடு அரசியல் முற்போக்கில் வளரவில்லை யென்றால், அது தனக்குத்தானே சரியான கேள்வியைப்போட்டுக் கொள்ளவில்லையென்று அநேகமாகச்சொல்லி விடலாம். நாம் நம்முடைய காலத்தையும், ஊக்கத்தையும், ஆத்திரத்தையும் வகுப்புவாரியாக சட்டசபை ஸ்தானங்களை எவ்வாறு பிரிப்பது என்பதிலே வீணாக செலவழித்து வருகின்றோம். அல்லது வகுப்புத் தீர்ப்பை யொட்டி கட்சிகளை அமைப்பதில் ஈடுபடுகிறோம். அல்லது ஜீவாதாரமான பிரச்னைகளையே கருத்தில் கொள்ளாமல் வகுப்புவாதத்தைப் பற்றி சாரமில்லாத வம்புப் பேச்சு பேசுகிறோம். இவைகளினால் எல்லாம் நம்முடைய அரசியல் பிற்போக்கு வெளியாய் விடுகின்றது. இதே முறையில், அன்றைக்கு இந்திய ஊழியர்

சங்கத்தில் காந்திஜீயைக் கேட்ட கேள்விகளைக் கவனித்துப் பார்த்தால், அவைகள் அந்த சங்கத்தினுடையவும் மிதவாதக் கக்ஷியினுடையவும் விநோதமான மனப்பான்மையின் பிரதிபிம்பங்களாகத் தோன்றின. அரசியலிலும் பொருளாதாரத்துறையிலும் அவர்களுக்கு கொள்கைகளும் பரந்த நோக்கும் இல்லை போலத் தோன்றிற்று. அவர்களுடைய அரசியல், திண்ணை வம்பாகவும் "அரண்மனை இனமாகவும்" இருப்பதாகத் தோன்றிற்று. அதாவது, அவர்களுடைய கவனமெல்லாம் உயர்தர அதிகாரிகள் என்ன செய்வார்கள் அல்லது செய்யமாட்டார்கள் என்பதைப்பற்றித்தான்.

"மிதவாத நடுநிலைமைக் கட்சி" என்ற பெயரினால் யாருக்கும் சந்தேகம் ஏற்படக் கூடும். இந்த வார்த்தைகளுக்கு மற்றைய நாடுகளில், முக்கியமாக இங்கிலாந்தில், குறிப்பிட்ட அர்த்தமும் திட்டமும் உண்டு. நடு நிலைமை கட்சி யென்றால் கடற் சுங்கவரியில்லாத வியாபாரம், நபர் சுதந்திரம், பொதுவான உரிமைகள் எதுவும் தானாக வளர வேண்டும் என்ற அர்த்தங்களைக் கொடுக்கின்றது. ஆங்கில தாராளக் கட்சியாரின் திட்டம், பொருளாதாரத்துறையை அடிப்படையாகக் கொண்டதாகும். அரசனுக்கு ஏகபோக உரிமை இல்லாமல், எதேச்சாதிகாரத்துடன் வரிவசூல் செய்யாமை முதலியவைகளுக்காகவும், வியாபாரத்தில்சுதந்திரத்துக்காகவும் உழைக்க எண்ணுவதால் அரசியல் சுதந்திரத்துக்கும் ஒரு ஆசை ஏற்பட்டது. ஆனால், இந்திய மிதவாதிகளுக்கு இத்தகைய அஸ்திவாரம் ஒன்றுமே இல்லை. அவர்களுக்கு சுதந்திர வியாபாரத்தில் நம்பிக்கையில்லை. அவர்கள் சுங்கப் பாதுகாப்பில் நம்பிக்கை கொண்டவர்கள். நபர் சுதந்திரத்தைப்பற்றி அவர்களுக்குக் கவலையே இல்லை யென்பது சமீபகால நிகழ்ச்சிகளினின்றும் வெளியாகி விட்டது.

அவர்கள் யதேச்சாதிகாரத்துடன் நடத்தப்பெறும் இந்திய சமஸ்தானங்களோடு நெருங்கிப் பழகி அவைகளின் ஆட்சியைப் பொதுவாக ஆதரிக்கிறார்கள். இந்த சமஸ்தானங்களில் ஜனநாயகத்தையும், நபர் சுதந்திரத்தையும் கனவிலே கூடக் காணமுடியாது. இதை ஆதரிக்கும் இந்திய மிதவாதிகள் ஐரோப்பிய மிதவாதிகளினின்றும் எவ்வளவு மாறுபட்டவர்கள்! உண்மையிலேயே, இந்திய தாராளக் கட்சியார்

எந்த வகையிலும் தாராளமுள்ளவர்களே அல்ல. அவர்கள் எந்த இனத்தைச் சேர்ந்தவர்கள் என்று அவர்களைப்பற்றி திட்டமாக ஒன்றுமே சொல்ல முடியாது. அவர்களுக்கு அஸ்திவாரமான கருத்துகள் இல்லை. அவர்கள் சிறுகூட்டமாயிருந்தாலும், ஒருவருக்கும் மற்றவருக்கும் ஏராளமான அபிப்பிராய பேதம் உண்டு. ஒன்றைச் செய்யக் கூடாது என்று சொல்லுவதிலேதான் அவர்கள் சாமர்த்தியசாலிகள். எல்லா இடங்களிலும் தவறுதான் அவர்களுடைய கண்களில் படுகின்றது. ஆகவே அவைகளுடன் சேராமல் ஒதுங்கி நிற்க முயற்சிசெய்கிறார்கள். இவ்வாறு செய்வதால் தாங்கள் உண்மையைக் கண்டுவிடலாம் என்று அவர்கள் ஆசையுடன் இருக்கிறார்கள். இரண்டு எதிரான கொள்கைகளுக்கு நடுவே நிற்பதுதான் உண்மையாகும் என்பது அவர்களுடைய பிடிவாதமான கருத்தாகும்.

தீவிரமென்று தாங்கள் கருதுவதையெல்லாம் அவர்கள் கண்டித்து விட்டு தாங்கள் நல்லவர்கள் என்றும், நிதானஸ்தர்களென்றும், யோக்கியர்களென்றும் எண்ணிக்கொள்ளுகிறார்கள். இந்த முறை மிகவும் சௌகரியமானதாகும். எதையும்பற்றிக் கடுமையாக யோசிக்க வேண்டிய நிர்ப்பந்தமே அவர்களுக்கு ஏற்படாதல்லவா? மேலும் நிர்மாணத்துக்குவேண்டிய யோசனைகளைச் சொல்லவேண்டிய பொறுப்பும் அவர்களை விட்டு நீங்கி விடுகிறதல்லவா? ஐரோப்பாவிலே, முதலாளித்தத்துவம் வெற்றிபெறவில்லை யென்பதோடு நிற்காமல் அதற்கு ஆபத்து வந்துகொண்டிருக்கிறது என்றும் இவர்களிற் சிலர் சிறிதளவு உணர்ந்துவிட்டார்கள். ஆனால் அபேதவாதமும் கெடுதல்தான். ஏனென்றால் அது சாசுவத உரிமைகளைத் தாக்குகின்றதல்லவா? இவ்வாறு அவர்கள் நினைத்துக் கொள்ளுகிறார்கள். ஏதோ எதிர்காலத்தில் இதற்கு சூக்ஷ்மமான பரிகாரம் ஏற்படலாமென்றும் அதுவரையிலும் உரிமைகளையும் முதலாளித் தத்துவத்தையும் காப்பாற்றி வரவேண்டுமென்றும் அவர்கள் எண்ணிக்கொண்டிருக்கலாம். பூமி உருண்டையா, தட்டையா என்று வாதம் நேர்ந்தால் "உருண்டையுமில்லை, தட்டையுமில்லை. நீங்கள் இருவரும் சொல்லுவது தவறு. ஒருக்கால் பூமி சதுரமாக இருக்கலாம் அல்லது கோணல் வடிவாக இருக்கலாம்" என்று மிதவாதிகள் தங்கள் நிதான புத்தியைக் கொண்டு மத்தியஸ்தமாக யோசனை சொல்லவும் கூடும்.

முக்கியமில்லாத, அற்ப விஷயங்களுக்காக அவர்கள் (மிதவாதிகள்) பரபரப்பு அடைந்து விடுகிறார்கள். ஆச்சரியப் படத்தக்க அளவில், அவர்கள் "ஹாஹா" என்று அவை களைப்பற்றி சத்தம் போடுகிறார்கள். தெரிந்தோ தெரியா மலோ, மூலாதாரமான பிரச்னைகளைப்பற்றி சிந்தனை செய் யாமல் அவைகளை ஒதுக்கி வைத்து விடுகிறார்கள். ஏனென் றால், இத்தகைய பிரச்னைகளுக்கு புரட்சித்தன்மை கொண்ட பரிகாரம் வேண்டும். செயலிலும் கருத்திலும் தைரியம் வேண்டும். எனவே மிதவாதிகளின் ஜயமும், தோல்வியும் அற்பமாகவே இருக்கும். அவைகளினால் பயனொன்று மில்லை. அவர்களுடைய வெற்றியும், தோல்வியும் யாதொரு கொள்கையையும் தழுவியதல்ல, அந்தக்கட்சியின் முக்கிய மான தன்மை, சிறப்பான அம்சம், என்னவெனில் நல்லதி லும் சரி, கெட்டதிலும் சரி ஒரே நிதானம். இது ஒருவித மனப்பான்மை. இந்தத் தாராளக் கட்சிக்காரர்களுக்கு "மிதவாதிகள்" என்று பழைய பெயர் உண்டு; மிகவும் பொருத்தமான பெயர்.

மிதவாதம் எவ்வளவு சௌகரியமான தன்மையாயி ருந்தாலும், அது ஒரு ஒளி பொருந்திய குணமே அல்ல. மிதவாதத் தன்மையினால் ஒருவித மந்தம் ஏற்பட்டுவிடு கிறது. எனவே, இந்திய மிதவாதிகள் "மந்தப்பட் டாள" மாய் ஆகிவிட்டார்கள். அவர்க்ள் தோற்றத்திலே "இடித்த புளி" மாதிரி இருக்கிறார்கள். எழுத்திலும் பேச்சி லும் மந்தம். அவர்களிடம் நகைச் சுவையே கிடையாது. அவர்களுக்குள்ளும் விதிவிலக்காக சிலர் இருக்கிறார்கள். அவர்களில் சிறந்தவர் ஸர் தேஜ் பகதூர் சப்ரூ. சப்ரூ அவர் கள் நகைச் சுவையில் குறைந்தவர் அல்ல; மந்தமான பேர் வழியும் அல்ல. அவரையே கேலி செய்தாலும் அது நல்ல கேலியாயிருந்தால் அவர் அதை மிகுதியும் ரஸிப்பார்.

ஆனால் மொத்தத்தில் மிதவாதிகள் மந்தநடைப்போக்கு கொண்ட சில்லரை முதலாளிக் கூட்டத்தைச் சேர்ந்தவர் கள். அலகபாத் "லீடர்" பத்திரிகை மிதவாதிகளின் முக்கிய மான பத்திரிகையாகும். சென்ற ஆண்டில் ஆசிரியக் குறிப்பு ஒன்று அந்தப்பத்திரிகையில் காணப்பட்டது. அந்தக் குறிப் பினால் மிதவாதிகளின் தன்மை வெளியாயிற்று. அசாதர்ண மான மனிதர்களாலும், மகான்களாலும் உலகத்துக்கு எப்

பொழுதுமே துன்பம் தான் நேர்ந்திருக்கிறதென்றும், ஆகவே மகான்களைக்காட்டிலும் சாதாரண மனிதர்கள்தான் விரும்பத்தக்க பேர்வழிகளென்றும் அந்தக் குறிப்பில் கூறப் பட்டிருக்கிறது. கொஞ்ச அறிவு இருந்தால் போதும் என்று கொடி பறக்க விட்டுக் கொண்டு, பட்டவர்த்தனமாக அது சொல்லி விட்டது.

நிதானம் ஒருவகை வைதிகம். ஆபத்துக்களையும் அதி தீவிர மாறுதல்களையும் விரும்பாத தன்மை. இவைகள் முதுமைப் பருவத்தின் தவிர்க்க முடியாத லட்சணமாகும். இந்தத் தன்மைகள் இளைஞரிடம் இருக்குமாயின் அது அவ் வளவு பொருத்தமானதல்ல. ஆனால், நம்முடைய நாடோ பழம் பெரும் நாடு! ஆகவே, அதன் குழந்தைகள் அலுத்து, சளைத்துப்போய், ஒளி மங்கி, முதுமைப் பருவத்தின் அடையாளங்களை உடலிலும் உள்ளத்திலும் தாங்கிக் கொண்டு பிறக்கின்றன போலும்! ஆனால், இந்த பழம் பெரும் நாட்டிலும் இப்பொழுது மாறுதல் சக்திகள் நட மாடி, அதை ஆட்டி வைக்கின்றன. இதைக்கண்டு மிதவாதி கள் திகைத்துப்போகின்றனர். பழைய உலகம் மாறிப் போய்க் கொண்டிருக்கிறது. மிதவாதிகள் எவ்வளவோ இனிமையாயும் அருமையாயும் மாறுதல் வேண்டாமென்று சொல்லித்தான் பார்க்கிறார்கள். அதனால் யாதொரு வித்தி யாசமும் ஏற்படவில்லை. இதை விட்டுவிட்டு, அவர்கள் புய லோடும், வெள்ளத்தோடும், பூகம்பத்தோடும் வாதம் செய்து மிதவாதம் பேசலாம்.

அவர்களுடைய பழைய கொள்கைகளால் அவர்களுக் குப் பயன் உண்டாகவில்லை. புதுக் கருத்துகளையும், புதுச் செயல் முறைகளையும் தேடிக்காண அவர்களுக்குத் துணிவு இல்லை. ஐரோப்பியப் பரம்பரையைப்பற்றி டாக்டர் ஏ.என். வொயிட் ஹெட் சொல்லும்பொழுது "ஒவ்வொரு தலை முறையும் அந்தத் தலைமுறையின் தகப்பனார் வாழ்ந்துவந்த அதே நிலைமைகளுக்குள் வாழ்ந்து, அந்த நிலைமைகளை வலுக் குறையாமல் தன்னுடைய பின் சந்ததியார்களுக்கும் விட்டு விட்டுச் செல்லமுடியும் என்று அசட்டுத்தனமாக எண்ணுவ தில் இந்தப் பரம்பரை முழுதும் அடங்கியிருக்கிறது. ஆனால், நாம் இப்பொழுது வாழுகிற இந்தக் காலத்தில் மேற்கூறிய எண்ணம் முதன்முதலாக, மனித வர்க்கத்தின் சரித்திரத்தி

லேயே அடியோடு பொய்யாகி விட்டது" என்று எழுது கிறார். டாக்டர் வொயிட்ஹெட் அவர்கள் தமது ஆராய்ச்சி யில் நிதானத்தைக் கைக்கொண்டு தவறு செய்து விட்டார். ஏனென்றால் இந்தக் காலத்தில் மட்டுமல்ல, எந்தக் காலத்தி லுமே பரம்பரையைப்பற்றிய எண்ணம் உண்மையானதல்ல.

ஐரோப்பியப் பரம்பரை மிதவாதத் தன்மைகொண்ட தென்றால் நம்முடையது இன்னும் எவ்வளவு அதிகமாக மிதவாதத்தன்மை படைத்திருக்கவேண்டும்? ஆனால் மாறு தலுக்குக் காலம் வரும்பொழுது, சரித்திரத்தின் போக்கு இந்தப் பரம்பரைகளை துளிக் கூட லட்சியம் செய்வதே இல்லை. நிகழ்ச்சிகளின் போக்கைத் தடுக்க முடியாமல், திக் கற்ற நிலைமையில் பார்த்துக்கொண்டிருந்து நம்முடைய திட் டங்கள் தோற்றுப்போகுமானால், நாம் பிறரைப் பழிகூறு கின்றோம். இதைப்போல ஏமாற்றம் வேறு எதுவுமே இல்லை. "இது ஒரு பயங்கரமான ஏமாற்றமாகும். ஒரு திட் டம் தோற்றுப் போகுமானால், அது யோசனைக் குறைவால் ஏற்பட்ட தவறினால் உண்டாகவில்லை யென்றும் வேறு யாரோ ஒருவர் வேண்டுமென்றே அந்தத்திட்டத்தைஉடைத் தெறிய முயற்சி செய்ததால் ஏற்பட்டதென்றும் தன்னைத் தானே ஏமாற்றிக்கொள்ளும் தன்மை இதுவாகும்" என்று ஜெரால்டு ஹெர்டு குறிப்பிடுகிறார்.

நாம் எல்லோருமே இத்தகைய பயங்கரமான ஏமாற் றத்தில் சிக்கிக் கொண்டு துன்புறுகின்றோம். காந்திஜீ கூட இதினின்றும் விடுபட்டவரல்லவோ என்று நான் சில சம யங்களில் எண்ணியிருக்கிறேன். ஆனால், நாங்கள் சும்மா இராமல் ஏதாவது காரியம் செய்து வாழ்க்கையில் தொடர்பு விட்டுப்போகாமல் நடந்து கொள்ளுகிறோம். சோதனையினு லும், தவறு செய்வதாலும், இந்த ஏமாற்றத்தின் பிடிப் பைக் குறைத்துக்கொண்டு, மேலே தட்டித்தடுமாறி நடந்து செல்லுகிறோம். ஆனால், மிதவாதிகளோ இந்த ஏமாற்றத் தால் ஏனையோரைக் காட்டிலும் மிகவும் வருத்தமுறுகின்ற னர். ஏனென்றால் தவறாக காரியத்தைச் செய்து விடுவார் களோ என்ற அச்சத்தினால் அவர்கள் ஒன்றுமே காரியம் செய்வதில்லை. விழுந்து விடுவார்களோ என்ற அச்சத்தினால் அவர்கள் நகருவதே இல்லை. அவர்களுக்கும் பொது ஜனங் களுக்கும் பசையான தொடர்பே கிடையாது. அவர்கள்

தங்களுடைய் மனக் கோட்டைகளுக்குள் ஸ்தம்பித்துப் போய் உட்கார்ந்து கொண்டிருக்கிறார்கள். சும்மா கைகட்டிக் கொண்டு நிகழ்ச்சிகளைப் பார்த்துக் கொண்டிருக்கலாகாது என்று ஸ்ரீமான் சீனிவாச சாஸ்திரி அவர்கள் ஒன்றரை வருஷத்துக்குமுன்பு தமது சகோதர மிதவாதிகளுக்கு எச்சரிக்கைசெய்தார். அவர் எவ்வளவு உணர்ந்து சொன்னாரோ, அதைக்காட்டிலும் அதிகமான உண்மை அந்த எச்சரிக்கையில் இருந்தது.

அரசாங்கத்தார் என்ன செய்கிறார்கள் என்பதைப் பற்றி எப்பொழுதுமே யோசிப்பவரானதால் பலவேறு உத்தியோகக் கமிட்டிகளால் ஆக்கப்பட்டுவரும் அரசியல் திட்ட மாறுதல்களைப்பற்றித்தான் அவர் குறிப்பிட்டார். ஆனால், மிதவாதிகளின் துர்ப்பாக்கியம் யாதெனில், அவர்களுடைய சொந்த நாட்டார்களே முன்னேறிச் சென்றுகொண்டிருக்கையில், அவர்கள் சும்மா நின்றுகொண்டு விஷயங்களில் கலந்துகொள்ளவில்லை. அவர்களுக்கு தங்களுடைய சொந்த பொதுஜனங்களிடத்தில் அச்சம். நம்மை ஆளுகிறவர்களோடு சண்டை போட்டுக்கொள்வதைக் காட்டிலும், பொது ஜனங்களிடமிருந்து விலகி வாழ்வது உசிதமானது என்று அவர்கள் எண்ணம் கொண்டார்கள். எனவே, தங்களுடைய சொந்த நாட்டிலேயே, அவர்கள் அந்நியர்களைப் போல ஆனதில் ஆச்சரியமே இல்லை. வாழ்வு நடந்து கொண்டே இருக்கிறது. ஆனால், அவர்களோ இருந்த இடத்திலேயே இருக்கிறார்கள்.

வாழ்க்கைக்காகவும், சுதந்திரத்தின் பொருட்டும் அவர்களுடைய நாட்டார்கள் கடுமையான போராட்டங்களை நடத்திக்கொண்டிருக்கையில், மிதவாதிகள் எந்தக் கட்சியில் நின்று கொண்டிருந்தார்கள் என்பதைப்பற்றி சந்தேகமே இல்லை. எதிரியின் கட்சியிலே நின்று கொண்டு அவர்கள் நமக்கு நேர்த்தியான புத்திமதி சொன்னார்கள். அந்த யோசனையில் தர்மோபதேசம் நிறைந்து கிடந்தது. அவர்கள் பிரிட்டிஷ் அரசாங்கத்தோடு வட்டமேஜை மகாநாடுகளிலும், கமிட்டிகளிலும் ஒத்துழைத்தது அரசாங்கத்தாருக்கு பேராதரவாக இருந்தது. அவர்கள் ஒத்துழைக்க மறுத்திருந்தால் மகத்தான வித்தியாசம் ஏற்பட்டிருக்கும். இந்த மகாநாடுகள் ஒன்றிலிருந்து பிரிட்டிஷ் தொழிற்கட்சி

கூட விலகிநின்றது குறிப்பிடத்தக்கது. ஆனால் நம்முடைய மிதவாதிகளோ "நீங்கள் ஒத்துழைக்க வேண்டாம்" என்று சில பிரிட்டிஷார்கள் அவர்களைக் கேட்டுக் கொண்ட போதிலும் இங்கிலாந்துக்குப் போய் ஒத்துழைத்தார்கள்.

நாம் எல்லோரும், பல விஷயங்களில் பலவேறு படித்தரங்களில் மிதவாதிகளாகவும் தீவிர வாதிகளாயும் இருக்கிறோம். எதையாவது ஒன்றைப்பற்றி போதுமான அளவு கவலை யெடுத்துக்கொண்டால் அதைப்பற்றி வலுவான உணர்ச்சியுடன் இருக்கத்தான் வேண்டும்; அதாவது, தீவிரவாதியாகத் தான் இருக்கவேண்டியிருக்கும். இல்லாவிட்டால் அழகான பொறுமையோடு, தத்துவ ரீதியான நிதானத்தோடு நாம் இருக்கலாம். அது நம்முடைய கவலையற்ற தன்மையை மறைக்கப் பார்ப்பதாகும். நாட்டிலிருக்கும் சில பரம்பரை பாத்தியங்களைத் தொலைத்து விட வேண்டுமென்று ஒரு யோசனை கூறப்பட்டால் அப்பொழுது மிதவாதிகளுக்குள் சாந்தமானவர்கள் கூட, மிகத் தீவிர வாதிகளாக ஆகிவிடுவதை நான் பார்த்திருக்கிறேன். நம்முடைய மிதவாத நண்பர்கள் ஓரளவில் பணக்காரக் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள்.

அவர்கள் ஸ்வராஜ்யத்துக்காக நீண்ட காலம் காத்திருக்கலாம். அதைப்பற்றி அவசரப்பட்டு அவர்கள் பரபரப்படைய வேண்டியதில்லை. ஆனால், ஜன நிர்மாணத்தில் தீவிர மாறுதல் வேண்டுமென்று யாரேனும் யோசனை கூறினால், அது அவர்களை மிகுதியும் கலக்கி விடுகின்றது. அப்பொழுது அவர்கள் தங்கள் நிதானத்தையும் இனிமையான வாதத்தையும் இழந்துவிடுகிறார்கள். ஆகவே, அவர்களுடைய மிதவாத மெல்லாம் பிரிட்டிஷ் அரசாங்கம் சம்பந்தப்பட்ட வரையிலும் தான். பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு உடந்தையாக இருந்து, மரியாதையாக நடந்துகொண்டால், அந்த நடத்தைக்குப் பரிசாக தாங்கள் சொல்லுவதை அரசாங்கத்தார் கேட்கக்கூடுமென்று அவர்கள் ஆசையுடன் இருக்கிறார்கள். ஆனால், எப்பொழுதுமே இவர்கள் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் சொல்வது சரியென்று ஒப்பம் வைக்கவேண்டி வந்துவிடுகிறது. இவர்களுடைய வார்த்தைகள் அரசாங்கத்தாரின் செவியில் ஏறுவதில்லை.

இவர்கள் அரசாங்க தஸ்தவேஜுகளை விடாமல் படிக்கிறார்கள். "பார்லிமெண்டு நடவடிக்கை" என்று எர்ஸ்கின்

மே எழுதிய நூலையும், அதைப்போலொத்த புஸ்தகங்களையும் சதா இவர்கள் கையில் வைத்துக் கொண்டிருப்பார்கள். அரசாங்கம் புதிதாக ஒரு யதாஸ்தை வெளியிட்டால் அதைப்பற்றி பரபரப்பு அடைந்து விடுவார்கள்; யோசிக்கத் துவங்கி விடுவார்கள்; இங்கிலாந்திலிருந்து திரும்பிவரும் மிதவாதத் தலைவர்கள் வொயிட் ஹாலிலிருக்கும் பெரியார்களின் செயல்களைப்பற்றி மூடுமந்திர அறிவிப்புகள் விடுவிப்பார்கள். லண்டன் ஒயிட்ஹால்தான் மிதவாதிகளும், பரஸ்பர ஒத்துழைப்பாளர்களும், இவர்களைப் போன்ற ஏனைய கூட்டத்தாரும் மதிக்கும் காசி க்ஷேத்திரமாகும். நல்ல அமெரிக்கர்கள் இறந்துபோனால் அவர்களுடைய ஆவி பாரிஸ் நகரத்துக்குச் செல்லும் என்று பண்டைக்காலங்களில் சொல்லுவதுண்டு. நல்ல மிதவாதிகளின் ஆவியும் ஒயிட்ஹால் கட்டிடத்துக்குள் சில சமயங்களில் உலவினாலும் உலவலாம்!

மிதவாதிகளைப் பற்றி நான் இவ்வளவு எழுதுவது காங்கிரசிலிருக்கும் நம்மில் பலருக்கும் பொருத்தமானதுதான். மிதவாதிகளையே நிதானத்தில் வெகு தூரம் வென்றுவிட்ட பரஸ்பர ஒத்துழைப்பாளர்களுக்கு என் கருத்து இன்னும் அதிகமாகப் பொருத்தமானது. சராசரி மிதவாதிக்கும், சராசரி காங்கிரஸ்காரனுக்கும் இடையே மகத்தான வித்தியாசம் இருக்கின்றது. ஆனால், அவர்கள் நடுவே இருக்கிற கோடு தெளிவாகவும் திட்டமாகவும் தெரியவில்லை. கருத்து சம்பந்தப்பட்டவரையிலும் தீவிர மிதவாதிக்கும், மிதவாத காங்கிரஸ்காரனுக்கும் அதிகமாக வித்தியாசம் இல்லை. ஆனால் காந்திஜீயின் நன்முயற்சியால் ஒவ்வொரு காங்கிரஸ்காரனும் மண்ணோடு ஒட்டிக்கொண்டு நாட்டு ஜனங்களுடன் ஏதேனும் ஒருவகையில் சம்பந்தம் வைத்துக்கொள்ள வேண்டியதாயிற்று. மேலும், காங்கிரஸ்காரன் செயலில் ஈடுபட்டுவிட்டான். திட்டமான கருத்துகள் இல்லாமையால் ஏற்படும் சில தீய பலன்களிருந்து காங்கிரஸ்காரன் செயலில் ஈடுபட்டதால் தப்பித்துக் கொண்டான். ஆனால் மிதவாதிகள் அவவாறு தப்பித்துக் கொள்ள முடியவில்லை. அவர்களால் பழைய கருத்துக்களோடும் இருக்கமுடியவில்லை. புதுக்கருத்துக்களை ஏற்றுக்கொள்ள முடியவுமில்லை. அவர்கள் சிறிது சிறிதாக நசித்துவரும் வர்க்கத்தைச் சேர்ந்தவர்களாவர்.

நம்மில் பெரும்பான்மையோருக்கு பழைய பரம்பரையுணர்ச்சி போய் விட்டது. புதிய பார்வையும் உண்டாகவில்லை. அமார் தூதன் சமரநாதன் கடலிலிருந்து ஆர்த்தெழும்காட்சி நம்மில் எத்தனைபேருக்குக் கிடைக்கும்? "மணல் துளியில் அண்டத்தைக் காணவும், காட்டுமலரில் சுவர்க்கத்தைப்பார்க்கவும், உள்ளங்கையில் அண்ட பகிரண்டத்தையும் அடக்கி வைக்கவும், ஒருமணி நேரத்துக்குள் அழியாக் காலத்தை அடக்கும் ஆற்றலும் நம்மில் எத்தனைபேருக்கு உண்டு? துரதிர்ஷ்டவசமாக நம்மில் பலருக்கு இயற்கையின் சூட்சும உயிரை உணரவும், அந்த உயிர் நமது காதுகளில் இரகசியம் ஓதுவதைக் கேட்பதற்கும், அந்த உயிரின் வாடைபட்டு தேகம் பரவசமாகி ஆனந்தமடைவதற்கும் பாக்கியம் கிடையாது. அந்த நாட்கள் சென்று விட்டன. நாம் முன்பு பார்ப்பதுபோல் இயற்கையின் உண்மைக் கம்பீரயத்தைப் பார்க்க முடியாவிட்டாலும், மனிதவர்க்கத்தின் போராட்டத்திலே அதைக் காண முடியும். மனிதவர்க்கத்தின் வெற்றியிலும், தோல்வியிலும் அதனுடைய வல்லமை பொருந்திய கனவுகளிலும், உள்புயல்களிலும் அதன் வேதனைகளிலும் துயரங்களிலும், அதன் போராட்டங்களிலும், துக்கத்திலும் உண்மையைக் காணமுடியும். மனிதவர்க்கத்தின் கனவுகள் யாவும் நனவுகளாக மாறி, அதன் மகத்தான லட்சியம் கைகூடப் போகின்றது என்ற நம்பிக்கையுடன் நாம் உழைக்கலாம்.

இந்தச் சத்திய ஆராய்ச்சியில் பலர் மனமுடைந்து போகலாம். என்றாலும் இந்த சோதனையேதான் நமக்கு மகத்தான லாபமாகவும் விளங்குகின்றது. இந்தச் சோதனையினால்தான் நாம் வாழ்க்கையின் அற்பத்தனத்திலிருந்து விடுபட்டு மேநிலைக்குச் செல்லுகின்றோம். ஆனால் நம்மில் பலர் இந்தச் சத்திய சோதனையை மேற்கொள்ளவே இல்லை. பண்டைய முறைகளிலிருந்து அவர்கள் தங்களை அடியோடு முறித்துக்கொண்டு விட்டார்கள். தற்போது வழிநடப்பதற்கு புதுப் பாதையையும் அவர்களால் காணமுடியவில்லை. அவர்கள் கனவு காண்பதுமில்லை; வினையாற்றுவதுமில்லை. பெரிய பிரஞ்சு ருஷிய புரட்சிகளைப்போன்ற மனித வர்க்கத்தின் அதிர்ச்சிகளைப்பற்றி எதையுமே தெரிந்து கொள்ளவில்லை. நீண்டகாலமாக அடக்கி வைக்கப்பட்டிருந்த மனித ஆசைகள் திடீரென்று கொடுமையுடன் சிக்கல் தன்மைகொண்டு

மேலெழுந்துவரும்பொழுது அவைகளைக் கண்டு இவர்கள் திகிலடைகின்றனர். மிதவாதிகளுக்கு விடுதலைக் கதவு இன்னும் திறக்கப்படவில்லை.

தேசபக்தி காங்கிரஸ்காரர்களின் தனித்த உரிமையில்லையென்று அடிக்கடி ஆத்திரத்துடன் சொல்லப்படுகிறது. முதலில் சொன்னபொழுது அதை ரஸிக்கலாம்போல் இருந்தது. ஆனால் அதே வாக்கியம் திருப்பித் திருப்பி சொல்லப்படும்பொழுது காது புளித்துப் போகிறது. தேசபக்தி தங்களுடைய ஏகபோக உரிமை என்று எந்தக் காங்கிரஸ்காரரும் எண்ணியிருக்கமாட்டார் என்றே எனக்குத் தோன்றுகிறது. உண்மையாகவே,அது காங்கிரஸின் தனித்த உரிமையுமல்ல. இந்த ஏகபோக உரிமையை வேறு யார் வைத்துக் கொண்டாலும் எனக்கு சம்மதமே. தேசபக்தி என்பதைக்கொண்டு பலர் சமயோசிதமாக நடந்துகொண்டு தங்களுக்கு செல்வமும், செல்வாக்கும் தேடிக்கொள்ளுகிறார்கள். தேசபக்தியிலே பல ரகங்கள் இருக்கின்றன. எல்லா ருசிகளுக்கும், எல்லா உரிமைகளுக்கும், எல்லா வகுப்பாருக்கும் ஏற்கும்படியாக பல ரகங்கள் தேசபக்தியில் காணப்பெறுகின்றன. (ஏசுநாதரைக் காட்டிக்கொடுத்த) ஜூடாஸ், இன்றைக்கு உயிரோடிருப்பானாகில் அவனும் தேசபக்தியின் பெயராலேயே துரோகம் செய்திருப்பான். இனி தேசபக்திமட்டும் இருந்தால் போதாது. விசாலமானதும் கம்பீரமானதுமான ஒரு உணர்ச்சியும் இனித் தேவை.

நிதானம் மட்டும் இருந்தால் போதாது. அடக்கம் நல்லதுதான். அடக்கம் என்பது நமது நாகரிகத்தின் ஒரு அளவுகோல் ஆகும். அந்த அடக்கத்தின் பின்னே அடக்கிக் கட்டுப்பாட்டில் வைத்துக் கொள்ளுவதற்கு ஏதாவது முரட்டுத்தனமான உணர்ச்சி இருந்தால்தானே? "கந்துக மதக்கரியை வசமாய் நடத்தலாம்; கரடி வெம்புலி வாயையும் கட்டலாம்; வெந்தழலினில் இரசம் வைத்து ஐந்து லோகத்தையும் பேதித்து விற்றுண்ணலாம்; வேறொருவர் காணாமல் உலகத்துலாவலாம்; விண்ணவரை யேவல் கொள்ளலாம்; ஒரு சிங்க முதுகின் மேற்கொள்ளலாம்; கட்செவியெடுத்தாட்டலாம்; கனல் மேலிருக்கலாம்; ஜலமேல் நடக்கலாம்; ஆனால் "சிந்தையை யடக்கியே சும்மா இருக்கும் திறமரிது." உள்ளத்தினூடே ஊசலாடும் வெறிகளை மனி

தன் அடக்கியாளும் வரையில் அவன் சம்பூரண மனிதனாக, ஒருநாளும் ஆகமுடியாது. ஆனால் நகராத கால்களையும், மரத் துப்போன கைகளையும் நாம் அடக்கிவைக்க வேண்டுமா?

சில தென்னாப்பிரிக்க நாவலாசிரியர்களைப்பற்றி ராய் கேம்ப்பெல் எழுதிய நான்கு வரிகளை இங்கே நான் குறிப் பிடாமல் இருக்க முடியாது. அவைகள் இப்பொழுது இந்தி யாவிலிருக்கும் பல்வேறு அரசியல் கூட்டங்களுக்கும் பொருத்தமா யிருப்பதாகத்தோன்றுகிறது. நீங்கள் அருமை யான அடக்கத்துடன் எழுதுவதை அவர்கள் (ஜனங்கள்) புகழ்கின்றார்கள். சபாஷ்! அதை அப்படியே நான் ஏற்றுக் கொள்ளுகிறேன். நீங்கள் லகானைக் கெட்டியாக இழுத்துப் பிடித்துக் கொண்டு சேணத்தின்பேரில் காலையிறுக்கி உட் கார்ந்துகொண்டிருக்கிறீர்கள் என்பதும் உண்மையே. ஆனால் நீங்கள் அடக்கி சவாரி செய்வதாக சொல்லிக்கொள்ளும் அந்த முரட்டுக் குதிரை எங்கே? அதைக் காணோமே!''

இரண்டு முனைகளுக்கு நடுவேயுள்ள குறுகிய வழியில் தாங்கள் செல்லுவதாகவும், காங்கிரஸின் தீவிரத்திலும் அர சாங்கத்தின் அடக்குமுறையிலும் கலந்து கொள்ளாமலும் இரண்டுக்கும் மத்தியில் செல்லுவதாகவும் நமது மிதவாத நண்பர்கள் நம்மிடம் சொல்லுகிறார்கள்.

சர்க்கார் குறைகளையும், காங்கிரஸின் குறைகளையும்பற்றி தீர்ப்புச் சொல்லும் நீதிபதிகள் இவர்களாம். இந்த இரண்டு கூட்டத்தாரின் குறைகள் தங்களிடத்தில் இல்லையென்று அவர்கள் அகமகிழ்கிறார்கள். இருவருக்கும் நடுவே அவர்கள் நியாயத் தராசைப் பிடித்துக் கொண்டிருக்கிறார்களாம்! நீதிச் சிலையை வார்த்திருப்பது போல, இவர்களும் தராசைப் பிடிக்கும்பொழுது கண்களை மூடிக்கொள்ளுவார்களோ அல் லது கட்டிக் கொள்ளுவார்களோ? போலிகளே! பொய்யர் களே! கொசுவிற்குப் பெரிய ஆக்ஷேபம் செய்து ஒட்ட கத்தை விழுங்கும் குருட்டு வழி காட்டிகளே! என்று ஏசு நாதர் பண்டைக் காலத்தில் யூத புரோகிதர்களைப் பற்றிக் கூறியது எனக்கு ஞாபகம் வருகின்றது. இது என் கற்பனை மட்டுமா? உண்மையா?

## LII

## பூர்ண சுதந்திரமும் குடியேற்ற அந்தஸ்தும்

காங்கிரஸின் லட்சியத்தையும் போக்கையும் சென்ற பதினேழு வருஷ காலமாக பிரயாசைப்பட்டு அமைத்துக் கொண்டு வந்தவர்களில் பெரும்பான்மையோர் நடுத்தர வகுப்பைச் சேர்ந்தவர்கள். மிதவாதியானாலும் காங்கிரஸ் காரனானாலும் அவர்கள் இந்த நடுத்தர வகுப்பிலிருந்துதான் வந்திருக்கிறார்கள். நடுத்தர வகுப்பார்களுக்கு ஏற்பட்டிருக்கும் வாழ்க்கை வசதிகளுக்குள் இவர்கள் வளர்ந்தவர்கள். அவர்களுடைய இல்வாழ்க்கையும், தொடர்புகளும், நட்பு களும் அநேகமாக ஒன்றுபோலத்தான் இருக்கும். முத லாளி லட்சியங்களைக் கொண்ட இந்த இரண்டு ரகங்களுக் குள், துவக்கத்தில் அதிகமாக வேற்றுமை இருக்கவில்லை. மனப்பான்மை வேற்றுமைகளினால் இந்த இரண்டு கூட்டத் தாரும் பிரிந்துபோகத் தலைப்பட்டு, மாறுபட்ட பாதைகளில் செல்லத் துவக்கினார்கள். ஒரு கூட்டம் அரசாங்கத்தையும், தனவந்தர்களையும், நடுத்தர வகுப்பில் செல்வாக்கு பெற்றவர் களையும் நாடிச்சென்றது; இன்னொரு கூட்டம் தங்களுக் குக் கீழிருக்கும் பொது ஜனங்களை நாடிச்சென்றது.

இரண்டு கூட்டத்தின் இலட்சியங்களும் மாறுபட வில்லை. அவைகளின் கருத்துகளும் அநேகமாக ஒன்று போலத்தான் இருந்தன. ஆனால், இரண்டாவது கூட்டத் தில் சில்லரைத் தொழிலாளிகளும், வேலையில்லாமல் திண்டா டும் படிப்பாளிகளும் சில்லரை வியாபாரிகளும் ஏராளமாக வந்து சேர்ந்தார்கள். எனவே, இந்தக் கூட்டத்தின் குரல் மாறிப் போயிற்று. முன்பு போல, அது மரியாதையுடன் குரலைத் தணித்துக்கொண்டு பேசவில்லை. சிறிது வலுவாக வும் ஆத்திரத்துடனும் பேசிற்று. பயன் தரும் முறையில் காரியம் செய்ய சக்தி இல்லாமல், இந்தக்கூட்டம் கடுமை யாகப் பேசி, அதனால் ஒருவாறு ஆறுதல் பெற்றது. இந்தப் புதிய நிகழ்ச்சியைக் கண்டு பயந்து போய், மிதவாதிகள்

விலகி ஒதுங்கி பத்திரமாக வாழ எண்ணினார்கள். காங்கிரஸில் நடுத்தர வகுப்பார்கள் அதிகமாக இருந்தார்கள். காங்கிரஸில் தலைமைவகித்து நடத்தியவர்கள் சில்லரை முதலாளி இனத்தைச் சேர்ந்தவர்கள். தேசியப் போராட்டத்தில் வெற்றிபெற வேண்டுமென்ற ஆசையினால் மட்டும் அவர்கள் காங்கிரஸில் வந்து சேரவில்லை. அந்தப் போராட்டத்தினாலேயே அவர்களுக்கு ஆத்ம திருப்தி உண்டாயிற்று. தாங்கள் இழந்த தன்மதிப்பையும் கவுரவத்தையும் மீண்டும் பெறவும் சிதறிப்போன தங்கள் பெருமையை மீண்டும் சேகரித்துக்கொள்ளவும், அவர்கள் போராட்டத்தில் நுழைந்து கொண்டார்கள். இது வழக்கமாய் உள்ள தேசிய ஊக்கமாகும். இந்த எண்ணம் எல்லோருக்கும் பொதுவானதாக இருந்தபோதிலும், மனப்பான்மைகளின் வேற்றுமைக் கோளாறுகளினால், மிதவாதிகள் என்றும் தீவிரவாதிகள் என்றும் பிரிந்துபோக நேர்ந்தது. கொஞ்சம் கொஞ்சமாக, நடுத்தர வகுப்பின் கீழ்ப்படிக்காரர்கள் காங்கிரஸில் செல்வாக்கு பெற்றார்கள். பின்னர் விவசாயிகள் காங்கிரஸில் புகுந்து தாங்கள் சொல்வதையும் கேட்குமாறு காங்கிரஸைச் செய்துவிட்டார்கள்.

கிராமத்தில் வசிக்கும் ஜனங்களுக்கு பிரதிநிதியாக காங்கிரஸ் ஆக, ஆக காங்கிரசுக்கும் மிதவாதிகளுக்குமிடையே இருந்த பிளவு அதிகரித்துப் போயிற்று. காங்கிரஸ் சொல்லுவதை அறியவோ அல்லது ரசிக்கவோ முடியாத நிலைமைக்கு மிதவாதிகள் வந்துவிட்டார்கள். பங்களாவில் நேர்த்தியான அறையில் இருப்பவர்கள், எளிய வீட்டையும் மண் குடிசையையும் அறிந்துகொள்ளுவது எளிதல்ல. ஆனால், இந்த வித்தியாசங்கள் இருப்பினும் லட்சியத்தில் இரண்டு கூட்டத்தாருக்கும் தேசீய நோக்குத்தான். முதலாளி தத்துவ நோக்குத்தான். ஆனால் அந்நோக்கு, தீவிரத்தில் மட்டும் வித்தியாசங்கொண்டது. காங்கிரஸில் கூட பலபேர்கள் அநேகமாக மிதவாதிகளென்று சொல்லக் கூடியவர்களாக இருக்கிறார்கள்.

பல தலைமுறைகளாக பிரிட்டிஷ்காரர்கள் இந்தியாவைத் தங்களுடைய விஸ்தாரமான பண்ணை வீடாகக் கருதி வந்தார்கள். அந்த வீட்டுக்கு பிரிட்டிஷ்காரர்கள் சொந்தக்காரர்களாம்! எனவே, உடமைக்காரர்கள் என்ற முறையில்,

அவர்கள் பண்ணை வீட்டின் நல்ல பகுதிகளில் வசித்துவந்தார்கள். சமையல் அறையும், வேலைக்காரன் இருப்பிடமும் இந்தியர்களுக்கு ஒதுக்கிவைத்துக் கொடுக்கப்பட்டன. ஒவ்வொரு பண்ணை வீட்டிலும் கீழ்க்கடை சிப்பந்திகளுக்குள் படிப்படியான அந்தஸ்து இருக்கும். பட்லர், காவற்காரன், சமையற்காரன், வேலைக்காரன், தாதி, முன் தடி தூக்கிச் செல்லும் சேவகன் இவர்கள் இருப்பார்கள். இவர்களுக்குள்ளே வரிசைக் கிரமமாக அந்தஸ்து இருக்கவேண்டும். ஆனால் வீட்டின் மேல் வர்க்கத்தாராகிய உடமைக்காரர்களுக்கும் கீழ்வகுப்பாராகிய சிப்பந்திகளுக்கும் நடுவே, தாண்டிச்செல்ல முடியாத தடை எல்லாத் துறைகளிலும் ஆக்கப்பட்டிருந்தது. அரசியல் முதலிய எல்லாத் துறைகளிலும் இரண்டு ஜனங்களுக்கும் நடுவே தொடர்பு கிடையாது.

இந்த ஏற்பாட்டை பிரிட்டிஷ் அரசாங்கத்தார் இந்தியர்கள் பேரில் சுமத்தியதில் ஆச்சரியமே இல்லை. நமது வாழ்க்கையும் தலைவிதியும் இது தான் என்று நம்மில் பெரும்பாலோர் ஏற்றுக் கொண்டு வாழ்ந்தார்களே, அதுதான் ஆச்சரியமாக இருக்கிறது. பண்ணை வீட்டின் யோக்கியப் பொறுப்புள்ள வேலைக்காரனுடைய மனப்பான்மையை, நாம் நம்முள் வளர்த்துக்கொண்டோம். சில சமயங்களில் அபூர்வமாக நமக்கு கௌரவமும் கிடைத்தது. முதலாளியோடு தேத் தண்ணீர் அருந்தும் பாக்கியமும் கிடைத்தது. காலக்கிரமத்தில் நம்மை ஒவ்வொருவராக பிரிட்டிஷ் அரசாங்கத்தார் கௌரவ ஸ்தானத்துக்கு கொண்டுபோய்ச் சேர்க்கவேண்டும் என்பது தான் நம்முடைய ஆசையாகும். போர்க்களத்திலோ, ராஜதந்திரத்திலோ வெற்றிபெறுவது பிரமாதமான காரியமில்லை. பிரிட்டிஷார் இந்தியர்களின் உள்ளத்தில் இவ்வளவு கீழ்த்தரமான ஆசையைப் பதிவுசெய்து, அவர்களுடைய மனப்பான்மையை அடியோடு மாற்றி விட்டார்களே! அதுதான், பிரிட்டிஷாருக்கு மகத்தான வெற்றியாகும். பண்டைக்காலத்து ஞானிகள் சொன்னது போல, "அடிமை அடிமையைப்போல யோசனை செய்ய ஆரம்பித்து விட்டான்."

காலம் மாறிப்போய் விட்டது. பண்ணை வீட்டு நாகரிகத்தை இப்பொழுது இங்கிலாந்திலும் சரி, இந்தியாவிலும்

சரி, யாரும் விருப்புடன் ஏற்றுக்கொள்ளுவதில்லை. ஆனால் நமக்குள்ளேயே சிலர் இருக்கிறார்கள். அவர்களுக்கு வேலைக் கார அறைகளில் இருந்து வெளியே வர கொஞ்சம் கூட விருப்பம் இல்லை. பகட்டு ஜரிகை கலந்த டவாலியைப்போட் டுக்கொண்டு திரிவதில் அவர்களுக்குப் பரமானந்தம். இன் னும் சிலர் நமது மிதவாத நண்பர்களைப் போன்றவர்கள்; பண்ணைவீட்டு நாகரிகத்தை அப்படியே ஏற்றுக்கொள்ளுகி றார்கள். அதன் அமைப்பையும் கட்டிடத்தையும் கண்டு மகிழ்ச்சியுறுகின்றார்கள். உடமைக்காரர்களை ஒவ்வொரு வராக வீட்டிலிருந்து காலிசெய்துவிட்டு, காலியான இடங் களில் தாங்கள் ஒவ்வொருவராகப் போய் உட்கார்ந்து கொள்ளவேண்டுமென்று ஆசைப்படுகிறார்கள். இதைத்தான், அவர்கள் "இந்திய மயமாக்குதல்" என்று சொல்லுகிறார்கள். அவர்களுடைய கவனமெல்லாம் நிர்வாகத்தை மாற்றவேண் டும் என்பதுதான். வெள்ளைப் பேர்வழிக்கு பதிலாக கறுப் புப் பேர்வழி இருந்தால் போதுமென்று எண்ணுகிறார்கள். புதிய முறையில் அரசியலை அமைக்க வேண்டுமென்று அவர்கள் நினைப்பதே இல்லை.

ஸ்வராஜ்யமென்றால் ஒவ்வொன்றும் முன்னே இருந் ததுபோல் தான் இருக்கும். ஆனால், வெள்ளைநிற உத்தியோ கஸ்தர்களுக்குப் பதிலாக கறுப்பு நிற உத்தியோகஸ்தர்கள் இருப்பார்கள் என்று அவர்கள் எண்ணிக்கொண்டிருக்கிறார் கள். எதிர்காலத்தைப்பற்றி ஒரே ஒரு காட்சிதான் மிதவா திகளால் காணமுடியும். தாங்களோ அல்லது தங்களைப் போன்றவர்களோ முக்கிய ஸ்தானம் வகித்து, இங்கிலீஷ் உயர்தர உத்தியோகஸ்தர்களுக்குப் பதிலாக, தாங்கள் அந்த ஸ்தானங்களைப் பெற்று அரசியல் நிர்வாகம் நடத்து வது என்பதுதான் அவர்கள் காணும் காட்சியாகும். அந்தப் புதிய காட்சியில் ஒன்றுமே வித்தியாசம் இருக்காது. பழைய மாதிரி உத்தியோகங்கள்தான்; அதே இலாக்காக்கள்; அதே சட்டசபைகள்; அதேமாதிரி வியாபாரம்; அதேமாதிரி கைத் தொழில்; ஐ. சி. எஸ். காரர்களும் இருப்பார்கள். சுதேச மன்னர்களும் தங்களுடைய அரண்மனைகளிலே சுகமாக வாழத்தான் செய்வார்கள். பட்டு பீதாம்பரங்களையும் தரி த்துக்கொண்டு, ஆபரணங்களை ஏராளமாக உடம்பில் வாரிப் போட்டு சுமந்துகொண்டு, தங்களுடைய குடி மக்களின் பக்தியைக் கவருவதற்காக சுதேச மன்னர்கள் ஒரொருசம

யம் அரண்மனையைவிட்டு வெளியே வருவார்கள். மிராசு தார்களுக்கு தனிச் சலுகை இருக்கும். அவர்கள் குடியான வர்களை நசுக்கிப் பிழிவார்கள். லேவாதேவிக்காரர்கள், ஜமீன்தாருக்கும் விவசாயிக்கும் பண மூட்டையைத் தூக் கிக்கொண்டுபோய் அவர்கள் இருவருக்கும் கடன்கொடுத்து விட்டு, அவர்களை நசுக்கிப் பிழிவார்கள். வக்கீல், தமது வரும்படியோடு வேலை செய்துகொண்டிருப்பார். கடவுள் உல்லாசமாக சுவர்க்கத்தில் அமர்ந்திருப்பார். இதுதான், மிதவாதிகள் எதிர்காலத்தில் காணும் சுயராஜ்யக் காட்சியாகும்.

ஸ்வராஜ்யமென்றால், ஆட்சிமுறை முன்னிருந்தது போலவே இருக்கவேண்டியதுதான் என்றும், வெளுப்பு ஆள் களுக்குப் பதிலாக கறுப்பு ஆள்கள் உத்தியோக பதவிகளில் வந்தால் போதுமென்றும் மிதவாதிகள் எண்ணிக்கொண் டிருக்கிறார்கள். பிரிட்டிஷாரின் நல்லெண்ணத்தை சம்பாதித் துக்கொண்டு, இந்த மாறுதல்களை மெதுவாக சாதித்துக் கொள்ளவேண்டுமென்று அவர்கள் கருதுகிறார்கள். மிதவாதி களின் அரசியல் பொருளாதார கருத்துகளின் அஸ்திவாரம் பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் நிலைத்து நீடித்திருக்குமென்ற நம் பிக்கையைத் தழுவியதாகும். நீண்டகாலத்துக்கு இந்த சாம் ராஜ்யத்தை யாரும் அசைக்கமுடியாது என்பதே அவர்களு டைய கருத்து. ஆகவே, அதோடு தங்களை இணைத்துக் கொண்டு, பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் அரசியல் பொருளா தாரத் திட்டங்களை அவர்கள் ஏற்றுக்கொண்டதுமல்லா மல், பிரிட்டிஷாரின் லக்ஷ்யங்களைக்கொண்டு எதையும் பார்க் கிறார்கள். பிரிட்டிஷ் ஆட்சி இந்தியாவில் நிலைத்திருக்க வேண்டும் என்பது பிரிட்டிஷ் லக்ஷ்யமாகும். அதற்கான அர சியல் முறை வகுக்கப்பட்டிருக்கிறது. இவைகளை மிதவாதி கள் ஏற்றுக்கொள்ளுகிறார்கள்.

இத்தகைய மனப்பான்மை காங்கிரசுக்குக் கிடை யாது. எனவே, காங்கிரஸ் மிதவாதிகளிடமிருந்து மாறு பட்டதாகும். அரசியல் நிர்வாகத்தில் மட்டும் மாறுதல் வேண்டும் என்று காங்கிரஸ் கருதவில்லை. புதிய ஆட்சி முறை, புதிய அரசியல் அமைப்பு இவை வேண்டுமென்று காங்கிரஸ் விரும்புகின்றது. அந்தப் புதிய ஆட்சிமுறை எந்த உருவம் படைக்கப்போகின்றது என்பதைப்பற்றி காங்கிரஸ்

காரர்களுக்குள் தெளிவான யோசனை கிடையாது. இதைப் பற்றி அபிப்பிராயபேதமும் இருக்கிறது. ஆனால், தற்போதைய நிலைமைகளும் முறைகளும் நீடித்திருக்க முடியா; நீடித்திருக்கவே கூடாது என்றும், அடிப்படையான மாறுதல்கள் தேவையென்றும் காங்கிரஸ்காரர்கள் அனைவரும் ஒரு முகமாக நினைக்கிறார்கள். குடியேற்றநாட்டு அந்தஸ்துக்கும் பூரண சுதந்திரத்திற்கும் உள்ள வேற்றுமை இதிலே தான் இருக்கிறது. குடியேற்ற நாட்டு அந்தஸ்து என்றால் பழைய அமைப்புடன் கண்ணுக்குத் தெரிந்ததும் தெரியாததுமான புதிய பிணைப்புகளைக் கொண்டு பிரிட்டிஷ் பொருளாதாரத் திட்டத்தோடு இணைக்க முயலுவதாகும். பூர்ண சுதந்திரம் என்றால், நிலைமைக்கேற்றாற்போல புதிய பொருளாதாரத் திட்டத்தை ஆக்கிக்கொள்ள சுதந்திரம் ஏற்படுகின்றது அல்லது ஏற்படவேண்டும் என்பதுதான்.

இங்கிலாந்தோடும் இங்கிலீஷ்காரர்களோடும் தீராத பகைமை பாராட்டவேண்டும் என்பதல்ல. என்ன நேர்ந்தாலும், அவர்களை விட்டு விலகிக் கொள்ள வேண்டும் என்ற விருப்பமுமல்ல. இதுவரையிலும் நேர்ந்தவைகளினால், இந்தியாவுக்கும் இங்கிலாந்துக்குமிடையே கசப்பு இருக்குமாயின் அது இயல்புதான். "அதிகாரத்தின் அவலட்சணம் சாவியைக் கெடுத்துவிட்டு, கைக்கோடரியை உபயோகப்படுத்துகின்றது" என்று தாகூர் சொல்லுகிறார். நமது உள்ளங்களுக்கு திறவுகோல் நீண்டகாலத்துக்கு முன்னேயே அழிக்கப்பட்டுவிட்டது. பிரிட்டிஷார் நம்பேரில் கைக் கோடரியைக் கண்டபடி உபயோகப்படுத்தினதினால், அவர்களிடம் நமக்கு அதிகமான அன்பு ஏற்பட இடமில்லை. இந்தியாவுக்கும் மனிதவர்க்கத்துக்கும் சேர்த்து உழைக்க நாம் பாத்தியம் கொண்டாடுவோமாகில், இதுவரையில் நேர்ந்ததைக்கொண்டு பிரிட்டிஷாரிடம் பகைமை பாராட்டக் கூடாதென்பது உண்மையே. விரோதம் கொள்ள நாம் ஆசைப்பட்டாலும் சென்ற பதினைந்து வருஷங்களாக காந்திஜீ நமக்கு கொடுத்து வந்திருக்கும் கடுமையான பயிற்சி அந்த ஆசையே ஏற்படாமல் அடித்துவிட்டது.

பிரிட்டிஷ் சிறையில் உட்கார்ந்து கொண்டு, இதையெல்லாம் நான் எழுதுகிறேன். சென்ற சில மாதங்களாக என்னுடைய மனது கவலை நிரம்பிக் கிடக்கின்றது.

நான் முன்னே சிறையில் அனுபவித்ததைக் காட்டிலும்,இந்த தனிக்காவல் காலத்தில் அதிகமாக கஷ்டம் அனுபவித்திருக்கிறேன். பலவேறு நிகழ்ச்சிகளைக் கண்டு, என்னுடைய உள்ளத்தில் ஆத்திரமும் கோபமும் அடிக்கடி எழுந்திருக்கின்றன. இப்பொழுது, நான் இங்கே உட்கார்ந்துகொண்டு, என்னுடைய இதயத்தையும் மனதையும் கூர்ந்து கவனிக்கையில், இங்கிலாந்தின்பேரிலாவது இங்கிலீஷ் ஜனங்களின் பேரிலாவது எனக்கு துளிகூட கோபமே இல்லை. எனக்கு பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தைக் கண்டால் வெறுப்பு. அந்த சாம்ராஜ்யம் இந்தியாவைச் சுரண்டுவதைக் கண்டு நான் ஆத்திரப்படுகிறேன். முதலாளித் தத்துவத் திட்டத்தில் எனக்கு வெறுப்பு. பிரிட்டனிலிருக்கும் அதிகாரவர்க்கத்தினர் இந்தியாவை எல்லா வகையிலும் சுரண்டுவதைக் காண எனக்கு மிகுதியும்வருத்தமுண்டாகின்றது;ஆத்திரமுமுண்டாகிறது. இதற்கான முழுப்பொறுப்பையும் இங்கிலாந்தின் பேரிலாவது, இங்கிலீஷ்காரர்களின் பேரிலாவது நான் சுமத்தவில்லை. அப்படி நான் சுமத்தினலும் அதனல் அதிகமான வேற்றுமை ஏற்படாது. ஏனென்றால், ஒரு நாட்டு மக்கள் அனைவரையும் கண்டிப்பது முட்டாள்தனமாகும். ஒரு நாட்டார் அனைவரின் பேரிலும் கோபம் கொள்ளுவதும் முட்டாள்தனமாகும். நாம் சந்தர்ப்பங்களுக்கு எவ்வாறு இரையானேமோ அவ்வாறே அவர்களும் சந்தர்ப்பங்களுக்கு அடிமைகளாக ஆகிவிட்டார்கள்.

எனது மனப்பயிற்சிக்காக நான் இங்கிலாந்துக்கு மிகுதியும் கடமைப்பட்டிருக்கிறேன். இங்கிலாந்துக்கு நான் அடியோடு அன்னியனக இருக்கமுடியாது. நான் என்ன முயற்சி செய்தாலும், எனது மனப்பழக்கங்களை அடியோடு உதறித் தள்ளிவிட முடியாது. வாழ்க்கையையோ அல்லது மற்றைய தேசங்களையோ மதிப்பிடும் வழிகளையும், அளவுகளையும் இங்கிலாந்தில்தான் பள்ளியிலும், கல்லூரியிலும் நான் கற்றுக்கொண்டேன்.அவைகளையும்என்னல் விட்டுவிட முடியாது. அரசியல் துறையில் தவிர, எனக்கு இங்கிலாந்தையும் இங்கிலீஷ் ஜனங்களையும் கண்டால் ரொம்பப் பிரியம். இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சிக்கு நான் முதுகு வளைந்து கொடுக்காத எதிரியாகி விட்டேன் என்று ஏற்பட்டிருக்குமாகில் அது என்னை மீறியேதான்.

நாம் பிரிட்டிஷ் ஆட்சியை, அந்த அந்நிய அதிகாரத்தைக் கண்டிக்கின்றோம். அந்த ஆட்சிமுறையோடு நமக்கு ராஜி இருக்க முடியாது. இங்கிலீஷ் ஜனங்களோடு ஏன் ராஜி இருக்கமுடியாது? இங்கிலீஷ்காரர்களோடும், ஏனைய அந்நிய நாட்டார்களோடும் நெருக்கமான உறவுகள் நமக்கு வேண்டியதுதான். இந்தியாவில் புத்தப் புதிய காற்றின் வாடை வீச வேண்டும். புதிய பசையுள்ள கருத்துகள் தேவை. மனப்பூர்வமான ஒத்துழைப்பு வேண்டும். பண்டைக்காலத்துப் புகை மூடிக் கொண்டதுபோல நாம் ஆகிவிட்டோம்.

ஆனால் இங்கிலீஷ்காரர்கள் புலி என்ற ஹோதாவில் இந்தியாவுக்கு வந்தால் அவர்கள் நமது நட்பையும் ஒத்துழைப்பையும் எதிர்பார்க்க முடியாது. சாம்ராஜ்யப் புலியோடு பயங்கரமான எதிர்ப்புதான் இருக்கமுடியும். இன்றைக்கு நம்முடைய தேசம் அந்த குரூரமான மிருகத்தோடு போராடவேண்டியிருக்கிறது. காட்டிலிருக்கிற முரட்டுப் புலியைப் பழக்கி, அதற்கு இயற்கையாகவுள்ள குரூரத்தன்மையை ஒருக்கால் போக்கி விடக்கூடும். சாம்ராஜ்ய தத்துவமும் முதலாளித்தத்துவமும் சேர்ந்து கொண்டு, துர்ப்பாக்கியமான ஒரு நாட்டில் பாய்ந்து இரை தேடுமாகில், அவைகளைப் பழக்க சாத்தியப்படவே படாது. தானோ, தன் தேசமோ எப்பொழுதும் ராஜிக்குத் தயாராயில்லையென்று யாரேனும் சொன்னால், அது ஒருவகையில் முட்டாள்தனமான கருத்து ஆகும். ஏனென்றால் வாழ்க்கையில் இத்தகைய ராஜிக்குக் கட்டாயமான சந்தர்ப்பங்கள் ஏற்பட்டுவிடுகின்றன. ஒரு தேசத்தோடு அல்லது ஒரு நாட்டாரோடு ராஜியே முடியாது என்று சொல்லுவது முழுமூடத்தனமாகும். ஆனால் ஒரு திட்டத்தோடு அல்லது சில ஏற்பாடுகளோடு கூட்டுறவும் ராஜியும் முடியாது என்று சொன்னால் அதிலே அர்த்தம் உண்டு. அப்பொழுது அந்த ஒத்துழையாமையை விட்டுவிடுவது மனித விருப்பத்துக்கு மீறிய காரியமாகி விடுகின்றது.

இந்திய சுதந்திரமும் பிரிட்டிஷ் சாம்ராஜ்யமும் பரஸ்பர எதிரிகளாகும். எவ்வளவு கடுமையாக இராணுவ அமுலைப் பிரயோகம் செய்தாலும், சர்க்கரைபோல் இனிப்பாக எவ்வளவு பேசினாலும் அவைகள் இரண்டையும் ஒன்று

சேர்க்கமுடியாது. பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் இந்தியாவிலிருந்து அடியோடு விலக்கப்பட்டபிறகுதான் பிரிட்டிஷ் இந்திய ஒத்துழைப்புக்கு அடிகோல முடியும்.

நவீன உலகப் போக்கிலே பூரண சுதந்திரமென்பது குறுகிய கொள்கையென்று சொல்லப்படுகிறது. ஒவ்வொரு நாடும் இப்பொழுது வேற்று நாடுகளோடு அதிகமாக சார்ந்திருக்கவேண்டியிருப்பதால் பூரண சுதந்திரத்தை விரும்பி முற்போக்குக்கு நாம் தடைசெய்கிறோம் என்று நம்மிடம் சொல்லுகிறார்கள். இங்கிலாந்திலிருக்கும் லிபரல் கட்சியார், போர் வேண்டாக்கூட்டத்தார், அபேதவாதிகளும்கூட இந்தக் கட்சியைச் சொல்லி நம்முடைய குறுகிய தேசீய மனப்பான்மைக்காக நம்மைக் கண்டிக்கவும் செய்கிறார்கள். இந்தியாவுக்கு சம்பூரண வாழ்க்கையுரிமை கிடைக்கவேண்டுமானால், அதைப் பிரிட்டிஷ் சாம்ராஜ்யமென்ற கூட்டுறவுக் கொள்கையின் மூலமாகத்தான்பெற முடியுமென்று அவர்கள் இடையே நமக்கு யோசனையும் சொல்லுகிறார்கள். வேடிக்கையைப் பாருங்கள்! இங்கிலாந்திலே எல்லோரும் எந்தக் கட்சியைச் சேர்ந்தவர்களாயிருந்தாலும் சாம்ராஜ்யத்தைக் காப்பதிலேயே கருத்துள்ளவர்களாயிருக்கிறார்கள்.

"பழைய நிலைமையே இருக்கவேண்டுமென்று ஆளும் நாட்டார் ஆசைப்படும்பொழுது அது தேசீய உணர்ச்சியைக் காட்டிலும் உயர்ந்ததொரு உணர்ச்சியாக பாவனை செய்யப்பட்டு அலங்கரிக்கப்படுகிறது; வெற்றிபெற்ற நாட்டார் தாங்கள் கொள்ளையடித்த பொருள்களை தங்களிடமே வைத்துக் கொள்ள ஆசைப்பட்டால் இனி போரே கூடாதென்று அவர்கள் உபதேசம் செய்வார்கள். மாக்டொனல்டு, காந்தியைக் காட்டிலும் தாம் மனித வர்க்கத்துக்கு பொதுவான மனிதன் என்ற உணர்ச்சியைக் கொள்ளுவது மேற்சொன்ன விநோத முறைகளாலேதான்" என்று ட்ராட்ஸ்கி எழுதுகிறார்.

இந்தியா அரசியல் சுதந்திரமடைந்த பின்னர் அது எப்படி இருக்கும், அல்லது என்ன செய்யும் என்று எனக்குத் தெரியாது. ஆனால், இன்றைக்கு பூரண சுதந்திரத்துக்காகப் பாடுபடும் இந்தியர்கள் சர்வதேசக் கூட்டுறவுக்காகப்

பாடுபடுகின்ருர்கள், பாடுபடுவார்கள் என்று எனக்கு நிச்சய மாகத்தெரியும். ஏனென்ருல் அபேதவாதிக்கு தேசியமென் ருல் அர்த்தமே இல்லை. காங்கிரஸ் தீவிரக் கட்சியிலி ருக்கும் அபேதவாதிகளல்லாத பலர், சர்வ தேசக்கூட்டு றவை நாடித்தான் நிற்கின்ருர்கள். இன்றைக்கு நாம் பூரண சுதந்திரத்துக்கு பாத்தியம் கொண்டாடினுல், அது உலகத்தி னின்றும் இந்தியா விலகி நிற்பதற்காகவல்ல. உண்மையான சர்வதேச சங்கக்கூட்டுறவு ஏற்பட பிரயத்தனம் நடை பெறுமாகில் அப்பொழுது ஏனைய நாடுகளைப் போலவே, நாமும் நம்முடைய சுதந்திரத்தின் ஒரு பகுதியை அந்த இலட்சியம் நிறைவேறுவதற்காக தியாகம் செய்யத் தயாராக இருக்கிருேம். எத்தகைய பெரிய பெயரால் அழைக்கப்பட் டாலும் எந்த சாம்ராஜ்யத் திட்டமும் இத்தகைய சர்வ தேசக்கூட்டுறவுக்கு எதிரியாகும். இத்தகைய திட்டத்தின் மூலமாக சர்வதேசக் கூட்டுறவையும், உலக சமாதானத்தை யும் நாட முடியாது.

சமீப காலமாக நடைபெற்றுவரும் நிகழ்ச்சிகளிலிருந்து உலக முழுதுக்கும் ஒன்று தெரிந்து விட்டது. சாம்ராஜ்யத் திட்டத்தைக் கொண்ட வல்லரசுகள் தங்களுடைய சாம் ராஜ்ய சலுகையாலும், பொறுப்பற்ற கொடுங்கோலாட்சி முறையாலும் தங்களை ஏனைய நாடுகளிலிருந்து சிறிதுசிறிதாக விலக்கிக்கொண்டு தனித்து இயங்குகின்றன. இந்த முறையி னுல் சர்வதேச சங்க உணர்ச்சி வளராமல் அதனுடைய எதிர்ப்பே வளர்ந்து கொண்டு வருகிறது. இதற்குக் காரணங் கள் கண்டுபிடிப்பது கஷ்டமல்ல. தற்போது அமுலில் இருந்து வரும் பொருளாதாரத் திட்டத்துக்கு அடிவலுவு குறைந்து வருகின்றது என்பதை அவைகள் காண்பிக்கின்றன. சாம் ராஜ்ய சலுகையால் நேரும் விளைவுகளிலொன்று என்ன வெனில் சாம்ராஜ்யத்துக்குள் இருக்கும் நாடுகளுக்குள் அதிகமான கூட்டுறவு ஏற்பட்டபோதிலும் அந்த நாடுகள் உலகத்தின் மற்றைய பகுதிகளோடு கூட்டுறவில்லாமல் விலகி நிற்க வேண்டியிருக்கிறது. ஒட்டாவா முதலிய தீர்மானங்களினுல் இந்தியா ஏனைய நாடுகளோடு சேர முடி யாமல் போய் பிரிட்டிஷ் சாம்ராஜ்ஜியத்துக்குள்ளாகவே உறவை நாட வேண்டி வந்து விட்டது. பிரிட்டிஷ் தொழிற் சாலைகளையே அதிகமாக நம்பி, வாழ வேண்டியவர் களாக நாம் ஆகிவிட்டோம். அந்தக் கொள்கையினுல் ஏற்

பட்ட தற்போதைய தீமைகளைத் தவிர இனிவரப்போகும் ஆபத்துகளும் வெளிப்படையாகும். ஆகவே குடியேற்ற நாட்டு அந்தஸ்து, இந்தியாவை தனி மூலையில் கொண்டு போய்விடுமே ஒழிய, உலக நாடுகளோடு உறவு கொண்டாடும் படியான வசதியை அளிக்காது.

நம்முடைய நண்பர்களான இந்திய மிதவாதிகளிடம் அபூர்வமான சக்தி ஒன்றுஇருக்கிறது. அவர்களுக்கு உலகத்தையும், முக்கியமாக தங்களுடைய தேசத்தையும் நீல நிறம் கொண்ட பிரிட்டிஷ் கண்ணுடிகளால் காண சாமர்த்தியம் இருக்கிறது. காங்கிரஸ் என்ன சொல்லுகிறது, அது ஏன் அப்படிச் சொல்லுகிறது என்று அறிந்துகொள்ள முயற்சி செய்யாமல் பூரண சுதந்திரம் குடியேற்ற நாட்டு அந்தஸ்தை விட குறுகியதென்றும், கம்பீரத்தில் குறைந்ததென்றும், பிரிட்டிஷ்காரர்கள் சொல்லும் பழைய கட்சியை அவர்கள் திருப்பித்திருப்பிச் சொல்லுகிறுர்கள். சர்வதேசப் பான்மை என்றுல் அவர்களுக்கு சாம்ராஜ்ஜிய நிர்வாகஸ்தலமாகிய (லண்டன்) ஒயிட்ஹால் என்று அர்த்தம். ஏனென்றுல் அவர்களுக்கு வேறு தேசங்களைப் பற்றி ஒன்றுமே தெரியாது. அதற்குக்காரணம் பாஷை தெரியாத கஷ்டம். மேலும் மற்ற நாடுகளைப்பற்றிய கவலையே இல்லாமல் அவர்கள் திருப்தியுடன் இருக்கிறுர்கள்.

அவர்களுக்கு நேர் போராட்டத்தில் வெறுப்பு. இந்தியாவில் பொது மக்கள் அரசாங்கத்தைத் தாக்கிக் கிளர்ச்சி செய்வதில் அவர்களுக்குப் பிடித்தமில்லை. ஆனுல் வேடிக்கை என்னவெனில் இதேமாதிரி நேர் முறைப் போராட்டமுறைகள்வேறு நாடுகளில் கையாளப்படில், அதிலே மிதவாதித் தலைவர்கள் சிலருக்கு ஆட்சேபமே கிடையாது. தூரத்திலிருந்து கொண்டு அந்த உபாயங்களை அவர்கள் ரசித்துப் புகழவும் செய்வார்கள். ஐரோப்பிய நாடுகளில் தற்போதிருக்கும் சர்வாதிகாரிகளில் சிலரை இவர்கள் மானஸிகமாக கும்பிட்டு வருகிறுர்கள்.

வெறும் பெயர்களால் மனக் குழப்பம் ஏற்படலாம். ஆனுல், நாம் இந்தியாவில் உண்மையாக கவனிக்கவேண்டிய கேள்வி என்ன? நமது லட்சியம் புதியதொரு அரசியலமைப்பா, அல்லது வெறும் புதிய நிர்வாகமா? மிதவாதிகளின் மறு

மொழி தெளிவாயிருக்கிறது. அவர்களுக்குப் புதிய நிர்வாகத்தைத்தவிர அதிகமாக ஒன்றும் தேவையில்லை. அந்த நிர்வாகம்கூட, மெதுவாக ரொம்பகாலம் கழித்து வந்தாலும் அவர்களுக்குப் பாதகமில்லை. குடியேற்ற நாட்டு அந்தஸ்து என்ற சொற்களைஅவர்கள்அடிக்கடி சொல்லி வருகிறார்கள். ஆனால், அவர்களுடைய தற்போதைய உண்மையான லட்சியம் "மத்திய அரசாங்கத்தில் பொறுப்பு" என்ற மூடு மந்திரமான சொற்களிலேதான் அடங்கியிருக்கின்றது. அவர்களுக்கு பூரண புஷ்டிகொண்ட வார்த்தைகள் தேவையில்லை. அதிகாரம், பூரண சுதந்திரம், விடுதலை, சுதந்திரம் இந்த வார்த்தைகள் அவர்களுக்கு ஆபத்தாகக் காதில் தொனிக்கின்றன. வக்கீலின் பாஷையும், மனப்பான்மையும், சாதாரண ஜனங்களுக்கு உற்சாகமளிக்கக் கூடியதாகஇல்லாவிட்டாலும், மிதவாதிகளுக்குமிகவும் பிடித்தமாய் இருக்கின்றன. கொள்கைக்காகவும் சுதந்திரத்துக்காகவும் தங்களுடைய உயிர்களைத் துரும்பாக மதித்து, ஆபத்துக்களை எதிர்த்துப் போராடிய மனிதர்களையும் கூட்டங்களையும் பற்றி சரித்திரத்தில் ஏராளமாகக்காணலாம். "மத்தியில்பொறுப்பு" என்பதற்காகவோ, அல்லது வேறு எந்த சட்ட ரீதியான சொல் தொடருக்காகவோ யாரும் ஒரு வேளை யுணவை வேண்டுமென்றே விட்டுவிடுவார்களா? அல்லது குறைத்துக் கொள்வார்களா?

இதுதான் அவர்களுடைய லட்சியமாகும். இந்த லட்சியத்தை அடைவதற்கு நேர் போராட்டம் செய்யக்கூடாது. வேறு எந்த வகையான கடுமையான கிளர்ச்சியும் செய்யக்கூடாது. சீனிவாச சாஸ்திரியார் சொன்னதுபோல, "ஞானத்தையும்,அனுபவத்தையும்,நிதானத்தையும் ,வாக்கு வன்மையையும், அமைதியான செல்வாக்கையும், உண்மையான திறமையையும்"வெளிக்காண்பித்து,அதைப்பிரிட்டிஷாரிடமிருந்து பெறவேண்டும். நம்முடைய நல்ல நடத்தையாலும் நாம் செய்யும் நல்ல வேலையாலும் நம்மை ஆளுபவர்களை நமக்கு அதிகாரம் கொடுக்கும்படியாக நாம் இறுதியில் செய்ய முடியுமென்று மிதவாதிகளால் கருதப்படுகிறது. மிதவாதிகள் இன்றைக்கு நம்மை ஏன் எதிர்க்கிறார்கள்? நம்முடைய பரபரப்பு கொண்ட மனப்பான்மையைக் கண்டு, அவர்கள் நம்பேரில் ஆத்திரப்படுகிறார்கள்; அல்லது நம்முடைய வல்லமையை அவர்கள் சந்தேகிக்கிறார்கள்; அல்லது இரண்டு காரணங்களும் இருக்கலாம்.

சாம்ராஜ்யத்தையும்; தற்கால நிலைமையையும் அலசிப் பார்த்தால் இந்த முடிவு தவறு என்று புலப்படும். ஆளும் கூட்டத்தாரின் கூட்டுறவைக் கொண்டு, சிறுகச் சிறுக அதிகாரத்தைப் பெற முடியுமென்று சொல்லப்படுகிறதே, அதைப்பற்றி அந்த ஒளிபொருந்திய இங்கிலீஷ் ஆசிரியர், ஆர். எச். டானி அவர்கள் பொருத்தமாயும், அழுத்தமாயும் எழுதியிருக்கிறார். அவர் பிரிட்டிஷ் தொழிற்கட்சியைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார். ஆனால், அவருடைய சொற்கள் இந்தியாவுக்கு இன்னும் அதிகமான பொருத்தம் கொண்டவையாகும். ஏனென்றால் இங்கிலாந்திலே ஜனநாயக அமைப்புகள் இருக்கின்றன. அந்த அமைப்புகளின் மூலமாக, பெரும்பான்மையோரின் கருத்தையும் தீர்மானத்தையும் நன்றாக அமுலுக்குக் கொண்டு வர முடியும். ஆசாரிய டானி அவர்கள் பின்வருமாறு எழுதுகிறார்:—

"வெங்காயத்தை தோலி தோலியாக உரித்துத் தின்னலாம்; ஆனால் ஒரு உயிருள்ள புலியை ஒவ்வொரு காலாக நீ தோல் உரிக்க முடியாது. துண்டு துண்டாக உரிக்கிற வேலை புலியினுடைய தொழிலாகும். முதலிலே, அது உன் தோலை யுரித்துவிடும்........."

"உரிமைகளைக் கொண்டாடும் கூட்டத்தார், வேறு நாடுகளில் சாதுக்களாக இருக்கலாம். ஆனால், இங்கிலாந்தில் அப்பேர்ப்பட்ட சாதுக்கள் இல்லை. நயமாக தொழிற்கட்சியின் வாதத்தை வினயத்துடன் எடுத்துச்சொன்னால், முதலாளி கூட்டத்தார் தங்களுடைய கட்சியும் அதுவே என்று ஏற்றுக் கொள்ளச் செய்யமுடியும் என்ற கருத்து மிகவும் மோசமான கருத்தாகும். தெளிவான தஸ்தவேஜுகளை வைத்துக் கொண்டிருக்கும் கெட்டிக்கார வக்கீலிடம் போய் பிரஸ்தாப சொத்து அவருடையதல்ல என்று ஏமாற்ற முயற்சி செய்தால் அது பலிக்குமா? முதலாளிகளுக்குள் இனிமையான, கூர்மையான, தன்னம்பிக்கை கொண்ட, வல்லமை பொருந்திய பேர்வழிகள் இருக்கிறார்கள். சமயம் வந்தால் அவர்கள் "பழிக்கும் கொலைக்கும்" அஞ்சாதவர்கள். தங்களுடைய லாபம் எந்தப்பக்கத்தில் இருக்கிறது என்று அவர்களுக்கு நன்றாகத் தெரியும். அந்த லாபம் ஒருநாளும் குறையக் கூடாதென்று அவர்கள்கருத்து கொண்டிருக்கிறார்கள்.... தங்களுடைய நிலைமைக்கு ஆபத்து

வரும்போல் அவர்களுக்குத் தோன்றினல், அவர்கள் எல்லா வகைக் கருவிகளையும் தங்களுக்குச் சாதகமாக உபயோகப்படுத்திக் கொள்ளுவார்கள். பிரபு சபை, மன்னன், பத்திரிகைகள், சேனையில் அதிருப்தி, பொருளாதார நெருக்கடி, சர்வதேசக் கஷ்டங்கள் முதலியவைகளை அவர்கள் தங்களுக்குச் சாதகமாக உபயோகப்படுத்திக் கொள்ள தயங்க மாட்டார்கள். 1931-ம் வருஷத்தில் பவுனைப் பத்திரிகைகள் தாக்கி எழுதியதிலிருந்து, இந்தக்கூட்டத்தார் தங்களுடைய பைகளை நிரப்பி காப்பாற்றிக் கொள்ளுவதற்காக, தேசத்திற்கு துரோகம் செய்யத் தயங்கமாட்டார்கள் என்று தெரிந்து விட்டது.''

(இவ்வாறு டானீ அவர்கள் எழுதுகிறுர்.)

பிரிட்டிஷ் தொழிற்கட்சி வல்லமை பொருந்திய ஒரு அமைப்பு ஆகும். தொழிற்கட்சிக்கு தொழிற் சங்கங்கள் ஆதரவாய் இருக்கின்றன. அந்தச் சங்கங்களில், சந்தா செலுத்தும் அங்கத்தினர்கள் கோடிக் கணக்கில் இருக்கின்றுர்கள். நல்ல அபிவிருத்தியடைந்த கூட்டுறவு முறை அந்தக் கட்சியில் நிலவி வருகின்றது. பெரிய கௌரவத் தொழில்களைச் சேர்ந்த கூட்டங்களிலிருந்தும் தொழிற்கட்சிக்கு அபிமானிகளும் அங்கத்தினர்களும் பலர் இருக்கின்றனர். பிரிட்டனில் பொதுஜன வாக்குரிமை விரிந்திருக்கிறது. ஜனநாயக ஆட்சிமுறையைத் தாங்கிய அரசியல் ஸ்தாபனங்கள் இருக்கின்றன. நீண்ட காலமாக நபர் சுதந்திரத்துக்காக, சிறப்பாகப் போராடியபரம்பரை பிரிட்டனுக்கே உரித்தாகும். இத்தனையெல்லாம் இருந்தபோதிலும்,தொழிற்கட்சி வாக்கு வன்மையாலும் புன்முறுவலாலும் (இவை யிரண்டும் உபயோகமுள்ள, தேவையான முறைகளாய் இருந்த போதிலும்) உண்மையான அதிகாரத்தைப் பெறமுடியாது என்று டானி அவர்கள் கருதுகிறுர். அவர் கூறியது சரி என்பதை சமீபத்தில் நடைபெற்ற நிகழ்ச்சிகள் மெய்ப்பித்து விட்டன.

காமன்ஸ் சபையில்,தொழில்கட்சிக்கு பெரும்பான்மை ஸ்தானங்கள் கிடைத்தபோதிலும் கூட,அதனல் தீவிரமான மாறுதல்களைச் செய்யவே முடியாது: ஏனென்றுல் உரிமையாளர்கள் யாவரும் சேர்ந்து கொண்டு, தொழிற்கட்சியின்

முயற்சியைப் பலிக்காமல் செய்து விடுவார்கள். அரசியல், ஜனநிர்மாணம், பொருளாதாரம், நாணயச்செலாவணி, இராணுவம் முதலிய அதிகாரமும் செல்வாக்கும் வல்லமையும் கொண்ட முக்கிய ஸ்தானங்கள் உரிமையாளர்களின் வசமிருப்பதால் தொழிற்கட்சியின் முயற்சி பலிப்பது சாத்தியமில்லை. இந்தியாவிலே நிலைமைகள் வேறு என்பதைச் சொல்லத் தேவையில்லை. இந்தியாவிலே ஜனநாயக பரம்பரையாவது, ஜனநாயக அமைப்புகளாவது கிடையா. அவைகளுக்குப் பதிலாக அவசரச் சட்ட ஆட்சியும் எதேச்சாதிகாரமும் அமுலில் இருந்து வருகின்றன. நபர் சுதந்திரம், பேச்சு சுதந்திரம், எழுத்து சுதந்திரம், கூடும் சுதந்திரம், இவை யாவும் அடக்கப்பட்டுவிட்டன. மிதவாதிகளுக்குப் பக்கபலமாக வலுவான அமைப்பு எதுவும் இல்லை. ஆகவே, அவர்கள் புன்முறுவலை நம்பித்தான் வாழவேண்டி இருக்கிறது.

சட்டத்துக்கு அல்லது அரசியலமைப்புக்கு மீறிய எத்தகைய வேலையும் மிதவாதிகளுக்கு கொஞ்சம் கூடப் பிடிப்பதே இல்லை. ஜனநாயக அமைப்புகள் உள்ள தேசங்களில் அரசியலமைப்புக்குட்பட்ட கிளர்ச்சிக்கு அர்த்தமுண்டு. சட்டமாக்குவதை அடக்கியாளவும், சுதந்திரங்களைக் காப்பாற்றவும், நிர்வாகமுறையைக் கண்டித்து கட்டுக்குள் அடக்கி வைக்கவும், அரசியல் பொருளாதாரத் துறையில் மாறுதல்களை உண்டாக்குவதற்காக ஜனநாயக முறைகளை வகுக்கவும் —இவைகள் யாவும் அரசியலமைப்புக்கு உட்பட்ட கிளர்ச்சி என்ற சொல்லுக்கு மாறாகும்.

ஆனால், இந்தியாவில் அத்தகைய அரசியலமைப்பு இல்லை. அந்த வார்த்தைக்கு மேற்கூறிய பொருளும் கிடையாது. இந்தியாவிலே இன்றைக்கு அமுலில் இல்லாத ஒரு கருத்தைத் தழுவி, இந்த வார்த்தையை உபயோகப்படுத்தலாமா? இந்தியாவிலே அரசியலமைப்புக்கு உட்பட்ட கிளர்ச்சி என்ற சொல்லுக்கு விநோதப்பொருள் கொடுக்கப்பட்டு வருகின்றது. அரசியல் நிர்வாகிகளின் எந்தச் செயலையும் ஆதரிப்பது என்ற அர்த்தத்தில் உபயோகப்பட்டுவருகிறது. சட்ட வரம்புக்குட்பட்ட கிளர்ச்சி என்ற அர்த்தமும் அந்த வார்த்தைக்கு கொடுக்கப்பட்டு வருகின்றது. சட்ட வரம்புக்குட்பட்ட அல்லது சட்டத்துக்கு மீறிய என்ற அர்த்தங்களில், அதை உபயோகப் படுத்துவதே மேலாகும். இவ்

வாறு பொருள் கொடுப்பதுகூடத் தவறாகும். ஏனெனில் நாளுக்குநாள் சட்டங்களும், அவைகளின் வியாக்கியானங்களும் மாறிக்கொண்டே வருகின்றன.

புதிய அவசரச் சட்டத்தினாலோ அல்லது புதிய சட்டத்தினாலோ புதிய குற்றங்கள் சிருஷ்டிக்கப்படுகின்றன. பொதுஜனக்கூட்டத்தில் பிரசன்னமாயிருப்பது குற்றமாகி விடலாம். சைக்கிளில் சாவரி செய்வது, சில ரகமான உடுப்புகளை யணிந்து கொள்ளுவது, மாலைப்பொழுதுக்குள் வீடு வராமலிருப்பது, தினமும் போலீஸ் கச்சேரிக்குப் போய் ஆஜர் சொல்லாமலிருப்பது—இவைகளும் இவைகளைப் போன்ற பல செயல்களும் இந்தியாவின் சில பகுதிகளில் இன்றைக்கு குற்றங்களாகக் கருதப்படுகின்றன. தேசத்தின் ஒரு பகுதியில் ஒரு செயல் குற்றமாகலாம். அதே செயல், வேறொரு பகுதியில் குற்றமாகாமலும் இருக்கலாம். யாதொரு அறிவிப்பும் இல்லாமல் பொறுப்பற்ற அரசியல் நிர்வாகிகள், இந்தச் சட்டங்களை ஆக்கும்பொழுது, சட்ட ரீதி என்ற சொல்லுக்கு அதிகாரிகளின் விருப்பத்துக்குக் கட்டுப்படுதல் என்றுதான் அர்த்தமாகும். வேறு அதற்கு அர்த்தம் கொடுக்கமுடியாது. சாதாரணமாக, அந்த விருப்பத்துக்கு சம்மதப்பட்டோ, சம்மதப்படாமலோ கீழ்ப்படிந்து நடக்கவேண்டியதாகத்தான் இருக்கிறது. கீழ்ப்படிந்து நடக்காதவர்களுக்கு ரொம்பவும் கஷ்டங்கள் உண்டாகின்றன. ஆனால் அந்த விருப்பத்துக்கு, தான் எப்பொழுதுமே கீழ்ப்படிந்து நடப்பதாக ஒருவன் சொல்லுவானாகில், அது பொறுப்பற்ற அதிகாரத்துக்கும் யதேச்சாதிகாரத்துக்கும் கேவலமாக சரணாகதி செய்வதாகும். அவன் தன்னுடைய மனச் சாட்சியை விட்டுக்கொடுக்கிறான் என்றே பொருளாகும். அவனுடைய செயல்கள் சம்பந்தப்பட்டவரையிலும், விடுதலை என்பது அவனுக்கு ஒருநாளும் சாத்தியப்படாத சங்கதியாகும்.

ஜனநாயக ஆட்சி முறை இருக்கும் தேசங்களில், இப்பொழுது ஒரு வாதம் நிகழ்ந்து வருகின்றது. அரசியல் அமைப்பைத் தழுவிய சாதனங்களால் சாதாரணமுறையில் தீவிரமான பொருளாதார மாறுதல்களைச் செய்யமுடியுமா என்று தர்க்கிக்கப்பட்டு வருகின்றது. முடியாதென்றும் வழக்கமில்லாத புரட்சி சாதனங்களைக் கைக்கொண்டுதான்

ஆகவேண்டுமென்றும் பலர் கருதுகின்றனர். இந்தியாவில் நம்முடைய லட்சியம் சம்பந்தப்பட்ட வரையிலும் இந்த வாதமே பொருத்தமில்லாததாகும். ஏனெனில், அவர்கள் சொல்லுகிற முறையில், நமக்கு அரசியலமைப்பு கிடையாது. ஆகவே அதைத் தழுவிய முறைகளின் மூலமாக, நமது லட்சியத்தை நாம் பூர்த்தி செய்துகொள்ள முடியாது.

வெள்ளைக்காகித ஆட்சியோ, அல்லது அதைப்போன்ற ஒன்றோ இந்தியாவில் அமுலுக்குக் கொண்டுவரப்பட்டால், எல்லாத் துறைகளிலும் அபிவிருத்தி என்பதே இல்லாமல் அடியோடு யாவும் நின்று போகும். விமோசனத்துக்கு புரட்சியை அல்லது சட்டமறுப்பைத் தவிர வேறு வழியே கிடையாது. அப்படியானால் என்ன செய்வது? "மாறுதலே வேண்டாம்; விதியின்படி நடக்கும்" என்று கை கட்டிக் கொண்டிருப்பதா?

இந்தியாவிலே, இன்றைக்கிருக்கும் நிலைமை மிகவும் அசாதாரணமானதாகும். பொதுஜன அலுவல்கள் யாவையும் அரசியல் நிர்வாகிகள் தடுக்கமுடியும்; தடுத்தும் இருக்கிறார்கள். பல இடங்களில் முழுதும் தடுக்காவிட்டாலும், அவைகளை ஒடுக்கி விட்டார்கள். ஆபத்தானது என்று அரசியல் நிர்வாகிகள் கருதும் அலுவல்கள் யாவும் தடுக்கப்பட்டு விடுகின்றன. சென்ற மூன்று வருஷமாகத் தடுக்கப்பட்டது போல பயன் தரும் அலுவல்கள் யாவும் எதிர்காலத்தில் தடுக்கப்படக்கூடும். இந்தத் தடைக்கு கட்டுப்பட்டால், பொதுஜன வேலையை அறவே விட்டுவிட வேண்டியதாய் இருக்கும். அப்படி விட்டுவிடுவது சாத்தியப்படாத சங்கதி.

சட்டப்படியே எப்பொழுதும் அதை மீறாமல் ஒருவன் நடந்து கொள்ளுவான் என்று யாருமே சொல்லமுடியாது. ஜனநாயக ஆட்சி படைத்த நாட்டிலும், சில சந்தர்ப்பங்களில் ஒருவன் தனது மனச் சாட்சியைக் காப்பாற்றிக் கொள்வதற்காக சட்டத்தை மீறி நடக்க வேண்டியதாய் இருக்கிறது. எதேச்சாதிகாரம் அல்லது கொடுங்கோன்மை நிலவும் நாட்டில், இத்தகைய சந்தர்ப்பங்கள் அடிக்கடி நேருகின்றன. இத்தகைய ஆட்சி நடைபெறும் நாட்டில் சட்டத்துக்கு அதற்கு இயற்கையாகவுள்ள மதிப்பு இல்லாமற் போய்விடுகின்றது.

"நேர் போராட்டம் எதேச்சாதிகாரத்துக்குப் பொருத்தமாயுள்ளது. அதற்கும் ஜனநாயகத்துக்கும் சம்பந்தமில்லை. ஜனநாயகம் வெற்றி பெற வேண்டுமென்று ஆசைப்படுபவர்கள் நேர் போராட்டத்தைக் கனவிலும் கருதலாகாது" என்று மிதவாதிகள் சொல்லுகின்றார்கள். இது குழப்பமடைந்த சிந்தனையாகும்; கண்டபடி எழுதுகிற எழுத்துகளாகும். சில சமயங்களில் நேர் போராட்டம், உதாரணமாக தொழிலாளிகளின் வேலை நிறுத்தம், சட்டம் மீறிய செயலல்ல. ஆனால், நேர் போராட்டம் என்பதை அரசியலில் நேர் போராட்டம் என்று குறிப்பிடுவதாகச் சொல்லப்படலாம். ஜெர்மனியில் இன்றைக்கு ஹிட்லர் ஆட்சியில் எத்தகைய போராட்டம் சாத்தியமானது? ஒன்று, கேவலமாக சரணாகதி செய்ய வேண்டியது, அல்லது சட்டத்தை மீறி புரட்சிவேலை செய்யவேண்டியது. ஜெர்மனியில் ஜனநாயகத்துக்காக எப்படி பாடுபடுவது?

இந்திய மிதவாதிகள் அடிக்கடி ஜனநாயகத்தைப்பற்றி குறிப்பிடுகின்றார்கள். ஆனால், அவர்களில் பெரும்பான்மையோருக்கு அதன் கிட்டகூட நெருங்கப் பிரியமில்லை. மிதவாதத் தலைவர்களுள் சிறப்பானவர்களில் ஒருவரான ஸர். பி. எஸ். சிவசுவாமி அய்யர் அவர்கள் 1934-ம் வருடம் மே மாதத்தில் "ஜனப்பிரதிநிதிக்கூட்டமான கான்ஸ்டிடுவேண்ட் அஸெம்பிளியைக் கூட்டவேண்டுமென்று காங்கிரஸ் பிரசாரம் செய்யும் பொழுது அது பொது ஜனங்களின் அறிவில் அதிகமான நம்பிக்கை கொண்டிருப்பதாக தெரிவித்துக் கொள்ளுகிறது. வட்ட மேஜை மகாநாடுகளில் கலந்து கொண்ட மனிதர்களின் சிரத்தையையும், வல்லமையையும் காங்கிரஸ் அலக்ஷியம் செய்வதாகவும் தெரிகிறது. வட்ட மேஜை மகாநாடுகளைக் காட்டிலும் ஜனப்பிரதிநிதி மகாநாடு அதிகமாக எதையும் சாதித்திருக்க முடியுமென்று எனக்குத் தோன்றவில்லை" என்று கூறியிருக்கிறார்.

ஸர். சிவசுவாமி அய்யர் அவர்கள் ஜனநாயகத்தைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது, பொது ஜனங்கள் இல்லாத ஒன்றை அவர் குறிப்பிடுகின்றார் என்று தெரிகிறது. பிரிட்டிஷ் அரசாங்கத்தாரால் நியமனம் செய்யப்பட்ட சிரத்தையும் வல்லமையும் வாய்ந்த மனிதர்களே ஜனநாயகத்தின் பேரால் அவர் குறிப்பிடுகின்றார் போலும்! மேலும் வெள்

ளைக் காகிதத்தில் அவருக்கு பூரண திருப்தி இல்லாவிடினும் முற்றிலும் அதை யெதிர்ப்பது உசிதமாகாதென்று கருதி அவர் வெள்ளைக் காகிதத்தைப் பாராட்டுகிறார். பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கும் ஸர். பி. எஸ். சிவசுவாமி அய்யர் அவர்களுக்கும் இடையே பூரண ஒத்துழைப்பு இல்லாமலிருப்பதற்கு யாதொரு காரணமுமில்லை.

காங்கிரஸ் சட்டமறுப்பை வாபஸ் வாங்கிக்கொண்டதை மிதவாதிகள் இயற்கையாகவே வரவேற்றார்கள். "இந்த முட்டாள்தனமான, யோசனையில்லாத இயக்கத்திலிருந்து' தாங்கள் விலகி நின்றதற்காக தங்களுடைய பூரண ஞானத்தை அவர்கள் பாராட்டிக்கொண்டு அதற்காகக் கீர்த்தியை விரும்பினால் அது ஆச்சரியப்படவேண்டிய விஷயமாகுமா? "நாங்கள் அப்பொழுதே சொல்லவில்லையா" என்று அவர்கள் நம்மிடம் சொன்னார்கள்; அது ஒரு வினோதமான வாதம். தலை நிமிர்ந்து நின்று நாம் நேர்த்தியாகப் போராடினோம்; போராட்டத்தில் நம்மை நமது எதிரிகள் அடித்துக் கீழே வீழ்த்தி விட்டார்கள். இது உண்மைதான். இந்தக் காரணத்தைக் கொண்டு எழுந்து நிமிர்ந்து நிற்பது கெட்ட செயல் என்று முடிவு கட்டிவிடலாமா? மார்பால் ஊர்ந்து செல்லுவதுதான் உயர்ந்ததும், பத்திரமானதுமான வழிபோலும்! ஏனெனில் தரையில் கிடப்பவனை அடித்து வீழ்த்த முடியுமா? தரையில் படுத்துக் கொண்டிருப்பவன் எப்படி விழ முடியும்?

# LIII

## புராதன, நூதன இந்தியா

இந்திய தேசியம் அன்னிய ஆட்சியின்பேரில் ஆத்திரப் படுவது இயற்கையாகும்; தவிர்க்க முடியாததுமாகும். இருந் தாலும், பத்தொன்பதாவது நூற்ருண்டின் கடைசிவரையி லும் நமது அறிவாளிகளில் பலர், பிரிட்டிஷ் சாம்ராஜ்ய நோக் கத்தை தெரிந்தோ தெரியாமலோ, எவ்வாறு ஏற்றுக்கொண் டார்களென்பது விநோதமாயிருக்கிறது. அவர்கள் சாம்ராஜ் யத்தை ஏற்று, அதன் பேரில் தங்களுடைய கட்சிவாதங்களை உண்டாக்கிக்கொண்டு, அந்த சாம்ராஜ்யத்தின் வெளித் தோற்றங்களில் சிலவற்றைக் கண்டித்தார்கள். பள்ளிகளி லும் கல்லூரிகளிலும் கற்பிக்கப்பட்ட சரித்திரம் பொருளா தாரம் முதலிய நூல்கள் பிரிட்டிஷ் சாம்ராஜ்ய பார்வை யைக்கொண்டுதான் முழுதும் எழுதப்பட்டன. அந்த நூல் களில் நமது அளப்பரிய பண்டைக் குறைகளும் தற்போது இருக்கும் குறைகளும் அழுத்திச் சொல்லப்பட்டன. பிரிட் டிஷாரின் குணதிசயங்களும் அவர்களுடைய உன்னத வாழ் வும் புகழப்பட்டன.

இந்த அரைகுறை வரலாற்றை நாம் ஓரளவு ஏற்றுக் கொண்டோம். நாம் அதை உள்ளுக்குள்ளாகவே எதிர்த்த போதிலும், அவைகளால் நாம் பல துறைகளிலும் மாறுதல் அடையும்படியாக ஆயிற்று. துவக்கத்தில் நாம் அவை களை நம்ப வேண்டியதாயிற்று. ஏனென்ருல், நமக்கு அப் பொழுது வேறு வகையில் விஷயங்களோ வாதங்களோ தெரியாது. ஆகவே, நாம் மத சம்பந்தமான தேசியத்தைக் கொண்டு ஆறுதல் பெற முயன்ருேம். மதத்திலும் தத்துவத் திலும் நாம் எந்த நாட்டாருக்கும் சளைத்தவர்களல்ல என்ற எண்ணம் கொண்டிருந்தோம். மேனுட்டின் மினுமினுப்பான வெளித்தோற்றம் நம்மிடமில்லாவிடினும் நிலைத்ததும் தேவை யானதுமான தெய்வ பக்தியும் மதப்பற்றும் உண்மையி லேயே நம்மிடம் இருக்கின்றன என்ற எண்ணத்தைக்

கொண்டு நம்முடைய துர்ப்பாக்கியத்திலும் சீரழிவிலும் கூட நாம் நம்மைத்தேற்றிக்கொண்டு வந்தோம். ஸ்வாமி விவே கானந்தர் மூலமாகவும், ஐரோப்பிய கலைவாணர்கள் நம்மு டைய பழைய தத்துவங்களில் காண்பித்த சிரத்தையினாலும் நமக்கு மீண்டும் ஓரளவு தன்மதிப்பு உண்டாயிற்று. நமது பண்டைப் பெருமையைப் பற்றி நமது உள்ளத்தில் அடங் கிக் கிடந்த கர்வமும் கிளப்பி விடப்பட்டது.

சிறிது சிறிதாக, நமது புராதன, தாற்காலிக நிலைமை களைப்பற்றி பிரிட்டிஷார் வெளியிட்ட கருத்துக்களை நாம் ஊன்றிக் கவனித்து ஆராய்ச்சி செய்து, அவைகளைச் சந்தே கிக்கத் துவக்கினோம். ஆனாலும் பிரிட்டிஷாரின் சாம்ராஜ்ய திட்டத்துக்குள்ளாகவே, நம்முடைய ஆராய்ச்சியும் யோசு னையும் நிகழ்ந்து வந்தன. ஒரு பொருள் கெட்டதானால், அதைக் குறிப்பிடுவதற்கு, "பிரிட்டிஷ் தன்மைக்கு விரோத மானது" என்று நாம் குறிப்பிட்டு வந்தோம். இந்தியாவில் பிரிட்டிஷ்காரன் தவறு செய்தால், அந்தத் தவறு அவனு டையதாகும். அந்த சாம்ராஜ்ய ஏற்பாட்டின் தவறு அல்ல என்று எண்ணினோம். ஆனால், இந்தியாவில் நடைபெறும் பிரிட்டிஷ் ஆட்சியை ஆராய்ந்து கோத்த ஆராய்ச்சிகள் யாவும், அவைகளுடைய தன்மையில் மிதவாதப் போக்கு கொண்டவையாக இருந்தபோதிலும், எதிர்பாராத புரட்சிப் பயனை உண்டாக்கி விட்டன. அவைகள் மூலமாக, நமது தேசியத்துக்கு அரசியல் துறையிலும் பொருளாதாரத் துறை யிலும் அஸ்திவாரம் ஏற்பட்டது.

தாதாபாய் நௌரோஜி எழுதிய "வறுமையும் இந்தியா வில் பிரிட்டிஷ் தன்மையில்லாத ஆட்சியும்" என்ற நூலும் ரோமேச சந்திர தத்தர், வில்லியம் டிக்பி முதலியவர்கள் எழுதிய நூல்களும் நம்முடைய தேசிய மனப்பான்மை புரட்சித்தன்மை கொண்டு வளருவதற்கு காரணமாயிருந் தன. புராதன இந்திய சரித்திரத்தில் மேலும் ஆராய்ச்சி செய்து பார்த்ததில், பண்டைக்காலத்தில் அநேக சகாப்தங் களில் உயர்ந்த நாகரிகமும், ஒளிபொருந்திய வாழ்க்கையும் இருந்ததாக வெளியாயிற்று. இவைகளை நாம் திருப்தியுடன் படிக்கிறோம். பிரிட்டிஷ்காரர்கள் எழுதிவைத்த சரித்திரப் புத்தகங்களிலிருந்து நாம் இதுவரையில் படித்ததற்கு மாறாக, பிரிட்டிஷ்காரர்களின் அலுவல்கள் இந்தியாவில்

வேறு வகையாக இருந்தனவென்றும் நாம் ஆராய்ச்சியின் மூலமாகக் கண்டுகொண்டோம்.

சரித்திரத்திலும் பொருளாதாரத் துறையிலும், இந்திய அரசியல் நிர்வாகத்திலும், நமக்கு மாறுபட்ட கருத்துகள் ஏற்பட்டன. இருந்தாலும் பிரிட்டிஷார் வரைந்த கொள்கைகளுக்குள்ளேயே, நாம் ஓடி ஆடி அலைந்து திரிகின்றோம். இருபதாம் நூற்றாண்டுத் துவக்கத்தில் மொத்தத்தில் இந்திய தேசியத்தின் போக்கு இவ்வாறுதான் இருந்தது. இத்தகைய மனப்பான்மைதான் இப்பொழுதும் மிதவாதிகளிடமும் வேறு சில்லரைக் கூட்டங்களிடமும் இருந்துவருகின்றது. காங்கிரஸ்காரர்களில்கூட மிதவாதிகளாயிருப்பவர்கள், உணர்ச்சியில் தீவிர போக்கு காட்டுகின்றார்களே தவிர, பத்தொன்பதாம் நூற்றாண்டின் மனப்போக்கிலேயே இன்னும் மூளையைக் குழப்பிக்கொண்டிருக்கிறார்கள். இதனாலேதான் இந்திய மிதவாதிக்குப் பூரண சுதந்திரம் பிடிபடவேயில்லை. அவருடைய மனப்பான்மையும் பூரண சுதந்திரக் கருத்தும் அடிப்படையில் முரண் கொண்டவைகளாகும். சிறுகச் சிறுக பெரிய உத்தியோகங்களுக்குப் போய், பெரிய பெரிய காரியங்களை அவை மூலமாகச் செய்யலாம் என்று மிதவாதி கருதுகிறார். முன்போலவே, அரசியல் இயந்திரம் நயமாக போய்க்கொண்டிருக்குமாம். ஆனால், அதை நடத்துபவர்மட்டும் அவராம்! அவருடைய காட்சியில் தட்டுப்படாமல், பிரிட்டிஷ் சேனை எங்கேயோ மறைந்து நின்றுகொண்டிருந்து, தேவையானபொழுது, அவருக்கு பாதுகாப்பு அளிக்குமாம்! சாம்ராஜ்யத்துக்குள் குடியேற்றநாட்டு அந்தஸ்து என்பதற்கு மிதவாதி இவ்வாறு பொருள்செய்துகொள்ளுகிறார். இது போலி நம்பிக்கை; என்றைக்கும் சாத்தியப்படக்கூடாதது. ஏனெனில், பிரிட்டிஷ் பாதுகாப்பின் விலை இந்தியாவின் அடிமைத்தனமல்லவா? மகத்தான ஒரு தேசத்தின் தன்மதிப்புக்கு சீரழிவு ஏற்படுவது ஓர் புறமிருக்க, பிறர் பாதுகாப்பும் நம் அதிகாரமும் ஒன்று சேர்ந்திருக்க முடியாது.

இந்திய தேசியத்தில் அனுதாபமில்லாத ஸர். பிரடரிக் ஒயிட் என்பார் சமீபகாலத்துக்கு முன் எழுதிய நூலில், இங்கிலாந்து "ஆபத்துக்கும் இந்தியனுக்கும், நடுவே நின்று, அவனைக் காப்பாற்றும் என்று இந்தியன் இப்பொழுதும்

எண்ணிக்கொண்டிருக்கிறன். இந்த ஏமாற்றத்தில் அவன் வளர்ந்துகொண்டுவரும் வரையில், அவனுடைய லட்சியமான ஸ்வராஜ்யத்துக்கு அவனால் அடிகோலவே முடியாது" என்று எழுதுகிறர். அவர், அநேகமாக மிதவாதிகளையோ அல்லது பிற்போக்கு கொண்ட வகுப்பு வாத இந்தியர்களையோ குறிப்பிட்டிருக்க வேண்டும். ஏனெனில் அவர் இந்தியா சட்டசபையில் தலைவராய் இருக்கையில் இத்தகைய பேர்வழிகளோடுதான் அதிகமாகப் பழகியிருக்க முடியும். இது காங்கிரஸின் நம்பிக்கையே அல்ல. காங்கிரஸைக் காட்டிலும் தீவிரக் கருத்து கொண்டவர்கள் இவ்வாறு நினைப்பதே இல்லை. இந்த ஏமாற்றம் தொலைந்து அவசியமானல் இந்தியா ஆப்த்தை எதிர்த்துப் போராடத் தயாராகவிருந்தால் ஒழிய, இந்தியாவுக்கு சுதந்திரம் இருக்க முடியாது என்று ஸர். பிரெடரிக் சொல்லுவதைக் காங்கிரஸ் காரர்களும் தீவிர வாதிகளும் ஏற்றுக்கொள்ளுவார்கள். பிரிட்டிஷ் ராணுவப் பிடிப்பிலிருந்து இந்தியா என்றைக்கு விடுபடுகின்றதோ அன்றைக்குத்தான் இந்தியாவின் சுதந்திரம் தோன்றும். 19-ம் நூற்றுண்டின் இந்திய அறிவாளிகள் பிரிட்டிஷாரின் கருத்துகளுக்குள் சிக்கிக்கொண்டதில் ஆச்சரியமே இல்லை. 20-ம் நூற்றுண்டில் பரபரப்பான நிகழ்ச்சிகளும் மாறுதல்களும் ஏற்பட்ட பின்னரும்கூட இந்த மயக்கம் தெளியாமல் சில ஜனங்கள் இருக்கிறர்களே அதுதான் ஆச்சரியமாய் இருக்கிறது. 19-ம் நூற்றுண்டில் பிரிட்டனில் ஆளும் வகுப்பைச் சேர்ந்தவர்கள் உலகப் பிரமுகர்களாக விளங்கினர்கள். அவர்களிடம், செல்வம், அதிகாரம், வெற்றி இவைகள் பெருமிதமாக இருந்தன. இவைகள் நீண்டகாலமாக அவர்களிடம் இருந்து வந்ததால் பிரமுகர்களுக்கு இயற்கையான நல்ல தன்மைகளும் தீய குணங்களும் அவர்களுக்கு இருந்தன.

அவர்களுடைய இறுமாந்த உயர் நிலைக்குத் தேவையான பயிற்சியையும் பொருள்களையும் சென்ற நூற்றெழுபத்தைந்து ஆண்டுகளாக நாம் அவர்களுக்கு மிகுதியும் கொடுத்து உதவி வந்தோம் என்ற ஆறுதலை வேண்டுமானல் இந்தியர்கள் கொள்ளலாம். அவர்கள் தங்களைக் கடவுளின் சுவீகாரக் குழந்தைகளாகவும் தங்கள் சாம்ராஜ்யத்தை மண்ணில் சுவர்க்கமாகவும் எண்ணிக் கொள்ளத் துவக்கினர்கள். இவ்வாறு இதற்கு முன் எத்தனையோ கூட்டத்தாரும் நாட்

டார்களும்எண்ணிக்கொண்டிருந்திருக்கிறார்கள். பிரிட்டிஷார் களுடைய சிறப்பான நிலைமை ஏற்றுக்கொள்ளப்பட்டு அவர் களுடைய உயர்வு ஒப்புக்கொள்ளப்பட்டவரையிலும் அவர் கள் காருண்யத்தோடும் நல்ல தன்மையோடும் விளங்கினார் கள். ஆனால் தங்களுடைய காருண்யத்தால் தங்களுக்கு நஷ் டம் வாராமலும் பார்த்துக்கொண்டார்கள். அவர்களைஎதிர்த் தால் தெய்வீகத் திட்டத்தை எதிர்த்தது போலாகும் என் பது அவர்களுடைய எண்ணம். ஆகவே அத்தகைய பயங் கரமான பாடத்தை அவர்கள் நசுக்கிவிட வேண்டுமல்லவா?

பொதுவாகவே இத்தகைய மனப்பான்மையை உலகத் தில் எல்லோரிடத்திலும் அவர்கள் காண்பித்தாலும் அது இந்தியாவிலே மிகவும் சிறப்பாகக் காணப்பட்டது. இந்தி யப் பிரச்னையைத் தீர்ப்பதற்கு பிரிட்டிஷார் கைக்கொள்ளும் முறையும் மனப்பான்மையும் விநோதம் கொண்டதா கும். அந்த வழியைக் கண்டால் நமக்கு ஆத்திரமாக இருக் கிறது. எப்பொழுதும் நேர்மையாக இருப்பதாக எண்ணம்; பெரிய பொறுப்பைத் தகுதியோடு ஏற்றதாக உணர்ச்சி; தங்களுடைய ஜாதிப் பெருமையிலும் தங்களது சொந்த சரக்கான சாம்ராஜ்யத்திலும் நம்பிக்கை; இத்தகைய உண் மையான நம்பிக்கையின் அஸ்திவாரங்களை எதிர்ப்பவர்க ளிடத்தும் நாஸ்திகர்களிடத்தும் அவர்களுக்கு ஆத்திரமும் அலட்சியமும்-இப்பேர்ப்பட்டமனப்பான்மையில் மதவெறி சிறிதளவு இருக்கின்றது. பழைய காலத்து மதவெறி கொண் டவர்களைப்போல, அவர்கள் நம்முடைய விமோசனத்தில் நமக்கு எத்தகைய விருப்பங்கள் இருந்தபோதிலும் அதைப் பற்றி கவலைகொள்ளாமல், நம்மை எப்படியேனும் காப்பாற் றித் தொலைக்கவேண்டும் என்று அவர்கள் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறார்கள்.

இதன் மத்தியிலே, இந்த தர்மத்தைக்கொண்டு வியா பாரம்செய்து லாபமடைந்து "நேர்மைதான் சிறந்தவழி" என்ற பழைய பழமொழியின் உண்மையை மெய்ப்பித்து வருகின்றார்கள். இந்தியாவின் அபிவிருத்தி என்றால், இந்தியா எவ்வளவு வரையில் சாம்ராஜ்யத் திட்டத்தோடு இசைந்து கொள்ளுகிறதோ, அதைப் பொருத்ததாகக் கருதப்பட்டது. பொறுக்கி எடுத்தஇந்தியர்களை பிரிட்டிஷ் வார்ப்புத் திட்டத் துக்கு இணங்கப் பயிற்சி செய்துவிட்டால் அது இந்தியா

வின் அபிவிருத்தியாகக் கருதப்பட்டது. பிரிட்டிஷ் கருத்து களையும் இலட்சியங்களையும் எவ்வளவு அதிகமாக நாம் ஒப்புக்கொள்ளுகிறோமோ, அதற்குத் தக்கவாறு நாம் ஸ்வராஜ்யத்துக்குத் தகுதியுள்ளவர்களாகக் கருதப்பட்டோம். பிரிட்டிஷ்காரர்களின் விருப்பத்திற்கு ஏற்றமாதிரிதான் நாம் அந்தத் தகுதியை உபயோகப்படுத்துவோமென்று நாம் நிதர்சனமாக வெளிக்காண்பித்ததும் நமக்கு சுதந்திரம் தானாகவே வருமாம்!

இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின் சரிதத்தைப்பற்றி இந்தியர்களுள்ளும் இங்கிலீஷ்காரர்களுள்ளும் கடுமையான அபிப்பிராய பேதம் இருக்குமென்று நான் நினைக்கிறேன். அது இயல்புதான். ஆனால் விஷயத்தில் ஆதாரமில்லாமல் கண்டதைச் சொல்லுவதையும்,இந்தியாவின் புராதன காலத்தையும் தற்காலத்தையும் பற்றி கற்பனைச் சித்திரங்கள் வரைவதையும் இந்தியா மந்திரி உள்பட, உயர்தர பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர்கள் தங்கள் தொழிலாகக் கொண்டிருப்பார்களாகில் அது நம்மை ஆத்திரப்படச் செய்கின்றது!

நிபுணர்களையும் மற்றும் சிலரையும் தவிர, பொதுவாக இங்கிலீஷ் பொதுஜனங்கள், இந்தியாவைப்பற்றிஎத்தகைய அறியாமையில் ஆழ்ந்திருக்கிறார்கள் என்பது மிகுதியும் வியக்கத்தக்கதாகும். இந்தியாவில் நடைபெறும் நிகழ்ச்சிகளையே அவர்களால் சரிவர அறியமுடியாமற் போகுமாயின், அவர்களால் இந்தியாவின் மனப்பான்மையைக் கண்டு பிடிக்க முடியுமா? அவர்கள் இந்தியாவின் உடம்பைப்பற்றிக் கொண்டு, அவளை உடைமையாக்கிக்கொண்டார்கள். ஆனால் அது பலாத்காரத்தால் ஏற்பட்ட உடைமையாகும், அவர்கள், அவளை நேரே அறிந்து கொள்ளவில்லை; அறிந்துகொள்ளவும் முயற்சி செய்யவில்லை. அவர்கள் அவளுடைய கண்களுக்குள் பார்த்ததும் கிடையாது. ஏனென்றால் அவர்களுடைய கண்கள் வேறுதிக்குகளை நோக்கி நின்றன. அவளுடைய கண்களோ வெட்கத்தாலும், அவமானத்தாலும் கீழ்நோக்கி நின்றன. பல நூற்றாண்டுகள் ஒருவரோடு ஒருவர் பழகிப் பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். ஆனால் இருவரும் பரஸ்பரம் அன்னியர்களாகவே இன்னும் இருந்து வருகின்றார்கள். அவர்களுக்குள் பரஸ்பரம் தீரா வெறுப்பு நிறைந்து நிற்கின்றது.

இந்தியாவுக்கு எவ்வளவோ வறுமையும் சீரழிவும் நேர்ந்தபோதிலும் அவளது கம்பீரமும் மகத்துவமும் மட்டும் போகவில்லை. தற்காலிக கஷ்டங்களாலும் மட்டும் பண்டைய மூடபக்தி பரம்பரையாலும் அவள் தளர்ந்து கிடந்தாலும், அவளுடைய பிரபாவம் அழிந்து போய்விடவில்லை. இந்தியாவின் கண்கள் சோர்ந்து போயிருக்கலாம். இருந்தாலும் ரஸமான கருத்துகளாலும், கற்பனை நிறைந்த சிந்தனைகளாலும் நேர்த்தியான ரஸ பாவங்களாலும், இந்தியாவுக்கு ஒரு வகை சோபிதமான அழகு வரையப்பட்டிருக்கிறது. இந்தியாவின் தளர்ந்த உடலின் உள்ளேயும் வெளியிலும் அவளுடைய ஆன்மாவின் கம்பீரக் காட்சியைக் காணலாம். நெடுங்காலமாக இந்தியா வாழ்க்கைப் பிரயாணத்தில் ஈடுபட்டு வந்திருப்பதால், வழிநெடுகவும், அவள் அபூர்வமானஞானத்தைத் திரட்டிக் கொண்டு வந்திருக்கிறாள். அன்னியர்களோடு உறவாடி அவர்களையும் தன்னுடைய பெரியகுடும்பத்தோடு சேர்த்துக் கொண்டிருக்கிறாள். நாசம் நிறைந்து நின்ற நாட்களை அவள் கண்டித்திருக்கிறாள். பயங்கரமான துக்கத்தையும், அவமானத்தையும், அடைந்திருக்கிறாள். இன்னும் பல விநோதக் காட்சிகளையும் கண்டிருக்கிறாள்.

ஆனால், அவளுடைய நீண்டவழிப் பிரயாணத்தில், தன்னுடைய நாகரிகத்தை விடாமல் பிடித்துக்கொண்டு, அதனின்றும் வல்லமையையும் ஜீவசக்தையும் கிரகித்து, அதை வேறு நாடுகளோடு பங்கு போட்டுக்கொண்டிருக்கிறாள். கடியாரத்தின் பெண்டுலத்தைப்போல, அவள் கீழும் மேலும் ஆடிக்கொண்டிருந்தாள். அவளுடைய கருத்தின் கற்பனைத் துணிவால் சுவர்க்கங்களுக்குப் போய் அவைகளின் இரகசியங்களை விள்ளத்துணிந்தது, அவள் நரகக்குழியில் வீழ்ந்து மிகக் கசப்பான அனுபவத்தையும் கண்டாள். அவளுடன் ஒட்டிக்கொண்டுகிடக்கும் மூடபக்தியும் கெட்ட பழக்கங்களும் பெருக்கடைந்து அவளைக் கீழே பிடித்திழுத்தாலும் சரித்திரம் துவக்கும் காலத்தில், மேதாவிகளான அவள் குழந்தைகள் அளித்த உபநிஷதங்களின் ஆவேசத்தை, அவள் முழுதும் மறந்துவிடவில்லை. அந்த மேதாவிகள் மிகவும் கூர்மையான அறிவுப்படைத்தவர்கள். அவர்களுக்கு ஓய்வே கிடையாது. எப்பொழுதும் முயற்சி, எப்பொழுதும் ஆராய்ச்சி; குருட்டு நம்பிக்கையில் அவர்கள் அடைக்கலம் புகவில்லை. உயிரற்ற சடங்குகளில் நம்பிக்கை கொண்டு, ஆத்ம திருப்தி அடைய

வில்லை. தற்போதைய துயரத்தினின்றும் அவர்கள் ஆறுதலை வேண்டி நிற்கவில்லை. வரும் காலத்தில் சுவர்க்கத்தில் தனி இடத்தையும் விரும்பவில்லை. அவர்கள் வேண்டினதெல்லாம் ஒளியும், அறிவுமாகும்.

"நிலைத்து நிற்காததிலிருந்து, நிலைத்துநிற்கும் ஒன்றுக்கு என்னை இட்டுக்கொண்டுபோவாயாக! இருளிலிருந்துவெளிச்சத்துக்கு அழைத்துச் செல்லுவாயாக! மரணத்திலிருந்து விடுபட்டு எனக்கு அமரத்துவம் அருள்வாயாக!" என்று பிருகதாரண்யக உபநிஷத்தில் கூறப்பட்டிருக்கிறது. தினம் கோடிக் கணக்கானவர்கள், துதி செய்யும் காயத்திரி மந்திரத்தில்கூட, அறிவுக்காகவும் ஒளிப் பிரகாசத்துக்காகவும் தான் பிரார்த்தனை செய்யப்படுகிறது.

அரசியல் துறையில் அடிக்கடி அடிபட்டு கீழே விழுந்தாலும், இந்தியா தனது பொதுவான பொக்கிஷத்தை எப்பொழுதுமே காப்பாற்றி வந்திருக்கிறது. இத்தனை முரண் கொண்ட நிலைமைகளின் ஊடே வியக்கத்தக்க ஒற்றுமை பொலிந்து விளங்குகின்றது. எல்லாப் புராதன நாடுகளையும் போலவே, இந்தியாவிலும் நல்லதும் இருந்தது, கெட்டதும் இருந்தது. நல்லது மறைந்துபோய், அதைத் தேடவேண்டிய தேவை ஏற்பட்டது. ஆனால், அதனுடைய சீரழிவின் நாற்றம் மட்டும் நிதரிசனமாகக் கண்ணுக்குப்பட்டது. கொளுத்திக்கொல்லும் சூரிய வெளிச்சத்தின் மூலமாக, அதனுடைய கெட்டதெல்லாம் பகிரங்கமாக விளம்பரமாகிவிடுகின்றன. இத்தாலிக்கும் இந்தியாவுக்கும் ஒருவகையில் உவமைஇருக்கின்றது. இரண்டு நாடுகளும் புராதன நாடுகள். இரண்டு நாடுகளுக்கும் நீண்டகாலமாக தனி நாகரிகங்கள் இருக்கின்றன. இந்தியாவோடு இத்தாலியை ஒப்பிட்டுப் பார்த்தால், அது நேற்று தோன்றிய நாடாக கண்ணில் படும். இந்தியாவின் நிலப்பரப்போ விஸ்தாரமானதாகும். இரண்டு நாடுகளும் அரசியலில் பல கூறுகளாகப் பிளக்கப்பட்டுக் கிடந்தன என்றாலும், "இந்தியாவைப் போலவே இத்தாலி" என்ற பொது உணர்ச்சி ஒருநாளும் அழிந்துபோகவே இல்லை. எத்தனையோ வேற்றுமைகளுக்குள், அந்த ஒற்றுமை மட்டும் தலை தூக்கி நின்றது. இத்தாலியில் ஒற்றுமை என்பது ரோமாபுரியைச்சுற்றி பற்றிக்கொண்டு கிடக்கும் ஒற்றுமையாகும். ஏனென்னில் அந்தப்பெரிய நகரம், இத்தாலியை

ஆட்டிவைத்து அதன் ஒற்றுமைக்கு அறிகுறியாகவும் ஆதாரமாகவும் திகழ்ந்து வந்தது.

இந்தியாவில் அத்தகைய தனியான மத்திய ஸ்தலமாவது, தனிச்சிறப்பு வாய்ந்த நகரமாவது இல்லையானலும், காசி க்ஷேத்திரத்தைக் கீழ்நாடுகளின் சாசுவத நகரம் என்று அழைத்தாலும் தகும். காசி இந்தியாவுக்கு மட்டுமல்ல, கிழக்கு ஆசியாவுக்கே சொந்தமானதாகும். ஆனல் காசி ரோமாபுரி சென்றவழியில் செல்லவில்லை. காசிக்கு சாம்ராஜ்யத்திலாவது, இகலோக அதிகாரத்திலாவது ஆசை கிடையாது. இந்திய நாகரிகம் இந்தியா முழுதும் பரந்து கிடந்தது. எந்த இடத்தையும் அந்த நாகரிகத்துக்கு மத்திய க்ஷேத்திரமாகக் கொள்ளவே முடியாது. குமரி முனையிலிருந்து இமயமலையிலிருக்கும் அமரநாத், பத்ரிநாத் வரைக்கும் துவாரகையிலிருந்து பூரி ஜகந்நாதம் வரைக்கும் ஒரேவிதமான கருத்துகள் தான் உலவிவந்தன. ஏதேனும் ஓரிடத்தில் கருத்துப்போராட்டம் ஏற்பட்டால் அதன் சத்தம் நாட்டின் தூரமான பகுதிகளிலும் எட்டிற்று. மேல் ஐரோப்பாவுக்கு நாகரிகத்தையும் மதத்தையும் இத்தாலி பரிசாக வழங்கியதுபோல, இந்தியா—சீனவும் இந்தியாவைப்போல பழம் பெரும் நாடாக இருந்தபோதிலும்—கிழக்கு ஆசியாவுக்கு அளித்துஉதவிற்று. இத்தாலி, அரசியல் துறையில் அடிபட்டு, கீழே வீழ்ந்துகிடக்கையிலும்கூட அது வழி காட்டிய உயிர் ஐரோப்பிய நாடுகளின் நாடிகளில் அடித்துக் கொண்டுதான் இருந்தது.

“இத்தாலி பூகோள சாஸ்திரத்தில் ஒரு வெறும் பெயராகும்” என்று மெட்டர்னிக் என்பவர் இத்தாலியைப்பற்றி கேலி செய்தார். மெட்டர்னிக்கைப்போல ஆகக்கூடிய பலர் இந்தியாவைப்பற்றியும் இதேமாதிரி கேலி செய்திருக்கிறார்கள். விநோதம் என்னவெனில் இரண்டு நாடுகளின் நிலப் பரப்பு அமைப்புகளும் ஒன்றுபோலிருக்கின்றன. இதைக் காட்டிலும் விநோதமான உவமை, இங்கிலாந்தை ஆஸ்டிரியாவோடு ஒப்பிட்டுப் பார்ப்பதாகும். இருபதாம் நூற்றாண்டு இங்கிலாந்தைப் பத்தொன்பதாம் நூற்றாண்டு ஆஸ்டிரியாவோடு ஒப்பிட்டிருக்கிறார்கள். இரண்டும் சாம்ராஜ்யங்கள்; ஆடம்பரமான, திமிர் பிடித்த கர்வம் நிறைந்த சாம்ராஜ்யங்கள். ஆனல் அந்த சாம்ராஜ்யத்துக்கு அடி வலுவாயிருந்த வேர்கள் சுண்டி வருகின்றன. அந்த சாம்ராஜ்யத்தின் மகத்

தான உடலில் அழிவு நுழைந்து சிறிது சிறிதாக அரித்துக் கொண்டே வருகின்றது.

ஒரு தேசத்துக்கு மனித உருவம் கொடுத்துப் பாராட்டும் சுபாவத்தைத் தடுக்க முடியாதென்று தோன்றுகிறது. இந்தத் தன்மை பழக்கத்தின் பயனாகும். இளமைப்பிராயத்துத் தொடர்புகளின் விளைவாகும். இந்தியாவை பாரத மாதா என்று சொல்லுகிறார்கள். பாரதத் தாய் ஒரு நேர்த்தியான ஸ்திரீ; பெரும் கிழவி; ஆனால் தோற்றத்தில் இளமை கொண்டவள்; துயரக் கண்களைப் பெற்றவள்; எல்லோராலும் கைவிடப்பட்டவள். அந்நியர்களாலும் ஏனையோராலும் கொடுமையாக நடத்தப்படுபவள். அவள் தன்னைக் காப்பதற்காகத் தன் குழந்தைகளைக் கூவி அழைக்கின்றாள்; இத்தகைய சித்திரமொன்று லட்சக் கணக்கானவர்களின் உணர்ச்சிகளை எழுப்பி அவர்களை தியாகத்துக்கும் செயலுக்கும் தூண்டி நின்றது. என்றாலும் இந்தியா என்பது சிறப்பாக "விவசாயியும் கூலிக்காரரும்" என்ற காட்சிதான். அந்தக்காட்சி பார்ப்பதற்கு அழகாய் இராது. ஏனெனில் வறுமை பார்ப்பதற்கு அழகாக இருக்குமா? நமது கற்பனைகளில் விளங்கும் அழகு வாய்ந்த ஸ்திரீ தொழிற்சாலைகளிலும், கழனிகளிலும் கூனிக் குறுகி ஆடையின்றி வேலைசெய்யும் தொழிலாளர்களுக்கு அறிகுறியாக இருக்க முடியுமா? அல்லது நீண்ட காலமாக பொதுஜனங்களை அடக்கி ஒடுக்கி அவர்களைப் பல வகைகளிலும் சுரண்டி கொடுமை கொண்ட பழக்கங்களை அவர்கள்பேரில் சுமத்தி அவர்களில் பலரைத் தீண்டாதார்களாகவும் ஆக்கிவிட்ட சிறு கூட்டத்தார் இருக்கிறார்களே, அந்தக் கூட்டத்தாருக்கேனும் இந்தக் கற்பனைச் சித்திரம் அறிகுறியாக இருக்க முடியுமா? நமது கற்பனைச் சித்திரங்களினால் உண்மையை மறைத்து மூடிவிட்டு, உண்மையை விட்டுத் தப்பித்துக் கொண்டு கனவு உலகத்தில் போய்ச் சேர முயற்சி செய்கின்றோம்.

இந்தியாவில் எத்தனையோ வகுப்புகள் இருக்கின்றன. அவைகளுக்குள் பரஸ்பரம் விரோதம். என்றாலும் அவைகளுக்குள்ளே ஒற்றுமைச் சரடொன்று ஓடிக் கொண்டிருக்கிறது. என்னபிடிவாதமான ஒற்றுமை! என்னபசைகொண்ட ஒற்றுமை! என்ன விடாப்பிடியாக ஒட்டிக்கொண்டிருக்கும் ஒற்றுமை! இந்த வலிமை எதனால் ஏற்பட்டது? பரம்பரை

யினாலும் தாமஸத்தாலும் ஏற்பட்ட வலிமையல்ல. சுறு சுறுப்புகொண்ட நிலைத்த தத்துவத்தைத் தழுவிய வலிமை யாக அது இருக்க வேண்டும். ஏனெனில் அதை எதிர்க்க வந்த வெளி சக்திகளோடு வெற்றியுடன் அது போராடி யிருக்கிறது. அதை அழிக்க வந்த உள்நாட்டு எழுச்சிகளைத் தன்னகத்தில் அது எப்படியோ சேர்த்துக்கொண்டுவிட்டது.

இத்தகைய அருமையான வல்லமை அதனிடம் இருந்த போதிலும் அதனால் அரசியல் சுதந்திரத்தைக் காப் பாற்றிக்கொள்ள முடியவில்லை. அரசியல் ஒற்றுமைக்காக வும் அது பாடுபடவில்லை. அரசியல் சுதந்திரமும் அரசியல் ஒற்றுமையும் விலைபெற்ற சங்கதிகளாகவே மதிக்கப் படவேயில்லை. அவைகளின் தேவை முட்டாள்தனமாக அலட்சியம் செய்யப்பட்டது. அந்த அலட்சியத்தினால், நாம் மிகுதியும் கஷ்டப்பட வேண்டியதாயிற்று. இந்திய சரித்திரம் முழுதிலும், அரசியல் வெற்றிகள் இராணுவ வெற்றிகள் கௌரவமாக மதிக்கப்படவேயில்லை. பணத்தை யும் பணம் தேடும் கூட்டத்தாரையும் அது கேவலமாக மதித்து வந்தது. தனமும் பெருமையும் சேர்ந்து இயங்கும் பொருள்களல்ல என்று கருதப்பட்டது. வெகுமதியைக் கருதாமல், ஜன சமாஜத்துக்கு உழைத்தவர்களே கௌரவிக் கப்பட்டு வந்தார்கள். எத்தனையோ கடுமையான புயல்காற்று கள் எழுந்து வீசினாலும், பழைய நாகரிகம் எப்படியோ தப் பிப் பிழைத்து வந்தது. அந்த நாகரிகத்தின் வெளித்தோற் றம் அழியவில்லை. ஆனால், அதன் உண்மையான உயிர்ச் சத்து அழிந்து போய்விட்டது. முதலாளி ஐரோப்பாவின் வியாபார நாகரிகத்தோடு இன்றைக்கு அது மௌனமாக உயிரை வெறுத்துப் போராட்டம் செய்துகொண்டு வரு கிறது. இந்தப் புதிய நாகரிகம் பெற்ற மேனாட்டு எதிரியிடம் இந்தியாவின் பழைய நாகரிகம் தோற்றுப்போவது நிச்சயம். ஏனென்றால், மேனாட்டு நாகரிகத்தில் விஞ்ஞான ஆராய்ச்சி திகழ்ந்து விளங்குகின்றது. விஞ்ஞான ஆராய்ச்சியால் பட் டினி கிடக்கும் கோடிக்கணக்கானவர்களுக்கு உணவு வசதி தேடிக் கொடுக்க முடியும்.

மேல் நாட்டு நாகரிகத்தின் கொடிய தீமைகளுக்கு மாற் றாகவும் ஒன்றை மேனாடு நமக்குக் கொண்டு வருகின்றது. அந்த மாற்றுக்கு அபேதவாத தத்துவம் என்றுபெயர். கூட் டுறவு என்றுபெயர். பொதுநன்மையைக் கருதி, சமாஜத்துக்

குத் தொண்டுசெய்தல் என்பதாகும். இது பண்டைக்காலத்து பிராமணதத்துவம் போல் இருக்கிறதல்லவா? ஆனால், ஜாதி வித்தியாசங்களையெல்லாம் ஒழித்துவிட்டு, எல்லாக் கூட்டத்தார்களையும் பிராமண மயமாக்கும் தொண்டையேற்ற திட்டம் ஆகும். இந்தியா புதிய உடை தரிக்கப் போவது நிச்சயம். ஏனெனில், அதனுடைய பழைய உடை கிழிந்து சல்லி சல்லியாகப் போய்விட்டது. எனவே, இந்தியா புதிய ஆடையை அணிந்துகொள்ளும்பொழுது, தனது பழைய நாகரிகத்துக்கும் நவீன மேனாட்டுநாகரிகத்துக்கும் பொருத்தமான ஆடை யொன்றை அது தயாரித்துக்கொள்ளவேண்டியதாய் இருக்கும். அது ஏற்றுக் கொள்ளும் கருத்துக்கள் அதன் மண்ணோடு ஒட்டிக்கொண்டு தழுவக் கூடிய தன்மை கொண்டவைகளாய் இருக்க வேண்டும்.

# LIV

## பிரிட்டிஷ் ஆட்சியின் பலன்கள்

இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின் பலன் என்ன? பக்ஷபாத உணர்ச்சி சிறிதுமின்றி முற்றிலும் நடுநிலைமைவகித்து, இந்த நீண்ட காலச் சரிதையைப்பற்றி, எந்த இந்தியனும் அல்லது இங்கிலீஷ்காரனும் முடிவுக்கு வரமுடியாது என்று நான் எண்ணுகிறேன். அந்த மாதிரி முடிவு கட்டுவது சாத்தியப்பட்டாலும், மனப்போக்குகளையும் உணர்ச்சிகளையும் எடைபோட்டு அளப்பது மிகவும் கஷ்டமாகும். இந்தியா, பல நூற்றாண்டுகளாகப் பெற்று அறியாததும், இந்தியாவின் எந்தப் பகுதியிலும் முணுமுணுப்பின்றி ஏற்றுக்கொள்ளும் அரசாட்சி முறை பிரிட்டிஷாரால் இந்தியாவுக்கு அளிக்கப்பட்டிருக்கிறதென்றும் சொல்லப்படுகிறது. சட்டத்தின் ஆட்சியையும், நியாயத்தையும் திறமையையும்கொண்ட நிர்வாகத்தையும் பிரிட்டிஷ் ஆட்சி இந்தியாவுக்குக் கொடுத்திருக்கிறதாம்!

ஐரோப்பிய நாடுகளுக்கு உரித்தான ஜனநாயக ஆட்சி முறையையும், நபர் சுதந்திரக் கருத்துக்களையும் அது இந்தியாவுக்குக் கொண்டு வந்து கொடுத்திருக்கிறதாம்! பிரிட்டிஷ் இந்தியா என்பதை ஒரே ஆட்சிக்கு உட்பட்டதாக செய்துவிட்டபடியால், அது இந்தியர்களுக்குள் ஒருவகையில் அரசியல் ஒற்றுமை உணர்ச்சியை, தூண்டி, தேசீய இயக்கத்துக்கு விதைபோட்டுத் வளர்த்திருக்கிறதாம். இது பிரிட்டிஷாரின் கட்சி வாதமாகும். சட்டத்தின், ஆட்சியும் நபர் சுதந்திரங்களும் பல வருஷங்களாக, இந்தியாவில் காணப்படாவிட்டாலும், மேற்கூறிய வாதத்தில் மிகுதியும் உண்மையிருக்கிறது.

இதே காலத்தை, இந்தியக் கண்ணோடு பார்த்தால், வேறு விளைவுகள் கண்ணில் அழுத்தமாகப் பதிகின்றன. அன்னிய ஆட்சியால் நமக்கு ஏற்பட்டிருக்கும் இகபரதீமை

கள் முக்கியமாகக் கூறப்படுகின்றன. இரண்டு பார்வைகளும் மகத்தான வேற்றுமை கொண்டவைகளாகும். பிரிட்டிஷார் எதைப் புகழுகின்றார்களோ, அதையே இந்தியர்கள் கண்டிக்கின்றார்கள். பிரிட்டிஷ் ஆட்சியால் ஏற்பட்ட விசேஷ முரண்களில் ஒன்று குறிப்பிடத்தக்கது. "அந்த ஆட்சியால் ஏற்பட்ட மகத்தான தீமைகள் யாவும் வெளித் தோற்றத்தில் நன்மைகளாகக் காணப்படுகின்றன" என்று டாக்டர் ஆனந்த குமாரஸாமி எழுதுகிறார்.

உண்மையிலேயே, இந்தியாவில் சென்ற நூற்றாண்டிலும் அதற்கு முன்னும் நிகழ்ந்த மாறுதல்கள் யாவும் உலகத்துக்குப் பொதுவான மாறுதல்கள்தான். மேல் ஐரோப்பாவில் முதலில் தொழிலபிவிருத்தி ஏற்பட்டு பின்னர் அது உலகம் முழுதும் பரவிற்று. அந்தத் தொழிலபிவிருத்தியினால் ஒவ்வொரு நாட்டிலும் தேசியமும், வல்லமை பொருந்திய ஆட்சியும் உண்டாயின. இந்தியாவின் ஜன்னலை ஐரோப்பாவுக்கு முதன்முதல் திறந்து விட்ட கீர்த்தியையும், இந்தியாவுக்கு தொழிலபிவிருத்தியையும் விஞ்ஞான சாஸ்திரத்தையும் கொண்டுவந்த கீர்த்தியையும் வேண்டுமானால் பிரிட்டிஷார் பாத்தியம் கொண்டாடி எடுத்துக்கொள்ளலாம். ஆனால், அவர்கள் சிறிதளவு தொழிலபிவிருத்தியைத் தூண்டி விட்டு மேற்கொண்டு நாட்டில் தொழிலபிவிருத்தி ஏற்படாமல் அதன் கழுத்தை முறித்துவிட்டார்கள். பின்னர் அவர்களை மீறியே இந்தியாவில் தொழில் அபிவிருத்தியில் முற்போக்கு உண்டாயிற்று.

மேல் ஆசியா இஸ்லாம் நாகரிகமும், வெகுதூரம் கிழக்கு நோக்கிப் பரவியிருந்த இந்தியாவின் சொந்த நாகரிகமும் ஏற்கனவே இந்தியாவில் சந்தித்துப் பின்னிக் கொண்டு கிடந்தன. இப்பொழுதோர் மூன்றாவதாயும் மிகவும் வல்ல்மை பொருந்தியதாயும் உள்ள நாகரிகமொன்று ஐரோப்பாவிலிருந்து வந்து சேர்ந்தது. இந்தப் பழைய புதிய கருத்துகள் யாவும் போராடும் நிலைக்களமாக இந்தியா ஆகிவிட்டது. இந்த மூன்றாவது நாகரிகம் வெற்றி பெற்று, இந்தியாவின் பழைய பிரச்னைகளைத் தீர்த்திருக்கும் என்பதில் சந்தேகமே இல்லை. ஆனால், அந்த நாகரிகத்தை இந்தியாவுக்குக் கொண்டுவர ஒத்தாசையாயிருந்த பிரிட்டிஷ்காரர்களே, அதை மேற்கொண்டு அபிவிருத்தி அடையாமல்தடுக்க முயற்சி

செய்தார்கள். நம்முடைய தொழிலபிவிருத்தியை அவர்கள் தடுத்து விட்டார்கள். அதனுல் நமது அரசியலுணர்ச்சி தடைபட்டுப் போய், இந்தியாவிலிருந்த பழைய காலத்துக் கொவ்வாத உரிமைத் திட்டம், வாழ்க்கைத் திட்டங்கள் யர்வையும் மாற்ருமல், அப்படியே நிலை நிறுத்தி விட்டார்கள்.

நம்முடைய சட்டங்களும், பழக்க வழக்கங்களும் சிறிதுசிறிதாக அபிவிருத்தி முறையில் மாறிக்கொண்டு வந்தன. அந்த நிலையிலேயே அவைகளைத் தடுத்து விட்டு, அவைகளின் பிடிப்பினின்று நாம் வெளியேற முடியாத படிக்கு கஷ்டங்களை பிரிட்டிஷார் உண்டாக்கி விட்டார்கள். இந்தியாவில் அவர்களுடைய நல்லெண்ணத்தாலும் ஒத்தாசையாலும், முதலாளித் தத்துவம் வளரவில்லை. தொழிலபிவிருத்திக்குத் தேவையான ரெயில் முதலிய சாதனங்களை இந்தியாவில் கொண்டு வந்து புகுத்தியபின்னர், மாறுதல் சக்கரத்தை அவர்களால் நிறுத்தமுடியவில்லை. ஆனுல், அந்த சக்கரத்தைப் பிடித்து, அதன் வேகத்தைத் தடுக்கமுடியும். இவ்வாறு வேகத்தைத் தணித்து அவர்கள் தங்கள் லாபத்தை நாடிக் கொண்டார்கள்.

"இந்த கெட்டியான அஸ்திவாரத்தின் பேரில் இந்திய ஆட்சியின் கம்பீரமான கட்டிடம் கட்டப்பட்டிருக்கிறது. 1858-ம் வருடத்தில் கிழக்கிந்திய கம்பெனியிடமிருந்து இந்தியாவின் ஆட்சியை பிரிட்டிஷ் அரசாங்கத்தார் ஏற்றுக் கொண்டு நடத்திவரும் இந்தக் காலம்வரையிலும், இந்தியாவில் செல்வ அபிவிருத்தியும் கல்வி அபிவிருத்தியும் அதிகமென்று நிச்சயமாக பாத்தியம் கொண்டாட முடியும்.

இந்தியாவின் சரித்திரத்தில், இதே கால எல்லைக்குள் இத்தகைய அபிவிருத்தி ஒரு பொழுதும் ஏற்படவில்லை" என்று கூட்டுக்கமிட்டி யாதாஸ்தில் பொறிக்கப்பட்டிருக்கிறது. இந்த அறிவிப்பு எல்லோரும் ஒப்புக் கொள்ளத்தக்க உண்மையல்ல. பிரிட்டிஷ் ஆட்சிக்குப் பிறகு எழுதப்படிக்கத் தெரிந்தவர்கள், எண்ணிக்கையில் குறைந்து கொண்டுவருகிருர்கள் என்று அடிக்கடி சொல்லப்பட்டிருக்கிறது. ஆனுல் யாதாஸ்தில் கண்டது முழு உண்மையாகவே இருந்தாலும், அது நவீனதொழிலபிவிருத்திக் காலத்தையும் பண்டைக்

காலத்தையும் ஒப்பிட்டுப் பார்ப்பது போல ஆகின்றது. விஞ்ஞான சாஸ்திர வளர்ச்சியாலும் தொழிலபிவிருத்தியினலும் சென்ற நூற்ருண்டில் உலகத்திலுள்ள ஒவ்வொரு நாட்டிலும் கல்வியும் செல்வமும் பெருமிதமாக முற்போக்கு அடைந்திருக்கின்றன. ஏதேனுமொரு நாட்டை எடுத்துக் கொண்டு நவீன காலத்தையும் பண்டைக்காலத்தையும் ஒப்பிட்டுப் பார்த்தால், தற்காலத்தின் முற்போக்கு அதிகமென்று நிச்சயமாகத் தெரியும். இவ்வாறு இந்தியாவை மட்டும்பற்றி அவதூறு பேசுவது பொருத்தமாய் இருக்காது. இந்தியாவின் நீண்டகால சரித்திரத்தைப்போல மற்ற நாடுகளுக்கு இல்லாவிட்டாலும் அந்த நாடுகளிலும் கூட்டுக் கமிட்டி அறிக்கை கூறும் மகத்தான வித்தியாசங்களைக் காணலாம்.

பிரிட்டிஷ் ஆட்சி இல்லாமலே விஞ்ஞான் அறிவும் தொழிலபிவிருத்தி முற்போக்கும் இந்தியாவுக்கு எப்படியோ ஏற்பட்டிருக்கும் என்று நாம் யோசனை சொன்னல் அது அனுவசியமான விதண்டாவாதமாகக் கருதப்படுமோ? நம்முடைய நாட்டை வேறு பல நாடுகளோடு ஒப்பிடுவோமாயின் பிரிட்டிஷ் ஆட்சி இல்லாமலிருப்பின் மேற்சொன்ன முற்போக்கு அதிகமாயிருந்திருக்கும் என்று நாம் ஏன் ஊகம் செய்யக் கூடாது. ஏனென்ருல் இப்பொழுது பிரிட்டிஷாரே அந்த அபிவிருத்தியை தடைசெய்யும் முயற்சியை நாம் எதிர்த்துப் போராட வேண்டி இருக்கிறது. ரெயில்வே, தந்தி, டெலிபோன், கம்பியில்லாத் தந்தி முதலியவைகள் பிரிட்டிஷ் ஆட்சியின் நல்லதனத்துக்கு அத்தாட்சிகள் ஆகமாட்டா. அவைகள் தேவைதான். அவைகள் வரவேற்கப்பட வேண்டியவைகள்தான். அவைகளை இந்தியாவுக்கு முதன் முதல் கொண்டு வந்தவர்கள் பிரிட்டிஷ்காரர்களானபடியால் அவர்களுக்கு நாம் பெரிதும் கடமைப்பட்டிருக்கிருேம். ஆனல் தொழிலபிவிருத்தியின் இந்தத் தூதர்கள் இந்தியாவுக்கு வந்தது, முக்கியமாக பிரிட்டிஷ் ஆட்சியை வலுப்படுத்துவதற்காகத்தான். இவைகள் இந்தியாவின் நாடிகளாகவும் இரத்தக் குழாய்களாகவும் இருந்திருக்க வேண்டும். இந்தியாவில் வியாபாரம் செழித்து அதன் விளைபொருள்கள் வெளியேறி கோடிக் கணக்கான மக்களுக்கு புதிய உயிரும் செல்வமும் கிடைக்கப் பெற்று, இந்தக் குழாய்கள் மூலமாக தேசத்தின் நாடி நன்ருக அடித்திருக்க

வேண்டும். இத்தகைய பயன் நிச்சயமாக ஏற்பட்டிருக்கும். ஆனல் இந்தச் சாதனங்கள் யாவும் வேறு நோக்கத்தைக் கொண்டு உபயோகப் படுத்தப்பட்டு வந்தன. சாம்ராஜ்யப் பிடிப்பை வலுப்படுத்தவும், பிரிட்டிஷ் சாமான்களுக்கு இந்தியாவில் சந்தைகளை ஏற்படுத்தவும் தான் ரயில்வே முதலிய சாதனங்கள் உபயோகப்படுத்தப்பட்டன. இந்த நோக்கத்தில் பிரிட்டிஷார் வெற்றி பெற்று விட்டார்கள். தொழிற் செழிப்பும் நவீன போக்குவரத்து சாதனங்களும் வேண்டுமென்று நான் உறுதியாகக் கூறுகிறேன். ஆனல், இந்தியாவை நான் சுற்றிப் பார்க்கையில் இந்தியாவுக்கு உயிரை அளிக்க வேண்டிய ரயில், அதைச் சிறைப்படுத்தும் இரும்புத் தண்டவாளங்களாக எனக்குத் தோன்றுகிறது.

இந்தியாவை எப்படி ஆளவேண்டுமென்று பிரிட்டிஷார் கொண்டிருக்கும் கருத்து, போலீஸ்காரன் அரசாங்கத்தைப்பற்றி கற்பனை செய்து கொண்டிருக்கும் கருத்து ஆகும். "அரசாங்கத்தைக் காப்பாற்ற வேண்டியதுதான் ஆட்சியின் வேலையாகும். பாக்கி வேலையை மற்றவர்களுக்கு விட்டு விடலா"மென்று அவர்கள் எண்ணிக் கொண்டிருக்கிருர்கள். அவர்களுடைய வரவு செலவுக் கணக்கு, இராணுவச்செலவு, போலீஸ் செலவு, நிர்வாகச் செலவு, கடனுக்கு வட்டி இவைகளைத்தான் குறிப்பிடும். மக்களின் பொருளாதாரத் தேவைகள் கவனிக்கப்படுவதே இல்லை. அவைகள் பிரிட்டிஷாரின் நலத்துக்காக "பலி" கொடுக்கப்பட்டிருக்கின்றன. மக்களின் கலைஞானம் முதலிய தேவைகள் (ஒரு சிலருக்குத் தவிர) அறவே அலட்சியம் செய்யப்படுகின்றன. நவீன ஜனநாயக ஆட்சி முறைப்படிக்கு, அரசாங்கத்தின் வருமானத்தைப் பொது நலத்துக்காக செலவழிக்க வேண்டும். எல்லோருக்கும் இலவசக் கல்வி, சுகாதார அபிவிருத்தி, தீனர்களின் பாதுகாப்பு, நோய் வந்த காலத்திலும், முதுமைப் பருவத்திலும், வேலையில்லாத் திண்டாட்ட காலத்திலும் தொழிலாளிகளுக்கு இன்ஷுரன்ஸ் ரட்சணை, இவைகளுக்காக எல்லா நாடுகளிலும் செலவழிக்கின்ருர்கள். ஆனல், இந்தத் திட்டங்கள் இந்திய அரசாங்கத்தின் அறிவுக்குப் புலப்படாதவை என்று தோன்றுகிறது. இத்தகைய செலவு கொள்ளும் அலுவல்களில், இந்திய அரசாங்கம் ஈடுபட முடியாது. அதனுடைய வரிவசூல் திட்டம் பிற்போக்கானது. அதிக வருமானத்திலிருந்து கொஞ்சமாயும்,

கொஞ்ச வருமானத்திலிருந்து அதிகமாயும் வரிவசூல் செய்யும் திட்டத்தை அது கைக்கொண்டிருக்கிறது. அது தனது தற்காப்புக்காகவும் அரசியல் நிர்வாக வேலைக்காகவும் செலவு செய்யும் பணம் ரொம்பவும் ஜாஸ்தி. அநேகமாக அவைகள் வரிவருமானம் முழுவதையும் விழுங்கிவிடுகின்றன.

இங்கிலீஷ் ஆட்சியின் சிறப்பான தன்மை என்ன? அவர்களுக்கு நாட்டின் மேல் இருக்கும் அரசியல் பொருளாதார அதிகாரத்தை வலுப்படுத்துவதிலே அவர்களுடைய முழு கவனத்தையும் செலுத்தி வருகின்றார்கள். மற்றைய யாவும் சில்லரை வேலைகள். வலுவான மத்திய அரசாங்கத்தையும், திறமையான போலீஸ் படையையும் அவர்கள் ஆக்கிவைத்ததற்காக அவர்கள் பெருமைபாராட்டிக்கொள்ள வேண்டியதுதான். ஆனால் அவைகளினால் இந்தியப் பொது மக்களுக்கு நன்மையே இல்லை. ஒற்றுமை நல்ல பொருள் தான். ஆனால் அடிமைத் தனத்தில் ஒற்றுமைப்பட்டிருப்பது அவ்வளவு பகிரங்கமாக சொல்லிக் கொண்டு கர்வப்படக் கூடிய விஷயமல்ல. கொடுங்கோலாட்சியின் வலுவே ஜனங்களுக்கு அதிகச் சுமையாக ஆகிவிடுகின்றது. போலீஸ் படை பலவகைகளில் உபயோகமானது என்பதில் சந்தேகமில்லை. என்றாலும் எந்த ஜனங்களை அது பாதுகாப்பதாகக் கருதப் படுகின்றதோ அதே ஜனங்களின்பேரில் பல சமயங்களில் அந்தப்படை ஏவிவிடப்படக்கூடும். ஏவிவிடப்பட்டும் இருக்கின்றது. பெர்ட்டராண்டரஸ்ஸல் அவர்கள் நவீன நாகரிகத்தையும் பழைய கிரேக்க நாகரிகத்தையும் ஒப்பிட்டுப் பார்த்து "நம்முடைய நவீன நாகரிகத்தைக் காட்டிலும் பண்டைய கிரேக்க நாகரிகம் ஒரே ஒரு வகையில்தான் உயர்ந்ததாகும். கிரேக்கர்களின் போலீஸ் படைக்கு திறமை போதாது. யோக்கியர்கள் பலர் தப்பித்துக் கொள்ளுமாறு அது விட்டு விட்டது." என்று சமீபத்தில் எழுதியிருக்கிறார். பிரிட்டிஷ் ஆட்சியால் இந்தியாவில் அமைதி ஏற்பட்டது. மொகலாய சாம்ராஜ்யம் உடைந்ததிலிருந்து நேர்ந்த துன்பங்களுக்கும் துர்ப்பாக்கியங்களுக்கும் பின்னர் இந்தியாவுக்கு அமைதி தேவையாகத்தான் இருந்தது. அமைதி விலையுயர்ந்தபொருள் தான். எந்த அபிவிருத்திக்கும் அது தேவையே. அமைதி இந்தியாவுக்கு ஏற்பட்டது மிகவும் நல்லதுதான். அது வரவேற்க வேண்டியதொன்றே. ஆனால் அமைதியை மிதமிஞ்சி விலை கொடுத்து வாங்குவதாயிருந்தால்? கல்லறையிலும் பூரண

மான அமைதி நிலவுகின்றது: கூண்டிலும் சிறையிலும் அப்படியே. அல்லது தங்களை சீர்தூக்கிக் கொள்ள இயலாத மனிதர்களது புகலிடமாகவும் அமைதி இருக்கப்பெறலாம். அந்நிய நாட்டு வெற்றிவீரனால் கட்டாயமாக நிறுவப்பெற்றிருக்கும் அமைதியிலே ஆன்மாவுக்கு ஆறுதலளிக்கும் தன்மைகள் இல்லவே இல்லை.

யுத்தம் மிகக் கொடியதென்பதை மறுக்க முடியாது. அதை ஒதுக்கித் தள்ளிவிட வேண்டுவது அவசியமேயாகும். ஆனால், போரினால் சில நல்ல தன்மைகள் ஏற்படுகின்றன. பக்தி, ஒத்துழைப்பு, பிடிவாதம், வீரத்தனம், மனச்சாட்சி, பயிற்சி, சமயோஜித சாமர்த்தியம், செட்டு, தேகாரோக்கியம், ஊக்கம் இவைகள் ஏற்படுகின்றன என்று மனோதத்துவ சாஸ்திரி வில்லியம் ஜேம்ஸ் அவர்கள் கூறுகிறார். இந்தக் காரணம்பற்றி போரின் கொடுமைகளில்லாமல் மேற்சொன்ன தன்மைகளை ஜனசமூகத்தில் வளர்க்கக் கூடிய போருக்கு மாற்றாக ஒன்று தேவையென்று ஜேம்ஸ் அவர்கள் தேடி ஆராய்ச்சி செய்தார். அவர் ஒத்துழையாமையையும் சட்டமறுப்பையும் பற்றி கேள்விப்பட்டிருந்தால், போருக்கு மாற்றாக அவைகளை மனப்பூர்வமாக அவர் ஏற்றுக் கொண்டிருக்கக் கூடும்.

சரித்திரத்தின் போக்கு வேறுவிதமாகவிருந்தால் என்னவாயிருக்குமென்று கற்பனைக் கோட்டைகள் கட்டுவதில் பயனொன்றும் இல்லை. விஞ்ஞான ஆராய்ச்சியும் தொழில் வளர்ச்சியும்கொண்ட மேனாடுகளுடன், இந்தியா தொடர்பு கொண்டது நல்ல காரியம்தான் என்று நினைக்கிறேன். விஞ்ஞானஆராய்ச்சி மேனாட்டு மனிதவர்க்கத்துக்கு அளித்த மகத்தான கொடையாகும். இந்தியாவில் விஞ்ஞான அறிவு குறைவாக இருந்தது. அந்தக் குறைவினால், இந்தியா நிச்சயமாக நசித்து நாசமாகிப் போயிருக்கும். ஆனால், இந்தியாவுக்கும் மேனாட்டுக்கும் தொடர்பு ஏற்பட்ட வகைமட்டும் துர்ப்பாக்கியமானதாகும். இருந்தாலும் ஒன்றன்பின் ஒன்றாக பயங்கரமான அதிர்ச்சிகள் ஏற்பட்டாலொழிய, நாமும் நமது உறக்கத்திலிருந்து விழித்துக் கொள்ளுவதாயில்லை. இந்த நோக்கத்தைக்கொண்டு பார்த்தால், பிராடஸ்டண்டு, அகம்பாவ, ஆங்கிலோ-சாக்ஸன், இங்கிலீஷ்காரர்கள் இந்தியாவுக்கு ஆளுபவர்களாக வந்தது மிகவும் பொருத்தமானதா

கும். ஏனெனில் அவர்கள் ஏனைய மேனாட்டார்களைவிட, வித்தியாசமானவர்கள். ஆகையால்அவர்களால் நம்மிடையே தீவிர அதிர்ச்சிகளை உண்டாக்க முடியும்.

அவர்கள் நமக்கு அரசியல் ஒற்றுமையைக் கொடுத்தார்கள். அது விரும்பத்தக்க பொருளென்பதில் ஐயமில்லை. நம்மிடையே இந்த ஒற்றுமை ஏற்பட்டிருந்தாலும்இல்லாவிட்டாலும், இந்திய தேசியம் வளர்ந்துஅந்த ஒற்றுமை அவசியமாகச் செய்திருக்கும். அராபியர்களின் உலகம் இன்றைக்கு பல சிறுசமஸ்தானங்களாக பிளந்து கிடக்கிறது. அவற்றில் சில சுதந்திரம் கொண்டவை. மற்றும் பல வெள்ளையர்களின் மேற்பார்வைக்குக் கீழ் இருப்பவை. என்றாலும், இந்த நாடுகளின் ஊடே அராபிய ஒற்றுமையுணர்ச்சி ஓடிக்கொண்டே இருக்கிறது. மேனாட்டு சாம்ராஜ்ய வல்லரசுகள் குறுக்கே நிற்காவிட்டால், அராபிய் தேசியத்தில் அநேகமாக இந்த ஒற்றுமை ஏற்பட்டிருக்குமென்பதில் சந்தேகமே இல்லை. ஆனால், இந்தியாவில் போலவே, அந்த நாடுகளிலும் ஐரோப்பிய வல்லரசுகள் சீர்குலையச்செய்யும் தன்மைகளை ஆதரித்து வளர்த்து சிறுபான்மையோரின் பிரச்னைகளை உண்டாக்கிவிடுகின்றன. அதனால், தேசிய இயக்கம் பலவீனப்பட்டுப் போகின்றது. இதைக் காரணமாகக்கொண்டு, அந்தநாடுகளில் தங்கி, அரசியல் நடத்தும் உரிமையை சாம்ராஜ்ய வல்லரசுகள் வேண்டுகின்றன. பட்சபாதமில்லாத் பஞ்சாயத்துக்காரரைப் போல வல்லரசு தன்னை பாவனை செய்கிறது. இந்தியாவில் சாம்ராஜ்யஆட்சி வளர்ந்துகொண்டே போயிற்று. சாம்ராஜ்யத்தின் வளர்ச்சியால் இந்தியாவில் அரசியல் ஒற்றுமை ஏற்பட்டது. இந்த விளைவு, சாம்ராஜ்யம் விரும்பி உண்டாக்கியதன்று. பின்னர் ஒற்றுமையும்தேசிய உணர்ச்சியும்ஒன்று சேர்ந்துகொண்டு, அந்நிய ஆட்சியை எதிர்த்துப் போராடுகையில், நமது எதிர்கால அபிவிருத்திக்குபயங்கரத்தடைகளான வகுப்பு வாதத்தையும் பிளவுகளையும் வேண்டுமென்றே உண்டாக்கப்பட்ட காட்சியை நாம் பார்த்தோமல்லவா?

இங்கிலீஷ்காரர்கள் இந்தியாவுக்கு வந்து நீண்டகாலம் ஆகின்றது. அவர்கள் வலுத்து இந்தியாவில் தங்கள் ஆட்சியைத் துவக்கியதிலிருந்து ஒன்றேமுக்கால் நூற்றாண்டுகளுக்கு மேல் ஆகின்றது! ஏதேச்சாதிகார அரசாங்கங்களுக்கு இயற்கையாய் உள்ள அத்தனை சந்தர்ப்பங்களும் அதிகாரங்களும்

அவர்களுக்கு இருந்தன. அவர்களுடைய விருப்பப்படி இந்தியாவை அமைக்க அவர்களுக்கு இணையற்ற சந்தர்ப்பம் இருந்தது. இந்த நூற்றெழுபத்தைந்து வருஷங்களுக்குள், உலகமே உருத்தெரியாமல் மாறிப்போய் விட்டது. இங்கிலாந்து, ஐரோப்பா, அமெரிக்கா, ஜப்பான் முதலிய நாடுகள் எல்லாம் மாறி விட்டன.

அட்லாண்டிக் மகாசமுத்திரத்தின் கரைகளில் இருந்த அமெரிக்கக் குடியேற்ற நாடுகள் 18-ம் நூற்றுண்டில் மதிப்புக்கு உரியவை அல்லவாயினும் இப்பொழுது அவைகள் உலகத்திலேயே செல்வம் செழித்த நாடுகளாக ஆய்விட்டன. பலத்திலும் விஞ்ஞான ஆராய்ச்சியிலும் அவைகளுக்கு ஈடாக வேறு எந்த நாட்டையுமே சொல்ல முடியாது. கொஞ்ச காலத்துக்குள் ஜப்பானிலும் வியக்கத்தக்க மாறுதல்கள் ஏற்பட்டு விட்டன. விஸ்தாரமான சோவியத் ருஷியாவிலே நேற்றைய முன் தினம்தான் ஜாரின் அரசாட்சி எத்தகைய சுதந்திரத்தையும் அடக்கி ஒடுக்கி மூச்சு விடக் கூடாமல் அடித்துக் கொண்டிருந்தது. அந்த ருஷியாவிலே, இப்பொழுது புதிய உயிர் ஓடிக் கொண்டிருக்கிறது. புதிய உலகமொன்று அங்கே நம் கண் முன்னுலேயே நிறுவப்படும் காட்சியைப் பார்த்துக்கொண்டுதான் இருக்கிறோம். இந்தியாவிலும் பெரிய மாறுதல்கள் ஏற்பட்டிருக்கின்றன. 18-ம் நூற்றுண்டில் இந்தியா எப்படி இருந்ததோ அப்படி இப்பொழுது இருக்கவில்லை. ரெயில்வேக்கள், நீர்ப்பாசனவசதிகள், தொழிற்சாலைகள், பள்ளி கல்லூரிகள் பெரிய பெரிய அரசாங்க மாளிகைகள் முதலியன தோன்றியிருக்கின்றன. இந்த மாறுதல்கள் ஏற்பட்டிருந்த போதிலும் இந்தியா இப்பொழுது எப்படி இருக்கிறது? அடிமை நாடாக இருக்கிறது. அதனுடைய மகத்தான வல்லமை கூண்டில் அடைபட்டுக்கிடக்கிறது. தாராளமாக மூச்சு விடுவதற்குத் துணிவில்லை. எட்டத்திலிருந்து யாரோ சில அந்நியர்கள் அதை ஆளுகின்றார்கள். அதனுடைய மக்கள் உவமையில்லாத அளவில் தரித்திரத்தில் ஆழ்ந்து கிடக்கின்றார்கள். அற்ப ஆயுள்காரர்களாகவும், வியாதிகளையும் தொத்து நோய்களையும் எதிர்த்துப் போராட உடல் வலிமை இல்லாதவர்களாகவும் நாட்டிலே எழுதக் கூடாத தற்குறிகள் பெரும்பான்மையோர் இருக்கிறார்கள். அநேக இடங்களுக்கு சுகாதார வைத்திய வசதிகளே கிடையாது. வேலையில்லாத் திண்டாட்

டமோ சொல்லத் தரமன்று. பாமர மக்கள் மட்டுமல்ல, நடுத்தர வகுப்பார்களும் வேலையில்லாமல் தவிக்கிறார்கள். சுதந்திரம் ஜனநாயகம் அபேதவாதம் சமதர்மம் இவைகள் எல்லாம் வீணர்களின் கூச்சல்கள் என்றும், அயோக்கியர்களின் ஆபாச எண்ணங்கள் என்றும், ஏட்டுச்சுரக்காய்களின் சொல்லடுக்குகளென்றும் நம்மிடம் சொல்லுகிறார்கள். ஜனங்கள் மொத்தத்தில் க்ஷேமமாக இருக்கிறார்களா இல்லையா என்பதைக்கொண்டுதான் இந்தியாவின் முற்போக்கைச் சோதனை செய்ய வேண்டுமென்றும் சொல்லப்படுகிறது. அந்த சோதனை நியாயமான சோதனைதான். அந்த சோதனையைக்கொண்டு பார்த்தாலும் இந்தியாவின் வறுமைக் காட்சி பொறுக்க முடியாததாகும். வேறு நாடுகளில் வேலையில்லாத் திண்டாட்டத்தையும் வறுமையையும் போக்குவதற்காக பெரிய பெரிய திட்டங்கள் கையாளப்படுவதாக நாம் கேள்விப்படுகிறோம். ஆனால், இந்தியாவிலே கோடிக்கணக்கானவர்கள் வேலையில்லாமல் தவிக்கிறார்கள். நாடு முழுவதிலும் சாசுவதமாகப் பரந்து கிடக்கும் வறுமையைப்பற்றி என்ன சொல்வது? இவைகளைப் பற்றி அரசாங்கத்தார் என்ன கவலை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள்?

வேறு நாடுகளில் ஏழைகளுக்கு புது வீடு கட்டிக் கொடுக்கும் திட்டத்தைப்பற்றி நாம் படிக்கின்றோம். ஆனால் நம்முடைய கோடிக்கணக்கான மக்கள் மண் குடிசைகளில் வசிக்கிறார்கள். அநேகருக்கு குடிசைகளே கிடையாது. இவர்களுக்கு வீடு எங்கே? வேறு நாடுகளில் கல்வி, சுகாதாரம், வைத்திய வசதிகள், கலைப்பெருக்குச் சாதனங்கள், தொழில பிவிருத்தி, இவைகள் விரைவிலே வளர்ச்சியடைந்து வருகின்றன. ஆனால், நாமோ இருந்த இடத்திலேயே இருக்கிறோம். அல்லது, நத்தையின் வேகத்தில் ஊர்ந்து செல்லுகிறோம். நாம் வேறு நாடுகளைப் பார்த்து பொறாமைப்பட வேண்டாமா? ருஷியா பன்னிரண்டு ஆண்டுகளுக்குள் ஆச்சரியப்படத்தக்க முயற்சிசெய்து தனது விஸ்தாரமான எல்லைகளிலிருந்து எழுத்தறியாமையை அறவே ஒழித்துவிட்டது. அல்லாமலும் பொதுஜன வாழ்வுக்கு தொடர்பாயிருக்கும் நவீன கல்வி முறையையும் அது வெகு நேர்த்தியாக அமைத்துவிட்டது. பிற்போக்கான துருக்கி தேசம்கூட, முஸ்தபா கெமால் ஆடாடூர்க் அவர்களின் தலைமையின் கீழ் கல்

விப்பெருக்கில் வெகுதூரம் முன்னே சென்றுவிட்டது. இத்தாலியில் பாஸிஸ்டு கட்சியார் தங்கள் ஆதிக்கத்தைத் துவக்கும் காலையிலேயே, அறியாமையை ஒழிக்க, ஊக்கத்தோடு வேலை செய்தார்கள். "அறியாமையை நேரில் எதிர்த்துப் போராடவேண்டும். கல்வியில்லாமை புரையோடிக் கொண்டிருக்கும் பிளேக் நோய் ஆகும். அது, நம்முடைய ஜன சமூகத்தை அழுகச் செய்துகொண்டு வருகிறது. அதை சூட்டுக்கோலால் அழித்து, தொலைத்து விடவேண்டும்" என்று ஜென்டைல் என்ற இத்தாலியக் கல்வி மந்திரி சொன்னர். நாஸுூக்கான அறைகளிலே இந்தக் கடுமையான வார்த்தைகளைச் சொல்லுவது அநாகரிகமாக இருக்கலாம். ஆனல், அந்த வார்த்தைகளின் பின்னே, இருக்கும் ஊக்கத்தையும் உறுதியையும் அவைகள் காண்பிக்கின்றன. நாம் இந்த நாட்டில் அதிக மரியாதையுடன் வளைத்து வளைத்துப் பேசுகிறோம். நாம் ஜாக்கிரதையாக நகர்ந்து சென்று, நமது ஊக்கத்தைக் கமிஷன்களிலும் கமிட்டிகளிலும் கொண்டு போய்ச் செலுத்தி களைத்துப் போகின்றோம்.

இந்தியர்கள் வீணகப் பேசுகிறார்களென்றும் காரியம் ஒன்றும் செய்வதில்லையென்றும் குற்றம் சாட்டப்படுகிறார்கள். அது நியாயமான குற்றச்சாட்டுதான். ஆனல், பிரிட்டிஷ்காரர்களோ கமிட்டிகளையும் கமிஷன்களையும் படைப்பதில் தளராத வல்லமை கொண்டவர்களாய் இருக்கின்றார்கள். அந்தக் கமிஷன், கமிட்டி ஒவ்வொன்றும் நீண்டகாலம் உழைத்து ஒரு யாதாஸ்தைத் தயாரித்து வெளியிடுகின்றது. "அதுமகத்தான அரசாங்க தஸ்தாவேஜு" என்ற மிகுந்த கூச்சலோடு புகழப்படுகின்றது. பிரிட்டிஷாரின் இத்தகைய சமார்த்தியத்தைக் கண்டு, நாம் வியப்படையாமலிருக்க முடியுமா? இந்த முறையினல், முன்னே செல்லுவதாக நமக்கு ஒருவகை உணர்ச்சி உண்டாகின்றது. ஆனல் உண்மையென்னவெனில், நாம் ஏற்கனவே இருந்த இடத்தில் அசையாமல், அழுத்தமாக நின்று கொண்டிருக்கிறோம். நம்முடைய கௌரவத்துக்கு இந்த யுக்தியால் ஒரு திருப்தி ஏற்பட்டு விடுகிறது. ஆனல் மாறுதல் இல்லாமல் பரம்பரை சாசுவத உரிமைகள் அழியாமல் பத்திரமாக காப்பாற்றப் பட்டு இருக்கின்றன. மற்றைய நாடுகள் முற்போக்குக்கான உபாயங்களைப்பற்றி ஆராய்ச்சி செய்கின்றன. நாமோ

எதிலும் வேகமாகப் போய்விடக்கூடாதே என்று தடைகளையும் பாதுகாப்புகளையும்பற்றி விவாதம் செய்கிறோம்.

"மொகலாயர்களது ஆளுகை காலத்தில் அரண்மனை வாழ்வு ஆடம்பரமாயிருந்தது. அந்த ஆடம்பர வாழ்வே, அக்காலத்தில் ஜனங்களின் தரித்திரத்தையும் குறிப்பிடும் அளவாகவும் இருந்தது" என்று கூட்டுக்கமிட்டி யாதாஸ்தில் காணப்படுகிறது. இது நியாயமான குறிப்பே. ஆனால், அதே அளவைக்கொண்டு இன்றைக்கும் நாம் பார்க்கலாமல்லவா? இன்றைக்குப் புதுடில்லி எப்படி இருக்கிறது? வைஸிராயின் ஆர்ப்பாட்டமும் ஆடம்பரமும் நிறைந்துநிற்கின்றன. மாகாண கவர்னர்கள் எவ்வளவு ஆடம்பரமாக வாழ்கின்றார்கள்? இவை எல்லாம் ஜனங்களின் சகிக்கமுடியாத வறுமை நிலைமையிலே ஆளுகிறவர்களின் ஆடம்பரமும் ஆளப்படுவர்களின் வறுமையும் சேர்த்துப் பார்த்தால் மனதுக்குத் துன்பம் உண்டாகின்றது. மானஸ்தர்கள் எப்படி இதைப் பொறுத்துக் கொண்டிருக்கமுடியும் என்று தெரியவில்லை.

இன்றைக்கு இந்தியா கேவலமான, அலங்கோல நிலைமையில்இருக்கின்றது.இதன்பேரில் நின்றுகொண்டு சாம்ராஜ்யப் பெருமை ஆடம்பரமாக மினுக்கிக்கொண்டிருக்கிறது. இயற்கைக்குப் பொருத்தமில்லாத ஒட்டு வேலைகள் பல நடைபெறுகின்றன. சில்லரை முதலாளிகள் நவீன நாகரிகத்தின் பயனை அதிகமாக நசுக்குண்டுகிடக்கிறார்கள். இந்த சில்லரை முதலாளிகளுக்குப் பின்னால், தொழிலாளிகள் கொடிய தரித்திரத்தில் ஆழ்ந்து துயரடைந்து நிற்கின்றார்கள். அவர்களுக்குப்பின்னே விவசாயி நிற்கின்றான். அவன்தான், இந்தியாவின் அறிகுறியாவான். அவன் "விடியா இரவில் பிறக்கும் வரம்" வாங்கிக்கொண்டு வந்திருக்கிறான்!

"பல நூற்றாண்டுகளின் சுமையால் கூன் விழுந்து குனிந்துகொண்டே மண்ணை நோக்குகின்றான். நீண்டகாலத்தின் நிஷ்பலத்தை அவன் முகத்தில் காணலாம். அவனுடைய முதுகின்பேரில் உலகத்தின் சுமை ஏற்றப்பட்டிருக்கிறது. இந்த பயங்கரமான உருவத்தின் மூலமாக, பல நூற்றாண்டுகளாக தீராத துன்பமடைந்த மானிடஜாதி வெளித்தோன்றுகிறது. சென்றுபோன காலத்தின் பயனற்ற நாச

சூன்யத் தன்மையை அந்த துன்புறுத்தும் கூனலில் காண லாம். இந்த பயங்கர உருவத்தின் மூலமாக, கைவிடப்பட்டு கொள்ளையடிக்கப்பட்ட, அலட்சியமாகக் கருதி சகல உரிமை களும் இல்லாமலடிக்கப் பெற்ற மனித வர்க்கம் கதறுகின் றது. இந்த உலகத்தைப் படைத்த ஆதிசக்தியினிடம், அது கதறி முறையிடுகின்றது. அந்த முறையீடே, எதிர்காலத்தில் நேருவதற்கு அறிகுறியும் ஆகும்'' என்று அமெரிக்கக் கவி இ. மார்க்காம் அவர்கள் எழுதுகிறார்.

இந்தியாவின் துயரங்கள் யாவற்றுக்கும் பிரிட்டிஷாரின் பேரில் பழி சுமத்துவது அபத்தமாகும். அந்தப் பொறுப்பை நாம்தான் ஏற்றுக்கொள்ள வேண்டும். அதைத் தள்ளி விட்டு நாம் நம்மை ஏமாற்றிக் கொள்ள முடியாது. நம்முடைய சொந்த பலவீனங்களின் தவிர்க்கமுடியாத விளைவுகளுக்காக, பிறரைக் குறைகூறுவது மூடத்தனமாகும். எதேச்சாதிகார ஆட்சிமுறை, அதுவும் அந்நிய ஆட்சி முறைக்கு அடிமை மனப்பான்மையைத்தான் வளர்க்க முடியும். ஜனங்களின் நோக்கையும் லட்சியத்தையும் குறைத்துத் தடைசெய்யத் தான் அது முயற்சிசெய்யும். இளம்பிராயத்தில் பிரகாசிக்க வேண்டிய உற்சாகம், சாகசம், சிருஷ்டி சக்தி, கர்வம் இவை களை அந்நிய ஆட்சிமுறை அழிக்கத்தான் செய்யும். எஜமா னர்களிடம் பல்லைக்காட்டி சந்தோஷப்படுத்தும் தன்மையை யும், கைகட்டி கோள் சொல்லுவதையும், நியாய சட்ட திட் டங்களுக்கு குருட்டுத்தனமாக அடங்கி நடக்கும் பான்மை யையும், அந்த ஆட்சிமுறை வளர்க்கத்தான் செய்யும்.

இத்தகைய ஆட்சிமுறையால் உண்மையானதொண்டு மனப்பான்மை வளருவதே இல்லை. பொதுஜன ஊழியத்தி லும் லட்சியங்களிலும் திடசித்தம் வேண்டுமென்ற ஊக்கம் ஏற்படுவதில்லை. வயிறு வளர்க்கவேண்டும் என்பதையே குறி யாகக் கொண்டிருக்கும் கேவலமான மனிதர்களை அந்த ஆட்சி முறை பொறுக்கி யெடுத்து அவர்களுக்கு ஆதரவு அளிக்கிறது. பிரிட்டிஷார் இந்தியாவில் தங்களிடம் எத் தகைய மனிதர்களை சேர்த்துக்கொள்ளுகிறார்கள் என்பதை நாம் பார்த்துக்கொண்டுதான் வருகிறோம். அவர்களில் சிலர் புத்திகூர்மையும் செயல்திறமையும் வாய்ந்தவர்கள். ஆனால் வேறு சந்தர்ப்பங்கள் இல்லாமையால் அரசாங்க உத்தியோ கத்திலோ அல்லது அரசாங்க தொடர்பு கொண்ட உத்தி

யோகத்திலோ அவர்கள் அமர்ந்து கொள்ளுகிறார்கள். சிறிது சிறிதாக அவர்கள் தன்மை குன்றிப்போய் பெரிய இயந்திரத்தின் பகுதிகளாக ஆகிவிடுகிறார்கள். தினசரிவேலையில் அவர்களுடைய உள்ளங்கள் சிறைப்பட்டு விடுகின்றன.

அவர்கள் அதிகார வர்க்கத்துக்குத் தேவையான குணங்களைப் பயிற்சி செய்து கொள்ளுகிறார்கள். குமாஸ்தாவின் திறமையையும் தன் உத்தியோகத்தைப் பாதுகாக்கும் தந்திரத்தையும் அவர்கள் பெறுகிறார்கள். அவர்களில் சிரேஷ்டமானவர்களுக்கு பொதுஜன ஊழியத்தில் ஒருவித சாரமில்லாத பக்தி ஏற்பட்டு விடுகின்றது. கொழுந்து விட்டெரியும் உற்சாகம் அவர்களிடமில்லை; இருக்கவும் முடியாது. அன்னிய ஆட்சியில் அது சாத்தியமானதல்ல. இவர்களைத் தவிர சில்லரை உத்தியோகஸ்தர்களில் புகழத்தக்க பேர்வழிகள் இல்லை. ஏனென்றால் தங்கள் மேலதிகாரிகளுக்கு பல்லைக்காண்பிக்கவும் தங்களுக்குக் கீழ் இருப்பவர்களை அக்கிரமமாக மிரட்டவும்தான் அவர்கள் கற்றுக் கொண்டிருக்கிறார்கள். இந்தத் தவறும் அவர்களுடையதல்ல. ஆட்சி முறைத்திட்டத்தால் அவர்களுக்கு ஏற்படும் பயிற்சியாகும். இந்த ஆட்சி முறையால், கெஞ்சிக் கேட்பதும் மிரட்டுவதும் விருத்தியடையுமானால் அது ஆச்சரியப்படவேண்டிய சங்கதியாகுமா? அவர்களுக்கு பொதுஜன சேவையின் லட்சியங்களே கிடையாது. வேலையில்லாத் திண்டாட்டத்தின் அச்சமும், பட்டினி கிடக்க நேரிடுமோ என்ற நடுக்கமும், அவர்களைத் துரத்துகின்றன. ஆகவே, தங்களுடைய உத்தியோகங்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்ளுவதும் தங்களுடைய நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் வேலை வாங்கிக் கொடுப்பதும்தான் அவர்களுடைய முக்கியமான கவலைகள். இரகசியப் போலீசும், நீசப் பிராணியான உளவுகாரனும் எப்பொழுதும் மறைந்து நின்று வேலை செய்யும் நிலைமையில் ஜனங்களிடம் விரும்பத்தக்கவைகளை வளர்ப்பது எளிதான வேலையல்ல.

சமீப காலத்தில் நேர்ந்த நிகழ்ச்சிகளால் மானஸ்தர்களாய் பொதுஜன தொண்டில் ஆவல் கொண்டவர்கள் அரசாங்க உத்தியோகங்களை நாட முடியாமற்போய் விட்டது. அரசாங்கத்தார் அவர்களை விரும்புவதில்லை. பொருளாதார நிலைமையினால், நிர்ப்பந்தம் ஏற்பட்டாலொழிய இவர்களும்

அரசாங்கத்தோடு நெருங்கிப் பழக இஷ்டப்படுவதில்லை. ஆனால், சாம்ராஜ்யத்தின் சுமையைத் தாங்குபவன் வெள்ளை மனிதன்தான் என்றும் பழுப்புமனிதன் அல்ல வென்றும் உலகமறியும். சாம்ராஜ்ய பரம்பரையை அமுலுக்கு கொண்டு வருவற்காக அநேக உயர்தர உத்தியோகங்கள் இருக்கின்றன. அவர்களுடைய சிறப்பான உரிமைகளை காப்பாற்றுவதற்காக போதுமான பாதுகாப்புகள் எற்படுத்திக்கொடுக்கப்பட்டிருக்கின்றன. இவ்வாறு செய்வது இந்தியாவின் நன்மைக்காகத்தான் என்று சொல்லப்படுகிறது. இந்த உயர்தர உத்தியோகங்களின் நலங்களோடும் உயர்வோடும் இந்தியாவின் நலம் பிணைக்கப்பட்டிருப்பது வியப்பாக இருக்கிறது.

இந்தியாவின் சிவில் சர்விஸின் உரிமையாவது அல்லது அதற்காக ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கும் உத்தியோகமாவது அதனின்றும் எடுக்கப்பட்டு விட்டால், சீர்குலைவும் திறமைக் குறைவும் எற்பட்டுவிடுமென்று நம்மிடம் சொல்லப்படுகிறது. இந்திய வைத்திய இலாகாவில் வெள்ளைக்காரர்களுக்காக ஒதுக்கி வைக்கப் பட்டிருக்கும் உத்தியோகங்கள் குறைக்கப்படுமாயின், "இந்தியாவின் சுகத்துக்கு ஆபத்து" வந்து விடும் என்று பிரசாரம் செய்யப்படுகின்றது. ராணுவத்தில் பிரிட்டிஷாரின் எண்ணிக்கையை குறைக்க வேண்டுமென்று கூறினால், பயங்கரமான பலவித ஆபத்துகள் நமக்கு எற்பட்டுவிடும் என்று கூசாமல் சொல்லப்படுகின்றது.

இதில் சிறிது உண்மை இருக்கிறதென்று நான் நினைக்கிறேன். உயர்தர உத்தியோகஸ்தர்கள் திடீரென்று போய் விட்டு, அவர்கள் மேற்பார்த்து வந்த இலாகாக்களை தங்களுக்குக் கீழ் இருப்பவர்களிடம் ஒப்படைத்தால் திறமை குறைந்துதான் போகும். அதற்குக் காரணம் என்ன? பூரா உத்தியோக திட்டமும் இந்தவகையில் தான் கட்டப்பட்டிருக்கிறது. அநேகமாக கீழ் உத்தியோகஸ்தர்கள் தகுதி பெற்றவர்களாக இருப்பதில்லை. பொறுப்பை வகிப்பதற்கு, அவர்களுக்குப் பழக்கிக்கொடுப்பதுவுமில்லை.நல்ல சரக்கு ஏராளமாக இந்தியாவில் இருக்கிறதென்றும், ஒழுங்காகமட்டும் ஏற்பாடு செய்தால், வெகு விரைவில் அந்த சரக்குகளை மேற் சொன்ன பொறுப்பை ஏற்றுக்கொள்ளும்படி செய்யலாமென்றும் நான் உறுதியாக நம்புகிறேன். அதாவது, நம்முடைய அரசியல் ஜன நிர்மாண நோக்கத்தில் பூரணமான

மாறுதல் ஏற்படவேண்டும். அதற்கு புதிய அரசியல் அமைப்பு தேவை. அரசியலமைப்பு யந்திரத்தில் என்ன மாறுதல்கள் நேர்ந்தாலும் சரியே, நம்மைப் பாதுகாத்து ரட்சிக்கும் உயர் தர உத்தியோகங்களின் கெட்டிக் கட்டிடம் மட்டும் முன் போலவேதான் இருக்கும் என்று சொல்லப்படுகிறது. அரசாட்சியின் மூல மந்திர ரகசியங்களுக்கு பாத்தியக்காரர்களான இந்த உத்தியோகஸ்தர்கள் அரசாங்கக் கோவிலைப் பாதுகாத்து அதனுடைய பரிசுத்தமான எல்லைகளுக்குள் பாமரர்கள் நுழையாமல் தடுத்துவிடுவார்களாம்! கொஞ்சம் கொஞ்சமாக அந்த உரிமைக்கு நாம் நம்மைத் தகுதியுள்ளவர்களாக ஆக்கிக்கொண்டால், அவர்கள் அந்த மூடுமந்திரத் திரைகளை ஒவ்வொன்றாக நீக்கி, கடைசியாக ஏதோ ஒரு காலத்தில் சாட்சாத்காரமான அந்த மூர்த்தி நம்முடைய பயபக்திகொண்ட கண்களின் முன்னே ஆச்சரியப்படும்படியாக தோன்றுமாம். சாம்ராஜ்ய உத்தியோகங்கள் எல்லாவற்றிலும் இந்தியன் சிவில் சர்விஸ் (ஐ. சி. எஸ்.) தான் முதன்மை ஸ்தானம் பெற்றுவிளங்குகின்றது. இந்தியாவின் அரசியல் நிர்வாகத்தினால் ஏற்படும் கீர்த்தியோ அபகீர்த்தியோ, பெரும் பகுதி, அதைத்தான் சார்ந்ததாகும். இந்த உத்தியோகஸ்தர்களின் குணாதிசயங்களைப் பற்றி நம்மவர்களிடம் வர்ணிக்கப்படுகிறது. சாம்ராஜ்யத் திட்டத்தில் அதனுடைய மகத்துவம் நிலைத்த ஒரு சூத்திரமாகவே ஆகிவிட்டது. அதற்கு எல்லையற்ற அதிகார உரிமையும் பதவியும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அதைப் புகழ்வதும் உயர்த்தி விளம்பரப்படுத்துவதும் சாதாரணமான திருக்கோலங்களாக ஆகிவிட்டன. இந்த நிலைமையில் எந்தத் தனி மனிதனும் கூட்டமும் மன நிதானத்துடன் இருக்கமுடியாது. ஐ. ஸி. எஸ். காரர்களிடம் எனக்கு எவ்வளவு நல்லெண்ணமிருந்தபோதிலும், அவர்கள் தொன்று தொட்டு பெரும் நோயான தற்பெருமை மயக்கத்துக்கு மிகுதியும் ஆட்பட்டவர்கள் என்று தான் சொல்லவேண்டியிருக்கிறது.

ஐ. ஸி. எஸ். காரர்களின் நல்ல தன்மைகளை மறுப்பது வீணான வேலையாகும். அவைகளை மறுப்பதற்கு நம்மை விட்டால் தானே? ஆனால் அவர்களைப்பற்றி அளவற்ற பொய் ஸ்துதிகள் செய்யப்படுகின்றன. ஆகவே எப்பொழுதாவது ஒரு சமயம் பட்டவர்த்தனமாக அவர்களைப் பற்றிப் பேச வேண்டியது அவசியமென்று எனக்குத் தோன்றுகிறது.

உயர்ந்த உரிமைகளை அடைந்து அவைகளைக் கொண்டாடி வருங்கூட்டத்தார்களை "வைப்பு வகுப்பார்" என்று அமெரிக்க பொருளாதார நிபுணர் வெப்ளென் கூறுகிறார். ஐ. சி. எஸ். காரர்களையும் ஏனைய சாம்ராஜ்ய உத்தியோகஸ்தர்களையும் வைப்பு உத்தியோகஸ்தர்கள் என்று கூறுவது மிகவும் பொருத்தமானதாகும். இந்நாட்டிற்கு அவர்கள் தாங்கமுடியாத வீண் செலவு மூட்டைகளாவார்கள். பிரிட்டிஷ் தொழிற் கட்சியின் மாஜிப்பார்லிமெண்டு அங்கத்தினரும் இந்தியவிஷயங்களில் அதிகமான சிரத்தை கொண்டவருமான மேஜர் டி. கிராகாம்போல் அவர்கள் சிறிதுகாலத்துக்கு முன்னர் மாடர்ன் "ரெவியு" பத்திரிகையில் எழுதும்பொழுது, ஐ. ஸி. எஸ் காரர்கள் திறமையும் வல்லமையும் வாய்ந்தவர்கள் என்ற விஷயத்தை இதுவரை யாருமே ஆட்சேபிக்கமுயன்றதில்லை" என்று கூறுகிறார். இத்தகைய குறிப்புகள் அடிக்கடி இங்கிலாந்தில் வெளிவந்து அவைகள் நம்பப்படுவதால், அதைச் சிறிது ஆராய்வது நலமாயிருக்கும். இம்மாதிரி அழுத்தம் திருத்தமாக குறிப்புகளை வெளியிடுவது தவறாகும். ஏனெனில், அவைகளை எளிதிலே பொய் என்று மெய்ப்பித்து விடலாம். அவர் சொன்ன விஷயம் ஆட்சேபிக்கப் படவே இல்லையென்று மேஜர் கிராகாம்போல் எண்ணிக் கொண்டிருப்பாராகில் அது முழுத் தவறாகும்.

அதை அடிக்கடி பலர் ஆட்சேபித்திருக்கிறார்கள். சில வருஷங்களுக்கு முன்னர், ஜி. கே. கோகலே அவர்கள்கூட ஐ. ஸி. எஸ் காரர்களைப்பற்றி கடுமையாகப் பேசியிருக்கிறார். சராசரி இந்தியன்—அவன் காங்கிரஸ்காரனானாலும் சரி அல்லது அல்லாதவனாயிருந்தாலும்சரி—மேஜர் கிராகாம்போல் சொல்லுவதை ஏற்றுக் கொள்ளவே மாட்டான். இருந்தாலும் இரண்டு கட்சிக்காரர்களும் சொல்லுவது சரியாக இருக்கலாம். அவர்கள் வித்தியாசமான குணங்களைமனதில் நினைத்துக்கொண்டு பேசியிருக்கலாம். திறமையும் வல்லமையும் எதற்காக? இந்தியாவில் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தை வலுப்படுத்தி அதன் மூலமாக நாட்டைச் சுரண்ட ஒத்தாசை செய்வதைக்கொண்டு இத்திறமையும் வல்லமையும் அமைக்கப்படுமானால், ஐ. ஸி. எஸ் காரர்கள் நல்ல வேலை செய்திருக்கிறார்கள் என்று நிச்சயமாகச் சொல்லலாம்.

ஆனால், இந்தியப் பொது மக்களின் நலத்தை மனத்தில்கொண்டு அவர்களுடைய திறமையையும் வல்லமையை

யும் அளந்து பார்த்தால், அவர்கள் முழுமோசமாகத் தோற்றுப்போய்விட்டார்கள். அந்தத் தோல்வி பார்வைக்கு நன்ருகத் தெரிகிறது. அவர்களுடைய வருமானமும் வாழ்வும் எங்கே? அவர்கள் யாருக்காக தொண்டு செய்வதாகச்சொல்லுகிருர்களோ, அந்தப் பொதுமக்களின் வருமானமும் வாழ்வும் எங்கே? ஐ. ஸி. எஸ் காரர்களின் பதவியும் வருமானமும் ஏழைப் பொது மக்களிடம் இருந்துதான் வருகின்றன. இந்த இரண்டு வித்தியாசங்களேயும் ஏணி வைத்து கூடப் பார்க்கமுடியாது. ஐ. ஸி. எஸ். கூட்டத்தார் ஓரளவு திறமை வாய்ந்தவர்கள் என்பது உண்மைதான். அந்த அளவு மிகவும் உயர்ந்ததல்ல. மட்டமானதே; ஐ. ஸி. எஸ். கூட்டத்தாரின் இடையே மகா புத்திசாலிகளான சிலர் தோன்றி இருக்கிருர்கள். இந்தக் கூட்டத்தாரிடமிருந்து, இதை விட எதையும் எதிர்பார்க்க முடியாது. பிரிட்டிஷ் பொதுப் பள்ளியில் பயிற்றுவிக்கப்படும் தன்மை இந்தக் கூட்டத்தார்களிடம் இருக்கின்றது. அந்தத் தன்மையில் நல்லதும் உண்டு, கெட்டதும் உண்டு. இத்தன்மையை அந்தக் கூட்டத்தார்கள் குறைத்துக் கொண்டதே இல்லே. ஆனுல், அந்தக் கூட்டத்தில் தனி அங்கத்தினர்களின் சிறப்பான சாதிகள் சாரமில்லாத தினசரி வேலேயினுல் மழுங்கிப்போகின்றன. ஏனேயோரிடமிருந்து மாறுபடக்கூடாது என்ற அச்சத்தினுல் இந்த புத்திசாலிகள் தங்கள் சிறப்பான தன்மைகளே வெளிக் காண்பிப்பதும் இல்லே; வெளிக் காண்பித்தால் மற்றவர்கள் அழுத்தமாகக் கண்டிப்பார்கள்.

அவர்களுக்குள் தொண்டிலே சிரத்தைகொண்ட பலர் இருக்கிருர்கள். ஆனுல் எதற்காகத் தொண்டு? சாம்ராஜ்யத்துக்காகத் தொண்டு. சாம்ராஜ்யத் தொண்டு பூர்த்தியான பிறகுதான் அவர்கள் இந்தியாவைப் பற்றி நினேப்பார்கள். அந்த மாதிரி நிலேமையில் அவர்கள் பயிற்சிசெய்யப்பட்டிருப்பதால் அவ்வாறுதான் அவர்கள் நடந்து கொள்ளமுடியும். அவர்கள் எண்ணிக்கையில் கொஞ்சம் பேர்வழிகள். தாங்கள் நட்புக் கொள்ளமுடியாத அன்னியர்களால் சூழப்பட்டிருக்கிருர்கள். ஆகவே, தங்களுக்குள் ஒற்றுமையாக தங்கள் வேலேயில் ஓரளவுதிறமையை ஸ்தாபித்திருக்கிருர்கள். இனம், உத்தியோகம் என்ற இரண்டு பெருமையினுலும் இவ்வாறு அவர்கள் நடந்துகொள்ள வேண்டியதாயிருக்கிறது. அவர்களிடம் ஏராளமாக எதேச்சாதிகாரம் இருக்கிறது. ஆகவே,

அவர்களைப் பிறர் கண்டித்தால் ஆத்திரப்படுகிறார்கள். கண்டிப்பது மகத்தான பாவமென்று கருதுகிறார்கள். மாணவர்களிடமிருந்து எதையும் பொறுத்துக் கொள்ள முடியாத உபாத்தியாயர்களின் மனப்பான்மையை அடையப்பெற்று, எதேச்சாதிகாரிகளின் குறைகளைத் தங்களிடம் பெருக்கிக் கொள்ளுகிறார்கள். அவர்கள் தற்புகழ்ச்சி செய்துகொள்ளுவார்கள். அகம்பாவிகள்; குறுகிய மாறாத மனப்பான்மை படைத்தவர்கள். மாறிக்கொண்டு வரும் உலகத்துக்கும் அபிவிருத்தி அடைந்து வரும் கருத்துகளுக்கும் கொஞ்சம்கூட பொறுத்தமில்லாதவர்கள். அவர்களைக் காட்டிலும் மனோவன்மையும், செயல் திறனும்பெற்ற இந்தியர்கள் இந்தியப் பிரச்னைகளைத் தீர்க்கமுயன்றால் அவர்கள் ஆத்திரப்படுகிறார்கள். அவர்கள் இவர்களுக்கு கெட்ட பெயர் கொடுக்கின்றார்கள். அவர்களை அடக்குகிறார்கள். அவர்களுடைய பாதையில் எல்லாவிதத் தடைகளையும் போடுகிறார்கள்.

ஐரோப்பிய யுத்தத்திற்குப் பிறகு நேர்ந்த மாறுதல்களால், இந்தியாவில் புதிய உயிர் தோன்றத் தலைப்பட்டவுடன், ஐ. ஸி. எஸ் காரர்களுக்கு ஒன்றுமே புரியவில்லை. அந்தப் புதிய உயிரோடு கலந்து பழகவும், அவர்களால் முடியவில்லை. தங்கள் குறுகிய கல்விப் பயிற்சியைக்கொண்டு புதிய புதிய நிலைமைகளையும் நெருக்கடிகளையும் அவர்களால் சமாளிக்கமுடியவில்லை. நீண்ட கால பொறுப்பில்லாத்தனத்தால், அவர்கள் சீரழிந்துபோய்விட்டார்கள். கூட்டமாக அவர்களை நோக்கின், அவர்கள் எதேச்சாதிகாரிகள் என்று சொல்லலாம். பேருக்கு மட்டும் அவர்கள் பிரிட்டிஷ் பார்லிமெண்டுக்கு அடங்கினவர்கள் என்பது சம்பிரதாயம். "அதிகாரம் சீர் குலைக்கின்றது; எதேச்சாதிகாரம் அடியோடு சீர்குலையச் செய்கின்றது" என்று (கீர்த்திபெற்ற சரித்திராசிரியரான) ஆக்டன் பிரபு எழுதியிருக்கிறார்.

ஐ. ஸி. எஸ். கூட்டத்தார் தங்களுடைய குறுகிய எல்லைக்குள் மொத்தத்தில் நம்பத்தகுந்த வேலைக்காரர்கள். கூடுமான வரையில் திறமையுடன் தினசரித் திட்ட வேலையை அவர்கள் செய்துவருகிறார்கள். மிகவும் திறமையாகச் செய்வதாகச் சொல்ல முடியாது. எதிர்பாராத நிலைமை ஏற்பட்டால், அதை சமாளிப்பதற்கு அவர்கள் பழக்கப்பட்டதே இல்லை. என்றாலும் சாதாரணமான கஷ்டங்களை அப்போ

தைக்கப்போது தாண்டிச்செல்லும் படியான அளவு அவர்களிடம் தன்னம்பிக்கையும், சலிக்காமல் வேலை செய்யும் தன்மையும், தங்களுக்குள்ளேயே ஒற்றுமையும் இருக்கின்றன. (சில வருஷங்களுக்கு முன் நேர்ந்த) மெஸபொடோமியா குழப்பத்திலிருந்து பிரிட்டிஷ் இந்திய அரசாங்கத்துக்கு நிர்வாகத்திறமை போதாதென்றும் அது உணர்ச்சியற்ற தென்றும் பகிரங்கமாகத் தெரிந்தது. ஆனால் இதைப்போல் நேர்ந்த எத்தனையோ தவறுகள் வெளி வருவதே இல்லை. சட்ட மறுப்பு காலத்தில் அவர்கள் காண்பித்த மனப்பான்மையும் மிகவும் அநாகரிகமானது.

சுடுவதாலும், சிறையில் வைப்பதாலும் எதிரிகளை சிறிது காலத்திற்கு அடக்கி வைக்கலாம். ஆனால் அந்த முறைகளினால் எந்தப் பிரச்னையையும் தீர்க்கமுடியாது. பிரிட்டிஷ் அரசாங்கத்தார் உயர்ந்தவர்கள் என்ற எண்ணத்தை நிலைநாட்டுவதற்காகத்தானே இந்த முறைகள் கையாளப்படுகின்றன? ஆனால் அந்த "உயர்வு" எண்ணம் காப்பாற்றப்படாமல், தகர்க்கப்பட்டுப் போய் விடுகின்றன. வளர்ச்சித்தன்மையும் சுறுசுறுப்பும்கொண்ட தேசியஇயக்கத்தை ஒடுக்கி, அவர்கள் பலாத்காரத்தைக்கைக்கொண்டதில் வியப்பு ஒன்றுமே இல்லை. அது தவிர்க்க முடியாததுதான். ஏனெனில் சாம்ராஜ்யங்கள் பலாத்காரத்தின்பேரில்தான் அமர்ந்திருக்கின்றன. எதிரிகளோடு போராடுவதற்கு வேறுவழி அவர்களுக்குக் கற்றுக் கொடுக்கப்படவில்லை. ஆனால் தேவையில்லாமல் அளவுக்கு மிஞ்சி அவர்கள் பலாத்காரத்தைக் கையாண்டதிலிருந்து, அவர்களால் நிலைமையை சமாளிக்கமுடியவில்லை யென்றும், சாதாரண காலங்களில் அவர்களிடம் காணப்படும் நிதானமும் அடக்கமும் இனிஅவர்களிடத்தில் இல்லை யென்றும் தெரிந்துபோயிற்று. அவர்களுடைய நரம்புகள் ஆட்டம் கண்டுவிட்டன. அவர்கள் பகிரங்கமாகப் பேசின பேச்சுகளிலும் மனத்தடுமாற்றம் காணப்பட்டது. அவர்களுடைய பண்டைக்காலத்து அமைதி கொண்ட தன்னம்பிக்கை அடியோடு தொலைந்துபோய் விட்டது.

நெருக்கடியிலே, நம்முடைய அந்தராத்மாவிலே பதுங்கிக்கிடக்கும் பலவீனங்கள் யாவும் வெளித்தோன்றி, நம்முடைய சுயஉருவத்தை வெளியே காண்பித்துவிடும். சட்ட மறுப்பு இத்தகைய நெருக்கடியாயிற்று. அதுவே பெரும்

சோதனையாக விருந்தது. காங்கிரஸ் கட்சியிலும் சரி, அரசாங்கக் கட்சியிலும் சரி, ஒரு சிலர்தான் இந்த சோதனையில் பூரணமாகத் தேறினார்கள். "நெருக்கடி காலத்தில்" முதல் தரப்பேர் வழிகளாக இருக்கக் கூடிய ஆண்களும் பெண்களும் மிகக்குறைவு ஆகும். நெருக்கடியில் மற்றவர்களைப்பற்றி கவலையே இல்லை. "சாதாரண காலங்களில் உச்சாணியில் தொங்குவதாகத் தோன்றும் ஊஞ்சல்கள், விரைவிலே பெரிய வெள்ளத்தில் அமிழ்ந்து போய் விடுகின்றன. அப்பொழுது உன்னதமான சிகரங்கள் மட்டும்தான் தண்ணீர் மட்டத்துக்குமேலே தங்கள் சிரங்களைத் தூக்கிக் கொண்டு நிற்கும்" என்று திரு. லாயிட் ஜார்ஜ் சொல்லுகிறார். ஐ. ஸி. எஸ். கூட்டத்தார் சட்டமறுப்புக்கு "அறிவு, உணர்ச்சி" இரண்டு வகைகளிலும் எதிர்ப்பு கொடுத்து சமாளிக்க பயிற்சி பெற்றிருக்கவில்லை. அந்தக் கூட்டத்தாரில் பெரும்பான்மையோருக்கு பழைய முறையில் பயிற்சி உண்டு. அதனால் அவர்களிடம் ஒருவகை நாகரிகமும் ஆகர்ஷண சக்தியும் இருந்தன. ஆனால், அது மிகப் பழைய மனப்பான்மையாகும். விக்டோரியா மகாராணியின் காலத்துக்கேற்றதாகும். நவீன நிலைமைகளுக்கு துளிக்கூட பொருத்தமில்லாததாகும். அவர்கள் தாங்களே வரைந்து கொண்டகுறுகிய உலகமொன்றில் வசித்து வருகிறார்கள். அதற்கு ஆங்கிலோ-இந்திய உலகம் என்று பெயர். அது இங்கிலாந்துமல்ல, இந்தியாவுமல்ல. அந்நிய நாடுகளில் ஜனசமூகங்களில் ஊடுருவி வேலை செய்து வரும் சக்திகளை அவர்கள் உணரவில்லை.

ஊமையான இந்திய ஜனங்களுக்கு தாங்கள் "கார்டியன்கள்" என்றும், தர்மகர்த்தர்கள் என்றும் அவர்கள் எண்ணிக்கொண்டிருக்கிறார்கள். ஆனால், அவர்களுக்கு இந்தியப் பொதுமக்களைப்பற்றி ஒன்றுமே தெரியாது. புதிதாக தலை தூக்கி எழுந்து வரும் சில்லரை முதலாளிகளைப்பற்றியும் அவர்களுக்கு அதிகமாகத் தெரியாது. தங்களைச் சுற்றி வளைந்துகொண்டிருக்கும் உத்தியோக வேட்டைக்காரர்களையும் பல்லைக்காட்டிக் கெஞ்சுவோர்களையும்கொண்டு இந்தியர்களை அவர்கள் மதிப்பிட்டு, மற்றவர்களை கிளர்ச்சிக்காரர்களென்றும் அயோக்கியர்களென்றும் கருதி லேசாகத் தள்ளி விடுகிறார்கள். சென்ற யுத்தத்துக்குப் பிறகு உலக நாடுகளில் நேர்ந்த மாறுதல்களைப்பற்றி அவர்களுக்கு ஒன்றுமே தெரி

யாது. முக்கியமாக பொருளாதாரத்துறையில் நேர்ந்த மாறுதல்கள் அறவே தெரியாது. அவர்கள் பழையசுவடுகளிலேயே போய்க்கொண்டிருந்தமையால், மாறுதலடைந்து வரும் நிலைமைகளுக்குத்தக்கவாறு தங்களைத் திருத்திப் பொருத்திக்கொள்ளமுடியவே இல்லை. தங்கள் கூட்டம் நவீன நிலைமைகளுக்கு பொருத்தமானதல்லவென்றும் டி. எஸ். எலியட் அவர்கள் வர்ணிக்கும் "போல் மனிதர்கள்" என்ற நிலைமையை நெருங்கிக்கொண்டிருக்கிறதென்றும் அவர்கள் உணரவே இல்லை. என்றாலும், அந்தத் திருக்கூட்டம் பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் நீடித்திருக்கும் வரையில் இருந்துதான் தீரும். இந்த சாம்ராஜ்யம் இன்றைக்கும் வல்லமையுடன் இருக்கின்றது. திறமைசாலிகளான சமயோசிதத் தலைவர்கள் சாம்ராஜ்யத்துக்குள் இன்னும்இருந்துவருகிறார்கள். இந்தியாவிலிருக்கும் பிரிட்டிஷ் அரசாங்கம் நசித்துவரும் பல்லைப்போன்றதாகும். அது அழுத்தமாகப் பதிந்து கொண்டிருக்கின்றது. வலிசொல்ல முடியாது. ஆனால் அந்தப் பல்லை எளிதிலே பிடுங்கவும் முடியாது. பல்தானாக விழும்வரையில் அல்லது பிடுங்கப்படும் வரையில் வலி இருந்துகொண்டுதான் இருக்கும். வலி அதிகமானாலும் ஆகும்.

பொதுப்பள்ளிக் கல்வித்திட்டம் முன்னொரு காலத்தில் இங்கிலாந்தில் செல்வாக்குடன் இருந்தது. அந்தத் திட்டத்திலிருந்து உருவானவர்கள் இப்பொழுதும் பொதுஜன அலுவல்களில் முக்கியஸ்தானங்கள் வகித்தபோதிலும் முன்போல அவர்களுக்கு கியாதி கிடையாது. அத்தகைய மனிதர்கள் இந்தியாவுக்கு துளிக்கூடப் பொருத்தமே இல்லை. சுறுசுறுப்புக்கொண்ட தேசியத்தோடு அவர்கள் கலந்து கொள்ளவும் முடியாது; ஒத்துழைக்கவும் முடியாது. தேசியத்தையே அவர்கள் அறியமுடியாதபொழுது பொருளாதாரத்தில் சமதர்மக் கொள்கைகளுக்காக உழைப்பவர்களிடம் அவர்கள் எப்படி கலக்க முடியும்?

ஐ. ஸி. எஸ். வர்க்கத்தில் திறமைசாலிகளான இங்கிலீஷ்காரர்களும் இந்தியர்களும் பலர் இருக்கிறார்கள். ஆனால், தற்போதையத் திட்டம் அமுலிலிருந்துவரும் வரையில், இந்திய மக்களுக்கு நன்மை பயக்கமுடியாத வழிகளிலேதான் அவர்களுடைய திறமை சென்றுகொண்டிருக்கும். இந்த வர்க்கத்திலிருக்கும் இந்தியர்களில் சிலர் ஆங்

கிலப் பொதுப்பள்ளிக் கொள்கைகளில் ஈடுபட்டு மயங்கிப் போய், குருவுக்குமிஞ்சிய சிஷ்யர்களாகி விட்டார்கள். இப் பேர்ப்பட்ட ஒரு இளைஞரை நான் ஒருசமயம் சந்தித்தேன். அவர் தம்மைப்பற்றி ரொம்பவும் பெரிதாக எண்ணிக் கொண்டிருந்தார். துர்ப்பாக்கியவசமாக நான் அவரைப் பற்றி அவர் எண்ணியதுபோல எண்ணமுடியவில்லை. ஐ. ஸி. எஸ். கூட்டத்தாரின் குணாதிசயங்களை எனக்குக் குறிப்பிட் டார். பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் இருக்கவேண்டியதற்கு ஆதார மாக அசைக்க முடியாத வாதமொன்றைச் சொல்லி முடித் தார். "என் ஐயா? பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் ரோமர்களின் சாம்ராஜ்யத்தைக் காட்டிலும் உயர்ந்ததல்லவா? தைமூர், ஜெங்கிஸ்கான் சாம்ராஜ்யங்களைவிட பிரிட்டிஷ் சாம்ராஜ் யம் உயர்ந்ததல்லவா?'' என்று அசைக்க பதில்சொல்ல முடி யாதபடிக்கு கட்சி சொன்னார்! தாங்கள் தங்களுடைய கட மைகளை மிகவும் திறமையுடன் செய்கிறார்களென்றும், ஆகையால் தங்களுடைய பாத்தியங்களை அழுத்திச் சொல் லிக் கொள்ளலாமென்றும், அநேகவிதமான பாத்தியங்களும் உரிமைகளும் தங்களுக்கு இருக்கவேண்டுமென்றும், ஐ. ஸி. எஸ். வர்க்கத்தார் அடிப்படையாக எண்ணிக்கொண்டிருக்கி றார்கள். இந்தியா ஏழையாக இருக்குமாகில் அது அதனு டைய ஜனசமூகப் பழக்கங்களின் விளைவு என்றும், அது கடுஞ்சித்தம் படைத்த லேவாதேவிக்காரர்களால் உண்டான தென்றும், இந்தியாவின் ஜன நெருக்கத்தால் வறுமை உண் டாயிருக்கிறதென்றும் சொல்லுகிறார்கள். ஆனால் லேவா தேவிக்காரர்களில் பிரதானமானவர்கள் பிரிட்டிஷ் இந்திய அரசாங்கத்தார் என்பது மிகவும் சௌகரியமாக மறக்கப் படுகின்றது ஜன நெருக்கத்தை குறைப்பதற்கு அவர்கள் என்ன யோசனை கொண்டிருக்கிறார்களோ அது எனக்குத் தெரியாது. பஞ்சங்கள், தொத்து நோய்கள், அற்ப ஆயுள் முதலியவைகள், மிகவும் ஒத்தாசை செய்தாலும் இந்தியா வில் இன்னும் ஜன நெருக்கம் இருக்கின்றது.

கர்ப்பத் தடை முறைகளைக் கையாள வேண்டுமென்ற யோசனை பிரசாரம் செய்யப்படுகின்றது. கர்ப்பத் தடை முறைகளையும் அதைப்பற்றிய முழு விபரங்களையும் நாட்டில் விஸ்தாரமாகப் பரப்ப வேண்டும் என்பது என்னுடைய பூரணமான எண்ணமாகும். ஆனால் இந்த முறைகளைக் கையாளுவதற்கே பொது மக்களின் வாழ்வு உயரவேண்டும்.

பொதுவாக கல்வி அபிவிருத்தி ஏற்பட வேண்டும். நாடு முழுவதும் ஏராளமான ஆஸ்பத்திரிகள் ஏற்படவேண்டும். தற்போதைய நிலைமையில் கர்ப்பத்தடை முறைகளை சாதாரண மக்கள் அறிந்து கொள்ளக்கூட முடியாது. கைக்கொள்ளவும் சாத்தியப்படாது. அந்த முறைகளினால் நடுத்தர வகுப்பார்கள் மட்டுமே நன்மையடையலாம். அவர்கள் ஓரளவில் நன்மையடைந்து வருவதாக நான் கருதுகிறேன்.

இந்த ஜன நெருக்கக் கட்சி சொல்லப்படுகிறதே அதைப்பற்றி கொஞ்சம் விரிவாக கவனிக்க வேண்டியது அவசியமாகும். உலகத்தின் இப்பொழுதைய பிரச்னை என்ன? வாழ்க்கைக்குவேண்டிய உணவும் ஏனைய முக்கிய பொருள்களும் குறைவாய் இருக்கின்றன என்பதல்ல. உண்ணுவதற்கு வாய்கள் குறைவாய் இருக்கின்றனவே என்பதுதான் பிரச்னையாகும். அதாவது தேவையுள்ளவர்களுக்கு இந்தப் பொருள்களை வாங்கிக்கொள்ள பொருளாதார வலிவு இல்லை. இந்தியாவைப்பற்றி யோசித்தாலுமே உணவுப் பொருள்கள் குறைந்துபோகவில்லை. ஜனவிகிதம் உயர்ந்து போனாலும் உணவுப்பொருள் உற்பத்தியும் விருத்தியடைந்து கொண்டு வருகின்றது. ஜன அபிவிருத்திக்கு தக்கவாறு உணவுப்பொருள் உற்பத்தியும் வளர்ந்து கொண்டே போக முடியும். இந்தியாவில் ஜன நெருக்கம் என்று ஆடம்பரத்துடன் குறிப்பிடுவதும் தவறாகும். சென்ற பத்து ஆண்டுகளில் தவிர இந்தியாவின் ஜனப்பெருக்கு மேனாடுகளின் ஜனப்பெருக்கு விகிதத்தைக் காட்டிலும் மிகவும் குறைந்ததாகும். எதிர்காலத்தில் இந்த வித்தியாசம் அதிகப்பட்டு வரலாம் ஏனென்றால் பல்வேறு காரணங்களால் மேனாடுகளில் ஜனத்தொகை குறைவதற்கும் ஜன அபிவிருத்தியைத் தடுப்பதற்கும் முயற்சிகள் நடைபெற்று வருகின்றன. ஆனால் இந்தியாவிலும் விரைவில் ஜனப்பெருக்கைத் தடுக்கும் முயற்சிகள் நடைபெறவும் கூடும்.

இந்தியா சுதந்தரம்பெற்று தான் விரும்பும் வகையில் தன்னுடைய வாழ்க்கைத் திட்டத்தை அமைத்துக்கொள்ளக் கூடிய நிலைமையில் இருக்கும்பொழுது அது இந்த நோக்கத்திற்காக தன்னுடைய மக்களின் பூரண சேவையைக் கோரும். மனித வர்க்கத்தில் நல்லசரக்குகள் அபூர்வமாகத் தான் கிடைக்கும். பிரிட்டிஷ் ஆட்சியால் வளர்ச்சிக்கு சந்

தர்ப்பங்கள் குறைந்து போனபடியால் அந்த நல்ல சரக்குகள் இந்தியாவில் மிகக் குறைவாக இருக்கின்றன. ஆகவே பொதுஜன இலாகாக்களில் உழைப்பதற்காக அந்நிய நாட்டு நிபுணர்களின் ஒத்தாசையை நாம் நாட வேண்டிவரும். சிறப்பாக விஞ்ஞான அறிவும், இயந்திர ஸ்தாபன ஆராய்ச்சியும் பெற்ற நிபுணர்களை மேல் நாடுகளிலிருந்து நாம் தருவித்துக் கொள்ள வேண்டியதாயிருக்கும்.

ஐ. ஸி. எஸ். காரர்களிலும் சாம்ராஜ்ய உயர்தர உத்தியோகங்களிலும் திறமை சாலிகளான இந்தியர்களும் அந்நியர்களும் பலர் இருக்கக் கூடும். அவர்களும் ஸ்வராஜ்யத் திட்ட நிர்வாகத்துக்குத் தேவைதான். ஆனால் ஒன்றுமட்டும் எனக்கு நிச்சயமாகத் தெரியும். ஐ ஸி. எஸ். காரர்களின் விசேஷ மனப்பான்மை இந்திய நிர்வாகத்திலும் பொதுஜன ஊழிய இலாக்காக்களிலும் பரவி நிற்கும் வரையில், புதிதாக எத்தகைய அமைப்பையும் இந்தியாவில் கட்ட முடியாது. ஒன்று ஐ. ஸி. எஸ். கூட்டம் இந்தியாவின் சுதந்திரத்தை அடியோடு அழித்துவிடும்; அல்லது, தானே ஒழிந்து போனாலும் போகும். அதற்கு ஒருவகை அரசியல் திட்டம்தான் பொருத்தமாகும். பாஸிஸ்டு ஆட்சி முறைக்குத்தான் ஐ. ஸி. எஸ். கூட்டத்தார் பொருத்தமுள்ளவர்களாக இருக்கக்கூடும். ஆகவே ஐ. ஸி. எஸ். இனமும் அதைப்போன்ற ஏனைய இனங்களும் முழுதும் மறைந்து போன பிறகுதான், புதிய திட்டப்படிக்கு உண்மையான வேலையை நாம் துவக்க முடியும்.

இந்தக் கூட்டங்களைச் சேர்ந்த தனி நபர்கள் திறமையுடனிருந்து ஸ்வராஜ்யத் திட்டத்துக்கு இணங்கி வேலை செய்ய விருப்பம் கொண்டால், அவர்களைச் சேர்த்துக்கொள்ளலாம். ஆனால் சில புதிய நிபந்தனைகளுக்குக் கட்டுப்பட வேண்டும். இன்றைக்கு அவர்களுக்குக் கிடைக்கும் அநியாயமான உயர்ந்த சம்பளங்களும் படிகளும் பின்னர் அவர்களுக்கு ஒருநாளும் கிடைக்காது. ஸ்வராஜயத்திலே ஊழியர்களாக இருக்கக்கூடியவர்கள் சிரத்தையுடையவர்களாக இருக்க வேண்டும்; திறமைசாலிகளாய் இருக்க வேண்டும்; தாங்கள் எந்த இயக்கத்துக்காக உழைக்கின்றார்களோ, அந்த இயக்கத்தில் அவர்களுக்கு அளவிலாதபக்தி இருக்க வேண்டும். வெற்றி பெறுவோம் என்ற தீர்மானத்துடன் இருக்க

வேண்டும். ஊழியத்தைக் கருதாமல் உழைப்பினால் வரும் பெருமைக்காகவும் ஆனந்தத்துக்காகவும் வேலைசெய்பவர்களாக இருக்க வேண்டும். பண ஆசையைக்கொண்டு உத்தியோகத்தை நாடுவது என்ற எண்ணத்தை எவ்வளவு குறைக்க முடியுமோ, அவ்வளவு வரையில் குறைத்துவிட வேண்டும். அன்னியர்களின் ஒத்தாசை பல விதங்களில் தேவைதான். ஆனால் விசேஷ விஞ்ஞான அறிவும், பயிற்சியும் படைக்காத அரசியல் நிர்வாகிகளை அந்நிய நாடுகளிலிருந்து வரவழைக்கத் தேவையே இல்லை. இவர்களுக்கு இந்நாட்டில் குறைவில்லை.

இந்திய மிதவாதிகளும் அவர்களைப் போன்ற வேறு கூட்டத்தார்களும் இந்திய ஆட்சி முறை சம்பந்தமாக பிரிட்டிஷாரின் கருத்துக்களையே ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள் என்று நான் ஏற்கனவே சொல்லியிருக்கிறேன். இது உண்மை என்பதை அவர்களிடமிருக்கும் உத்தியோக மனப்பான்மையிலிருந்து தெரிந்து கொள்ளலாம். அவர்கள் உத்தியோகங்களை இந்திய மயமாக்க வேண்டும் என்கிறார்களேயல்லாமல், அரசியலமைப்பிலும்; உத்தியோகஸ்தர்களின் மனப்பான்மையிலும் தீவிரமான மாறுதல்கள் வேண்டுமென்று கிளர்ச்சி செய்ததில்லை. இது ஜீவாதாரமான விஷயமாகும். இதிலே விட்டுக் கொடுக்கவே முடியாது. இந்திய சுதந்திரமென்றால் பிரிட்டிஷ் படைகளும் ஆங்கில உத்தியோகஸ்தர்களும் இந்தியாவை விட்டு அகல வேண்டும் என்பதோடுகூட, உத்தியோகஸ்தர்களின் அதிகார மனப்பான்மை அடியோடு ஒழிந்துபோக வேண்டும். அவர்களுடைய சம்பளங்களும் உரிமைகளும் குறைக்கப்பட வேண்டும்.

அரசியலமைப்பை வார்க்கும் இந்த நாட்களில், பாதுகாப்புகளைப்பற்றி ஏராளமாகப் பேச்சு எழுகின்றது. இந்தப் பாதுகாப்புகள் இந்தியாவின் நன்மைகளைக் கருதி இருக்கப்படுமாயின், ஐ. ஸி. எஸ். ஸும் அதைப்போன்ற ஏனைய உத்தியோகங்களும் தற்போதிருக்கும் ரீதியில் தற்போதுள்ள அதிகாரங்களுடனும் உரிமைகளுடனும் இருக்கக்கூடாதென்றும், புது அமைப்பில் அவர்களுக்கு யாதொரு சம்பந்தமும் கூடாதென்றும் விதி ஏற்படவேண்டும்.

பாதுகாப்புப் படைகளைப்பற்றி நான் ஒன்றுமே சொல்லக் கூடாதாம். அவைகள் மூடு மந்திரங்களாகக் கருதப்படு

கின்றன. அவைகளை நாம் கண்டிக்கலாகாது. ஏனெனில் அந்த விஷயங்களைப்பற்றி நமக்கென்ன தெரியும்! நாம் பணம் மட்டும் கொடுக்க வேண்டும். அதுவும் முணு முணுப் பின்றி, ஏராளமாகக் கொடுக்கவேண்டும். 1934-ம் வருஷம் செப்டம்பர் மாதம் இந்தியாவில் தலைமை சேனதிபதி ஸர் பிலிப் செட்வோட் அவர்கள் ஸிம்லாவில் அரசாங்க சபை யில் பேசும்பொழுது இந்திய அரசியல் வாதிகள் தம் முடைய ராணுவ விஷயத்தில் தலையிடாமல் தங்களுடைய சொந்த வேலையைக் கவனிக்கலாம் என்று காரமான ராணுவ பாஷையில் சொன்னர்.

பிரோணையொன்றுக்குத் திருத்தம் கொண்டுவந்த ஒரு வரைப்பற்றி குறிப்பிடுகையில் "பிரிட்டிஷார் யுத்தத்தில் தேர்ந்தவர்கள்; போர்ப் பழக்கம் கொண்டவர்கள், என்பது அவருக்கும் அவரது நண்பர்களுக்கும் தெரியுமா? பிரிட்டி ஷார் கத்திமுனையில் தங்கள் சாம்ராஜ்யத்தை சம்பாதித்தார் களென்றும் அதே கத்தி முனையில் அதைக்காப்பாற்றிக் கொண்டு வருகிறார்களென்றும் அவர்கள் அறிவார்களா? அப்பேர்ப்பட்ட போர் அனுபவம் வாய்ந்த பிரிட்டிஷாருக்கு இந்த நாற்காலி அரசியல் வாதிகள் "புத்தி சொல்ல வந்து விட்டார்களோ........" என்று ஸர் பிலிப் சொன்னர். இன்னும் பல விநோதமான கருத்துகளை அவர் வெளியிட் டார். அவர் ஆத்திரத்தால் ஏதாவது இவ்வாறு சொல்லி விட்டார் என்று நாம் நினைக்காமலிருக்கும்பொருட்டு, அவர் தம்முடைய பிரசங்கத்தைக் கவனமாக எழுதி, எழுத்துப் பிரதியிலிருந்து அதைப் படித்தார் என்று சொல்லப்படுகிறது.

பிரதம சேனதிபதியோடு இராணுவ விஷயங்களைப் பற்றி சாதாரண மனிதன் கட்சி பேசுவது முரட்டுத்தனம் தான்! என்றாலும் நாற்காலி அரசியல் வாதிகூட, சில விஷ யங்களைச் சொல்லலாமென்று தோன்றுகிறது. சாம்ராஜ்யத் தைக் கத்தி முனையில் காப்பாற்றி வருபவர்களுடைய நன்மை களும், யார் தலைகளின் பேரில் இந்தப் பிரகாசமான கத்தி தொங்குகின்றதோ அவர்களுடைய நன்மைகளும் முரண் கொண்டவையாக இருக்கக்கூடும் என்று கருதமுடியாதோ? இந்தியச் சேனையை இந்தியாவின் நலங்களுக்காக உழைக்கச் செய்யலாம் அல்லது சாம்ராஜ்யத்தின் நன்மைகளுக்காக

உழைக்கச் செய்யலாம். இந்த இரண்டும் வித்தியாசம் கொண்டவைகள் அல்லவா? ஒன்றுக்கு மற்றொன்று எதிரி என்று கூட சொல்லலாம்.

சென்ற ஐரோப்பிய யுத்தத்தின் அனுபவங்களுக்குப் பிறகு கீர்த்திபெற்ற தளகர்த்தர்களோடு சாதாரண மனிதனும் நாற்காலி அரசியல் வாதியும் கட்சி பேசக் கூடாது என்ற வாதம் அடிபட்டுப் போகவில்லையா? சென்ற யுத்தத்திலே, சேனாதிபதிகளுக்கு யாதொரு கட்டுப்பாட்டுக்கும் அடங்காத அதிகாரங்கள் இருந்தன. எல்லா நாட்டு யுத்த வரலாறுகளினின்றும், அவர்கள் எல்லாவற்றையும் குழப்பிக்கெடுத்து விட்டார்கள் என்று தெரிகிறது. பிரிட்டிஷ் பிரெஞ்சு, ஜெர்மானிய, ஆஸ்திரிய, இத்தாலிய, ருஷிய தளகர்த்தர்கள் யாவரும் நம்ப முடியாத தவறுகளைச் செய்து, பெரு நஷ்டம் விளைத்து விட்டார்கள். உலக மகா யுத்தத்தின் சரித்திரம் என்று பிரிட்டிஷ் இராணுவ சரித்திரக்காரரும் நிபுணருமான காப்டன் லிட்டில் ஹார்ட் என்பவர் எழுதியுள்ள நூலில், "பிரிட்டிஷ் சிப்பாய்கள் எதிரிகளோடு போராடிக் கொண்டிருந்தார்கள். ஆனால், பிரிட்டிஷ் தளகர்த்தர்களோ தங்களுக்குள் ஒருவரோடொருவர் சண்டைபிடித்துக் கொண்டிருந்தாகள். நாட்டுக்கு நேர்ந்திருக்கும்ஆபத்தில்கூட, அவர்களுக்குள் மன ஒற்றுமையாவது முயற்சி ஒற்றுமையாவது ஏற்படவே இல்லை. சாதாரணமாக நம் உள்ளத்திலிருக்கும் வீர வணக்கத்தை சென்ற போர் அடியோடு தொலைத்துவிட்டது. பெரிய மனிதர்கள், சாதாரண மனிதர்களைப் போலில்லாமல் வேறு வகையாக இருப்பார்கள் என்று சாதாரணமாக வழக்கத்திலிருந்து வந்த நம்பிக்கை பொய்யாகிவிட்டது. தலைவர்கள் இன்னும் தேவைதான். ஆனால் சென்ற யுத்தத்தின் அனுபவத்திலிருந்து, தலைவர்களும் சாதாரண மனிதர்கள்தான். அவர்களிடமிருந்து அதிகமாக எதிர்பார்ப்பதில் பிரயோசனமில்லை. அவர்களை மிதமிஞ்சி நம்பிக்கொட வேண்டியதில்லை என்பதை உணர்ந்து கொண்டோம்" என்று எழுதுகிறார்.

அந்தத் தீவிர அரசியல் வாதியான லாயிட் ஜார்ஜ் அவர்கள் தமது "யுத்தக் குறிப்புகள்" என்ற நூலில் சென்ற யுத்தத்தில் தளகர்த்தர்களும் கடற்படைத் தலைவர்களும் தவறுசெய்த வகைகளையும் 'அந்தத் தவறுகளால்

லக்ஷக்கணக்கான மனிதர்களின் உயிர் போனதைப்பற்றியும் பயங்கரமாக சித்திரம் வரைந்திருக்கிறார். இங்கிலாந்தும் அதன் கூட்டாளிகளும் போரில் வெற்றிபெற்றனர். ஆனால் அது இரத்த வெள்ளத்தை வீணில் பெருக்கு கடைத்த வெற்றியாகும். உயர்தர உத்தியோகஸ்தர்கள் பொறுப்பில்லாமலும் அறிவுக்கூர்மை இல்லாமலும் மனிதர்களையும் நிலைமைகளையும் கையாண்டதால் இங்கிலாந்து அநேகமாக ஆபத்தில் அகப்பட்டுக்கொள்ளும் போலிருந்தது. ஆனால் இங்கிலாந்தின் எதிரிகளின் நம்பமுடியாத முட்டாள் தனத்தால் இங்கிலாந்தும் அதன் கூட்டாளி நாடுகளும் தப்பித்துக்கொண்டன. இவ்வாறு பிரிட்டனது யுத்த காலத்து பெரிய முதல்மந்திரி லாயிட் ஜார்ஜ் எழுதுகிறார். கடற் படைகளில் சில மாறுதல்களைச் செய்து புதிய யோசனைகளை ஜெல்லிகோ பிரபுவை யேற்றுக்கொள்ளுமாறு செய்ய அவருடைய மூளையில் தாம் சத்திரம் வைக்கவேண்டியதாயிருந்ததென்று அவர் எழுதுகிறார். பிரெஞ்சு சேனாபதி ஜோபரே அவர்களைப்பற்றி லாயிட் ஜார்ஜ் எழுதுகையில் "அவருடைய முகவாய்க் கட்டைதான் அவருடைய சொத்து ஆகும். அதைக்கொண்டு மற்றவர்கள் ஆவேசம் கொள்ளவேண்டியதாய் இருந்தது. நொந்துபோகும் ஜனங்கள் இயற்கையாக எதையாவதொன்றைக் கொண்டுதான் வலுப்பெறமுடியும். ஆனால் அறிவின் ஸ்தானம் முகவாய்க் கட்டையில் இருக்கிறது என்று அவர்கள் தவறாக எண்ணிக் கொண்டார்கள்" என்று லாயிட் ஜார்ஜ் கேலி செய்கிறார். ஆனால் லாயிட் ஜார்ஜ் முக்கியமாககுற்றம்சாட்டினது பிரிட்டிஷ் சேனாபதிமார்ஷல் ஹேய்க் அவர்கள்பேரில்தான். ஹேய்க் பிரபு அநியாயமான தற்பெருமை கொண்டவராம். அரசியல் வாதிகளும் மற்றவர்களும் சொல்லுவதை அவர் காது கொடுத்துக் கேட்கமாட்டாராம். முக்கியமான சங்கதிகளை பிரிட்டிஷ் மந்திரிமார்களிடமிருந்தே அவர் மறைந்து விடுவாராம். பிரான்சில் பிரிட்டிஷ் சேனையை பெரிய ஆபத்துகளில் ஒன்றில் கொண்டுபோய் இறக்கிவிட்டாராம். தோற்றுப்போவது நிச்சயம் என்றும் தெரிந்தும் கடைசி வரைக்கும் அசட்டுப் பிடிவாதத்துடன். பல மாதங்கள் வரையில் தம்முடைய அபத்தமான தாக்குதல் யோசனையை பாஷன்டேல், காம்ப்ரே என்ற கனிவாய்ந்த ஸ்தலங்களில் அமுலுக்கு கொண்டுவந்து ஹேய்க் எதிரியைத் தாக்கினாராம்,

அதன் பயன் என்ன? பதினேழாயிரம் ராணுவ உத்தியோகஸ்தர்கள் மாண்டுபோயினர். வீரர்களான நாலுலட்சம் பிரிட்டிஷ் சிப்பாய்கள் தொலைந்து போனார்கள். இன்றைக்கு "பேர் தெரியாத சிப்பாயின்" ஞாபகத்தைக்கொண்டாடுவது பொருத்தமானதுதான்! ஏனெனின் அவனுடையஉயிர் மிகவும் மலிவானதாகக் கருதப்பட்டது. அவன் உயிருடன் இருக்கும் வரையில், அவனுக்கு யாதொரு மதிப்பும் காண்பிக்கப்படவில்லை.

ஏனையோர்களைப் போலவே அரசியல் வாதிகளும் அடிக்கடி தவறு செய்கின்றார்கள். ஆனால், ஜனநாயக வாதிகளான ராஜதந்திரிகள், மனிதர்களுக்கும் நிகழ்ச்சிகளுக்கும் ஏற்றவாறு தங்கள் நடத்தையை அமைத்துக் கொள்ள வேண்டும். அநேகமாக அவர்கள் தங்கள் தவறுகளை விரைவில் உணர்ந்து கொண்டு, அவைகளைப் பழுதுபார்த்து, செப்பனிட முயலுகின்றார்கள். ஆனால், ராணுவக்காரர்களோ வேறுவகையில் வளர்ந்தவர்கள். அவர்கள் வளர்ந்த வகையில் யாருமே அவர்களிடம் எதிர்கட்சி பேசக்கூடாது. அதிகாரத்துக்கு கீழ்ப்படிந்து நடக்க வேண்டும். ஆகவே, மற்றவர்கள் யோசனை சொன்னால், ராணுவக்காரன் ஆத்திரப்படுகின்றான். அவன் தவறிப்போனால் முழுதும் தவறிப்போய் அந்தத் தவறில் பிடிவாதம் பிடிக்கிறான்.

உள்ளத்தைக் காட்டிலும், மூளையைக் காட்டிலும் முகவாய்க்கட்டை முக்கியமானது என்று ராணுவக்காரன் கருதுகிறான்! இந்தியாவிலே, நமக்கு ஒருவகை லாபம் ஏற்பட்டிருக்கிறது. நம்மத்தியில் ஒரு கலப்புத்திட்டம் நிலவிவருகின்றது. அரசியல் நிர்வாகம் அநேகமாக, பேர்பாதி வரைக்கும் ராணுவ அமுலையே தழுவி நடைபெறுகின்றது. ஆகவே அந்த நிர்வாகத்தில், "ராணுவக்காரரின் முகவாய்க்கட்டை" முதலிய லட்சணங்களை அபரிமிதமாகக் காணலாம். சேனையை இந்திய மயமாக்கப்படும் வேலை துரிதமாக நடைபெற்றுவருகிறதென்றும், இன்னும் முப்பது வருஷங்களிலோ அல்லது கொஞ்சம் அதிகமான காலத்திற்குள்ளோ, இந்திய சேனாதிபதியொருவர் இந்தியாவில் தோன்றவும் கூடும் என்று சொல்லப்படுகிறது. நூறு வருஷங்களுக்குள் இந்திய மயமாக்கும் முறை வெகு தூரம் செல்லக் கூடுமாம். இங்கிலாந்துக்கு நெருக்கடி நேர்ந்தகாலத்தில் இரண்டொரு வருஷத்

திற்குள் லட்சக் கணக்கான சிப்பாய்களைக் கொண்ட வல்லமை பொருந்திய சேனையை உண்டாக்கினர்களே, அது எப்படி சாத்தியமாயிற்று? இந்தியாவுக்கு யோசனை கூறும் செட்வோட்டைப் போல அன்பர்கள் இங்கிலாந்தில் அப்பொழுது இருந்திருந்தால், அந்த நாடு மிகவும் எச்சரிக்கையுடன், நிதானமாக வேலையைச் செய்திருக்கும். நேர்த்தியாகப் பயிற்சி பெற்ற இந்த சேனை தயாராகுமுன், யுத்தம் முடிந்து போயிருக்கும்.

ருஷியாவிலே, சோவியத் சேனைகள் எங்கிருந்து எவ்வளவு ஆச்சரியமாகத் தோன்றின? துவக்கத்தில் சோவியத் ருஷியாவுக்கு சேனையே கிடையாது. ஆனல் எதிரிகளைத் தாக்கி வெற்றி பெறுவதற்கு சோவியத் ருஷியா கண்ணிமைப் பொழுதில் சேனையை உற்பத்தி செய்யவில்லையா? இன்றைக்கு ருஷியச் சேனையின் திறமையைக் கண்டு உலகமே புகழுகின்றது. செட்வோட் அவர்களைப்போன்ற யுத்தப் பயிற்சியும் யுத்தத்திறமையும் கொண்ட சேனதிபதிகள் ருஷியாவுக்கு யோசனைசொல்லக் கிடைக்கவில்லையே!

இப்பொழுது டேராடூனில் ராணுவக் கல்லூரி ஒன்று இருக்கிறது. பணக்கார இளைஞர்கள் ராணுவ உத்தியோகஸ்தர்களாக ஆவதற்கு அங்கே பயிற்சி செய்யப்பட்டு வருகின்றனர். "ட்ரில்" செய்யும்பொழுது அவர்கள் மிகவும் நேர்த்தியாக இருக்கின்ருர்கள் என்று சொல்லப்படுகிறது. அவர்கள் நல்ல உத்தியோகஸ்தர்களாக ஆகலாம். ஆனல் போர்ப் பயிற்சி இல்லாமல் இந்த ட்ரில் பழக்கம் மட்டும் அவர்களுக்குக்கொடுப்பதில் என்ன புண்ணியம்? பண்டைக்காலத்து ரோமர்களின் போர் வியூகங்களில் இருந்தது போல, இப்பொழுதும் காலாட்படையும் குதிரைப்படையும் உபயோகமானதுதான். ஆனல் ஆகாய வீதியில் போர் நடக்கும் இக்காலத்தில், விஷக் காற்று வெடிகுண்டுகளுக்கு முன்னே, பீரங்கிவண்டிகளுக்கு முன்னே, துப்பாக்கி என்ன பிரயோஜனம்? பணக்காரர்களைப் பயிற்சி செய்துவருகிருர்களே அவர்களுக்கு இந்த வித்தியாசம் நிச்சயமாகத் தெரிந்திருக்க வேண்டும். இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின் சரிதை என்ன? அதன் குறைகளைப் பற்றி முறையிட்டுக் கொள்ளுவதற்கு நாம் யார்? பிரிட்டிஷ் ஆட்சியின் குறைகள் நம்முடைய பலவீனங்களின் விளைவுகள்தானே? மாறி ஓடும் ஆற்று வெள்

ளத்தில் கலந்துகொள்ளாமல், தேங்கிக் கிடக்கும் குட்டையில் பிரவேசித்து, ஆத்ம திருப்தியடைந்து, அகம்பாவிகளாகி, நெருப்புக் கோழியைப்போல வெளியுலகத்தில் நேருவதைப்பற்றி கவனிக்காமல், நாம் அலட்சியத்துடன் இருந்தால் நமக்கு ஏன் அழிவு ஏற்படாது? உலகத்திலே புதிய உணர்ச்சி அலை தோன்றிய காலத்தில் பிரிட்டிஷார் நம்மிடையே வந்து தோன்றினார்கள். அவர்கள் இந்தியாவுக்கு வரும்பொழுது தங்களுக்கு என்ன கிடைக்கப் போகின்றதென்பதைப்பற்றி சொர்ப்பனம் கூட இல்லாமல் சரித்திரத்தை நிர்மாணிக்கும் மகத்தான சக்திகளால் பிடரியைப் பிடித்து இந்தியாவிலே கொண்டு வந்து சேர்க்கப்பட்டார்கள். நம்மை அடியோடு புரட்டி, தூக்கி எறியும் புயல் காற்றையும் நம்மை வெடவெட வென்று நடுங்கச் செய்யும் குளிர்காற்றையும் பற்றி, நாம் முறையிட்டுக் கொள்ளக் கூடுமா?

சென்று போனது தொலையட்டும். அதைப்பற்றிக் கருதிக் கருதிக் கவலைப்பட வேண்டியதில்லை. எதிர்காலத்தை எதிர்நோக்கி நிற்போம். நமக்கு அரியகொடை யொன்றை பிரிட்டிஷார் கொண்டுவந்து கொடுத்தார்கள். அந்தக்கொடை விஞ்ஞான அறிவு ஆகும். அதற்காக, நாம் பிரிட்டிஷாருக்கு கடமைப்படவேண்டும். ஆனால் இந்தியாவில் பிரிட்டிஷ் அரசாங்கம் இந்தியர்களுக்குள் பிளவுகளையும், பிற்போக்கையும், வகுப்பு வாதத்தையும், சமயோசித சுய நலத்தையும், மூட பக்தியையும் வளர்க்க முயற்சி செய்வதை, மன அமைதியுடன் நோக்கவும் மறக்கவும் முடியாது. ஒருக்கால், அவர்களின் அந்த முயற்சி கூட நமக்கு தேவையான சோதனையாகத்தான் இருக்கவேண்டும் போலும்! இந்தியா மறுபிறப்பு பிறக்குமுன் இத்தகைய பலவீனங்களுக்குள், அசுத்தங்களுக்குள், சீர்குலைவுக்குள் சென்று அவைகளை அறவே பொசுக்கி விட்டு தியாகத் தீயில் மீண்டும் மீண்டும் குளித்து எழுந்திருக்க வேண்டியதாகத்தானிருக்கும்.

## LV

## சகோதரி கல்யாணமும் அதிசய அழைப்பும்

1933-ம் வருஷம் செப்டம்பர் மாத மத்தியில் பூனுவிலும் பம்பாயிலும் சுமார் ஒரு வாரம் வரை தங்கியிருந்துவிட்டு, நான் லக்ஷ்மணபுரிக்குத் திரும்பினேன். எங்கள் தாயார் இன்னமும் லக்ஷ்மணபுரி ஆஸ்பத்திரியிலேயே இருந்து வந்தார். அவர் சிறிது சிறிதாகக் குணமடைந்து வந்தார். கமலாவும் அப்பொழுது லக்ஷ்மணபுரியிலேயே இருந்தாள். அவளுக்கு உடம்பு அசௌக்கியமாக இருந்த போதிலும், தாயாருக்கு வேண்டிய சிசுருஷையைச் செய்து கொண்டிருந்தாள். வாராந்தரங்களில் என்னுடைய சகோதரிகள் அலகபாத்திலிருந்து லக்ஷ்மணபுரிக்கு வந்து போய்க் கொண்டிருந்தார்கள். நான் லக்ஷ்மணபுரியில் இரண்டுமூன்று வாரம் தங்கியிருந்தேன். தினசரி இரண்டு தடவை ஆஸ்பத்திரிக்குப் போவதுதான் எனது முக்கியமான அலுவல். ஆகவே, அலகாபாத்தில் எனக்குக் கிடைக்கக் கூடியதைக் காட்டிலும் அதிகமான ஓய்வு நேரம் லக்ஷ்மணபுரியில் கிடைத்தது. இந்த நேரத்தை பத்திரிகைகளுக்கு கட்டுரைகள் சில எழுதுவதில் செலவிட்டேன். இவைகள் நாடு முழுதும் விஸ்தாரமாகப் பிரசுரிக்கப்பட்டன.

"இந்தியா எதை நாடிச் செல்கிறது?" என்ற தலைப்பின் கீழ் தொடர்ச்சியாக கட்டுரைகள் எழுதி, இந்திய நிலைமையைத் தழுவி உலக சமாச்சாரங்களை நான் ஆராய்ச்சி செய்தேன். அந்தக் கட்டுரைகளை பலர் ஊன்றிப் படித்ததாகத் தெரிந்தது. இவைகள் டிஹரானிலும், காபூல் நகரத்திலும் பாரஸீக பாஷையில் மொழி பெயர்க்கப்பட்டனவென்று பின்னர் நான் அறியலானேன். நவீன நிகழ்ச்சிகளையும் நவீன ஐரோப்பியக் கருத்தையும் கவனித்து வருபவர்களுக்கு இந்தக் கட்டுரைகளில் விசித்திரத்தையாவது சுயமான எதையோயாவது காணமுடியாது. ஆனால், இந்தியாவிலே நம்முடைய ஜனங்கள் உள்நாட்டுத் தொல்லைகளில்

மிகுதியும் ஈடுபட்டிருந்ததால் வெளியுலகத்தில் நேருவதைப் பற்றி கவனிக்க அவர்களுக்கு சாவகாசம் ஏற்படவில்லை. என்னுடைய கட்டுரைகளுக்கு அளிக்கப்பட்ட வரவேற்பி னின்றும் வேறு பல குறிப்புகளினின்றும், நமது ஜனங்கள் விசால அறிவைப் பெற்று வருகின்றூர்கள் என்று தெரிய வந்தது.

எனது தாயார் ஆஸ்பத்திரி வாழ்க்கையில் மிகவும் அலுத்துக் கொண்டிருந்தார். எனவே அவரை மீண்டும் அலகாபாத்துக்கு அழைத்துப் போகத் தீர்மானித்தோம். அவரை அலகாபாத்துக்குக் கொண்டுபோவதற்குக் காரணங் களில் ஒன்று யாதெனில், என்னுடைய சகோதரி கிருஷ்ணு வின் கலியாண விஷயமாகும். எந்த நேரத்திலும் நான் மறு படியும் சிறைக்குக் கொண்டு போகப்படலாமாதலால் கலி யாணத்தை விரைவில் வைத்துக்கொள்ள வேண்டும் என்று நிச்சயித்தோம். உத்தியோக முறைமையில் சட்டமறுப்பு இன்னும் காங்கிரஸின் வேலைத்திட்டமாக இருந்தபடியா லும், காங்கிரஸும் இன்னும் பல அமைப்புகளும் சட்டத் துக்குப் புறம்பானவையென்று இருந்ததாலும், என்னை வெளியே எவ்வளவுகாலம் விட்டு வைத்திருப்பார்கள் என்று எனக்கு நிச்சயமாகத் தெரியாமலிருந்தது.

அக்டோபர்மாதம் மூன்ருவது வாரத்தில், அலகாபாத் தில் கலியாணத்தைச் செய்வது என்று தீர்மானித்தோம். அது ரிஜிஸ்தர் கலியாணம். இதிலே எனக்குச் சந்தோஷம். ஆனல், வேறு வகையாக இந்தக் கலியாணத்தை நடத்தி யிருக்கவும் எங்களால் முடியாது. கலியாணம் இரண்டு வித்தியாசமான ஜாதிகளுக்குள். என்னுடைய சகோதரி பிராமணப் பெண். அவளுடைய புருஷன் ஒரு பிராமணரல் லாதார். தற்போதைய பிரிட்டிஷ் இந்திய சட்டத்தின் பிர காரம், இத்தகைய கலியாணத்துக்கு எந்த மத சம்பந்த மான சடங்கும் செல்லுபடியாகக் கூடியதல்ல. நல்ல வேளை யாக சமீபத்தில் நிறைவேறிய "சிவில் கலியாண சட்டம்" எங்களுக்கு உதவியாக வந்து, எங்களைக்காப்பாற்றிற்று. கலி யாணத்துக்காக இரண்டு சட்டங்கள் உண்டு. ஹிந்துக்களுக் குள்ளாகவே பல கூட்டத்தார்கள் கலப்பு மணம் செய்வதற் காக ஒரு சட்டம். இந்தக் சட்டத்தின் பிரகாரம் ஹிந்துக் களில் எல்லா வகுப்பாரும், பௌத்தர், ஜைனர், சீக்கியர்கள்

முதலானவர்களும் கலப்புமணம் செய்துகொள்ளலாம். என்னுடைய சகோதரியின் கலியாணம் இந்தச் சட்டத்தின் கீழ் தான் நடைபெற்றது. ஆனால் கலியாணம் பண்ணிக்கொள்ளுபவர்கள் பிறப்பினாலேயோ அல்லது மதமாற்றத்தினாலோ மேற்கூறிய மதங்கள் ஒன்றில் சேர்ந்திருக்காவிடின் இந்த சட்டத்தின் மூலமாக கலியாணம் செய்து கொள்ளமுடியாது. முதல் சிவில் கலியாண சட்டத்தின் மூலமாகத்தான் கலியாணம் செய்து கொள்ளவேண்டும். கலியாணம் செய்து கொள்ளுபவர்கள் எந்த மதத்தையும் சேர்ந்தவர்கள் அல்லவென்று இந்த சட்டப் பிரகாரம் சொல்ல வேண்டும். தாங்கள் எந்த மதத்திலும் சேர்ந்தவர்களல்லவென்று சொல்ல வேண்டியது ஒரு அனாவசியமான தொல்லையாகும். மதப் பற்று இல்லாத அநேகர்கூட, இவ்வாறு சொல்லவேண்டியதை ஆட்சேபித்து அந்தச் சட்டத்தை அதிகமாக உபயோகப்படுத்திக்கொள்ள முடிவதில்லை.

எல்லா மதங்களிலும் உள்ள வைதிகர்கள், கலப்பு மணங்களுக்கு வசதியளிக்கும் மாறுதல்கள் யாவற்றையும் எதிர்க்கிறார்கள். அதனுடைய விளைவு என்னவெனில், தாங்கள் எந்த மதத்திலும் சேர்ந்தவர்களல்லவென்று சொல்லும்படியாக மணமகனையும் மணமகளையும் கட்டாயப் படுத்தி விடுகிறார்கள்; அல்லது, வேறு மதங்களுக்கு மாறி கலியாணம் செய்துகொள்ளும்படியாக செய்துவிடுகிறார்கள். என் சம்பந்தப்பட்ட வரையிலும், கலப்புமணங்களை நான் மிகுதியும் ஆதரிக்கின்றேன். ஆனால் கலப்பு மணங்கள் ஆதரிக்கப்பட்டாலும் படாவிட்டாலும் சரியே, மதம் மாறாமலும், எந்த மதத்திலும் சேரவில்லையென்று சொல்லாமலும், எந்த மதத்தினர்களாயிருந்தாலும் எளிதிலே கலியாணம் செய்து கொள்ளும்படியாக, பொதுவான அனுமதியை அளிக்கும் சிவில் கலியாணச்சட்டம் மிகவும்தேவையானதாகும்.

என்னுடைய சகோதரியின் கலியாணத்திலே ஆடம்பரமே கிடையாது. அது மிகவும் சாமானியமாக முடிந்துவிட்டது. பொதுவாகவே, இந்தியக்கலியாணங்களுக்கு இயற்கையாகவுள்ள ஆடம்பரத்தை நான் வெறுக்கிறேன். தாயாரின் சுகக்கேடு ஒரு பக்கம்; இன்னொரு பக்கம் நாட்டில் சட்டமறுப்புப்போர் நடைபெற்றுக் கொண்டிருந்தது. எங்களு

டைய தோழர்களிற் பலர் சிறையில் இருந்துவந்தனர். எனவே ஆடம்பரக் கலியாணம் என்பது மிகவும் பொருத்த மில்லாத சங்கதி ஆகும். ஒரு சில நண்பர்களும் உறவினர் களும்தான் அழைக்கப்பட்டிருந்தனர். நான் வேண்டு மென்றே அவர்களை அலட்சியம் செய்ததாக தவருக உணர்ந்துகொண்டு என்னுடைய தகப்பனரின் பழைய நண் பர்களிற் பலர் நொந்து கொண்டார்கள்.

நாங்கள் விடுத்த கலியாண அழைப்புக்கடிதம் ஹிந்துஸ் தானியில், லத்தீன் எழுத்தில் அச்சடிக்கப்பட்டது. இது ஒரு மாறுதல் ஆகும். ஏனென்றால், இத்தகைய அழைப்பு கள் பொதுவாக நாகரி எழுத்திலாவது பாரஸீக எழுத்தி லாவது அச்சடிக்கப் படுவது வழக்கம். ஹிந்துஸ்தானியை லத்தீன் எழுத்தில் எழுதுவது என்ற பழக்கம் அநேகமாகக் கிடையாது. இந்தப் பழக்கம் சேனையிலும் பாதிரிமார்க ளிடையேயும் தான் இருந்து வந்தது. பரீட்சார்த்தமாகவே நான் லத்தீன் எழுத்தில் எழுதிப் பார்த்தேன். ஜனங்கள் அதை எவ்வாறு வரவேற்கின்றூர்கள் என்று தெரிந்து கொள்ள விரும்பினேன். பெரும்பான்மையோர் அதைஎதிர்த் தார்கள். சிறுபான்மையோர்தான் ஆதரித்தார்கள். நாங்கள் அழைப்பு அனுப்பினதும் சிலருக்குத்தானே. இன்னும் அதிக மாக அழைப்பு அனுப்பியிருந்தால், இன்னும் அதிகமான பேர்கள் அதை வெறுத்திருப்பார்கள். நான் செய்ததை காந்திஜீ அங்கீகரிக்கவில்லை.

லத்தீன் எழுத்தில் நீண்டகாலமாக எனக்கு ருசியிருந்த போதிலும் அதை நான் ஏற்றுக்கொண்டு அந்த எழுத்தை உபயோகப்படுத்த வில்லை. மத்திய ஆசியாவிலும், துருக்கி யிலும் அதற்கு ஏற்பட்டவெற்றி என் உள்ளத்தைக் கவர்ந் தது. அதற்குச் சாதகமான கட்சிவாதங்கள் மிகவும் மதிப் புக்கொண்டவையாகும். இருந்தாலும் எனது மனம் மாற வில்லை. மனமாற்றம் எனக்கு ஏற்பட்டிருந்தாலும், தற்கால இந்தியாவில் அது ஏற்றுக் கொள்ளப்படவே மாட்டா தென்று எனக்கு நன்ருய்த் தெரியும். எல்லாக் கூட்டத்தாரிட மிருந்தும் அதற்கு வலுவான எதிர்ப்பு ஏற்படும். ஹிந்து, முஸ்லீம், தேசியவாதி, மதப்பற்று கொண்டவர், எல்லோ ரும் அதைச் சேர்ந்து எதிர்ப்பார்கள். வெறும் உணர்ச்சிப் பெருக்கால்மட்டும் இந்த எதிர்ப்பு ஏற்படாது என்றும் எனக்குத் தெரியும்.

நீண்ட காலமாக செல்வாக்குடன் இருந்துவரும் ஒரு பாஷைக்கு அதனுடைய எழுத்து முறை மிகவும் முக்கியமான ஒரு அம்சமாகும். அது அந்த பாஷையி னுடைய இலக்கியத்தின் சிறப்பான பகுதியாகும். எனவே எழுத்துமாற்றம் ஒரு முக்கியமான மாறுதல் ஆகும். எழுத்தை மாற்றினல், புதிதான வார்த்தைச் சித்திரங் கள் தோன்றுகின்றன. புதிதான சட்டங்கள், புதிதான கருத்துகள் தோன்றிவிடுகின்றன. பழைய இலக்கியத்திற்கும் புதியதுக்கும் இடையே தாண்ட முடியாத தடை ஏற்பட்டு விடுகிறது. செத்துப் போன அந்நிய பாஷையாகப் பழைய இலக்கியமும் அதன் எழுத்தும் மாறிப்போய்விடுகின்றன. காப்பாற்றுவதற்கு தகுதிபெருத அளவில் ஒரு பாஷையின் இலக்கியம் இருக்குமாகில் அப்பொழுது இந்த எழுத்து மாற்றம் செய்துபார்க்கலாம். இந்தியாவில் இத்தகைய மாறு தலே மனத்தினுல்கூட நினைக்கவே முடியாது. ஏனென்ருல் நம்முடைய இலக்கியம் செழிப்பானதும் மதிப்பைப் பெற் றதுமாகும். அது நம்முடைய சரித்திரத்தோடும் நம்முடைய எண்ணங்களோடும் பின்னிக்கொண்டு கிடக்கின்றது. அது நமது பாமர மக்களின் வாழ்க்கையோடு நெருக்கமாக இழைந்துகொண்டிருக்கிறது. இத்தகைய மாறுதலேக் கட் டாயப்படுத்தி செய்தால், அது குரூரமான சித்திர வதை யாகும். பாமர மக்களின் கல்வியபிவிருத்தியை அது தடைப் படுத்தும்.

ஆனல் இந்த எழுத்துப் பிரச்னே இந்தியாவில் இப் பொழுது வெறும் வாதத்துக்குத் தகுதியான பிரச்னே மட்டு மல்ல. சமஸ்கிருதத்தின் குழந்தைகளான ஹிந்தி, வங்காளி, மராத்தி, குஜாரத்தி இந்த பாஷைகளுக்கெல்லாம் பொது வான எழுத்துத் திட்டத்தைப்பற்றி நாம் யோசிக்கவேண்டி யது அடுத்த சீர்திருத்த முயற்சியாகும். உள்ளபடியே அந்த பாஷைகளின் எழுத்துகள் பொதுவானதொரு உற்பத்தி யைக் கொண்டவைகள். அவைகளுக்குள் அதிகமான வேற் றுமை கிடையாது. ஆகவே பொதுத் திட்டம் ஒன்றை அவைகளுக்குள் ஏற்படுத்துவது கஷ்டமான வேலேயல்ல. இந்த மாறுதலேச் செய்தால் இந்த நான்கு பெரிய சகோதர பாஷைகளுக்குள்ளே ஐக்கிய பாவம் ஏற்படும்.

நமது ஆங்கில அதிகாரவர்க்கத்தினர் இந்தியாவைப் பற்றி உலகம் முழுதிலும் பிடிவாதமாக புளியொன்றைப்

பரப்பி வருகிறார்கள். இந்தியாவிலே பல நூறு பாஷைகள் இருக்கின்றனவாம்! சரியான தொகையை நான் மறந்துவிட்டேன்! அவர்களுடைய கூற்றுக்கு ஆதாரமாக ஜனன மரணக்கணக்கு காண்பிக்கப்படுகின்றது. இந்தியாவில் நீண்ட காலமாக வசித்தபோதிலும் இரண்டொரு இங்கிலீஷ்காரர்கள்கூட இந்த பலநூறு பாஷைகளில் ஒன்றையேனும் சாதாரணமாகக் கூட கற்றுக்கொள்ளாததுதான் விசித்திரமாக இருக்கின்றது. அவர்கள் இவைகளையெல்லாம் ஒன்று சேர்த்து அவைகளை "வெர்னக்குலர்" என்றபெயர் கொடுத்திருக்கிறார்கள். "வெர்னக்குலர்" என்றால் அடிமை பாஷை என்று அர்த்தம். இந்தச் சொல் லத்தீன் பாஷையிலிருந்து பிறந்ததாகும். இந்தச் சொல்லின் அர்த்தத்தைத் தெரிந்து கொள்ளாமல் நம்முடைய ஜனங்கள் அந்தப் பெயரை ஏற்றுக்கொண்டு விட்டார்கள்.

இங்கிலீஷ்காரர்கள் அநேகமாக தங்கள் ஆயுளை இந்தியாவிலே கழிக்கிறார்கள். ஆனால் இந்திய பாஷையை நன்றாகக் கற்றுக்கொள்ளவேண்டுமே என்று அவர்கள் கவலைப்படுவதே இல்லை. இது வியப்பே ஆகும். அவர்கள் தங்களுடைய சமையற்காரர்கள், ஆயாக்கள் மூலமாக கதம்ப ஹிந்துஸ்தானியொன்றை ஆக்கிக்கொண்டு, அதுதான் உண்மையான சரக்கு என்று நினைத்துக் கொள்ளுகிறார்கள். அவர்கள் பேசும் ஹிந்துஸ்தானி காதைத் தொளைக்கும் வெறும் கூச்சல் என்பது அவர்களுக்குத் தெரிவதே இல்லை. இந்தியாவின் வாழ்க்கையைப்பற்றி தங்கள் சிப்பந்திகளிடமிருந்தும் தங்களைச் சுற்றி நின்று பல்லைக் காட்டுபவர்களிடமிருந்தும் இங்கிலீஷ்காரர்கள் விஷயங்களைத் தெரிந்து கொள்ளுவது போல (எடுத்துக் கொள்ளுவதுபோல) ஹிந்துஸ்தானியைப் பற்றி தங்களுடைய வீட்டு வேலைக்காரர்களிடமிருந்து அவர்கள் தங்கள் கருத்துகளை எடுத்துக்கொள்ளுகிறார்கள். வேறு எப்படிப் பேசினாலும் துரைமார்களுக்கு விளங்காதோ என்று பயந்து வேலைக்காரர்கள் இந்தக் கதம்ப பாஷையில் பேசுகிறார்கள். ஹிந்துஸ்தானியிலும் ஏனைய இந்திய பாஷைகளிலும் உயர்ந்த இலக்கிய நயமும், பரந்த இலக்கியங்களும் இருக்கின்றன என்பது அவர்களுக்குக் கொஞ்சம் கூடத் தெரியாததுபோல் இருக்கிறது!

இந்தியாவில் 200, 300 பாஷைகள் இருக்கின்றன என்று கானிஷ்மாரிக் கணக்கு (ஜனன மரணக்கணக்கு) நமக்

குச் சொல்லுமாயின் அதே கானிஷ்மாரிக் கணக்கு ஜெர்மனியில் 50, 60 பாஷைகள் இருக்கின்றன என்று நமக்கு அறிவிக்கின்றது. இந்த விஷயத்தை ஜெர்மனியின் ஒற்றுமைக் குறைவுக்காவது அல்லது இளப்பத்துக்காவது ருசுவாக யாரும் குறிப்பிட்டதை நான் கேட்டதே இல்லை. உள்ளபடியே சில ஆயிரம் பேர்கள் மட்டும் பேசும் சில்லரைப் பாஷைகள் எல்லாவற்றையும் ஸென்ஸஸ் கணக்கு குறிப்பிடுகின்றது. கிராமப் பேச்சுகள் எல்லாம் தனி பாஷைகளாக ஆராய்ச்சி நோக்கம் கொண்டு பல சமயங்களில் வகுக்கப் படுகின்றன.

இந்தியாவின் விஸ்தீர்ணத்தை யோசித்துப் பார்த்தால், இந்தியாவில் மிகக் குறைவான பாஷைகளே இருப்பதாக எனக்குத் தோன்றுகிறது. ஐரோப்பாவில் இதே விஸ்தீர்ணம் கொண்ட நிலப்பரப்போடு ஒப்பிட்டுப் பார்த்தால், இந்தியாவில் பாஷைகளின் ஒற்றுமை தெளிவாக கண்ணில் படுகின்றது. ஆனால் எழுத்து வாசனைக்குறைவினால், பொதுவான நிறைகள் இந்தியாவில் தோன்றி விருத்தி அடையவில்லை. ஆங்காங்கு கிராமப் பேச்சுகள் உண்டாகி விட்டன. இந்தியாவின் முக்கிய பாஷைகள் [பர்மாவை விலக்கிவிட்டால்] ஹிந்துஸ்தானி, வங்காளி, குஜராத்தி, மராத்தி, தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், அஸாம் பாஷை, ஒரியா, ஸிந்தி, புஷ்டு, பஞ்சாபி-இந்த பாஷைகளைச் சேர்த்துக்கொண்டால் நாட்டுப் பாஷைகள் அனைத்தையும் ஒருவாறு சொல்லிவிட்டதாக ஆகிவிடும். மலையிலும் காடுகளிலும் வசிக்கும் சில கூட்டங்களுக்கு தனிப்பேச்சுகள் உண்டு. மேற்சொன்ன முக்கியமான பாஷைகளில் இந்தியாவில் வடக்கேயும் மத்தியிலும் மேற்கிலும் வழங்குகிற இந்திய-ஆரிய பாஷைகள் ஒன்றுக்கொன்று மிகவும் நெருக்கம் கொண்டவை. தெற்கே இருக்கும் திராவிட பாஷைகள் வித்தியாசமாயிருந்தாலும் சம்ஸ்கிருதத்தின் அதிர்ச்சியால் மாறுதல் அடைந்தவைகள். அவைகளில் வடமொழிச் சொற்கள் கலந்து நிறைந்து நிற்கின்றன.

மேலே கூறப்பட்ட எட்டு முக்கியமான பாஷைகளுக்கும் பழமையானது. மதிப்பு கொண்டதுமான இலக்கியங்கள் இருக்கின்றன. குறிப்பிட்ட, தெளிவான எல்லைகளைக் கொண்ட விஸ்தாரமான பிரதேசங்களில், அவைகள் ஒவ்

வொன்றும் இன்றைக்கும் பேசப்பட்டு வருகின்றன. ஒரு பாஷையைப் பேசும் பேர்வழிகளின் தொகையினின்றும் மதிப்பிட்டால், இந்தப் பாஷைகள் உலகத்தின் பெரிய பாஷைக் கூட்டத்தைச் சேர்ந்தவைகளாகும். ஐந்து கோடி ஜனங்கள் வங்காளி பாஷை பேசுகிறார்கள். ஹிந்துஸ்தானியையும் அதனுடைய பல வேறு சிதைவுகளையும் சேர்த்துப் பார்த்தாலோ (சரியான புள்ளி என்னிடம் இல்லை) இந்தியாவில் பதினறு கோடி ஜனங்கள் அதைப் பேசுகிறார்களென்று நினைக்கிறேன். இந்தியாவின் எல்லாப் பாகங்களிலும் அதை ஏராளமானவர்கள் ஏறக்குறைய அறிந்து கொள்ள முடியும். இத்தகைய பாஷை எதிர் காலத்தில் விருத்தியடைய ஏராளமான வசதிகள் இருக்கின்றன. அதற்கு சம்ஸ்கிருதம் கெட்டியான அஸ்திவாரமாகும். அது பாரஸீக பாஷையோடு நெருக்கமாக உறவு கொண்டிருக்கிறது. ஆகையால் இந்த இரண்டு செழிப்பான ஊற்றுகளிலிருந்து தேவையானவைகளை அது எடுத்துக்கொள்ள முடியும். சமீப காலமாக அது இங்கிலீஷ் பாஷையிலிருந்தும் எடுத்துக் கொண்டு வருகிறது.

தெற்கே இருக்கும் திராவிட நாட்டிற்கு ஹிந்துஸ்தானி அன்னிய பாஷையைப் போல் தோன்றக் கூடும். ஆனல் அங்கே இருக்கிற ஜனங்கள் ஹிந்துஸ்தானியைக் கற்றுக் கொள்ள பெருமுயற்சி செய்து வருகிறார்கள். இரண்டு வருஷங்களுக்குமுன் (1932-ம் வருஷத்தில்) தெற்கே ஹிந்தியைக் கற்றுக் கொடுப்பதற்காக ஏற்பட்ட சங்கம் வெளியிட்ட புள்ளி விவரங்களைப் பார்த்தேன். அந்தச் சங்கம் ஏற்பட்டு, வேலை செய்த பதினறு வருஷ காலமாக, சென்னை மாகாணத்தில்மட்டும் அதனுடைய முயற்சிகளால் $5\frac{1}{2}$ லட்சம் ஜனங்கள் ஹிந்தியைக் கற்றுக்கொண்டதாக சொல்லப்படுகிறது. அரசாங்கத்தின் ஆதரவு துளிக்கூட இல்லாத இத்தகைய தொண்டுக்கு பயன் மெச்சத் தகுந்ததாகவே இருக்கிறது. ஹிந்தி கற்றுக்கொள்ளுபவர்களில் பெரும் பான்மையோர் மற்றவர்களுக்கு அதைக் கற்றுக்கொடுக்கும் பொறுப்பையும் ஏற்றுக் கொள்ளுகிறார்கள்.

ஹிந்துஸ்தானி இந்தியாவின் பொது பாஷையாகஆகப் போகிறது என்பதில் எனக்குச் சந்தேகமே கிடையாது.இன்றைக்குச் சாதாரண காரியங்களுக்கு அதுவே பொதுபாஷை

யாக இருக்கிறது. நாகரி எழுத்தா அல்லது பாரசீகஎழுத்தா என்பதைப்பற்றி முட்டாள்தனமாக வாதங்கள்தோன்றின தால் அதன் அபிவிருத்தி தடைப்பட்டிருக்கிறது. ஒரு கூட்டத்தார் சமஸ்கிருதச் சொற்கள் அதிகமாகக் கொண்ட ஹிந்துஸ்தானியையும், இன்னொரு கூட்டத்தார் பாரசீகச் சொற்கள் நிறைந்த ஹிந்தியையும் பிடிவாதமாகப் பேசுவதினுல் அந்த பாஷையின் வளர்ச்சி தடைப்பட்டிருக்கிறது. எழுத்துத் தொல்லையிலிருந்து நிவர்த்தி கிடையாது. இதைப் பற்றிப் பேசினுலே, கொதிப்பு ஏற்பட்டு விடுகிறது. ஆகவே இருவித லிபிகளையும் (எழுத்து) ஜனங்கள் உபயோகப்படுத்தும்படியாக விட்டுவிட வேண்டியதுதான்.

ஆனல், அந்தபாஷை கடுமையான நிலைமையையடைந்து விடாதபடி பார்த்து, மத்தியஸ்தமாகக் கொண்டுவந்து, அதனுடைய இலக்கியப் போக்கை விருத்திசெய்ய முயலவேண்டும். சாதாரணமாக பேசுகிற பாஷையின் ரீதியைக்கொண்டு, இந்த மத்தியஸ்த பாஷையை அமைத்துக் கொள்ளலாம். பாமர மக்களுக்கு கட்டாயக் கல்வி போதிக்கப்படும் பொழுது, இது கண்டிப்பாக நேர்ந்துவிடும். இலக்கிய ருசிக்கும் நடைக்கும் கர்த்தர்களாக தங்களை எண்ணிக்கொண்டிருக்கும் நடுத்தர வகுப்பில் சில சில்லரைக் கூட்டங்கள் மிகவும் குறுகிய மனப்பான்மை கொண்டவைகளாகவும், பழம் பெருமை நினைப்பு கொண்டவைகளாகவும் இருக்கின்றன. துளிக்கூட உயிர் இல்லாத பழைய உருவங்களோடும், தங்கள் பொது ஜனங்களுடைய உலக இலக்கியத்தோடும், தொடர்புகளே இல்லாத பழைய பேச்சு எழுத்து தோரணையோடும் அவர்கள் கட்டிப் புரண்டு கொண்டிருக்கிருர்கள். ஹிந்துஸ்தானி, வளர்ச்சியடைந்து பரவுவதால், இந்தியாவின் ஏனைய பெரிய பாஷைகளான வங்காளி, குஜாரத்தி, மராத்தி, ஒரியாவும், திராவிட பாஷைகளும் செழித்து வளராமல் போக முடியாது; போகவிடவும் கூடாது. இவைகளில் சில பாஷைகள் ஹிந்துஸ்தானியை விட ஏற்கெனவே சுறுசுறுப்புடனும் கவனத்துடனும் வேலை செய்து வருகின்றன. அந்தந்த மாகாணங்களில் கல்விக்காகவும் ஏனைய காரியங்களுக்காகவும் அவைகள் ராஜாங்க பாஷைகளாக இருக்க வேண்டும். அவைகளின் மூலமாகத்தான், பொது மக்களுக்கு கல்வியையும் கலையபிவிருத்தியையும் விரைவில் பரப்ப முடியும்.

இங்கிலீஷ் பாஷை இந்தியாவின் பொது பாஷையாக ஆகக்கூடும் என்று சிலர் எண்ணுகிறார்கள். கைவிரலில் எண்ணக்கூடிய சிறு கூட்டத்தார் அதைக் கற்றுக்கொள்ளலாம். அது பொது பாஷையாக ஆகக்கூடும் என்ற கற்பனையே விநோதமானதாகும். பாமர மக்களின் கல்வியையும் கலைப் பெருக்கையும் ஆதாரமாகக்கொண்ட பிரச்னைக்கும் இங்கிலீஷ் பாஷைக்கும் சம்பந்தமே கிடையாது. இன்றைக்கிருக்கிறதுபோல இங்கிலீஷ் பாஷை உலகத் தொடர்புக்கு அதிகமாக உபயோகப்பட்டு வரலாம். விஞ்ஞானம், வியாபாரம் முதலிய துறைகளில் உபயோகமாக இருக்கலாம். உலக நிகழ்ச்சிகளோடும் உலகக் கருத்துகளோடும் தொடர்பு வைத்துக்கொள்ளும் பொருட்டு நம்மில் பலர் அன்னிய பாஷைகளைக் கற்றுக் கொள்ளவேண்டியது அவசியமாகும். இங்கிலீஷ் பாஷையைத் தவிர பிரெஞ்சு, ஜெர்மன், ருஷியன், ஸ்பானிஷ், இத்தாலியன் பாஷைகளைக் கற்றுக் கொடுக்கும்படி நமது சர்வகலாசாலைகள் ஏற்பாடு செய்ய வேண்டுமென்பது எனது ஆசையாகும்.

இங்கிலீஷ் பாஷையை அலட்சியம் செய்யவேண்டுமென்று இதற்கு அர்த்தமல்ல. ஆனால் உலகத்தைப்பற்றி சரியான பார்வை நமக்கு இருக்கவேண்டுமானால் நாம் இங்கிலீஷ் கண்ணாடிகளைக் கொண்டு மட்டும் பார்க்கக் கூடாது. ஏற்கனவே இந்த ஒரு பாஷையை மட்டும் கற்றுக்கொண்டு பிரிட்டிஷாரின் கருத்துகளையே நாம் ஏற்றுக்கொண்டதால் நாம் நம்முடைய மனப்பான்மையில் ஒரு பக்கமாக சரிந்து கொண்டே போய்விட்டோம். இந்தியா சம்பந்தமாக எல்லாவற்றையும் பிரிட்டிஷ் பார்வையைக்கொண்டுதான் பார்க்கின்றார்கள் என்பதை நம்முடைய தேசிய வாதிகளில் தீவிரமானவர்கள்கூட உணருவதில்லை. நாம் வேறு அந்நிய பாஷைகளை எவ்வளவோ ஆதரித்தபோதிலும் வெளியுலகத்தோடு உறவு கொண்டாடுவதற்கு இங்கிலீஷ் பாஷைதான் நம்முடைய முக்கியமான சாதனமாக இருக்கமுடியும். அப்படி இருக்கவேண்டியதுதான் பொருத்தமும் ஆகும். பல தலைமுறைகளாக இங்கிலீஷ் கற்றுக்கொள்ள நாம் முயன்றுவருகின்றோம். அந்த முயற்சியில் கணிசமான அளவில் வெற்றியும் பெற்று விட்டோம். எனவே அந்த நீண்ட காலப் பயிற்சியை முழுதும் உபயோகப்படுத்திக் கொள்ளாமல் அதை முற்றிலும் அழிப்பது முட்டாள்தனமாகும். இன்

றைக்கு உலகத்தில் மிகுதியும் பரவி நிற்கும் பாஷை நிச்சய மாக இங்கிலீஷ்தான். மற்றைய பாஷைகளுக்கு இது முன் னணியில் நிற்கிறது.

சர்வதேசக் கூட்டுறவுக்கும் ஆகாயவசனியில் பேசுவதற் கும் அது தக்க கருவியாக அமையலாம். ஒருக்கால் இங்கி லீஷ் பாஷையைத் தள்ளிவிட்டு 'அமெரிக்கன்' உலக பாஷை யாக வந்தாலும் வரலாம். ஆகவே இங்கிலீஷ் பாஷை ஞான த்தைப் பரப்பிக்கொண்டே இருக்கவேண்டும். அதை நன்று கக் கற்றுக்கொள்ளுவது உசிதமாகும். இப்பொழுது நாம் எல்லாம் செய்து வருவதுபோல அதிகமான நேரத்தை செலவிட்டு அந்தப் பாஷையின் நேர்த்திகளைத் தெரிந்துகொள் ளவேண்டிய தேவையில்லையென எனக்குத் தோன்றுகிறது; ஏதோ ஒரு சிலர் அவ்வாறு செய்தால் பாதகமில்லை. பெரும் பான்மையோர் அதை லட்சியமாகக் கொண்டு உழைப்பது அநாவசியமான சுமையைத் தூக்குவதாக ஆகும். வேறு துறைகளில் அவர்கள் முற்போக்கு அடைவது தடைபட்டுப் போகும்.

சமீப காலமாக புதிதாகத் தோன்றியிருக்கும் 'சுலப இங்கிலீஷின்' பேரில் எனக்கு மிகுதியும் பிடித்தம் உண் டாய் இருக்கிறது. இங்கிலீஷை மிகவும் எளிதாகச் செய்யும் இந்த முறைக்கு எதிர்காலத்தில் நல்ல அபிவிருத்தி இருப்ப தாக எனக்குத் தேன்றுகிறது. நமது பள்ளிக்கூடங்களில் இலக்கண இங்கிலீஷைக் கட்டிக்கொண்டு அழுவதைக்காட்டி லும் விரிவான அளவில் 'சுலபமான இங்கிலீஷை' க் கற்றுக் கொடுப்பது விரும்பத்தக்கதாகும். இலக்கண இங்கிலீஷை நிபுணர்களுக்கும் சிறப்பாக சில மாணவர்களுக்கும் விட்டு விடலாம். இங்கிலீஷிலிருந்தும் ஏனைய அன்னிய பாஷை களிலிருந்தும் பல சொற்களை ஹிந்துஸ்துதானி எடுத்துக் கொண்டு தனக்குப் பொருத்தமாக அமைத்துக்கொள்ள வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. இது அவ சியமாகும். ஏனென்றால், நம்மிடம் நவீன சொற்கள் இல்லை. புதிதாக சம்ஸ்கிருதத்திலிருந்தும் பெர்ஷியன், அரா பிப் பாஷைகளிலிருந்தும் கஷ்டமான வார்த்தைகளை உற்ப த்தி செய்வதைக் காட்டிலும் உலகமறிந்த சொற்களை அப்ப டியே எடுத்துக்கொள்ளுவது நலமாகும். திசைச்சொற்கள் கூடாதென்று தனிமொழியாளர்கள் ஆட்சேபிக்கின்றூர்கள்,

ஆனல் அவர்கள் பெரிய தவறு செய்கிருர்கள் என்று தோன்றுகிறது. வேறு பாஷைகளிலிருந்து வார்த்தைகளையும் கருத்துகளையும் எடுத்துக்கொண்டு அவைகளின் சத்தை கிரகிக்கும்படியாகவும், நமது பாஷையை வளர்ந்து கொடுக்கும் படியாகவும் செய்தால்தான் நமது பாஷை செழிக்கமுடியும்.

என் சகோதரியின் கலியாணத்துக்குப்பிறகு நான் காசிக் குப்போனேன். அங்கு சென்ற ஒரு வருஷகாலமாக சீக்காய்க் கிடந்த எனது பழைய நண்பரும் தோழருமான ஸ்ரீயுத சிவப் பிரஸாத குப்தாவைப் பார்த்தேன். அவர் லக்ஷ்மணபுரி சிறையில் இருக்கும் பொழுது திடீரென்று அவருக்கு பாரிச வாயு கண்டது. அப்பொழுது முதல் அவர் கொஞ்ச மாகக் குணமடைந்து கொண்டுவந்தார். எனது காசிப் பிரயாண காலத்தில் சிறிய ஹிந்தி இலக்கிய சங்கம் ஒன்று வரவேற்புப் பத்திரம் படித்துக் கொடுத்தது. அதன் அங்கத்தினர்களோடு இனிமையாக சம்பாஷித்துக்கொண்டி ருந்தேன். எனக்குத் தெரியாத விஷயங்களைப்பற்றி நிபுணர் களோடு பேச நான் தயங்கினேன் என்று அவர்களிடம் சொன்னேன். இருந்தாலும்சில யோசனைகளையும் கூறினேன்.

"ஹிந்தி இலக்கியத்தில் அலங்கார நடை நிறைந்திருக்கி றது. கஷ்டமான சமஸ்கிருத வார்த்தைகள் உபயோகப் படுத்தப்பட்டு வருகின்றன. அவைகள் உயிர்ச்சத்தில்லாமல் இருக்கின்றன. பழைய சொல்தொடர்களையும், உருவங்களை யும், விடாப்பிடியாக பிடித்துக்கொண்டிருக்கிருர்கள். இந்த "கம்பீரமான" நடை சிலருக்குத்தான் புரியும். அந்த நடையை விட்டுவிட வேண்டும். பொதுஜனங்களுக்காக அவர்கள் புரிந்து கொள்ளக்கூடிய பாஷையில் வேண்டுமென்றே எல்லாவற்றை யும் ஹிந்தி ஆசிரியர்கள் எழுதவேண்டும். பொதுஜனத் தொடர்புகளால் பாஷைக்கு புதிய உயிரும் தொனியும் உண் டாகும். தவிர பாமர மக்களுக்கு இயல்பாய் உள்ள உணர்ச்சிப் பெருக்கை இந்த ஆசிரியர்கள் அடைந்து இன்னும் உயர் வான வேலையைச் செய்யலாம்" என்று நான் சொன்னேன்.

மேலும் நான் கூறியதாவது:—

"ஹிந்தி ஆசிரியர்கள் மேனாட்டுக் கருத்துக்கும் இலக்கி யத்துக்கும் அதிகமான கவனம் செலுத்துவார்களாகில் அத

ஞல் அவர்களுக்கு மகத்தான நன்மைஉண்டாகும். ஐரோப்பாவின் பண்டைய நூல்களை மொழிபெயர்ப்பது உசிதமாகும். புதுக்கருத்துகளைத் தழுவிய புஸ்தகங்களையும் மொழிபெயர்க்க வேண்டும். தற்கால ஹிந்தியைக் காட்டிலும் வங்காளி, குஜாராத்தி, மராத்தி பாஷைகள் இந்த விஷயங்களில் அதிகமான முற்போக்கு அடைந்திருக்கின்றன. சமீப காலமாக ஹிந்தியைக் காட்டிலும் வங்காளி பாஷையில் நேர்த்தியான மறுமலர்ச்சி இலக்கியம் தோன்றியிருக்கிறது.''

இந்த விஷயங்களைப்பற்றி நட்பு முறையில் நாங்கள் பேசிக்கொண்டிருந்தோம். பிறகு நான் வந்துவிட்டேன். என்னுடைய குறிப்புகள் பத்திரிகைகளுக்கு அனுப்பப்படும் என்று எனக்குத் தெரியாது. அங்கே இருந்தவர்களில் யாரோ ஒருவர் ஹிந்திப் பத்திரிகைகளுக்கு ஒருரிபோர்ட்டு அனுப்பி விட்டார்.

ஹிந்திப் பத்திரிகைகளில் எனக்கு விரோதமாக எழுந்த கூச்சலைப் பார்க்கவேண்டுமே! ஹிந்தியை வங்காளி, குஜாராத்தி, மராத்தியோடு ஒப்பிட்டு, அது நயத்தில் குறைவானது என்று நான் எப்படிச் சொல்லலாம் என்று கூச்சல்! என்னை மடையன் என்று சொன்னார்கள். (அந்த விஷயத்தில் உள்ளபடியே நான் மடையன் தான்) என்னை அடித்து அடக்குவதற்காக, மடையனைத் தவிர இன்னும் கடுமையான வார்த்தைகள் பல பிரயோகம் செய்யப்பட்டன. வாதத்தைத் தொடர்ந்து கவனிக்க எனக்கு நேரமில்லை. சில மாதங்கள் வாதம் நடந்து வந்ததாக நான் கேள்விப்பட்டேன். அதற்குள் நான் மீண்டும் சிறைக்குப் போய்விட்டேன். இந்த நிகழ்ச்சியினுல் ஒரு வகையில் எனக்கு உண்மை வெளியாயிற்று. ஹிந்தி ஆசிரியர்களும் பத்திரிகைக்காரர்களும் எவ்வளவு ஆத்திரிப்பட்டார்கள் என்பது வெளியே தெரிந்தது. அவர்களுடைய அபிமானிகளில் ஒருவராகிய என்னிடமிருந்து யோக்கியப் பொறுப்புள்ள விமரிசனத்தை, நல்ல முகத்தோடு வாங்கிக் கொள்ள அவர்களுக்குப் பிரியம் இல்லை. தாங்கள் தாழ்ந்தவர்கள் என்ற எண்ணமே அவர்களுடைய உள்ளத்தில் தாண்டவமாடியிருக்கவேண்டும். ஆத்ம சோதனை செய்து பார்க்க அவர்கள் விரும்பவே இல்லை. மதிப்பிடும் முறைகளும் அவ்வளவு உயர்ந்ததாக இல்லை. ஆசிரியரும் விமரிசனக்காரரும் சண்டை போட்டுக்

கொள்வதும், ஒருவர்பேரில் மற்ருெருவர் தப்பெண்ணம் கற்பித்து குற்றம் சாட்டுவதும் வழக்கமாகப் போய்விட்டது.

ஆசிரியர்களின் மனப்பான்மையே மிகவும் குறுகியதாகும். முதலாளியின் தலைக் கனம்கொண்ட தன்மையைப் படைத்ததாகும். பத்திரிகைக்காரர்களும் ஆசிரியர்களும் தங்களுக்காகவும் ஒரு சிறு கூட்டத்துக்காகவும் எழுதுவதாகத் தோன்றிற்று. பொதுஜனங்களையும் அவர்களுடைய நலங்களையும் அவர்கள் கவனித்ததாகவே தெரியவில்லை. இது என்ன அநியாயமான காட்சி! ருசிகரமாயும் விஸ்தாரமாயும் வேலை செய்வதற்கு இடம் இருக்கையில், குறுகிய இடத்திற்குள்ளே தங்களுடைய ஊக்கத்தை அவர்கள் விரயப்படுத்துவது வருந்தத் தக்கதாகும்.

ஹிந்தி இலக்கியம் நேர்த்தியான பண்டைப் பெருமையைக் கொண்டதாகும். ஆனுல், அதன் பண்டைப் பெருமையைக் கொண்டு எப்பொழுதுமே, அது உயிரோடு இருக்க முடியாது. அதற்கு மகத்தான நல்ல காலம் வரப்போகின்றது என்றும் ஹிந்திப் பத்திரிகைகளுக்கு இந்த நாட்டில் ஏராளமான செல்வாக்கு உண்டாகப்போகிறதென்றும் நான் உறுதியாக நம்புகிறேன். ஆனுல், ஹிந்திப் பத்திரிகைத் தொழிலும், ஹிந்தி இலக்கியமும் தங்களுடைய குறுகிய, பழைய கட்டுப்பாடுகளை உதறித் தள்ளி விட்டு பொது மக்களுக்காக தைரியத்துடன், உழைக்கத் துவக்கினுல்தான் அபிவிருத்தி அடைய முடியும்.

# LVI

## வகுப்பு வாதப் போராட்டம்

என்னுடைய சகோதரியின் கலியாண சமயத்தில் ஸ்ரீயுத வித்தல்பாய் படேல் ஐரோப்பாவில் காலமாகிவிட்ட தாக செய்தி வந்தது. அவர் நீண்டகாலமாக சுகவீனமாக இருந்தார். அவரது உடல் நலம் கெட்டுப் போனமையால் தான், அவர் இந்தியாவில் சிறையினின்றும் விடுதலை செய் யப்பட்டார். அவர் மறைந்து போனது துக்ககரமான நிகழ்ச்சியாகும். நம்முடைய "கிழப்புலிகளான" தலைவர்கள், நம்முடைய இயக்கத்தின் மத்தியில், ஒவ்வொருவராக இவ் வாறு நம்மை விட்டுப் பிரிந்துபோவதைக் குறித்து நான் மிகுதியும் துயரமடைந்தேன். பல வகைகளில் வித்தல்பாய் பாராட்டப்பட்டிருக்கிறார்.

சட்டசபை வாதத்தில் கைதேர்ந்தவரென்றும் அசெம் பிளி தலைவராக இருந்து வெகு திறமையாக நடந்துகொண் டார் என்றும் அவரைப்பற்றி வெகுவாகப் புகழப்படுகிறது. இது முற்றிலும்உண்மையே. ஆனால் இதைத் திருப்பித் திருப் பிச் சொல்லுவதில் எனக்கு எரிச்சல் உண்டாயிற்று. சட்ட சபை வாதத் திறமைகொண்டவர்கள் இந்தியாவில் குறைவா அல்லது இந்திய சட்டசபையில் திறமையுடன் தலைவராக வேலை பார்க்கக்கூடிய பேர்வழிகளுக்குத்தான் இந்தியாவில் குறைவுண்டா? நம்முடைய வக்கீல் பயிற்சிக்குத் தோதான வேலை சட்டசபை வாதம் ஒன்றுதான். வித்தல்பாய் இதைக் காட்டிலும் உயர்ந்த வல்லமை படைத்தவர். அவர் இந்தியா வின் விடுதலைக்காக அலுக்காமல் சளைக்காமல் உழைத்துப் போராடியவர்களில் ஒருவராவார்.

நவம்பர் மாதம் நான் காசிக்கு சென்றிருக்கையில் ஹிந்து சர்வகலாசாலை மாணவர்களுக்கு ஒரு பிரசங்கம் செய்வதற்காக அழைக்கப்பட்டேன். இந்த அழைப்பை நான் சந்தோஷத்துடன் ஏற்றுக் கொண்டேன். உப அத்தி

யக்ஷகர் பண்டித மதன் மோகன் மாளவியா அவர்களின் தலைமையின் கீழ் பெரிய கூட்டத்தின் முன்னே பேசினேன். என்னுடைய சொற்பொழிவில் வகுப்பு வாதத்தைப்பற்றி மிகுதியும் சொல்ல நேர்ந்தது. நான் அதை மிகவும் அழுத்த மாகக் கண்டித்தேன். முக்கியமாக ஹிந்து மகா சபையின் அலுவல்களைக் கண்டித்தேன். இது முன்கூட்டியே யோசனை செய்த கண்டனம் அல்ல. ஆனால் நீண்ட காலமாக என்னு டைய உள்ளம் பிற்போக்காளர்களான வகுப்பு வாதிகளின் முயற்சிகள் அலுத்துக்கொண்டே வருவதைக்கண்டு பொங் கிற்று. ஆகவே வகுப்புவாதத்தைப்பற்றி ஊன்றிப் பேசுகை யில் இந்த ஆத்திரத்தில் சிறிதை வெளியே கொட்டினேன்.

ஹிந்து வகுப்பு வாதிகளின் பிற்போக்கான தன்மை யைப்பற்றி வேண்டுமென்றே வற்புறுத்திப் பேசினேன். ஏனெனில் ஹிந்துக் கூட்டத்தின் மத்தியில் முஸ்லீம்களைப் பற்றி நான் கண்டித்துப் பேசுவதில் யாதொரு அர்த்தமு மில்லை. நீண்டகாலமாக ஹிந்து மகாசபையின் தூண்போல் விளங்கும் பண்டித மாளவியாஜீ தலைமை வகிக்கும் ஒரு கூட் டத்திலே ஹிந்து மகா சபையைப்பற்றி குறை கூறுவது நயக் குறைவு என்று அப்பொழுது எனக்குத் தோன்றவே இல்லை. சமீப காலமாக அவர் ஹிந்து மகா சபையில் அதிகமாகக் கலந்துகொள்ளவில்லை. ஹிந்து மகா சபையின் புதிய தரு துருத்த தலைவர்கள் அவரை வெளியே தள்ளிவிட்டதாகத் தோன்றிற்று. எனவே மகா சபையைக் கண்டிப்பது நயக் குறை வென்ற எண்ணம் எனக்கு உண்டாகவில்லை. மாள வியாஜீ,ஹிந்து மகா சபையின் நிர்வாகிகளில் ஒருவராக இருக் கும்வரையில், மகா சபை வகுப்பு வாதத் தன்மைகொண்ட டதாய் இருந்தாலும் அரசியலில் பிற்போக்கு கொண்டதாய் இருக்கவில்லை. ஆனால் இப்பொழுது, அதன் பிற்போக்குத் தன்மை, தெளிவாகத் தெரிந்து வருகிறது இதற்கும் மாள வியாஜீக்கும் யாதொரு சம்பந்தமுமில்லை யென்றும், அதை அவர் ஏற்றுக்கொண்டிருக்க மாட்டாரென்றும் நான் நிச்சயமாக நம்பினேன். இருந்தாலும், அவருடைய அழைப் பைத் தகாதமுறையில் உபயோகப்படுத்திக் கொண்டு, அவரைத் தர்ம சங்கடமான நிலைமையில் வைக்கக்கூடிய கருத்துக்களை நான் வெளியிட்டது கொஞ்சங்கூட சரி யல்ல. இதற்காக நான் வருந்தினேன். இன்னொரு முட் டாள்தனமான தவறுக்குள் நான் அகப்பட்டுக்கொண்டேன்.

இதற்காகவும் நான் வருந்தினேன். ஆஜ்மீரில் ஹிந்து வாலிபர்சங்கமொன்று சமீபத்தில்நிறைவேற்றிவைத்ததாக, தீர்மானத்தின் நகல் ஒன்று எங்களுக்குத் தபால் மூலமாக யாரோ ஒருவன் அனுப்பிக் கிடைத்தது. இந்தத் தீர்மானம், மிகுதியும் ஆட்சேபத்துக்குரியதாகும். அதைப்பற்றி என்னுடைய காசிப் பேச்சில் குறிப்பிட்டேன். உண்மையிலேயே, இத்தகைய தீர்மானம் எந்தச் சங்கத்தாலும் நிறைவேற்றி வைக்கப்படவில்லை. யாரோ ஒருவர் எங்களை ஏமாற்றி விட்டார்.

என்னுடைய காசிப் பிரசங்கம் சுருக்கமாக ரிப்போர்ட் செய்யப்பட்டாலும் மிகுந்த கலவரத்தை உண்டாக்கிற்று. இத்தகைய கூச்சலுக்கு நான் பழக்கப்பட்டிருந்தாலும், ஹிந்து மகாசபைத் தலைவர்கள் தாக்கிய வேகத்தால், நான் முற்றிலும் திடுக்கிட்டுப் போனேன். அவர்கள் பெரும்பான்மையில் ஆளைத் தாக்கினார்கள். விவாதத்திலிருந்த பிரச்னையை அவர்கள் தொடவேயில்லை. அவர்கள் ஏசுவதில் எல்லை கடந்துபோய்விட்டார்கள். விரைவில் இதைப்பற்றி நான் மகிழ்ச்சி அடைந்தேன். ஏனென்றால், இந்தத் தாக்குதல்களால், அந்த விஷயத்தைப்பற்றி, நான் சொல்லவேண்டியதைச் சொல்ல எனக்கு சந்தர்ப்பம் வாய்த்தது.என்னுடைய மனதில் பல மாதங்களாக இது விஷயமாகக் கொதிப்பேற்பட்டிருந்தது. நான் சிறையில் இருக்கின்றபொழுதே, உள்ளம் பொங்கினேன். ஆனால் இதை எவ்வாறு பிரஸ்தாபம் செய்வது என்பது புரியவில்லை.

இது தொல்லைபிடித்த வேலை. தொல்லைபிடித்த வேலையில் எனக்குப் பழக்கம் இருந்தாலும் ஆளைத் திட்டுகிற முறைக்கு வந்துவிடும் வாதங்களில் கலந்துகொள்வது இன்பமாயிருக்க முடியாது. இப்பொழுதோ, எனக்கு வேறு வழியில்லாமற் போய்விட்டது. ஹிந்து—முஸ்லீம் வகுப்புவாதத்தைப்பற்றி நேர்மையானது என்று நான் கருதிய ஒரு கட்டுரையை எழுதினேன். “இரண்டு வகுப்பு வாதங்களும் நல்லெண்ணத்தோடு தோன்றியதல்ல. அரசியல் பொருளாதாரத் துறைகளில் இருக்கும் பிற்போக்குத் தன்மையை, வகுப்புவாதத் திரையைக் கொண்டு மூடப் பார்க்கிறார்கள்” என்று எழுதினேன். வகுப்புவாதத் தலைவர்கள் செய்த பிரசங்கங்களுக்கும் அறிவிப்புகளுக்கும், நான் சிறையிலிருக்கும்பொழுதே பத்திரிகைத் துண்டுகளை வெட்டி வைத்துக்

கொண்டிருந்தேன். இத்தகைய சரக்குகள் என்னிடம் ஏராளமாக இருந்தன. அவைகளை யெல்லாம் பத்திரிகைக் கட்டுரை யொன்றில் சுருக்குவதுதான் கஷ்டமாகப் போய்விட்டது. இந்தியப் பத்திரிகைகளில் இந்தக் கட்டுரைக்கு மிகுதியும் பிரசார விளம்பரம் அளிக்கப்பட்டது. ஆனல், இதற்கு இரண்டு கட்சிகளிலிருந்தும் ஜவாப்பே வரவில்லை. என்னுடைய கட்டுரையில் ஹிந்து-முஸ்லீம் வகுப்புவாதிகளுக்கு பட்சபாதமின்றி சாட்டை கொடுத்திருந்தேன். என்னைக் கொடுமையாகவும் பல ரகமான பாஷைகளாலும் தூற்றிய ஹிந்து மகா சபைத் தலைவர்கள் இப்பொழுது பூரணமான மௌனம் சாதித்து விட்டார்கள். இரண்டாவது வட்ட மேஜை மகாநாடு சம்பந்தமாக, நான் தவருக எண்ணிக் கொண்டிருந்த சில சங்கதிகளைத் திருத்த சர். மகமது இக்பால் முயன்ருர். அதைத் தவிர என் வாதத்தைப்பற்றி அவர் ஒன்றுமே சொல்லவில்லை. இந்தியாவின் அரசியல் வகுப்பு வாதப் பிரச்னைகளைத் தீர்ப்பதற்கு இந்திய சமுதாய மகாநாட்டைக் கூட்டவேண்டுமென்று நான் அவர்களுக்கு மறுமொழி கூறும் முறையில் யோசனை சொன்னேன். பின்னர் வகுப்புவாதத்தைப்பற்றி ஓரிரண்டு கட்டுரைகள் எழுதினேன்.

இந்தக் கட்டுரைகளை வரவேற்ற வகையிலிருந்து எனக்கு மிகுதியும் மன உறுதி ஏற்பட்டது. யோசனை செய்து பார்க்க முயன்று வரும் பேர்வழிகளிடம் இந்தக் கட்டுரைகள் நன்ருக வேலை செய்து வருகின்றன என்பதைக் கண்டு நான் தைரியம் அடைந்தேன். வகுப்பு வாத உணர்ச்சிக்கு அடிப்படைகளாக இருக்கும் பேய்களை மந்திரம் செய்து ஓட்டி விட முடியுமென்று நான் எண்ணவே யில்லை. வகுப்புவாதத் தலைவர்கள் இந்தியாவிலும் இங்கிலாந்திலும் இருக்கிற பிற்போக்கான கூட்டங்களோடு உறவுகொண்டாடி, உண்மையிலேயே அவர்கள் அரசியல் முற்போக்குக்கும் ஜன நிர்மாண முற்போக்குக்கும் எதிரிகளாக இருக்கிருர்கள் என்பதைக் குறிப்பிடுவதே என்னுடைய நோக்கமாகும். அவர்களுடைய கோரிக்கைகளுக்கும், பொதுஜனங்களின் தேவைகளுக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை. உச்சியில் இருக்கும் சிறு கூட்டத்தார்களின் லாபத்தை நாடியே வகுப்புவாதம் பேசப்பட்டு வருகிறது. இந்த முறையிலே தாக்கி, என்னுடைய வாதத்தை வளர்த்துக் கொண்டு போக வேண்டும் என்பது

என்னுடையவிருப்பமாகும். ஆனல் நான் சிறைக்குப் போக நேர்ந்ததால் அது கைகூடவில்லை.

ஹிந்து-முஸ்லீம் ஒற்றுமைக்காக அடிக்கடி மனுப் பண்ணிக் கொள்ளுவது சந்தேகமில்லாமல் உபயோகமாயிருந்தபோதிலும், அதிலே அதிகமாக சத்து இருப்பதாகத் தெரியவில்லை. ஹிந்து - முஸ்லீம் பிளவின் காரணங்களை அறிந்து கொண்டு மனுப்பண்ணிக் கொண்டால் நன்ருயிருக்கும். இந்த மந்திர சூத்திரத்தைத் திருப்பித் திருப்பி உச்சரித்துக்கொண்டே இருந்தால், கடைசியாக ஒற்றுமை தோன்றிவிடுமென்று சிலர் வீணுக எண்ணிக் கொண்டிருப்பதாகத் தோன்றுகிறது. 1857-ம் வருஷத்தில் இந்திய எழுச்சிக்குப் பின்னர், வகுப்புவாதப் பிரச்னை சம்பந்தமாக பிரிட்டிஷாரின் கொள்கை எவ்வாறிருந்தது என்பதை ஆராய்வது ருசிகரமானது. பிரிட்டிஷார் கைக்கொண்ட நிர்வாக உபாயம் யாது? ஹிந்துக்களையும் முஸ்லீம்களையும் ஒன்று சேர விடப்படாது என்பது பிரிட்டிஷாரின் அடிப்படையான உபாயம் ஆகும். வகுப்புகளிடையே பகைமைத் தீயை மூட்டி, சச்சரவைக் கிளப்பிவிடுவதே பிரிட்டிஷாரின் தொழிலாகும். 1857-ம்வருஷத்துக்குப் பிறகு பிரிட்டிஷாரின் "ஆத்திரம்" ஹிந்துக்களைக் காட்டிலும், முஸ்லீம்கள் பேரில் அதிகமாக விழுந்து கொண்டிருந்தது. முஸ்லீம்கள் துருதுருத்தவர்கள் என்றும், போர்த் துடிப்புக் கொண்டவர்களென்றும் சமீபத்தில் இந்தியாவில் தாங்கள் அரசாண்டவர்கள் என்ற நினைவோடிருப்பதால் அவர்களால் அதிகமான ஆபத்து உண்டாகுமென்றும் பிரிட்டிஷார் கருதினுர்கள். முஸ்லீம்கள் புதிய கல்வித் திட்டத்திலிருந்தும் விலகி நின்ருர்கள். அரசாங்கத்தின் கீழ் அவர்களுக்கு அதிகமான உத்தியோகம் கிடைக்கவில்லை. இவைகளினல் அவர்களை அரசாங்கத்தார் சந்தேகித்தார்கள். ஹிந்துக்களோ இங்கிலீஷ் பாஷையைப் பரிவுடன் படித்தார்கள். குமஸ்தா உத்தியோகங்களை விருப்புடன் ஏற்ருர்கள். அதிக வணக்கமாய் இருப்பதாகக் காண்பித்துக் கொண்டார்கள்.

மேல் வகுப்பாரிடையே புதிய தேசீயத்தின் வேகம் கிளம்பியது. அதாவது இங்கிலீஷ் படித்த அறிவாளிகளிடமிருந்து புதிய தேசியம் உதயமாயிற்று. ஆகவே இந்த தேசீயம் ஹிந்துக்களுக் குள்ளாகவே இருந்துவந்தது. ஏனெனில்

முஸ்லீம்கள் கல்வி சம்பந்தப்பட்டவரையில் மிகுதியும் பிற் போக்கு நிலைமையில் இருந்து வந்தார்கள். இந்தத் தேசிய எழுச்சி ஆரம்பத்திலே அவ்வளவு உக்கிரமாக இல்லை. இருந்தாலும் இது அரசாங்கத்தாருக்குப் பிடிக்கவேயில்லை.

அரசாங்கத்தார் முஸ்லீம்களுக்கு ஆதரவு காண்பித்து இந்தப் புதிய எழுச்சியை அடக்கி ஆளத் தீர்மானம்கொண் டார்கள். முஸ்லீம்கள் அப்பொழுது இருந்த நிலைமையில் அவர்கள் இங்கிலீஷ் கல்வி பெருதது போதுமான தடையாக இருந்தது. ஆனல் இது சிறிது சிறிதாக மறைந்துபோக வேண்டியதுதானே! மிக்க தீர்க்க தரிசனத்தோடு பிரிட்டி ஷார் எதிர்காலத்துக்கும் சேர்த்து யோசனை செய்து, ஏற் பாடுகளைச் செய்துகொண்டார்கள். இந்த வேலையில், நிக ரற்று மூர்த்தி வல்லபம் பெற்ற சர். ஸையது அகமதுகான் அவர்களுக்கு துணையாக இருந்தார். தம்முடைய (முஸ்லீம்) வகுப்பாரின் கேவலமான நிலைமையைக் கண்டு ஸர். சையது மிகவும் துயர மடைந்தார். முஸ்லீம்கள் கல்வியிலே அபி விருத்தியடையவில்லை. பிரிட்டிஷ் அரசாங்கத்தாரிடம் அவர் களுக்கு செல்வாக்கில்லை பிரிட்டிஷ் அரசாங்கத்தார் முஸ்லீம் களுக்கு சலுகை காண்பிப்பதும் இல்லை. இவைகளைக்கண்டு ஸர். சையது மிகுதியும் வருத்தமடைந்தார். அவர்காலத்துசக பாடிகள் பலரை போல், அவருக்கு இங்கிலீஷ்காரர்களிடம் ரொம்ப பக்தி. அவர் ஒருதரம் ஐரோப்பாவுக்கு யாத்திரை போயிருந்தார். அவருடைய ஆங்கில மோகம் இன்னும் அதி கமாக வலுவடைந்தது. பத்தொன்பதாம் நூற்றுண்டின் பிற் பகுதியில் ஐரோப்பா, சிறப்பாக மேல் ஐரோப்பா உன்னத நாகரிகத்தில் இருந்தது. உலகத்துக்கு நாயகியாக விளங் கிற்று. அதைப் பெருமைப்படுத்திய தன்மைகள் யாவும் நன்ருக யாருக்கும் தெரியும்படியாகத் திகழ்ந்தன.

மேல ஐரோப்பாவில் உயர் வகுப்பார்கள் தாங்கள் பெற் றிருந்த உரிமைகளையும் சொத்துக்களையும் பத்திரமாக வைத்துக்கொண்டு, அவைகளோடு புதிதாகவும் சேர்த்துக் கொண்டு வந்தார்கள். இவர்களுக்கு அப்பொழுது எவ்வித எதிர்ப்பும் கிடையாது. ஒவ்வொரு நாட்டிலும் லிபரல் கட்சி வளரும் காலமாக அது விளங்கிற்று. ஒவ்வொரு நாடும் மகோன்னத நிலையை அடையப்போகின்றது என்ற நம் பிக்கை அப்பொழுது, மேல் ஐரோப்பாவில் பரவி நின்றது.

ஐரோப்பாவுக்குச் சென்ற இந்தியர்கள் இந்த ஆடம்பர மான தோற்றத்தைக் கண்டு மயங்கிப்போனதில் ஆச்சரியம் எதுவுமில்லை. துவக்கத்தில் அதிகமான ஹிந்துக்கள் போனுர் கள். அவர்கள் ஐரோப்பாவையும் இங்கிலாந்தையும் கண்டு மோகித்தவர்களாகத் திரும்பி வந்தார்கள். கொஞ்சம் கொஞ்சமாக அதனுடையமினுமினுப்புக்கும் மயக்கத்துக்கும் ஹிந்துக்கள் பழகிப்போய் முதன் முதல் அவர்களுக்கு ஏற் பட்ட ஆச்சரியம் குறைந்து கொண்டே வந்தது.

ஆனுல், ஸர். சையது சம்பந்தப்பட்ட வரையில், அவரு டைய முதல் வியப்பும் மயக்கமும் தணியாமல் இருந்து கொண்டேயிருந்தன. அவர் 1890-ம் வருஷத்தில் இங்கி லாந்துக்குச் சென்ருர். தாம் அந்த நாட்டில் கண்டவைக ளைப்பற்றி இந்தியாவுக்குக் கடிதங்கள் எழுதினுர். அவைக ளில் ஒன்றில் அவர் கூறியதாவது:—

“இங்கிலீஷ்காரர்கள் இந்தியாவில் மரியாதைக்குறை வாக நடந்து கொள்ளுகிருர்கள். இந்திய மக்களை அலட்சி யமாகவும் விலங்குகளாகவும் அவர்கள் கருதுகிருர்கள். இந் தக் குற்றத்திலிருந்து அவர்களை நிவர்த்திசெய்ய நான் தயா ராயில்லை. என்ருலும் அவர்கள் நம்மை நேரே அறிந்து கொள்ளாத காரணத்தால் அவ்வாறு செய்கிருர்கள் என்று நான் நினைக்கிறேன். அவர்கள் நம்மைப்பற்றிக் கொண்டிருக் கிற எண்ணத்தில் அவ்வளவாக தவறு எதுவும் இல்லை என் பதை நான் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். நான் இங்கி லீஷ்காரர்களைப் புகழ்வதாகக் கொள்ளவேண்டாம். இந்திய மக்கள், உயர்ந்தவர்கள், தாழ்ந்தவர்கள், வியாபாரிகள், சில்ல ரைக் கடைக்காரர்கள், கற்ருேர், கல்லாதவர்கள், இவர்களில் யாரையும் இங்கிலீஷ்காரர்களோடு கல்வி, நாகரிகம், நேர்மை முதலியவைகளில் ஒப்பிட்டுப் பார்த்தால் வல்லமைபொருந் திய நேர்த்தியான மனிதனேடு அழுக்குப் பிடித்த மிருகத் தை ஒப்பிடுவது போலாகும். “இந்தியாவிலிருக்கும் நம்மை விவேகமற்ற விலங்குகள் என்று இங்கிலீஷ்காரர்கள் எண் ணுவதற்கு நியாயம் இருக்கிறது. நான் இங்கே (பிரிட்ட னில்) தினசரி பார்க்கக்கூடிய யாவும் இந்தியனுடைய கற்ப னைக்கு எட்டாதவைகளாகும். மனிதனுக்கு இக பரத்துக்கு வேண்டிய நல்ல பொருள்கள் யாவும் ஆண்டவனுல் ஐரோப் பாவுக்கு அளிக்கப்பட்டிருக்கின்றன. சிறப்பாக, இங்கி லாந்துக்கு அளிக்கப்பட்டிருக்கின்றன.”

இங்கிலீஷ்காரர்களுக்கும் ஐரோப்பாவுக்கும் இதைக் காட்டிலும் அதிகமாகப் புகழுரையை யாருமே கொடுக்கமுடியாது. ஸர். சையது அவர்கள், தாம் கண்ட காட்சிகளால் மனக்கவர்ச்சி அடைந்தார் என்பது தெளிவு. அவருடைய சொந்த ஜனங்களைத் தூக்கத்தினின்றும் தட்டியெழுப்பி, அவர்களை முன்னேறிச் செல்லத் தூண்டுவதற்காக, ஒருக்கால், அவர் கடுமையான பாஷையை உபயோகப்படுத்தி, இரண்டுக்கும் வேற்றுமைகளை அதிகப் படுத்திக் கூறியிருக்கலாம். மேனாட்டுக் கல்வி முறையில் முஸ்லீம்கள் முன்னேற வேண்டும் என்பதை அவர் உறுதியாக நம்பினார். அந்தக் கல்வி இல்லாமற்போனால், தனது வகுப்பார்கள் வர வரக் கேவலமாகவும் வலிமை குன்றியும் போய்விடுவார்கள் என்றும் அவர் எண்ணினார். இங்கிலீஷ் கல்வியென்றால், அரசாங்க உத்தியோகங்கள், சுகமான வாழ்வு, செல்வாக்கு, பெருமை என்று அவர் கொண்டார். எனவே, இந்தக் கல்வித் துறையில் தம்முடைய ஊக்கம் முழுமையையும் செலுத்தி தம்மைப்போலவே தமது வகுப்பாரும் நோக்கும் படியாக செய்ய முயன்றார்.

வேறு எந்தத் துறைகளிலும் தமது கருத்தைச் செலுத்த அவர் விரும்பவில்லை. முஸ்லீம்களின் மனத் தயக்கத்தையும் தாமத குணத்தையும் போக்குவதென்பது, கஷ்டமான வேலைதான். ஹிந்துப் பெரியார்கள் துவக்கிய தேசீய இயக்கம் அப்பொழுது தோன்றவே, அந்த இயக்கம் நாட்டுக்குக் கூடாதென்று ஸர். சையது அதை எதிர்த்தார். ஹிந்துக்களோ, மேனாட்டுக் கல்வி முறையில் முஸ்லீம்களைவிட சுமார் 50 வருஷங்கள் அதிக அனுபவம் பெற்றவர்கள். ஆகவே, அவர்கள் அரசாங்கத்தைக் கண்டிப்பதில் இறங்கலாம். ஆனால், தமது கல்வி முயற்சிகளில் அரசாங்கத்தார் தமக்குப் பூரண அதரவு அளிப்பார்கள் என்று ஸர். சையது எதிர்பார்த்தார். ஆத்திரப்பட்டு, தகாத எதையும் செய்து, இந்த ஆதரவைக் கெடுத்துக்கொள்ள அவர்விரும்பவில்லை. ஆகவே, அவர் குழந்தையாய் இருந்த தேசியக் காங்கிரஸுக்கு முகம் கொடுக்காமல் திரும்பிக் கொண்டார். பிரிட்டிஷ் அரசாங்கத்தார், ஸர். சையது அவர்களது இந்த மனப்பான்மையை வளர்க்கத் தயாராய் இருந்தார்கள்.

முஸலீம்களுக்காக மேனாட்டுக் கல்வித் துறையில், தாம் ஒருமையுடன் உழைக்கவேண்டுமென்று ஸர். சையது

செய்துகொண்ட தீர்மானம் சந்தேகமில்லாமல் சரியான தீர்மானமாகும். அது இல்லாமற்போனல், புதிதாக இந்திய தேசியத்தை உருவாக்கும் வேலையில் அவர்கள் சிறப்பான பங்கை எடுத்துக் கொள்ள முடியாது. ஹிந்துக்கள், அவர்களைக்காட்டிலும் கல்வியிலும் செல்வத்திலும் மிகுதியும்உயர்ந்திருந்தபடியால், அவர்களுக்கு முஸ்லீம்கள் பக்க வாத்தியம் வாசிக்க வேண்டியதாய்த்தான் இருக்கும். முதலாளி தத்துவத்தை அடிப்படையாகக் கொண்ட தேசிய இயக்கத்துக்கு, கருத்துப் பரம்பரையாலும்,சரித்திரத் தூண்டுதலாலும்,முஸ்லீம்கள் பயிற்சி பெறவேஇல்லை. ஹிந்துக்களுக்கு இத்தகைய பரம்பரையும் பயிற்சியும் இருந்தன. ஆகவே ஸர். ஸையது அவர்களின் அலுவல்கள் பார்வைக்கு நிதானமானவைகளாகத் தோன்றினும், அவைகள் உண்மையான புரட்சிப் போக்குக் கொண்டவைகள்.

முஸ்லீம்களுக்குள் அப்பொழுது அரசியல் ஜனநாயகக் கருத்துகள் இல்லை. அவர்கள் பழைய பாளையக்கார மனப்பான்மை கொண்டவர்களாக இருந்தார்கள். ஆனல் ஹிந்துக்களில் தலைதூக்கிவரும் நடுத்தர வகுப்பார்கள்ஐரோப்பிய லிபரல் கட்சிக்காரர்கள் வழங்கும் பாஷைத் திட்டத்தைக் கொண்டு, எதையும் பார்க்கத் துவக்கினர்கள். முஸ்லீம்களும் ஹிந்துக்களும் அசல் மிதவாதிகள். அவர்கள் பிரிட்டிஷ் ஆட்சியின் பேரில் பூரணமாக சார்ந்திருப்பவர்கள்;முஸ்லீம்களில் சிலர் பெரிய நிலச்சுவான்தார்களாய் இருந்தார்கள். அவர்கள் மிதவாதிகள். ஸர். ஸையது அவர்களுடைய மிதவாதமும் இந்த கூட்டத்தாரின் மிதவாதத்தைச் சேர்ந்ததாகும். ஹிந்துக்களுடைய மிதவாதமோ தொழில் நடத்தும் அல்லது வியாபாரம் செய்யும் மனிதனுடைய எச்சரிக்கை கலந்த மிதவாதமாகும். அந்த மிதவாதம் தொழிலபிவிருத்திக்கும் முதல்போடும் துறைகளுக்கும் வசதிகளைத் தேடி நிற்பதாகும்.

இங்கிலீஷ் லிபரல் கட்சிப் பிரமுகர்களாக விளங்கிய பிரைட், கிளாட்ஸ்டன் முதலியவர்களையே ஹிந்து அரசியல் வாதிகள் பெரிதும் நம்பிக் கிடந்தார்கள். முஸ்லீம்கள் இவ்வாறு கருதினர்களா என்பது சந்தேகம் தான். அவர்கள் இங்கிலாந்தில் இருக்கும் பெரிய நிலச்சுவான்தார்களையும், "கன்சர்வேடிவ்" பிரமுகர்களையும் பெரியவர்களாக

மதித்தார்கள். முஸ்லீம்களுக்கு கிளாட்ஸ்டனிடம் ரொம்ப வெறுப்பு. ஏனென்றால் அவர் துருக்கியையும் அர்மீனியக் கொலைகளையும் அடிக்கடி கண்டித்துப் பேசியிருக்கிறார். ஆனால் "டோரி"க் கட்சியைச் சேர்ந்த டிஸ்ரெலி அவர்கள் துருக்கிக்கு சாதகமானவர்போலத் தோன்றியதால் முஸ்லீம்கள் அவரிடம் பிரியம் காண்பித்தார்கள்.

ஸர். ஸையது அகமதுகான் அப்பொழுது செய்த பிரசங்கங்களில் சிலவற்றை இப்பொழுது படித்தால், விநோதமாக இருக்கும். 1887-ம் வருஷத்தில் டிசம்பர் மாதத்தில் லக்ஷ்மணபுரியில் அவர் ஒரு பிரசங்கம் செய்தார். இந்திய தேசீய காங்கிரசின் மகாசபை அப்பொழுது நடைபெற்றுக் கொண்டிருந்தது. காங்கிரஸின் மிகவும் நிதானமான கோரிக்கைகளைக் கூட ஸர். ஸையது கண்டித்ததாகத் தெரிகிறது. ஸர். ஸையது சொன்னதாவது:—

"அரசாங்கம் ஆப்கானிஸ்தானத்தோடு சண்டையிட்டாலும், பர்மாவை ஜெயித்தாலும், அதன் போக்கைக் கண்டிப்பது நம்முடைய வேலையல்ல. சட்டம் செய்வதற்கு அரசாங்கம் ஒரு சபையை உண்டாக்கியிருக்கிறது. இந்தச் சபைக்கு எல்லா மாகாணங்களிலிருந்தும் ஜனங்களின் நிலைமையையும் அரசியல் நிர்வாகத்தையும் நன்கு தெரிந்துகொண்டிருக்கும் உத்தியோகஸ்தர்களையும் தங்களுடைய ஜனசமூக உயர்பதவியால் அந்தச் சபையில் ஸ்தானம் வகிக்க, தகுதியுள்ள சில பெரும் பூமியாளர்களையும் அரசாங்கம் பொறுக்கியெடுக்கின்றது. திறமையைப்பொறுத்து இல்லாமல் ஜன சமூகப் பதவியைக் கொண்டு இவர்கள் ஏன் பொறுக்கி எடுக்கப்படவேண்டும் என்று சிலர் கேட்கலாம். சின்ன ஜாதிக்காரனொருவன் அல்லது ஏழைக் குடும்பத்தில் தோன்றிய ஒருவன் பி. ஏ., எம். ஏ. பட்டம் பெற்று நல்ல திறமையோடிருந்து அதிகார பதவிக்கு வந்து தங்களது செல்வத்தையும் வாழ்க்கைகளையும் பாதிக்கக்கூடிய சட்டங்களைச் செய்யும் அதிகாரத்தை அடையப் பெறுவானாகில் அந்த நிலைமையை நமது பாளையக்காரர்களும் பெரியதனக்காரர்களும் விரும்புவார்களா? என்று நான் உங்களைக் கேட்கிறேன். ஒருபொழுதும் விரும்பமாட்டார்கள். நல்ல குடியில் பிறந்தவரைத்தான் வைசிராய் தமது தோழராக ஏற்று, தமது சகோதரனாக பாவித்து பிரிட்டிஷ் ராஜவம்சத்தையும்

பிரபு வர்க்கத்தாரையும் சேர்ந்தவர்கள் பிரசன்னமாயிருக்கக் கூடிய விருந்துக் கச்சேரிகளுக்கு அழைக்கமுடியும். சட்டம் ஆக்குவதற்கு அது கையாளும் முறையில் அரசாங்கம் ஜனங்களின் கருத்துகளுக்கு மதிப்பு வைக்காமல் நடந்து கொள்ளுகிறது என்று நாம் சொல்லக் கூடுமா? சட்டங் களைச் செய்வதில் நமக்கு ஒரு பங்குமே இல்லையென்று நாம் சொல்லக் கூடுமா? நிச்சயமாக சொல்லவே முடி யாது.''

இந்தியாவில் "ஜனநாயக இஸ்லாத்தின்" பிரதிநிதியா யும் தலைவராயும் இருந்த ஸர். சையது அகமது அவர்கள் இவ்வாறு பேசினர்! அயோத்தி தாலுக்தார்களும், ஆக்ரா பீகார் வங்காளத்திய பெரு நிலக்காரர்களும்கூட இன் றைக்கு இந்தத் தொனியில் பேசியிருப்பார்களோ என்பது சந்தேகம். ஆனால் ஸர். சையது அகமது அவர்கள்மட்டும் இவ்வாறு தனித்தன்மையில் பேசினர் என்று எண்ண வேண்டாம். அந்தக் காலத்துக் காங்கிரஸ் பிரசங்கங்களில் பலவற்றை இன்றைக்குப் படித்தால் இதைப்போலவே வேடிக்கையாக இருக்கும். ஹிந்து-முஸ்லீம் பிரச்னையில் அரசியல் பொருளாதார அம்சம் என்னவெனில் பரம்பரை நிலச்சுவான்களான முஸ்லீம்களில் ஒரு பகுதியார் அப்பொ ழுதுதான் செல்வத்திலும் கல்வியிலும் முன்னேறி வருகிற ஹிந்து நடுத்தர வகுப்பார்களை எதிர்த்து அடக்கி வந்தார் கள் என்பது தான்.

ஹிந்து நிலச்சுவான்தார்கள் தங்களுடைய சில்லரை முதலாளிகளோடு நெருக்கமாகப் பழகி வந்தார்கள். ஆகவே நடுத்தர வகுப்பார்களின் கோரிக்கைகள் சம்பந்தமாக அவர் கள் நடுநிலைமை வகித்தார்கள் அல்லது அனுதாபம் காட்டி வந்தார்கள். நடுத்தர வகுப்பார்களது கோரிக்கைகளுக்கே ஹிந்து நிலச்சுவான்கள் தூண்டுதலாக இருந்தார்கள் என் றும் சொல்லலாம். பிரிட்டிஷார் எப்பொழுதும் போல பரம்பரைப் பெரிய தனக்காரர்களின் பக்கம் சேர்ந்துகொண் டார்கள். பொது ஜனங்களைப்பற்றி யாருமே அப்பொ ழுது கவலைப்படவே இல்லை.

ஸர். சையது மிகவும் வல்லமை பொருந்தியவர். அவரு டைய வல்லமைகொண்ட மூர்த்தியால் இந்திய முஸ்லீம்

களின் உள்ளங்களில் அவர் பதிந்து போனர். அவருடைய ஆசாபாசங்களுக்கு தெளிவான அறிகுறியாக விளங்கியது அலிகார் கல்லூரி. ஒன்றைவிட்டு இன்னென்றுக்கு மாறும் காலத்தில் தாராளப்போக்கு கொண்ட உணர்ச்சி தன்னுடைய வேலையைச் செய்துவிட்டு மேற்கொண்டு முற்போக்கு ஏற்படாமல் தடையாக நிற்கும் முட்டுக்கட்டையாக ஆகிவிடக்கூடும். இதற்கு நிதரிசனமான உதாரணமாக விளங்குபவர்கள் இந்திய மிதவாதிகள். தாங்கள் பழைய காங்கிரஸ் பரம்பரையின் உண்மையான வார்ஸுகள் என்றும், நாம் பின்னர் பலாத்காரமாக உள்நுழைந்தவர்கள் என்றும் அவர்கள் நமக்கு நினைப்பூட்டுகின்றனர்; உண்மைதான். ஆனல், உலகம் மாறுகிறதென்றும் பழைய காங்கிரஸ் பரம்பரை சென்று போன வருஷத்தின் பனியோடு மறைந்துபோயிற்றென்றும், அது பழங்கதையாய்ப் போயிற்றென்பதையும் அவர்கள் மறந்து விடுகிறுர்கள்.

அது போலவே, ஸர். சையது அவர்களது உபதேசமும் அது தோன்றிய காலத்தில் பொருத்தமாயும் தேவையாயும் இருந்தது. ஆனல், அது முன்னேறும் வர்க்கத்தாரின் இறுதி இலட்சயமாக இருக்க முடியாது. அவர் இன்னெரு தலைமுறை வரை உயிரோடிருந்தால், அவரது உபதேசத்துக்கு வேறு வகையான போக்கை அவரே கொடுத்திருக்கவும் கூடும். அல்லது, வேறு தலைவர்கள் அவரது பழைய உபதேசத்துக்கு புதிதாக வியாக்கியானம் செய்து, அதை மாறிக்கொண்டுவரும் நிலைமைகளுக்குத் தக்கபடி பிரயோகம் செய்திருக்கவும் கூடும். ஸர். சையது அவர்களுக்கு கிடைத்த வெற்றியாலும் அவருடைய பெயரோடு ஒட்டிக்கொண்டு கிடக்கும் மரியாதையாலும் ஏனையோருக்கு பழைய நம்பிக்கையிலிருந்து மாறி புதிதாக வியாக்கியானம் செய்யமுடியாமல் போயிற்று. மேலும், துரதிர்ஷ்ட வசமாக, இந்திய முஸ்லீம்களுக்குள் புது வழி காண்பிக்கக்கூடிய நிகரற்ற வல்லமை பொருந்திய பேர்வழிகள் மிகவும் குறைவு.

அலிகார் கல்லூரி நல்ல வேலை செய்தது. திறமையுள்ள மனிதர்கள் பலரை உண்டாக்கிற்று. முஸ்லீம் அறிவாளிகளின் குரலை அடியோடு மாற்றி விட்டது. ஆனல், அது துவக்கத்தில் வார்க்கப்பட்ட அமைப்பினின்றும் வெளிவந்து அபிவிருத்தியடைய முடியாமற் போய்விட்டது. பழைய

பெரும்பண்ணை மனப்பான்மை அந்தக் கல்லூரியில் நில விற்று. சராசரி மாணவனுடைய ஆசையின் குறி அரசாங்க உத்தியோகமாக ஆகிவிட்டது. அவன் உள்நோக்கி ஆத்மா வின் லீலைகளைப் பார்க்கவும் விரும்பவில்லை. வெளியே வான வீதியிலிருக்கும் நட்சத்திரங்களையும் நாடவில்லை. அவ னுக்கு டெபுடி கலெக்டர் உத்தியோகம் கிடைத்தால் அவ னுடைய ஆசை பூர்த்தியாகி விட்டது. மகத்தான இஸ்லா மிய ஜனநாயகத்தில் தானும் ஒருவன் என்ற எண்ணத் தினல், அவனுடைய கர்வத்துக்கு திருப்தி உண்டாயிற்று. இந்த இஸ்லாமிய சகோதாத்துவத்திற்கு சாட்சியமாக. அவன் துருக்கி "பெஸ்" என்று சொல்லும் சிவப்புக் குல் லாயை தன்னுடைய தலையில், ஜோராக அணிந்துகொண் டான். அதே சிவப்புக் குல்லாயைத் துருக்கியர்களே, கொஞ்ச காலத்திற்குப் பிறகு எட்டத் தள்ளிவிட்டார்கள். ஜனநாயகத்துக்கு அசைக்க முடியாத பாத்தியம் தனக்கு இருக்கிறதென்று அவன் தன்னுடைய சகோதர முஸ்லீம் களோடு தொழும் உரிமையாலும், உண்ணும் உரிமையாலும் நிச்சயப்படுத்திக் கொண்டு, இந்தியாவிலே அரசியல் ஜனநாய கம் இருக்கிறதா இல்லையா என்பதைப்பற்றி அவன் கவலைப் படவே இல்லை.

இந்தக் குறுகிய மனப்பான்மையும் அரசாங்க உத்தி யோகத்துக்கு ஆசையும் அலிகாரிலும் வேறு இடங்களிலும் இருந்த முஸ்லீம் மாணவர்களிடம் மட்டும் தான் இருந்த தென்பதல்ல. இத்தகைய ஆசை, ஹிந்து மாணவர்களிட மும் இருந்தது. இயல்பாகவே, அவர்களுக்குப் புதுவழி முறித்துச் செல்வதற்கு தன்மை கிடையாது. ஆனல், சந்தர்ப்பங்களின்மூலமாக, அவர்கள் தங்களுடைய பழைய சுவடைவிட்டு, வேறு பாதைகளில் செல்லும்படியாக நேர்ந் தது. ஹிந்துக்களில் படித்தவர்கள் அதிகம் பேர்கள். கிடைக்கக் கூடிய உத்தியோகங்களோ ரொம்பக் குறைவு. ஆகவே, அவர்கள் அதிருப்தி கொண்ட அறிவாளிகளாக ஆகிவிட்டார்கள். இந்தக் கூட்டத்தார்தான் எந்த நாட்டி லும் புரட்சி இயக்கங்களுக்கு முதுகெலும்பைப் போன்ற வர்களாவர்.

ஸர். சையது அகமதுகான் அவர்களுடைய அரசியல் உபதேசத்தால், இந்திய முஸ்லீம்கள் லட்சியத்தில் மிகவும்

பிற்போக்கடைந்து அதனின்றும் முழுதும் வெளியேற முடியாத நிலைமையில் இருந்தார்கள். அப்பொழுது, இருபதாம் நூற்றாண்டின் ஆரம்ப வருஷங்களில், சில நிகழ்ச்சிகள் நேர்ந்தன. அவைகளைக் கொண்டு, கூச்சலுடன் துருதுருவென்று வளர்ந்துகொண்டு வந்த தேசீய இயக்கத்துக்கும் முஸ்லீம்களுக்கும் இடையே இருந்த பிளவை பிரிட்டிஷ் அரசாங்கத்தார் விரிவுபடுத்தி விட்டார்கள். 1910-ம் வருஷம் தாம் எழுதிய "இந்திய அதிருப்தி" என்ற நூலில், ஸர். வாலண்டைன் ஷிரோல், அன்றைக்கு பிரிட்டிஷ் ஆட்சியின் உறுதியையும் சாசுவதத் தன்மையையும் விரும்பி அதோடு தங்கள் நலன்களையும் ஆசையையும் நெருக்கமாக இந்திய முஸ்லீம்கள் பொருத்திக்கொண்டது போல, அவர்கள் முன்னே ஒருபொழுதும் செய்ததே இல்லையென்று உறுதியாகக் கூறலாம் என எழுதினர். அரசியல் ஜோசியங்கள் ஆபத்தாக முடியும். ஸர். வாலண்டைன் எழுதிய ஐந்து வருஷங்களுக்குள், முஸ்லீம் அறிவாளிகள் தங்களைக் கட்டிப்போட்டு தடை செய்துகொண்டிருக்கும் விலங்குகளிலிருந்து விடுபட்டு, காங்கிரசோடு சேர்ந்து கொள்ளுவதற்கு பெரிதும் முயற்சி செய்தார்கள். பத்து வருஷ காலத்திற்குள் இந்திய முஸ்லீம்கள், காங்கிரசுக்கு வெகுதூரம் முன்னே சென்று, அதற்கு வழி காண்பித்துக் கொண்டு போனார்கள். ஆனால், இந்தப் பத்து வருஷங்கள் முக்கியமான வருஷங்கள். உலக மகாயுத்தம் வந்து போய்விட்டது. உடைந்து தளர்ந்து போன உலகம்தான் அது சீதனமாக விட்டுச் சென்ற பாக்கியமாகும்.

இருந்தாலும் தாம் கொண்ட முடிவுக்கு ஸர். வாலண்டைன் வருவதற்கு மேலழுந்த வாரியான காரணங்கள் பல உண்டு. அப்பொழுதுதான் ஆகாகான் முஸ்லீம்களின் தலைவராக வெளித் தோன்றினர். ஆகாகான் தொழில் முதலாளி இனத்தைச் சேர்ந்த தலைவரல்ல. ஆகவே ஆகாகான் தலைமைக்கு வந்ததினின்றும் முஸ்லீம்கள் இன்னும் பெரிய பண்ணைப் பரம்பரைகளைப் பிடித்துத் தொங்கிக்கொண்டிருக்கிறார்கள் என்பதைக் காண்பித்துவிட்டது. ஆகாகான் மிகவும் செல்வம் படைத்த கோமகன். அவர் ஒரு வகுப்பினருக்கு மத குரு. அவர் பிரிட்டிஷ் அதிகார வகுப்பினரோடு மிகவும் நெருங்கிப் பழகினதால், பிரிட்டிஷ் நோக்கப்படிக்குப் பார்த்தால் அவர் அவர்களுக்கு மிகவும் பொருத்தமான

அன்பராவர். அவர் விரிவான கலையறிவு வாய்ந்தவர். அநேகமாக ஐரோப்பாவிலேயே வாழ்ந்து வந்தார். செல்வம் படைத்த இங்கிலீஷ் பெரிய பண்ணைக்காரர்களைப் போலவும் குதிரைப் பந்தயம் முதலிய களியாட்டங்களில் அபரிமிதமான ருசி கண்டவரைப்போலவும் அவர் வாழ்ந்து வந்தார். எனவே வகுப்புவாத விஷயங்களில் அவர் குறுகிய நோக்கம் படைத்தவராக இருக்கவே முடியாது.

அவர் முஸ்லிம்களுக்கு தலைவர் ஆனுர் என்ருல் முஸ்லிம் நிலச்சுவான்களும் தற்போது பெருகிக்கொண்டுவரும் தொழில் முதலாளிகளும் பிரிட்டிஷ் அரசாங்கத்தாருக்கு சாதகமாக இருக்கிருர்களென்று அர்த்தமாகும். வகுப்பு வாத பிரச்னே, உள்ளபடியே இரண்டாம்தர மதிப்பைத் தான் கொண்டதாகும். அது அவ்வளவு முக்கியமானதல்ல. இருந்தாலும், பிரிட்டிஷாரோடு ஒட்டிக் கொள்ள வேண்டிய நோக்கத்துக்காக வகுப்புவாதம் வற்புறுத்தப்பட்டது. வங்களாப் பிரிவினையால் ஏற்பட்ட அரசியல் நிலைமையைப்பற்றி முஸ்லிம்கள் என்ன எண்ணிக் கொண்டிருக்கிருர்களென்றும் அரசியல் உரிமைகள் அவசரமாக ஹிந்துக்களுக்குக் கொடுக்கப்படக் கூடாதென்றும் அவ்வாறு கொடுக்கப்பட்டால் பெரும்பான்மைபோரான ஹிந்துக்கள் வலுத்துப் போய்விடுவார்கள் என்றும் அதனல் பிரிட்டிஷ் ஆட்சிக்கும் துளிக்கூட சந்தேகமில்லாமல் ராஜபக்தர்களாக விளங்கும் சிறுபான்மையோரான முஸ்லீம்களின் நன்மைகளுக்கும் ஆபத்தாக முடியுமென்றும் ஆகாகான் அவர்கள் வைஸிராய் மிண்டோ பிரபுவின் உள்ளத்தில் தெளிவாகப் பதிய வைத்தார் என்று ஸர். வாலண்டைன் ஷிரோல் நமக்குச் சொல்லுகிருர். ஆனுல், வெளித் தோற்றத்தில், இவர்கள் பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு சாதகமாயிருந்தாலும், வேறு சக்திகள் வேலைசெய்து கொண்டு வந்தன. புதிதாய்த் தோன்றிய முஸ்லீம் தொழில் முதலாளிகளுக்கு சிறிது சிறிதாக அப்பொழுதிருந்த நிலைமைகளில் அதிருப்தி உண்டாகி தேசிய இயக்கத்தோடு ஒட்டிக்கொள்ள எத்தனித்தார்கள். ஆகாகான் இதைக் கவனிக்கமால் இருக்க முடியுமா? அல்லது அவர் இதைப்பற்றி பிரிட்டிஷாருக்கு எச்சரிக்கை செய்யாமால் இருக்கலாமா?

1914-ம் வருஷம் ஜனவரி மாதத்திய எடின்பர்க் ரிவியூவில் (அதாவது மகாயுத்தத்துக்கு சிலமாதங்களுக்கு முன்

னர்) அவர் எழுதியதாவது:—"ஹிந்துக்களையும் முஸ்லீம்களையும் பிரிக்கும் வழக்கத்தை அரசாங்கத்தார் விட்டுவிட வேண்டும். இந்தியாவில் ஹிந்துமுஸ்லிம் இளைஞர்கள் தீவிர தேசீய நோக்கு கொண்டு வருகிறார்கள். இந்த நோக்குக்குத் தடையாக, ஹிந்துமுஸ்லீம் வகுப்புகளில் நிதானஸ்தர்களாய் இருக்கப்பட்டவர்களை ஒன்று சேர்க்கவேண்டும்." இதிலிருந்து என்ன தெரிகிறது? ஆகாகானுக்கு இந்தியாவில் அரசியலில் மாறுதல் நேராமல் தடுக்க வேண்டியது நோக்கமே ஒழிய, அவருக்கு முஸ்லீம்களின் வகுப்புவாத நலன்களைப் பற்றி சிரத்தை கிடையாது என்பது தெளிவாகி விட்டது.

ஆனால் ஆகாகானும் பிரிட்டிஷ் அரசாங்கமும் முஸ்லீம் "தொழில் முதலாளிகள்" இந்திய தேசிய இயக்கத்தோடு ஒட்டிக்கொள்ளுவதைத் தடுக்க முடியவில்லை. மகாயுத்தத்தினால், இந்த வேலை துரிதப்பட்டது. புதிதான தலைவர்கள் தோன்றினார்கள். ஆகாகான் திரைக்குப்பின்னே போய்விட்டதாகத் தோன்றிற்று. அலிகார் கல்லூரியின் தொனிகூட மாறிவிட்டது. புதிதாய்த் தோன்றிய தலைவர்களுள் ஆலி சகோதரர்கள் இருவர் ஆவர். அவர்களிருவரும் அலிகார் கல்லூரியில் படித்து வெளியேறியவர்கள். டாக்டர் எம். ஏ. அன்சாரி, மௌலானா அபுல்கலாம் ஆஸாத் முதலிய அறிவாளித் தலைவர்கள் முஸ்லீம்களின் அரசியல் கிளர்ச்சிகளில் சிறப்பான பங்கெடுத்துக்கொள்ளத் தலைப்பட்டார்கள். ஓரளவில், எம். ஏ. ஜின்னா அவர்களும் வேலை செய்துவந்தார். காந்திஜீ ஜின்னாவைத் தவிர, ஏனைய இந்தத் தலைவர்களையும் முஸ்லீம்களையும் தமது ஒத்துழையாமை இயக்கத்துக்குள் அற்புதமாகக் கொண்டு வந்து சேர்த்து விட்டார். அவர்கள் 1919-லிருந்து 1923 வரையில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளில் முக்கியமான பங்கெடுத்துக் கொண்டார்கள். பின்னர் பிற்போக்கு தலைதூக்கியெழ ஆரம்பித்தது. ஹிந்துக்களுக்குள்ளும் முஸ்லீம்களுக்குள்ளும் பதுங்கிக் கிடந்த வகுப்புவாதப் பிற்போக்கான அம்சங்கள் எல்லாம் வெளித்தோன்றத் தலைப்பட்டன. ஆனால் இது மெதுவாகவும், நிச்சயமாகவும் நடந்து கொண்டிருந்தது. வகுப்புவாதத் தகராறினால், முதன் முதலாக இந்துமகாசபைக்கு ஓரளவு பிராதான்யம் ஏற்பட்டது. ஆனால் அரசியல் சம்பந்தமாக அது காங்கிரசுக்குப் போட்டியாக இருக்க முடியவில்லை. முஸ்லீம் வகுப்புவாத அமைப்புகள் மீண்டும் தங்களுக்கு முஸ்லீம்

பொதுஜனங்களிடம் ஏற்கனவே இருந்த செல்வாக்கைப் பெற்று விட்டன. என்றாலும், முஸ்லீம் தலைவர்களில் செல்வாக்கு பெற்ற பலர் கடைசி வரையில் காங்கிரசோடு ஒட்டிக் கொண்டிருந்தார்கள்.

அரசியலில் பூரண பிற்போக்காளர்களாய் இருந்த முஸ்லீம் வகுப்புவாதத் தலைவர்களுக்கு பிரிட்டிஷ் அரசாங்கத்தார் எல்லா வகைகளிலும் சலுகை காண்பித்தார்கள். முஸ்லீம் பிற்போக்காளர்களுக்கு கிடைத்த வெற்றியை ஹிந்து மகா சபை கவனித்துப் பார்த்து, முஸ்லீம்களோடு போட்டி போட்டு, சர்க்காரின் தயவைப்பெற முயற்சி செய்தது. மகா சபையில் தீவிர வாதிகளாயிருந்த பலர் வெளியே தூரத்தப் பட்டார்கள்; அல்லது தாங்களாகவே வெளியேறினார்கள். ஹிந்து மகாசபை வரவர பொருளாளிகளின் தயவை நாடிச் சென்றது. ஹிந்து லேவாதேவிக்காரர்களின் தயவைக் கோரிற்று.

இரு கட்சி வகுப்பு வாத அரசியல் வாதிகளும் சட்ட சபை ஸ்தானங்களின் விகிதங்களைப்பற்றி, ஓயாமல் வாதம் செய்துகொண்டிருந்தார்கள். எதற்காக? அரசாங்கத்தில் தங்களுக்கு கிடைக்கக்கூடிய செல்வாக்கின்மூலமாக உத்தியோகங்கள் எவ்வளவு வரையில் கிடைக்கும் என்ற நோக்கம் தான். அவர்களுக்கு வகுப்புவாதமென்பது, நடுத்தர வகுப்பு அறிவாளிகளுக்கு உத்தியோக வேட்டைப் போராட்டமாக அமைந்தது. ஆனால் எல்லோருக்கும் கொடுக்கும்படியாக அத்தனை உத்தியோகங்கள் இல்லையே! எனவே அவைகளைப் பற்றி ஹிந்து-முஸ்லீம் வகுப்புவாதிகள் சண்டை பிடித்துக் கொண்டார்கள். ஹிந்துக்கள் தற்காப்புக்காக சண்டை பிடித்தார்கள். ஏனென்றால் பெரும்பான்மையான உத்தியோகங்கள் ஏற்கனவே அவர்கள் வசம் இருந்தன. முஸ்லீம்கள் தங்களுக்கு அதிகமான உத்தியோகங்கள் வேண்டுமென்று சண்டை போட்டார்கள்.

இந்த உத்தியோகச் சண்டைக்குப் பின்னே வேறொரு முக்கியமான சண்டை யிருந்தது. அது உள்ளபடியே வகுப்பு வாதத்தைத் தழுவியதல்ல. ஆனாலும் வகுப்பு வாதத்திற்குத் தூண்டுதலாக இருந்தது. பஞ்சாபிலும் சிந்துவிலும் வங்காளத்திலும் ஹிந்துக்கள் மொத்தத்தில் பணக்காரர்களாயிருந்

தார்கள்; லேவாதேவி செய்தார்கள்; நகரவாசிகளாயிருந்தார்கள். இந்த மாகாணங்களில் முஸ்லீம்கள் ஏழைகள்; கடனாளிகள்; கிராமவாசிகள். ஆகவே இந்த இரண்டு கூட்டத்தாருக்குமிடையே இருந்த போராட்டம் பொருளாதாரத் தன்மை கொண்டதாகும். ஆனால் இதற்கு வகுப்புவாத வர்ணத்தை எப்பொழுதும் தீட்டி விடுகிறார்கள். சில மாதங்களுக்குமுன், பஞ்சாப் சட்டசபையில், கிராமாந்தரவாசிகளின் கடன் சுமையைக் குறைப்பதற்காக கொண்டுவரப்பட்ட பிரேரணைகளின்பேரில், நிகழ்ந்த வாதங்களிலிருந்து இது மிகவும் தெளிவாக வெளித் தோன்றிற்று. ஹிந்துமகா சபை பிரதிநிதிகள் ஒருமுகமாக இந்தத் திட்டங்களை எதிர்த்து, பாங்கி முதலாளிகளோடு சேர்ந்து கொண்டார்கள்.

ஹிந்து மகாசபை தன்னிடம் மருக்கலப்பில்லாத தேசீயத்தன்மை தோய்ந்து நிற்கிறதென்றும், முஸ்லீம்கள்தான் வகுப்புவாதிகளென்றும் கண்டித்து, தற்பெருமையுடன் கூறிக்கொள்ளுவது வழக்கம். முஸ்லீம் அமைப்புகள் யாவும் வகுப்புவாதத் தன்மைதான் படைத்தவைகள் என்பது எல்லோருக்கும் தெற்றென புலனாகிவிட்டது. தேசிய உடுப்புக்குள்ளே ஒளிந்துகொண்டிருப்பதால், ஹிந்து மகாசபையின் வகுப்புவாதம் அவ்வளவு தெளிவாக வெளியே தெரியவில்லை. தேசத்துக்குப் பொதுவான ஜனநாயகப் பரிகாரத்தால், மேல் வகுப்பு ஹிந்துக்களின் நலன்கள் பாதிக்கப்படும்பொழுது, உண்மையான சோதனை வருகின்றது. இந்த சோதனையில், விடாமல், மகாசபை தோற்றுக் கொண்டே வருகிறது. சிந்து மாகாணத்தைப் பிரிக்கக் கூடாது என்று ஹிந்து மகாசபை எதிர்த்தது எதற்காக? சிறுபான்மையோரின் பொருளாதார நலன்களைக் கருதி, பெரும்பான்மையோர் சிந்துவுக்குத் தனி மாகாணம் வேண்டும் என்று கோரிய ஜனநாயகக் கொள்கையை ஹிந்து மகாசபை பொருட்படுத்தவில்லை.

பிற்போக்குக்கும் தேசீயத்தின் துரோகத்துக்கும் அற்புதமான சாட்சியாக, ஹிந்து-முஸ்லீம் வகுப்பு விதிகள் விளங்கின. வட்ட மேஜை மகாநாடுகளில் திட்டமாக வகுப்புவாதக் கொள்கைகள் கொண்ட முஸ்லீம்களைத்தான் வட்டமேஜைக்கு நியமனம் செய்யமுடியும் என்று பிரிட்டிஷ்

அரசாங்கத்தார் பிடிவாதத்துடன் சாதித்து விட்டார்கள். வகுப்புவாத முஸ்லீம்கள் ஆகாகானின் தலைமையில், பிரிட்டிஷ் பொது வாழ்வில் கேவலமான பிற்போக்கு கொண்டவரோடு உறவுகொண்டாடும் நிலைக்கு வந்துவிட்டார்கள். இவர்கள் சேர்ந்துகொண்ட கூட்டத்தார் பிரிட்டனுடைய முற்போக்குக்கே எதிரிகள். மிகவும் ஆபத்தான கூட்டத்தார்கள். ஆகாகானும் அவரது கோஷ்டியாரும், லாயிட் பிரபுவும் அவரது இனத்தாரும் கூடிக் குலவிக்கொண்ட காட்சி அருமையான காட்சியாக இருந்தது. அவர்கள் இதோடு நிற்கவில்லை. வட்டமேஜை மகாநாட்டில் ஐரோப்பிய சங்கத்தின் பிரதிநிதிகளோடும் மற்றவர்களோடும் ஒப்பந்தம் செய்துகொண்டார்கள். இது, வருத்தத்துக்கு உரியதாகும். ஏனென்றால், இந்தியாவில் இந்த ஐரோப்பிய சங்கம்தான், இந்திய விடுதலைக்கு எதிரியாக இருந்து, வலுவாக வேலை செய்து வருகிறது.

ஹிந்து மகாசபை பிரதிநிதிகள் சும்மா இருக்கவில்லை. அவர்கள் பிரிட்டிஷாரின் நலன்களைக் கருதி, பஞ்சாபில் பாதுகாப்புகள் வேண்டுமென்று கோரினார்கள். இந்தப் பாதுகாப்புகள் யாவும், இந்திய விடுதலைக்குத் தடைகள் என்று அவர்கள் அறிந்துகொள்ளவில்லைபோலும்! பிரிட்டிஷ் அரசாங்கத்தோடு ஒத்துழைக்கும் முயற்சிகளில் அவர்கள் முஸ்லீம்களைத் தோற்கடிக்க முயன்றார்கள். ஆனால், அதனால் அவர்களுக்கு யாதொரு லாபமும் கிடைக்கவில்லை. தங்களுடைய கட்சியையே கெடுத்துக் கேவலமாக்கிக் கொண்டு, இந்தியாவின் விடுதலை இயக்கத்துக்கு துரோகம் செய்துவிட்டார்கள். முஸ்லீம்கள் கௌரவத்துடனேயாவது தங்கள் கட்சியைச் சொல்லிக் கொண்டார்கள். ஆனால், ஹிந்து வகுப்பு வாதிகளிடம் இந்தத் தன்மைகூட காணப்படவில்லை.

வகுப்புவாதத் தலைவர்கள், மேல்வகுப்பு பிற்போக்காளர்களில் ஒரு சிறுகூட்டத்தாருக்கு பிரதிநிதிகளாய் இருக்கிறார்கள். அவர்கள் பொது ஜனங்களின் மதவெறிகளைத் தங்களுடைய சொந்த பிரயோசனத்திற்காக உபயோகப்படுத்திக் கொள்ளுகிறார்கள். இதுதான் உண்மையென்று எனக்குத் தோன்றுகிறது. பொருளாதாரப் பிரச்னைகளை வேண்டுமென்றே, இருதரப்பு வகுப்புவாதத் தலைவர்களும் யோசிப்பதற்கு இடம் கொடுக்காமல் உள்ளுக்குள்ளேயே அழுத்தி

வைத்துவிடுகிறார்கள். ஆனால் இந்தப் பிரச்னைகளை அழுத்தி வைக்க முடியாத காலம் விரைவில் வந்துசேரும். அப்பொழுது இருபது வருஷங்களுக்கு முந்தி ஆகாகான் எச்சரிக்கை செய்ததுபோல, இருதரப்பு வகுப்புவாதிகளும், தீவிர திட்டங்களுக்கு விரோதமாக மிதவாதிகள் அனைவரும் சேர வேண்டுமென்று பிரசாரம் செய்வார்கள். ஓரளவில் இது ஏற்கனவே வெளித்தோன்றிவிட்டது. ஹிந்து முஸ்லீம் வகுப்புவாதிகள் ஒருவருக்கொருவர் பகிரங்கமாக எவ்வளவு தாக்கிக்கொண்டாலும் பிற்போக்கான சட்டங்களை ஆக்கிக்கொள்ள அரசாங்கத்தாருக்கு உதவிசெய்யும் பொருட்டு இருதரப்பாரும் அசெம்பிளியிலும் வேறு இடங்களிலும்கூடி ஒத்துழைக்கிறார்கள். இந்த மூன்று கூட்டத்தையும் ஒன்றுசேர்த்த சங்கிலிக்கரணைகளில் ஒன்று ஒட்டவா ஒப்பந்தமாகும்.

பிரிட்டிஷ் கன்சர்வேடிவ் கட்சியின் பிற்போக்காளர்களோடு, ஆகாகான் அவர்கள் இன்றும் நெருங்கிப் பழகிக் கொண்டுவருகிறார் என்பது குறிப்பிடத்தக்கதாகும். 1934-ம் வருஷம் அக்டோபர் மாதம் பிரிட்டிஷ் கடற்படை லீக் கூட்டத்தார் விருந்து கொடுத்தார்கள். அதிலே ஆகாகான் முக்கியமான விருந்தாளி. விருந்துக்கச்சேரியில் லாயிட்பிரபு தலைமை வகித்தார். பிரிஸ்டல் கன்சர்வேடிவ் மகாநாட்டில் லாயிட் பிரபு, பிரிட்டிஷ் கடற்படையை வலுப்படுத்துவதற்காகக் கொண்டுவந்த யோசனைத் திட்டத்தை, இந்த விருந்துக் கச்சேரியில் ஆகாகான் பூரணமாக ஆதரித்தார். சாம்ராஜ்யப் பாதுகாப்பையும் இங்கிலாந்தின் பத்திரத்தையும் பற்றி இந்தியத் தலைவரொருவர் இவ்வாறு கவலைப்படுகிறார். பிரிட்டிஷ் போர்ப்படைகளை விருத்திசெய்யும் விஷயத்தில், அந்த இந்தியத் தலைவர், பால்டுவின் அவர்களையும் தேசிய அரசாங்கத்தையும்கூட தோற்கடித்துவிட்டார். இதெல்லாம் அவர் செய்தது உலக சமாதானத்தின் பொருட்டுத்தான்!

1934-ம் வருஷம் நவம்பர் மாதம் அதாவது விருந்துக் கச்சேரிக்கு அடுத்தமாதம் "முஸ்லீம் உலகத்தை பிரிட்டிஷ் மகுடத்தோடு சாசுவதமான நட்பைக் கொண்டு பிணைக்க வேண்டும்" என்ற நோக்கத்துடன் இரகசியமாக லண்டனில் சினிமாபடம் காண்பிக்கப்பட்டதாக ரிப்போர்ட் செய்யப்பட்டது. இந்தச் சமயத்தில் முக்கியமான விருந்தினர்கள் ஆகாகானும் லாயிட் பிரபுவும் என்று அறிவிக்கப்பட்டது.

ஆகாகானும், லாயிட் பிரபுவும் பிரிக்க முடியாதபடி ஒன்று சேர்ந்துவிட்டதாகத் தோன்றிற்று. நம்முடைய உள்நாட்டு அரசியலில் ஸர் தேஜ்பகதூர் சாப்ரூவும் ஜயகரும் இருப்பது போல சாம்ராஜ்ய விஷயங்களில் ஆகாகான்-லாயிட்பிரபு இவர்களது இரண்டு இதயங்களும் ஒரே உணர்ச்சியில் தோய்ந்து கிடப்பனபோல் தோன்றிற்று.

இவர்கள் இருவரும் அடிக்கடி ஒன்று சேர்ந்து காட்சி தந்த இந்த மாதங்களில் இந்தியாவுக்கு அதிகமான சீர் திருத்தத்தை அளித்து, தங்களுடைய பலவீனத்தைக் காண் பித்துக்கொண்டதற்காக கன்சர்வேடிவ் கட்சித் தலைவர்களை யும் தேசிய அரசாங்கத்தையும் லாயிட் பிரபு, மிக்க கசப் போடு ஓயாமல் தாக்கி பிரசாரம் செய்து கொண்டு வந்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

சமீபகாலமாக முஸ்லீம் வகுப்புவாதத் தலைவர்களில் ஒருவர் விநோதமாக பிரசங்கங்கள் செய்து சில விசித்திர மான யோசனைகளைச் சொல்லி வருகிறார். இவைகளுக்கு உண்மையான சிறப்பு கிடையாது. அவரைப்போல் ஏனையோர்களும் நினைக்கிறார்களோ என்பது சந்தேகம். என்றாலும் வகுப்புவாத மனப்பான்மையை அது சிறப்பாக அறிவிக்கின்றது. அதற்கு போதுமான விளம்பரமும் கொடுக் கப்பட்டது. இந்தியாவில் "முஸ்லீம் ஜாதி", "முஸ்லீம் கலை' இவைகளைப்பற்றி வற்புறுத்திப் பேசப்பட்டு வருகின்றது. ஹிந்து-முஸ்லீம் நாகரிகங்கள் அறவே ஒத்து வாழ முடி யாது என்றும் குறிப்பிடப்படுகிறது. இதிலிருந்து என்ன கொள்ளக் கிடக்கிறது என்றால், (அவ்வாறு தெளிவாகச் சொல்லப்படாவிட்டாலும்) பிரிட்டிஷ்காரர்கள் இந்தியாவில் சாசுவதமாக இருந்து, இரண்டு வகுப்பாருக்குமிடையே தராசை நன்றாகப் பிடித்துக்கொண்டு இரண்டு நாகரிகங்களுக் கும் மத்தியஸ்தம் செய்ய வேண்டும் என்பது தான்.

சில ஹிந்து வகுப்புவாதத் தலைவர்களும் இதே முறை களில் யோசனை செய்கின்றார்கள். ஆனால் கொஞ்சம் வித்தி யாசம் உண்டு. தாங்கள் பெரும்பான்மையில் இருப்பதால், இறுதியில் தங்களுடைய நாகரிகமும் கலைப்பெருக்கும்தான் நிலைத்து நிற்கும் என்று ஹிந்துக்கள் ஆசை கொண்டிருக் கிறார்கள்.

ஹிந்து-முஸ்லீம் நாகரிகங்கள்! முஸ்லீம் ஜாதி! இவைகள் எத்தகைய கவர்ச்சி பொருந்திய காட்சிகளை மனக்கண்ணுக்கு திறந்துவிடுகின்றன! பண்டைய சரித்திரத்தின் காட்சிகள்! தற்போதைய சரித்திரத்தின் காட்சிகள்! எதிர்காலத்தில் நேரக்கூடியவைகளின் காட்சிகள்! இந்தியாவில் முஸ்லீம் ஜாதி! என்ன வேடிக்கை! இந்திய ஜாதிக்குள் ஒரு ஜாதி! அதுவும் ஒரே இடத்தில் ஒதுங்கி நிற்கும் கூட்டமல்ல. நாடு முழுதும் பல பல துண்டுகளாக சிதறிக் கிடக்கும் முஸ்லீம் கூட்டம்! அரசியல் துறையில் பார்த்தாலோ இந்தக் கருத்து அபத்தமாகும். பொருளாதாரத் துறையில் பார்த்தால் ஆபாசம். இதைப்பற்றி யோசனை செய்ய தகுதிபெற்றதே இல்லை. இருந்தாலும், இந்தக் கருத்துக்குப் பின்னே இருக்கும்படியான மனப்பான்மையை அறிந்துகொள்ள அது நமக்கு சதாகமாயிருக்கிறது.

இத்தகைய, கலக்கமுடியாத துண்டான ஜாதிகள் மத்திய காலத்திலும், அதற்கு பின்னேயும் வாழ்ந்து வந்தன. ஆட்டோமான் சுல்தான்கள் அரசியல் நடத்த துவக்கிய காலத்தில், இஸ்தாம்பூல் நகரத்தில், இத்தகைய தனிக் கூட்டங்கள் தனித்தனியே வாழ்ந்துவந்தன. ஒன்றுக்கொன்று கலக்காமல், ஓரளவு சுதந்திரத்துடன் வாழ்ந்துவந்தன. லத்தீன் கிறிஸ்துவர்கள், வைதீகக் கிறிஸ்தவர்கள், யூதர்கள் முதலிய கூட்டங்கள். இந்தக் கூட்டங்கள் அந்நாட்டு அரசியலைச் சேர்ந்த நீதிஸ்தலங்களால் தாங்கள் விசாரிக்கப்படக் கூடாது என்ற உரிமையை வேண்டி ஸ்தாபித்துக் கொண்டன. இந்த அபத்தமான துவக்கம் கீழ்நாடுகளுக்கு பின்னர் அமுக்குப் பிசாசுபோல ஆகிவிட்டது. முஸ்லீம் ஜாதி என்று பேசுவது அரசியலில் ஒரு கூட்டமல்லவென்றும், அதற்கு மதப்பிணிப்புதான் இருக்கிறதென்றும் அர்த்தமாகும். நவீன முறையில் அரசியல் கூட்டம் ஒற்றுமையுடன் சேர்ந்து வளரவிடக் கூடாது என்று அர்த்தம். அதற்கு எதேச்சாதிகார அரசாங்கம் அல்லது அந்நிய ஆட்சி என்று அர்த்தம். அதற்கு உணர்ச்சி தழுவிய "ஊறல்" மனப்பான்மையென்று அர்த்தமாகும்.

இத்தகைய மனப்பான்மையால் உண்மையை உற்று நோக்குவதற்கு ஆசை உண்டாவதே இல்லை. சிறப்பாக பொருளாதாரத் துறையில் உண்மைகளை ஊன்றி கவனிக்க

ஆசை ஏற்படவே இல்லை. தர்க்க சாஸ்திரத்தை அடியோடு சில சமயம் உணர்ச்சி தலை குப்புற அடித்து விடுகிறது. உணர்ச்சிகள் விவேகத்துக்கு பொருத்தமில்லாதவையா யிருந்தாலும், அவைகளை நாம் அலட்சியம் செய்ய முடியாது. ஆனால் முஸ்லீம் ஜாதி என்ற இந்த எண்ணம் ஒரு சிலருடைய கற்பனையே ஆகும். அதற்கு பத்திரிகை உலகத்தில் ஏராளமாக விளம்பரம் கொடுக்கப்படாவிட்டால், அதைப் பற்றி யாருமே கேள்விப்பட்டிருக்க மாட்டார்கள். பலர் அதில் நம்பிக்கைகொண்டிருக்கிறார்கள் என்றே வைத்துக் கொள்ளுவோம். ஆனால் உண்மையான நிகழ்ச்சிகளின் தோற்றத்துக்கு முன்னே, அந்தக் கருத்து இருந்த இடம் தெரியாமல் மறைந்து போய்விடும்.

இதைப்போலவே ஹிந்து முஸ்லீம் நாகரிகங்கள் என்ற தனிப்பட்ட பேச்சுகளும் ஒழிந்துபோய்விடும். நாட்டு நாகரிகம் என்று தனித்துப் பேசும் காலமே, விரைவில் போய்க் கொண்டு, உலகம் முழுவதிலும், ஒரு பொதுவான நாகரிகமும் கலப்பெருக்கும் ஏற்பட்டு வருகின்றன. ஒவ்வொரு நாடும் தனக்கு சிறப்பாயுள்ள பாஷையையும் பழக்க வழக்கங்களையும் இலக்கிய முறைகளையும் நீண்டகாலம் தனித்து வைத்துக்கொண்டிருக்கலாம். ஆனால் இந்த யுகமோ, இயந்திர யுகமாகும். விஞ்ஞான ஆராய்ச்சி முன்னேறி வருகின்றது. விரைவாகப் பிரயாணம் செய்யும் வசதிகள் வளர்ந்து வருகின்றன. உலகத்தில் நிகழும் செய்திகள்யாவையும் அவ்வப்போது தெரிந்துகொள்ளலாம். ஆகாச வசனியும் சினிமாவும் நிலைத்த பிரசாரக் கருவிகளாக ஆய்விட்டன. இவைகள் எல்லாம் சேர்ந்து உலகத்தில் பொதுவான நாகரிகத்தை உண்டாக்கி விடும். இந்தத் தவிக்கமுடியாத போக்கோடு யாருமே எதிர்த்துப் போராட முடியாது. பிரளயம்போல ஒன்று சேர்ந்து, நவீன நாகரிகத்தை தகர்த்தெறிந்தா லொழிய அந்தப் போக்கை எதுவும் தடைசெய்ய முடியாது.

பரம்பரை ஹிந்து வாழ்க்கைத் தத்துவத்துக்கும் முஸ்லீம் தத்துவத்துக்கும் அநேக வேற்றுமைகள் இருக்கத்தான் செய்கின்றன. ஆனால் இந்த வேற்றுமைகள் கண்ணுக்கே படத் தேவையில்லை. ஏன்? இவைகளையும் விஞ்ஞானத்தையும் தொழிற் செழிப்பையும் தழுவிய நவீன மேல்நாட்டு வாழ்க்கைத் திட்டத்தையும் ஒப்பிட்டுப் பார்த்

தால், ஹிந்து—முஸ்லீம் தத்துவங்களில் வேற்றுமையே கிடையாது. ஏனெனில், நவீன தத்துவத்துக்கும் மேலே குறிப்பிட்ட வேறிரண்டு தத்துவங்களுக்கும் இடையே, மகத்தான பிளவு இருக்கின்றது. இந்தியாவில் இன்றைக்கு உண்மையான போராட்டம் ஹிந்து நாகரிகத்திற்கும் முஸ்லீம் நாகரிகத்திற்கும் இடையே அல்ல. விஞ்ஞான ஆராய்ச்சியைத் தழுவிய நவீன நாகரிகத்தின் கலைப் பெருக்குகளுக்கும் இடையேதான் போராட்டம் நிகழ்ந்து வருகிறது.

முஸ்லீம் நாகரிகத்தை காப்பாற்ற வேண்டுமென்று ஆசை கொண்டிருப்பவர்கள் (அந்த நாகரிகம் என்பது எதுவாயிருந்தாலும் சரியே) ஹிந்து நாகரிகத்தைப்பற்றி கவலைப் படவேண்டியதே இல்லை. அவர்கள் மேனாட்டிலிருந்து வெற்றி விருதுடன் வந்துக்கொண்டிருக்கும் அசுரனோடு போராடவேண்டும். ஹிந்து-முஸ்லீம்கள் நவீன விஞ்ஞான தொழில் நாகரிகத்தை எதிர்க்க எத்தனை முயற்சிகள் செய்தாலும் அவைகள் யாவும் பயனற்றுப்போகும் என்பதில் எனக்கு துளிக்கூட சந்தேகமேயில்லை. இந்த முயற்சிகள் தோல்வியடைவதை நான் வருத்தப்படாமல் பார்த்துக் கொண்டே இருப்பேன். என்றைக்கு ரெயில்வேயும் அதைப் போன்றவைகளும் இந்தியாவில் வந்து சேர்ந்தனவோ, அன்றைக்கே நாம் நமது பழைய நாகரிகத்தை நமக்குத் தெரியாமலே உதறித் தள்ளிவிட்டு நவீன நாகரிகத்தை அந்தராத்மாவில் ஏற்றுக்கொண்டு விட்டோம். அலிகார் கல்லூரியைத் துவக்கியபொழுது இந்திய முஸ்லீம்களின் சார்பாக ஸர் சையது அகமதுகான் அவர்கள் நவீன நாகரிகத்தையேற்றுக்கொண்டார். உள்ளபடியே நாம் ஏற்றுக்கொள்ளவாவது? நமக்கு இந்த விஷயத்தில் யோசனை செய்யவே பாத்தியமும் வல்லமையும் கிடையாது. முழுகிப் போகிறவன் ஏதேனும் ஒன்றைப் பிடித்துக்கொண்டு கரை சேரலாமா என்று எண்ணுவதைப் போல நாமும் எண்ண வேண்டியதாயிற்று.

ஆனல் முஸ்லீம் நாகரிகம் என்று சொல்லப்படுகிறதே அது என்ன? அராபியர்கள் பாரசீகர்கள் துருக்கர்கள் முதலியவர்கள் செய்து காண்பித்த மகத்தான வீரச்செயல்களின் சரித்திரத்தைப் பற்றிய ஜாதி நினைப்பா? அல்லது பாஷையா? அல்லது கலையும் சங்கீதமுமா? அல்லது வழக்

கங்களா? தற்கால முஸ்லீம் கலையையும் முஸ்லீம் சங்கீதத்தையும் பற்றி பேசுவார் யாரையும் காணோம். இந்தியாவிலிருக்கும் முஸ்லீம்களின் கருத்துப் போக்குக்கு தூண்டுதலாய் இருந்த பாஷைகள் அராபி, பாரசிகம் என்ற இரண்டு பாஷைகளாகும். இவை இரண்டிலும் பாரசிக பாஷைதான் முக்கியமானது. பாரசிக பாஷையும் அநேக பாரசிக பழக்க வழக்கங்களும் இந்தியாவுக்கு ஆயிரக்கணக்கான வருஷங்களாக வந்து சேர்ந்து, வட இந்தியாவில் மக்களின் உள்ளங்களில் உரிமையிடம் பெற்று விட்டன. பாரசிகம் கீழ் நாடுகளின் பிரான்ஸ் தேசம் ஆகும். அது தன்னுடைய பாஷையையும் நாகரிகத்தையும் அயலார்களுக்கு அனுப்பிக் கொண்டே வந்திருக்கின்றது. அந்தக் கொடை இந்தியாவிலிருக்கும் நம்மெல்லோருக்குமே பொதுவான மதிப்பிட முடியாத பொக்கிஷமாகும்.

இஸ்லாமிய நாடுகளும் இஸ்லாமியக் கூட்டத்தார்களும் பண்டைக் காலங்களில் வெற்றிகரமாகசெய்த செயல்களினாலே ஏற்படும் பெருமை இஸ்லாமியர்களுக்குள் சிறந்த ஐக்கியத்தை உண்டுபண்ணியுள்ளது. பலவேறு ஜாதிகளின் இந்த வீரச் சரிதைக்கு முஸ்லீம்கள் பாத்தியமும் பெருமையும் கொண்டாடுகிறதை யாரேனும் பொறாமை கொண்டு ஆக்ஷேபிக்கின்றார்களா? அவர்கள் அந்தச் சரித்திரத்தை ஞாபகம் வைத்துக் கொண்டு மனத்தில் வளர்த்து பாதுகாக்கத் தீர்மானம் கொண்டிருக்கும் வரையில் அந்தப் பாத்தியத்தை யாருமே அவர்களிடமிருந்து எடுத்துவிட முடியாது. உள்ளபடியே இந்தப் பண்டைச் சரிதம் பெரும்பான்மையாக நமக்கு எல்லோருக்குமே பொதுவான பொக்கிஷமாகும். ஏனெனில் ஆசியாக்காரர்கள் என்ற முறையில் ஐரோப்பிய ஆக்கிரமிப்பை எதிர்த்துப் போராடவேண்டிய தேவையால் நாம் எல்லோரும் ஒரே கூட்டத்தார் என்ற எண்ணம் ஏற்படுகிறது.

ஸ்பெயினில் அராபியர்கள் போராடியதையும் "க்ரூஸேட்" சரித்திரங்களையும் நான் படிக்கும்பொழுதெல்லாம் எனது அனுதாபங்கள் யாவும் அராபியர்களின் பக்கத்திலே தான் இருக்கின்றன. நான் கூடுமான வரையில் பக்ஷபாதமில்லாமல் நிகழ்ச்சிகளை நேர்மையான முறையில் கவனித்து முடிவுக்கு வரவேண்டுமென்று எவ்வளவோ முயற்சி செய்

தானும் ஏதாவதொரு நிகழ்ச்சியில் ஆசியாக்காரர்கள் சம்பந்தப்பட்டுவிட்டால் என்னையறியாமலே என் உள்ளே பதுங்கிக்கிடக்கும் ஆசியாக்காரத்தன்மை ஆசியாக்காரர்களுக்குத்தான் பரிந்து பேசுகிறது. நான் என்ன செய்வேன்? இந்த முஸ்லீம் நாகரிகம் இன்னதென்று அறிய நான் பெரும்முயற்சி செய்திருக்கிறேன். ஆனால் அறிந்துகொள்ள முடியவில்லை யென்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். பாரசீக பாஷையாலும் அதனுடைய இலக்கிய பரம்பரைகளாலும் வட இந்தியாவில் நடுத்தர முஸ்லீம்களிலும் நடுத்தர ஹிந்துக்களிலும் ஒரு சிலர் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள் என்பதை நான் காண்கிறேன். ஆனால், பொது ஜனங்களை எடுத்துக் கொண்டால், முஸ்லீம் நாகரிகத்துக்கு மிகவும் வெளிப்படையான அடையாளங்கள் பின்வருமாறு:— ஒருவகையான கால்சட்டைகள், அதிக நீளமுமில்லை, குட்டையுமில்லை. ஒரு வகையாக க்ஷவரம் செய்துகொள்ளுதல் அல்லது மீசையை வெட்டிக்கொள்ளுதல். தாடி வளர்த்தல், சிறப்பான மூக்கு வைத்த லோட்டா ஒன்று இவைகள்தான் முஸ்லீம் நாகரிகத்தின் தோற்றங்கள். இதற்கு சமமான ஹிந்து வழக்கங்கள் என்னவெனில், வேஷ்டி கட்டிக்கொள்ளுதல், தலைக் குடுமி, வேறு வகையான லோட்டா.

உள்ளபடியே, இந்த வேற்றுமைகள்கூட நகரங்களிலேதான் மிகுதியும் காணப்படுகின்றன. அவைகளும் மறைந்து கொண்டு வருகின்றன. முஸ்லீம் விவசாயிகளையும் முஸ்லீம் தொழிலாளிகளையும் ஹிந்து விவசாயிகள், தொழிலாளிகளிடமிருந்தும் பிரித்துப்பார்க்க முடியாது. ஒன்றுபோலத்தான் இருப்பார்கள். முஸ்லீம் அறிவாளிகள் அநேகமாக தாடி வைத்துக்கொள்ளுவதில்லை. அலிகாரில் மட்டும் பெஸ் குல்லாய் ஆதரிக்கப்பட்டு வருகின்றது. பெஸ்குல்லாயைத் துருக்கிக் குல்லாய் என்கிறார்கள். அந்தக் குல்லாயைத் தனக்கு வேண்டாமென்று துருக்கி தூரத் தள்ளிவிட்டது.

முஸ்லீம் ஸ்திரீகள், (ஹிந்துக்களைப்போல) சேலைகளைக் கட்டிக்கொள்ளத் துவக்கியிருக்கிறார்கள். படுதாவிலிருந்து கொஞ்சம் கொஞ்சமாக வெளியே வந்துகொண்டிருக்கிறார்கள். இதே பழக்க வழக்கங்களில் சிலவற்றினிடம் எனக்கு ருசி கிடையாது. எனக்கு தாடி மீசைகளைக் கண்டால் பிடிப்பதில்லை. தலைக் குடுமியைக் கண்டாலும் அப்

படித்தான். என்னுடைய ருசிகளின் திட்டத்தைப் பிறர் பேரில் கட்டாயப்படுத்த எனக்கு விருப்பம் இல்லை. ஆனால், காபூல் நகரில் அமானுல்லா அவர்கள் கட்டாயப்படுத்தி, ஜனங்களைத் தாடியை எடுக்கவேண்டுமென்று ஏற்பாடு செய்தாரே, அப்பொழுது நான் குதூகலமடைந்தேன் என்பதை மட்டும் ஒப்புக்கொள்ளவேண்டும். ஹிந்துக்களும் முஸ்லீம்களும் பின்னேக்கிப் பழைய பரம்பரையையே பார்க்கின்றார்கள். அவர்களுடைய பிடிப்பைவிட்டு நழுவிக்கொண்டு செல்லும் சங்கதிகளை, அவர்கள் கட்டிப் பிடிக்கப் பார்க்கிறார்கள். இது மிகவும் அனுதாபத்துக்குரிய காட்சியாகும். பண்டைப் பரம்பரையைக் கண்டிக்கவாவது தள்ளிவிடவாவது எனக்கு இச்சை கிடையாது. ஏனென்றால் நம்முடைய பண்டைய வாழ்வில் சிறந்தது எவ்வளவோ இருக்கிறது. அவை நிலைத்துநிற்குமென்பதில் எனக்குச் சந்தேகமே கிடையாது. ஆனல் இவர்கள் பிடித்துக்கொண்டிருக்கப்பார்ப்பது, அத்தகையவற்றையல்ல. தூசிகூடப் பெறாத சாமான்களை நிலைக்க வைக்கப் பார்க்கிறார்கள். அவைகள் நிலைப்பதானல் அவைகளால் அதிகமான தீமைதான் உண்டாகும்.

சமீபகாலமாக இந்திய முஸ்லீம்களைத் திடுக்கிடும்படி செய்யக்கூடிய நிகழ்ச்சிகள் அடிக்கடி நேர்ந்துவிட்டன. அவர்கள் பிடிவாதமாக வளர்த்து, பாதுகாத்து வந்த கருத்துகள் பல தகர்க்கப்பட்டுவிட்டன. இந்தியா எதற்காக 1920-ம் ஆண்டில் தைரியமாகப் போர்புரிந்ததோ அந்தக் கிலாபத்தை இஸ்லாத்தின் பாதுகாப்பாளியான துருக்கி ஒழித்துவிட்டது மல்லாமல், மத சம்பந்தமற்ற முறைகளில் வெகு துரிதமாக முற்போக்கை அடைந்து வருகிறது. புதிய துருக்கியின் அரசியலமைப்பில் துருக்கி ஒரு முஸ்லீம் நாடு என்று ஒரு ஷரத்து காணப்படுகிறது. ஆனல், அதைத் தவறாக யாரும் உணரக்கூடாதென்று 1927-ம் வருஷத்தில், கெமால் பாஷா, "அரசியல் அமைப்பில் துருக்கிஒருமுஸ்லீம்நாடு என்று கண்டிருக்கும் ஷரத்து ராஜி ஷரத்துஆகும். தக்க சந்தர்ப்பம்எவ்வளவு விரைவில் வாய்க்குமோ அவ்வளவு விரைவில் அந்த ஷரத்து ஒழிக்கப்படும்" என்று அறிவித்தார். பின்னர் அவர் இந்தக் குறிப்புக்கேற்றவாறு நடந்துகொண்டதாக நான் நம்புகிறேன். அதிகமாக எச்சரிக்கையுடன் நடந்துகொண்டாலும், எகிப்தும் இதே வழியில் சென்று தனது அரசியலை மதத்தினிடமிருந்து பூராவாக விலக்கிக் கொண்டு விட்டது.

அராபிய நாடுகளிலும் இவ்வாறே நடந்து வருகிறது. அரேபியாவில்மட்டும் இன்னும் கொஞ்சம் பிற்போக்குத் தன்மை இருந்துவருகிறது. இஸ்லாம் தோன்றுவதற்குமுன் இருந்த தனது பழைய சரித்திரத்தைக் கிளறிப் பார்த்து, தனக்கு கலைப் பெருக்கு ஆவேசத்தை அடையப்பெற, பாரசீகம் முயற்சி செய்துவருகிறது. எல்லா நாடுகளிலும்மதம்பின்னே ஒதுங்கிப்போய், தேசியம் என்பது பல ரகமானதுருதுருத்த உருவங்களில்தோன்றி வருகின்றது. அந்தத் தேசியத்துக்குப் பின்னே, சமதர்மம் முதலிய திட்டங்கள் அடி வலுவாக நிற்கின்றன. ஆகவே, "முஸ்லீம் ஜாதி" "முஸ்லீம் கலைப் பெருக்கு" இவைகள் என்ன ஆகும்? பிரிட்டிஷாரின் காருண்ய ஆட்சியின் கீழ் அகமகிழ்ந்து கொண்டு, வட இந்தியாவில் மட்டும் எதிர்காலத்தில் அவைகள் நிலைத்து நிற்கப் போகின்றனவா?

முற்போக்கு என்றால் என்ன? அரசியல் என்பதைப் பற்றி ஒருவன் விரிவான நோக்கம் கொள்ளுவது முற்போககு எனலாம். இந்த இலட்சணம் ஏற்றுக்கொள்ளப்படுமாகில் நமது வகுப்பு வாதிகளும் நமது அரசாங்கத்தாரும் இந்த நோக்கத்தைக் குறுக்கி இதன் எதிரிடையை வேண்டும் என்றே பிடிவாதமாக வளர்த்து வருகிறார்கள்.

# LVII

## சிக்கலான நிலைமை

என்னை மீண்டும் கைதுசெய்து சிறைக்கு இட்டுச்செல்லுவார்கள் என்ற எண்ணம் என்னிடம் எப்பொழுதுமே இருந்துவந்தது. இது காரணமில்லாத ஊகமல்ல. நாடுமுழுதிலும் அவசரச் சட்டங்கள் ஆட்சிபுரிந்தன. காங்கிரஸ் அமைப்பே சட்டத்துக்குப் புறம்பானது என்ற அறிவிப்பு ரத்து செய்யப்படவில்லை. பிரிட்டிஷ் அரசாங்கத்தின் தன்மையைக் கொண்டும் என்னுடைய தன்மையைக்கொண்டும்சோதித்துப் பார்த்தால், என்னை அரசாங்கம் கட்டாயமாக அடக்கத்தான் முயற்சிசெய்யும். நான் செய்த எந்த வேலையிலும்இந்த அழிக்கமுடியாத கருத்து ஒட்டிக்கொண்டேயிருந்தது. எந்த வேலையிலும் நிலைத்தபடியாக, என்னால் ஊன்றிக் கொள்ள முடியவில்லை. எனவே, எவ்வளவு வேலை செய்யக்கூடுமோ அவ்வளவையும் விரைவில் செய்ய ஆத்திரப்பட்டேன். இருந்தாலும், கைது செய்யப்படுவதற்கு எனக்குவிருப்பமில்லை. சிறைக்குக் கொண்டுபோய் விடும்படியான எந்த அலுவல்களையும் கூடுமானவரையில் செய்யாமல் நான் விலகிக் கொண்டேன்.

மாகாணத்திலிருந்தும், வெளியே இருந்தும் சுற்றுப் பிரயாணம் செய்யும்படியாக பல இடங்களிலிருந்து அழைப்புகள் வந்தன. அவைகளை வேண்டாமென்று மறுத்துவிட்டேன். இவ்வாறு பிரசங்கம் செய்யத் துவக்கி விட்டால், அதை மும்முரமாக சிரத்தையுடன் செய்ய வேண்டும். அந்தத் திட்டம் சடுதியில் நின்றுபோனாலும் போகும். சிறைக்கு எப்பொழுது செல்லவேண்டியிருக்குமோ என்பதனால் அந்தத் திட்டத்தை ஏற்க முடியவில்லை. எதையும் அப்பொழுது அரைகுறையாகச் செய்து விட்டு, நிறுத்திக் கொள்ள எனக்கு விருப்பமில்லை. காந்திஜீயோடு அல்லது காரியக் கமிட்டிஅங்கத்தினர்களோடு பேசவோ அல்லது வேறு அலுவலாகவோ எங்கேனும் சென்றால் அங்கே பொதுக் கூட்டங்

களில்பேசி, தாராளமாக என் எண்ணங்களை மனதைவிட்டுச் சொல்ல எண்ணினேன். ஜபல்பூரில் பிரமாண்டமான கூட்டமும் மிகவும் கவர்ச்சி தரக்கூடிய ஊர்வலமும் நடைபெற்றன. டில்லியில்தான் அதுவரையில் பார்த்திராத அவ்வளவு பெரிய கூட்டம் சேர்ந்து கொண்டது. கூட்டங்கள் இவ்வளவு வெற்றியுடன் அடிக்கடி கூடுவதை அரசாங்கத்தார்பொறுத்துக்கொண்டிருக்க மாட்டார்களென்பது தெளிவு. தில்லியில் கூட்டம் முடிந்தவுடனே என்னைக் கைதுசெய்யப் போகிறார்கள் என்ற வதந்தி வலுவாக இருந்தது. ஆனால் நான் தப்பிக் கொண்டேன். அலகபாத்துக்குத் திரும்பி வந்தேன். திரும்பி வருகையில் அலிகாரில் இறங்கி முஸ்லீம் சர்வகலாசாலை மாணவர்களுக்கு ஒரு சொற்பொழிவு செய்தேன்.

அரசியல் சம்பந்தமான எல்லா வேலைகளையும் அழுத்தமாக நசுக்க சர்க்கார் முயன்று கொண்டிருக்கையில், அரசியல் சம்பந்தமற்ற பொதுஜன அலுவல்களில் கலந்துகொள்ள எனக்கு துளிக்கூட விருப்பமேயில்லை. காங்கிரஸ்காரர்களில் சிலர் இத்தகைய அலுவல்களில் நுழைந்து கொண்டு, அரசியல் அடக்கு முறையிலிருந்து தப்பித்துக் கொள்ளப் பார்க்கிறார்கள் என்பதைக் கண்டேன். இந்த அலுவல்கள் விரும்பத்தக்கவையாயினும், அவைகளுக்கும் நமது போராட்டத்துக்கும் சம்பந்தமே கிடையாது. இத்தகைய மனோவிருத்தி இயல்பானதுதான். ஆனால், இதை அந்தத் தருணத்தில் வளர்க்கக் கூடாது என்று தீர்மானம் கொண்டேன்.

1933-ம் வருஷம் அக்டோபர் மாத மத்தியில், ஐக்கிய மாகாண காங்கிரஸ் ஊழியர்களை அலகபாத்தில் கூட்டி, நிலைமைபைச் சீர்தூக்கிப் பார்த்து, எதிர்கால வேலையைப்பற்றி கலந்து யோசித்தோம். மாகாண காங்கிரஸ் கமிட்டி சட்டத்துக்குப் புறம்பான அமைப்பு ஆகும். எங்கள் நோக்கம், கலந்து யோசிப்பதல்லாமல், சட்டம் மீறுவதல்ல. எனவே மாமூல்படி நாங்கள் இந்தக் கூட்டத்தைக் கூட்டவில்லை. சிறைக்கு வெளியே இருந்த மாகாண கமிட்டி அங்கத்தினர்களையும் குறிப்பிட்ட வேறு சில ஊழியர்களையும் கூட்டத்துக்கு வரும்படியாகக் கேட்டுக் கொண்டோம். கூட்டங்கள் பகிரங்கமல்ல; அதைப்பற்றி ரகசியமும் கிடையாது. அரசாங்கத்தார் இந்தக் கூட்டத்தில் தலையிடுவார்களா இல்லையா என்பது கடைசிவரை எங்களுக்குத் தெரியாது. இந்தக் கூட்

டங்களில் உலக நிலைமையைப்பற்றி அதிகமான கவனம் செலுத்தினோம். பொருளாதார மந்தம், நாஜி தத்துவம், சம தர்மம் முதலியவைகளைப்பற்றிப் பேசினோம். உலகத்தின் பல வேறு பகுதிகளில் நடைபெற்றுவரும் அரசியல் சோதனைகளோடு இந்தியப் போராட்டத்தைப் பொருத்திப் பார்க்குமாறு நாங்கள் எங்கள் தோழர்களை வேண்டிக் கொண்டோம். மகாநாடு இறுதியில் நம்முடைய நோக்கத்தை இலட்சணப்படுத்தி, அபேதவாதத் தீர்மானமொன்றை நிறைவேற்றி வைத்து, சட்டமறுப்பை வாபஸ் செய்யக் கூடாது என்று தெரிவித்துக்கொண்டது. பெருவாரியான சட்ட மறுப்பு சாத்தியமில்லையென்பது எல்லோரும் நன்றாக அறிந்த விஷயம்தான். நபர் சட்டமறுப்புகூட அநேகமாக நின்றுவிடலாம் அல்லது மிகக் குறைந்த ரீதியில் நீடித்துக் கொண்டு போகலாம். அரசாங்கத்தின் அடக்குமுறையும் அவசரச் சட்டங்களும் அமுலில் இருக்கும்வரையில் சட்ட மறுப்பை வாபஸ் செய்வதனால் யாதொரு வேற்றுமையும் உண்டாகாது.

எனவே ஒரு ஜாடைமுறையில் சட்டமறுப்பு நடைபெறவேண்டுமென்று நாங்கள் தீர்மானித்தோம். ஆனால் வேண்டுமென்றே கைதியாவதற்கு முயற்சி செய்யக்கூடாது என்று எங்களுடைய ஊழியர்களுக்கு யோசனைகள் சொன்னோம். அவர்கள் மாமூலமான வேலையைச் செய்து கொண்டு போகவேண்டியது; அதிலே கைது செய்யப்பட்டால் முக மலர்ச்சியுடன் ஏற்றுக் கொள்ள வேண்டியது. கிராம வாசிகளுடன் தொடர்பு வைத்துக்கொண்டு அரசாங்கத்தின் அடக்குமுறையாலும் வரிவஜாவினாலும் விவசாயிகளுக்கு ஏற்பட்டிருக்கும் நிலைமையைத்தெளிவாகத்தெரிந்து கொள்ளுமாறு அவர்களுக்கு யோசனை சொல்லப்பட்டது. அப்பொழுது வரிகொடா இயக்கப்பிரஸ்தாபமேஇல்லை. இது பூனா மகாநாட்டுக்குப் பிறகு வாபஸ் வாங்கப்பட்டது. தற்போதைய நிலைமைகளில் வரிகொடா இயக்கத்தை உயிர்ப்பிக்க முடியாது என்பது திட்டமாகத் தெரிந்தது. இந்தத்திட்டம் யாருக்கும் பாதகமில்லாத சாமானிய திட்டமாகும். இந்தத் திட்டம் சம்பந்தப்பட்ட மட்டில் சட்டத்துக்குப் புறம்பானது எதுவுமே கிடையாது. இருந்தாலும் அதன் மூலமாக பலர் கைது செய்யப்படுவார்கள் என்பதும் எங்களுக்குத் தெரியும். நம்முடைய ஊழியர்கள் கிராமங்களுக்குச் சென்ற.

வுடனே அவர்கள் கைது செய்யப்பட்டார்கள். (அவசரச் சட்டங்களின் பிரகாரம் வரிகொடா இயக்கத்தைத் தூண்டுவது குற்றமாகும்). எனவே நமது ஊழியர்கள் கிராமங்களுக்குப் போனவுடனே அவர்கள் வரிகொடா இயக்கப் பிரசாரம் செய்கின்றார்கள் என்று தவறாகக் குற்றம் சாட்டப் பட்டு தண்டிக்கப்பட்டார்கள். என்னுடைய தோழர்களில் பலர் சிறைப்பட்டதும் நான் இந்தக் கிராமாந்தரப் பகுதிகளுக்குச் செல்ல வேண்டுமென்று ஆசைப்பட்டேன். ஆனால் வேறு வேறு அலுவல்களில் எனது கவனம் சென்றமையால் என்னுடைய ஆசையை ஒத்திப்போட்டுக் கொண்டே போக நேர்ந்தது. இறுதியில் கிராமாந்தரப் பகுதிகளுக்குப் போகும் யோசனை கைவிடப்பட்டது.

அந்த இரண்டு மாதங்களுக்குள் காரியக் கமிட்டியின் அங்கத்தினர்கள் கலந்து கொண்டு, அகில இந்திய நிலைமையைப்பற்றி யோசித்தார்கள். சட்டவரம்புக்கு மீறிய கூட்டம் என்ற காரணத்தினால் காரியக் கமிட்டி வேலை செய்யாமலிருக்கவில்லை. ஆனால், காந்திஜீ பூனாவில் சொன்ன யோசனையின்பேரில் எல்லா காங்கிரஸ் கமிட்டிகளும், உத்தியோகங்களும் கலைக்கப்பட்டு, ரத்து செய்யப் பட்டன என்ற காரணத்தினால் வேலை செய்யவில்லை. என்னுடைய நிலைமை விநோதமாக இருந்தது. சிறையிலிருந்து நான் வந்ததும், இந்த யோசனையை ஏற்றுக் கொள்ள மறுத்து விட்டேன். காங்கிரஸின் பொதுக்காரியதரிசி என்ற பதவியைக்கட்டாயமாக எனக்குள் கொண்டாடிக் கொண்டேன். ஆனால் நான் எங்கே வேலை செய்ய முடியும்? சரியான காரியாலயம் கிடையாது; சிப்பந்திகளுமில்லை; தாற்காலிக காங்கிரஸ் தலைவருமில்லை.

கலந்து யோசிப்பதற்கு காந்திஜீ இருந்தபோதிலும் அவர் தம்முடைய அகில இந்திய சுற்றுப்பிரயாணத்தில் மும்முரமாயிருந்தார். ஹரிஜன வேலைக்காக ஏற்பட்டது அவரது அகில இந்திய சுற்றுப்பிரயாணம். அவருடைய சுற்றுப்பிரயாணத்தில், அவரை ஜபல்பூரிலும் டில்லியிலும் பிடித்துக் கொண்டு, காரியக் கமிட்டி அங்கத்தினரோடு கலந்து யோசித்தோம். பலவேறு அங்கத்தினர்களுக்குள் இருந்த வேற்றுமைகள் தெளிவாக வெளித் தோன்றத் தலைப்பட்டன. தகாறும் சிக்கலும் ஏற்பட்டன. ஒவ்

வொருவருக்கும் சமாதானம் ஆகும்படி வழி கிடைக்க வில்லை. சிலர் சட்டமறுப்பை வாபஸ் வாங்க எண்ணி ஞர்கள். வாபஸ் வாங்கக் கூடாதென்பது மற்றும் சிலரது கருத்து. காந்திஜீ இரு தரப்பாருக்கும் மத்தியஸ்தமாக இருந்தார். அவருக்கு சட்டமறுப்பை வாபஸ் வாங்கு வதில் இஷ்டமில்லை. ஆகவே விஷயங்கள் முன்போலவே நடந்துகொண்டு வந்தன. காங்கிரஸின் சார்பாக சட்ட சபைத் தேர்தல்களில் போட்டி போடவேண்டும் என்ற பிரச்னை சில சமயங்களில் காங்கிரஸ் வாதிகளால் யோசிக் கப்பட்டு வந்தது. ஆனல் காரியக் கமிட்டி அங்கத்தினர்க ளுக்கு அப்பொழுது அதில் அதிகமான சிரத்தை இல்லை. ஏனெனின் அந்தக் கேள்வி எழ சந்தர்ப்பமே ஏற்பட வில்லை. சீர்திருத்தங்கள் பக்குவப்பட்டு வெளித்தோன்று வதற்கு இன்னும் இரண்டு மூன்று வருஷங்கள் பிடிக்கும். மேலும், அப்போதிருந்த இந்தியா சட்டசபை கலைக்கப் பட்டு, புதுத்தேர்தல் வரும் என்ற பிரஸ்தாபமும் அப் பொழுது எழவில்லை.

என் சம்பந்தப்பட்ட வரையிலும் தேர்தலில் போட்டி போடுவதற்கு ஆட்சேபனையே கிடையாது. சமயம் வந்த பொழுது காங்கிரஸ் தேர்தலில் கலந்துகொள்ள வேண்டு மென்று நான் உறுதியாக நம்பினேன். ஆனல் இந்தக் கேள்வியை அப்பொழுது எழுப்பினல், நமது கவனத்தை வேறு துறையில் செலுத்துவதாக முடியும். சட்டமறுப்பு தொடர்ந்து நடப்பதால் நமக்கு முன் இருந்த சிக்கல்கள் யாவும் தெளிவடைந்து ராஜிக்கு பரபரத்துக் கொண்டிருக் கும் கூட்டத்தார், காங்கிரஸில் செல்வாக்கு பெருமல் போய்விடுவார்கள் என்று எண்ணினேன்.

இதற்கிடையே பத்திரிகைகளுக்கு கட்டுரைகளும் குறிப் புகளும் எழுதி அனுப்பிக்கொண்டு வந்தேன். ஓரளவு என் னுடைய எழுத்துகளை பதப்படுத்தி எழுதவேண்டியதா யிற்று. ஏனென்ருல் அவைகள் பிரசார நோக்கத்துடனே எழுதப்பட்டவையாகும். அச்சுச்சட்டங்களும், பல வேறு அடக்குமுறைச்சட்டங்களும், பத்திரிகைகளைக் கண்காணிப் பவரும் சுறுசுறுப்பாக வேலை செய்துகொண்டிருக்கும் சம யம். எவ்வித ஆபத்துகளுக்கும் நான் தயாராயிருந்தா லும், அச்சடித்துப் பிரசுரிப்பவர்களும் ஆசிரியர்களும் தயா

ராக இருக்கவில்லை. மொத்தத்தில் பத்திரிகைகள் என்னிடம் நல்லதனமாக நடந்துகொண்டன. எனக்கு சாதகமாக எவ்வளவோ செய்தன. ஆனால் எப்பொழுதுமே அல்ல. சில சமயங்களில் அறிவிப்புகளும், கட்டுரைகளில் பல பகுதிகளும் பிரசுரிக்கப்படாமல் விடப்பட்டன. நான் மிகவும் சிரமப்பட்டு நீளமான கட்டுரையொன்றை எழுதியனுப்பினேன். அந்தக் கட்டுரை பிரசுரிக்கப்படவே இல்லை. 1934-ம் வருஷம் ஜனவரி மாதம் நான் கல்கத்தாவிலிருந்த காலையில் முக்கியமான தினசரிகள் ஒன்றின் ஆசிரியர் என்னைப் பார்க்க வந்தார். "தங்களுடைய அறிவிப்புகளில் ஒன்றை கல்கத்தா பத்திரிகைகள் அனைத்திற்கும் தலைமை ஆசிரியராக இருப்பவருக்கு அவருடைய தீர்ப்புக்காக நான் அனுப்பியிருந்தேன். தலைமையாசிரியர் அதை அங்கீகரிக்கவில்லை. ஆகையினால் தங்களுடைய அறிவிப்பு பிரசுரிக்கப்படவில்லை" என்று அவர் என்னிடம் சொன்னார். தலைமை ஆசிரியர் என்று அவர் குறிப்பிட்டது கல்கத்தாவிலிருக்கும் பத்திரிகைகளைக் கண்காணிக்கும் அரசாங்க உத்தியோகஸ்தராவர்.

என்னுடைய பத்திரிகைக் குறிப்புகளிலும், பேட்டிகளிலும் சில சமயங்களில், சில கூட்டத்தார்களையும் தனி நபர்களையும் கடுமையாக நான் கண்டித்திருந்தேன். இந்தக் கண்டனத்தைக் கண்டு பலர் ஆத்திரப்பட்டார்கள். ஏனென்றால் காங்கிரசைத் தாக்கி ஏதேனும் சொன்னாலும் எழுதினாலும், அவ்வாறு கூறுபவர்களைக் காங்கிரஸ் திரும்பித் தாக்காது; தாக்கமுடியாது என்ற எண்ணத்தை காந்திஜீயே பரப்பிவிட்டார். காந்திஜீயே காங்கிரசைத் தாக்கினார். அவருடைய உதாரணத்தைக்கொண்டு, காங்கிரஸின் முக்கியஸ்தர்கள் பலர் பல ரகங்களில் காங்கிரசைத் தாக்கினார்கள்.

அநேகமாக நாம் காங்கிரஸில் தெளிவில்லாத சொற்களையும் கருத்துகளையும் உபயோகப்படுத்திக் கொண்டுவந்தோம். இதனால் நம்மைக் கண்டிக்கிறவர்களுக்கு ஒரு சந்தர்ப்பம் ஏற்பட்டு அவர்களுடைய தவறான வாதத்தையும் சமயோசித தன்மைகளையும் வெளிக் காண்பிக்கத் தலைப்பட்டார்கள். இருதரப்பாரும் உண்மையான பிரச்னைகளைப்பற்றியே வாதம் செய்யவில்லை. பகிரங்கமாக மனதை விட்டு ஒரு கட்சி மற்றொரு கட்சியைத் தாக்கி வாதம்பேசினால் பிரச்னை

தெளிவுபடலாம். மேனுடுகளில் அவ்வாறு நடப்பதைப் போல இந்தியாவில் நடைபெறவில்லை. இந்தியாவில் பாஸிஸ்டு மனப்பான்மை எங்கே இருந்ததோ, அங்கே இவ்வாறு கட்சிவாதம் நேர்ந்திருக்கலாம். நண்பர் ஒருவர்; அவருடைய அபிப்பிராயத்துக்கு நான் மதிப்பு வைத்திருந்தேன்; அந்த அம்மாள், "நீங்கள் பத்திரிகைகளில் வெளியிட்டு வரும் அறிவிப்புகளின் தொனி கடுமையாக இருப்பதைக் கண்டு நான் வியப்படைகிறேன். என்ன! பூனையைப்போல் சீறி விழுகின்றீர்களே? உங்களுடைய ஆசைகள் பூர்த்தியாகாமையால் இவ்வாறு சீறிவிழுகின்றீர்களா?" என்று எனக்கு எழுதியிருந்தார். நான் வியப்படைந்தேன். அவர் எழுதியதில் ஒருபகுதி உண்மைதான். ஏனென்ருல் நமது நாட்டார் சம்பந்தப்பட்ட வரையிலும் நம்முடைய ஆசைகள் எல்லாம் பூர்த்தியாகாமல் நாம் எல்லோரும் தான் ஆத்திரப்பட்டுச் சீறி விழுகின்ருேம். பொதுவான அந்த அனுபவம் சிறப்பாக அநேகமாக எல்லோரிடத்திலும் இருக்கலாம். ஆனுல் அத்தகைய உணர்ச்சி என்னிடம் இருப்பதாகவே எனக்குத் தெரியவில்லை. ஏனென்ருல் தோல்வி எண்ணமோ அல்லது அடக்கப்பட்டு விட்டதான எண்ணமோ என்னிடம் இல்லவே யில்லை.

என்றைக்கு நான் காந்திஜீயின் அரசியல் தொடர்பைப் பெற்றேனே, அன்றைக்கே நான் அவரிடமிருந்து ஒன்றைக் கற்றுக்கொண்டேன். ஏதோ நேர்ந்துவிடுமே என்ற அச்சத்தினுல், என்னுடைய கருத்துகளை அடக்கிக் கொள்ளக் கூடாது என்ற பாடத்தைக் கற்றுக்கொண்டேன். அரசியல் துறையில் நான் அந்த வழக்கத்தை கைக்கொண்டு அடிக்கடி துன்பத்தை அனுபவிக்க நேர்ந்தது. ஆனுல் அந்தத் துன்பத்தோடு இன்பமும் கலந்திருந்தது. அந்தப் பழக்கத்தினுல்தான் நம்மில் பலர் உண்மையான மனக் கசப்பிலிருந்தும் ஆசாபங்க உணர்ச்சியிலிருந்தும் தப்பித்துக் கொண்டிருக்கிருேம் என்று நான் நினைக்கிறேன். ஒருவரைப் பலர் நேசத்துடன் நோக்குகின்ருர்கள் என்ற எண்ணமே மிகுதியும் ஆறுதலை அளிக்கின்றது. அதுவே தோல்விக்கும் ஆசாபங்கத்துக்கும் வலிமையான மாற்ருக இருக்கின்றது. ஏனையோர்களால் மறக்கப்பட்டு, தனித்து வாழ்வதைப்போல பயங்கரமான நிகழ்ச்சி வேறு எதுவுமே இல்லையென்று நான் எண்ணுகிறேன். இந்த விசித்திரமான துயர்ப்

படும் உலகத்தில் ஆசாபங்க உணர்ச்சியில்லாமல் எவ்வாறு ஒருவன் தப்பித்துக்கொள்ள முடியும்? எல்லாம் தவருக நடப்பதாக எத்தனை சமயங்களில் நமக்குத் தோன்றுகிறது? நாம் பிடிவாதமாக காரியத்தைச் செய்துகொண்டு போனு லும் நம்மைச் சுற்றியிருக்கும் மனிதர்களின் தன்மைகளைக் கண்டு நாம் செய்யும் காரியம் சரிதானு என்ற சந்தேகங்கள் நம்மைத் தொளைத்து விடுகின்றன.

பல நிகழ்ச்சிகளையும், பல போக்குகளையும், சிலபேர் வழிகளையும், சில கூட்டங்களையும் கண்டு நான் அடிக்கடி ஆத்திரப்பட்டிருக்கிறேன். இப்பொழுது அந்த ஆத்திரம் அதிகமாக ஒருவித மனப்பான்மையின் பேரில், பெருகி வரு கின்றது. நாற்காலியில் சாய்ந்து கொண்டு வாழ்க்கையின் உண்மையான பிரச்னைகளில் கருத்தும் பொறுப்பும் செலுத் தாமல் வம்புபேசுகிருர்களே, அந்த மனப்பான்மையில் எனக்கு ஆத்திரம் உண்டாகின்றது. வாழ்க்கையின் ஜீவா தாரமான பிரச்னைகளைப்பற்றி பேச்சு எடுத்தால் ஒருவ ருடைய பணத்துக்கும் பரம்பரைக் கருத்துகளுக்கும் ஆபத்து வந்துவிடுமே என்ற காரணத்தினுல் அவைகளைப் பற்றிப் பேசுவது தகுதியல்ல என்று சொல்லுகிருர்களே அந்த மனப்பான்மையைக்கண்டு எனக்குக் கோபம் பொங்கி யெழுகின்றது. இவ்வளவு ஆத்திரமும் ஆசாபங்கமும் 'பூனைத்தன்மையும்' என்னிடமிருந்தாலும் என்னுடைய நகைச்சுவையை நான் இழந்துவிடவில்லை. என்னுடையதவறு களையும் ஏனையோர்களுடைய தவறுகளையும் கண்டு குலுங் கக் குலுங்கச் சிரிக்கும் வல்லமை இப்பொழுதும் என்னிடம் இருக்கின்றது. அதை நான் இழந்து விடவில்லை.

காருண்யம் கொண்ட ஆண்டவனிடம் ஜனங்க ளுக்கு இருக்கும் நம்பிக்கையைக்கண்டு நான் வியப்படை கின்றேன். அடுக்கடுக்காக திடுக்கிடும்படியாக நிகழ்ச்சி களும் ஆபத்துகளும் நேர்ந்தாலும், அவைகள் அந்த நம் பிக்கையின் சோதனைகளாகக் கருதப்படுகின்றன. ஜொார்டு ஹாப்பின்ஸ் எழுதிய பின்வரும் இன்பமயமான வரிக ளால் அநேக இதயகங்ளில் எழுச்சி உண்டாகும் என்ப தில் சந்தேகமில்லை: "ஆண்டவனே! தாங்கள் நேர்மையாளர் தான். நான் தங்களிடம் மனுப் பண்ணிக் கொள்ளுவதும் நியாயத்தைத் தழுவியதுதான். ஆனல் தெய்வமே! இந்த உலகில் பாபிகள் ஏன் நல்ல நிலையில் செழித்து வாழ்கிருர்

கள் ? நான் செய்ததெல்லாம் தோல்வியிலும் ஏமாற்றத்திலும் ஏன் முடியவேண்டும்? என்னுடைய அரிய நண்பரே! தாங்கள் என்னுடைய எதிரியாய் இருந்தாலும் இதைக் காட்டிலும் கேடான எதையும் எனக்கு செய்ய முடியாதே! தங்களைப்பற்றியே தங்களுடைய காரியத்திலேயே வாழ்நாளை முழுதையும் கழிக்கும் எனக்குத் தோல்வியா? பேராசைக்காரர்களும் முழுமூடர்களும் செழித்து வாழவேண்டுமா? அவர்கள் தங்களை அபூர்வமாகத்தானே நினைக்கிறார்கள்? இது என்ன தங்களுடைய நேர்மை ?''

அபிவிருத்தியில் நம்பிக்கை, இயக்கத்தில் நம்பிக்கை, லக்ஷியங்களில் நம்பிக்கை, மனித வர்க்கத்தின் நல்ல தனத்தில் நம்பிக்கை, மனித வர்க்கத்தின் நிறைவாழ்வுத் தலைவிதியில் நம்பிக்கை—இந்த நம்பிக்கைகள் யாவும் கடவுளிடம் கொள்ளும் நம்பிக்கை யினத்தோடு சேர்ந்தவைகளல்லவா ? விவேகத்தாலும் தர்க்க வாதத்தாலும் அவைகளுக்கு சமாதானம் கூற முயன்றால் உடனே நமக்குத் தொல்லைகள் உண்டாகிவிடுகின்றன. ஆனால் நமக்குள்ளே ஏதோ ஒன்று அந்த நம்பிக்கையை விடாப்பிடியாகப் பிடித்துக்கொண்டிருக்கிறது. அந்த நம்பிக்கை அழிந்து போகுமாகில் வாழ்க்கை நீர்ச்சுனையில்லாத பாலைவனமாக ஆகிவிடும்.

நான் அபேதவாதப் பிரசாரம் செய்யத் துவக்கியதும் அதைக்கண்டு எனது காரியக் கமிட்டித் தோழர்களில் சிலர் கலக்கமுற்றார்கள். இத்தகைய பிரசாரத்தை நான் சில ஆண்டுகளாக செய்து வந்திருந்த போதிலும் அவர்கள் முணுமுணுப்பின்றி என்னைப் பொறுத்துக் கொண்டிருந்தார்கள். ஆனால் இப்பொழுதோ நான் நாட்டிலிருக்கும் முதலாளிமார்களை ஓரளவு பயமுறுத்தும்படி நேர்ந்தது. என்னுடைய அலுவல்களை சாதுத்தனம் கொண்டவையென்று இனியும் கருத முடியாது. காரியக் கமிட்டித் தோழர்களில் சிலர் அபேதவாதிகளல்ல என்று எனக்குத் தெரியும். ஆனால் காங்கிரஸ் காரியக் கமிட்டி அங்கத்தினன் என்றமுறையில் காங்கிரஸை அதில் கொண்டு வந்து சம்பந்தப்படுத்தாமல் அபேதவாதப் பிரசாரம் செய்வதற்கு எனக்கு பூரணமான உரிமையுண்டு என்று நான் எப்பொழுதும் எண்ணியிருந்தேன்.

இத்தகைய உரிமை எனக்கு இல்லையென்று காரியக் கமிட்டி அங்கத்தினர்கள் சிலர் கருதியதாக எனக்குத்

தெரியவந்ததும் அது எதிர்பாராத சங்கதியாக இருந்தது. நான் அவர்களைத் தவருன நிலைமையில் இது வரையில் வைத்துவிட்டதால் அவர்கள் என் பிரசாரத்தைக் கண்டு ஆத்திரமடைந்தார்கள். ஆனல் நான் என்ன செய்வது? என்னுடைய வாழ்நாள் வேலையில் சிறப்பானதென்று நான் மதிக்கும் ஒன்றை என்னல் விட்டுவிட முடியாது. என்னுடைய காரியக் கமிட்டிப் பதவியும் பிரசார வேலையும் முரண்கொண்டவையாயின் நான் காரியக் கமிட்டியிலிருந்து விலகிக்கொள்ளத் தயாராயிருந்தேன். கமிட்டியே சட்ட வரம்புக்கு மீறியதென்று கருதப்பட்டு அது சரிவர வேலைசெய்யாமல் இருக்கும்பொழுது நான் எவ்வாறு ராஜிஞமா செய்ய முடியும்? இதே கஷ்டம் மீண்டும் எனக்கு வந்தது.

டிசம்பர் மாதக் கடைசி என்று நினைக்கிறேன். காந்திஜீ எனக்கு சென்னையிலிருந்து ஒரு கடிதம் எழுதினர். "மதராஸ் மெயில்" பத்திரிகைக்குத் தாம் கொடுத்த பேட்டி ஒன்றின் குறிப்பை பத்திரிகையிலிருந்து கத்தரித்து எனக்கு அனுப்பி யிருந்தார். பேட்டி கண்டவர் என்னைப்பற்றி காந்திஜீயிடம் கேள்வி கேட்டிருக்கிறர். காந்திஜீ என்னைப்பற்றி மன்னிப்பு கேட்டுக்கொள்ளுவது போல, நான் செய்து வரும் வேலைகளைப்பற்றி பதில் கூறியிருக்கிறர். எனது யோக்கியப் பொறுப்பில் தமக்கு நம்பிக்கை யுண்டென்றும், காங்கிரசை அபேதவாதம் முதலிய நூதனமான முறைகளில் கொண்டுபோய் நான் சிக்க வைக்க மாட்டேனென்றும் காந்திஜீ என்னைப்பற்றிக் குறிப்பிட்டிருக்கிறர். காந்திஜீ இவ்வாறு என்னைப்பற்றி குறிப்பிட்டிருப்பது எனக்குப் பிடிக்கவில்லை. ஆனல் எனக்கு மிகுதியும் மனக்கலக்கம் உண்டாக்கியது வேறென்று. அந்தப் பேட்டியில் காந்திஜீ ஜமீன்தாரித் திட்டத்தை ஆதரித்துப் பேசியிருப்பது எனக்குப் பிடிக்கவே இல்லை.

ஜமீன்தாரித் திட்டம் கிராம வாழ்க்கைக்கும் தேசத்தின் பொருளாதார முற்போக்குக்கும் மிகவும் தோதானதென்று அவர் நினைத்துக்கொண்டிருந்ததாகத் தோன்றிற்று. இது எனக்கு மிகுந்த வியப்பாக இருந்தது. ஏனென்றல், பெரிய ஜமீன்தார்களையும் தாலுக்தார்களையும் இந்தக் காலத்தில் ஆதரித்துப் பேசுபவர்கள் அநேகமாக இல்லையென்று சொல்லலாம். உலக முழுதிலும் இந்தக்கூட்டத்தார் கலைக்கப்பட்டு சிதறிப் போய் விட்டார்கள். இந்தியாவிலும் அந்தக்

கூட்டம் நீண்டகாலம் நிலைத்திருக்க முடியாதென்று பெரும் பான்மையோர் உணர்கின்றார்கள். தாலுக்தார்களும் ஜமீன் தார்களும்கூட, தங்களுக்குப் போதுமான நஷ்டஈடு கொடுத்துவிட்டால், இந்தத் தொல்லையான ஜமீன்தாரித் திட்டத்தை ஒழித்து விடுவதற்குச் சம்மதிப்பார்கள். தன்னுடைய சொந்தக் கேட்டினாலேயே அந்தத் திட்டம் முழுகிப் போய்க்கொண்டு வருகின்றது. இருந்தாலும் காந்திஜீ அந்தத் திட்டத்துக்கு சாதகமாயிருக்கிறார். ஜமீன்தார்கள் பொதுஜனங்களின் தர்மகர்த்தர்கள் என்று இந்த மாதிரி தோரணையில் காந்திஜீ பேசுகிறார். என்னுடைய மனப்பான்மை அவருடைய நோக்கிலிருந்து எவ்வளவு மாறுபட்டது என்று மீண்டும் சிந்தனை செய்யலானேன். எதிர்காலத்தில் அவரோடு நான் எவ்வளவு வரையிலும் ஒத்துழைக்க முடியுமென்று சந்தேகம் உண்டாயிற்று. காரியக் கமிட்டியில் இனியும் நான் அங்கத்தினனாக இருப்பதா? அப்பொழுது ஒரு வழியும் புலப்படவில்லை. இன்னும் சில வாரங்கள் கழித்து, அந்தக் கேள்வியே பொருத்தமில்லாமற் போய்விட்டது. ஏனென்றால் மீண்டும் நான் சிறைக்குப் போய்விட்டேன்.

என்னுடைய குடும்ப அலுவல்களில் என்னுடைய நேரத்தை அதிகமாக செலவழிக்க நேர்ந்தது. என்னுடைய தாயார் கொஞ்சம் கொஞ்சமாக குணமடைந்து வந்தார். அவர் இன்னும் படுத்த படுக்கையிலேதான் இருந்தார். ஆனால் ஆபத்தினின்றும் தப்பி விட்டதாகத் தோன்றிற்று. என்னுடைய செல்வ நிலையைப்பற்றி கொஞ்சம் கவனித்தேன். வெகு காலமாக அதைப்பற்றி கவனிக்கவே இல்லையாதலால், அது ஏகப்பட்ட குழப்பத்திலிருந்தது. எங்களுடைய சக்தியை மீறி நாங்கள் செலவழித்துக்கொண்டு வந்திருக்கிறோம். எங்களுடைய செலவைக் குறைப்பதற்கு தெளிவான வழியும் தோன்றவில்லை. வரவுக்கும் செலவுக்கும் சரிக்கட்ட வேண்டும் என்ற கவலையே எனக்குக் கிடையாது. என் கையிலே ஒரு சல்லி கூட இல்லாத காலம் வந்து விடுமோ எனச் சிந்தித்துக் கொண்டிருந்தேன். போகும் காலத்தை ஆனந்தமாக எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்.

இந்த நவநாகரிக உலகில் பணமும் உடமைகளும் மிகவும் உபயோகமானவைதான். ஆனால், அவைகள் லட்சியத்தை அடைய முனைந்து நிற்கும் ஒருவனுக்கு வழித்

தடைகளாகி விடுகின்றன. ஆபத்தைக் கொடுக்கும்படியான முயற்சிகளில் தனவந்தர்கள் கலந்து கொள்ளுவது மிகவும் கஷ்டமாகும். தங்களுடைய உடமைகளும் சொத்தும் போய்விடுமோ என்று அவர்கள் எப்பொழுதும் பயப்பட்டுக் கொண்டேயிருக்கிறார்கள். நினைத்த மாத்திரத்தில் அரசாங்கம் பறிமுதல் செய்யக் கூடுமானால், அந்தப் பணமும் சொத்தும் இருந்து பயன் என்ன? ஆகவே என்னிடமிருந்த சிறிய பணத்தையும் சீக்கிரத்தில் ஒழித்து விட வேண்டுமென்று விரும்பினேன். எங்களுடைய தேவைகள் மிகவும் குறைவானவை; போதுமான அளவு என்னால் சம்பாதிக்க முடியும் என்ற நம்பிக்கையும் எனக்கு உண்டு. என்னுடைய முக்கியமான கவலையெல்லாம் என்னுடைய தாயாரைப் பற்றித்தான். அவருடைய முதுமைப் பருவத்தில் அவருக்கு யாதொரு அசௌகரியமும் நேரக்கூடாது. அவர் வாழ்ந்து வந்துள்ள தரத்திலிருந்து கீழே இறங்கி வர நான் விரும்பவும் இல்லை. என்னுடைய மகளின் படிப்பு விஷயமும் தகராறு படக்கூடாது என்ற கவலை எனக்கிருந்தது. அவளுக்கு கல்வி பென்றால் அவள் ஐரோப்பாவில் போய் வசித்துப் படிக்க வேண்டும் என்பது என் கருத்து. இதைத் தவிர எனக்கும் என் மனைவிக்கும் சிறப்பாக பணம் தேவையே இல்லை. பணமுடை எங்களுக்கு ஏற்படாததினால் தேவையில்லை என்று நாங்கள் எண்ணியிருக்கவும் கூடும். பணமுடை நேரும் காலம் வருமாகில் அதைப் பற்றி நாங்கள் மகிழ்வுடன் இருக்கமாட்டோம் என்பது நிச்சயம். ஒருவிஷயத்தில் மட்டும் நான் ரொம்ப ஊதாரி. அந்தப் பழக்கத்தை விட்டுவிட முடியாது. புஸ்தகங்கள் வாங்குவதை நிறுத்தவே முடியாது.

தற்போதைய பொருளாதார நிலைமையைச் சீர்திருத்தம் செய்வதற்காக என்னுடைய மனைவியின் நகைகளையும், எங்களிடம் இருந்த வெள்ளி சாமான்களையும், மற்ற சாமான்களையும் வண்டி வண்டியாய்க் கிடந்த தட்டுமுட்டு சாமான்களையும் விற்பதென்று தீர்மானித்தோம். கமலா சுமார் பன்னிரண்டு வருஷங்களாக தன்னுடைய நகைகளை அணிந்து கொள்ளவேயில்லை. அவைகள் பாங்கியில் இருந்தன. தன்னுடைய நகைகளை விற்பதில் கமலாவுக்கு விருப்பம் இல்லை. அவைகளை எங்களுடைய மகளுக்கு அப்படியே கொடுத்து விடவேண்டும் என்பது அவளுடைய ஆசை.

1934-ம் வருஷம் ஜனவரி மாதம் அலகபாத் ஜில்லாவின் கிராமங்களில் நமது ஊழியர்கள் விடாமல் கைதுசெய்யப்பட்டார்கள். அவர்களுடைய பிரசாரம் சாதுவான பிரசாரம். அவர்கள் கைது செய்யப்பட்டதால் நாங்களும் அந்த கிராமங்களுக்குச் சென்று அவர்களுடன் கைது செய்யப்படவேண்டும் என்பது கடமையாகத் தோன்றிற்று. ஐக்கிய மாகாண காங்கிரஸ் கமிட்டியின் மிகத் திறமை வாய்ந்த காரியதரிசி ராபி அகமது கித்வாய் அவர்களும் கைது செய்யப்பட்டார். ஜனவரி மாதம் 26-ந் தேதி சுதந்திர தினம் வந்து கொண்டிருந்தது. அதைக் கொண்டாடாமல் நிறுத்த முடியாது. எத்தனையோ அவசரச் சட்டங்கள் இருந்தாலும், தடைகள் ஏற்பட்டாலும் 1930-ம் வருடம் முதல் சுதந்திர தினத்தை நாடுமுழுவதும் அநேகமாக விடாமல் கொண்டாடிக்கொண்டு வந்திருக்கிறார்கள். ஆனால் இந்த ஆண்டில் யார் தாக்கீது அனுப்புவது? எத்தகைய தாக்கீது அனுப்புவது? அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் உத்தியோகஸ்தராகப் பெயரளவிலே கூட வேலை செய்துவந்த யாரும் என்னைத் தவிர இல்லை. சில நண்பர்களைக் கலந்து யோசித்தேன்; ஏதேனும் ஒன்று செய்யத் தான் வேண்டும் என்று எல்லோரும் ஒப்புக்கொண்டார்கள். ஆனால் இந்த ஒன்று எப்படி இருக்கவேண்டும் என்பதைப்பற்றி எங்களுக்குள் ஒற்றுமை ஏற்படவில்லை. பெருவாரியாக கைது செய்யக் கூடிய நிலைக்குக்கொண்டு போய்விடும் எந்த வேலையையும் செய்யக்கூடாது என்று பொதுவாக எண்ணமிருந்ததை நான் கண்டுகொண்டேன். கடைசியாக சுதந்திர தினத்தைத் தக்க முறையில் கொண்டாட வேண்டுமென்று சுருக்கமாக மனு ஒன்றை வெளியிட்டேன். எப்படிக் கொண்டாட வேண்டும் என்ற தோரணையை அந்தந்த இலாகா தானே தீர்மானித்துக் கொள்ளவேண்டும் என்று குறிப்பிட்டிருந்தேன். அலகபாத் ஜில்லா முழுதும் இந்த நாளை விரிவாகக் கொண்டாட வேண்டும் என்று திட்டம் போட்டிருந்தோம்.

சுதந்திர நாளைக் கொண்டாடத் தூண்டுபவர்கள் அன்றைக்கே கைது செய்யப்படுவார்கள் என்று நாங்கள் கருதினோம். மீண்டும் நான் சிறைக்குச் செல்லுமுன் வங்காளத்துக்கு ஒரு முறை போகவேண்டுமென்று விரும்பினேன். பழைய நண்பர்களை அங்கே சந்திக்க வேண்டுமென்பதாக ஒருபுறம் ஆசை. ஆனால் சென்ற சில ஆண்டுகளாக, அவர்

கள் அனுபவித்து வந்த அசாதாரணமான கஷ்டங்களுக்கு வங்காளிகளை வணங்கும் முறையில் என்னுடைய வங்காளப் பிரயாணம் இருக்க வேண்டுமென்பது தான் என்னுடைய உண்மையான எண்ணமாகும். அவர்களுக்கு உதவி செய்ய என்னால் ஒன்றுமே முடியாதென்று எனக்கு நன்றாகத் தெரியும். அனுதாபத்தாலும் உடனுணர்வாலும் என்ன புண்ணியம்? இருந்தாலும், அவைகள் பல சமயங்களில் தேவையாயிருக்கின்றன. வங்காளத்திலே ஒருவித உணர்ச்சி பரவிக்கொண்டே இருந்தது. ஆபத்துக் காலத்தில், இந்தியாவின் மற்றைய மாகாணங்கள் வங்காளத்தைக் கைவிட்டு விட்டதாக வங்காளிகளுக்குள் மனக் கசப்பான எண்ணம் இருந்து வந்தது. அந்த உணர்ச்சிக்கு ஆதாரம் இல்லை; இருந்தாலும் அந்த உணர்ச்சி வங்காளிகளிடம் இருந்தது.

கமலாவின் சிகிச்சையைப்பற்றி எங்களுடைய வைத்தியர்களிடம் கலந்து யோசிப்பதற்காக நான் கல்கத்தாவுக்குப் போகவேண்டியது அவசியமாகும். அவளுக்கு உடம்பு சரியாயில்லை. இப்பொழுது சிகிச்சை செய்ய ஆரம்பித்தால் கல்கத்தாவிலோ வேறு எங்கேயோ நீண்டகாலம் வசிக்கவேண்டி வருமே என்ற காரணத்தைக் கொண்டு கமலாவின் சுகமின்மைக்கு சிகிச்சை செய்வதைக் கவனிக்காமல் ஒத்திப்போட்டுக்கொண்டே வந்தோம். நான் சிறையை விட்டு வெளியே இருக்கும் சிறிது காலம் பூராவும் நாங்கள் இருவரும் சேர்ந்தே ஒரு நிமிஷம் கூடப் பிரியாமல் இருக்கவேண்டுமென்பது எங்களுடைய ஆசையாகும். நான் மீண்டும் சிறைக்குப் போய்விட்டால் சிகிச்சைக்கும் டாக்டர்களுக்கும் போதுமான காலம் அவளுக்கு இருக்கும் என்று நான் எண்ணினேன். விரைவில் கைதியாவேன் என்று தோன்றியதால் நான் அவளைக் கல்கத்தாவுக்கு அழைத்துக் கொண்டு போய் என் முன்னாலேயே டாக்டர் அவளைச் சோதித்து யோசனை சொல்லலாமே என்று தீர்மானம் கொண்டேன். மற்றைய சிகிச்சை காரியங்களைப் பின்பு பார்த்துக்கொள்ளலாம் என்பது என் எண்ணம். ஜனவரி மாதம் 15-ம் தேதி கமலாவும் நானும் கல்கத்தாவுக்குப் போவதென்று தீர்மானம் செய்தோம். நம்முடைய சுதந்திர தினக் கூட்டங்களுக்கு சரியான காலத்தில் திரும்பி வந்துவிட வேண்டுமென்பது எங்களுடைய விருப்பமாகும்.

## LVIII

### பூகம்பம்

1934-ம் வருஷம் ஜனவரி மாதம் 15-ம் தேதி பிற்பகல் அலகபாத்தில் எங்களுடைய வீட்டின் தாழ்வாரத்தில் நின்று கொண்டு விவசாயிகளின் கூட்டத்தில் பிரசங்கம் செய்து கொண்டிருந்தேன். வருஷாந்திர மாகமேளா துவக்கி விட்டது. நாள் முழுதும் மாகாணத்தின் பலவேறு பகுதிகளி லிருந்து ஏராளமான ஜனங்கள் வீட்டுக்கு வந்துகொண்டே இருந்தார்கள். திடீரென்று என்னுடைய கால்கள் தட தட வென்று ஆட ஆரம்பித்தன. நான் நின்றுகொள்ள முடி யாமல்போய் நிதானம் தவறி விடுவேனோ என்று எண்ணி னேன். பக்கத்திலிருந்த தூணைப் பிடித்துக் கொண்டேன். கதவுகள் படீர் படீரென்று அடித்துக் கொண்டன. பக்கத்தி லிருந்த சுயராஜ்ய பவனத்திலிருந்து முணுமுணுப்பதுபோல சத்தம் கேட்டது. கூரையிலிருந்து ஓடுகள் மெதுவாக நகர்ந்து கொண்டே வந்தன. பூகம்பப் பழக்கம் எனக்குக் கிடையாது. ஆகையால் என்ன நேருகிறதென்று முதலில் எனக்குத் தெரியவில்லை. ஆனால் விரைவில் தெரிந்து கொண் டேன்.

இந்தப் புதிய அனுபவத்தைக் கண்டு வினோதப்பட்டு அதிலே எனக்கு ஒரு வகை சிரத்தை உண்டாயிற்று. குடி யானவர்களிடம் பேசிக் கொண்டிருந்ததை நிறுத்தாமல் பேசிக்கொண்டு அவர்களுக்கு பூகம்பத்தைப்பற்றி சொல்லத் துவக்கினேன். கொஞ்ச தூரத்திலிருந்து என்னுடைய வயது சென்ற அத்தை என்னைக் கூப்பிட்டு "கட்டிடத்தை விட்டு வெளியே ஓடி வா" என்று சத்தம் போட்டார். அவர் சொன்ன யோசனை எனக்கு அபத்தமாகப்பட்டது. பூகம் பத்தை ஒரு பொருட்டாக எண்ணவில்லை. அப்படியே எண்ணினாலும் படுக்கையிலிருக்கிற என்னுடைய தாயாரை யும், சாமான்களைப் பிரயாணத்துக்காக மூட்டை கட்டிக் கொண்டிருக்கும் என்னுடைய மனைவியையும் மேல் மாடி

யில் விட்டுவிட்டு என்னுடைய பத்திரத்தை மாத்திரம் தேடிக் கொள்ளுவதற்காக நான் வெளியே ஓட்டம் எடுப்பேனு?

பூகம்பம் சிறிதுநேரத்திற்கு இருந்தது; பிறகு நின்றுவிட்டது. பூகம்பத்தால் இரண்டொரு நிமிஷங்களுக்கு பேச்சு மாறிப்போயிற்று. பின்னர் அதைப்பற்றியே எங்களுக்கு நினைவில்லை. இந்த இரண்டு மூன்று நிமிஷ ஆட்டத்தினுல் பீஹாரிலும் மற்ற இடங்களிலும் கோடிக்கணக்கானவர்களுக்கு எவ்வளவு சேதம் என்று எங்களுக்கு அப்பொழுது தெரியாது; ஊகிக்கவும்கூட இல்லை. அன்றைய மாலையில் கமலாவும் நானும் கல்கத்தாவுக்குப்போனேம். பூகம்பம் நேர்ந்த தென் பகுதிப் பிராந்தியத்தின் வழியாக நாங்கள் அன்றிரவு ரெயிலில் சென்றேம் என்பதே எங்களுக்குத் தெரியாது. தென் பகுதி பூகம்ப விபத்தைப் பற்றி கல்கத்தாவில் மறுநாள் சிறு செய்தி கூடக் கிடையாது. அதற்கு மறுநாள் கொஞ்சம் கொஞ்சமாக செய்திகள் வந்து சேர்ந்தன. மூன்றும் நாள் எவ்வளவு விபத்து நேர்ந்தது என்பதைப்பற்றி ஓரளவு எங்களுக்குத் தெரிந்தது.

நாங்கள் எங்களுடைய கல்கத்தா அலுவல்களில் சுறுசுறுப்பா யிருந்தோம். அநேக டாக்டர்களைத் திருப்பித் திருப்பிப் பார்க்க வேண்டியதாயிற்று. இரண்டொரு மாதம் கழித்து சிகிச்சைக்காக கமலா கல்கத்தாவுக்குத் திரும்பி வர வேண்டுமென்று கடைசியாகத் தீர்மானம் செய்யப்பட்டது. நீண்ட காலமாக சந்திக்காத நண்பர்களையும், காங்கிரஸ் தோழர்களையும் பார்க்கவேண்டி யிருந்தது. அடக்கமுடியாத துயரம் எனக்கு உண்டாயிற்று. எதைச்செய்தாலும் ஆபத்து வருமோ என்று ஜனங்கள் நடுநடுங்கிப் போயிருந்ததாகத் தோன்றிற்று. அவர்கள் எத்தனையோ துன்பங்களை அனுபவித்திருக்கிறுர்கள். கல்கத்தாவில் பிரசுரமாகும் பத்திரிகைகள் இந்தியாவின் வேறு பகுதிப் பத்திரிகைகளைக் காட்டிலும் மிகவும் எச்சரிக்கையாக இருந்தன. இந்தியாவின் ஏனைய பகுதிகளில் இருப்பது போலவே, இங்கேயும் எதிர்கால வேலையைப்பற்றி சந்தேகமும் குழப்பமும் இருந்தது.

இந்தச் சந்தேகத்தினுல் பயன் தரக்கூடிய அரசியல் வேலையைச் செய்ய முடியவில்லை; அதிகமான அச்சத்தினுல் அல்ல. பாஸிஸ்டுப் போக்குகள், அபேதவாதப் பொது உட

மைப்போக்குகள் எல்லாம் காணப்பட்டன. எல்லாம் "மோகமாய்" இருந்தன. ஒன்றுடன் ஒன்று விநோதமாகப் போராடிக் கொண்டிருந்தன. இந்தக் கூட்டங்களுக்கிடையே தெளிவான எல்லைகளைக் கோலுவது கஷ்டம். பயங்கரப் புரட்சி இயக்கத்தைப்பற்றி அதிகமாகத் தெரிந்துகொள்ள எனக்கு நேரமும் சந்தர்ப்பமும் கிடைக்கவில்லை. இதைப் பற்றி அதிகாரிகள்தான் அதிகமாகக் கவனம் செலுத்தி, விளம்பரம் செய்துகொண்டிருக்கிறார்கள். எனக்குத் தெரிந்த வரையிலும், பயங்கர இயக்கத்துக்கு அதிக வலுவிருந்ததாகத் தெரியவில்லை. இந்தக் கூட்டங்களின் பழைய அங்கத்தினர்கள் அந்த இயக்கத்தில் நம்பிக்கையை இழந்து விட்டார்கள்.

அவர்கள் வேறு முறைகளில் யோசிக்கலானார்கள். வங்காளத்தில் அரசாங்கம் செய்த வேலையால் தனி நபர்களுக்கு ஆத்திரம் உண்டாகி, அவர்கள் அரசாங்கத்தின்பேரில் கட்டுக்கடங்காத பகைமை கொண்டதாகத் தோன்றிற்று. உண்மையிலேயே, இரு தரப்பிலும் இந்தப் பகைமை பழுத்து நின்றதாகத் தோன்றிற்று. பயங்கரப் புரட்சிக்காரர்கள் சம்பந்தப்பட்ட வரையிலும், இந்தப் பகைமை தெளிவாக விருந்தது. அரசாங்கத் தரப்பிலோ பயங்கரப் புரட்சிக்காரர்களை அடியோடு ஒழிக்க வேண்டும் என்ற பகைமை உணர்ச்சி வேரூன்றியிருந்ததாகக் காணப்பட்டது. பயங்கரப் புரட்சி இயக்கம், ஜன சமுதாய வளர்ச்சிக்கு விரோதம் என்ற உணர்ச்சியைக் கொண்டு அந்த நிகழ்ச்சிக்கு பரிகாரம் தேடி, அதை ஒழிக்க அவர்கள் முயலவே இல்லை. பயங்கரச் செயல்கள் தோன்றினால், அவைகளை எதிர்த்து அடக்க எந்த அரசாங்கமும் கடமைப்பட்டிருக்கிறது. ஆனால், நிதானத்தோடு நிலைமையை நிர்வாகம் செய்வதுதான் அரசாங்கத்தின் கௌரவத்துக்குப் பொருத்தமானதாகும்.

யாதொரு பாகுபாடுமில்லாமல் நிரபராதிகள், குற்றவாளிகள் இருவர்களையும் சேர்த்துத் தண்டிப்பது தகாத காரியம். ஏனென்றால் குற்றவாளிகளைக் காட்டிலும் நிரபராதிகள் தான் பெரும்பான்மையாக இருப்பவர்கள். பயங்கரப் புரட்சி செயல்களைக் கண்டு, நிதானத்துடன் இருப்பது எளிதாக இல்லாமலிருக்கலாம். பயங்கரச் செயல்கள் அரிதாகிக் கொண்டு வந்தன. ஆனால் அவைகள் மீண்டும் தோன்றமோ.

என்ற சந்தேகம் ஒழிந்தபாடில்லை. ஆகவே இந்தச் செயல்களை அடக்க வேண்டிய பொறுப்புகொண்டவர்களின் நிதானம் இதனால் கலங்கிப் போவது இயல்புதான். பயங்கரச் செயல்கள் என்பன ஒருவித வியாதியல்ல. அவைகள் வியாதியின் குறிகளாகும். வியாதிக்கு சிகிச்சையைத் தேடாமல் வியாதியின் தோற்றங்களுக்குச் சிகிச்சை தேடுவது வீணான வேலையாகும்.

பயங்கரப் புரட்சிக்காரர்களோடு இளைஞர்களும் சிறுமிகளும், யுவதிகளும் ஏன் கலந்துகொள்ளுகிறார்கள் என்றால் அவர்கள் இரகசிய வேலையில் ஒருவித மோகத்தால் இழுக்கப்படுகிறார்கள் என்று நான் நம்புகிறேன். இளவயது உடையவர்களுக்கு இரகசியமும் ஆபத்தும் எப்பொழுதுமே பிடித்தமானது. பயங்கரப் புரட்சிக்காரர்கள் யாவர் என்றும், அந்த இயக்கத்தை யார் நடத்தி வருகிறார்கள் என்றும் இவர்களைப்பற்றி ஏன் கூக்குரல் இடுகிறார்கள் என்றும் தெரிந்துகொள்ள அவர்களுக்கு ரொம்பவும் விருப்பம். துப்பறியும் நாவலில் இருக்கும் ருசிதான் இது. இந்த இளைஞர்களுக்கு எதையும் செய்யவிருப்பமே கிடையாது. நிச்சயமாக பயங்கரச் செயலைச் செய்வதற்கு விருப்பமே கிடையாது. ஆனால் போலீசார் யாரைச் சந்தேகிக்கிறார்களோ அவர்களோடு இவர்கள் பழகினால் இவர்களும் சந்தேகத்துக்கு ஆளாகி விடுகிறார்கள். விரைவில் அவர்கள் விசாரணையில்லாமல் காவலிலிருக்கும் கோஷ்டியைச் சேர்ந்துவிடுகிறார்கள். இதைக் காட்டிலும் கேவலமான முடிவும் அவர்களுக்கு ஏற்படலாம்.

இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின் அணிகலன்கள் சட்டமும் அமைதியும் என்று சொல்லப்படுகிறது. அவைகள் இரண்டும் தேவை என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். வாழ்க்கையில் கட்டுப்பாட்டை நான் விரும்புகிறேன். வாழ்க்கையில் அராஜகமும், குழப்பமும், திறமைக்குறைவும் எனக்குப் பிடிப்பதே இல்லை; ஆனால் அரசாங்கங்கள் ஜனங்களின் பேரில் கட்டாயப்படுத்தி வைத்திருக்கும் சட்டம், அமைதி என்பவைகளின் மதிப்பை உணர முடியாதபடிக்கு மிகவும் கேவலமான அனுபவத்தை இந்தியாவிலும் வேறுநாடுகளிலும் கண்டு விட்டேன். அவைகளுக்காக பொதுமக்கள் கொடுக்கும் விலை அக்கிரமமானதாகும். சட்டம் என்றால்

ஆளுபவர்களின் இச்சை என்று ஆகி விட்டது. ஜனங்களுக்குள் பரவி நிற்கும் அச்சமே அமைதியாக உருமாறியிருக்கிறது. சட்டமும் அமைதியும் என்பன சில சமயங்களில் சட்டமின்மையும் ஒழுங்கீனமும்போலத் தோன்றுகின்றன. ஜன சமூகத்தில் பரவி நிற்கும் பயத்தைக் கொண்டு சித்திசெய்துகொள்ளும் எந்தக் காரியமும் விரும்பத்தக்கதல்ல.

அரசாங்கத்தின் அடக்குமுறை யந்திரத்தை அடிவனுவாகக்கொண்டு அந்த இயந்திரமில்லாமல் நிலைத்திருக்க முடியாத அமைதி இராணுவ அமுலுக்குசமானமானதாகும். அது சட்டத்தின் ஆளுகையல்ல. கவி கல்ஹணு அவர்கள் ஆயிர வருடங்களுக்குமுன் எழுதிய "ராஜதரங்கிணி" என்ற காஷ்மீர் இதிகாசத்தில், இரண்டு சொற்களை நான் அடிக்கடி காண்கின்றேன். தர்மம், அபயம். அதாவது அறம், அச்சமின்மை இந்த இரண்டு தன்மைகளையும் வளர்ப்பது தான் அரசனுடைய கடமையாகும். இவைகளைப் பாதுகாப்பதுதான் அரசாங்கத்தின் வேலையாகும். சட்டம் என்பது வெறும் சட்டத்தைக் காட்டிலும் உயர்ந்த ஒன்றாகும். அமைதி என்பது மக்களின் அச்சமின்மையாகும். பண்டைக்காலத்து இந்த அச்சமின்மைக் கருத்து எவ்வளவு விரும்பத்தக்கதாகும்? அதைப் பயிற்சி செய்யாமல் திகிலடைந்து கிடக்கும் மக்களிடையே அமைதியை நிலைநாட்டுவது உயர்ந்த வேலையா?

நாங்கள் கல்கத்தாவில் மூன்றரை நாட்கள் தங்கினோம். இந்தக் காலத்துக்குள் மூன்று கூட்டங்களில் பிரசங்கம் செய்தேன். கல்கத்தாவில் நான் ஏற்கனவே செய்ததுபோல பயங்கரச் செயல்களைக் கண்டித்து அவைகளுக்கு எதிர்க் கட்சியை எடுத்துரைத்தேன். பின்னர் வங்காளத்தில் அரசாங்கம் கையாளும் முறைகளைப்பற்றி குறிப்பிட்டேன். நான் உள்ள நிறைவோடு பேசினேன். ஏனென்றால் வங்காள மாகாணத்தில் நேர்ந்தவைகளின் வரலாற்றைக் கேட்டு நான் மிகுதியும் கரைந்து போனேன். நிதானமில்லாமல் பொது ஜனங்கள் யாவரையும் அடக்கின முயற்சியால் மனிதனுடைய கௌரவமே கவனிக்கப் படவில்லையென்பதைக் கண்டு நான் மிகவும் வருத்தப்பட்டேன். அரசியல் பிரச்னை மிகவும் அவசியமாகக் கவனிக்கப்பட

வேண்டிய பிரச்னைதான். ஆனால் மனிதனுக்கு இயல்பான கௌரவம் பாதிக்கப்படும் இந்தப் பிரச்னை தான் முக்கியமானதாகத் தோன்றிற்று. இந்த மூன்று பிரசங்கங்களின் பேரிலேதான் பின்னர் என்பேரில் கல்கத்தா விசாரணையில் குற்றம் சாட்டப்பட்டது. அந்தப் பிரசங்கங்களின் விளைவுதான் என்னுடைய தற்போதைய சிறைவாசம்.

கல்கத்தாவிலிருந்து நாங்கள் சாந்திநிகேதனுக்குச்சென்று கவிரவீந்திர நாத் தாகூருக்கு எங்களுடைய அன்பைத் தெரிவித்துக் கொண்டோம். அவரைச் சந்திப்பதில் எப்பொழுதுமே எனக்கு ஒரு ஆனந்தம். இவ்வளவு கிட்ட வந்து விட்டு அவரைப் பார்க்காமல் போக நாங்கள் விரும்பவில்லை. இதற்கு முன் நான் சாந்திநிகேதனுக்கு இரண்டு தடவை போயிருக்கிறேன். கமலாவுக்கு இதுதான் முதல் தடவை. எங்களுடைய மகளை அங்கே அனுப்புவதாக நாங்கள் யோசித்துக் கொண்டிருந்தமையால் அந்த இடத்தை நேரே கண்ணால் காணக் கமலா வந்தாள். இந்திரா விரைவில் மெட்ரிகுலேஷன் பரீக்ஷைக்குப்போக வேண்டியவள். அவளுடைய எதிர் காலக் கல்வியைப்பற்றி எங்களுக்குக் கவலை உண்டாயிற்று.

உத்தியோக மேற்பார்வையில் அல்லது பாதி உத்தியோக மேற்பார்வையில் நடந்துகொண்டிருக்கும் சர்வகலாசாலைகளில் அவளைச் சேர்க்கவே கூடாது என்பது என் எண்ணம். ஏனென்றால், இந்தப் பல்கலைக் கழகங்களில் எனக்கு மிகவும் வெறுப்பு. இந்தச் சர்வகலாசாலைகளில் வீசும் வாடை முழுதும் ஒரே உத்தியோக தர்பார்; அதிகார தோரணை; அடக்கு முறைத் தாண்டவம். இந்தச் சர்வகலாசாலைகளிலிருந்து நேர்த்தியானபடியாக பலர் வெளிவேறியிருக்கின்றனர். இத்தகைய பலர் எதிர்காலத்திலும் இவைகளால் ஆக்கப்படக் கூடும். ஆனால், யுவர்களின் நேர்த்தியான உணர்ச்சிகளை அடக்கி மறத்துப் போகும்படி இந்த பல்கலைக் கழகங்கள் செய்துவிடுகின்றன என்ற குற்றச்சாட்டிலிருந்து மேற்கூறிய உயர்ந்த சிலரைக் காண்பித்து இந்த அமைப்புகள் தப்பித்துக் கொள்ள முடியாது. இந்த மறத்தன்மையிலிருந்து சிறிது விதிவிலக்காக சாந்தி நிகேதன் அமைந்திருந்தது. ஏனைய சர்வ கலாசாலைகளைப் போல பூரண வசதிகள் பெற்றிராமல் இருந்தபோதிலும் கூட அங்கே அனுப்புவதென்று தீர்மானம் கொண்டோம்.

திரும்பு காலில்,, பூகம்ப நிவாரண வேலையைப்பற்றி ராஜேந்திர பாபுவோடு கலந்து பேசுவதற்காக பாட்னாவில் இறங்கினோம். அப்பொழுதுதான் அவர் சிறையிலிருந்து விடுதலை அடைந்திருக்கிறார். என்றாலும் உத்தியோகப்பற்றற்ற நிவாரண வேலையில் அவர்தான் தலைமை ஏற்றுக் கொள்ள வேண்டியதாயிற்று. எங்களுடைய வருகை எதிர் பார்க்கப்படவில்லை. ஏனென்றால் எங்களுடைய தந்திகள் எவையும் அவர்களுக்குப் போய்ச் சேரவில்லை. கமலாவின் சகோதரரோடு நாங்கள் தங்குவதாக எண்ணிக் கொண்டிருந்த வீடு பாழாக்கிக் கிடந்தது. அது இரண்டடுக்கு மெத்தை செங்கல் கட்டிட வீடாகும். ஆகவே ஏனையோர்களைப் போலவே நாங்களும் வெட்ட வெளியில் தங்கியிருந்தோம்.

அடுத்த நாள் நான் முஸபர்பூருக்குப் போனேன். பூகம்பம்நேர்ந்து சரியாக ஏழு நாள். முக்கியமான சில வீதிகளில் தவிர வேறு இடங்களிலிருந்து இடிந்து விழுந்திருந்த கல்மண்ணை நீக்குவதற்கு யாதொரு ஏற்பாடும் செய்யப்படவில்லை. இந்தத் தெருக்களைச் சுத்தம் செய்யும்பொழுது சவங்கள் வெளித்தோன்றின. இந்தச் சவங்கள் இருந்த நிலைமையைப் பார்த்தால் விநோதமாக இருந்தது. விழுகிற கூரையையோ, சுவரையோ விழாமல் தடுப்பதாக அந்த உருவங்கள் அந்த நிலையில் இருந்தன. பாழ்கள் பார்ப்பதற்கு பயங்கரமான காட்சியாய் இருந்தன. தப்பிப் பிழைத்தவர்கள் திகிலடைந்து போய்விட்டார்கள். அவர்களுடைய நரம்புகள் ஆட்டம் கண்டு போகும்படியான அனுபவங்களை அவர்கள் பார்த்து விட்டார்கள். அலகபாதுக்குத் திரும்பினதும் பணமும் சாமான்களும் சேகரிக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டன. காங்கிரஸ்காரர்களும் மற்றவர்களும் எல்லோரும் சேர்ந்து இந்த வேலையைச் சிரத்தையுடன் செய்தார்கள். பூகம்பம் நேர்ந்தமையால், சுதந்திர தினக் கொண்டாட்டங்களை நிறுத்திவைக்க வேண்டுமென்று என்னுடைய தோழர்களில் சிலர் அபிப்பிராயப்பட்டார்கள். ஆனால் பூகம்பம் எங்களுடைய திட்டத்துக்கு ஏன் குறுக்கிட வேண்டும் என்று ஏனைய தோழர்களுக்கும் எனக்கும் தெரியவில்லை.

ஆகவே ஜனவரி மாதம் 26-ந் தேதி அலகபாத் ஜில்லாவில் கிராமங்களில் பெருவாரியாகக் கூட்டங்களைக் கூட்டி

னேம். நகரத்திலும் கூட்டம் கூட்டினேம். நாங்கள் எதிர்பார்த்ததைக் காட்டிலும் அதிகமான வெற்றியுடன் கூட்டங்களை நடத்தினேம். போலீஸ்காரர்கள் தலையிட்டுக் கைது செய்வார்கள் என்று பலர் எதிர்பார்த்திருந்தனர். சிறிது அளவு போலீசார் தலையிடவும் செய்தார்கள். ஆனல் எங்களில் ஒருவரையும் கைது செய்யவில்லை. அது எங்களுக்கு மிகுதியும் வியப்பாய் இருந்தது. எங்களுடைய கிராமங்கள் சிலவற்றிலும் வேறு சில நகரங்களிலும் கைது செய்தார்கள்.

பீகாரிலிருந்து திரும்பி வந்ததும் பூகம்பத்தைப்பற்றி அறிக்கையொன்றை வெளியிட்டு, நிவாரண வேலைக்காக பணத்துக்கு மனுப் பண்ணிக் கொண்டேன். பூகம்பம் ஏற்பட்டு முதல் சில நாட்களில் பீகார் அரசாங்கம் ஒன்றுமே செய்யவில்லை யென்று இந்த அறிக்கையில் கண்டித்திருந்தேன். பூகம்பம் நேர்ந்த விடத்தில் இருந்த அதிகாரிகளைக் கண்டிப்பது என்னுடைய எண்ணமல்ல. கடின மனதுள்ளவர்களைக் கூட சோதிக்கும்படியான கஷ்டமான நிலைமையை அவர்கள் சமாளிக்க வேண்டியிருந்தது. என்னுடைய வார்த்தைகளுக்கு கண்டன அர்த்தம் உண்டு என்பதை தெரிந்து கொண்டு நான் வருத்தப்பட்டேன். ஆனல் மண் கல் முட்டுகளை நீக்கும் விஷயத்தில், பீகார் அரசாங்கத்தின் தலைமையதிகாரிகள் மிகவும் திறமை காண்பிக்கவில்லை என்று நான் எண்ணினேன். அந்த மேடுகளை அப்புறப்படுத்தியிருந்தால் அநேக உயிர்களைக் காப்பாற்றியிருக்கலாம்.

மாங்கீர் நகரில் மட்டும் ஆயிரக்கணக்கானவர்கள் கொல்லப்பட்டார்கள். மூன்று வாரம் கழித்து மண்மூட்டுகள் ஏராளமாக மாங்கீர் நகரில் இருப்பதைக் கண்டேன். அரசாங்கம் அதைத் தொடவே இல்லை. இரண்டொரு மைலுக்கப்பால், ஜமால்பூரில் பல ஆயிரக்கணக்கான ரெயில்வேத் தொழிலாளர்கள் வசித்து வருகிறுர்கள். ஆபத்து நேர்ந்த இரண்டொரு மணி நேரங்களுக்குள் இவர்களைக் கொண்டு வந்து இந்த வேலையைச் செய்யச் சொல்லி யிருக்கலாம். பூகம்பம் ஏற்பட்டு பன்னிரண்டு நாட்கள் கழித்துக் கூட, உயிரோடு மனிதர்கள் புதைந்து கிடந்த இடங்களிலிருந்து எடுக்கப்பட்டார்கள். அரசாங்கத்தார் சொத்தைப் பாதுகாக்க விரைவில் ஏற்பாடுகள் செய்தார்கள். ஆனல், புதைந்து கிடந்த ஜனங்களைக் காப்பாற்ற அவர்கள் விரைவில் யாதொரு

முயற்சியும் எடுத்துக் கொள்ளவில்லை. இந்தப் பிராந்தியங்களில் நகர சபைகள் அப்பொழுது வேலை செய்யவில்லை. என்னுடைய கண்டனம் ஆதாரமுள்ளது என்று நான் நினைக்கிறேன். பூகம்பம் நேர்ந்த பிராந்தியங்களில் பெரும்பான்மையோர் என்னுடைய அபிப்பிராயத்தை யேற்றார்கள் என்று எனக்கு பின்னர் தெரிந்தது. கண்டனத்துக்கு ஆதாரம் இருந்ததோ, இல்லையோ அது யோக்கியப் பொறுப்புடன் செய்யப்பட்டது. அரசாங்கத்தைப் பழி கூறும் நோக்கத்தோடு செய்யப்படவில்லை. ஆனல் நிவாரண வேலையில் அவர்களைத் தூண்டுவதற்காக இது சம்பந்தமாக வேண்டுமென்றே சில அநியாயங்களைச் செய்தார்கள் அல்லது சில காரியங்களைச்செய்யத் தவறிவிட்டார்கள் என்று அவர்கள் பேரில் யாரும் குற்றம் சாட்டவில்லை. நிலைமை புதிதும் பயங்கரமானதுமாகும். எனவே, தவறுகள் மன்னிக்கக் கூடியவை. எனக்குத் தெரிந்த அளவில், (நான் சிறையிலிருந்தேன்) பீகார் அரசாங்கத்தார் பூகம்பத்தின் சேதங்களைச் செப்பனிட, ஊக்கத்துடனும் திறமையுடனும் பின்னர் வேலை செய்தார்கள்.

ஆனல் என்னுடைய கண்டனத்தைக் கண்டு, அரசாங்கத்தார் ஆத்திரப்பட்டார்கள். விரைவில் என்னுடைய கண்டனத்துக்கு மாற்ருக, அரசாங்கத்தாரை ஆதரித்து பீகாரில் சிலர் அவர்களுக்கு நற்காட்சிப் பத்திரம் அளித்தார்கள். பூகம்பமும் அது சம்பந்தமான வேலைகளும் இரண்டாந்தரமான விஷயங்களாகி விட்டன. அரசாங்கத்தைக் கண்டித்த விஷயம் முக்கியமானதல்லவா? எனவே ராஜபக்தி நிறைந்த குடிமக்கள் அந்த அரசாங்கத்தை ஆதரிக்கத்தானே வேண்டும்? இந்தியாவில் இந்த நிகழ்ச்சி வெகு சாதாரணமாக ஆகிவிட்டது. அரசாங்கத்தைக் கண்டிப்பது என்பது கூடாதே! ஆனல் மேனுடுகளில் அரசாங்கத்தைக் கண்டிப்பது வெகு சாதாரணம். இந்தியாவில் ராணுவ அமுல் மனப்பான்மை நிலவி வந்ததால், அரசாங்கத்தைப்பற்றிய எத்தகைய விமரிசனத்தையும் அது பொறுத்துக் கொண்டிருக்க முடியவில்லை. அரசன் தவறு செய்ய மாட்டான் என்பது பழமொழி. மன்னனைப் போலவே இந்தியாவிலிருக்கும் பிரிட்டிஷ் ஆட்சியும் அதன் உயர்தர உத்தியோகஸ்தர்களும் யாதொரு தவறும் செய்ய மாட்டார்களாம்! தவறு செய்வார்கள் என்று குறிப்பிடுவது ராஜத் துரோகமாகும்.

கொடுங்கோல் என்று குற்றம் சாட்டினுல் அதற்காக அரசாங்கத்தார் அதிகமாக ஆத்திரப்படுவதில்லை. ஆனுல் நிர்வாகத் திறமை போதாது என்று சொன்னுல் அவர்களுக்கு உடனே ஆத்திரம் வருகிறதுதான் விநோதமாகும். கொடுங்கோல் ஆட்சியென்று சொன்னுல் அதற்காக ஒருவனுக்கு சிறைவாசம் நேரலாம். ஆனுல் அரசாங்கம் அதற்கு வழக்கப்பட்டும் போய்விட்டது. அதைப்பற்றி உண்மையிலேயே கவலைப்படுவதில்லை. சாம்ராஜ்யக் கூட்டத்தார்களுக்கு கொடுங்கோல் என்ருலே அது ஒரு வகையில் பாராட்டாகக் கூடக் கருதப்படலாம். ஆனுல் திறமையும் நரம்பு அழுத்தமும் போதவில்லை யென்ருல் அது சுருக்கென்று தைக்கிறது. ஏனெனின் இது அவர்களுடைய தற்பெருமையை அடியோடு வெட்டுவதாக ஏற்படுகிறதல்லவா? தாங்கள் இந்தியாவைக் காப்பாற்ற வந்திருக்கிருர்கள் என்று இங்கிலீஷ் அதிகாரிகள் எண்ணிக்கொண்டிருக்கிற எண்ணமே கலைக்கப்பட்டு விடுகின்றது.

இங்கிலீஷ் பாதிரி யொருவரை, அவரிடம் கிறிஸ்தவத்தன்மை இல்லாத நடத்தை அதிகமாக இருக்கிறது என்று குற்றம் சாட்டப்பட்டபொழுது அதை அவர் பொறுத்துக் கொண்டிருந்தாராம்! ஆனுல் அவரை முட்டாள் என்றும் திறமையற்றவர் என்றும் ஒருவர் சொன்னபொழுது பாதிரி ஆத்திரமடைந்து எதிரடி கொடுத்தாராம்! இந்தியாவின் அரசாங்கம் மாறிப்போய், அதில் பிரிட்டிஷ் அதிகாரிகளின் கலப்பு அதிகமாகக் குறைந்துவிட்டால், அதனுல் அரசாங்கத்தில் அதிகமாக ஊழல்கள் ஏற்படுமென்று அடிக்கடி வேத சூத்திரத்தைப்போல சொல்லப்பட்டு வருகிறது. அதை இங்கிலீஷ்காரர்கள் நம்புகிருர்கள். இந்த நம்பிக்கையுடன், ஆனுல், தாராளமான உற்சாகத்தைக்கொண்டு, "நல்ல அரசாட்சி தன்னரசாட்சிக்கு மாற்ரு"க முடியாதென்றும் இந்தியர்கள் கெட்டுப்போக விருப்பம் கொண்டால், அவ்வாறு செய்ய அவர்களை விட்டுவிடுவது தான் முறையென்றும் தீவிர கருத்து கொண்ட இங்கிலீஷ்காரர்கள் கூறுகிருர்கள்.

பிரிட்டிஷ் கலப்பு இந்தியாவிலிருந்து ஒழிந்துபோகுமானுல், அப்பொழுது இந்தியாவுக்கு என்ன நேரும் என்று எனக்குத் தெரியாது. எந்த வகையில் பிரிட்டிஷார் இந்தி

யாவை விட்டு விலகிக் கொள்ளுவார்கள். இந்தியா அப்பொழுது யாருடைய வசமிருக்கும்? உலக நிகழ்ச்சிகள் எத்தன்மைத்தாயிருக்கும்? இவைகளைப் பொறுத்துத்தான் என்ன நேருமென்று சொல்லமுடியும்? பிரிட்டிஷாரின் உதவியைக் கொண்டு இந்திய ஆட்சியில் ஒரு வகை நிலைமை அப்பொழுது ஏற்படலாம். அந்த நிலைமையில் அதிகமான திறமைக் குறைவும் இன்றைக்கு இருப்பதைக் காட்டிலும் கேவலமாயும் அரசாங்கம் இருக்கலாம். ஏனெனின் தற்போதைய ஆட்சியின் நல்ல தன்மைகளில்லாமல், அதன் கெட்ட தன்மைகளே மலிந்திருக்கலாம். இன்னொரு விதமான நிலைமையை என்னால் கற்பனை செய்து கொள்ள முடியும். இந்தியர்களின் நோக்குப்படிக்கு மிகவும் திறமையானதும் நன்னோக்கம் கொண்டதுமான அரசாங்கம் ஏற்படலாம். அரசாங்கத்தின் அடக்குமுறை இயந்திரம் அப்பொழுது திறமையுடன் வேலை செய்யாமல் இருக்கலாம். நிர்வாக அமைப்புகள் பார்வைக்கு மினுமினுப்பாய் இல்லாமல் இருக்கலாம்.

ஆனால், பொருள்களை உற்பத்தி செய்வதிலும் பிரித்துக் கொடுப்பதிலும் அதிகமான திறமை அந்த அரசாங்கத்துக்கு இருக்கலாம். அதன் மூலமாக, பொது ஜனங்கள் உடல், நாகரிகம் முதலிய துறைகளில் மேம்பாடடையக் கூடும். தன்னரசு எல்லா நாடுகளுக்கும் நன்மை பயக்கும் என்பதை நான் நம்புகிறேன். ஆனால் நல்ல ஆட்சி இல்லாமல் அது சுய ஆட்சியாய் இருந்தாலும் அதை ஏற்றுக் கொள்ள நான் தயாராயில்லை. சுய ஆட்சி என்றால் என்ன? பொது ஜனங்களின் நன்மைகளுக்காகவும் உயர்வுக்காகவும் பாடுபடும் அரசாட்சியே சுய ஆட்சியாகும். இந்தியாவிலிருக்கும் பிரிட்டிஷ் ஆட்சி, கடந்த காலத்தில், அது எப்படி இருந்தாலும் சரியே, நல்ல ஆட்சியை அளிப்பதற்கு வல்லமை பொருந்தியதல்ல. அந்த ஆட்சி மூலமாக பொதுஜன வாழ்க்கைத் திட்டம் உயரவே முடியாது. ஆகவே இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி ஆண்டு மாறிப்போன, பிரயோஜனமில்லாத ஆட்சியென்று நான் கருதுகிறேன். இந்தியாவில் மக்கள் சுதந்திரத்துக்காக ஏன் பாடுபட வேண்டும்? சுதந்திரம் இருந்தால் நல்ல ஆட்சியேற்படும்; பொது ஜனங்களின் வாழ்க்கைத் திட்டம் உயரும்; கலைப் பெருக்கும் செல்வப் பெருக்கும் உண்டாகும்; அச்சம் ஒழியும்; அடக்குமுறை

தொலையும். பின் கூறிய இரண்டும் அந்நிய ஆட்சியின் விளைவுகளாகும்.

பிரிட்டிஷ் அரசாங்கத்தாரும், ஐ. ஸி. எஸ். கூட்டத்தாரும் தங்களுடைய ஆணவம் மூலம் இந்தியாவை ஆட்டிவைக்கத் திறமை யுடையவர்களாக விருக்கலாம். ஆனால் அவர்களுக்கு இந்தியாவின் தற்போதைய பிரச்னைகளைத் தீர்க்கத் திறமையும் தகுதியும் கிடையாது. எதிர்காலத்தில் நேரக்கூடிய பிரச்னைகளையும் அவர்களால் தீர்க்க முடியாது. ஏனெனின் அவர்களுடைய அஸ்தி வார மனக்கோட்டைகளும் கருத்துகளும் மிகுதியும் தவறுனவையாகும். நடைமுதல் போக்குக்கும் அவர்களுக்கும் தொடர்பே கிடையாது. திறமை போதாத அரசாங்கமோ அல்லது அதிகாரக் கூட்டமோ நீண்ட காலத்துக்கு தனது ஆணவத்தை நிலைத்து வைத்துக் கொள்ளமுடியாது. அவைகள் சருக்கிக்கொண்டே மறைந்து போவனவாகும்.

பூகம்பத்தால் பாதிக்கப்பட்ட பிராந்தியங்களைச் சுற்றிப் பார்த்து அங்கே எவ்வாறு நிவாரண வேலையைச் செய்யாலாம் என்று ரிப்போட் செய்யும்படியாக என்னை அலகாபாத் பூகம்ப நிவாரணக் கமிட்டி அனுப்பி வைத்தது. உடனே நான் தனியாகப் புறப்பட்டுப் போனேன். பத்து நாள் பாழாகக் கிடந்த அந்தப் பிராந்தியங்களில் திரிந்து அலைந்தேன். அது மிகவும் கடினமான பிரயாணமாகும். அந்த நாட்களில் எனக்குத் தூக்கமே கிடையாது. காலையில் ஐந்து மணியிலிருந்து அநேகமாக இரவு நடுநிசி வரையிலும் நாங்கள் அங்குமிங்கும் அலைவோம். சீர்குலைந்து போன ரஸ்தாக்களின் வழியாக சில சமயங்களில் பிரயாணம். பாலங்கள் உட்கார்ந்துபோன இடங்களில் படகுப் பிரயாணம். சில இடங்களில் ரோட்டுகளின் பேரில் தண்ணீர். அங்கேயும் படகுப் பிரயாணம்தான்.

விஸ்தாரமான பாழ்கள் கொண்ட நகரங்கள் பயங்கரக் காட்சிகளாய் இருந்தன. பாதைகள் முறிந்து கோணலாய்ப் போயிருந்தன. சில இடங்களில் இரண்டு புறத்து வீடுகளின் குறடுகளுக்கு மேல் பாதைகள் உயர்ந்துபோயிருந்தன! இவைகள் எல்லாம் பிசாசுகளின் வேலை போல் தோன்றிற்று. இந்த ரோட்டுகளில் கண்ட பெரிய வெடிப்புகளினின்றும்

நீரும் மணலும் வேகமாக வெளிவந்து மனிதர்களையும் கால் நடைகளையும் அடித்துக் கொண்டு போய் விட்டன. இந்த நகரங்களைக் காட்டிலும் பீஹாரின் தோட்டம் என்று பீஹாரிகள் சொல்லிக் கொள்ளுகிற வடபீஹார் மைதானங் களிலே நாசமும் சீரழிவும் பரந்து கிடந்தன. பல மைல் தூரம் ஓரே மணல்; பல மைல் தூரம் ஓரே வெள்ளம்; சிறிய சிறிய வெடிப்புகள் ஏராளம். இவைகளிலிருந்துதான் மணலும் நீரும் வெளிவந்தன. சென்ற ஐரோப்பிய போர்க் காலத்திலும் அதற்குப் பின்னரும் வட பிரான்சின் போர்க் களங்களைப்போல இந்த மைதானங்கள் இருந்தன என்று இந்த பிராந்தியத்தில் விமானத்தில் பறந்து சென்ற சில பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர்கள் சொன்னார்கள்.

அது ஒரு பயங்கரமான அனுபவமாகத்தான் இருந் திருக்க வேண்டும். பூகம்பம் வலுவான "பக்க ஆட்டங் களில்" ஆரம்பமாயிற்று. நின்று கொண்டிருக்கிறவர்களைக் கீழே சாய்த்து விட்டது. பிறகு மேலும் கீழுமாக ஆடிற்று. பீரங்கிப் படைகள் தாக்கும் சத்தத்தைப் போலிருந்தது. ஆகாயத்தில் நூறு விமானங்கள் பறந்து செல்லும் சத்தத் தைப் போலிருந்தது. பற்பல இடங்களில் பூமி திடீரென்று வெடித்து, அந்த வெடிப்புகளினின்றும் நீர் வேகத்துடன் பத்துப் பன்னிரண்டு அடி உயரம் வரையில் பீறிட்டு அடித் தது. இவைகள் எல்லாம் மூன்று நிமிஷ காலம் வரையிலும் நேர்ந்திருக்கலாம். பிறகு தணிந்து போயிற்று. ஆனால் இந்த மூன்று நிமிஷங்களும் மிகுதியும் பயங்கரமானவை.

இது நேருவதைப் பார்த்துக் கொண்டிருந்த பலர், உல கம் முடிவடைந்து விட்டதாகக் கற்பனை செய்துகொண்டிருந் தால், அதில் ஆச்சரியமே இல்லை. நகரங்களிலே வீடுகள் விழு கிற சத்தம்; தண்ணீர் மோதி ஓடும் ஒலி; ஓரே தூசி. எனவே இரண்டொரு கஜதூரம் கூட சரியாகப் பார்க்க சாத்தியப் படாமற் போய்விட்டது. கிராமங்களில் அவ்வளவு தூசி கிடையாது. யாரும் அதிகமான தூரம் வரையில் பார்க்க லாம். ஆனால் நிதானத்துடன் பார்க்கக் கூடியவர்கள் ஏது? பூகம்பத்துக்குத் தப்பிப் பிழைத்தவர்கள் தரையிலேயே படுத்துக் கிடந்தார்கள். அல்லது கிலி பிடித்துப் புரண்டு கொண்டிருந்தார்கள். பன்னிரண்டு வயதுள்ள சிறிய பையன் பூகம்பத்துக்குப் பிறகு பத்தாம் நாள் உயிரோடு தோண்டி

எடுக்கப்பட்டான். இது முஸபர்பூரில் என்று நினைக்கிறேன். அவன் மிகவும் ஆச்சரியப்பட்டுப் போனான். அவன் கீழே தள்ளப்பட்டு அவன் பேரில் சாமான்கள் மூடிக் கொண்ட பொழுது உலகம் முடிந்துவிட்ட தென்றும், தான் ஒருவன் தான் தப்பிப்பிழைத்தவன் என்றும் அவன் எண்ணிக்கொண்டிருந்தானும்!

முஸபர்பூரில் பூகம்பம் நேர்ந்த அந்த நிமிஷத்தில் வீடுகள் வீழ்ந்து கொண்டு, நாலா பக்கங்களிலும் நூற்றுக்கணக்கானவர்கள் இறந்து கொண்டிருக்கையில், பெண்குழந்தை யொன்று பிறந்தது. அனுபவமில்லாத இள வயதுப் பெற்றோர்களுக்கு இன்னது செய்வதென்று தெரியவில்லை. அவர்கள் பித்துக் கொண்டவர்கள்போல் ஆனார்கள். குழந்தையும் தாயும் பிழைத்து சுகமாயிருக்கிறார்கள் என்று நான் கேள்விப்பட்டேன். பூகம்ப நினைவுக்காக குழந்தைக்கு "கம்ப தேவி" என்று பெயரிடப்பட்டது.

மாங்கீர் நகரம், நாங்கள் சுற்றுப் பிரயாணம் செய்த கடைசி இடம். நாங்கள் நீண்ட தூரம் சுற்றியலைந்து நேபாளத்து எல்லைவரைக்கும் அநேகமாகப் போய் விட்டோம். நாங்கள் கண்ட காட்சிகள் பல சகிக்கக் கூடாதவையாகும். ஏராளமான அளவில், பாழ்களுக்கும் சேதங்களுக்கும் நாங்கள் பழக்கப்பட்டிருந்தோம். என்றாலும், நாங்கள் மாங்கீருக்குப்போய், இந்த செழிப்பான நகரம் அடியோடு நாசமாய்ப்போனதைப் பார்த்ததும், மூச்சுத்திணறி, அந்தப் பயங்கரக் காட்சியைக்கண்டு உடல் நடுங்கினோம். அந்தப் பயங்கரத்தை நான் ஒருநாளும் மறக்க முடியாது. பூகம்பம் நேர்ந்த பிராந்தியங்களில் எல்லாம், கிராமங்களிலும் சரி, நகரங்களிலும் சரி, ஜனங்கள் தங்கள் சொந்த வலுவைக் கொண்டு ஒன்றுமே செய்யாமல் வாளா இருந்தார்கள். இம்மாதிரி சோம்பிக்கிடந்தவர்களில் பெரும்பகுதியார் நகரங்களில் வசித்து வந்த நடுத்தர வகுப்பார்கள். யாராவதொருவர் வந்து வேலையைத் துவக்கி, தங்களுக்கு உதவி செய்வதற்காக அவர்கள் எல்லோரும் காத்துக்கொண்டிந்தார்கள். அரசாங்கமாயிருந்தாலும் சரி, அல்லது அரசாங்கம் சம்பந்தமில்லாத நிவாரண வேலைசெய்யும் கூட்டங்களாய் இருந்தாலும் சரி. வேறு சிலர் தாங்கள் தொண்டு செய்வதாக முன் வந்தார்கள். ஜனங்களுக்கு உத்திரவு கொடுத்துக் கொண்டி

ருப்பதுதான் நாங்கள் செய்யவேண்டிய தொண்டு என்று அவர்கள் எண்ணிக்கொண்டார்கள். இந்தத் திக்கற்ற தன்மை உண்டானதற்குக் காரணம் என்னவெனின் பூகம்பத்தின் பயங்கரத்தால் ஏற்பட்ட நரம்பு வீழ்ச்சியாகும். அது கொஞ்சம் கொஞ்சமாகத்தான் குறைய வேண்டும்.

இதற்கு எதிர்மாறாக, பீகாரில் வேறு பகுதிகளினின்றும் ஏனைய மாகாணங்களிலிருந்தும் நிவாரண வேலைசெய்ய வந்த ஊழியர்கள் ஏராளமான ஊக்கமும் திறமையும் காண்பித்தார்கள். இந்த யுவர்களும் யுவதிகளும் தொண்டு செய்வதில் காட்டிய தன்மையையும் திறமையையும் காண ஆச்சரியமாக இருந்தது. பல்வேறு நிவாரண அமைப்புகள் வேலை செய்து வந்தபோதிலும், அவைகளுக்குள்ளே நேர்த்தியான ஒத்துழைப்பு இருந்து வந்தது.

மாங்கீரில் ஒரு சின்ன நாடகம் நடத்தினேன். நானே கையில் மண் வெட்டி. யெடுத்துக் கொண்டு மண் மேடுகளை வெட்டி, அப்புறம் தள்ளி, சொந்த சக்தியால் ஜனங்கள் வேலை செய்யவேண்டு மென்பதற்கு ஊக்கம் கொடுத்தேன். முதலிலே கொஞ்சம் வெட்கப்பட்டுத் தயங்கினேன். ஆனால், செய்தது மகத்தான வெற்றியாக மாறிவிட்டது நிவாரண அமைப்புகளின் தலைவர்கள் எல்லோரும் கூட மண்வெட்டி சகிதமாகச் சென்று, நாள் முழுதும் தோண்டினார்கள். ஒரு சிறு பெண்ணின் சவம் அகப்பட்டது. அன்றைக்கே நான் மாங்கிரை விட்டுவந்து விட்டேன். ஆனால் தோண்டுகிற வேலை நடந்து கொண்டேயிருந்தது. உள்ளூர் ஜனங்கள் அந்த வேலையைக் கையில் எடுத்துக்கொண்டு நன்றாக வேலை செய்தார்கள்.

உத்தியோக சம்பந்தமில்லாத நிவாரணவேலை அமைப்புகளுக்குள் மத்திய நிவாரணக் கமிட்டிதான் மிகவும் முக்கியமானதாகும். அந்தக் கமிட்டிக்கு ராஜேந்திர பிரஸாத் தலைவர். இந்தக் கமிட்டி பூராவும் காங்கிரஸ் அமைப்பு அல்ல; இது அகில இந்திய அமைப்பாக மாறிவிட்டது. எல்லாவிதக் கட்சிக்காரர்களும் கொடையாளர்களும் இந்தக் கமிட்டியில் இடம் பெற்றிருந்தார்கள். இந்தக் கமிட்டிக்கு கிராமாந்தரங்களில் துணையாக காங்கிரஸ் அமைப்புகள் வேலை செய்து வந்தது பெரிய லாபமாகும். இந்தியா

விலே, வேறு எந்த மாகாணத்திலும் (குஜராத்தையும் ஐக்கிய மாகாணங்களில் சில ஜில்லாக்களையும் தவிர) பீகாரில் இருந்ததுபோல காங்கிரஸ் ஊழியர்களுக்கும் விவசாயிகளுக்கும் தொடர்பு கிடையாது. பீகாரில், காங்கிரஸ் ஊழியர்கள் பெரும்பான்மையில் விவசாய வர்க்கத்திலிருந்து வந்தவர்கள். பீகார் இந்தியாவின் விவசாய மாகாணமாகும். அதன் நடுத்தர வகுப்பார்கள் கூட விவசாயிகளோடு ரத்த சம்பந்தம் கொண்டவர்கள்.

சில சமயங்களில் காங்கிரஸ் காரியதரிசி என்ற முறையில் நான் பீகார் மாகாண காங்கிரஸ் கமிட்டிக் காரியாலயத்தைப் பரிசோதனை செய்யச் சென்றிருக்கிறேன். காரியாலயத்தை அவர்கள் நன்ருக வைத்துக் கொள்ளவில்லையென்றும் வைத்துக்கொள்ள திறமை அவர்களுக்கு இல்லையென்றும் கருதி நான் அவர்களைக் கடுமையான பாஷையில் கண்டித்திருக்கிறேன். நிற்பதைக் காட்டிலும் உட்கார்ந்திருக்கலாமே! உட்கார்ந்திருப்பதைக் காட்டிலும் படுத்துக்கொண்டிருக்கலாமே! இத்தகைய மனப்பான்மை பீகார் காங்கிரஸ்காரர்களுக்குள் இருந்ததாகத் தோன்றிற்று. காரியாலயத்தில் சாமான்கள் அதிகமாயில்லை. ஏனென்ருல் அவர்கள் நாற்காலி மேஜை முதலிய வழக்கமான காரியாலய சௌகரியங்கள் இல்லாமலே வேலை நடத்திக் கொண்டு வந்தார்கள். என்ருலும், காரியாலயத்தை நான் எவ்வளவோ கண்டித்தாலும் காங்கிரஸ் லட்சியப்படி பார்த்தால் அந்த மாகாணம் இந்தியாவில் காங்கிரஸினிடம் மிகுந்த பக்தி சிரத்தை கொண்ட மாகாணமென்று எனக்குத் தெரியும். காங்கிரஸ் அங்கு ஆடம்பரமாயிருக்கவில்லை. ஆனல் விவசாயிகள் அனைவரும் காங்கிரசை ஆதரித்து வந்தார்கள். அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் கூட பீகார் அங்கத்தினர்கள் எந்த விஷயத்திலும் ஒருபொழுதும் துருதுருத்த மனப்பான்மையைக் காண்பித்ததில்லை. இந்தப் பெரிய சபைக்கு தாங்கள் ஏன் வந்தார்கள் என்று அவர்கள் திகைத்துக் கொண்டிருப்பதைப் போல அவர்களைப்பார்த்தால் தோன்றும். ஆனல் இரண்டு சட்ட மறுப்பு இயக்கங்களிலும் பீகார் காண்பித்த வேலைக் கணக்கு அபாரமாகும். பின்னே நடைபெற்ற நபர் சட்ட மறுப்பிலும் அது நேர்த்தியாக நடந்து கொண்டது.

நிவாரணக் கமிட்டி இந்த நேர்த்தியான காங்கிரஸ் அமைப்பின் மூலமாக விவசாயிகளுக்கு உதவிசெய்ய முடிந்தது. கிராமாந்தரங்களில் வேறு எந்த அமைப்பும் இதைப் போல அவ்வளவு ஒத்தாசையாக இருக்க முடியாது. அரசாங்கத்தால் கூட ஆகாது. பீகார் காங்கிரஸ் அமைப்புக்கும் நிவாரணக் கமிட்டிக்கும் தலைவர் பாபு ராஜேந்திர பிரசாத் அவர் பீகாரில் எதிரில்லாத் தலைவர். பார்த்தால் அசல் குடியானவன். பீகார் மண்ணோடு ஒட்டிக் கொண்டு பிறந்த திருப்புதல்வன். முதல் தடவை அவரைப் பார்த்தால் அவரைப்பற்றி ஒன்றும் பிரமாதமாகத் தோற்றாது. ஆனால் சத்தியம் பேசும் அவருடைய கூர்மையான கண்களும், சிரத்தை நிறைந்த அவருடைய பார்வையும் யாருடைய கவனத்தையும் இழுக்கும்.

அந்தப் பார்வையையும் அந்தக் கண்களையும் ஒருவரும் மறக்க முடியாது. ஏனென்றால் அந்தக் கண்களின் மூலமாக சத்தியம் உங்களைப் பார்க்கின்றது. அதைச் சந்தேகிக்கவே முடியாது. விவசாயியைப் போலவே அவர் ஒருக்கால் தமது நோக்கில் குறுகியவராக இருக்கலாம். நவீன உலகத்துக்குப் பொருந்தாதவர் என்று ஒருக்கால் தோன்றக்கூடும். ஆனால் அவருடைய எதிரில்லா வல்லமையும், அவரது பரிபூரண யோக்கியப் பொறுப்பும், அவரது ஊக்கமும், இந்திய விடுதலைக்காக அவர் காண்பிக்கும் பக்தியும் மிகச் சிறந்த தன்மைகளாகும். அவைகளுக்காக அவரை பீகார் மாகாண முழுதும் கொண்டாடி நேசிப்பதல்லாமல் இந்தியா முழுதுமே அவர் நேசிக்கப்படுகிறார். இந்தியாவில் எந்த மாகாணத்திலும் ராஜேந்திர பாபுவை பீகாரில் கொண்டாடுவதுபோல ஏகமனதாக எல்லோரும் கொண்டாடக்கூடிய தலைவர் வேறு எவருமே கிடையாது. காந்திஜீயின் தத்துவத்தை உண்மையாகவும் முழுமையிலும் யாரேனும் ஒருவர் அறிந்து உணர்ந்திருக்கக்கூடுமானால் அது அவர்தான். அத்தகைய ஒருவர் பீகார் நிவாரண வேலைக்குத் தலைமை வகிக்க அகப்பட்டது பாக்கியமே ஆகும். அவரிடம் இருந்த நம்பிக்கையினாலேதான் இந்தியாவின் எல்லா பகுதிகளிலிருந்தும் ஏராளமான பணம் பீகாருக்கு வந்து கலகலவென்று கொட்டிற்று.

ராஜேந்திரபாபுவுக்கு உடம்பு சுகமே இல்லை. என்றாலும் அவர் நிவாரண வேலையில் அப்படியே யோசனை

யின்றிக்குதித்து விட்டார். எல்லா அலுவல்களுக்கும் அவர் மத்தியப்புப் புள்ளிபோல் விளங்கியதாலும் எல்லோரும் அவரிடம் யோசனைகேட்க வரநேர்ந்ததாலும் அவர் தமது உடல் வலிமைக்கு மீறியே உழைக்க நேர்ந்தது. பூகம்பப் பிராந்தியங்களில் நான் சுற்றுப் பிரயாணம் செய்த பொழுதோ அல்லது பிரயாணத்துக்கு சற்று முந்தியோ "பூகம்பம் நேர்ந்தது. "தீண்டாமைப் பாபத்துக்குத் தண்டனையாகும்" என்று காந்திஜீ சொன்னதாகப் படித்தேன்; அப்படியே ஸ்தம்பித்துப் போனேன். இது திகைக்கச் செய்யும் கருத்து ஆகும். இத்தகைய கருத்து அபத்தம் என்று ரவீந்திரநாத் தாகூர் காந்திஜீக்கு மறுமொழி அளித்ததில் எனக்கு மிகுதியும் சந்தோஷம். தாகூரின் மறுமொழி முற்றிலும் எனக்கு உடன்பாடு. விஞ்ஞான ஆராய்ச்சிக்கு இதைக்காட்டிலும் எதிரிடையான கருத்தைக் கற்பனை செய்வதே கஷ்டமான வேலையாகும். உணர்ச்சி நிலைமைகளின் விளைவைப்பற்றியும், மன வலிமையினால் பொருள்களில் நேரிடும் நிகழ்ச்சிகளைப் பற்றியும் அவைகள் அபத்தம்என்று இன்றைக்கு விஞ்ஞான சாஸ்திரம் கூட முரட்டுத்தனமாய்ச் சொல்லக் கூடும்.

மனதிலே திகில் ஏற்பட்டால் அஜீரணம் உண்டாகலாம். அல்லது அதைக்காட்டிலும் கேவலமான தொந்து ஒருவருடைய் உடலுக்கு நேரலாம். ஆனால், மனித வர்க்கத்தின் பழக்கவழக்கத்தினால் அல்லது குறைபாட்டினால், பூமிக்குள்ளே பூகம்பம் ஏற்படுமென்று சொல்லுவது மிகவும் பொறுக்க முடியாத சங்கதி ஆகும். பாபம் தெய்வத்தின் கோபம், அண்டங்களிலே மனிதனுக்கு சிறப்பான ஒரு பிராதான்யம்—இத்தகைய் கருத்துகள் மத்திய காலத்தைச் சேர்ந்ததாகும். ஐரோப்பாவிலே மக்களை தீயில் உரித்துத்தண்டித்தார்களே அந்தக் காலத்தைச் சேர்ந்ததாகும். ஜார்டேனோ ப்ரூனோ அவர்களை அவரது விஞ்ஞான ஆராய்ச்சிக்காக கொளுத்தி இன்னும் பல விஞ்ஞான சாஸ்திர பண்டிதர்களை மந்திரவாதிகள் என்று தூக்கிலிட்டார்களே அந்தக் காலத்தைச் சேர்ந்ததாகும். இடி விழாமல் காப்பதற்காக, கட்டிடங்களில் மின்சாரக் கிராதிகளை வைக்கும் தெய்வ பக்திக் குறைவினால், மஸாச்சூஸெட்ஸில் பூகம்பங்கள் நேர்ந்தன என்று பதினெட்டாம் நூற்றாண்டில் கூட அமெரிக்காவில் முக்கியஸ்தர்களான போஸ்டன் பாதிரிமார்கள் சொன்னார்கள்.

பூகம்பம் மனிதர்களுடைய பாபத்துக்கு தெய்வீக தண்டனையாயின் நாம் என்ன பாபத்துக்காக தண்டிக்கப்படுகிறோம் என்று எவ்வாறு கண்டு கொள்வது? ஏனென்றால் அந்தோ பிராயச் சித்தம் பண்ணும்படியான பல பாபங்கள் நம்மிடம் இருக்கின்றனவே! ஒவ்வொருவரும் ஏதோ சமாதானம் சொல்லி விடலாம். அந்நிய ஆட்சிக்கு ஆட்பட்டுக் கிடப்பதால் நாம் தண்டிக்கப்பட்டிருக்கலாம். அல்லது அநியாயமான ஜன சமூகத் திட்டத்தைச் சகித்துக்கொண்டிருப்பதற்காக தண்டிக்கப்பட்டிருக்கலாம். தர்பங்கா மகாராஜா ஏராளமான பூமியாளர்; சொத்துடையவர். பூகம்பத்தால் அவருக்கு நேர்ந்தசொத்து நஷ்டம் இவ்வளவு அவ்வளவு என்று சொல்ல முடியாது. ஆகவே பூகம்பம் ஜமீன்தாரித் திட்டத்துக்கு தண்டனை யென்றும் நாம் சொல்லலாம்.

அப்படிச் சொல்லுவது ஒருவாறு பொருத்தமாகக்கூட இருக்கலாம்.தென்னிந்திய ஜனங்களின் மத்தியிலே பரவிநிற்கும் தீண்டாமைப் பாபங்களுக்காக நிரபராதிகளான பீகார் மாகாணவாசிகள் தண்டிக்கப்பட வேண்டுமா? தீண்டாமை நாடாகிய தென்னிந்தியாவுக்கே பூகம்பம் நேரக் கூடாதா? சட்ட மறுப்புக்காக பூகம்பம் தெய்வதண்டனையாகும் என்று பிரிட்டிஷ் அரசாங்கம் சொல்லக் கூடும். ஏனென்றால் பூகம்பத்தினால் மிகுதியும் சேதமடைந்த வட பீகாரில்தான் சட்ட மறுப்பு சுதந்திர இயக்கம் தீவிரமாக நடைபெற்றது.

எல்லை இல்லாமல் இந்த மாதிரி நாம் குறிப்பிட்டுக் கொண்டே போகலாம். அடுத்தபடியாக ஒருகேள்வி எழுகின்றது. கடவுளின் அலுவல்களில் தலையிட்டுக் கொண்டு ஆண்டவனுடைய தண்டனையின் கொடுமையை நமது ஜீவகாருண்ய முயற்சிகளால் குறைக்க நாம் ஏன் முயற்சி செய்யவேண்டும்? ஆண்டவன் இத்தகைய கொடுமையான நகைப்பு வேலையை நம்மிடம் ஏன் செய்ய வேண்டும்? அவர் நம்மைக் குறைகளோடு படைக்கிறார். நம்மைச் சுற்றி நாலா பக்கத்திலும் மோகம், மாற்சரியம் முதலிய தூண்டுதல்களையும் அச்சங்களையும் சிருஷ்டி செய்கிறார். துயரம் நிறைந்த குரூரமான உலகத்தைப் படைக்கிறார். ஆட்டுக் குட்டியையும் புலியையும் போல மக்களை சேர்ந்தாற்போல் சிருஷ்டி செய்து விட்டு பிறகு நம்மைக் கண்டிக்கிறார்.

"நட்சத்திரங்கள் தங்களுடைய ஈட்டிகளை யெறிந்து, சுவர்க்கத்தைக் கண்ணீர் ஆறுகச் செய்யுமாகில் ஆண்டவன் தன்னுடைய வேலையைப் பார்த்து, சிரிக்கத் துணியமுடியுமா? ஆட்டைப் படைத்த அவன் உன்னையும் படைக்க எவ்வாறு துணியக் கூடும்?" பாட்னுவில் நான் தங்கியிருந்த கடைசி இரவில் பல நண்பர்களோடும் தோழர்களோடும் நீண்டநேரம் வரை பேசிக் கொண்டிருந்தேன். இவர்கள் நிவாரண வேலை செய்வதற்காக, பல வேறு மாகாணங்களிலிருந்தும் வந்திருந்தார்கள். ஐக்கிய மாகாணத்திலிருந்து நிறையப் பேர்கள் வந்திருந்தார்கள். எங்களில் பொறுக்கி எடுத்தவர்களிற் சிலர் அப்பொழுது அங்கே இருந்தனர். எங்களுக்கு தொல்லை கொடுத்துவந்த பிரச்னையைப்பற்றி நாங்கள் விவாதம் செய்தோம். எவ்வளவு வரையில் நாம் பூகம்ப நிவாரண வேலையில் சிக்கிக்கொள்ளுவது? அதாவது, எவ்வளவுதூரம் நிவாரண வேலையில் காங்கிரஸ்காரர்கள் தலையிட்டுக்கொள்ளுகிறார்களோ, அவ்வளவு தூரம் அரசியல் சட்டமறுப்பு வேலைக்கு நஷ்டம். ஆனல் நிவாரண வேலையோ மிகவும் கடினமான வேலை. அதை இப்படி அப்படி இருந்துகொண்டு செய்யமுடியாது. அந்த வேலையில் அகப்பட்டுக் கொண்டால், நீண்ட காலம் அரசியல் துறையில் அவர்கள் வேலை செய்ய முடியாது. ஆகவே எங்களுடைய மாகாணத்தில் அரசியல் சம்பந்தமாக நிச்சயமாக தீமையான விளைவு உண்டாகும், காங்கிரஸ் கூட்டத்தில் பல காங்கிரஸ்காரர்கள் இருந்தபோதிலும், சிலர்தான் உயிர் நாடியைப் போன்றவர்கள். அவர்களைப் பூகம்ப நிவாரண வேலைக்கு அனுப்பிவிடுவது என்பது உசிதமற்ற வேலையாகும். என்ருலும், பூகம்ப நிவாரண வேலையையும் அலட்சியம் செய்ய முடியாது. என் சம்பந்தப்பட்ட வரையிலும் நிவாரண வேலையை மட்டும் செய்துகொண்டிருப்பதில் எனக்கு விருப்பம் இல்லை. அந்த வேலைக்கு ஏராளமான ஆட்கள் கிடைக்கும். ஆனல் அதைக்காட்டிலும் ஆபத்தான வேலைகளுக்குத்தான் ஆள் அகப்படுவது கஷ்டம். எனவே, நாங்கள் இரவில் நீண்ட நேரம் பேசினேம். கடைசியாக நடந்த சுதந்திர நாளைப் பற்றிப் பேசினேம். நமது தோழர்களிற் சிலர் கைதுசெய்யப்பட்டபொழுது நாங்கள் மட்டும் தப்பித்துக் கொண்டதைபற்றி பேசிக்கொண்டிருந்தோம். தீவிரமான அரசியல் வேலை செய்துவிட்டு, பூரணமான பத்திரப் பாதுகாப்புடன் இருக்கும் இரகசியத்தை நான் தெரிந்து கொண்டேன் என்று நான் அவர்க

ளுக்குச் சிரித்துக் கொண்டு சொன்னேன். பிப்ரவரி மாதம் 15-ந்தேதி சுற்றுப் பிரயாணத்தினுல் அலுத்துச் சளைத்து அலகாபாத்து வீட்டுக்கு வந்து சேர்ந்தேன். பத்து நாள் கடுமை வேலை எனக்கு பயங்கரத் தோற்றத்தை உண்டாக்கி விட்டது. என்னைக் கண்டதும் என்னுடைய வீட்டார் வியப்படைந்து போனுர்கள். அலகபாத் விவாரணக் கமிட்டிக்காக சுற்றுப் பிரயாணத்தின் யாதாஸ்தை எழுதத் துவக்கினேன். ஆனுல் தூக்கம் கண்ணை யுருட்டிக்கொண்டு வந்தது. அடுத்த 24 மணி நேரங்களில் பன்னிரண்டு மணி தூக்கத்தில் ஆழ்ந்து கிடந்தேன்.

அடுத்த நாள் பிற்பகலில் கமலாவும் நானும் தேத்தண்ணீர் அருந்தி, அதை முடித்துக் கொண்டிருக்கிற சமயம். புருஷோத்தமதாஸ் தாண்டன் அப்பொழுதுதான் வந்தார். நாங்கள் தாழ்வாரத்தில் நின்றுகொண்டிருந்தோம். அப்பொழுது ஒரு மோட்டார் கார் வந்தது. போலீஸ் உத்தியோகஸ்தர் ஒருவர் கீழே இறங்கினுர். "என்னுடைய காலம்" வந்துவிட்டதென்று நான் உடனே தெரிந்து கொண்டேன். நான் அவரிடம் சென்று, "தங்களுக்காக நீண்டகாலமாக காத்துக்கொண்டிருக்கிறேன்" என்று சொன்னேன். அவர் சிறிதளவு மன்னிப்புக் கேட்டுக் கொள்ளுவதைப்போலப் பேசி தாம் ஜவாப்தாரியல்ல என்று சொன்னுர். வாரண்டு கல்கத்தாவிலிருந்து வந்திருந்தது.

ஐந்து மாதம் பதின்மூன்று நாள் நான் சிறைக்கு வெளியே இருந்தேன். மீண்டும் தனிமைக்குப் போய்ச்சேர்ந்தேன். ஆனுல் உண்மையான பளு என் தோளிலே இருக்கவில்லை. அந்தப் பளுவை எப்பொழுதும் சுமப்பவர்கள் ஸ்திரீகள்—உடம்பு குணமில்லாத என்னுடைய தாயார், எனது மனைவி, எனது சகோதரி.

## LIX

### அலிபூர் சிறை

"ஆழித்து ரும்பெனவே, அங்குமிங்கும்
பாழில் திரிவதேன்னே, பாவம், பராபரமே!"

அன்றிரவே நான் கல்கத்தாவுக்கு அழைத்துச் செல்லப்பட்டேன். ஹௌரா ஸ்டேஷனிலிருந்து லால்பஜார் போலீஸ் ஸ்டேஷனுக்கு பெரிய கறுப்பு லாரி (மேரியா) என்னை எடுத்துச் சென்றது. கல்கத்தா போலீசின் இந்த கீர்த்திபெற்ற தலைமைக் காரியாலயத்தைப்பற்றி நான் மிகுதியும் படித்திருக்கிறேன். எனவே சிரத்தையுடன் எல்லாவற்றையும் கவனித்தேன். பல ஐரோப்பிய சார்ஜண்டுகளும் இன்ஸ்பெக்டர்களும் காணப்பட்டனர். வட இந்தியாவில் வேறு எந்தப் போலீஸ் தலைமைக் காரியாலயத்திலும் இத்தனை ஐரோப்பிய உத்தியோகஸ்தர்களைக் காணமுடியாது.

கான்ஸ்டேபிள்கள் அநேகமாக பீகார் மாகாணத்திலிருந்து அல்லது ஐக்கிய மாகாண கீழ் ஜில்லாக்களிலிருந்து வந்திருப்பதாகத் தோன்றிற்று. பெரிய சிறை லாரியில் கோர்ட்டுக்கும் சிறைக்கும், அல்லது ஒரு சிறையிலிருந்து மற்றொன்றுக்கும் நான் போகும்பொழுதெல்லாம் இந்தக் கான்ஸ்டபிள்களில் பலர் என்னோடு உள்ளே உட்கார்ந்து கொண்டு வருவார்கள். அவர்களைப் பார்த்தால் ரொம்பக் கஷ்டமாயிருக்கும். தங்கள் வேலையை வெறுப்பதைப்போலவும், என்னிடம் அவர்களுக்குப் பூரண அனுதாபம் இருப்பது போலவும் அவர்கள் காணப்பட்டார்கள். சிலசமயங்களில் அவர்களுடைய கண்களிலே நீர் பெருகும். துவக்கத்தில் நான் மாகாண சிறையில் வைக்கப்பட்டேன். அங்கிருந்து விசாரணைக்காக பிரதம மாகாண மாஜிஸ்டிரேட்டுக் கச்சேரிக்கு அழைத்துச் செல்லப்பட்டேன். இது ஒரு வினோத அனுபவமாயிருந்தது. கச்சேரியும் கட்டிடமும் முற்றுகையிடப்பட்ட கோட்டையைப்போலிருந்தன. பகிரங்

கக் கச்சேரியாகத் தெரியவில்லை. ஓரிரண்டு பத்திரிகைக்காரர் களையும் வழக்கமாக இருக்கும் வக்கீல்களையும் தவிர, வெளியார் யாரையும் கச்சேரிக்குப் பக்கத்தில் கூட விடவே இல்லை.

கணிசமான போலீஸ் படை யிருந்தது. இந்த ஏற்பாடு கள் எல்லாம் எனக்காக சிறப்பாக செய்யப்பட்டவையல்ல. அது தினசரிக் கொளுவாகும். கச்சேரிக்கு என்னை அழைத் துச் செல்லும்பொழுது, கட்டிடத்துக்குள் நீளமாய் போய்க் கொண்டிருந்த வழியாக நான் போகவேண்டும். அந்த வழி யின் கங்குகளிலும் மேற்புறத்திலும், நெருக்கமாகக் கம்பி போடப்பட்டிருந்தது. ஒரு கூட்டின் வழியாகப் போவது மாதிரி தோன்றிற்று. மாஜிஸ்திரேட்டுனுடைய ஆசனத்தி லிருந்து வெகு தூரத்தில் கைதிக் கூண்டு இருந்தது. கச் சேரியிலே போலீசாரின் கூட்டம் அதிகம். கறுப்புச்சட்டை யும் கௌனும் அணிந்திருந்த வக்கீல்களும் நிறைய இருந்த னர். கச்சேரி விசாரணைகளில் எனக்குப் போதுமான பழக் கம் உண்டு. என்னுடைய முன் விசாரணைகளில் பல சிறைக் குள்ளேயே நேர்ந்திருக்கின்றன. ஆனால், அங்கே சில நண்பர் கள், உறவினர்கள், முகந்தெரிந்தவர்கள் இருப்பார்கள். அப் பொழுது அதிகமாக அதிகார தோரணையின் வாடை இருக் காது. போலீஸ்காரர்கள் வழக்கமாக பின்னே இருப்பார்கள். கூண்டுகளைப் போல அங்கே அமைப்புகள் கிடையா. ஆனால் இங்கே எல்லாம் வேறு மாதிரியாக இருந்தது. முன்பின் தெரியாத முகங்களை நான் உற்று நோக்கினேன். அவர்களுக் கும் எனக்கும் யாதொரு தொடர்பும் கிடையாது. அந்தக் கூட்டம் எனக்குப் பிடிக்கவே யில்லை. எப்பொழுதுமே நானு கைச்சட்டை வக்கீல்கள்; பார்ப்பதற்கு நேர்த்தியாக இருக்கமாட்டார்கள். அதுவும் போலீஸ் கச்சேரி வக்கீல்கள் தங்களுக்கென்று நேர்த்தியில்லாத தோற்றத்தை வருவித்துக் கொள்வதாகத் தோன்றுகிறது. கடைசியாக அந்தக் கரிய கூட்டத்திலே எனக்குத் தெரிந்த வக்கீலின் முகம் என் கண்ணில்பட்டது. ஆனால் அவர் அந்தக் கூட்டத்திலே மறைந்து போனார்.

விசாரணை ஆரம்பிக்குமுன்னர், வெளியே தாழ்வாரத் தில் நான் உட்கார்ந்திருக்கையிலும்கூட மிகுதியும் தனிமை உணர்ச்சியை அனுபவித்தேன். என்னுடைய நாடி கொஞ்சம்

வேகமாக அடித்திருக்கவேண்டும். முந்தின விசாரணைகளில் நான் வழக்கமாக இருந்தது போல இப்பொழுது அவ்வளவு நிதானத்துடன் என்னுல் இருக்க முடியவில்லை. எனக்கு விசாரணைப் பழக்கம் அதிகமாக உண்டு. எனக்கே இந்தக் கோர்ட்டின் நிலைமையைக் கண்டு இவ்வளவு மாறுதல் ஏற்படுமாயின் அநுபவமில்லாத இளைஞர்கள் எவ்வளவு கஷ்டப்படுவார்கள் என்று எனக்குத் தோன்றிற்று. கூண்டுக்குப் போனதும் நான் வேறு மாதிரியாகி விட்டேன். சிறிது ஆறுதல் உண்டாய்விட்டது. வழக்கம்போல் எதிர்க்கட்சியாடவில்லை. சுருக்கமான வாக்குமூலம் ஒன்றைப் படித்தேன். அடுத்த நாள் அதாவது பிப்ரவரி மாதம் 16-ந் தேதி எனக்கு இரண்டு வருஷ தண்டனை விதிக்கப்பட்டது. எனது ஏழாவது தடவை சிறைவாசம் துவங்கிற்று.

நான் வெளியே ஐந்தரை மாதம் இருந்ததைப்பற்றி கொஞ்சம் திருப்திப்பட்டேன். அந்தக் காலம் பூராவும் நான் நன்றாக வேலை செய்தேன். உபயோகமுள்ள சில வேலைகளைச் செய்து முடித்தேன். என்னுடைய தாயார் சுகக்குறி கண்டு ஆபத்திலிருந்தும் தப்பித்து விட்டார். என் இளைய சகோதரி கிருஷ்ணாவுக்குக் கலியாணம் ஆகிவிட்டது. என் மகளின் எதிர்காலப் படிப்பும் நிச்சயிக்கப் பட்டுவிட்டது. என்னுடைய குடும்பப் பொருளாதாரக் கோணல்களை நிமிர்த்தி விட்டேன். அநேக சொந்த விவகாரங்களை இது வரையிலும் கவனிக்காமல் விட்டிருந்தேன். அவற்றையெல்லாம் கவனித்தாகிவிட்டது. பொதுஜன ஊழிய வேலைகளில் யாரும் அப்பொழுது அதிகமாக எதையும் செய்யமுடியாது என்று எனக்குத் தெரியும். காங்கிரஸ் மனப்பான்மையைக் கெட்டிப்படுத்தி, ஜனநிர்மாண பொருளாதாரத் துறைகளில் காங்கிரசின் ஊக்கம் சென்று யோசிக்குமாறு ஓரளவுசெய்து விட்டேன். காந்திஜீயோடு நான் நடத்திவந்த கடிதப் போக்குவரத்தும் பின்னர் நான் பத்திரிகைகளுக்கு எழுதிய கட்டுரைகளும் நிலைமையை ஓரளவு மாற்றி விட்டன. வகுப்புவாதப் பிரச்னையைப்பற்றி நான் எழுதிய கட்டுரைகளால் சிறிது நன்மை யேற்பட்டது. மேலும் இரண்டு வருடங்களுக்கதிகமாகக் காண முடியாமற்போன காந்திஜீயையும் வேறு பல நண்பர்களையும் தோழர்களையும் நான் சந்தித்தேன். இன்னெரு சிறை வாசத்துக்குத் தேவையான

உணர்ச்சி வலுவையும், நரம்பு ஊக்கத்தையும் சேகரித்துக் கொண்டுவிட்டேன்.

ஆனால் என்னுடைய மனதிலே ஒரே ஒரு நிழல் வந்து மறைந்தது. அது கமலாவின் சுகக்கேடு ஆகும். அவள் எவ்வளவு சுகவீனமாயிருந்தாள் என்பதே எனக்குத் தெரியாது. ஏனென்றால் கீழே விழுகிறவரையிலும் சுகமின்மையைக் காண்பித்துக் கொள்ளாமல் வேலை செய்யும் வழக்கம் அவளிடம் இருந்தது. ஆனால் நான் கவலைப்பட்டேன். இப்பொழுது நான் சிறைக்கு வந்துவிட்டபடியால் அவள் நன்றாக, தாராளமாக, வைத்தியம் செய்துகொள்ள முடியும் என்று எண்ணினேன். நான் வெளியே இருக்கும்பொழுது அவள் வைத்தியம் செய்துகொள்ளுவது கஷ்டமான வேலையாகும். ஏனென்றால் என்னைவிட்டு அதிக காலம் பிரிந்திருப்பதற்கு அவள் விருப்பப்படவே யில்லை.

என் மனதிலே வேறொரு வருத்தமுமிருந்தது. அலகபாத் ஜில்லாவின் கிராமாந்தரங்களை ஒரு முறையேனும் நான் பார்க்கவில்லையே என்று வருந்தினேன். எங்களுடைய யோசனைகளை அமுலுக்குக் கொண்டு வந்ததற்காக எனது இளந்தோழர்களிற் பலர் சமீபத்தில்தான் கைது செய்யப்பட்டார்கள். அவர்களைப் பின்பற்றி ஜில்லாவில் வேலைசெய்யாதது அவர்களுக்கு நான் துரோகம் செய்ததாகத் தோன்றிற்று.

மீண்டும் கருப்பு "மேரியா" என்னைச் சிறைக்கு எடுத்துச் சென்றது. போகிற வழியிலே சேனைகள் மிஷன் பீரங்கிகளுடனும் போர்க்கருவிகளைத் தாங்கிய மோட்டார்களுடனும் போய்க்கொண்டிருப்பதைக் கண்டேன். எங்களுடைய சிறை வண்டியிலிருக்கும் சிறு ஓட்டைகள் வழியாக, நான் அவைகளைப் பார்த்தேன். "டாங்கியுள்" ராணுவ மோட்டார் காரும் எவ்வளவு அவலட்சணமானவை, என்று எண்ணினேன். பண்டைக் காலத்து "பூதங்களின்" நினைப்பு எனக்கு உண்டாயிற்று.

மாகாண சிறையிலிருந்து அலிப்புரம் மத்திய சிறைக்கு, நான் மாற்றப்பட்டேன். அங்கே, பத்தடி நீளமும் ஒன்பதடி அகலமும் உள்ள சிறிய அறை ஒன்று எனக்குத் தரப்

பட்டது. அதற்கெதிரே ஒரு தாழ்வாரம். பக்கத்திலே சிறிய திறந்த முற்றம். முற்றத்தின்சுவர் உயரமல்ல. ஏழடி இருக்கும். அதற்கு மேல் பார்த்தபோது விநோதமான காட்சி எனக்கு ஏற்பட்டது. பலவகையான கட்டிடங்கள்; ஒரு மெத்தை, இரண்டு மெத்தை, சக்கரம், சதுரம், விநோத மான கூரைகள் எல்லாம் நாலாபக்கங்களிலும் தோன்றின. சில மற்றவைகளைக் காட்டிலும் மிகவும் உயரமாயிருந்தன. கட்டிடங்கள் சேர்ந்தாற்போலில்லாமல் ஒவ்வொன்றாக அமைக்கப்பட்டிருக்க வேண்டுமென்றும், இருந்த இடத்தை யெல்லாம் உபயோகப்படுத்திக் கட்டப்பட்டிருக்க வேண்டு மென்றும் எனக்குத் தோன்றிற்று. இந்தக் கட்டிடம் எல் லாம் புதிர்போட்டது மாதிரி இருந்தது. அவலட்சணத்தைப் படைக்க முயற்சிகள் செய்தது போலிருந்தது. என்றாலும் இந்தக் கட்டிடங்கள் யாவும் ஒரு திட்டத்தின் பேரில் அமைக்கப்பட்டனவென்று நான் கேள்விப்பட்டேன். மத் தியிலே ஒரு மண்டபக் கோபுரம். இதுதான் கிறிஸ்தவக் கைதிகளுக்குத் தொழுகை இடமுமாகும். இதிலிருந்து சிறைக் கட்டிடங்கள் வரிசையாக அமைக்கப்பட்டிருந்தன. இது “நகர” சிறை; விஸ்தீரணம் குறைவு; எனவே கிடைக் கக் கூடிய இடத்தை யெல்லாம் உபயோகப்படுத்திக் கொள்ள வேண்டும்.

இந்த அவலட்சணமான கட்டிடங்களை முதன் முத லாகப் பார்த்துத் தெளிந்தேனோ இல்லையோ, பயங்கரமான காட்சி ஒன்று கண்ணில் பட்டது. என்னுடைய அறை யின் முன்பக்கத்திலிருந்த இரண்டு புகைபோக்கிகளின் வழி யாக கறுப்புப் புகை வெளியே ஏராளமாகக் கக்கிக்கொண் டிருந்தது. சில சமயங்களில் காற்றடித்து இந்தப் புகை, என் பக்கத்துக்கு வந்து என்னை மூச்சுத் திணற அடித்து விடும். இவைகள் சிறைச் சமையல் கட்டுகளின் புகை போக்கி களாகும். புகை இவ்வாறு ஆக்கிரமிப்புச் செய்து தாக் குவதைத் தடுக்க முகமூடிகள் தேவையென்று பின்னர் நான் சூப்பிரண்டுக்கு யோசனை சொன்னேன்.

என்னுடைய அலிப்புரச் சிறைவாசத்தின் துவக்கம் இனிப்பாயில்லை. செங்கல் கட்டிடங்களையே எதிர்ப்புறத்தில் சதா கண்டு கொண்டு, சமையல் கட்டுப் புகையை அப் படியே விழுங்க வேண்டி வருமோ என்று நினைத்து வருந்தி

னேன். முற்றத்தில் பச்சை கிடையாது, மரங்களுமில்லை; எல்லாம் தளவரிசை செய்தது. கட்டிடம் சுத்தமாய் இருந்தது. ஓரோரிடத்தில் தினசரி புகை படிவதால் சுத்தமாய் இல்லை. முற்றத்தில் முழுதும் பரந்த வெளி. பக்கத்திலிருந்த முற்றங்களிலிருந்த ஓரிரண்டு மரங்களின் நுனிகளைப் பார்க்க முடிந்தது. நான் சிறைக்கு வந்த சமயத்தில் அவைகளில் இலையே கிடையாது. மலரையும் காண முடியவில்லை. ஆனால் அவைகளிடம் சிறிது சிறிதாக மனோகரமான மாறுதல் தோன்றிற்று அவற்றின் கிளைகளிலிருந்து பச்சைத் துணுக்குகள் தலை நீட்டிக் கொண்டு வந்தன. மொட்டிலிருந்து புஷ்பங்கள் வந்து கொண்டிருந்தன. அவைகள் விரைவில் வளர்ந்து தங்களுடைய இனிமையான பச்சையினால் கிளைகளை மூடிக் கொண்டிருந்தன. இது இன்பமயமான மாறுதலாகும். இதனால் அலிப்புரச் சிறை கூட உற்சாகமும் சந்தோஷமும் நிறைந்ததாகக் காணப்பட்டது. இந்த மரங்களில் ஒன்றில் பருந்தின் கூடு ஒன்று இருந்தது. அதிலே எனக்குப் பிரியம். அதை அடிக்கடி கவனித்து வந்தேன். குஞ்சுகள் வளர்ந்து தொழில் இரகசியங்களை கற்றுக் கொண்டிருந்தன. சில சமயங்களில் அவைகள் வேகமாகக் கீழே பறந்து வந்து குறி தவறாமல் கைதியின் கையிலிருந்தும் வாயிலிருந்தும் கூட ரொட்டித் துண்டைப் பறித்துக் கொண்டு போய் விடும்.

அநேகமாக மாலையிலிருந்து காலை வரையில் நாங்கள் எங்களுடைய அறைகளில் பூட்டி வைக்கப்பட்டிருந்தோம். மாலைகளில் ஒரே குளிர்; எனவே பொழுது போக்குவது கஷ்டமாக விருந்தது. சேர்ந்தாற்போல் படித்தும் எழுதியும் அலுத்துப் போனேன்; எழுந்திருந்து அந்தச் சிறு அறையில் நடக்கத் துவக்குவேன். நாலைந்து தப்படிகள் முன்னால் செல்லுகிறது; அதே தப்படிகள் பின்னாலே வருவது. மிருகக் காக்ஷி சாலையில் கரடிகள் தங்கள் கூடுகளில் மேலும் கீழுமாக நடந்துகொண்டிருப்பது எனக்கு ஞாபகம் வந்தது. சில சமயங்களில் நடப்பதற்கும் அலுத்துப் போனால் என்னுடைய செல்வமான பரிகாரத்தை நாடுவேன். அதாவது சிரஸாசனம் செய்து தலை கீழாக நிற்பேன். இரவின் ஆரம்பம் அநேகமாக அமைதியுடன் இருக்கும். நகர ஒலிகள் காற்றில் மிதந்து கொண்டே வரும். டிராம் வண்டிகளின் சத்தம் கிராமபோன் அல்லது, வெகு

தூரத்தில் யாராவதொருவர் பாடும் சங்கீதத்தின் ஒலி! இந்த தூரத்திலிருந்து வரும் மெல்லிய சங்கித ஒலியைக் கேட்பது இனிமையாக விருந்தது. ஆனல் இரவிலே அமைதி அதிகமாகக் கிடையாது. ஏனெனில் காவலாளிகள் சதாகாலமும் அங்குமிங்கும் நடமாடிக் கொண்டிருப்பார்கள். ஒவ்வொரு மணி நேரமும் ஏதாவது சோதனை யிருக்கும். கையில் லாந்தர் கொண்டு வந்து எங்களில் யாரும் தப்பி ஓடி விடவில்லையே என்று நிச்சயப்படுத்திக் கொள்வதற்காக ஏதாவதொரு உத்தியோகஸ்தர் வருவார். விடியற்காலம் மூன்று மணிக்கு பேரிரைச்சல் கேட்கும். துடைக்கிற, தேய்க்கிற ஒலி; அப்பொழுது சமையலறை வேலை துவக்கம்.

வார்டர்களும் காவலாளிகளும் உத்தியோகஸ்தர்களும் குமாஸ்தாக்களும் மாகாண சிறையிலிருந்தது போலவே அவ்வளவு ஏராளமாக அலிப்புரச் சிறையிலும் இருந்தார்கள். இந்த இரண்டு சிறைகளிலும்சேர்ந்து 2,200 லிருந்து 2,300 வரை கைதிகள் இருந்தார்கள். அதாவது நைனி சிறையில் மட்டும் இருந்த கைதிகளின் எண்ணிக்கையாகும். ஆனல் இந்த இரண்டு சிறைகளிலும் தனித்தனியே இருந்த சிப்பந்திகள் நைனியைக் காட்டிலும் இரட்டிப்பு மடங்கு இருக்கும். பல ஐரோப்பிய வார்டர்களும் இந்தியச் சேனையில் பென்ஷன் பெற்ற உத்தியோகஸ்தர்களும் இங்கே வேலை பார்த்தார்கள். ஐக்கிய மாகாணத்தைக் காட்டிலும் கல்கத்தாவில் பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் ரொம்பவும் கடுமையாகவும், அதிகச் செலவோடும் வேலை செய்து வந்தது என்பது தெளிவு. சாம்ராஜ்யத்தின் வல்லமையை எப்பொழுதும் ஞாபகப்படுத்துவதற்கு அறிகுறியாக கைதிகள் உயர்ந்த உத்தியோகஸ்தர்கள் வரும்பொழுதெல்லாம் ஒரு சத்தம் போடவேண்டும். "சர்க்கார் சலாம்" என்று நீட்டி சத்தமிடவேண்டும். இந்தச் சத்தம் போடும்பொழுது கைதிகளின் உடம்புகள் அசங்கியமான சில தோற்றங்களை அடைய வேண்டியதாயிருக்கும். கைதிகள் இவ்விதக் கூச்சல் போடுவது என்னுடைய காதுகளில் பல தடவை வந்து எட்டும். சூப்ரண்டு தினசரி சோதனைக்காக சிறையைச் சுற்றிப் பார்க்கும்பொழுது இந்தச் சப்தம் நிச்சயமாய்க் கேட்கும். சூப்ரண்டு அவர்கள் சிறையில் "ஊர்வலம்" செல்லும்பொழுது பெரிய அரசாங்கக் குடையொன்றை அவருக்குப் பிடித்துக்

கொண்டுபோவார்கள். அந்தக் குடையின் நுனியை என்னுடைய ஏழடி உயரச் சுவரின் மேலிருந்து என்னால் பார்க்க முடியும்.

"சர்க்கார் சலாம்" என்று அசங்கியமாகக் கூச்சல் போடுவதும், அந்தச் சத்தம் செய்யும்பொழுது கட்டாயமாய் ஏற்படும் அங்கசேட்டைகளும் பழைய காலத்தின் பாக்கிகளா? அல்லது ஆவேசம் கொண்ட இங்கிலீஷ் உத்தியோகஸ்தர் ஒருவர் இவைகளைக் காண்பித்தாரா? எனக்குத் தெரியாது. ஆனால் அது ஒரு இங்கிலீஷ்காரனின் யுக்தி என்று நான் ஊகம் செய்கிறேன். அந்தக் கூச்சலில் வழக்கமான "ஆங்கிலோ-இந்திய தொனி" காணப்படுகின்றது. நல்லவேளையாக இந்தக் கூச்சல் ஐக்கிய மாகாணத்தில் கிடையாது. வங்காளம், அஸாம் இவைகளைத் தவிர வேறு எந்த மாகாணத்திலும் இது இல்லை. கட்டாயப்படுத்தி சர்க்கார் வல்லமைக்கு வணக்கம் செய்யச் சொல்லும் முறை மிகவும் இழிவானதென்று எனக்குத் தோன்றிற்று. வேறொரு வகையில் ஒரு மாறுதலை அலிபுரத்தில் கண்டு நான் சந்தோஷமடைந்தேன். அலிபுரச் சிறையில் சாதாரணக் கைதிகளுக்குக் கிடைக்கும் ஆகாரம் ஐக்கிய மாகாணத்தைக் காட்டிலும் மிகவும் உயர்ந்ததாக இருந்தது. மற்ற மாகாணங்களோடு ஒப்பிட்டுப் பார்த்தால் ஐக்கிய மாகாணச் சிறை ஆகாரம் மிகவும் கேவலமானது.

குளிர்காலம் விரைவாகப் போய்விட்டது. பின்னர் வசந்த காலம் ஓடிவந்தது. சிறிது சிறிதாக கோடையும் துவக்கிற்று. நாளுக்கு நாள் வெயில் கடுமை. கல்கத்தாவின் சீதோஷ்ணம் எனக்குப் பிடிப்பதேயில்லை. இரண்டொரு நாள்களிலே அதைக் கண்டு நான் அலுத்துப் போனேன். சிறையிலே நிலைமைகள் ரொம்ப கேவலமாயிருந்தன. நாளாக நாளாக என் உடம்பு மெலிந்துகொண்டே வந்தது. தேகப் பயிற்சிக்கு இடம் கிடையாது. நீண்ட காலம் அறையில் வைத்துப் பூட்டி விடுகிறார்கள். இதனால் என் உடம்பு கெட்டுப்போய் விட்டது. விரைவில் நான் எடை குறைந்து கொண்டு வந்தேன். பூட்டுகள், கம்பிகள், கதவுகள், சுவர்கள் இவைகளைக் கண்டு நான் ஆத்திரப்பட்டேன்!

ஒரு மாதம் சென்று அலிபுரத்தில் எனது முற்றத்துக்கு வெளியே தேகப் பயிற்சி செய்ய அனுமதி கிடைத்தது. இது இனிப்பான மாறுதலாகும். காலையிலும் மாலையிலும் பெரிய சுவரின் அடிவாரத்தில் மேலும் கீழுமாக உலவி நடப்பேன். வரவர அலிபுரச் சிறைக்கும் கல்கத்தா சீதோஷ்ணத்துக்கும் நான் பழகிப்போனேன். சமையலறை, அதன் புகை, அதன் பேரிரைச்சல் இவைகள் யாவும் பொறுக்கக் கூடிய தொந்தரவுகளாய் மாறி விட்டன. என் மனதிலே வேறு விஷயங்கள் நிரம்பி விட்டன. வேறு கவலைகள்; வெளியிலிருந்து வந்த செய்தி நன்றாயில்லை.

## LX

## ஜனநாயகம்—கீழ்நாட்டிலும் மேனாட்டிலும்

அலிப்பூர் சிறையில் நான் தீர்ப்புத் தண்டனை யடைந்த பிறகு தினசரிப் பத்திரிகை எனக்கு அனுமதிக்கப்படவில்லை. இது ஆச்சரியமாக விருந்தது. விசாரணைக் கைதியாயிருக் கையில் கல்கத்தா தினசரி "ஸ்டேட்ஸ்மென்" எனக்கு கிடைத்தது. ஆனால் எனது விசாரணை முடிந்த மறு நாள் இந்தப் பத்திரிகை நிறுத்தப்பட்டது. ஐக்கிய மாகாணத்தில் 1932-ம் வருஷம் முதல் அரசாங்கத்தார் சொல்லும் தின சரிப் பத்திரிகையொன்று "ஏ" கிளாஸ் அல்லது முதல் வகுப்பு கைதிகளுக்குக் கொடுக்கப்பட்டு வந்தது. இதே மாதிரி வேறு எல்லா மாகாணங்களிலும் வங்காளத்திலும் இதே விதி அனுஷ்டானத்தில் இருக்கும் என்று எண்ணிக் கொண்டிருந்தேன். தினசரிக்குப் பதிலாக வார "ஸ்டேட்ஸ் மென்" பத்திரிகை எனக்குத் தரப்பட்டது. இந்த வாரப் பத்திரிகை பென்ஷன் வாங்கிவாழும் இங்கிலீஷ் உத்தியோ கஸ்தர்களுக்கு உபயோகமாயிருக்கும் அல்லது இந்தியாவில் தொழில் நடத்தி விட்டு, இங்கிலாந்துக்குப் போய் விடும் முத லாளிமார்களுக்கு உபயோகமாயிருக்கும். அவர்களுக்குப் பிடித்தமான இந்தியச் செய்திகளை மட்டும் இந்த வாரப் பத்திரிகையில் காணலாம். அந்நிய நாட்டுச் செய்திகளே கிடையாது. அந்நிய நாட்டுச் செய்திகளை நான் கவன மாகப் படிப்பது வழக்கம். இந்தச் செய்திகள் கிடைக் கவில்லையே என வருந்தினேன். நல்ல வேளையாக "மாஞ் செஸ்டர் கார்டியன்" வாரப்பத்திரிகையை நான் வைத் துக்கொள்ளும்படியாக அனுமதி தரப்பட்டது. இதன் மூல மாக ஐரோப்பிய உலக விஷயங்களோடு என்னால் தொடர்பு கொள்ள முடிந்தது.

பிப்ரவரி மாதம் நான் கைது செய்யப்பட்டேன். அதே மாதம் விசாரணை. அந்த மாதத்தில் ஐரோப்பாவில் எழுச்சி களும், கடுமையான போராட்டங்களும் தோன்றின.

பிரான்சு தேசத்தில் கலக்கம் ஏற்பட்டு, பாஸிஸ்டு கலகங்கள் உண்டாயின. பின்னர் அந்நாட்டில் "தேசிய" அரசாங்கம் ஏற்பட்டது. இதைக் காட்டிலும் கேவலமாக ஆஸ்திரியாவில் சான்ஸலர் டால்பஸ் தொழிலாளர்களைச் சுட்டுக் கொன்று அங்கிருந்த ஜனநாயகக் கட்டிடத்தைத் தகர்த்தெறிந்துகொண்டு வந்தார். ஆஸ்திரியாவில் ரத்த வெள்ளம் என்ற செய்தி எனக்கு மிகுதியும் வருத்தத்தை உண்டாக்கிற்று. என்ன கேவலமான பயங்கரமான உலகம் இது! தன்னுடைய பரம்பரை உரிமைகளையும் சொத்துகளையும் காப்பாற்றிக் கொள்ள நினைக்கும் பொழுது மனிதன் எவ்வளவு அநாகரிகமாக ஆகிவிடுகின்றான்! ஐரோப்பா முழுதிலும், அமெரிக்காவிலும் பாஸிஸ்டு தத்துவம் ஓங்கி வளர்வதாகத் தோன்றிற்று. ஜெர்மனியில் ஹிட்லர் அதிகாரப் பதவியடைந்ததும், அவர் ஜெர்மனியின் பொருளாதாரத் தொல்லைகளுக்கு யாதொரு பரிகாரத்தையும் சொல்ல முடியாததால் அவருடைய ஆட்சி நீண்ட காலம் இருக்க முடியாது என்று எண்ணினேன். எனவே எல்லா இடங்களிலும் பாஸிஸ்டுதத்துவம் பரவி வந்தமையால் பிற்போக்கின் கடைசிக் குழி தோண்டப்பட்டு வருகிறது என்று என்னையே நான் தேற்றிக் கொண்டேன். பாஸிஸ்டு ஆட்சிக்குப் பிறகு மனித விலங்குகள் நிச்சயமாய் உடைந்து போகும். இவ்வாறு எண்ணினேன். எண்ணமாவது! என்னுடைய ஆசை! என்னுடைய ஆசைக்கு எண்ணமென்று பெயர் வைத்தேன். இந்த பாஸிஸ்டு அலை இவ்வளவு எளிதாகவும் இவ்வளவு விரைவிலும் மறைந்துபோக முடியுமா? பாஸிஸ்டு கட்சி எதேச்சாதிகாரிகளுக்கு அந்தந்த நாடுகளில் பொறுக்க முடியாதபடி நிலைமைகள் ஏற்பட்டாலும் தாங்கள் மறைந்து போவதைக் காட்டிலும் மற்றைய தேசங்களைப் போரில் கொண்டு புகுத்தி விட எத்தனிக்க மாட்டார்களா? இத்தகைய போராட்டத்தின் விளைவு என்ன?

இதனிடையே பல ரகமான பாஸிஸ்டு ஆட்சிகள் தோன்றின. ஸ்பெயினில் நல்லவர்களின் குடியரசு—வழிதப்பிப்போய் பிற்போக்கில் ஆழத்தில் அகப்பட்டுக் கொண்டு தவிக்கத் துவக்கிவிட்டது. அதனுடைய யோக்கியப் பொறுப்புவாய்ந்த தலைவர்கள் பகிரங்கமாகப் பிரயோகம் செய்த நேர்த்தியான சொல்தொடர்கள் யாவும் மறைந்து போய் குடியரசை சருக்கி விழாமல் காப்பாற்ற முடியவில்லை. உல

கத்தில் எங்கேயும் மிதவாத (தாராளக் கட்சி) மனப்பான் மையால் நவீன நிலைமைகளைச் சமாளிக்க முடியவில்லை என் பது தெளிவாய்ப் போய் விட்டது. அந்த மனப்பான்மை சொற்களையும், சொல் தொடர்களையும் பிடித்துக் கொண்டு தொங்குகிறது. ஆகவே காரியத்துக்குப் பதிலாக வார்த்தை களைக் கொண்டு சமாளித்து விடலாம் என்று எண்ணி ஏமாந்தது. நெருக்கடி ஏற்பட்டதும் படக் காட்சியில் ஒரு ஸீன் மறைந்து போவதுபோல அதுவும் மறைந்து போய் விட்டது.

ஆஸ்டிரியப் படுகொலையைப்பற்றி "மான்செஸ்டர் கார் டியன்" பத்திரிகை எழுதிய தலையங்கங்களை மிகுந்த கவ னத்தோடும் உருக்கத்தோடும் படித்தேன். இந்தப் பயங்கரப் போராட்டத்திலிருந்து எத்தகைய ஆஸ்டிரியா வெளித் தோன்றுகிறது? ஐரோப்பாவில் மிகவும் பிற்போக்கான கூட் டத்தார்களால் துப்பாக்கிகளையும், மெஷின் பீரங்கிகளையும் கொண்டு அரசாளப்படும் ஆஸ்டிரியா. இங்கிலாந்து சுதந் திரத்துக்காகப் பாடுபடுகின்றது என்பது உண்மையானல் அதனுடைய முதன் மந்திரி இந்த ஆஸ்டிரியப் படுகொலை யைப்பற்றி ஏன் ஒன்றுமே சொல்லவில்லை? முதன் மந்திரி எதேச்சாதிகாரிகளைப் பாராட்டுவதை நாம் கேள்விப்பட் டிருக்கிறோம். ஒரு ஜாதியாரின் ஆன்மாவை உயிர்த் துடிப் புடன் சர்வாதிகாரிகள் இருக்கச் செய்கிறார்கள் என்றும், அவர்கள் அந்த நாட்டுக்கு புதிய ஊக்கமும் புதிய தரிசன மும் கொடுக்கிறார்கள் என்றும் பிரிட்டிஷ் முதன் மந்திரி சொல்ல நாம் கேட்டிருக்கிறோம். எந்த தேசத்தில் நேர்ந்தா லும் கொடுங்கோல்களைப் பற்றி இரண்டொரு வார்த்தைக ளாவது சொல்ல இங்கிலாந்தின் முதல் மந்திரி கடமைப் பட்டிருக்கிறார். கொடுங்கோல் மனிதனுடைய உடலைக் கொன்று விடுகிறது. இது உறுதி. இதைக் காட்டிலும் நிச் சயம் எது வென்றால் அது ஒரு நாட்டின் ஆன்மாவை அடியோடு அழித்து விடுகின்றது" என்று "மாஞ்செஸ்டர் கார்டியன்" எழுதுகிறது.

"மாஞ்செஸ்டர் கார்டியன்" சுதந்திரத்துக்காகப் பாடு படுவதாயிருந்தால், அதே சுதந்திரம் இந்தியாவில் நசுக்கப் படும் பொழுது ஏன் ஒன்றுமே சொல்லவில்லை? இந்தியா வில், நாம் உடல் துன்பங்களை மட்டுமல்ல, ஆன்மாவின்

பயங்கரமான வேதனைகளையும் அனுபவித்து வருகிறோமே! "ஆஸ்திரியாவின் ஜனநாயகம் அழிக்கப்பட்டுவிட்டது. ஆனால், அது அழிந்து போகு முன்னர் போராடியே விழுந்தது. எனவே அந்த வீரத்தனத்தால், மனிதவர்க்கத்துக்கே, ஒரு ஆவேசம் தரத்தக்க வரலாறை உண்டாக்கி விட்டது. எப்பொழுதோ ஒருநாள் அந்த வரலாற்றின் வீர ஆவே சத்தால், ஐரோப்பா மீண்டும் சுதந்திரம் பெறாதா?" "சுதந்திரமில்லாத ஐரோப்பா மூச்சு நின்று விட்டதாகக் கருதலாம். ஆரோக்கியத் தன்மைகளின் வெள்ளப் பெருக்கு அங்கே இல்லை. கொஞ்சம் கொஞ்சமாக மூச்சுத் திணறுதல் துவக்கி விட்டது. மிகவும் முரட்டுத்தனமான வெளி ஆட்டத்தினால், அல்லது பயங்கரமான உள் நடுக்கத்தினால், இந்தப் பக்கமும் அந்தப் பக்கமும், ஆடினாலன்றி அதை நெருங்கி வரும் விக்கலைத் தடுக்க முடியாது. ரைன் நதியிலிருந்து யூரல் மலை வரையிலும் ஐரோப்பா ஒரு அகண்டமான சிறையாக இப்பொழுது இருக்கிறது." 'மாஞ்செஸ்டர் கார்டியனி'ல் காணும் மேற்கூறிய உருக்கமான வாக்கியங்கள் என்னுடைய உள்ளத்தில் பதிந்தன. ஆனால் எனக்கு ஒரு ஆச்சரியம். இந்தியாவைப்பற்றி என்ன? 'மாஞ்செஸ்டர் கார்டியனோ' அல்லது இங்கிலாந்தில் உண்மையான சுதந்திரப் பிரியர்களாக வாழும் பலரோ, நம்முடைய தலைவிதியைப்பற்றி, ஏன் இவ்வளவு மறந்தாற்போல இருக்க வேண்டும்? ஆஸ்டிரியாவிலும் வேறு இடங்களிலும் அவர்கள் ஆத்திரத்துடன் கண்டிக்கும் நிலைமையை, இந்தியாவில் அவர்களால் ஏன் காண முடியவில்லை?

19-ம் நூற்றாண்டின் பரம்பரையில் பயிற்சிபெற்ற இங்கிலீஷ் லிபரல் கட்சித் தலைவர் ஒருவர் இருபது வருடங்களுக்கு முன் மகாயுத்தம் ஆரம்பிக்கும் சமயத்தில் ஒன்று சொன்னார். அவர் மிகவும் பெரியவர்; மனப்பான்மையில் மிகவும் எச்சரிக்கை கொண்டவர்; அபூர்வமான சொல்லடக்கம் வாய்ந்தவர். அவர், "மிருகபலம், சட்டத்தை மிதித்து வெற்றி பெறும் கோரமான காட்சியை பிரிட்டன் மௌனமாக, சாட்சியைப்போல்பார்த்துக் கொண்டிருப்பதைக் காட்டிலும், அது சரித்திரத்தின் பக்கங்களிலிருந்து அடியோடு மறைந்து போவது உசிதம் எனத் தோன்றுகிறது" என்று சொன்னார். தைரியமான கருத்து! நயமாகச் சொல்லப்பட்டிருக்கிறது! இந்தக் கருத்தை ஆதரித்துக் காப்பாற்றுவதற்காக,

லட்சக்கணக்கான வீர இளைஞர்கள் இங்கிலாந்தில் உயிர் துறந்தார்கள். திரு.ஆஸ்க்வித் அவர்கள்சொன்னதைப்போல் இந்தியன் ஒருவன் சொல்லத் துணிவானாகில், அவன் கதி என்ன ஆகும்? ஒரு நாட்டின் மனப்பான்மை சிக்கலான சங்கதியாகும். நாம் எவ்வளவு நியாயமாயும் பட்சபாதமில்லாமலும் இருப்பதாக நம்மிற் பெரும்பான்மையோர் எண்ணிக் கொண்டிருக்கிறோம். அதோ அவன் இருக்கிறானே, அதோ அந்த தேசமிருக்கிறதே, அவர்கள்தான் எப்பொழுதும் தப்பிதம் செய்வதுபோல நம்முடைய எண்ணம்! எங்கோ ஒருபக்கத்தில் ஒளிந்து கொண்டு, நமது மனதுகளில் ஒதுக்கமான ஓரிடத்தில் ஒரு எண்ணம் இருந்து வருகிறது. மற்றவர்களைப்போல நாம் அல்ல என்ற எண்ணம். இதை நாம் அழுத்தமாக வெளியிலே சொல்லிக்கொள்ளுவதில்லை. நாகரிக, மரியாதை உணர்ச்சியால் வெளிச் சொல்லுவதில்லை. மற்றைய நாடுகளின் போக்குகளை நிர்வாகம் செய்யும் சாம்ராஜ்யக் கூட்டத்தார்களாக இருக்கும் பாக்கியத்தை நாம் பெற்றோமானால், இந்த உலகத்தில் இப்பொழுது இருப்பது எல்லாம் நன்மைக்கே என்று நம்பிக்கொள்ளாமலிருக்க முடியாது. மாறுதலுக்காக கிளர்ச்சி செய்கிறவர்கள் சுயநலவாதிகள் அல்லது ஏமாந்தவர்கள் அல்லது நம்மிடமிருந்து பெற்ற நன்மைகளை மறந்து நமக்கு நன்றி செலுத்தாதவர்கள் என்று நாம் இயற்கையாக எண்ணிவிடுகிறோம். பிரிட்டிஷார் தனித்து வாழும் கூட்டத்தார். நீண்ட காலமாக அவர்களுக்கு வெற்றியும் செழிப்பும். ஆகவே அவர்கள் மற்ற எல்லோரையும் இளப்பமாகக் கருதுகிறார்கள். யாரோ ஒருவர் சொன்னதுபோல "கலே துறைமுகத்திலிருந்து எல்லோரும் நீகிரோவர்கள்" என்பது அவர்களுடைய எண்ணம். ஆனால் இது ஒரு பொதுவான கருத்து ஆகும். ஒருக்கால் பிரிட்டனில் இருக்கும் மேல்வகுப்பார்கள் உலகத்தைக் கீழ்க்கண்டவாறு வகுப்பார்கள் என்று தோன்றுகிறது.

முதலாவது பிரிட்டன். அதற்குப் பிறகு ஒரு நீளமான கோடு. இரண்டாவது, பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகள் (அந்த நாடுகளில் வசித்து வரும் வெள்ளையர்களைப் பற்றி மட்டுமே பேச்சு.) அடுத்தாற்போல அமெரிக்கா. இங்கேயும் ஆங்கிலோ-சாக்ஸன் வர்க்கத்திலிருந்து பிறந்தவர்களுக்குத்தான் மதிப்பு. மற்றவர்களுக்குக் கிடையாது. மூன்றாவது

மேல் ஐரோப்பா. நான்காவது மற்றைய ஐரோப்பா. ஐந்தாவது தென் அமெரிக்க வெள்ளைக்கார லத்தீன் வர்க்கத்தார். இதற்கடுத்தாற்போல மிக நீளமான ஒரு கோடு. ஆறாவது பழுப்பு, மஞ்சள், கறுப்பு வர்ணத்தார்கள் வாழும் ஆசியா, ஆப்பிரிக்கா. இவர்கள் எல்லோரும் ஒரு கதம்பம்.

மேற்கூறிய பிரிவுகளில் நாமோ அடியிலிருக்கிறோம். நம்மை ஆளுபவர்களோ உச்சாணியில் இருக்கிறார்கள். எனவே மேலே வெகு தூரத்திலிருந்து நம்மை அவர்கள் பார்க்க வேண்டியிருப்பதால் அவர்களுடைய பார்வை மங்கிப்போய் விடுகிறது. நாம் ஜனநாயகத்தையும் சுதந்திரத்தையும் பற்றிப் பேசினால், அவர்கள் ஆத்திரப்பட மாட்டார்களா? இந்தச் சொற்கள் நாம் பிரயோகம் செய்வதற்காக அமைக்கப்படவேயில்லை. எதிர்காலத்தில் நீண்ட காலமானாலும், இந்தியாவில் ஜனநாயக அமைப்புகள் நன்றாக வேலை செய்ய முடியும் என்று நமக்குத் தோன்றவில்லை என பிரிட்டிஷ் லிபரல் கட்சியின் பெரிய தலைவர்களில் ஒருவரான ஜான் மார்லி சொல்லவில்லையா? கனடாவின் கம்பிளிச் சட்டையைப் போல, இந்தியாவின் சீதோஷ்ண ஸ்திதிக்கு ஜனநாயகம் ஏற்றதல்லவாம்! பின்னர் பிரிட்டிஷ் தொழிற்கட்சி அபேதவாதத்தைத் தாங்கி நிற்பவர்கள், திக்கற்றவர்களைப் பாதுகாக்கும் பொறுப்பைக் கொண்டவர்கள்—1924-ம் வருஷத்தில் மந்திரிப் பதவியை யடைந்ததும் தங்களுடைய வெற்றிச் செருக்கால், வங்காள அவசரச் சட்டத்தை புதுப்பித்தார்கள். அதே பிரிட்டிஷ் தொழிற்கட்சி இரண்டாம் முறை மந்திரிப் பதவியை அடைந்த பொழுது நம்முடைய கதி இன்னும் மோசமாகப் போய்விட்டது. அவர்களுக்கு நம்மிடத்தில் கெட்ட எண்ணம் கிடையாது என்பது நிச்சயம். "அருமைச் சகோதரர்களே'' என்று பிரிட்டிஷ் தொழிற்கட்சியார் பாதிரிமார்கள் மாதாகோவிலில் பிரசங்கம் செய்வதுபோல நம்மை அழைக்கும் பொழுது அவர்களுக்கு நல்லார்களும் பெரியார்களும் இயல்பாய் அடைகிற ஆத்ம திருப்தி ஏற்பட்டு விடுகின்றது. ஆனால் நாம் அவர்களைப்போல அல்ல என்ற எண்ணம் அவர்களிடம் பூராவாக இருக்கிறது. ஆகவே அவர்கள் நம்மை வேறு அளவுகளைக் கொண்டு அளக்க வேண்டாமா? இங்கிலீஷ்காரன் ஒருவனும் பிரெஞ்சுக்காரன் ஒருவனும் ஒரே மாதிரியாக யோசனை செய்வது கஷ்டம். ஏனென்றால் அவர்களுக்குள்

நாகரிகத்திலும் பாஷையிலும் வேற்றுமைகள் இருக்கின்றன. அவ்வாறு இருக்க ஒரு இங்கிலீஷ்காரனுக்கும் ஒரு ஆசியாக்காரனுக்கும் இடையே எவ்வளவு அதிகமான வித்தியாசம் இருக்கவேண்டும்? இந்திய சீர்திருத்தப் பிரச்னையைப் பற்றி சமீபத்தில் பிரபுக்கள் சபையில் விவாதம் நேர்ந்தது. அவைகளில் ஒன்று லிட்டன் பிரபு செய்த பிரசங்கம். அவர் ஒரு இந்திய மாகாணத்தின் மாஜி கவர்னர். சிறிது காலத்துக்கு அவர் வைசிராயாகவும் வேலை பார்த்தார். அனுதாபமும், தாராள நோக்கும் கொண்ட கவர்னர் என்று அவர் அடிக்கடி குறிப்பிடப்படுகிறார். 'மொத்தத்தில் காங்கிரஸ் அரசியல் வாதிகளைவிட இந்திய அரசாங்கம் இந்தியாவுக்குப் பிரதிநிதியாக விளங்குகிறது. இந்திய அரசாங்கம், உத்தியோகஸ்தர்கள், சேனை, போலீஸ், சமஸ்தானாதிபதிகள், போர் படைகள், ஹிந்து-முஸ்லீம்கள், இவைகள் பெயரால் பேசமுடியும். ஆனால் காங்கிரஸ் அரசியல் வாதிகளோ, பெரிய இந்திய வகுப்புகளில் ஒன்றின் சார்பாகக்கூடப் பேசமுடியாது" என்று அவர் பேசினாராம். அவர் தாம் சொன்னதை விளக்குவதற்காக மீண்டும் "இந்தியப் பொது ஜன அபிப்பிராயம் என்பதைப்பற்றி நான் பேசும் பொழுது, நான் யாருடைய ஒத்துழைப்பை நாடவேண்டியிருந்ததோ, யாருடைய ஒத்துழைப்பை எதிர்காலத்திலும் கவர்னர்களும் வைசிராய்களும் நாடவேண்டுமோ, அவைகளைப்பற்றி நினைத்துக் கொண்டிருக்கிறேன்" என்று சொன்னார்.

அவருடைய பேச்சினின்றும் இரண்டு விநோதமான குறிப்புகள் வெளிவருகின்றன. இந்தியா என்றால் பிரிட்டிஷாருக்கு உதவியாயிருக்கும் மக்கள் என்று அர்த்தம். இந்திய அரசாங்கம்தான் இந்தியாவின் பிரதிநிதி. ஆகவே, இந்தியாவில் அது ஜனநாயகத்தன்மை வாய்ந்த அமைப்பு; இந்த வாதத்தை கூச்சமில்லாமல் வெளிச் சொல்லலாமென்று அவர் நினைப்பதிலிருந்து சூயஸ் கால்வாய்க்கு இந்தப் பக்கத்தில் இங்கிலீஷ் வார்த்தைகளுக்கு அர்த்தம் மாறிப்போகிறது என்று காண்பிப்பதாகும். இந்த வாத முறையில், அடுத்தபடியாக, எதைச் சொல்லலாமென்றால்,

கொடுங்கோலரசாட்சிதான் பிரதிநிதித்துவம் கொண்டதும் ஜனநாயகத்தன்மை வாய்ந்ததுமாகும்! ஏனெனில், அரசன் எல்லோருக்கும் பிரதிநிதி என்று கட்சிசொல்லலாமல்லவா? இறுதியில் அந்தப் பழைய தத்துவத்திற்கு வந்துவிடுகிறோம். மன்னன் ஆண்டவனுடைய பிரதிநிதி. "நான் தான் அரசாங்கம்" என்று பிரஞ்சு மன்னன் லூயி சொல்லவில்லையா.

உள்ளபடியே எதேச்சாதிகாரத்தைக் கூட ஆதரிக்கும்படியாக கீர்த்திபெற்ற கனவான் ஒருவர் இருக்கிறார். அவர் ஸர் மால்காம் ஹெய்லி. அவர் இந்திய சிவில் சர்விஸ் கூட்டத்தின் ஆபரணம். அவர் ஐக்கிய மாகாண கவர்னர் என்ற முறையில் 1934-ம் வருஷம் நவம்பர் மாதம் 5-ந் தேதி, காசியில் பேசுகையில் "சுதேச சமஸ்தானங்களில் கொடுங்கோன்மையைத் தழுவிய எதேச்சாதிகாரம் தேவை' என்று சொன்னார். அவருடைய யோசனை தேவையில்லை. ஏனெனில், எந்த இந்திய சமஸ்தானமும் தன் சொந்த விருப்பத்தோடு எதேச்சாதிகாரத்தை விட்டுவிடப் போவதே இல்லை. ஐரோப்பாவில் ஜனநாயகம் தோற்றுக்கொண்டு வருவதால், எதேச்சாதிகாரம்தான் தேவையென்று கட்சி பேசி அதற்கு முயற்சி நடை பெற்று வருகின்றது.

"உலகத்தின் எல்லாப் பகுதிகளிலும் பார்லிமெண்டு முறையைத் தழுவிய ஜனநாயகம் நசித்துக்கொண்டு வருகையில் தீவிர சீர்திருத்தங்கள் வேண்டுமென்று கிளர்ச்சி செய்வது ஆச்சரியமாயிருக்கிறது" என்று மைசூர் திவான் ஸர். மீர்ஸா இஸ்மெயில் சொல்லுகிறார். மேலும் "அனுபவ நோக்கங்களைக்கொண்டு பார்த்தால் நம்து தற்போதைய அரசியலமைப்பில் போதிய ஜனநாயகம் இருக்கின்றது என்று அரசாங்கத்தின் மனச்சாட்சி உறுதியாய்க் கூறுகின்றது". என அவர் கூறுகிறார். மைசூரின் மனச்சாட்சி என்றால் மகாராஜாவும் அவருடைய திவானும் என்று அர்த்தம். மைசூரில் இப்பொழுது நடை முறையில் இருந்து வரும் ஜனநாயகத்திற்கும் எதேச்சாதிகாரத்திற்கும் அடையாளமே தெரியாது.

ஜனநாயகம் இந்தியாவுக்குப் பொருத்தமில்லையானால் அது எகிப்துக்கும் பொருத்தமில்லைபோல் தோன்றுகிறது.

இப்பொழுதுதான் கெய்ரோ நிருபர் எழுதிய நீண்ட கடிதத்தை "ஸ்டேட்ஸ்மென்" பத்திரிகையில் படித்தேன். (இந்த தினசரி இப்பொழுது சிறையில் எனக்குக் கொடுக்கப்பட்டு வருகிறது) எகிப்திய முதல் மந்திரி நாஸிம்பாஷா செய்த அறிவிப்பிலிருந்து "எகிப்தில் பொறுப்பு வாய்ந்த ஜனங்களுக்கு ஏகப்பட்ட திகில் உண்டாயிருக்கிறது. அவர் அரசியல் கட்சிகளில் முக்கியமாக வாப்டுக் கட்சியின் கூட்டுறவை நாடி ஒரு மகாநாடு கூட்ட எத்தனித்திருக்கிறார். மகாநாடு முடியாமற் போனால் சர்வஜன சபைக்காக தேர்தல் வேண்டுமென்கிறார். அதாவது புதிய அரசியலமைப்பை ஆக்கிக்கொள்ளுவதற்கு இது யோசனை ஆகும். இப்படிச் செய்தால் மீண்டும் எகிப்தில் ஜனங்கள் விரும்பும் ஜனநாயக ஆட்சி வந்துவிடுவது நிச்சயம். ஆனால் அனுபவத்திலிருந்து அத்தகைய ஆட்சி எகிப்துக்கு விபத்தாக முடியும் என்று தெரிந்து விட்டது. ஏனெனின் கடந்த காலத்தில் பொது ஜனங்களின் வெறிகளைத் திருப்தி செய்யும் வகையில் அரசாங்கம் தனது போக்கை அமைத்துக் கொள்ள வேண்டியதாயிற்று. எகிப்தியர்களையும், எகிப்திய அரசியலின் போக்கின் உள் அந்தரங்கங்களையும் தெரிந்துகொண்டவர்களுக்குத் தேர்தலில் மீண்டும் வாப்டுக் கட்சியாருக்கு பெரும்பான்மையில் வெற்றி கிடைக்கும் என்று நிச்சயமாகத் தெரியும். ஆகவே இப்படி நேராமல் தடுப்பதற்கு ஏதேனும் செய்தால் ஒழிய வெகு சீக்கிரத்தில் பூரண ஜனநாயக உணர்ச்சியும், அந்நியப் பகைமையும், புரட்சித் தன்மையும் வாய்ந்த அரசியல் நம் மேல் சவாரி செய்யும்" என்று அந்த நிருபர் எழுதுகிறார்.

வாப்டுக் கட்சியின் பிரசாரத்துக்கு எதிரிடையாக அரசாங்கம் தனது செல்வாக்கை உபயோகப்படுத்தி தேர்தலை நடத்தவேண்டுமென்று எகிப்திய முதல் மந்திரிக்கு (பிரிட்டிஷாரால்) யோசனை சொல்லப்பட்டது. ஆனால் முதல் மந்திரியோ சட்டத்துக்குக் கட்டுப்பட்ட மனப்பான்மை கொண்டவர். யோசனையை ஏற்றுக் கொள்ள மறுத்து விட்டார். இனி என்ன செய்வது? "இத்தகைய ஆட்சிமுறை திரும்பி வருவதை பிரிட்டிஷ் அரசாங்கம் பொறுக்கமுடியாது என்று தாக்கீது அனுப்பவேண்டும்" என்று பிரிட்டிஷ் மந்திரிமார்களை செய்யச் சொல்ல வேண்டுமென்று மாற்று யோசனை கூறப்பட்டது. லண்டன் ஒயிட் ஹால் (பிரிட்

டிஷ் அரசாங்கத்தின் தலைமைஸ்தானம், என்ன ஏற்பாடுகள் செய்யும் அல்லது செய்யாது என்பதும் எகிப்தில் என்ன நேரும் என்பதும் எனக்குத் தெரியாது. ஆனால் சுதந்திரப் பிரியனான இங்கிலீஷ்காரனொருவன் இந்த வாதத்தைக் கையாளும்பொழுது எகிப்திய, இந்திய நிலைமையின் சிக்கல்களைத் தெரிந்து கொள்ள அது நமக்கு ஒத்தாசையாயிருக்கின்றது.

"ஸ்டேட்ஸ்மென்" பத்திரிகை பின்வருமாறு தலையங்கத்தில் எழுதுகிறது:—"சாதாரண எகிப்திய வாக்காளனுடைய வாழ்க்கைப் பழக்க வழக்கமும், மனோபாவமும், ஜனநாயகம் எதிலிருந்து தோன்றுகின்றதோ, அத்தகைய மனோபாவத்துக்கும் பழக்க வழக்கத்துக்கும் ஒவ்வினதல்ல என்பதுதான் அடிப்படையான தீமையாகும். ஐரோப்பாவில் பல கட்சிகளின் தோற்றத்தினால், ஜனநாயகங்கள் அடிக்கடி சீர்குலைந்து போகின்றன. எகிப்திலோ தொல்லை வேறுவிதம் அங்கே வாப்டு என்று ஒரே ஒரு அரசியல் கட்சிதான் இருக்கின்றது" இவ்வாறு "ஸ்டேட்ஸ்மென்" பத்திரிகை மனோபாவம் ஜனநாயகத்துக்கு ஒவ்வாத வகையை விளக்கிக் காண்பிக்கிறது. இந்தியாவில் நம்முடைய பல திறப்பட்ட வகுப்புக் கூட்டங்கள் ஜனநாயக அபிவிருத்திக்கு குறுக்கே நிற்கின்றன என்று சொல்லப்படுகிறது. என்றாலும் இந்த வகுப்புப் பிணக்குகள் நிலைத்தபடியாக இருக்க முயற்சிகள் நடைபெறுகின்றன. நமக்குள் ஒற்றுமை போதவில்லையென்று மேலும் சொல்லப்படுகிறது. எகிப்திலோ பல வகுப்புகள் கிடையாது. பூரணமாக அரசியல் ஒற்றுமை அந்த நாட்டார்களுக்குள் பரவி நிற்கிறது. என்றாலும் இந்தப் பரிபூரணமான ஒற்றுமையே, ஜனநாயகத்துக்கும் சுதந்திரத்துக்கும் தடையாக இருக்கிறதாம்! உண்மையிலேயே ஜனநாயகத்தின் பாதை மிகவும் "குறுகலாய்"த்தான் இருக்கவேண்டும்! கீழ்நாட்டுக்கு ஜனநாயகம் என்றால் ஒன்றே ஒன்றைத்தான் குறிப்பிடும் போலிருக்கிறது! ஆளும் சாம்ராஜ்ய வர்க்கத்தாரின் கட்டளைகளைச் சிரமேற்கொள்ளுவதும் அந்த வர்க்கத்தின் உரிமைகளையும் லாபங்களையும் பாதிக்காத வழியில் நடந்துகொள்ளுவதும் தான் ஜனநாயகத்தின் பொருளாகும். இந்த நிபந்தனைக்குக் கட்டுப்பட்டு ஜனநாயக சுதந்திரம் தங்கு தடையில்லாமல் செழித்தோங்கலாம்!

# LXI

## திக்கற்ற என் மனது

"புல் குளிமையாயும் இன்பமாயும் எங்கே இருக்கிறதோ, அங்கே எனது தலையைச் சாய்க்க நான் ஆசைப்படுகிறேன். அம்மா! உனது காலில் அலுத்துப் படுத்துக் கிடக்கும் குழந்தையினிடமிருந்து எல்லாக் கனவுகளும் பறந்தோடி விட்டனவே!''

ஏப்ரல் மாதம் வந்தது. இனிப்பு இல்லாத, கலக்கத்தைத் தரும் வதந்திகள் வெளியே இருந்து என்னுடைய அலிபுரச் சிறையறைக்கு வந்து சேர்ந்தன. காந்திஜீ சட்ட மறுப்பை வாபஸ் வாங்கிக் கொண்டார் என்று ஒருநாள் அகஸ்மாத்தாக சிறை சூப்பிரண்டு என்னிடம் தெரிவித்தார். இதைவிட அதிகமாக ஒன்றும் எனக்குத் தெரியவில்லை. இந்தச் செய்தி வரவேற்கக் கூடியதல்ல. பல ஆண்டுகளாக நான் என்னுடைய உயிராக மதித்து வந்த ஒன்று முடிவடைந்ததைக் குறித்து நான் மிகுதியும் வருத்தப்பட்டேன். என்றாலும் இத்தகைப முடிவு ஒன்று வரத்தான் செய்யும் என்று எனக்குள்ளாகவே வாதம் செய்து கொண்டேன். தற்காலிகமாகவாவது சட்டமறுப்பியக்கம் எப்பொழுதேனும் நிறுத்திவைக்கப் படத்தான்வேண்டும் என்பது எனக்கு நன்றாய்த் தெரிந்த விஷயம். எத்தகைய விளைவுகளையும் கருதாமல் தனி நபர்கள் சட்டமறுப்பு செய்துகொண்டே போகலாம். ஆனால் தேசியப் பொது அமைப்புகள் இவ்வாறு வேலை செய்யா. தேசத்தின் மனப்பான்மையையும், பெரும்பான்மையான காங்கிரஸ்காரர்களின் உள்ளத்தையும் காந்திஜீ சரியாக உணர்ந்து கொண்டார் என்பதில் எனக்குச் சந்தேகமே இல்லை. இந்தப் புதிய விளைவு எனக்கு இனிப்பில்லாமலிருந்தும் எப்படியோ அதோடு ஒட்டிக்கொண்டு என்னைத் தேற்றிக் கொள்ள முயன்றேன்.

பழைய சுயராஜ்யக் கட்சியை உயிர்ப்பித்தெழச் செய்து சட்டசபைகளைக் கைப்பற்ற வேண்டும் என்ற புதிய

ஏற்பாட்டுக்கு முயற்சி நடப்பதாயும் நான் கேள்விப்பட்டேன். இந்த விளைவு தவிர்க்க முடியாதது என்று தோன்றிற்று.எதிர்காலத்தில் காங்கிரஸ் தேர்தல்களினின்றும் விலகி நிற்க முடியாது என்பது எனது நீண்ட காலக் கருத்து ஆகும். நான் சிறைக்கு வெளியே இருந்த ஐந்துமாத காலத்தில், இந்தச் சட்டசபை மனப்பான்மையைக் கலைக்க முயற்சி செய்தேன். ஏனென்றால், இந்த ஏற்பாட்டினால் சட்டமறுப்பில் கவனம் குறைந்து போகும். மேலும் காங்கிரஸ்காரர்களைப் பெரிதும் கலக்கி வரும் ஜனநிர்மாண மாறுதலுக்கான புதிய கருத்துக்களிலும் கவனம் செல்லாது என்று நான் எண்ணினேன். நெருக்கடி நீடிப்பதில் பாதகமில்லை. ஏனென்றால் அப்பொழுதுதான் இந்தக் கருத்துகள் கற்றார்களிடமும் மற்றார்களிடமும் நன்றாகப் பரவும். அரசியல் பொருளாதாரத் துறைகளில் அஸ்திவாரமாகக் கிடக்கும் உண்மைகள் அப்பொழுதுதான் தெளிவாகக் கண்ணில் படும். "எத்தகைய அரசியல் நெருக்கடி ஏற்பட்டாலும் அது உபயோகமானதுதான். ஏனென்றால், அது மறைந்து கிடந்ததை வெட்ட வெளிக்குக் கொண்டு வந்துவிடுகிறது. அரசியலில் ஈடுபட்டுக்கிடக்கும் உண்மையான சக்திகளை வெளிக் காண்பிக்கின்றது. அது பொய்களையும் ஏமாற்றுச் சொற்களையும் கட்டுக் கதைகளையும் வெளிப்படுத்தி விடுகிறது. எது உண்மை என்பதைக் கட்டாயமாக ஜனங்களுக்கு அறிவுறுத்துகின்றது. அது விரிவாக எல்லா சங்கதிகளையும் வெளித்தோற்றுவிக்கிறது" என்று லெனின் எங்கேயோ ஓரிடத்தில் கூறுகிறார்.

இந்த முறையினால் காங்கிரஸ் தெளிவோடும் குறிப்பிட்ட லட்சியத்தோடும் நெருக்கம் கொண்ட வலுவான அமைப்பாக மாறும் என்று எண்ணினேன். பலவீனமான சில அம்சங்கள் வெளிப் போய்விடலாம். அதனால், காங்கிரசுக்கு நஷ்டமே இல்லை. சட்டமறுப்பை நிறுத்தி சட்ட வரம்புக்குட்பட்ட முறைகளை காங்கிரஸ் கைக்கொள்ள வேண்டியதற்கு காலம் வந்தால் அப்பொழுதும் காங்கிரஸின் உயிர்நாடியான தீவிர வாதிகள் இந்த முறைகளை ஏற்றுக்கொண்டு சட்டசபைப் பிரவேசத்தை நமது இறுதிலட்சியத்துக்குப் பயன்படுமாறு உபயோகப்படுத்திக்கொள்ள முடியும். அந்தக் காலம் அநேகமாக வந்துவிட்டது. ஆனால் காங்கிரஸில் சட்ட மறுப்புக்கும் உறுதியான வேலைக்கும் முது

கெளும்பு போலிருந்த ஜனங்கள் திரைக்குப் பின்னே போய் சட்ட மறுப்பில் பங்கெடுத்துக் கொள்ளாத மற்றவர்கள் சட்டசபை ஏற்பாட்டில் தலைமை வகிக்க முன் வந்ததைக் கண்டு நான் திகிலடைந்து போனேன்.

சில நாட்கள் சென்று "ஸ்டேட்ஸ்மென்" பத்திரிகை எனக்கு வந்தது. சட்டமறுப்பை வாபஸ் வாங்கும்பொழுது, காந்திஜீ வெளியிட்ட அறிக்கையை அதில் நான் படித்தேன். திகைப்புடன் படித்தேன்; உள்ளம் குழைந்தேன்; மீண்டும் மீண்டும் அதைப் படித்தேன். சட்ட மறுப்பும் வேறு எல்லாமும் என்னுடைய மனதைவிட்டு அகன்று விட்டன. சந்தேகங்களும் போராட்டங்களும் அதில் நிறைந்து கொண்டன.

"சத்தியாக்கிரக ஆசிரம வாசிகளோடு நான் பேசிக் கொண்டிருக்கையில் ஒரு எண்ணம் உதித்து, அதனால் இந்த அறிக்கை வெளித்தோன்றியிருக்கிறது. சம்பாஷணையைக் காட்டிலும் முக்கியமாக வேறொரு விளக்கமான செய்தி சம்பாஷணையினிடையே எனக்குக் கிடைத்தது. அந்தச் செய்தி, நீண்டநாள் பழக்கமுள்ள மதிப்புற்ற நண்பரைப் பற்றியதாகும். அவர் சிறையில், சிறை வேலையைச் செய்ய எண்ணங்கொள்ளாமல், படித்துக் கொண்டே இருந்தாராம். இது சத்தியாக்கிரக விதிகளுக்கு நேர் விரோதமாகும். நான் நேசிக்கும் அந்த நண்பரின் குறைகளைக் காட்டிலும் என்னுடைய சொந்தக் குறைகள் எனது கண்களில் தெளிவாகப் பட்டன. என்னுடைய தோழரின் அந்த ஆசை, எனக்குத் தெரிந்திருக்கும் என தாம் நினைத்ததாக நண்பர் சொன்னார். நான் அந்தக் குறையைக் கவனிக்காமல் கண்ணை மூடிக் கொண்டிருந்து விட்டேன். ஒருதலைவரிடம் இத்தகைய கண் மூடித்தனம் இருப்பது மன்னிக்கத்தக்கதல்ல. காரியத்தில் சட்டமறுப்பைக் காண்பிப்பதற்கு தற்பொழுது நான் மட்டும் தான் தனிப்பேர்வழியாக இருக்கவேண்டுமென்று உடனே தெரிந்து கொண்டேன்" என்று காந்திஜீ எழுதியிருக்கிறார். நண்பருடைய குறையோ, குற்றமோ மிகவும் அற்பமான விஷயமாகும். இத்தகைய குற்றம் நான் அடிக்கடி செய்திருக்கிறேன். அதைப்பற்றி எனக்கு மனதிலே துளிக்கூட வருத்தமே கிடையாது. ஆனால் அது ஒரு பெரிய குற்றமாகக் கருதப்பட்டாலும் தனி மனிதன் ஒருவன் தவறு

செய்துவிட்டான் என்ற காரணத்துக்காக, நேர்முகமாகப் பல ஆயிரக் கணக்கானவர்களும், மறைமுகமாக கோடிக் கணக்கானவர்களும் ஈடுபட்டிருக்கும் மகத்தான தேசிய இயக்கத்தை இவ்வாறு தலைகுப்புற அடித்துவிடவேண்டுமோ? காந்திஜீயின் இந்தக் காரணம் அபத்தமென்றும், அநியாய மென்றும் எனக்குத் தோன்றிற்று. எது சத்தியாக்கிரகம், எது சத்தியாக்கிரகமில்லை என்பதைப்பற்றி என்னால் சொல்ல முடியாது. ஆனால் என்னுடைய சிறிய முறையிலே, சில குறிப்பிட்ட நடை அளவுகளை நான் கைக்கொண்டிருக் கிறேன். காந்திஜீயின் இந்த அறிக்கையால் அந்த அளவுகள் யாவும் திடுக்கிட்டுப் போய்த் தலைகீழாய் வீழ்ந்தன.

காந்திஜீ வழக்கமாக ஒரு வித மோப்பத்தால் காரியம் செய்கிறார் என்று எனக்குத் தெரியும். உள் ஒளி, அல்லது பிரார்த்தனைக்குப் பதில் என்று சொல்லுவதைக் காட்டிலும் மோப்பம் என்று சொல்லுவதில் எனக்கு விருப்பம். அந்த மோப்பம் அநேகமாய்ச் சரியாகவே இருக்கிறது. பொது ஜனங்களின் மனப்பான்மையை அறியவும், தக்க தருணத் தில் காரியம் செய்யவும் தம்மிடத்தில் ஆச்சரியப்படத்தக்க திறமை இருக்கிறதென்று அவர் விடாமல் காண்பித்துக் கொண்டு வந்திருக்கிறார். தாம் செய்த காரியத்துக்கு ஆதார மாக அவர் பின்னர் காண்பிக்கும் காரணங்கள் அநேக மாகப் பின் யோசனைகளாகும். அவைகளினால் யாருக்கும் சமாதானம் ஏற்படுவதில்லை.

ஒரு தலைவர் அல்லது ஒரு கர்ம வீரன் நெருக்கடியில் எப்பொழுதும் மோப்பத்தைக் கொண்டுதான் வேலைசெய் கிறார். பிறகுதான் தாம் செய்த காரியத்துக்குக் காரணங் களை யோசித்துப் பார்க்கிறார். காந்திஜீ சட்டமறுப்பை வாபஸ் வாங்கிக்கொண்டது சரியென்பது என் எண்ணமா கும். ஆனால், அவர்கூறியகாரணம் மனிதனுடைய புத்தியை அவமதிப்பதாகத் தோன்றிற்று. ஒரு பெரிய இயக்கத்தின் தலைவர் இப்படிச் செய்தது எதிர்பார்க்கப்படாத சங்கதியா கும். காந்திஜீ தமது ஆசிரம வாசிகளை எவ்வாறு வேண்டு மாயினும் நடத்துவதற்குப் பூரண உரிமை பெற்றிருக்கிறார். அவர்கள் அவரிடம் எல்லாவிதமான சத்தியங்களும் செய்து கொடுத்திருக்கிறார்கள். அவர்கள் குறிப்பான ஒரு திட் டத்தை ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் காங்கிரஸோ,

அந்தமாதிரி ஒன்றும் செய்யவில்லை. நான் அந்தமாதிரி ஒன்றும் செய்யவில்லை. எனவே என்னையும் காங்கிரசையும் அங்கேயும் இங்கேயும் ஏன் போட்டு இழுக்கவேண்டும்? காந்திஜீயின் ஆத்ம விசாரக் காரணங்களில் எங்களுக்கு சிரத்தை கிடையாது. எந்த அரசியல் இயக்கத்துக்கும், இத்தகைய அஸ்திவாரத்தைக் கற்பனை செய்து பார்க்க முடியுமா? எனக்குத் தெரிந்த முறையில் சத்தியாக்கிரகத்தின் அறநெறிப் போக்கை நான் விருப்புடன் ஏற்றுக் கொண்டேன். அது குறுகிய எல்லைகளுக்குள் இருக்கலாமென்றும் ஒப்புக்கொள்ளுகிறேன். சத்தியாக்கிரகத்தின் அஸ்திவாரப் பகுதியான அறம் என் உள்ளத்தில் நன்ருகப் பதிந்தது. அரசியலை உன்னதமான படித்தரத்துக்கு அது உயர்த்துவதாகத் தோன்றிற்று. காரியத்துக்காக, எல்லா சாதனங்களையும் கையாளலாம் என்பதை யேற்றுக்கொள்ள நான் தயாராக இருக்கவில்லை. ஆனல் இந்தப் புது வியாக்கியானம் மிருதியும் எல்லை கடந்து போய்விட்டது. அதனல் சில நிகழ்ச்சிகள் நேருவது சாத்தியமானதால் எனக்குத் திகில் உண்டாயிற்று.

அறிக்கை முழுதும் என்னை பயமுறுத்தி விட்டது. என்னை மகத்தான வேதனைக்கு உட்படுத்தியது. கடைசியாக அவர் காங்கிரஸ்காரர்களுக்கும் பின்வரும் யோசனையைக் கூறினர்:—

"தியாகத்தை ஒரு கலையாகப் பயிற்சி செய்து கொண்டு அதன் நேர்த்தியைக் காங்கிரஸ்காரர்கள் உணர வேண்டும். விருப்பத்தோடு வறுமையை யேற்பது அழகு. தேசிய வாழ்க்கையை வளர்க்கும் துறைகளில் அவர்கள் ஈடுபட்டு உழைக்க வேண்டும். கையால் நூற்று நெய்து கதரைப் பரப்பவேண்டும். ஒவ்வொருவரும் தமது வாழ்க்கையில் அப்பழுக்கில்லாத நடத்தையைக் காண்பித்து வகுப்புவாத உள்ளங்களைப் பொய்யாக்கி நேர்படுத்த வேண்டும். ஒவ்வொருவரும் தன்னளவிலே எந்த வகையிலும் தீண்டாமையை ஆதரிக்கலாகாது. மதுபானங்களையும் லாகிரி வஸ்துக்களையும் விலக்கி வைத்து, தூய்மையான வாழ்வு வாழ்ந்து குடிகேடர்களை மீட்டுக் கொண்டு வரவேண்டும். இந்த வேலைகளைச் செய்து வந்தால், ஏழையின் திட்டப்படிக்கு உணவு கிடைக்கும். அந்தத் திட்டம் சரிப்படாதவர்கள் அதிக ஊதியம் கிடைக்கும்படியான, நாட்டுக்குத் தேவையான சிறு கைத்தொழில்களில் சேர்ந்து உழைக்க வேண்டும்."

காங்கிரஸ்காரர்கள் பின்பற்றவேண்டிய அரசியல் திட்டம் இதுதானும்! அவருக்கும் எனக்கும் இடையே வெகு தூரமிருப்பதாகத் தோன்றிற்று. உள்ளத்தில் தைத்த தைப்போல துன்பமடைந்து, பல ஆண்டுகளாக அவரோடு என்னைப் பிணித்து வைத்திருந்த பாசக்கயிறுகள் அறுந்து போய்விட்டதாகத் தோன்றிற்று. நீண்ட காலம் என் மனதுக்குள்ளேயே போராட்டம் நிகழ்ந்து வந்தது. காந்திஜீ செய்துவந்த காரியங்களில் பல எனக்கு விளங்கினதேயில்லை. அவைகளைப் பாராட்டியதுமில்லை. அவருடைய தோழர்கள் போராட்டத்தின் பிடிப்பில் அகப்பட்டுக்கொண்டிருக்கையில், சட்டமறுப்பு நடந்து கொண்டிருக்கையில், அவர் வேறு பிரச்னைகளில் கவனம் செலுத்தி உண்ணுவிரதமிருப்பது; சிறைக்கு வெளியே இருந்தாலும், தாம் எவ்வித அரசியல் இயக்கத்திலும் கலந்து கொள்வதில்லையென்று தமக்குத் தாமே வாக்குக் கொடுத்துக் கொண்டதுமான அவரே சொந்தமாக ஆக்கிக்கொண்ட சிக்கல்கள், அநேக தோழர்களோடு சேர்ந்து உறுதிசொன்ன பழைய வாக்கையும் வேலையையும் மறைந்துபோகும்படியாகச் செய்துவிட்டு, அவர் புதிதாக தீண்டாமை விலக்குக்காக, விரதம் செய்து கொண்டது; இவைகள் யாவும் எனக்கு மிகுதியும் மன வேதனையைத் தந்தன.

சிறைக்கு வெளியே இருந்த சிறிது காலத்தில்கூட, இவைகளும் வேறு சில வேற்றுமைகளும் அவருக்கும் எனக்குமிடையே இருப்பதாக உணர்ந்தேன். எங்கள் இருவருக்குள்ளும் உணர்ச்சி வித்தியாசம்தான் உண்டு என்று காந்திஜீ சொல்லியிருக்கிறார். உணர்ச்சியைக் காட்டிலும் வேறு வித்தியாசங்கள் இருக்கின்றன. பல விஷயங்களில் அவருக்கு விரோதமாக, என்னிடம் திட்டமான, தெளிவான அபிப்பிராயங்கள் இருக்கின்றன என்பதை உணர்ந்தேன். என்றாலும், கடந்த காலத்தில் அவைகளைக் கூடுமான வரையில் வெளிக் காண்பிக்காமல், அவைகளுக்கு நான் பிரதான்யம் கொடுக்கவில்லை. காங்கிரஸ் உழைப்பதாகக் காணப்பட்ட தேச விடுதலையின் பொருட்டு அதாவது, உயர்ந்த லட்சியத்தின் பொருட்டு என்னுடைய சொந்த அபிப்பிராயங்களுக்கு சிறப்புக் கொடுக்க நான் விரும்பவில்லை.

என்னுடைய தலைவருக்கும் தோழர்களுக்கும் உண்மையான பற்றும் பக்தியும் காண்பிக்க முயன்றேன். ஏனெனில்

ஒருவனுடைய தோழர்களிடமும் ஒரு இயக்கத்தினிடமும் உண்மையான உறவு காண்பிப்பதுதான் உயர்ந்த தர்மம் என்பது என்னுடைய அந்தராத்மாவின் உணர்ச்சியாகும். இந்த உணர்ச்சிக்கு மாறாக நான் அங்குமிங்கும் அலைக்கப் பட்டபொழுதெல்லாம் எனக்குள்ளாகவே பல தடவை களில் போராடியிருக்கிறேன். எப்படியோ ராஜி செய்து கொண்டு விடுவேன். ஒருக்கால் நான் அந்தமாதிரி செய்தது தவறாக இருக்கலாம். ஏனென்றால் தனக்கென்றிருக்கும் சுங்கானை ஒருவன் விட்டுவிடுவது ஒருநாளும் சரியான காரிய மாகாது. ஆனால் லக்ஷியங்களிலே போராட்டம் வரும் பொழுது நான் என்னுடைய தோழர்களோடு விடாப்பிடி யாக ஒட்டிக் கொண்டேன். நமது போராட்டம் முற்றி, நிகழ்ச்சிகள் தொடர்ந்து நடக்கையில் என்னை வருத்திவரும் இன்னல்கள் தாமாகவே ஒழிந்து போகுமென்றும், என்னு டைய தோழர்கள் என்னுடைய நோக்கத்தை ஏற்றுக் கொள்ளுவார்களென்றும் நான் நம்பியிருந்தேன்.

இப்பொழுதோ திடீரென்று அலிபூர் சிறையில், அந்த அறையில் தனிமை யுணர்ச்சியைப் பெற்றேன். வாழ்நாள் பயங்கர சங்கதியாகத் தோன்றிற்று. தனிமை வெளிப்படத் தோன்றிற்று. எத்தனையோ கடுமையான பாடங்களை நான் கற்றிருக்கிறேன். அவைகள் எல்லாவற்றையும் காட்டிலும் கடுமையானதும் துக்ககரமானதுமான பாடம் இப்பொழுது என்முன்னே வந்து நின்றது. அதாவது ஜீவாதாரமான சங் கதியில் யார்பேரிலும் சார்ந்திருப்பது சாத்தியமல்ல என்ற பாடம்தான். ஒவ்வொருவரும் வாழ்க்கையில் தனித்துத் தான் பிரயாணம் செய்ய வேண்டும். மற்றவர்களின்பேரில் சார்ந்தால் உள்ளமுடைதலைக் கண்டிப்பாக வருவித்துக் கொள்ளலாம். என் உள்ளத்தில் குவிந்து கிடந்த கோபத்தில் ஒருபகுதி மதத்தின் பேரிலும், மதநோக்கின்பேரிலும் பாய்ந் தது. கருத்துத் தெளிவுக்கும் காரிய உறுதிக்கும் மதம் ஒரு எதிரியல்லவா என்று நினைத்தேன். மதத்துக்கு அஸ்தி வாரமே உணர்ச்சியும் வெறியும் அல்லவா? மதம் ஆன்ம சம்பந்தமானது என்று சொல்லப்படுகிறது. ஆனால் உண் மையான ஆன்ம சம்பந்தமான பொருள்களுக்கும் அதற் கும் எவ்வளவு தூரம்! அது எப்பொழுதும் பரலோக பாஷையிலேயே யோசனை செய்கிறது. எனவே ஜன சமூக நியாயம், மனிதவர்க்கத்தின் அளவுகள், ஜன சமூக அளவு

கள் இவைகளைப்பற்றி கவனிப்பதே இல்லை. அது முன் கூட்டியே முடிவு செய்துகொண்டு நடக்கிற நிகழ்ச்சிகளைப் பார்க்காமல் கண்ணை மூடிக்கொள்ளுகிறது. அதற்குப் பயம்; ஏனெனின் நடைமுதல் சங்கதிகளைப் பார்த்தால் அது தான் ஏற்கனவே கொண்டுள்ள கருத்துகளுக்கு ஒவ்வாமல் போனால் என்ன செய்கிறதென்று பயம்.

மதத்துக்கு அஸ்திவாரம் சத்தியம் என்று சொல்லப் படுகிறது. இந்த சத்தியத்தை அது முழுதும் கண்டு பிடித்து விட்டதாக நினைத்துக்கொண்டு உண்மையை நாடுவதற்குகவலைப்படுவதேயில்லை. "உண்மையை நாடுங்கள்" என்று பிறருக்கு போதிப்பதுதான் அதனுடைய வேலையாகும். சத்திய சோதனைக்காக செய்துகொள்ளும் சங்கற்பமும் நம்புவதற்காக செய்து கொள்ளும் சங்கற்பமும் ஒன்றாக மாட்டா. மதம் அமைதியையும் சமாதானத்தையும் பற்றிப் பேசுகிறது. இருந்தாலும் பலாத்காரத்தைக் கொண்டு பாதுகாத்தாலொழிய நிலைத்துநிற்க முடியாத திட்டங்களையும் அமைப்புகளையும் அது ஆதரிக்கின்றது. அது கத்தியின் பலாத்காரத்தைக் கண்டிக்கிறது. ஆனால் சாந்தமாயும் அமைதியுடனும் நடந்து பட்டினி போட்டுக் கொல்லும்படியான அதன் அந்த பலாத்காரத்தைப்பற்றி என்னசொல்லுகிறது? தோற்றத்திலே உடம்பிலே காயம் உண்டாக்காமல் மனதைத் தாங்கி ஆன்மாவை யழித்து உள்ளத்தையுடைக்கும் அந்தப் பரம சாதுவான பலாத்காரத்தைப் பற்றி என்ன சொல்லுகிறது?

எனது உள்ளத்தில் இந்தக் கலக்கத்துக்குக் காரணமாயிருந்த அவரைப்பற்றி மறுபடியும் நினைத்துக்கொண்டேன். காந்திஜீ எவ்வளவு அற்புதமான மனிதர்! எவ்வளவு வியக்கத்தக்க, தவிர்க்க முடியாத ஆகர்ஷண சக்தி அவரிடம் இருக்கிறது! எவ்வளவு சூட்சுமமாய் அவர் மனிதர்களின் பேரில் அதிகாரம் செலுத்துகிறார்! அவருடைய எழுத்துக்களையும் பிரசங்கங்களையும் கொண்டு அவரை அளக்கவே முடியாது. அவரது எழுத்தைக் காட்டிலும் அவருடைய மூர்த்தி மிகப் பெரிது. இந்தியாவுக்கு அவர் ஆற்றியிருக்கும் தொண்டோ எவ்வளவு மகத்தானது! அவர் இந்திய மக்களின் உள்ளத்தில் ஆண்மையையும் தைரியத்தையும் ஊட்டி விட்டார். கட்டுப்பாடு பயிற்சியையும், சகிப்புத்தன்மையை

யும் வளர்த்து விட்டார். ஒரு இயக்கத்துக்காக ஆனந்தத்துடன் தியாகம் செய்யும் ஆற்றலை உண்டாக்கி விட்டார். அவரோ மிகவும் அடக்கம் கொண்டவர்; என்றாலும் நாட்டு மக்களின் உள்ளங்களில் விரும்பத்தக்க கர்வத்தை ஊன்றி விட்டார்.

"நடத்தைக்கு உறுதியான அஸ்திவாரம் தைரியம் தான். தைரியமின்றேல் அறம் கிடையாது; மதம் இல்லை; அன்பு கிடையாது" என்று அவர் சொல்லுகிறார். "ஒருவன் அச்சத்துக்கு ஆட்பட்டுக் கிடக்கும்வரையில், அவன் சத்தியத்தைப் பின்பற்றி அன்பு வழியில் செல்ல முடியாது." அவருக்கு பலாத்காரத்தில் வெறுப்பு; என்றாலும், கோழைத்தனம் பலாத்காரத்தைக் காட்டிலும் வெறுக்கத்தக்க தொன்றாகும் என்று அவர் சொல்லியிருக்கிறார். "கட்டுப்பாடு ஒன்றுதான், மனிதன் காரியவாதி என்று காண்பிப்பதற்கு உறுதியும் உத்திரவாதமும் ஆகும். தியாகமும் கட்டுப்பாடும் தன்னடக்கமும் இல்லாவிட்டால், விமோசனம் கிடையாது; விடுதலையில் ஆசைவைக்க வேண்டியதில்லை. கட்டுப்பாடற்ற தியாகத்தினால் பயனில்லை" என்கிறார். வெறும் வார்த்தைகள் தான். வேத சூத்திரத்தைப்போல சொல் தொடர்கள் அமைந்திருக்கலாம். ஆனால் அந்தச் சொற்களுக்குப் பின்னே, சக்தி ததும்பி நிற்கிறது. இந்தச் சிறிய மனிதர் அசாத்திய காரியவாதிஎன்பதை இந்தியா அறியும்.

வியக்கத்தக்க அளவில் அவர் இந்தியாவின் பிரதிநிதியாக விளங்கினர். பழமை கொண்டதும், வதை செய்யப்படுவதுமான அந்த நாட்டின் மூர்ச்சையை வெளிப்படுத்தியவர் அவரே. அவர்தான் இந்தியா; அவருடைய குறைகள் எல்லாம் இந்தியாவின் குறைகள் ஆகும். அவரை அவமதிப்பது தனித்த சங்கதியல்ல. அது இந்தியாவையே அவமதித்ததாகும். இந்த நிந்தனைக்குரிய அவமதிப்பு லீலைகளைக் கையாண்ட வைஸ்ராய்களும் மற்றவர்களும் எத்தகைய அபாயகரமான விளைவுக்கு அவர்கள் விதை விதைக்கின்றார்கள் என்பதை சிறிதும் உணரவேயில்லை. காந்திஜீ வட்ட மேஜை மகாநாட்டிலிருந்து 1931-ம் வருடம் டிசம்பர் மாதம் திரும்பி வருகையில் பாப்பரசர் அவருக்கு பேட்டி கொடுக்கமறுத்தார் என்பதை முதன்முதலாக நான் கேட்டதும் எனக்கு எவ்வளவு ஆத்திரம் வந்ததென்பது நினைவிருக்

கிறது. அந்த மறுப்பு இந்தியாவை அவமதித்ததாக எனக்குத் தோன்றிற்று. அது அவமானமாகக் கருதப்பட வேண்டும் என்று எண்ணிச்செய்த காரியமாக இல்லாமலிருக்கலாம். ஆனல் வேண்டுமென்றே பேட்டி மறுக்கப்பட்டதென்பதில் சந்தேகமில்லை. கத்தோலிக்க வர்க்கத்தார், தங்கள் கூட்டத்துக்கு வெளியே இருக்கும் சாதுக்களையும், மகாத்மாக்களையும் பாராட்டுவதில்லை. பிராடஸ்டண்டுப் பாதிரிமார்களில் சிலர், காந்திஜீ பெரிய மதபக்தரென்றும், உண்மையான கிறிஸ்தவர் என்றும் வெளிச் சொன்னதால் இத்தகைய அபத்தப் பாராட்டுதலினின்று தாம் விலகிக்கொள்ள ரோமாபுரி பாப்பரசருக்கு நிர்ப்பந்தம் ஏற்பட்டிருக்கலாம். இந்தச் சந்தர்ப்பத்தில்தான் அலிபூர் சிறையில் 1934 ஏப்ரலில் பெர்னுடுஷா எழுதிய புதிய நாடகங்களையும் "குன்றுகளின் மேலே" என்ற நாடகத்துக்கு அவர் எழுதிய முகவுரையையும் படித்தேன். அந்த முகவுரையில் ஏசுகிறிஸ்துவுக்கும், ரோமாபுரியின் பிரதிநிதியான பைலேட் அவர்களுக்கும் நடக்கும் சம்பாஷணை-வாதம் எனக்குக் கவர்ச்சி அளித்தது. அதற்கு நவீனப் பிரயோகக் குறிப்பு இருப்பதாகத் தோன்றிற்று. இப்பொழுதும் மதபக்தர் ஒருவர் ஒரு பெரிய சாம்ராஜ்யத்தை எதிர்த்துப் போராடுகிறார் அல்லவா?

"பைலேட் அவர்களே! உமக்குச் சொல்லுகிறேன் கேளும்: அச்சம் தவிரும். ரோமாபுரியின் பெருமையைப் பற்றி என்னிடம் டம்பமான சங்கதிகளை இனிப் பேசாதேயும். ரோமாபுரியின் மகத்துவம் என்று நீர் சொல்லுகிறீரே, அது அச்சத்தைத் தவிர வேறல்ல. இறந்த காலத்தைப்பற்றிய அச்சம்; எதிர்காலத்தைப் பற்றிய அச்சம். ஏழைகளைக் கண்டு நடுக்கம்; பணக்காரர்களைப் பார்த்து பயம்; பெரிய புரோகிதர்களைப் பார்த்துப் பதைபதைப்பு; கற்றறிந்த யூதர்களையும் யவனர்களையும் கண்டு அச்சம்; காலிபர்கள், காத் கூட்டத்தார், ஹூணர்கள் அவர்கள் அநாகரீகர்கள் என்று பயம். உங்களை அழித்துவிடுமோ என்ற பயத்தினல், உங்களைக் காப்பாற்றிக் கொள்ள நீங்கள் அழித்த கார்த்தேஜை நினைத்து அச்சம். இப்பொழுதோ நீங்களே சொந்தமாக தோற்றுவித்த விக்கிரக மூர்த்தியான சாம்ராஜ்ய வீஸரைக் கண்டால் தொடை நடுக்கம். அன்னக் காவடியாக அங்குமிங்கும் அலைந்து ஏளனம் செய்யப்படும் என்னைக் கண்டு ரோமாபுரிக்கு நடுக்கம்; கடவுளுடைய ஆட்சியைத்

தவிர வேறு எல்லாவற்றிலும் பயம்; ரத்தத்திலும், இரும்பிலும், பொன்னிலும் தவிர வேறு எதிலும் நம்பிக்கையற்ற தன்மை. ரோமாபுரிக்கு பிரதிநிதியாக விளங்கும் நீர் உலக மறிந்தகோழையாகும். கடவுளின் ஆட்சிக்காக பிரதிநிதியாக இருக்கும் நான் எல்லாவற்றையும் எதிர்த்தேன். எல்லாவற்றையும் தோற்றேன். ஆனால் சாசுவத கிரீடத்தைப் பெற்றேன்" என்று ஏசு கிறிஸ்து அந்த முகவுரையில் பைலேட் அவர்களோடு பேசியிருக்கிறார்.

ஆனால் காந்திஜீயின் பெருமையோ, அவர் இந்தியாவுக்குச் செய்த தொண்டுகளோ, அல்லது என்னுடைய சொந்த முறையில் நான் அவருக்கு கடமைப்பட்டிருக்கும் மகத்தான நன்றியறிதலோ—இவைகள் கேள்விகளல்ல. இவைகள் எல்லாமிருந்தபோதிலும், அவர் பல விஷயங்களில் சுத்த மோசமான தவறுகள் செய்திருக்கலாம். அவர் எதைத் தான் குறியாகக் கொண்டிருக்கிறார்? அவரோடு நான் பல ஆண்டுகளாக மிகவும் நெருக்கமாகப் பழகியிருக்கிறேன். என்றாலும் அவருடைய குறி இதுதானென்று என் அறிவில் தெளிவாகப் படவேயில்லை. அவருக்கே இதைப்பற்றி தெளிவு இருக்குமோ என்று சந்தேகிக்கின்றேன். ஒரு அடி முன்னால் எடுத்து வைத்தால் போதும் என்று அவர் சொல்லுகிறார். அவர் எதிர் காலத்தில் நுழைந்து பார்க்க முயலுவதே இல்லை. தெளிவான லட்சியத்தையும் வைத்துக் கொள்ளுவதில்லை. "சாதனங்களைச் சரியாகக் கவனித்துக் கொள்ளுங்கள், முடிவு தானாகவே வரும்" என்று அலுக்காமல் அவர் சொல்லுகிறார். உங்களுடைய சொந்த வாழ்க்கைகளில் நேர்மையாளர்களாக இருங்கள்; மற்றதெல்லாம் தானாகவே வரும் என்கிறார். இது அரசியலும் விஞ்ஞான நூலும் ஒப்புக்கொள்ளக்கூடிய மனப்போக்கு அல்ல. இது உயர்ந்த அறமுறை அல்லவென்றும் தோன்றுகிறது. இது குறுகிய அறநோக்கு ஆகும். இந்த நோக்கினால் பிரச்னைக்கு பரிகாரம் ஏற்பட முடியாது. நல்லது என்றால் என்ன? அது தனி நபர் சங்கதியா அல்லது சமுதாய சங்கதியா? நடைநேர்மை வேண்டுமென்று காந்திஜீ எப்பொழுதும் வற்புறுத்துகிறார். அறிவுப் பயிற்சிக்கும், அறிவு அபிவிருத்திக்கும் அவர் கொஞ்சம் கூட சிறப்பு கொடுப்பதேயில்லை. நடை ஒழுங்கில்லாத அறிவு ஆபத்தாக முடியலாம். ஆனால் அறிவில்லாத நடை

யொழுங்கு எதற்கு ஆகும்? உள்ளபடியே நடைவிருத்தி யடைவதற்கு வழிதான் என்ன? காந்திஜீயை நடுக்காலத்து கிறிஸ்தவ சாதுக்களுக்கு ஒப்பிடுகிறார்கள். அந்த உவமை மிகவும் பொருத்தமென்று அவருடைய வாக்கியங்களி லிருந்து தோன்றுகின்றது. நவீன மனோதத்துவ அனு பவத்துக்கும் முறைக்கும் அவர் வாய்மொழி துளிகூடப் பொருந்தினதே யல்ல.

ஆனால் இது எப்படியாயினும் ஆகுக. குறியில் தெளிவு இல்லாமை வருந்தத்தக்க விஷயம் என்று தோன்றுகிறது. பயன் தரும்படியாக காரியம் செய்யவேண்டுமானால் தெளி வான லட்சியங்களை நாடிக் காரியம் செய்ய வேண்டும். வாழ்க்கை அப்படியே தர்க்க சாஸ்திரமல்ல. வாழ்க்கைக்குப் பொருத்தமாக அந்த லட்சியங்களை அடிக்கடி மாற்றவேண் டியதாய் இருக்கும். ஆனாலும், ஏதேனும் ஒரு லட்சியத்தை எப்பொழுதும் தெளிவாக முன்னே வைத்துக்கொள்ள வேண்டும்.

சில சமயங்களில் தெளிவில்லை என்று தோன்றினாலும் கூட, காந்திஜீ தெளிவில்லாத குறி கொண்டவரல்ல என்று நான் கருதுகிறேன். அவர் குறிப்பிட்ட ஒரு திசையை நோக்கிச் செல்ல ஆவல் வெறி கொண்டிருக்கிறார். இந்த ஆவலுக்கும் நவீன கருத்துகளுக்கும் நிலைமைகளுக்கும் ஒவ்வவில்லை. இது வரையில் அவைகள் இரண்டையும் ஒன்று சேர்த்துப் பொருத்த அவரால் முடியவில்லை. நமது லட்சியத்துக்கு கொண்டுபோய் விடக்கூடிய படிக்கட்டுகளை யும் அவரால் இன்னும் தெரிந்து கொள்ள முடியவில்லை. ஆகவே, தெளிவில்லாத் தோற்றம், தெளிவு வேண்டாமென் பது போலத் தோற்றம். ஆனால் அவருடைய பொதுவான விருப்பம் சென்ற 25 வருஷங்களாக தெளிவாகத் தான் இருக்கிறது. தென் ஆப்பிரிக்காவில், அவர் தமது தத்து வத்தைத் திட்டமாக்கத் துவக்கியதிலிருந்து அது தெளி வாக இருக்கிறது. அவருடைய பழைய எழுத்துக்கள் இப்பொழுதும் அவருடைய கருத்துக்களா என்பது எனக் குத் தெரியாது. முழுதும் அப்படியிருக்க முடியாது என்று எண்ணுகிறேன். ஆனாலும் அவருடைய நோக்கின் அஸ்தி வாரத்தை அறிந்து கொள்ளுவதற்கு அவைகள் நமக்கு உபயோகமாயிருக்கும்.

"சென்ற 50 வருஷங்களாக இந்தியா கற்றுக்கொண்டு வந்ததை அது மறந்தால்தான், அதற்கு விமோசனம் ஏற்படும். ரெயில்வேக்கள், தந்திகள், ஆஸ்பத்திரிகள், வக்கீல்கள், வைத்தியர்கள் முதலியனவெல்லாம் போகவேண்டும். மேல் வகுப்பார் என்று சொல்லப்படுகிறவர்கள், வேண்டுமென்றே கட்டாயமாக கடமையாக விவசாயியின் எளிய வாழ்க்கையை வாழக் கற்றுக் கொள்ள வேண்டும். அந்த வாழ்விஞல்தான் உண்மையான மகிழ்ச்சி உண்டாகுமென்று தெரிந்துகொண்டு அவர்கள் வாழ்க்கை நடத்த வேண்டும்" என்று அவர் 1909-ம் வருஷத்தில் எழுதினுர். மேலும் "ரெயில் வண்டியில் அல்லது மோட்டார் காரில் ஏறும்போதெல்லாம் எது சரியென்று எண்ணிக் கொண்டிருக்கிறேஞே, அதற்கு நான் துரோகம் செய்வதாகக் கருதுகிறேன். வேகமாகச் செல்லும் வாகனங்களின் மூலமாக உலகத்தைத் திருத்த முயற்சி செய்வது சாத்தியமில்லாத காரியத்தைச் சாதிக்க முயலுவதாகும்" என்று எழுதுகிருர். இவையெல்லாம் அறவே தவறென்றும், தீமை பயக்கும் தத்துவமென்றும் சாத்தியப்படாத சங்கதியென்றும் எனக்குத் தோன்றுகிறது, இதோடு கூட காந்திஜீ வறுமையையும் துன்பத்தையும் பாராட்டுகின்ருர். துறவு வாழ்க்கையை விரும்புகின்ருர். "தேவைகளைப் பெருக்கிக் கொள்ளுவதிலும், வாழ்க்கையின் சுகபோகத் திட்டத்தை வளர்த்துக் கொள்ளுவதிலும், அபிவிருத்தியும் நாகரிகமும் அடங்கியிருக்கவில்லை; மனிதன் வேண்டுமென்றே தேவைகளைக் குறைத்துக் கொண்டால் அவனுக்கு உண்மையான திருப்தியும் மகிழ்ச்சியும் ஏற்பட்டு அவனிடம் தொண்டுக்கான வல்லமையை வளர்க்கின்றது" இது காந்திஜீயின் கருத்து. இந்த அஸ்திவாரக் கருத்துக்கள் ஏற்றுக் கொள்ளப்பட்டால் காந்திஜீயின் பாக்கிக் கருத்துகளைத் தெரிந்து கொண்டு அவருடைய செயல் முறைகளைப் பற்றி அபிப்பிராயம் கொள்ளுவது ஓடுகிற ஓட்டமாகும். ஆஞல் நம்மில் பலர் அந்த அஸ்திவாரக் கருத்துக்களை ஏற்றுக் கொள்ளுவதில்லை. என்ருலும் அவருடைய வேலைகள் நமக்குப் பிடிக்கவில்லையென்று கண்டு கொண்டதும் நாம் குறைகூறத் துவக்கி விடுகிருேம்.

என் சம்பந்தப்பட்ட வரையிலும் வறுமையையும் துன்பத்தையும் பாராட்டுவது எனக்குப் பிடிப்பதில்லை. அவை

கள் விரும்பத்தக்கவை யென்றும் எனக்குத் தோன்றவில்லை. அவைகளை ஒழித்துவிட வேண்டும். துறவு வாழ்வு சிலருக்குப் பொருத்தமா யிருக்கலாம். அதை ஜன சமூகத்தின் சமுதாய லட்சியமாகக் கொள்ள முடியாது. எளிமை, சமத்வம், தன்னடக்கம் முதலியவைகள் எனக்கு அர்த்தமாகின்றன. அவைகளை நான் மதித்து விரும்புகிறேன். ஆனால் உடலை வதைத்துக் கொள்ளுவதை நான் ஏற்க மாட்டேன். பயில்வான் தனது தேகத்தைப் பயிற்சி செய்ய வேண்டியதைப்போலவே மனதையும் பழக்கங்களையும் பயிற்சி செய்து கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வர வேண்டுமென்று நான் உறுதியாக நம்புகிறேன்.

சுகபோகத்தில் அதிகமாக ஈடுபட்டிருப்பவன் அதிகக் கஷ்டங்களைப் பொறுத்துக்கொள்ள முடியும் என்று எதிர்பார்ப்பது அபத்தமாகும். நெருக்கடி வரும்பொழுது அத்தகைய பேர்வழி வழக்கமில்லாத தன்னடக்கத்தைக் காண்பிக்க முடியாது. வீரனைப்போல் நடந்து கொள்ளவும் முடியாது. திடமான சரீரத்துக்கு எவ்வளவு பயிற்சி வேண்டுமோ அவ்வளவு பயிற்சி அற வலிமைக்கும் தேவை. ஆனால் அதற்காக துறவு வேண்டுமென்பதல்ல; உடலை வருத்திக் கொள்ள வேண்டுமென்பதுமில்லை. எளிமையான குடியானவனுடைய வாழ்க்கை ஆகாயத்தில் தூக்கிவைக்கப்பட்டுப் பாராட்டப்படுகிறதும் எனக்குப்பிடிப்பதில்லை. அந்த வாழ்க்கையைக் கண்டால் எனக்கு பயங்கரமாய் இருக்கிறது. அந்த வாழ்க்கைக்குள் நான் புகுந்துகொள்வதைக் காட்டிலும் விவசாயிகளை அதனின்றும் வெளியே இழுத்துவிட விரும்புகிறேன். அவர்களை நகர வாசிகளாக ஆக்குவதற்கல்ல. நகர நாகரிக வசதிகள் யாவையும் கிராமாந்தரங்களுக்குப் பரவச் செய்யவேண்டும் என்பது என் ஆசை. இந்த எளிய விவசாயியின் வாழ்க்கை எனக்கு உண்மையான இன்பத்தைத் தரமுடியாது என்பது மல்லாமல் அது எனக்கு சிறைவாசமாக அமையும். ஏர் உழும் மனிதனை வானில் வைத்துப் பாராட்டுவதற்கு என்ன இருக்கிறது? எண்ணற்ற தலைமுறைகளாக அவன் நசுக்கப்பட்டு வந்திருக்கிறான்; அவனைச் சுரண்டிக் கொண்டே வந்திருக்கிறார்கள். அவனுக்கும் அவனோடு சேர்ந்து வாழும் விலங்குகளுக்கும் என்ன வித்தியாசம் இருக்கின்றது?

"அவனை குதூகலத்துக்கும் ஏக்கத்துக்கும் மறத்துப் போகும்படியாக யார் செய்தது? அவன் வருந்துவதுமில்லை. ஒருபோதும் ஆசையுடன் வாழ்வதுமில்லை. எருதின் பக்கத்திலே அதற்கு சகோதரனாக திகைத்து ஸ்தம்பித்து நிற்கின்றான்." மனிதனுடைய மலர்ச்சிபெற்ற மனதைக் கைவிட்டுவிட்டு, விலங்குத் தன்மையை அதாவது மனது பிரகாசமாக வெளிவரக்கூடாத தன்மையை விரும்புவது எனக்குச் சிறிது கூட விளங்கவேயில்லை. மனிதனுடைய பாக்கியமும், வெற்றியும் அவனுடைய மனதாகும். அந்த மனதை அவமதித்து ஆதரிக்காமல் விட்டுவிடுவது நல்லவேலை ஆகாது. மனதினுடைய வளர்ச்சியைத் தடுத்து அதை மிகுதியும் தொல்லைப் படுத்துவது விரும்பத் தக்கதாகக் கருதப்படுகிறது. நவநாகரிகத்தில் தீமைகள் நிறைந்திருக்கின்றன என்றாலும் நன்மைகளும் நிறைந்திருக்கின்றன. தீமைகளை விலக்கிக் கொள்வதற்கு அந்த நாகரிகத்தினுள்ளேயே வசதியும் வல்லமையும் இருக்கின்றன. அந்த நாகரிகத்தை அடியோடு அழிக்கமுயன்றால்அதற்கு இருக்கும் வசதியையும்வல்லமையையும் அழிப்பதாக முடிந்து மந்தமான ஒளிவீசாத, துயரம் நிறைந்த வாழ்க்கைக்கு மாறிவிட வேண்டியதாக யிருக்கும். அத்தகைய வாழ்க்கை விரும்பத்தக்கதாக இருந்தாலும், அது சாத்தியப்படாத முயற்சியாகும்.மாறுதல் வெள்ளத்தை நம்மால் தடுக்கமுடியாது.அதனின்றும் விலகி நிற்கவும்முடியாது. சுவர்க்க லோகத்துப் பழக்கத்தைத்போன்ற நவநாகரிகத்தின் கனிகளை அருந்திய பின் அந்த ருசியை மறக்க நம்மால் முடியாது. திரும்பவும் காட்டு மனிதனாக ஆகவும் முடியாது.

இதைப்பற்றி வாதம் செய்வது கஷ்டமாகும். ஏனென்றால் இரண்டு நோக்குகளும் முரண்கொண்டவைகளாகும். காந்திஜீ எப்பொழுதுமே மோட்சம், பாபம் என்ற பாஷையிலேயே யோசனை செய்துகொண்டிருக்கிறார். ஆனால் பெரும்பான்மையோரான நாமோ, ஜன சமுதாயத்தின் நன்மையைப் பிரதானமாக மதித்து அதை மனதில் வைத்துக் கொண்டிருக்கிறோம். பாபம் என்ற கருத்தை விளக்கிக் கொள்வதே எனக்குக் கஷ்டமாயிருக்கிறது. ஒருக்கால் இதனால்தானோ என்னவோ, காந்திஜீயின் பொதுவான நோக்கை நான் அறிந்துகொள்ள முடியவில்லை போலும்! ஜன சமுதாயத்தையும், ஜனசமுதாய அமைப்பையும் மாற்றுவதற்குக் காந்திஜீக்கு நோக்கமில்லை. தனி நபர்களிடமிருந்து

பாபத்தைப் போக்கும் வேலையையே பெரிதாக மதித்து அதற்காக உழைக்கின்றார். "சுதேசி விரதத்தை அனுஷ்டிப்பவன் உலகத்தைச் சீர்திருத்த முயலும் வீணான வேலையை மேற்போட்டுக்கொள்ளுவதில்லை. ஏனெனில் உலகம், கடவுள் விதித்திருக்கும் திட்டங்களின் பிரகாரம் செல்லுகின்றது; சென்றுகொண்டேயிருக்கும் என்று அவன் நம்புகிறான்" என காந்திஜீ எழுதுகிறார். இருந்தாலும் உலகத்தைச் சீர்திருத்த அவர் மும்முரமாக வேலை செய்கிறாரே! ஆனால் அவர் கோரும் சீர்திருத்தம் தனி நபரின் சீர்திருத்தமாகும். அவர் புலன்களையடக்கி அவைகளில் எழும் ஆசையைத் தூரத்தப் பார்க்கிறார். அதாவது பாபத்தைப் போக்கப் பார்க்கிறார். திறமை வாய்ந்த கத்தோலிக் ஆசிரியர் ஒருவர் பாஸிஸ்டு தத்துவத்தைப்பற்றி எழுதுகையில் சுதந்திரத்தை இன்னதென வருணிக்கிறார்: "பாபத்தின் பந்தத்திலிருந்து விடுபடுதலே சுதந்திரமாகும்" என்று அவர் சொல்லுவதைக் காந்திஜீ ஏற்றாலும் ஏற்கக் கூடும். இதைப்போலவே லண்டன் பிஷப் அவர்கள் 200 வருஷங்களுக்குமுன் சொல்லியிருக்கிறார். "கிறிஸ்தவ மதம் அளிக்கும் சுதந்திரம் பாப பந்தத்திலிருந்தும், சைத்தானின் தூண்டுதலிலிருந்தும் விடுபடுதலேயாகும். மனிதனுடைய வெறிகளினின்றும் ஆசைகளினின்றும் விடுபடுதலாகும்" என்று அவர் சொல்லியிருக்கிறார்.

இந்த நோக்கை ஏற்றுக் கொண்டால் அப்பொழுது காந்திஜீயின் நோக்கத்தைத் தெளிவாக அறிந்து கொள்ளலாம். காந்திஜீ காமத்தைப்பற்றி அபிப்பிராயம் கொண்டிருப்பது இன்றைக்கு சராசரி மனிதனுக்கு விநோதமாகத் தோன்றலாம். பிள்ளைப் பேறுக்கு விருப்பமில்லாத காலத்தில் கூடுதல் குற்றமாகும் என்று அவர் கூறுகிறார். "இயற்கைக்குப் பொருத்தமில்லாத முறைகளைக் கையாளுவதால் நரம்புத் தளர்ச்சியும் பித்தும் உண்டாகும். ஒருவன் சில செயல்களைச் செய்துவிட்டு அந்தச் செயல்களின் பயன்களை அனுபவிக்காமல் தப்பிக்கப் பார்ப்பது தவறாகும்; அதர்மமாகும். பசி என்ற சாக்கைவைத்து கண்டபடி உண்ணுவது தவறு. அதனால் விளையும் அஜீரணத்தைப் போக்குவதற்காக மருந்துகளும் நரம்புத் தளர்ச்சிக்காக "டானிக்"குகளும் சாப்பிடுவது இன்னும் தவறாகும். ஒருவன் தனது காம வெறியில் ஈடுபட்டு அதன் விளைவுகளினின்றும் தப்பிக்கப் பார்ப்பது

மகத்தான தவருகும்'' என்று காந்திஜீ சொல்லுகிருர். என் சம்பந்தப்பட்ட வரையிலும் இந்த நோக்கு இயற்கைக்குப் பொருத்தமில்லாததென்றும், காதிலே கேட்கத் தக்கதல்ல வென்றும் நான் நினைக்கின்றேன். அவர் சொல்வது சரியாயின் நரம்புத் தளர்ச்சியையும், பித்தையும் அடையக்கூடிய நிலைமையில் இருக்கும் ஒரு குற்றவாளி நான். ரோமன் கத்தோலிக்கர்களும் கர்ப்பத் தடையை மிகவும் அழுத்தமாக எதிர்த்திருக்கிருர்கள். ஆனல் அவர்கள் காந்திஜீ செய்தது போல தங்களுடைய கட்சியைத் தர்க்க முடிவின் எல்லைக் கோடிக்குக் கொண்டுபோகவில்லை. அவர்கள் மனித இயற்கை யென்று தாங்கள் கருதும் ஒன்ருேடு ராஜி செய்துகொண்டு விட்டார்கள். ஆனல் காந்திஜீயோ தம்முடைய வாதத்தின் எல்லைக் கோடிக்குப் போய்விட்டார். குழந்தை ஆசைக்காக அல்லாமல் வேறு எந்தக் காலத்திலும் சேர்க்கை தேவையில்லை, பொருத்தமில்லையென்பது காந்திஜீயின் கட்சி ஆகும்.

ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே இயற்கையாக உள்ள ஒட்டுதலை அவர் ஒப்புக்கொள்வதேயில்லை. "இது சாத்தியமில்லாத லட்சியமென்றும், ஆணுக்கும் பெண்ணுக்குமிடையே இருக்கும் இயற்கையான காமப் பாசத்தை நான் கணக்கெடுத்துக் கொள்ளவில்லையென்றும் சொல்லப் படுகிறது. காமப்பற்றுதான் இயற்கையான பற்று என்று என்னல் நம்ப முடியாது. அதுதான் உண்மையாயின் நம்முடைய மத்தியில் வெகு விரைவில் பிரளயம் வந்து விடும். ஆணுக்கும் பெண்ணுக்குமிடையே இருக்கும் இயற்கையான பாசம் சகோதரனுக்கும் சகோதரிக்கும் இடையே இருக்கும் பாசமாகும். தாய்க்கும் மகனுக்கும் உள்ள பிணிப்பு—தகப்பனருக்கும் மகளுக்கும் உள்ள வாஞ்சை. இந்த இயற்கையான பாசத்தினல்தான் உலகம் நிலைத்து நிற்கின்றது. இல்லையென்பதை நான் நம்பவே முடியாது. புருஷன், மனைவி இவர்களுக்குள் இருக்கும் காம உணர்ச்சி இயற்கைக்குப் பொருத்தமில்லாததென்றுகூட நான் சொல்லத்துணிவேன்'' என்று காந்திஜீ எழுதுகிருர்.

உடற்கூறு ஆராய்ச்சி பரவி வரும் இந்தக் காலத்தில் இவ்வளவு அழுத்தமாக நம்பிக்கையை வெளியிடுவது விநோதமா யிருக்கிறது. பண்டைக் காலத்து சாமானைப் போல் தோன்றுகிறது. ஒருவன் அதை நம்பிக்கையென்று

ஏற்றுக் கொள்ளலாம் அல்லது அதைத் தள்ளிவிடலாம். இரண்டாம் பட்சமாக ஒன்றுமே செய்ய முடியாது. ஏனெனின் அது நம்பிக்கையைப் பொறுத்த பிரச்னை ஆகும்; அது வாதத்துக்கும் விவேகத்துக்கும் பொருந்தினதே அல்ல. என் சம்பந்தப்பட்ட வரையில் காந்திஜீ இந்த விஷயத்தில் சொல்வது முற்றிலும் தவறு என்று நான் நினைக்கிறேன். அவருடைய யோசனை சிலருக்குத் தோதாக இருக்கலாம். ஆனால் அதைப் பொதுவான யோசனையாக ஏற்றுக்கொண்டால் அதனால் எல்லா விதமான உடற்கூறு நோய்களும் நரம்பு வியாதிகளும் உண்டாவது நிச்சயம். காமத்தை யடக்குவது உண்மையிலேயே விரும்பத் தக்கதுதான். ஆனால் காந்திஜீயின் யோசனையினால் விரிவான அளவில் காம அடக்கம் ஏற்படுமோ என்பதுதான் சந்தேகம். அது மிகவும் தீவிரமான கொள்கையாகும். அந்தக் கொள்கை தங்கள் சக்திக்கு மீறியதென்று எல்லோரும் தீர்மானித்துக் கொண்டு தங்கள் வழக்கமான பாதைகளில் செல்லுகிறார்கள். அல்லது புருஷன் மனைவிக்குள் தகராறு ஏற்படுகின்றது. கர்ப்பத்தடை முறைகளைக்கையாளுவது என்றால் சேர்க்கையில் ஏராளமான விருப்பம் என்றும், ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே காமமிருப்பது இயற்கையென்று ஒப்புக்கொண்டால் ஒவ்வொரு ஆணும் ஒவ்வொரு பெண்ணையும் ஒவ்வொரு பெண்ணும் ஒவ்வொரு ஆணையும் துரத்திக்கொண்டு ஓடுவார்கள் என்றும் காந்திஜீ கருதுகிறார்போலும்!

இரண்டு ஊகமும் ஏற்கக் கூடியதல்ல. இந்தக் காம விஷயத்தில் அவர் ஏன் இவ்வளவு தொல்லைப்படுகிறார் என்று எனக்குத் தெரியவில்லை. இந்தப் பிரச்னை முக்கியமானதுதான். எந்தக் கோடியான முடிவை எடுத்துக்கொண்டாலும் அதிலும் ஒரு எல்லைக் கோடியான கட்சியை எடுத்துக்கொண்டு வாதம் செய்கிறார். அவ்வாறு செய்வது இயற்கைக்குப் பொருந்தாதது என்று தோன்றுகிறது. இந்தக் காலத்தில் பிரளயத்தைப்போல் வெளிவந்து கொண்டிருக்கும் காம நூல்களினால் இத்தகைய மாற்று உணர்ச்சி அவரிடம் ஏற்பட்டதோ என்னவோ? என்னை நான் ஒரு சராசரி மனிதனாகவே பாவித்துக் கொண்டிருக்கிறேன். என் வாழ்க்கையிலும் காம வசீகரம் இருந்ததுண்டு. ஆனால் அதில் நான் ஆழ்ந்து போனதில்லை. அதனால் எனது வேறு அலுவல்களினின்றும் வழி தவறிப் போனதில்லை. அது என்

னுடைய வாழ்க்கையில் இரண்டாம்தரமான உணர்ச்சியாகவே இருந்து வந்திருக்கிறது.

அவருடைய நோக்கு துறவியின் நோக்கு ஆகும். வாழ்க்கையைத் தீமையாக மதிக்கும் நோக்கு ஆகும். உலகத்தையும் அதன் போக்குகளேயும் விட்டுவிட்டு வேறு பாதையில் செல்லுவதாகும். துறவிக்கு அது பொருத்தம்தான். ஆனால் உலகத்திலிருந்து சாதாரண மக்களுக்கு அந்த நோக்கைப் பிரயோகம் செய்யப்பார்ப்பது தவறு என்று தோன்றுகிறது. சாதாரண மக்களுக்கு வாழ்க்கையிலே ஆசை; வாழ்க்கையைக் கூடுமான வரையில் உபயோகப்படுத்தப் பார்க்கிறார்கள். காந்திஜீ ஒரு தீமையைத் தவிர்க்க எண்ணி வேறு பல பயங்கரமான தீமைகளேப் பொறுத்துக் கொண்டிருக்க வேண்டியிருக்கிறது.

ஏதோ கவலே பாய்ந்து வேறு விஷயங்களேப் பேசிவிட்டேன். ஆனால் அலிபூர் சிறையில் அந்தத் துன்பம் நிறைந்த நாட்களில் இந்தக் கருத்துகள் யாவும் என் மனதில் குவிந்து கொண்டன. வரிசைக் கிரமமாக அல்ல. ஒரே கதம்பமாக அவைகள் என் மனதில் புகுந்துகொண்டு எனக்குக் குழப்பம் உண்டாக்கி தொல்லேப்படுத்தி விட்டன. எல்லாவற்றைக் காட்டிலும் வேறொரு உணர்ச்சி என்னே வருத்திற்று. நான் தனித்து நிற்க நேர்ந்ததே என்ற உணர்ச்சி. அந்த உணர்ச்சியைச் சிறையின் மூச்சுத் திணறும் வாடையாலும், எனது தனியான சிறு அறையினாலும் வளர்ந்துவிட்டது. சிறைக்கு வெளியே இருந்தால் இந்த உணர்ச்சி நிமிஷப் பொழுதில் மறைந்திருக்கும். நான் புதிய புதிய நிலேமைகளோடு ஓட்டிக்கொண்டு செயலின் மூலமாயும் சம்பாஷணேயின் மூலமாயும் ஆறுதல் பெற்றிருப்பேன்.

சிறைக்குள்ளே அத்தகைய ஆறுதல் கிடையாது. சில நாட்களே மிகவும் கேவலமாகக் கழித்தேன். நல்ல வேளேயாக என்னிடம் ஒரு குணம் உண்டு. வெகு சீக்கிரத்தில் இத்தகைய சோர்வு மனப்பான்மையிலிருந்து வெளியேறி தேறுதல் அடைந்து விடுவேன். என்னுடைய துயரம் மங்கி மறையும் சமயம். அப்பொழுது என்னேக் கமலா சிறையில் வந்து பேட்டி கண்டாள். அதனால் மகத்தான உற்சாகம் ஏற்பட்டது. எனது தனிமை யுணர்ச்சி என்னே விட்டு அகன்றது. என்ன நேர்ந்தாலும் நாங்கள் இருவரும் இணே பிரியாமலிருப்போம் என்று எண்ணினேன்.

# LXII

## காந்தி—ஒரு புதிர்

காந்தியுடன் நெருங்கிப் பழகாமல் அவருடைய எழுத்துக்களை மட்டும் படிக்கிறவர்கள், அவரைப்பற்றி தவருக நினைக்கக் கூடும்; அவர் உபதேசகர் என்றும், கொடுமையான வைதிகர் என்றும், உலகச் சுமையையேற்ற சிடுமூஞ்சி என்றும் நினைக்கலாம். கறுப்புக் கௌன்களை மாட்டிக் கொண்டு ஊர் சுற்றும் பாதிரிகளைப்போல இருப்பார் என்றும் எண்ணக்கூடும். ஆனால், அவருடைய எழுத்துகள் அவருடைய உண்மையான தன்மையை வெளிக் காண்பிக்கவில்லை. அவர் அவரது எழுத்தைக் காட்டிலும் மகாபெரியவர். அவர் எழுதியதை மேற்கோளாகக் காட்டி, அதைக் கண்டிப்பது முற்றும் அநியாயமாகும். அவர் உபதேசகருக்கு எதிரிடையான பேர்வழியாகும். அவருடைய புன்முறுவல் அற்புதமாகும். அவர் சிரித்தால் எல்லோரும் கூட சிரிக்கவேண்டும். அவர் குஷித் தன்மையை வெகுவிரைவில் எங்கேயும் பரப்பிவிடுகின்ருர். அவர் குழந்தை மாதிரி; வசீகர சக்தி வாய்ந்தவர். அவர் ஒரு அறையில் புகுந்தால் உடனே அந்த அறை முழுதும் கலகலப்பாயிருக்கும்.

அவர் ஒரு அற்புதமான மனிதர்; பெரியார்கள் எல்லோருமே ஒரளவில் இவ்வாறு தான் இருக்கிருர்கள். பல வருஷங்களாக இந்தப் பிரச்னையின் பேரில் நான் மண்டையை உடைத்துக் கொண்டிருக்கிறேன்; ஆனால் விளங்குவதில்லை. திக்கற்றவர்களிடம் காந்திஜீக்கு அளவிலாத அன்பும் அனுதாபமும் உண்டு; என்ருலும், அந்த திக்கற்ற தன்மையை உண்டாக்கி அதை வருத்துகிற திட்டத்தை அவர் ஆதரிக்கின்ருர். காந்திஜீக்கு சாத்விகத்தில்தான் ஆவல். அப்படியிருந்தும் கட்டாயத்தாலும், பலாத்காரத்தாலும் கட்டப்பட்டிருக்கும் அரசியல் ஜனநிர்மாண அமைப்பை அவர் ஆதரிக்கிருர். அவர் இந்தத் திட்டத்துக்கு சாதகமா

யிருக்கிறார் என்று சொல்லுவது ஒருக்கால் சரியில்லாம லிருக்கலாம். ஏறக்குறைய, அவர் அராஜகத் தத்துவ சாஸ்திரி. ஆனால், அரசாட்சியில்லாத ஜனசமூக நிர்மாணம் ஏற்படுவதற்கு வெகு நாளாகும். அதை எளிதிலே கற்பனை கூடச் செய்ய முடியாது. ஆகவே தற்போதைய அமுலை அவர் ஏற்றுக் கொள்ளுகிறார்.

மாறுதலை உண்டாக்குவதற்கு எவ்வகையிலும் பலாத்காரத்தை உபயோகப்படுத்தக் கூடாது என்பது அவருடைய பிடிவாதமான கட்சியாகும். தற்போதைய அமுலை மாற்றுவதற்குக் கையாளப்பெறும் முறைகள் ஒருபுறமிருக்க, உள்ளபடியே, ஒரு குறிப்பிட்ட லட்சியத்தை வகுத்துக்கொள்ள வேண்டும். கூடுமான வரையில், சமீபகாலத்துக்குள் அடையக்கூடிய லட்சியம் ஒன்றைக் குறிப்பிட்டுக் கொள்ள வேண்டும்.

சில சமயங்களில் அவர் தம்மை அபேதவாதி என்று கூறிக்கொள்ளுகிறார். ஆனால், அவர் அந்த வார்த்தையைத் தமக்கு பிரத்தியேகமான பொருளில் உபயோகப்படுத்துகிறார். அபேதவாதம் என்ற பெயரால், வகுக்கப்பட்டிருக்கும் ஜனசமூகத்தின் பொருளாதாரத் திட்டத்துக்கும், அவர் கொடுக்கும் அர்த்தத்துக்கும் துளிக்கூட சம்பந்தமே கிடையாது. அவரைப் பின்பற்றி பிரபல காங்கிரஸ்காரர்களில் பலர், அந்த வார்த்தையைப் பிரயோக வழக்கத்துக்குக்கொண்டு வந்திருக்கிறார்கள். அவர்கள் அந்த சொல்லைக் குழப்பம் கொண்ட ஜீவகாருண்யம் என்ற பொருளில் உபயோகப்படுத்துகிறார்கள். இத்தகைய தவறான பொருளில் அவர்கள் இந்த சொல்லை உபயோகப்படுத்துவதில் பிரிட்டிஷ் தேசிய அரசாங்கத்தின் முதல் மந்திரியான ராம்சே மாக்டொனல்டு அவர்களைப் பின்பற்றி யிருக்கிறார்கள்.

காந்திஜீ அபேதவாதம் தெரியாதவரல்ல என்பதை நானறிவேன். ஏனென்றால், பொருளாதாரத்தைப்பற்றியும் அபேதவாதத்தைப் பற்றியும் அவர் பல நூல்கள் படித்திருக்கிறார். கார்ல் மார்க்ஸ் எழுதிய நூல்களையும் படித்து, அவைகளைப் பற்றி மற்றவர்களோடு விவாதமும் செய்திருக்கிறார். ஆனால், முக்கியமான விஷயங்களில் ஆராய்ச்சி இருந்தால் மட்டும் போதாது என்பதை நான்

நன்ருக இப்பொழுது உணர்ந்து வருகிறேன். "ஒரு விஷயத்தில் உன் உள்ளம் செல்லாவிடின் உன்னுடைய அறிவை மட்டும் கொண்டு நீ அதை நம்பும்படியாகச் செய்து கொள்ள முடியாது" என்று வில்லியம் ஜேம்ஸ் கூறுகிருர். பொதுவாகவே, மனிதனுடைய நோக்கத்தை உணர்ச்சிகள் அடக்கி ஆண்டு, மனதின்பேரில் ஆதிக்கம் செலுத்துகின்றன. நாம் மதம், அரசியல் அல்லது பொருளாதாரம் எதைப்பற்றிப் பேசினுலும், அந்த சம்பாஷணைகளுக்கு வெறும் மோப்பமோ அல்லது உணர்ச்சியோ தான் அஸ்திவாரமாக இருக்கின்றது. ஷோபனேர் சொல்லுவது போல, தான் சங்கல்பம் செய்து கொண்டதை மனிதன் செய்து முடித்துவிட முடியும்; ஆனல், எதைச் சங்கல்பம் செய்து கொள்ளுகிற தென்பதைத்தான் அவனுல் சங்கல்பம் செய்துகொள்ள முடியாது.

தென் ஆப்பிரிக்காவில் காந்திஜீ இருந்த ஆரம்ப காலத்தில், அவர் மகத்தான மாற்றமடைந்தார். அது, அவரை மிகுதியும் அசக்கிவிட்டது. அது, அவருடைய வாழ்க்கை நோக்கத்தையே அடியோடு மாற்றிவிட்டது. அதுமுதல், அவருடைய எல்லாக்கருத்துக்களிலும் அசையாத அஸ்திவாரமொன்று இருக்கிறது. அவருடைய மனம் திறந்த வெளியல்ல. அவரிடம் புதிய யோசனைகளைச் சொல்லுபவர்களுக்கு மிகுந்த பொறுமையோடும் கவனத்தோடும் காது கொடுத்துக் கேட்கின்ருர். ஆனல் இவ்வளவு மரியாதையான சிரத்தையை அவர் காண்பித்தாலும், மூடின கதவினிடம் பிரசங்கம் செய்வதைப் போல ஒருவருக்கு எண்ணம் உண்டாகும். அவர் சில கருத்துக்களில் வேரூன்றிப் போயிருக்கிருர். அவைகளைத் தவிர மற்றவையெல்லாம் முக்கியமானதல்ல என்று அவருக்குத் தோன்றுகிறது. சில்லரை விஷயங்களை வற்புறுத்துவது குறியை விட்டு நழுவுவதாகும். பெரிய திட்டத்தை மூளியாக்குவதாகும். அந்த மூலக்கருத்துகளை விடாப்பிடியாகப் பிடித்துக்கொண்டிருந்தால், மற்றைய விஷயங்கள் யாவும் தாமாகவே, சரியானபடி பொருந்திக் கொள்ளும். சாதனங்கள் சரியாயிருப்பின், முடிவும் சரியாகத்தானிருக்கும்.

அவருடைய எண்ணத்தின் சிறப்பான அஸ்திவாரம் இது தானென்று நான் நினைக்கிறேன். அவர் அபேதவாதத்

தையும் சந்தேகிக்கிறார். முக்கியமாக சமதர்மத்தை சந்தேகிக்கின்றார். ஏனெனில், அவைகள் பலாத்காரத்தோடு ஒட்டிக்கொண்டு கிடக்கின்றன. "வகுப்புப் போராட்டம்" என்ற சொற்களிலே, பலாத்காரமும் சண்டையும் தொனிக்கின்றன. எனவே அவைகள் அவருக்கு வெறுப்பாயிருக்கின்றன. குறிப்பிட்ட ஓரளவுக்கு மேல், விவசாயிகளின் சுகபோகங்களை வளர்ப்பதற்கு துளிக்கூட அவருக்கு விருப்பம் கிடையாது. ஏனென்றால், மிகையான சுகபோகங்களாலும் ஓய்வினாலும் அவர்களுக்கு தன்னழிவும் பாபமும் ஏற்படுமென்பது அவருடைய எண்ணம். கைவிரலால் எண்ணக்கூடிய தனவந்தர்கள் சுகபோகத்தில் ஈடுபட்டுக் கிடப்பது போதாதா? அந்தக் கூட்டத்தில் குடியானவர்களும் சேர்ந்து கொள்ள வேண்டுமா? இத்தகைய ஊக்கத்தை அவர் 1926-ம் வருஷம் எழுதிய கடிதத்தினின்றும் கிரகிக்க முடியும்.

இங்கிலாந்தில் நிலக்கரி சுரங்கத் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்தபொழுது, அங்கிருந்து காந்திஜீக்கு ஒரு கடிதம் வந்தது. அந்தக் கடிதத்துக்கு காந்திஜீ பதில் எழுதினார். கடிதம் எழுதிய பிரிட்டிஷ் நிருபர், இந்தப் போராட்டத்தில் சுரங்கத் தொழிலாளிகள் தோற்றுப் போவது நிச்சயம். ஏனென்றால், அவர்கள் அதிகம் பேர்கள். ஆகையால் அவர்கள் கர்பத்தடை சாதனங்களை உபயோகப்படுத்தி, தங்கள் வர்த்தகத்தை ஒரு அளவுக்குள்கொண்டுவர வேண்டும் என்று கட்சி சொன்னார். இதற்கு மறுமொழி கூறும் வாயிலாக, காந்திஜீ சொன்னதாவது:—"கடைசியாக, சுரங்க முதலாளிகள் கட்சி தவறாயிருந்தும், அவர்கள் வெற்றி பெறுவார்களானால், அது சுரங்கத் தொழிலாளிகள் அதிகமான குழந்தைகளைப் பெற்று விடுகிறார்கள் என்ற காரணத்தாலல்ல. எல்லாத் துறைகளிலும் தொழிலாளிகள் அடக்கத்தைப் பயிற்சிசெய்து கொள்ளாத காரணத்தாலேயே அவர்கள் தோற்றுப்போவார்கள். சுரங்கத் தொழிலாளிகளுக்கு குழந்தைகள் இல்லையாயின், அவர்கள் தங்களை உயர்த்திக் கொள்ளுவதற்குத் தூண்டுதலே இருக்காது. அவர்கள் தங்கள் கூலிகளை உயர்த்திக் கேட்பதற்கு, மெய்ப்பிக்கக்கூடிய கட்சியும் இருக்காது. அவர்கள் குடிக்க வேண்டுமா? சூதாடவேண்டுமா? சுருட்டுக் குடிக்க வேண்டுமா? சுரங்க முதலாளிகள் இந்தப் பழக்கங்

களை யெல்லாம் வைத்துக்கொண்டிருந்தும்,அதிகாரத்துடன் இருக்கிறார்களே என்று கேட்பது சரியான பதிலாகுமா? தொழிலாளிகள் முதலாளியைக் காட்டிலும் உயர்ந்தவர்கள் என்று சொல்லிக்கொள்ள முடியாவிடில், உலகத்தின் அனு தாபத்தைக்கோர அவர்களுக்கு என்ன பாத்தியம் இருக் கின்றது? முதலாளியின் எண்ணிக்கையை அதிகப்படுத்தி, முதலாளி தத்துவத்தை வலுப்படுத்துவதற்காகவா? ஜன நாயகம் வந்தால், நல்ல நிலைமை உலகத்தில் ஏற்படும் என்ற வாக்குறுதிக்காக ஜனநாயகத்தை நாம் வணங்க வேண்டும் என்று சொல்லப்படுகிறது. முதலாளியின் பேரிலும் முத லாளித் தத்துவத்தின் பேரிலும் நாம் சுமத்தும் தீமைகளை ஏராளமான அளவில் நாம் திரும்பவும் உற்பத்தி செய்ய வேண்டாம்.

இதைப் படித்ததும், 1926-ம் வருஷக் கோடையில், நான் கண்ட சுரங்கத் தொழிலாளர்கள், அவர்களது மனைவி மார்கள், அவர்களது குழந்தைகள்,இவர்களுடைய பட்டினி கிடந்து வாடின முகங்கள் என் காட்சிக்குத் தோன்றின. அவர்களை நசுக்கி வரும் பேய்த் திட்டத்துக்கு விரோதமாக திக்கற்றவர்களாயும் இரக்கத்துக்குரியவர்களாயும் அவர் கள் போராடி வந்த காட்சி என் கண்முன்னே தோன்றிற்று. காந்திஜீ கூறிய சங்கதிகள் ஒருவகையில் சரியல்ல. ஏனென் றால், சுரங்கத் தொழிலாளிகள் சம்பள உயர்வு கேட்கவே இல்லை. அவர்கள் சம்பளம் குறைக்கப்பட்டதை எதிர்த்துப் போராடியதற்காக வெளியேற்றப்பட்டார்கள். ஆனால், இதைப் பற்றி நாம் இப்பொழுது கவலைப்பட வேண்டியதில்லை. கர்ப் பத் தடைகளை உபயோகப்படுத்தும் பிரச்னையும் நமக்குக் கவலையுண்டாக்க வேண்டியதில்லை. தொழிற்சாலைப் போராட் டங்களுக்குப் பரிகாரத்தை நாடுவதற்காக இந்த யோசனை சொல்லப்பட்டதுதான் விநோதமாயிருக்கிறது.

தொழில் சம்பந்தமான விஷயங்களையும், தொழிலாளி கள் தங்கள் வாழ்க்கைத் திட்டத்தை உயர்த்திக்கொள்வதற் காக சம்பள உயர்வை நாடுவதையும்பற்றி காந்திஜீ என்ன கருதுகிறார் என்பதைத் தெரிந்துகொள்ளுவதற்காகவே அவ ருடைய மறுமொழியிலிருந்து மேற்கோள் காட்டினேன். அந்த நோக்கு, அபேதவாதத்துக்குக் கிட்டவே வரமுடி யாது. முதலாளி தத்துவத்துக்கும் ஒவ்வினதல்ல. முதலாளி

மார்கள் மட்டும் குறுக்கிடாமலிருந்தால், விஞ்ஞான ஆராய்ச்சியும் தொழில் வல்லபமும் சேர்ந்து கொண்டு வேலைசெய்தால், எல்லோருக்கும் உணவு அளித்து, உடையளித்து குடியிருக்க வீடும் கொடுத்து, மனிதனுடைய வாழ்க்கைத் திட்டங்களை உயர்த்த முடியும் என்று சொன்னால், அது அவருக்குக் காதிலே விழுவதேயில்லை. ஏனென்றால் ஒரு எல்லைக்கு அப்பால், அவர் இந்த விளைவுகளைப்பற்றி கவலைப்படுவதேயில்லை. எனவே, அபேதவாதத்தினால் ஏற்படும் பயன்களில் அவருக்கும் பிடித்தமில்லை. முதலாளி தத்துவத்தை அவர் ஓரளவில் பொறுத்துக் கொண்டிருக்கிறார். ஏனென்றால், அதன்மூலமாக ஒரு சிலரைத் தவிர, பெரும்பான்மையோர் தீமைக்கு ஆளாகமாட்டார்கள் என்பது அவருடைய எண்ணம். அபேதவாதம், முதலாளிதத்துவம் இரண்டினும் அவருக்கு சமமான வெறுப்புத்தான். முதலாளி தத்துவம் குறைந்ததொரு தீமையென்று அதைப் பொறுத்துக்கொண்டிருக்கிறார். மேலும், அது இப்பொழுதிருக்கிற தீமை; இனி தோன்றப்போகும் ஒன்றல்லவே? தற்போதைய தீமையை அவர் கண்காணித்து வருகிறார். தூய்மையையும் நாம் வளர்ச்சி செய்யவேண்டும்; சதா தூய வாழ்வைக் கருத்தில் கொள்ள வேண்டும். பொதுஜனங்களுக்காக உழைக்க விரும்புகிறவர்கள் பொருளாதாரத்தில் அவர்களை உயர்த்த வேண்டும் என்று அக்கரைகொள்ளத் தேவையில்லை. அவர்கள் பொதுமக்களின் தரத்துக்குக் கீழே இறங்கிவந்து, அவர்களோடு சமமாகப் பழகினால் போதும். இவ்வாறு செய்தால், பொதுமக்கள் தாமாகவே ஒரு படி உயர்ந்து போய் விடுவார்கள். இதுதான் உண்மையான ஜனநாயகம் என்று காந்திஜீ கூறுகிறார்.

1934-ம் வருஷம் செப்டம்பர் 17-ந்தேதி அவர் ஒரு அறிக்கையை வெளியிட்டார். அதில் அவர் பின்வருமாறு கூறினார்:- "என்னை எதிர்க்கமுடியாமல் பலர் ஏங்குகிறார்கள் என்று கேள்விப்படுகிறேன். பிறவி ஜனநாயக வாதியான எனக்கு இது அவமானத்தைத் தரும் காட்சியாக இருக்கிறது. நான் பிறவி ஜனநாயகவாதியென்றே எனக்கு உரிமை பாராட்டிக் கொள்ளுகிறேன். ஏன்? மனிதர்களுக்குள்ளே ஏழைகளோடு அப்படியே ஒட்டிக்கொள்ள முயலுகின்றேன். அவர்களைக் காட்டினும் உயர்வான வாழ்வு வாழ நான் இச்சைகொள்ளவில்லை. கூடுமான வரையில் அவர்களுடைய

தாத்துக்கு நெருங்கிப் போக முயற்சி செய்து வருகிறேன். இவைகளால் நான் பிறவி ஜனநாயக வாதி என்று சொல்லிக் கொள்ளக் கூடாதா?'' இந்தக் கட்சியோடும் இந்த நோக்கத் தோடும் நவீன ஜனநாயகவாதி, அபேதவாதி, முதலாளி யாருமே ஒத்துப்போக முடியாது. ஒரே ஒரு அம்சத்தில் தான், ஒருக்கால் ஒத்துப்போகக்கூடும். பெரும்பான்மையோ ரான மக்கள் வாழ்க்கைக்குத்தேவையான பொருள்கள் இல் லாமல் தவிக்கையில், மற்றவர்கள் தங்களுடைய சுகபோகங் களையும், வாழ்க்கை உயர்வையும் டம்பமாக வெளியே கட் டிக் கொண்டு, பொதுமக்களிடமிருந்து பிரிந்து தனித்து வாழ்வது தகுதியில்லாதது, அநாகரிகமானது என்பதை மட்டும் ஒப்புக் கொள்ளலாம். ஆனால், பழைய சமய மனப் பான்மையோடிருக்கும் ஒருவன், காந்திஜீ சொல்லுவதை யேற்றுக் கொள்ளலாம். ஏனென்றால், இருவரும் பண்டைக் காலத்தோடு, உணர்ச்சியில் தங்களைப் பிணித்துக் கொண் டிருக்கிறார்கள். அவர்கள் பண்டைய லட்சியங்களை மனதில் வைத்துக் கொண்டு தான் அவைகளுக்குத் தோதாக யோசனை செய்கிறார்கள்.

கடந்த காலத்தில் என்ன நேர்ந்தது என்பதைப்பற்றி அவர்கள் அதிகமாக யோசிக்கிறார்கள். எதிர்காலத்தில் என்ன நேரப்போகிறது என்று யோசனை செய்வதே இல்லை. பண்டைக் காலத்தைச் சிந்திப்பதற்கும் எதிர்காலத்தைச் சிந் தனை செய்வதற்கும் உலகத்திலே மகத்தான வித்தியாசம் இருக்கிறது. பழைய உலகத்தில் பொதுமக்களின் வாழ்க் கைச் சுகங்களை வளர்ப்பது என்பதைப்பற்றி நினைப்பதே கஷ்டமாகும். ஏழைகள் இந்த உலகில் எப்பொழுதுமே இருக்கத்தான் செய்வார்கள் என்பது பழைய எண்ணம். சிறுபான்மையோரான தனவந்தர்கள் ஜன சமுதாயத்தின் முக்கியமான அம்சமாக ஆகி விடுகிறார்கள். ஏனென்றால், பொருள் உற்பத்திக்கு அவர்கள் தேவை. ஆகவே, சீர்திருத் தக்காரனும், மானியும் தர்மவாதியும் இந்தக் கொள் கையை எற்றுக் கொண்டு, ஏழைகளுக்கு செய்ய வேண்டிய கடமைகளைப்பற்றி, பணக்காரர்களுக்கு உபதேசம் செய்து வந்தனர். பணக்காரர்கள் ஏழைகளின் தர்மகர்த்தர்களாம். அவர்கள் உபகாரிகளாயிருக்க வேண்டுமாம்! உபகாரம் செய்வது உயர்ந்த தன்மையென்று மதத்தால் கருதப்பட லாயிற்று.

காந்திஜீ இந்த தர்மகர்த்தர் கருத்தைத்தான் அடிக்கடி வற்புறுத்திக் கொண்டே வருகிருர். அவருடைய கருத்துப் பிரகாரம், சமஸ்தானுதிபதி ஒரு தர்மகர்த்தர்; பெரிய பூமியாளன் ஒரு தர்மகர்த்தர்; முதலாளி ஒரு தர்மகர்த்தர். காந்திஜீ மதப்பற்று கொண்டவர்களின் பரம்பரையைச் சேர்ந்தவர். "தனவந்தர்கள் தங்களை ஆண்டவனது தொண்டர்களாகவும் அவரது செல்வத்துக்கு கார்டியன்களாகவும், அந்தச் செல்வத்தைப் பிரித்துக் கொடுப்பவர்களாகவும் கருதிக் கொள்ள வேண்டும். ஏனென்ருல், ஏசு கிறிஸ்துவே ஏழைகளை அவர்களிடம் ஒப்படைத்திருக்கிருர்" என்று பாப்பரசர் கூறுகிருர். இதே கருத்து இஸ்லாத்திலும் ஹிந்து மதத்திலும் காணப்படுகிறது. பணக்காரர்கள் தர்மம் செய்ய வேண்டுமென்று மனுப் பண்ணிக் கொள்ளும் பொழுதெல்லாம் அவர்கள் கோயில்களைக் கட்டுகிருர்கள். பள்ளிவாசல்களை அமைக்கிருர்கள். அல்லது தர்மசாலைகளை நிறுவுகிருர்கள்; அல்லது தங்களிடமிருக்கும் ஏராளமான செல்வத்திலிருந்து கொஞ்சம் செப்புக் காசுகளையும், வெள்ளிப் பணங்களையும் ஏழைகளுக்கு தர்மம் செய்துவிட்டு உயர்ந்த காரியம் செய்து விட்டதாகப் பெருமையாக எண்ணிக் கொள்ளுகிருர்கள்.

1891-ம் வருஷம் மே மாதம் பதின்மூன்ருவது லியோ பாப்பரசர் விடுத்த ஸ்ரீமுகத்தில் இந்த கர்நாடக மதமனப் பான்மையை விளக்கிக் காண்பிக்கக் கூடிய குறிப்பான வாக்கியங்கள் காணப்படுகின்றன. நவீன தொழிற்சாலை நிலைமைகளைப்பற்றிப் பேசுகையில் அவர் கூறுவதாவது:—

"............., கஷ்டப்படுவதும் சகித்துக் கொள்ளுவதும் மனிதவர்க்கத்தின் தலைவிதியாகும். மனிதர்கள் எவ்வளவு வேண்டுமானுலும் முயற்சி செய்து பார்க்கட்டும். மனித வாழ்க்கையைத் துன்புறுத்தும் தீமைகளையும் தொல்லைகளையும் ஒழிக்க எந்த தந்திரத்தாலும் ஆகாது; எந்த சக்தியாலும் முடியாது. இவைகளிலிருந்து மனிதர்களை விடுவிக்கலாமென்றும், அவர்களுக்கு கலக்கமில்லாத ஓய்வும் சதா சுகபோகமும் கிடைக்கச் செய்யலாமென்றும் சொல்லக்கூடியவர்கள் எவரேனும் இருப்பார்களாகில், அவர்கள் ஜனங்களை ஏமாற்றுகிருர்கள். அவர்கள் ஜனங்களிடம் வஞ்சகம் செய்கிருர்கள் அவர்களுடைய பொய்யான

வாக்குறுதிகளால், மனிதத் தொல்லைகள் இன்னும் அதிகக் கேவலமாகி விடும். உலகத்தை உள்ளபடியே பார்ப்பது தான் உபயோகமானதாகும். உலகத்திலுள்ள தொல்லை களுக்கு பரிகாரம் தேட வேறு இடத்தை நோக்க வேண்டும்''

வேறு இடம் என்பது எது என்பதைப் பின்னர் பாப் பரசர் குறிப்பிடுகிறார். ''வரப்போகிற ஜன்மத்தை அதாவது சாசுவதமாக இருக்கக்கூடிய வாழ்க்கையை யோசனைக்குக் கொண்டுவந்து சிந்தனை செய்யாமற்போனால் இந்த உலகின் விஷயங்களை நேரே அறிந்து கொள்ள முடியாது அவைகளைச் சரியாக அளந்து கட்டவும் முடியாது. இயற்கைத் தாயினிட மிருந்து நாம் அறிந்துகொள்ளும் மகத்தான உண்மைதான் கம்பீரமான கிறிஸ்தவ வேதமாகும். அந்த வேதத்தின் பேரிலேதான் மதம் உண்மையாகத் தாங்கிநிற்கின்றது. அதா வதுஇந்த ஜன்மத்தைப் போக்கிவிட்டால் பிறகு நாம் உண் மையாக வாழத் துவக்குவோம். உலகத்தின் நசித்துப்போகும் சாசுவதமில்லாத பொருள்களுக்காக, கடவுள் நம்மைப் படைக்கவில்லை. சுவர்க்க துல்லியமான, சாசுவதமான வைகளுக்குத் தான் நம்மைப் படைத்திருக்கிறார். இந்த உல கம் நம்முடைய உண்மையான தேசமல்ல. இந்த உலகத்தில் நாடு கடத்தப்பட்டவர்களைப் போல் நாம் வாழ்வதற்காக கடவுள் இந்த உலகத்தைப் படைத்திருக்கிறார். மனிதர் கள் நல்லதென்றும் தேவையென்றும் சொல்லும்படியான பணமும் ஏனைய பொருள்களும்—இவைகளை நாம் ஏராள மாகப் பெறலாம் அல்லது இவைகள் நம்மிடத்தில் துளிக் கூட இல்லாமலிருக்கலாம், ஆனால் சாசுவதமான ஆனந்தம் சம்பந்தப்பட்டவரையிலும் இவைகளால் அது கிடைக் கவே பெறாது.''

இந்த மத சம்பந்தமான நோக்கம் பண்டைய உலகத் தைச் சேர்ந்ததாகும். தற்போதைய துன்பத்தினின்றும் விமோசனம் கிடைக்கவேண்டுமானால் அது அடுத்த உலகத் தில்தான் கிடைக்கும் என்று எண்ணிக் கொண்டிருந்த காலத் தைச் சேர்ந்ததாகும். ஆனால் நிலைமைகள் மாறி விட்டன. சொப்பனத்திலே கூடக் காண முடியாத அளவுக்கு மனித வர்க்கம் செல்வத்தில் செழித்து விட்டது. என்றாலும் பழைய அந்த கழுத்தறுப்பு மனப்பான்மை மட்டும் இன் னும் மாறினபாடில்லை. அளக்கமுடியாத, மோகமான, அத்

யாத்மிகப் பொருள்களைப்பற்றி இப்பொழுது மிகவும் அழுத்தமாகப் பேசப்படுகிறது. கத்தோலிக்கர்கள் பன்னிரண்டு, பதின்மூன்ருவது நூற்ருண்டுகளைக் கிறிஸ்தவ மதத்தின் "தங்கக் காலம்" என்று மதிக்கிருர்கள். அதே காலத்தை மற்றவர்கள் பயங்கரமான காலம் என்று கருதுகிருர்கள். அந்த தங்கமான காலத்திலே சாதுக்கள் செழித்தோங்கினுர்களாம். கிறிஸ்தவ அரசர்கள், முஸ்லீம்களை எதிர்த்துச் சண்டைபோட தங்கள் நாட்டைவிட்டுச் சென்ருர்கள். பிரமாண்டமான, நேர்த்தியான மாதா கோயில்கள் தோன்றின. அந்தக் காலத்திலே உண்மையான கிறிஸ்தவ ஜனநாயகம் தோன்றிற்ரும்! அதற்கு முன்னும் பின்னும் அத்தகைய ஜனநாயகம் இருக்கமுடியாதாம்! முஸ்லீம்களோ ஆரம்பக் காலத்து கலீபாக்களின் கீழ் இருந்த இஸ்லாமிய ஜனநாயகத்தை ஆவலுடன் பின்நோக்கிப் பார்க்கிருர்கள். அந்தக் காலத்து வெற்றி அவர்களைப் பரவசப்படுத்துகின்றது. ஹிந்துக்கள் வேதபுராண காலங்களைப்பற்றி நினைத்துக் கொள்ளுகிருர்கள். ராமராஜ்யத்தைப்பற்றி கனவு காண்கின்றனர்.

என்ருலும் அந்தப் பண்டைக் காலங்களில் பெரும்பான்மையான பொது மக்கள் சோறு அகப்படாமலும் வாழ்க்கையின் தேவைகள் கூட கிடைக்கப் பெருமலும் மிகவும் கேவலமான ஸ்திதியில் வாழ்ந்ததாக சரித்திரமெல்லாம் நமக்குச் சொல்லுகிறது. ஜனசமுதாயத்தின் உச்சியிலிருந்து ஒரு சிலர் அதிகமாக ஓய்வும் வசதியும் கொண்டு வாழ்ந்து வந்ததால் அவர்கள் பரலோக வாழ்வைச் சிந்தனை செய்திருக்கலாம்! ஆனல் மற்றவர்களோ சோற்றுப் பாட்டுக்குக் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்ததால், அவர்கள் அதற்காக உழைப்பதைத் தவிர வேறென்றுமே செய்திருக்க முடியாது. பட்டினி கிடக்கிறவன் கலைப்பெருக்கையும், பரலோக வாழ்வையும்பற்றி சிந்தனை செய்வது அசாத்தியம். அவனுடைய கருத்துகள் எல்லாம் சோற்றுக்கு வழி தேடுவதிலேயே மூழ்கிக் கிடக்கும். இந்தத் தொழிலபிவிருத்தி காலத்தில் அநேக தீமைகள் நம் கண்ணின் முன்னே பெரிதாகத் தோன்றுகின்றன. ஆனல் மொத்தத்தில் உலகத்தை எடுத்துக்கொண்டு பார்த்தாலும் சரி, திறமையாக தொழிலபிவிருத்தி ஏற்பட்டிருக்கிற இடங்களை சிறப்பாக கவனித்தாலும் சரி, மனிதன் செல்வச் செழிப்பில் சிறிது முன்

னேற்ற மடைந்திருக்கின்றான். ஆகவே பெரும்பான்மை யோரான ஜனங்கள் கலைப்பெருக்கிலும் பரலோக வாழ்வி லும் ஆவல் கொள்ள சாத்தியமாயிருக்கிறது. இந்த நிலைமை இந்தியாவிலும் ஏனைய குடியேற்ற நாடுகளிலும் இன்னும் தெளிவாக ஏற்படவில்லை. ஏனென்றால் இந்நாடுகளில் இன் னும் தொழிலபிவிருத்தி நன்றாக ஏற்படவில்லை.

ஏனைய நாடுகளின் தொழிலபிவிருத்தியால் நமது நாட் டுச் செல்வம் சுரண்டப்பட்டு வருகிறது. பொருளாதாரத் துறையில் மிகவும் கேவலமான நிலைமையை நாம் அடைந்து விட்டதுமல்லாமல் கலைப்பெருக்கிலும் அத்யாத்மிக வாழ்வி லும் பின்னடைந்து வருகிறோம். குற்றம் தொழிலபி விருத்தியின் பேரிலல்ல; அது அந்நிய ஆட்சியின் பயனாகும். இந்தியாவில் ஏற்பட்டிருக்கும் மேனாட்டு நாகரிகப் போக்கி னால் பாளையக்காரர்களின், ஜமீன்தார்களின், பெரிய நிலக் கிழவர்களின் வல்லமை அதிகரித்துப் போய் நம்முடைய பிரச்னைகள் எதற்கும் பரிகாரங்களை ஏற்படுத்திக் கொடுக்கா மல், இந்தப் பிரச்னைகளை இன்னும் சிக்கலாக்கி விட்டன.

அது நமது துர்ப்பாக்கியமாகும். அதனால் நாம் தொழிலபிவிருத்தியின் நன்மைகளைப் பார்க்காமல் இருக்கக் கூடாது. தற்போதைய நிலைமைகளின் படிக்கு பணக்காரன் இனித் தேவையேயில்லை. உற்பத்தித்திட்டத்துக்கு அவன் தேவையான ஒரு பகுதியல்ல. மொத்தத்தில் ஜனசமுதா யத்துக்கும் அவன் ஒரு தேவையான அம்சமல்ல. அவன் மிகையானவன். அவன் எப்பொழுதும் எதற்கும் குறுக்கே விழுந்து கொண்டிருக்கிறான். பணக்காரன் தர்மவானாயும் ஏழை தலைவிதிக்குக் கட்டுப்பட்டுநன்றியறிதலுள்ளவனாகவும், சிக்கனமாயும், யோக்கியனாயும் வாழவேண்டுமென்று பண் டைக்காலத்துப் பாதிரிமார் உபதேசம் செய்து கொண்டிருந்த வேலைக்கு இப்பொழுது பொருளே இல்லை. மனித வர்க்கத் தின் யுக்திகளும் சாதனங்களும் மகத்தாக வளர்ந்து விட்டன அவைகளால் உலகப் பிரச்னைகளுக்குப் பரிகாரங் களை நாட முடியும்.

பணக்காரர்களில் பலர் திட்டமாகச் சார்ந்து பிழைப்ப வர்களாக ஆகிவிட்டார்கள். வீணில் உண்டுகளித்திருப்போர் ஜன சமூதாயத்துக்கு இடைஞ்சலாயிருப்பவர்கள். அது

மட்டுமல்ல; ஜனசமுதாயத்திற்கு வீண் செலவை வைப்ப வர்கள். அந்தக் கூட்டமும், அந்தக் கூட்டத்தை உண்டாக் கும் திட்டமும் வேலையையும் உற்பத்தியையும் தடுத்து விட்டு, வேலையில்லாமல் இரண்டு கோடிகளிலும் இருக்கும் நபர்களை அதிகரிக்கச் செய்து விடுகின்றன. அதாவது பிறர் உழைப்பினால் வாழ்பவர்களும், வேலையில்லாமல் தவித்து மாளுபவர்களும் அதிகரித்து விடுகிறார்கள். "பட்டினி கிடந் தும் வேலையில்லாமலும் தவிக்கும் மக்களுக்கு கடவுள் தரிச னம் கொடுக்கக்கூடிய முறை ஒன்றே ஒன்றுதான். அதற்கு உழைப்பு என்று பெயர். அந்த உழைப்புக்கு சாப்பாடு என்ற கூலிகிடைப்பதுதான் பொருத்தமாகும். தன் உண வுக்காக உழைக்கும் பொருட்டு மனிதனைக் கடவுள் படைத் திருக்கிறார். வீணில் உண்டு களித்திருப்போர்கள் திருடர் கள் என்று சொல்லியிருக்கிறார்" என்று காந்திஜீயே ஒரு சமயம் எழுதியிருக்கிறார்.

நவீன உலகத்தின் சிக்கலான பிரச்னைகளைப் பழைய முறைகளைக்கொண்டு பிரயோகம் செய்து தெரிந்துகொள்ளப் பார்ப்பது குழப்பத்தை யுண்டாக்கும். பழைய பிரச்னைகள் இப்பொழுது இல்லை. காலம் மாறின சொற்களைக் கொண்டு அந்தப் பிரச்னைகளைக் குறிப்பிடப் பார்ப்பது வீணான வேலை யாகும். அதனால் காரியம் பலிக்காது. சொந்த சொத்து என் பது உலகத்தின் அடிப்படையான கருத்துகளிலே ஒன்று என்று சிலருக்குத்தோன்றுகிறதே, அந்த சொத்தே அடிக்கடி மாறிக் கொண்டு வந்திருக்கிறது. ஒரு சமயம் அடிமைகள் சொத்தாகப் பாவிக்கப்பட்டார்கள். அதுபோலவே, ஸ்திரீக ளும் குழந்தைகளும் சொத்தாக பாவிக்கப்பட்டார்கள். பாதைகள், கோயில்கள், ஓடங்கள், பாலங்கள், பொதுஜன வசதிகள், ஆகாயம், நிலம், இவைகளிலே, பிரபு முதல் பாத் தியம் கொண்டாடினான். அவனுக்கு கீழே இருக்கப்பட்ட குடும்பங்களில் கலியாணமாக வேண்டிய பூகன்னிகைகளோடு சேரும் முதல் உரிமை,பிரபுவைச் சேர்ந்ததாக ஒரு காலத்திலி ருந்தது.மிருகங்கள் இன்றும் சொத்தாகக் கருதப்படுகின்றன. இந்த உரிமையைப் பல தேசங்களில் சட்டத்தின் மூலமாக, குறைத்து விட்டார்கள். சென்ற போர்க் காலத்தில் சொத்துரி மைகள் யாவும் தொடர்ச்சியாக ஆக்கிரமிப்புச் செய்யப்பட் டன. இன்றைக்கு சொத்து என்பதே கண்ணுக்குத் தெரி யாத ஒன்றாகி விட்டது. சில பங்குகள் வங்கியில் நாணயம்

இவைகள் சொத்தாகக் கருதப்படுகின்றன. சொத்து என்பதைப்பற்றி கருத்து மாறிக் கொண்டே இருக்கிறதினால், அரசாங்கம் இந்தக் கருத்தில் அதிகமாக தலையிடுகிறது பொது ஜன அபிப்பிராயத்தின் மூலமாக, சட்டம் ஏற்பட்டு சொத்துக்காரருடைய அர்த்தமில்லாத உரிமைகள் குறைக்கப்பட்டு வருகின்றன. கனமான வரிகள் விதிக்கப்படுகின்றன. இந்த வரிகளைச் சொத்துப் பறிமுதல் என்றே சொல்லி விடலாம். இந்த வரிகள் பொது நன்மைக்காக, தனி நபர்களின் சொத்துரிமைகளை விழுங்கி விடுகின்றன.

இப்பொழுது அரசாட்சியின் நோக்கம் பொது நலம் ஒன்றுதான். தனி மனிதன் தன்னுடைய சொத்துரிமைகளைக் காப்பாற்றிக் கொள்வதற்காகக் கூட, இந்தப் பொதுநலத்துக்கு விரோதமாக நடக்கவே முடியாது. பண்டைக் காலத்தில் பெரும்பான்மையோரான மக்களுக்குச் சொத்துரிமையே கிடையாது. அவர்களே மற்றவர்களால் சொத்தாக பாவிக்கப்பட்டார்கள். இன்றைக்குக்கூட, குறிப்பிட்ட சிலருக்கு இத்தகைய பாத்தியங்கள் இருக்கின்றன. நிலைத்த உரிமைகளைப்பற்றி மிகுதியும் பேசப்படுகிறது. இன்றைக்கு புதியதொரு நிலைத்த உரிமை வெளித்தோன்றி விட்டது. தனி ஆணும் பெண்ணும் பாடுபட்டு உழைத்து, அந்த உழைப்பின் பயனை அனுபவிக்கலாம் என்ற உரிமைதான். இத்தகைய மாறிக் கொண்டுவரும் கருத்துகளினால் சொத்தும் முதலும் மறைந்துபோய் விடுவதில்லை. அவைகள் பரவிப் போய் விடுகின்றன. சிலர் மட்டும் ஜனசமுதாயத்தின் பேரில் முன்னர் அதிகாரம் செலுத்தி வந்தனர். அந்த அதிகாரம் அவர்களிட மிருந்து பறிமுதல் செய்யப்பட்டு ஜனசமுதாயமே மொத்தமாக அதை எடுத்துக் கொண்டுவிட்டது.

தனி நபரை உள்ளத்திலும் நடையிலும், மனப்போக்கிலும் திருத்தி அதன் மூலமாக வெளி உலகத்தை மாற்ற காந்திஜீ விருப்பப்படுகிறார். கெட்ட வழக்கங்களையும், சுகபோகங்களையும் விட்டு விட்டு ஜனங்கள் புனித வாழ்வு வாழ வேண்டுமென்று அவர் ஆசைப்படுகிறார். காமத்தை ஒழித்தல், லாகிரி வஸ்துக்களை உட்கொள்ளாதிருத்தல் இவைகளைப்பற்றி அவர் அழுத்திப் பேசுகிறார். இவைகளுடைய தாரதம்மியக் கெட்டதனத்தைப்பற்றி அபிப்பிராயபேதமிருக்கலாம். ஆனால் தனி நபர் சம்பந்தப்பட்ட முறையில் நோக்கினாலும் சரி சமுதாய நோக்கைக் கொண்டு பார்த்தாலும் சரி,

மேற்சொன்ன தீய பழக்கங்கள் பேராசை, சுயநலம் பொருள் இருப்பு, தன்னலத்துக்காக தனிநபர்களின் பயங்கரப் போராட்டம், அந்த காரணத்தால் கூட்டங்களுக்குள் ஈவு இரக்கமில்லாத சண்டைகள், ஒரு கூட்டம் இன்னொரு கூட்டத்தை அடக்கி வைத்து எல்லா வகையிலும் சுரண்டப் பார்ப்பது நாட்டுக்கு நாடு பயங்கரமாக யுத்தம் செய்வது—இவைகளைக் காட்டிலும் குறைந்த தீமை கொண்டவைகள் அல்லவா?

காந்திஜீ இந்த பலாத்காரத்தையும் இழிவான போராட்டங்களையும் வெறுக்கிறார். ஆனால் இப்பொழுது ஜனசமூகத்தில் அமுலிலிருந்துவரும் சட்டப்படிக்கு இவைகள் இயற்கையான விளைவுகள்தானே? சொத்து உரிமைகளை ஒப்புக்கொண்டால் வலுவானவன் பலவீனனைத் தனக்கு இரையாக்கிக் கொள்ளலாம்என்றும் சக்தியுள்ளவர்கள்எதையும் எடுத்துக்கொள்ளலாம் என்றும், சக்தியுடையவர்கள் எதையும் தங்களுக்கே வைத்துக் கொள்ளலாமென்றும், அந்தச் சட்டம் ஆதரிக்காமலிருக்க முடியுமா? இன்றைக்கிருக்கும் ஆதாய ஆசையால், போராட்டங்கள் தான் உண்டாகும். மனிதனுடைய கொள்ளையடிக்கும் உணர்ச்சிகளுக்குத் தற்போதைய திட்டம் போதுமான அளவு இடம் கொடுக்கிறது. அதே திட்டம் அந்த உணர்ச்சிகளைக் காப்பாற்றவும் செய்கிறது. தற்போதைய சொத்துரிமைத் திட்டத்தினால் சில நேர்த்தியான உணர்ச்சிகள் உண்டாகின்றன. ஆனால் நல்ல உணர்ச்சிகளைக் காட்டிலும் கேவலமான உணர்ச்சிகளைத்தான் அதிகமாக வளர்க்கின்றது.

வெற்றியென்றால் மற்றவர்களைக் கீழே தள்ளி, தோற்று வீழ்ந்த அவர்களது உடம்புகள் மீது ஏறி மிதிப்பது என்று அர்த்தம் கொள்ளப்படுகிறது. இந்த ஆசைகளும், இந்த இழிவான கருத்துகளும் ஜனசமூகத்தால் வளர்க்கப்பட்டு ஜனசமுதாயத்தில் உயர்ந்த ரகமானவர்களைத் தங்களுக்கு பக்தர்களாக ஆக்கிக் கொள்ளுமாயின் காந்திஜீ தமது லட்சியத்தை அடையப்பெற முடியுமா? நடைநேர்மையுள்ள மனிதனாக ஒவ்வொருவரும் ஆகவேண்டுமென்று காந்திஜீஆசைப்படுகிற ஆசை பலிக்குமா? அவர் ஜனச்மூக சேவை மனப்பான்மையை வளர்க்க விரும்புகின்றார். அவரது எண்ணம் சிலர் சம்பந்தப்பட்ட வரையில் பலிக்கலாம். ஆனால்சொத்து சேர்த்தவர்களை மதிப்புள்ளவர்களாக ஜனசமுதாயம் கொள்ளும் பொழுது, மனித வாழ்க்கைக்குத் தூண்டுதலே லாபம்

சம்பாதிக்கும் எண்ணமாக இருக்கும்பொழுது பெரும் பான்மையோர் அந்த வழியைத்தான் பின்பற்றுவார்கள்.

ஆனல் பிரச்னை இனி அற சம்பந்தமானதாக இருக்க முடியாது. அது நெருக்கடியான கேள்வியாகி விட்டது. அனுபவ சாத்தியமான பரிகாரம் அதற்குத் தேவை. ஏனென்றுல் உலகம் சகிக்க முடியாத குழப்பத்தில் இருக்கிறது. அந்தக் குழப்பத்திலிருந்து வெளிவர வழி கண்டு பிடிக்கப்பட வேண்டும். "மிக்காபரை"ப்போல் ஏதேனும் ஒன்று நேரும் என்று நாம் காத்திருக்கமுடியாது. முதலாளி தத்துவம், அபேதவாதம், சமதர்மம், முதலியவைகளின் தீமைகளைப்பற்றி மட்டும் கண்டனம் செய்துவிட்டு புதிய திட்டத்துக்கும் பழைய திட்டத்துக்கும் நடுவே இரண்டு திட்டங்களின் உயர்ந்த தன்மைகளையும் ராஜியாகக் கொண்ட ஒன்றைக் கொண்டு நாம் வாழவும் முடியாது. வியாதியைத் தெரிந்து கொள்ள வேண்டும். ஔஷதத்தைக் கொடுத்து பரீக்ஷைபார்க்க வேண்டும். நாம் இப்பொழுது இருக்கிற நிலைமையில் எப்பொழுதுமே இருக்க முடியாதென்பது நிச்சயம். பின்னே செல்ல முயற்சி செய்யலாம்; அல்லது முன் நோக்கிப்போகலாம். அநேகமாக இந்த விஷயத்தில் நமக்கு சுதந்திரமே இருக்காது. ஏனென்றுல் பின்னே செல்லுவதென்பது கற்பனை செய்ய முடியாத ஒன்றுகும்.

இருந்தாலும் காந்திஜீயின் பல அலுவல்களைக் கொண்டு அவர் குறுகிய துண்டான வாழ்வு வேண்டுகிறுர் என்றும், தன்னகத்தே அடக்கிக்கொண்டு கிடக்கும் நாடு மட்டுமல்ல, தன்னகத்தே அடக்கிக்கொண்டு கிடக்கும் கிராமத்தையே படைக்கப் பார்க்கிறுர் என்பதுபோலத் தோன்றுகிறது. நாகரிகமில்லாக் காலத்தில் கிராமம் தனக்குள்ள தேவையைத்தானே பூர்த்தி செய்து கொண்டு வந்தது. தனக்குத் தேவையான உணவை உற்பத்தி செய்து கொண்டது. உடையையும் மற்றுமுள்ள தேவைகளையும் தானே பூர்த்தி செய்து கொண்டு விட்டது. இப்படியாயின் வாழ்க்கைத் திட்டம் மிகவும் கீழான படித்தரத்தில்தான் இருக்கமுடியும். இதை காந்திஜீ சாசுவத லட்சியமாகக் கொண்டிருக்கிறுர் என்று நான் நினைக்கவில்லை. ஏனென்றுல் அது சாத்தியமில்லாத லட்சியமாகும். தற்போதிருக்கும் ஏராளமான ஜனங்கள் சில தேசங்களில் வாழவே முடியாது. அவர்கள் இந்த வறுமைக்கும், பஞ்சத்துக்கும் மீண்டும் திரும்

பிப்போகும் நிலைமையைக் கொஞ்சம் கூடச்சகிக்க மாட்டார்கள். இந்தியாவைப்போன்ற விவசாய நாட்டில் நம்முடைய தற்போதைய வாழ்க்கைத் திட்டம் மிகவும் குறைந்த படித்தரமாயிருப்பதால் கிராமத் தொழில்களை அபிவிருத்தி செய்வதால் பொது ஜனங்களின் நிலைமையில் சிறிது அபிவிருத்தி உண்டாகக்கூடும் என்று நான் கருதுகிறேன். ஆனால் வேறு ஒவ்வொரு தேசமும் பிணிக்கப்பட்டிருக்கிறது நாமும் உலகத்தின் வேறு பகுதிகளோடு பிணிக்கப்பட்டிருக்கிறோம். அவைகளை விட்டுப் பிரிந்து நிற்பது நமக்கு சாத்தியப்படாத சங்கதியாகும். ஆகவே உலகத்தோடு நம்மையும் சேர்த்து அளந்து பார்க்க வேண்டும். அந்த முறையில் தனித்துண்டாக இருக்க முயலுவது கூடாத காரியமாகும். என் சம்பந்தப்பட்ட வரையில் அது எல்லா வகைகளிலும் விரும்பத்தகாததென்று எண்ணுகிறேன்.

கடைசியாக ஒரே ஒரு பரிகாரம்தான் சாத்தியமானதாக நம்முடைய கண்ணில் படுகிறது. முதலில் நம்முடைய தேச எல்லைக்குள்ளே அபேதவாதத் திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வருவது; இறுதியில் உலகம் முழுதும் இந்தத்திட்டத்தை அனுஷ்டானத்தில் கொண்டுவருவது. உலக நன்மையைக் கருதி, உற்பத்தியை அடக்கியாண்டு, செல்வத்தை நிரவச் செய்வதாகும். இதை எவ்வாறு செய்வது என்பது வேறு சங்கதி. ஆனால் சில பேர்கள் தற்போதைய திட்டத்தில் லாபத்தையடைந்து புதிய திட்டத்தை எதிர்க்கிறார்கள் என்ற காரணத்தினால் ஒரு தேசமோ அல்லது உலக முழுதுமோ தேக்கமுற்றுக் கிடக்கவேண்டும் என்று சொல்லுவது தவறாகும். இதற்குக் குறுக்கே அரசியலமைப்புகளும் ஜனசமூக அமைப்புகளும் இருக்குமாயின், அவைகளை அப்புறப்படுத்த வேண்டியதுதான்.

விரும்பத்தக்க அனுபவ சாத்தியமான அந்த லட்சியத்தைப் பறிகொடுத்து விட்டு, பழைய அமைப்புகளோடு ராஜி செய்து கொள்ளுவது மகத்தான துரோகமாகும். உலக நிலைமைகளின் போக்கினால் இத்தகைய மாறுதல்களைக் கட்டாயப்படுத்தலாம் அல்லது விரைவு படுத்தலாம். ஆனால் சம்பந்தப்பட்ட பெரும்பான்மை மக்களின் சம்மதமும் பற்றும் இல்லாவிடில், அந்தத் திட்டத்தை அமுலுக்குக்கொண்டுவர முடியாது. ஆகவே அவர்களுடைய மனதைத் திருப்பி இந்தக் கட்சிக்குக் கொண்டு வரவேண்டும். சிறு

கூட்டமாகக் கூடி, சதி செய்து, பலாத்காரத்தை உபயோகப் படுத்தினுல் அது பயன்படாது. தற்போதைய திட்டத் தால் லாபமடையக் கூடியவர்களேயும் இந்தக் கட்சிக்கு இழுக்க இயற்கையிலேயே முயற்சிகள் செய்யப்பட வேண் டும். ஆனுல் நலமான முறையில் அவர்களில் பெரும்பான் மையோரைக் கட்சிக்கு இழுக்க முடியாது என்று தோன்று கிறது.

கையால் நூற்பது, கை நெசவு என்ற கதர் இயக்கம், காந்திஜீயின் செல்வக் குழந்தையாகும். இது தனி நபராக நின்று பொருளே உற்பத்தி செய்யும் பழைய முறையை வலுப்படுத்துவதாகும். ஆகவே தொழிலபிவிருத்திக் காலமான இந்தக் காலத்துக்கு ரொம் பவும் முந்தின பழைய பரிகாரமாகும். தற்போதைய முக் கியமான பிரச்னேக்கு அதை ஒரு பரிகாரமாகக் கருதமுடி யாது. அதுமட்டுமல்ல; சரியான பாதையில் வளருவதற்கு இடைஞ்சலாயிருக்கக் கூடிய மனப்பான்மையையும் அது உண்டாக்குகின்றது. என்றுலும் அது ஒரு தற்காலிகப் பரிகாரம். அது உபயோகமான வேலேயைச் செய்திருக்கி றது. நாடு முழுதக்கும் பொதுவான தொழிலபிவிருத்தி பிரச்னேகளேயும், நிலசம்பந்தமான பிரச்னேகளேயும் சரியான முறையில் தீர்த்து வைக்க அரசாங்கம் முயற்சி செய்யாத வரையிலும் அது இன்னும் கொஞ்ச காலத்துக்கு உபயோக மாய்த் தானிருக்கும்.

இந்தியாவில் வேலேயில்லாமல் திண்டாடுகிறவர்கள் கோடிக் கணக்கில் இருக்கிருர்கள். அதன் புள்ளி கணக்குக்கு வருவதில்லே. கிராமாந்தரங்களில் இன்னும் அதிக மான வேலேயில்லாமை பரவி நிற்கின்றது. இந்த வேலேயில் லாமையைத் தடுப்பதற்கோ, வேலேயில்லாதவர்களுக்கு ஏதே னும் ஒரு வகையில் ஒத்தாசை செய்யவோ அரசாங்கத்தா ரால் யாதொரு முயற்சியும் செய்யப்படவில்லே. பூராவும் அரைகுறையாகவும் வேலேயில்லாமலும் படித்தவர்களுக்கு செல்வத் துறையில் கதர் சிறிதளவு உதவியாக இருந்திருக்கி றது. இந்த ஆதாயம் தங்களுடைய சொந்த முயற்சிக ளின் பயனுனபடியால் அது மக்களின் தன்மதிப்பை உயர் த்தி அவர்களுக்கு தன்னம்பிக்கை யுணர்ச்சியைக் கொடுத்தி ருக்கிறது. சிறப்பாக மனுேபாவத்தில் மாற்றம் ஏற்பட்ட தைக் குறிப்பிடாமல் இருக்க முடியாது. நகரத்துக்கும் கிரா

மத்துக்கும் ஓரளவு தொடர்பை கதர் உண்டாக்கி விட்டது. நடுத்தர வகுப்பு அறிவாளிகளேயும் விவசாயிகளேயும் நெருக்கத்துடன் பழகும்படி அது செய்து விட்டது. அதை உடுப்பவனிடமும் சரி, அதைப் பார்ப்பவனிடமும் சரி ஒருவிதமான மன உணர்ச்சி உண்டாகின்றது. வெண்மையான எளிய கதர் உடையை நடுத்தர வகுப்பார்கள் உடுத்திக் கொண்டதால் படாடோபமும் தொலேந்து போய்விட்டது. டம்பம் குறைந்தது; பொது மக்களோடு தாங்களும் சேர்ந்தவர்கள் என்ற ஒற்றுமை எண்ணமும் உண்டாயிற்று.

நடுத்தர வகுப்பில் கீழ்த்தரமானவர்கள் பணக்காரர்களேப் பார்த்து உடைதரித்துக் கொள்ளும் வழக்கத்தை விட்டு விட்டார்கள். மலிவான உடைகளேத் தரித்துக் கொண்டால் அவமானம் ஏற்படுவதாக எண்ணியதும் போய் விட்டது. உண்மையிலேயே அவர்கள் கதரினல் பெருமைகொண்டார்கள். பட்டுகளேயும், உயர்ந்த உடுப்புகளேயும் அணிந்து கொண்டிருப்பவர்களேக் காட்டிலும் தாங்கள் உயர்ந்தவர்கள் என்றும் கருதத் தலேப்பட்டார்கள். மகா ஏழை கூட இந்த கௌரவத்தையும் தன்மதிப்பையும் ஓரளவில் கொள்ளலானன். கதர் கட்டிக்கொண்டிருக்கும் கூட்டத்தில் ஏழை பணக்காரன் யார் என்று சொல்ல முடியாது. ஒரு வித சகோதர பாவம் வளர்ந்து விடுகிறது. கதரின் மூலமாக காங்கிரஸ் பொது மக்களின் கிட்ட நெருங்க முடிந்தது என்பதில் சந்தேகமேயில்லே. கதர் தேச விடுதலேயின் உடையாயிற்று.

ஆலே முதலாளிகள் தங்கள் துணிகளின் விலேகளே உயர்த்துவதைத் தடுப்பதற்கும் கதர் பெருந்துணேயாக இருந்தது. இந்த ஆலே முதலாளிகள் அந்நிய நாடுகளிலிருந்து முக்கியமாக லங்காஷயரிலிருந்து இறக்குமதியான துணிகளேக் கண்டு பயந்து தங்கள் துணிகளுக்கு விலேயை கூட்டாமல் இருந்தார்கள். ஆனல் சென்ற உலகப் போர்க்காலத்தில்போல் இந்தப் போட்டி நின்றுபோகும்பொழுதெல்லாம் இந்தியாவில் துணிகளின் விலே மிகவும் அதிகப்பட்டுப்போய் இந்திய ஆலே முதலாளிகள் நிறைய லாபம் சம்பாதித்தார்கள். சுதேசி, அன்னியத்துணி பகிஷ்காரம் இந்த இயக்கங்களால் இந்திய ஆலேகளுக்கு மிகுதியும் சாதகம் ஏற்பட்டது. ஆனல் கதர் தோன்றியதும் மாறுதல் உண்டாயிற்று. முன்னே விலே

உயர்ந்து விற்றது போல இப்பொழுது அவ்வளவு விலையை உயர்த்த முடியவில்லை.

ஜனங்களிடம் இருந்த கதர் அபிமானத்தை இந்திய ஆலைகளும் ஜப்பானிய ஆலைகளும் தங்களுக்கு சாதகமாக உபயோகப்படுத்திக்கொண்டன. கதரைப்போலத் தோன்றும் படியான முரட்டுத் துணிகள் ஆலைகளில் உற்பத்தி செய்யப் பட்டு விற்கப்பட்டன. போரைப்போல ஏதேனும் ஒரு நெருக் கடி சேர்ந்து அன்னியத் துணிகள் இந்தியாவுக்கு வாரமல் நின்றுவிட்டாலும் 1916-ம் வருஷம் முதல் பல ஆண்டுகள் ஜனங்களை ஆலை முதலாளிகள் "கொள்ளையடித்ததைப்போல" இனி செய்ய முடியாது. கதர் இயக்கம் அதைத் தடுத்து விடும். சீக்கிரத்தில் வளரும்படியான தன்மை கதர் அமைப்புக்கு இருக்கின்றது. இந்தியாவில் கதர் இயக்கத்தினால் தற்போது பலநன்மைகள் ஏற்பட்டாலும் கதர் இயக்கம் தற்காலிக மான சங்கதிதான் என்று எனக்குத் தோன்றுகிறது. பின்னால் ஜன நிர்மாண திட்டம் மாறும்பொழுது அந்த சந்தர்ப் பத்துக்கு உதவியாயிருக்கும். அதுவரையில் கதர் இயக்கம் இருந்துவரலாம். ஆனால் எதிர்காலத்தில் விவசாயிகளின் திட்டத்தையும் தொழிலபிவிருத்தித் திட்டத்தையும் அடி யோடுமாற்றி அமைக்க வேண்டிதாயிருக்கும். லட்சக் கணக் கில் செலவு பிடிக்கும் கமிஷன்களினால் மேல் மூச்சாக சில சில் லரை மாறுதல்களை யோசனையாகக் கூறலாம். ஆனால் அத னால் நன்மை உண்டாகாது.

நம்முடைய தற்போதைய நிலத் திட்டம் நம் கண் களின் முன்னாலேயே அழிந்து வருகின்றது. அது உற் பத்திக்கும் வினியோகத்துக்கும் இடைஞ்சலாயிருக்கிறது. தெளிவான திட்டத்தைப் பெரிய அளவில் அமுலுக்குக் கொண்டு வருவதற்கும் தடையாக இருக்கிறது. அதை அடி யோடு மாற்ற வேண்டும். சிறிய பட்டாக்களை ஒழித்து விட்டுக் கூட்டுறவு முறைகளில் விவசாயம் செய்யவேண்டும். குறைந்த முயற்சியில் அதிகமான விளைவைக் காணலாம். இவைக ளின் மூலமாக நவீனத் தேவைகளைப் பூர்த்திசெய்துகொள் ளலாம். மண்ணை நம்பியே எல்லோரும் பிழைக்க முடியாது. புதிய விவசாயத் திட்டங்களைப் பெரிய அளவில் அமுலுக் குக் கொண்டு வரும் பொழுது எராளமான ஜனங்களுக்கு விவசாயத்தில் வேலையில்லாமற் போய்விடும். அவர்கள் சிறிய கைத் தொழில்களைக் கொள்ள வேண்டும் அல்லது பெரிய

அளவில் நடத்தப்பெறும் தொழிற்சாலைகளில் புகுந்து கொள்ள வேண்டியதாயிருக்கும். மற்றும் ஒரு கூட்டம் ஜனசமூக சேவையில் ஈடுபடலாம். கதரின் மூலமாக அநேக பிராந்தியங்களில் வறுமைக்கு பரிகாரம் ஏற்பட்டிருக்கிறது. ஆனால் இந்த வெற்றிகரமான விளைவிலே, ஆபத்து அம்சமும் இருக்கின்றது. தற்போது நசித்து வரும் நிலத்திட்டத்தை தலைகுப்புற விழச் செய்யாமல் அதற்கு ஓரளவில் உபகார மாயிருப்பது புதிய திட்டத்துக்குத் தடையாயிருக்கிறது. அது பெருந்தடையாக இப்பொழுது கண்ணிற்படவில்லை. இருந்தாலும் கதரில் அந்த ஆபத்து இருக்கத்தான் செய்கிறது. விவசாயிக்கும் சிறிய மிராசுதாருக்கும் நிலத்திலிருந்து அவனுக்குக் கிடைக்கும் வருமானம் இப்பொழுது அவர்கள் நடத்திவரும் மிகக் கேவலமான வாழ்க்கைக்குக்கூட போதவில்லை. தன்னுடைய அல்ப வருமானத்திற்கு வீடு நிரம்ப வேறு வழிகளை அவன் காணவேண்டும் அல்லது வழக்கமாக அவன் செய்துவருவதுபோல கடன் வாங்கி இத்தகைய பணத்தையும் அரசாங்க வரியையும் செலுத்த வேண்டும். கதரினால் ஏற்படும் வருமானத்தினால் அரசாங்கத்துக்கும் பெரிய பண்ணையார்களுக்கும் தான் லாபம். கதர் இல்லாவிட்டால் விவசாயிகளிடமிருந்து அவர்கள் யாதொன்றையும் வசூல் செய்யவே முடியாது. கதரினால் அதிக வருமானம் வருமானால் மிராசுதார்களும் ஜமீன்தார்களும் இந்த உயர்வுக்குத் தகுந்தாற்போல் தங்கள் குத்தகைப் பணத்தையும் உயர்த்திக் கொள்ளுவார்கள். தற்போதைய திட்டம் அமுலிலிருக்கும் வரையில் விவசாயிகள் வேறு துறைகளில் வேலைசெய்து சம்பாதித்து சிக்கனப்படுத்தும்பொருள் எல்லாம் இறுதியில் பெரிய பண்ணையார்களுக்குத்தான் லாபமாக முடியும். எனக்கு ஞாபகமிருக்கிற வரையிலும் "அபிவிருத்தியும் வறுமையும்" என்று ஹென்ரி ஜார்ஜ் எழுதியிருக்கும் நூலில் இதை விரிவாக ஆராய்ச்சி செய்து, அயர்லாந்து தேசத்தின் அனுபவத்திலிருந்து உதாரணங்கள் கொடுத்திருக்கிறார்.

கிராமக் கைத்தொழில்களை உயிர்ப்பிக்க காந்திஜீ செய்யும் முயற்சி அவருடைய கதர் திட்டத்தின் ஒரு பகுதியாகும். அதனால் விரைவில் நன்மை உண்டாகும். அந்தக் கைத்தொழில்கள் சிலவற்றால் சாசுவதமான நன்மை உண்டாகலாம். ஆனால் அவைகளில் பெரும்பான்மையானவைகளால்

தற்காலிக நன்மைதான் ஏற்படும். கிராம வாசியை அவனது தற்போதைய கஷ்டத்திலிருந்து விடுவிக்க ஒத்தாசையாயிருக்கும் சில கலைகள் சாகும் தறுவாயில் இருக்கின்றன. அவைகள் மீண்டும் உயிர் பெற்று எழும். ஆனால் அந்த இயக்கம் யந்திரத்துக்கும் தொழிலபிவிருத்திக்கும் விரோதமானதென்று கருதப்பட்டு நடைபெற்று வந்தால் அது வெற்றி பெறாது.

"ஹரிஜன்" பத்திரிகையில் கிராமக் கைத்தொழில்களைப் பற்றி சமீபத்தில் காந்திஜீ எழுதிய கட்டுரையில் அவர் பின்வருமாறு எழுதுகிறார்:—

"செய்யவேண்டிய வேலை அதிகமாயும் செய்யக் கூடியவர்கள் எண்ணிக்கையில் குறைவாயும் இருப்பின் யந்திரம் வேண்டியதுதான். ஆனால் வேலைக்கு அதிகமான ஆட்கள் இந்தியாவிலிருப்பதுபோல இருந்தால் அது தீமையாகும். நமது கிராமங்களில் வசிக்கும் கோடிக் கணக்கானவர்களுக்கு ஓய்வு சம்பாதித்துக் கொடுப்பது நமது பிரச்னையல்ல. வருஷத்துக்கு ஆறு மாதத்துக்குச் சமமான காலத்தில் அவர்களுக்கு வேலை கிடையாது. அந்த நேரத்தை எப்படி உபயோகப்படுத்துவது என்பது தான் பிரச்னையாகும்."

காந்திஜீ குறிப்பிடும் மேற்கூறிய ஆட்சேபனை பலதரப்பட்ட அளவுகளில் வேலையற்றுத் தவிக்கும் எல்லாத் தேசங்களுக்கும் பொருந்தும். ஆனால் இந்தக் காலத்தில் வேலையில்லையென்று சொல்லுவது தவறாகும். தற்போதைய ஆதாயத்திட்டத்தின்கீழ் தொழிலாளர்களின் வேலையால் முதலாளிகளுக்குப் போதுமான லாபமில்லை. எவ்வளவோ வேலையிருக்கிறது. பாதைகள் சமைப்பது, நீர்ப்பாசனத் திட்டங்கள், வீடுகள், சுகாதார அபிவிருத்தி, வைத்திய வசதிகள், கைத்தொழில், மின்சாரம், ஜனசமுதாய கலைப்பெருக்கு தொண்டுகள், கல்வி ஜனங்களுக்குத்தேவையாயிருக்கும் எண்ணற்ற பொருள்களுக்கு ஏற்பாடு செய்தல்,—இந்தத் துறைகளில்ஏராளமாக வேலையிருக்கிறது. கோடிக்கணக்கான நமது மக்கள் அடுத்த ஐம்பது வருஷத்துக்கு கடுமையாக உழைக்கக்கூடிய துறைகள் இருக்கின்றன.

ஆனால், ஜனசமுதாயத்தை முன்னேறச் செய்ய வேண்டும் என்ற நோக்கத்தோடு காரியம் செய்ய வேண்டும். ஆதாய ஆசை இருக்கலாகாது. ஜனசமுதாயமே இந்த வேலைகள்

அனைத்தையும் திட்டமாகச் செய்ய முற்பட வேண்டும். ருஷ்ய சோவியத் அரசாட்சியில் எத்தனையோ குறைகள் இருக்கலாம். ஆனால், அந்த நாட்டில் வேலையில்லாமை கிடையாது. நமது ஜனங்கள் வேலையில்லாமல் சோம்பேறி களாயிருக்கவில்லை; வேலைக்கும், கலைப்பெருக்குக்கும் வசதி கள் அவர்களுக்கு அளிக்கப்படவில்லை. குழந்தைகளை வேலை செய்யாமல் தடுப்பது, ஒரு எல்லை வரையில் கட்டா யக் கல்விக்கு ஏற்பாடு, இவைகளைச் செய்தால் சிலரை தொழில் இனத்திலிருந்து பிரித்து கோடிக் கணக்காக பின் னால் வரக்கூடிய தொழிலாளிகளைத் தொழில் சந்தையி லிருந்து குறைத்து விடலாம். சர்க்காவையும், தக்ளியையும் சீர்திருத்தம் செய்து, அவைகளின் மூலமாக உற்பத்தியை அதிகரிக்க காந்திஜீ முயன்று ஓரளவு வெற்றி பெற்றிருக்கி றார். இது இயந்திரத்தையும் கருவியையும் சீர்திருத்த முயற்சி செய்வதாகும். இந்தச் சீர்திருத்தம் தொடர்ந்து கொண்டேபோய், மின்சார விசையால் குடிசைத் தொழில் கள் நடைபெறுமானால் மீண்டும் ஆதாய ஆசை உண்டாகி விடும். அதனால் அதிக உற்பத்தியும் வேலையில்லாமையும் ஏற்படும்.

நவீன தொழில் யுக்தியோடு கிராமத் தொழில்கள் பிணைக்கப்பட்டாலொழிய, நமக்கு இன்றைக்குத் தேவையா யிருக்கும் வாழ்க்கைக்கும் நாகரிகத்துக்கும் தேவையான பொருள்களை உண்டாக்க முடியாது. அவைகள் இயந்திரத் தோடு போட்டி போட முடியாது. விஸ்தாரமான அளவில் நம்முடைய தேசத்தில், இயந்திரங்களை வேலை செய்யாமல் தடுப்பது விரும்பத்தக்கதா? அல்லது சாத்தியமா? இயந்தி ரம், இயந்திரமென்ற காரணத்தால் தாம் விரும்பவில்லை யென்று சொல்லுவது தவறு என்று காந்திஜீ அடிக்கடி சொல்லியிருக்கிறார். ஆனால், இன்றைக்கு அது இந்தியா வுக்குப் பொருத்தமில்லையென்று அவர் நினைப்பதாகத் தோன்றுகிறது. ஆனால் தாய்த் தொழில்களான இரும்பு, எஃகு முதலியவற்றை நாம் மூடிவிட முடியுமா? அல்லது ஏற்கெனவே இருக்கும் சிறிய தொழில்களை நிறுத்தி விடக் கூடுமா?

நாம் அவ்வாறு செய்யமுடியாதென்பது வெளிப்படை. ரெயில்வேக்களும், பாலங்களும், போக்குவரத்து வசதிகளும்

இருப்பின், அவைகளை நாம் சொந்தத்தில் உற்பத்தி செய்ய வேண்டும் அல்லது மற்றவர்களைச் சார்ந்திருக்க வேண்டும். தேசப் பாதுகாப்புக்கு சாதனங்களை அமைத்துக் கொள்ள நாம் விரும்பினால், தாய்த் தொழில்களைத் தவிர மிகவும் அபி விருத்தியடைந்த தொழில் திட்டமும் நம்மிடத்தில் இருக்கப் பெறவேண்டும். எந்தத் தேசமும் இப்பொழுது உண்மையாகவே சுயாதீனத்துடன் தனித்து இருக்க முடியாது. ஒரு நாடு தொழில் சிறப்படைந்து இருந்தாலல்லாமல், அந்நியர்களின் ஆக்கிரமிப்பைத் தடுக்க அதனால் முடியாது. ஒரு தாய்த் தொழிலுக்கு இன்னொரு தாய்த்தொழில் உதவியாயிருக்க வேண்டியிருக்கிறது. கடைசியாக இயந்திரங்களையே செய்யும்படியான தொழிலை நாம் கைக்கொள்ள வேண்டும். இந்தத் தாய்த் தொழில்கள் செழித்து வளருமாகில் சில்லரைத் தொழில்கள் பரவிவருவதைத் தடுக்க முடியாது. அதனுடைய போக்கோடு நம்முடைய செல்வச் செழிப்பும், கலைப்பெருக்கும் ஒட்டிக்கொண்டு இருப்பதுமல்லாமல், நம்முடைய சுதந்திரமே அதோடு ஒட்டிக் கொண்டு கிடக்கின்றது. பெரிய தொழில்கள் விருத்தியடையுமாயின் கிராமக் குடிசைத் தொழில்கள் அதோடு போட்டியிட முடியாது. அபேதவாதத் திட்டத்தின் கீழ் சிறு தொழில்கள் ஒருக்கால் பிழைத்திருக்கக்கூடும். ஆனால் முதலாளி தத்துவத் திட்டத்தின் கீழ் முடியவே முடியாது. அபேதவாதத்தின் கீழ் கூட திரளான வகையில் உற்பத்தி செய்யப்படாத பிரத்தியேகமான சில பொருள்களை ஆக்கக்கூடிய குடிசைத் தொழில்கள் என்ற முறையிலேதான் அவைகள் பிழைத்திருக்க முடியும்.

தொழிற்சாலைகள் பரவி வருவதைக் கண்டு காங்கிரஸ் தலைவர்கள் சிலர் திகிலடைகின்றார்கள். தொழிலபிவிருத்தி அடைந்திருக்கும் நாடுகளின் தற்போதைய தொல்லைகள் ஏராளமாகப் பொருள்களை உற்பத்தி செய்வதனாலேதான் ஏற்பட்டிருக்கின்றன என்று கருதுகிறார்கள். இது நிலைமையை விநோத முறையில் தவறாக கிரகிப்பதாகும். பொது மக்களுக்கு ஏதாவது தேவையாயிருப்பின் அதை ஏராளமாக உற்பத்தி செய்வது கெடுதலாகுமா? அவர்கள் எப்பொழுதும் தேவை என்ற நிலையிலேதான் இருக்க வேண்டுமா? ஏராளமாக பொருள்களை உற்பத்தி செய்யக் கூடாதா? தவறு உற்பத்தி செய்யும் முறையில் ஏற்பட்டதல்ல. ஆனால் உற்

பத்தியான பொருள்களை மக்களுக்கு சரியாக பிரித்து வினியோகம் செய்ய முடியாத குறையே ஆகும்.

கிராமத் தொழில்களை அபிவிருத்தி செய்வோர்களுக்கு நேரக்கூடிய கஷ்டம் இன்னொன்று இருக்கிறது. நம்முடைய விவாசாயப் பொருள்கள் உலகச் சந்தையை நம்பியிருக்கின்றன. சந்தையில் விலை போகும்படியான பயிர்களில் உழைக்கவும், அந்தப் பொருள்கள் விற்பதற்கு உலகத்தின் விலைகளின் பேரில் சார்ந்திருக்கவும் விவசாயி கட்டாயப் படுத்தப் பட்டிருக்கிறான். உலகச் சந்தையின் விலைகள் மாறிக்கொண்டே வருகின்றன. என்றாலும், அவனுடைய குத்தகைப் பணத்தையும், அரசாங்க வரியையும் ரொக்கப் பணத்தில் அவன் செலுத்தவேண்டியிருக்கிறது. அவன் இந்தப் பணத்தை எப்படியோ எழுப்ப வேண்டியிருக்கிறது. முயற்சியால் செய்ய வேண்டியிருக்கிறது. ஆகவே எந்தப் பயிரை விதைத்தால் அதிக விலை கிடைக்கும் என்று அவன் நினைக்கிறானோ அதைப் பயிர் செய்யப் பார்க்கிறான். உணவு சம்பந்தப் பட்டவரையிலும் கூட தனக்கும் தன்னுடைய குடும்பத்துக்கும் போதுமான அளவு தேவையான பொருள்களைப் பயிர் செய்ய அவனால் முடிவதில்லை. சமீப காலமாக, உணவு தானியங்களின் விலை தலைகீழாய் வீழ்ந்து விட்டது. ஆகவே, கோடிக்கணக்கான விவசாயிகள், ஐக்கிய மாகாணத்திலும் பீகாரிலும் கரும்பு சாகுபடி செய்ய ஆரம்பித்தார்கள். சர்க்கரைக்குக் கடல் சுங்கவரி விதிக்கப்பட்டதால், அந்நிய நாட்டுச் சர்க்கரை இந்தியாவுக்குள் அதிகமாக வர முடியவில்லை. ஆகவே சர்க்கரைச் சாலைகள் நாய்க்குடைகளைப் போல தோன்றிவிட்டன. கரும்புக்கு கிராக்கி உண்டாயிற்று. ஆனால் கரும்பு சாகுபடியோ தேவையைக் காட்டிலும் அதிகமாக ஆகிவிட்டது. சர்க்கரைத் தொழிற்சாலை முதலாளிகள் விவசாயிகளைக் கொடுமையாக சுரண்டத் தலைப்பட்டார்கள்; கரும்பு விலை படுத்துப்போயிற்று.

குறுகிய திட்டத்தில் நம்முடைய நிலத் தொழில் பிரச்னைகளுக்கு பரிகாரம் தேடுவது விரும்பத்தக்கதல்ல என்று மேற்கூறிய காரணங்களால் விளங்குகின்றது. இதே காரணங்கள் நம்முடைய பொது வாழ்வில் ஒவ்வொரு அம்சத்திலும் பாதிக்கிறது. மோகமான, உணர்ச்சிப் பெருக்கைத் தழுவிய வார்த்தைகளிலே நாம் அடைக்கலம் புகலாகாது. ஆனால்,

உண்மையான இந்த நிலைமைகளைக் கவனிக்க வேண்டும். கவனித்து வேலை செய்தால் தான் நாம் சரித்திர கர்த்தர்களாக ஆக முடியும். இல்லாவிட்டால் என்றும் திக்கற்ற அடிமைகளாகத்தான் இருக்கவேண்டும்.

மறுபடியும் காந்திஜீயின் அதிசயப் போக்கில் என் மனம் செல்கிறது. காந்திஜீக்கு மகா கூர்மையான அறிவு இருக்கிறது. ஒடுக்கப்பட்டவர்களையும், தாழ்த்தப்பட்டவர்களையும் உயர்த்துவதற்கு அவருக்கு ஆவல் இருக்கிறது. அப்படியிருக்க துன்பத்திற்குத் துணை நிற்கக்கூடியதும், தானே நசித்து வருவதுமான ஒரு திட்டத்தை ஏன் அவர் ஆதரிக்க வேண்டும்? அவர் ஒரு வழி காண விரும்புகிறார் என்பது உண்மை. ஆனால், பண்டைக்காலத்திற்குக் கொண்டு போகக் கூடிய வழிஅடைக்கப் பட்டுப்போகவில்லையா? இதனிடையே, முற்போக்குத் தடைகளாக நிற்கும் பழைய திட்டத்துக்கு ஞாபகச் சின்னங்களாக இருப்பவைகள் யாவற்றையும் அவர் ஆசீர்வதிக்கிறார். சமஸ்தானங்கள், பெரிய ஜமீன்தாரிகள், தாலூக்தாரிகள், தற்போதைய முதலாளித் திட்டம் இவைகள், அவருடைய பாராட்டின் கீழ் இருக்கின்றன.

தர்மகர்த்தர் என்ற கொள்கையிலே நம்பிக்கை வைக்கலாமா? ஒருபேர்வழியினிடம் அதிகாரத்தையும் செல்வத்தையும் கட்டுப்பாடின்றி கொடுத்து விட்டு அவைகளை அவன் முழுதும் பொதுஜன நன்மைக்காக உபயோகிக்க வேண்டுமென்று எதிர்பார்ப்பது தகுமா? நம்மில் பூரண பக்குவமடைந்தவர்களைக்கூட அந்தவகையில்நம்பலாமா? பிளேடோ கற்பனை செய்திருக்கும் தத்துவ சாஸ்திர மனிதர் கூட இந்தச் சுமையைத் தகுதியோடு ஏற்றுக் கொண்டிருக்க முடியாது. இத்தகைய பெரிய மனிதர்களைத் தங்கள் பேரில் வைத்துக் கொண்டிருப்பதும் மற்றவர்களுக்கு நல்லதாயிருக்குமா? ஆனால், தத்துவ சாஸ்திரி அரசர்களும்பெரியார்களும் இருக்க முடியாது. எல்லோரும் பலவீனமான மனிதர்கள் தான். தங்களுடைய சொந்த பலம் அல்லது தங்களுடைய சொந்தக் கருத்துகள் பொது ஜன நன்மையோடு ஒட்டிக் கொண்டிருப்பவை யென்று தான் அவர்கள் எண்ணிக் கொண்டிருப்பார்கள். பிறப்பு, அதிகாரம், செல்வம் இவை பாரம்பரியமாய் வருகின்றன. அவைகளுடைய விளைவுகள் மிகுதியும் கெடுதலானவை.

மாறுதலை எப்படி உண்டாக்குவது என்பதைப்பற்றி யும்,தடைகளை எவ்வாறு நீக்குவது என்பதைப்பற்றியும்நயத் தினுலா பயத்தினுலா என்பதைப்பற்றியும் நான் தற்போது யோசிக்கவேயில்லை என்பதைத் திரும்பவும் சொல்லுகிறேன். இந்தப் பகுதியைப் பற்றி பின்னுல் விவரிக்கிறேன். ஆனுல், மாறுதல் வேண்டும் என்பதற்குத் தேவையை உணர வேண் டும். அதைத் தெளிவான பாஷையில் சொல்ல வேண்டும். யோசனைக்காரர்களும் தலைவர்களும் இதைத் தெளிவாகக் கருத்தில் கொண்டு வெளியில் சொன்னுல் ஒழிய, அவர்கள் தங்கள் வழிக்கு மற்றவர்களை எவ்வாறு திருப்ப முடியும்? ஜனங்களிடம் மாறுதலுக்குத் தேவையான மனப்பான்மை யையும் கருத்துக்களையும் அவர்கள் எவ்வாறு கருத முடி யும்? நிகழ்ச்சிகள் தான் உண்மையான உபாத்திமார்கள்; ஆனுல், நிகழ்ச்சிகளைச் சரியாக அறிந்து கொள்ள வேண்டும். அவைகளுடைய குறிப்பைத் தெரிந்து கொண்டு அவைகளின் மூலமாக நன்னேக்கு கொண்ட செயல் தோன்ற வேண்டு மானுல், நிகழ்ச்சிகளுக்குசரியான பொருளைக் கொடுக்க வேண்டும்.

என்னுடைய பிரசங்கங்களினுல் ஏகதேசம் ஆத்திர மடைந்த நண்பர்களும் தோழர்களும், "நல்லதன்மை படைத்த சுதேச மன்னர்களை நீங்கள் கண்டதில்லையா? தர்ம சிந்தனை கொண்ட பிரப்புக்களைப் பார்த்ததில்லையா? நல்லதன்மைகள் வாய்ந்த முதலாளிகளைச் சந்தித்ததில் லையா?" என்று என்னை அடிக்கடி கேட்கிறுர்கள். பெரிய நிலக் கிழவர்களோடும் முதலாளிகளோடும் கலந்து பழகும் இனத்தையே நான் சேர்ந்தவன். நான் ஒரு முத லாளி. முதலாளித் தன்மைகளைக் கொண்ட சுற்றுப்புறங் களில் வளர்ந்தவன்; அந்தப் பயிற்சியால் ஏற்பட்ட பழக் கங்கள் கூட சில என்னிடம் இருக்கின்றன. சமதர்மிகள் என்னை ஒரு சில்லரை முதலாளி என்று அழைக்கிறுர்கள். மிகவும் பொருத்தமானதுதான். ஒருக்கால் இப்பொழுது அவர்கள் என்னை "தவறை உணர்ந்து வருந்தும் முதலாளி" என்று சொல்லக் கூடும். ஆனுல் நான் எதுவாயிருந்தால் என்ன? அது எடுத்துக் கொண்ட விஷயத்துக்குப் பொருத் தமல்ல. தனிப்பட்ட நபர்களைப் பொறுத்து நாட்டுப் பிரச்னைகளையும், உலகப் பிரச்னைகளையும், பொருளாதார ஜன நிர்மாணப் பிரச்னைகளையும்பற்றி யோசிப்பது அபத்த மாகும்.

என்னோடு சச்சரவு செய்யும் எனது நண்பர்கள் "நம்முடைய சண்டை எல்லாம் பாபத்தோடுதான்; பாபியோடு அல்ல" என்று திரும்பிச் சொல்லுவதில் அலுத்துப் போவதேயில்லை. நான் அவ்வளவு தூரம் கூடப் போகமாட்டேன். என்னுடைய போராட்டம் எல்லாம் ஒரு திட்டத்தோடு; தனி நபர்களோடல்ல. ஒரு திட்டம், தனி நபர்களோடும் கூட்டங்களோடும் ஓரளவில் நிச்சயமாக ஒட்டிக் கொண்டு பொருந்திக் கிடக்கின்றது. இந்த நபர்களையும் நயமாக நம் கட்சிக்கு இழுக்க வேண்டும்; அல்லது அவர்களோடு போராடி ஆகவேண்டும். ஆனால் ஒரு திட்டம் அதற்கு இருந்த உபயோகத்தை இழந்து தடையாகப் போகுமானால், அது அழிய வேண்டியதுதான். அந்தத் திட்டத்தோடு ஒட்டிக்கொண்டிருப்பவர்கள் கண்டிப்பாக மாறுதல் அடைய வேண்டியதுதான். அந்த மாறுதல் போக்கினால் குறைந்த துன்பம்தான் உண்டாக வேண்டும். ஆனால் மாறுதல் ஏற்படும் பொழுது துன்பம் நேராமல் இருக்க முடியாது. சிறிய ஒரு தீமை நேருமென்று பயந்து பெரிய தீமையைப் பொருத்துக் கொண்டிருக்கமுடியாது.

ஒவ்வொரு தேசிய, சமுதாய, பொருளாதார சங்கமும் தனக்கென்று ஒரு தத்துவத்தை வைத்துக் கொண்டிருக்கிறது. இந்தக் கூட்டங்கள் மாறினால் பின் வலுவாயிருக்கும் தத்துவ அஸ்திவாரமும் அதோடு பொருத்தமுள்ளதாக மாறித்தான் ஆகவேண்டும். மாறி அதனால் நிறைந்த நன்மை ஏற்படும்படியாக இருக்கவேண்டும். ஆனால், வழக்கமாக நிகழ்ச்சிகள் மாறிப்போனாலும், பழைய தத்துவம் மட்டும் தங்கிவருகிறது. இதனால், ஏகப்பட்ட தொல்லைகள் ஏற்படுகின்றன. ஜனநாயகமும், முதலாளித் தத்துவமும் 19-ம் நூற்றாண்டில் சேர்ந்தே வளர்ந்தன. ஆனால் அவைகள் பரஸ்பரம் பொருத்தம் கொண்டவைகள் அல்ல. அஸ்திவாரத்திலேயே அவைகளுக்குள் முரண் இருந்தது. ஏனெனில் ஜனநாயகம் பெரும்பான்மையோரிடம் அதிகாரம் பரவி நிற்க வேண்டுமென்று வற்புறுத்தியது. ஆனால், முதலாளித் தத்துவமோ உண்மையான அதிகாரத்தை ஒரு சிலரிடம் தான் கொடுத்தது. இந்தப் பொருத்தமில்லாத ஜோடி எப்படியோ ஒன்றுசேர்ந்து வேலை செய்து வந்தது. ஏனென்றால், அரசியல் பார்லிமெண்டரி ஜனநாயகமே குறுகிய ஒரு ஜனநாயக முறையாகும். அது ஏகபோக உரிமையையும், அதி

காரம் சிலரிடத்தில்மட்டும் சேர்ந்துபோவதையும் கண்டிக்கத் தலையிடுவதில்லை.

இப்படி இருக்கையில் ஜனநாயக உணர்ச்சி வளர வளர இரண்டுக்கும் பிளவு அதிகப்பட்டுப் போய் ஒன்றை விட்டு மற்றொன்று பிரியவேண்டிய காலம் ஏற்பட்டது. பார்லிமெண்டைத் தழுவிய ஜனநாயகம் இன்றைக்கு அபகீர்த்தியை அடைந்து நிற்கின்றது. அந்த ஜனநாயகத்துக்கு மாற்றாக புதிய புதிய கோஷங்கள் ஆகாயத்தை நிரப்பி வருகின்றன. இதனாலேதான் இந்தியாவிலிருக்கும் பிரிட்டிஷ் அரசாங்கம் இன்னும் அதிகமான பிற்போக்கு கொண்டதாக ஆக, அரசியல் சுதந்தரத்தின் வெளித் தோற்றங்களைக்கூட நம்மிடமிருந்து எடுத்துக்கொள்வதற்கு அதை ஒரு சாக்காகச் செய்துவிட்டது. இதையே சாக்காக வைத்துக் கொண்டு சுதேச மன்னர்கள் கொடுங்கோலாட்சி நடத்தி வருகின்றார்கள். உலகத்தில் வேறெங்குமேயில்லாத கர்நாடக நிலைமைகளைத் தங்கள் சமஸ்தானங்களில் நிலைத்துவைக்க எண்ணம் கொண்டிருப்பதாகக் கூறுகிறார்கள். ஆனால் பார்லிமெண்டு முறையைத் தழுவிய ஜனநாயகம் தோற்றதின் காரணமென்ன? அந்த ஜனநாயகம் நெடுந்தூரம் முற்போக்கடைந்ததாலல்ல. அது நெடுந்தூரம் செல்லாத காரணத்தினாலேயே அது ஜனநாயகத்தை முற்றிலும் தழுவவில்லை. ஏனெனில் பொருளாதார ஜனநாயகத்துக்கு அது வழிதேடவில்லை. அதனுடைய முறைகளோ சிக்கலானவை; மந்தமானவை; விரைவான மாறுதல் காலத்துக்குப் பொருத்தமில்லாதவை.

உலகத்தில் இருக்கும் அதிதீவிரமான கொடுங்கோன்மைக்கு இந்திய சுதேச சமஸ்தானங்கள் இலக்காக இருக்கின்றன. அவைகள் பிரிட்டிஷ் ஆட்சிக்குக் கீழ்ப்பட்டவைதான். ஆனால் பிரிட்டிஷ் அரசாங்கம் பிரிட்டிஷ் உரிமைகளையும் நலன்களையும் காப்பாற்றிக்கொள்ளும் அல்லது அபிவிருத்தி செய்துகொள்ளும் சந்தர்ப்பங்களிலேதான் சமஸ்தானங்களில் தலையிடுகிறது. கொஞ்சம்கூட மாறுதலின்றி இந்தக் கொடுங்கோன்மையான சமஸ்தானங்கள் 20-ம் நூற்றாண்டின் மத்தியில்கூட இருந்து வருவது உண்மையிலேயே ஆச்சரியமாயிருக்கிறது. பழைய மாதிரிதான் எல்லாம் நடந்துகொண்டிருக்கின்றன. மாறுதலுக்கும் இயக்கத்துக்

கும் பழகிக்கொண்டிருக்கும் ஒருவன் அத்தகைய மாறுதல்களால் ஒருவாறு அலுத்துப் போய் லேசாக உறக்கம் ஏற்பட்டு இந்தச் சமாதானங்களின் போக்கில் கொஞ்சம் இழுக்கப்படுகின்முன்.

இவையெல்லாம் உண்மைக்கு மாமுன தோற்றமாகும். மாறுதலேயில்லாத காட்சி மனக்கண்ணில் படுவதுபோலவும், காலம் அசையாமல் நின்று கொண்டிருப்பது போலவும் தோன்றுகின்றது. தன்னை யறியாமலே அவன் பண்டைக் காலத்தை நோக்குகின்முன். தன்னுடைய குழந்தைப் பருவக் கனவுகள் கண்முன்னே தோன்றுகின்றன. ஆயுதந் தாங்கிய வீரர்களும், அழகு வாய்ந்த தைரியமுள்ள கன்னிகளும் அவன் மனக்கண்முன்னே தோன்றுகின்றனர். கொத்தளங்கள் அமைந்த கோட்டைகளும், வீரச்செயல்களும், கௌரவம், கர்வம், இணையற்ற தைரியம், மரணத்தைப்பற்றி கவலையில்லாமை இவைகளைப்பற்றிய எண்ணங்கள் அவனுக்கு உண்டாகின்றன. கற்பனை தீரமும், சாத்தியப்படாத செயல்களும் நிறைந்து நிற்கும் ராஜபுதனத்தில் அவன் இருப்பானுகில் மேற்கூறியதெல்லாம் நிச்சயமாகத் தோன்றும்.

ஆனுல் விரைவில் காட்சிகள் மறைகின்றன. துயர உணர்ச்சி தோன்றுகின்றது. மூச்சுவிட முடியவில்லை. மாறுதலில்லாத இந்த நாடுகளிலே, தேக்கமும் அழுகல் நாற்றமும் வீசுகின்றன. தேகத்திலும் மனத்திலும் கட்டுண்டு! வளர்ச்சியின்றி அவன் கிடக்கின்முன். மேலும், சுதேச மன்னனுடைய அரண்மனையின் ஆடம்பர டம்பக் காட்சி அவனுடைய கண்ணில் படுகின்றது. அதற்கு எதிரிடையாக ஜனங்களின் கேவலமான நிலைமையும் துன்பமும் அவனுடைய கண்களில் படுகின்றன. சமஸ்தானத்தின் செல்வத்தில் எவ்வளவு பகுதி அந்த அரண்மனைக்குள்ளே மன்னனுடைய சுகபோக வாழ்க்கைக்காக சென்று விடுகின்றது, ஜனங்களுக்கு அவர்களுடைய, நன்மைக்காக எவ்வளவு சொற்பமான பணம் செலவழிக்கப்படுகின்றது! நம்முடைய சுதேச மன்னர்கள் மிகவும் செலவை விழுங்குகிறுர்கள். அந்தச்செலவைச் சமாளிப்பது கஷ்டம். தங்கள்பேரில் செலவழித்துக் கொள்ளும் இந்த ஆடம்பரமான செலவுக்கு மாற்முக அவர்கள் ஜனங்களுக்கு என்ன தொண்டு செய்கிறுர்கள் ?

இந்த சமஸ்தானங்களின் பேரில் இரகசியத் திரை மூடிக் கிடக்கின்றது. பத்திரிகைகள் அங்கே வளர முடிவதில்லை. இலக்கிய சம்பந்தமான வாரப் பத்திரிகையோ அல்லது உத்தியோக சம்பந்தமான பத்திரிகையோ வெளியாகும். வெளியிலிருந்து பத்திரிகைகளை அநேகமாக உள்ளே விடுவதில்லை. திருவாங்கூர், கொச்சி முதலிய தென் சமஸ்தானங்கள் சிலவற்றில் தவிர மற்றைய சமஸ்தானங்களில் கல்வி அநேகமாக பூஜ்யம். கொச்சி, திருவாங்கூரில் பிரிட்டிஷ் இந்தியாவைக் காட்டிலும், படிப்பு அதிகம். சமஸ்தானங்களிலிருந்து சிறப்பாக வரக்கூடிய செய்திகள் வைஸிராயின் விஜயத்தைப் பற்றியதாகும். அந்த விஜயத்தில் டம்பம் ஜாஸ்தி. வைஸிராய் சமஸ்தானாதிபதியைப் புகழ்ந்து பேசுவார். சமஸ்தானாதிபதி வைஸிராயைப் பாராட்டுவார். இல்லாவிட்டால் சமஸ்தானத்து அரண்மனையில் நடந்த கலியாணத்தைப்பற்றி செய்தி வரும். மன்னனின் பிறந்த நாள் கொண்டாட்டத்தைப்பற்றி வரலாம். குடியானவர்களின் எழுச்சியைப்பற்றிய செய்தி வரலாம்.

பிரிட்டிஷ் இந்தியாவில்கூட சில சிறப்பான சட்டங்களின் மூலமாக சுதேச மன்னர்களைப்பற்றிக் கண்டனம் செய்ய முடியாதபடிக்கு ஆக்கியாய்விட்டது. சுதேச சமஸ்தானங்களில் மிகவும் சாந்தமாக அரசாட்சியைக் கண்டித்தாலும் அது கொடுமையுடன் அடக்கப்பட்டு விடுகிறது. பொதுஜனக் கூட்டங்கள், அங்கே அநேகமாகக் கிடையாது. சாதாரணக் கூட்டங்கள்கூட அங்கே அடிக்கடி தடுக்கப்பட்டு விடுகின்றன. வெளியிலிருந்து முக்கியஸ்தர்கள் சமஸ்தானத்திற்குள் பிரவேசிக்க அனுமதிக்கப்படுவதில்லை. 1920-க்கும் 1930-க்கும் நடுவில் தேசபந்து தாசுக்குக் கடுமையாக நோய் கண்டது. அவர் நோய்க்கு பரிகாரமாக காஷ்மீரத்துக்குப் போகத் தீர்மானித்தார். அவர் அரசியல் வேலை எதையும் மேற்கொண்டு அங்கே செல்லவில்லை. காஷ்மீரத்தின் எல்லைவரைக்கும் அவர் சென்றார். ஆனால் அங்கே தடுக்கப்பட்டார். ஹைதராபாத் சமஸ்தானத்தில் நுழையக்கூடாதென்று ஜின்னா கூடத் தடுக்கப்பட்டார். ஸ்ரீமதி சரோஜினி நாயுடுவின் வீடு ஹைதராபாத் நகரிலிருக்கிறது. அவரைக்கூட ஹைதராபாத்துக்கு நீண்டகாலம் வரக்கூடாதென்று தடுத்து விட்டார்கள்.

சமஸ்தானங்களில் இத்தகைய நிலைமைகள் பரவி நிற்கையில் சமஸ்தானப் பிரஜைகளின் உரிமைகளுக்காக பாடுபடவேண்டியது காங்கிரஸின் கடமையாகும். அந்த உரிமைகளை ஒடுக்கப் பார்ப்பதைக் கண்டிப்பது காங்கிரசுக்குப் பொருத்தமான கடமையாகும். ஆனால் காந்திஜீயோ சமஸ்தானங்கள் சம்பந்தமாக விநோதமான முறையைக் கைக்கொண்டார். சமஸ்தானங்களின் உள்நாட்டு நிர்வாகத்தில் தலையிடுவதில்லையென்ற முறையைக் கைக்கொண்டார். சமஸ்தானங்களில் எவ்வளவோ அசாதாரணமாயும் துக்ககரமாயும் நிகழ்ச்சிகள் நேர்ந்தன. சமஸ்தான அரசாங்கங்கள் காங்கிரஸை வேண்டுமென்றே தாக்கின. என்றாலும் இந்த முறையைக் காந்திஜீ விடாப்பிடியாக பிடித்துக் கொண்டார். காங்கிரஸ் சமஸ்தானங்களைக் கண்டித்தால் அதனால் சமஸ்தானாதிபதிகளுக்கு ஆத்திரம் உண்டாகி அவர்களுடைய மனதை மாற்றும் வேலை கஷ்டமாகப் போய்விடும் என்ற பயமோ என்னவோ!

1934-ம் வருடம் ஜுலை மாதம் சமஸ்தான பிரஜைகளின் மகாநாட்டுத் தலைவரான என். ஸி. கேல்கார் அவர்களுக்கு காந்திஜீ ஒரு கடிதம் எழுதியிருக்கிறார். சமஸ்தான நிர்வாகத்தில் காங்கிரஸ் தலையிடாதது நியாயமென்றும் புத்திசாலித்தனமென்றும் தாம் நம்புவதாக அவர் கூறியிருக்கிறார். அரசியல் அமைப்பு சம்பந்தமாகவும் சட்ட சம்பந்தமாகவும் அவர் இந்த சமஸ்தானங்களைப்பற்றி கொண்டிருக்கும் நோக்கம் மிகவும் விசித்திரமானதாகும். "பிரிட்டிஷ் சட்டப்படிக்கு சமஸ்தானங்கள் சுயேச்சை கொண்டவைகளாகும். பிரிட்டிஷ் இந்தியா என்று சொல்லப்படும் தேசத்துக்கு சுதேச சமஸ்தானங்களின் போக்கை நிர்ணயிப்பதற்குக் கொஞ்சம்கூட அதிகாரம் கிடையாது. ஆப்கானிஸ்தானத்திலும் இலங்கையிலும் எப்படி தலையிட முடியாதோ, அப்படியேயாகும்" என்று அவர் எழுதியிருக்கிறார். மகாசாதுவான மிதவாதியான இந்திய சமஸ்தானப் பிரஜைகள் மகாநாடும், மிதவாதிகளும் காந்திஜீயின் இந்த நோக்கத்தையும் ஏற்றுக் கொள்ளவில்லையென்றால் அதில் ஆச்சரியமே இல்லை.

ஆனால், இந்த கருத்துகளை சுதேச மன்னர்கள் வரவேற்றார்கள். அவர்கள் அவைகளைப் பயன்படுத்திக்கொண்

டார்கள். ஒரு மாதத்திற்குள் திருவாங்கூர் சமஸ்தானம் தன்னுடைய எல்லைக்குள் காங்கிரசைத் தடுத்து விட்டது. காங்கிரசுக்கு அங்கத்தினர் சேர்ப்பதையும் அதன் கூட்டங்கள் எல்லாவற்றையும் தடுத்துவிட்டது. இவ்வாறு செய்யும் பொழுது, இவ்வாறு தங்களுக்கு யோசனை கூறியவர்கள் பொறுப்புவாய்ந்த காங்கிரஸ் தலைவர்கள் என்று கூறி, காந்திஜீயின் அறிக்கையை ஜாடையாகக் குறிப்பிட்டது. இந்தத்தடை, பிரிட்டிஷ் இந்தியாவில் சட்டமறுப்பியக்கம் வாபஸ் வாங்கப்பட்டு, காங்கிரஸ் சட்டவரம்புக்குட்பட்ட அமைப்புதான் என்று மீண்டும் இந்திய அரசாங்கத்தாரால் அறிவிக்கப்பட்ட பிறகு ஏற்படுத்தப்பட்டது என்பதைக் குறிப்பிட வேண்டும்.

அந்தக் காலத்தில் திருவாங்கூர் சமஸ்தானத்துக்கு அரசியல் யோசனை சொல்லுபவர் ஸர். ஸி. பி. ராமசுவாமி அய்யர் என்பதையும் குறிப்பிடுவது நன்ருயிருக்கும். ஸர். ஸி. பி. காங்கிரசுக்கும், சுய ஆட்சி சங்கத்துக்கும் முன்னொரு சமயம் காரியதரிசியாக இருந்தார். பின்னர் மிதவாதியானர்; அதற்குப் பிறகு இந்திய அரசாங்கத்திலும், சென்னை அரசாங்கத்திலும் உயர்ந்த உத்தியோகத்தை வகித்து வந்தார்.

காங்கிரஸ் முறைக்கு இணங்க காந்திஜீயின் யோசனையைப் பின்பற்றி திருவாங்கூர் சமஸ்தானத்தில் வேண்டுமென்றே அமைதி நிலவக் கூடிய காலங்களில் காங்கிரசைத் தாக்கியதைப்பற்றி பகிரங்கமாக ஒரு வார்த்தைகூட காங்கிரஸ்காரர் யாரும் பேசவில்லை. மிதவாதிகள் சிலர் இதைக் கண்டித்து ஆட்சேபித்தார்கள். சமஸ்தானங்களைப்பற்றி காந்திஜீ கொண்ட நோக்கமானது மிதவாதிகளைக்காட்டிலும் மிதவாதத் தன்மை வாய்ந்ததாயும், அடக்கம் கொண்டதாயும் இருந்தது. பொதுஜனத் தலைவர்களுக்குள்ளே பண்டித மதன் மோகன மாளவியா ஒருவர் தான் சமஸ்தானங்கள் சம்பந்தமாக காந்திஜீயைப்போல நிதானஸ்தராயிருந்தார். மாளவியாஜீக்கு சுதேச மன்னர்களிடம் நெருங்கிய தொடர்பு உண்டு. அவர்களுக்கு ஆத்திரமூட்டும்படி எதையும் செய்ய அவர் விரும்பவில்லை.

காந்திஜீ சுதேச மன்னர்கள் சம்பந்தப்பட்ட வரையிலும் இவ்வாறு எப்பொழுதுமே எச்சரிக்கையா யிருந்ததில்லை. காசியில் ஹிந்து ஸர்வ கலாசாலை நிர்மாணம் செய்

யப்பட்டபொழுது, அதாவது 1916-ம் வருஷம் பிப்ரவரி மாதம் காந்திஜீ ஒரு கூட்டத்தில் பிரசங்கம் செய்தார். கூட்டத்திற்கு தலைமை வகித்தவர் ஒரு சுதேச மன்னர். இன்னும் பல மன்னர்கள் பிரசன்னமாயிருந்தனர். காந்திஜீ அப்பொழுது தான் தென்னுப்பிரிக்காவிலிருந்து வந்திருக்கிருர். அகில இந்திய அரசியல் பொறுப்பு அவருடைய தோளின்பேரில் அப்பொழுது கனத்து நிற்கவில்லை. சிரத்தையோடும், தீர்க்கதரிசியின் தீப்பொறி பறக்கும் ஆத்திரத்தோடும், அவர் அந்தக் கூட்டத்தில் சொற்பொழிவு நிகழ்த்தினுர். மன்னர்கள் தங்களுடைய பழைய பழக்கங்களைத் திருத்திக்கொண்டு, தங்களுடைய ஆடம்பரத்தையும் சுக போகங்களையும் விட்டுவிட வேண்டுமென அவர் உபதேசம் செய்தார். "சமஸ்தாதிபதிகளே! போய் உங்களுடைய ஆபரணங்களை விற்றுவிடுங்கள்" என்றும் சொன்னுர். அவர்கள் தங்கள் நகைகளை விற்காவிட்டாலும், கூட்டத்தைவிட்டுப்போய் விட்டார்கள். மிகவும் திகிலடைந்து போய், அவர்கள் ஒவ்வொருவராகவும், சிறு கூட்டங்களாகவும் மண்டபத்தை விட்டு அகன்ருர்கள். மகா நாட்டின் தலைவர்கூட, பிரசங்கியைத் தனியாக விட்டுவிட்டு வெளியேறி விட்டார். கூட்டத்தில் பிரசன்னமாயிருந்த ஸ்ரீமதி பெஸன்ட் அம்மையாரும் காந்திஜீ சொன்னதன்பேரில் ஆத்திரம் கொண்டு வெளியேறி விட்டார்.

காந்திஜீ திரு. என். ஸி. கேல்காருக்கு எழுதிய கடிதத்தில், "தங்கள் குடிமக்களுக்கு ஸ்வதந்திரம் கொடுக்கும்படியாக நான் சமஸ்தானங்களை வேண்டிக் கொள்வேன். சுதேச மன்னர்கள் தாங்கள் ஆளும் பிரஜைகளுக்கு தர்ம கர்த்தர்களாகத் தங்களை பாவித்துக் கொண்டு அவ்வாறே நடந்துகொள்ள வேண்டும்" என்று மேலும் குறிப்பிடுகிருர். தர்மகர்த்தர்கள் என்ற இந்த கருத்தில் ஏதேனும் சாரம் இருக்குமாகில், இந்தியாவுக்கு தாங்கள் தர்ம கர்த்தர்கள் என்று பிரிட்டிஷ் அரசாங்கத்தார் சொல்லும்பொழுது, அந்தப் பாத்தியத்தை நாம் ஏன் ஆக்ஷேபிக்க வேண்டும்? இந்தியாவில் பிரிட்டிஷார் அந்நியர்கள் என்பதைத் தவிர வேறு வித்தியாசத்தை நான் காணமுடியவில்லை. இந்தியாவிலிருக்கும் பலவேறு கூட்டங்களுக்கு இடையேயும் "நிற நாகரிக உற்பத்திகளிலே" தெளிவான வேற்றுமைகள் இருக்கின்றன.

சென்ற சில வருடங்களாக சுதேச சமஸ்தானங்களில், சமஸ்தானாதிபதிகளின் விருப்பத்துக்கு மாறாகவே நிர்வாகம் செலுத்துவதற்காக பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர்களை நியமித்து வருகின்றார்கள். மேலேயிருந்து, இந்திய அரசாங்கத்தார் சமஸ்தானங்களை மிகுதியும் அடக்கி ஆண்டு வருகிறார்கள். இப்பொழுது அதோடுகூட முக்கியமான சமஸ்தானங்களில் உட்புகுந்து வேலைசெய்து அவைகளைக் கைக்குள் போட்டுக் கொள்ளுகிறார்கள். எனவே, சமஸ்தானங்கள் பேசுவது இந்திய அரசாங்கத்தின் மறு குரலேயொழிய, சமஸ்தானங்களின் குரலல்ல. இந்திய அரசாங்கத்தார் தாங்கள் இந்தியாவில் அதிபதிகள் என்பதை முழுதும் தங்களுக்கு சாதகமாக உபயோகப்படுத்திக் கொள்ளுகிறார்கள்.

பிரிட்டிஷ் இந்தியாவில் செய்யக்கூடிய கிளர்ச்சியைப் போல சமஸ்தானங்களிலும் எப்பொழுதுமே செய்வது சாத்தியமில்லை என்பதை நான் அறிவேன். உள்ளபடியே பிரிட்டிஷ் இந்திய மாகாணங்களில்கூட பலவகை வேற்றுமைகள் இருக்கின்றன. பூமியின் இயல்பு, கைத்தொழில், வகுப்புவாதம், அரசாட்சி முதலியவைகளில் வேற்றுமைகள் இருக்கின்றன. எனவே ஒரு மாகாணத்தைப்போல இன்னொரு மாகாணத்தில், ஒரே வகை கிளர்ச்சிசெய்வது முடியாத காரியம். நிலைமைகளைப் பொறுத்து காரியம்செய்ய வேண்டியிருந்தாலும், நம்முடைய பொதுவான முறை ஒவ்வொரு மாகாணத்திலும் ஒவ்வொரு வகையாக இருக்கமுடியாது. ஒரு இடத்தில் ஒன்று கெடுதலாயிருக்குமாயின், அது இன்னொரு இடத்திலும் கெடுதலாகத்தான் இருக்க வேண்டும். நமக்கு தீர்மானமான கொள்கைகளும் நிலைத்த முறையும் இல்லையென்றும், நாம் கிளர்ச்சி செய்வதெல்லாம் நம்மில் சிலருக்கே அதிகாரத்தைப் பெறுவதற்காகத்தான் என்றும் நம்பேரில் குற்றம் சாட்டப்படும்; அவ்வாறு குற்றமும் சாட்டப்பட்டும் இருக்கிறது.

மத சம்பந்தமான காரணங்களைக் கொண்டும், வேறு காரணங்களுக்காகவும் சிறுபான்மையோருக்கு தனித் தொகுதி, தேர்தல் உரிமை கொடுக்கக் கூடாது என்று பிரமாதமாக ஆட்சேபிக்கப்பட்டது. ஆட்சேபமென்னமோ சரியானதுதான். தனித் தொகுதி உரிமைகள் ஜனநாயகத்துக்கு பொருத்தமானவையல்ல என்று சொல்லப்படுகிறது.

மத சம்பந்தமாக தொகுதிகளைப் பிரித்தால், பொறுப்பாட்சி என்று சொல்லப்படும் ஜனநாயகத்தை அடைவது சாத்திய மில்லை என்றாலும் தனித்தொகுதிகளை பிடிவாதத்துடனும் சிரத்தையுடனும் ஆட்சேபிக்கும் பண்டித மதன்மோகன மாளவியாவும், ஹிந்து மகாசபைத் தலைவர்களும், சுதேச சமஸ்தானங்களில் இருக்கும் நிலைமைகளை ஏற்றுக்கொள்ளு கிறார்கள். சமஸ்தானங்களிலுள்ள கொடுங்கோல் ஆட்சியை யும் ஏனைய இந்தியாவின் ஜனநாயக ஆட்சியையும் (அப் படித்தான் சொல்லப்படுகிறது.) சேர்த்து ஒரு சமஷ்டியை உண்டாக்குவதற்கு, அவர்கள் தயாராக விருக்கிறார்கள். இதைக்காட்டிலும் அபத்தமான பொருத்தமில்லாத ஒற்று மையைக் கற்பனைசெய்வது கஷ்டமாகும். ஹிந்து மகாசபை யில், தேசியத்துக்கும் ஜனநாயகத்துக்கும் காப்பாளர்களைப் போலிருப்பவர்கள் இந்த அபத்தத்தை யோசனையின்றி ஏற் றுக்கொள்ளுகிறார்கள். நாம் தர்க்க நியாயம் வேண்டுமென்கி றோம்; பொருத்தமாகப் பேசவேண்டு மென்கிறோம். என்றா லும் அவை இரண்டும் நம்மிடம் காணப்படுவதில்லை. உணர்ச்சி மேலீட்டால், குழப்பமாக காரியம் செய்வதையே லட்சணமாகக் கொண்டிருக்கிறோம்.

'காங்கிரசும் சுதேச சமஸ்தானங்களும்' என்ற முர ணுக்கு நான் மீண்டும் வருகிறேன். தாமஸ் பெயின் அவர் கள் சுமார் 150 வருஷங்களுக்குமுன் பர்க் அவர்களைப்பற்றி குறிப்பிட்ட வாசகம் எனக்கு இப்பொழுது ஞாப கம் வருகிறது. "அவர் அலங்காரமான இறக்கைகளின் பேரில் அனுதாபம் காண்பிக்கின்றார். ஆனால், சாகும் பக்ஷியை மறந்துவிடுகிறார்" என்று பெயின் எழுதியிருக்கின் றார். காந்திஜீ நிச்சயமாக ஒருநாளும் சாகும் குருவியை மறப் பதேயில்லை. என்றாலும், இறக்கையைப் பற்றி இவ்வளவு வற்புறுத்துதல் ஏன் ?

மேற் சொன்ன காரணங்களே ஜமீன்தாரி திட்டத்துக் கும் பொருந்தும். இந்த முதலாளி கூலிக்கார பண்ணைத் திட் டம் ஒழிந்து போன பழைய சங்கதி என்றும், அது பொது வான முற்போக்குக்கும் பொருள் உற்பதிக்கும் குறுக்கே நிற் கின்றது. எனக்கும் வாதம்செய்து முடிவுக்குவர வேண்டிய தேவையேயில்லை. இந்தத் திட்டம் அபிவிருத்தியடைந்து, பெருகி வரக்கூடிய முதலாளி தத்துவத்துக்கும் முரண்தான்.

உலக முழுதும் பெரிய பண்ணைகள் சிறிது சிறிதாக அழிந்து சிதறிப் போய் விட்டன. விவசாயம் செய்யும் மிராசுதார்கள் தோன்றி விட்டார்கள். இந்தியாவில் சாதாரணமாக ஜமீந்தார்கள் தங்களிடமிருந்து பறிமுதல் செய்யப்படும் நிலங்களுக்கு நஷ்ட ஈடுதான் கேட்க முடியும் என்று நான் எப்பொழுதும் எண்ணியதுண்டு. ஆனால் சென்ற ஒரு வருஷமாக காந்திஜீ, ஜமீன்தார் திட்டம் அழியாமல் நிலைத்து நிற்க வேண்டும் என்று விரும்புகிறார் என்பதைக் காண எனக்கு ஆச்சரியமாயிருக்கிறது. "இரு திறத்தார்க்கும் மன மாற்றம் ஏற்படுமாகில், ஜமீந்தார்களுக்கும் விவசாயிகளுக்கும் இடையே நல் உறவை நாட்டமுடியும். அவ்வாறு நேர்ந்தால் அவர்களிருவரும், அமைதியுடனும் ஒற்றுமையுடனும் வாழ முடியும். நான் ஜமீன்தாரி திட்டத்தை ஒழிக்க வேண்டும் என்பதை ஒருபொழுதும் ஆதரிக்கவில்லை. அதை யொழிக்கவேண்டுமென்று சொல்லுபவர்கள் தங்கள் மனது இன்னதென்று அறிந்துகொள்ளாதவர்கள்" என்று காந்திஜீ கான்பூரில் 1934-ம் வருஷம் ஜுலை மாதம் பேசியிருக்கிறார். தங்கள் மனதை அறிந்து கொள்ளாதவர்கள் என்று காந்திஜீ குற்றம் சாட்டி இருப்பது அவ்வளவு பெருந்தன்மை ஆகாது.

"தனவந்தர்களிடமிருந்து தகுந்த காரணமின்றி அவர்களுடைய சொந்த சொத்தை பறிமுதல் செய்யும் யோசனைக்கு நான் ஆளாயிருக்க முடியாது. உங்களுடைய உள்ளங்களில் புகுந்து உங்களை மாற்ற வேண்டும் என்பது என்னுடைய நோக்கமாகும். உங்களுடைய சொத்தை தர்ம சொத்தாக பாவித்துக்கொண்டு விவசாயிகளின் நன்மைக்காக செலவிடவேண்டியது உங்களுடைய கடமையாகும். அநியாயமாக உங்களுடைய சொத்தைப் பிடுங்கிக் கொள்ள முயற்சி செய்யப்படுமாகில், நான் உங்கள் பக்கம் சேர்ந்து போராடுவேன். மேல் நாட்டு அபேதவாதமும், பொதுவுடமையும் சில தத்துவங்களைத் தழுவி அமைக்கப்பட்டிருக்கின்றன. அத்தத்துவங்களும், கருத்துக்களும் நம்முடைய பரம்பரைக்குநேர் மாறானவையாகும். மனிதன் தன்னலம் தான் கொண்டவன் என்ற கருத்து மேல் நாட்டில் உலவி வருகின்றது. நம்முடைய அபேதவாதமும், சமதர்மமும் சாத்வீகத்தின் பேரில் கட்டப்படவேண்டியவை. முதலாளியும் தொழிலாளியும், ஜமீன்தாரும் விவசாயியும் மன ஒற்றுமையுடன்

சேர்ந்து ஒத்துழைப்பதால் சமதர்மம் ஏற்படவேண்டியதா கும்" என்று ஜமீன்தார்களின் தூது கோஷ்டியினருக்கு காந்திஜீ பதிலளித்திருக்கிறார்.

மேல் நாடு, கீழ்நாடு, இவ்விரண்டின் கருத்துகளுக்குள் அடிப்படையான வேற்றுமைகள் இருக்கின்றனவா என்று எனக்குத் தெரியாது. ஒருக்கால் வேற்றுமைகள் இருக்க லாம். ஆனல், சமீப காலமாக ஒரு வேற்றுமையைக் கண்டு வருகிறோம். இந்திய முதலாளியும் ஜமீன்தாரும் மேல் நாட்டு வெள்ளையினத்தைச் சேர்ந்த தங்கள் சகோதரர் களைக் காட்டிலும் தொழிலாளிகளிடத்திலும் விவசாயிகளி டத்திலும் அதிகமான அலக்ஷியத்துடன் இருந்து வருகிறார் கள். விவசாயிகளின் நன்மையின் பொருட்டு எத்தகைய தொண்டிலும் தான் சிரத்தைகொண்டு வேலைசெய்ய இந்திய முதலாளி எவரும் முயற்சிசெய்ததே இல்லை. "தற்போதைய ஜனநிர்மாண திட்டப்படிக்குப் பார்த்தால், இந்தியலேவாதே விக்காரர்களும், நிலச்சுவான்தார்களும் மிகக் கொடிய பேரா சைக்காரர்கள்" என்று மேல்நாட்டு ஆசிரியர் எச். என். ப்ரெயில்ஸ்போர்ட் குறிப்பிட்டிருக்கிறார். ஒருக்கால் பிசகு இந்திய நிலச்சுவான்தாரைச் சேர்ந்ததாக இல்லாமலிருக்க லாம். அவர் நிலைமைகளுக்கு இரையாகி கீழே போய்க் கொண்டே இருக்கிறார். இந்தக் கஷ்டமான நிலைமையி லிருந்து விடுவித்துக் கொள்ள அவருக்கு இப்போது வல் லமையில்லை. லேவாதேவிக்காரர்களும், ஜமீந்தார்களும் நிலங்களை வாங்கிக் கொண்டே வருகின்றார்கள். சிறிய மிராசு தார்கள் தங்கள் நிலங்களை யிழந்து, அவைகளைக் குத்தகைக் குப் பயிர்செய்து வாழவேண்டிய நிர்ப்பந்த நிலைமைக்கு வந்து விட்டார்கள். நகரத்தில் வாழும் லேவாதேவிக்காரர்கள் பந் தத்தின்பேரில் பணத்தைக் கொடுத்து, நிலங்களைக் கட்டிக் கொண்டு ஜமீன்தார்களாக இப்போது மலர்ந்து விட்டார் கள். காந்திஜீயின் கருத்துப்படிக்கு இவர்கள் துர்ப்பாக்கிய மான விவசாயிகளுக்கு தர்மகர்த்தர்களாக ஆகியிருக்கிறார் கள். இவர்கள் தான் விவசாயிகளின் நிலங்களைப் பறித்துக் கொண்டவர்கள். விவசாயிகளின் நன்மைக்காக தங்களு டைய வருமானத்தைச் செலவழிக்க வேண்டுமென்று இவர் களிடமிருந்து எதிர்பார்க்க முடியுமா?

ஜமீன்தாரி திட்டம் நன்மைகொண்டதாகில், அதை ஏன் இந்தியா முழுதும் அமுலுக்குக்கொண்டுவரக்கூடாது?

இந்தியாவில் பெரும்பான்மையான இடங்களில் சில்லறை மிராசுதார்கள் தானிருக்கிறார்கள். குஜராத்தில் பெரிய ஜமீன்தாரிகளை உண்டாக்கும் யோசனைக்கு காந்திஜீ இணங்குவாரா? ஒருநாளும் மாட்டார். அப்படியானால் ஒரு நிலத்திட்டம் ஐக்கிய மாகாணங்களுக்கும், பீஹாருக்கும், வங்காளத்துக்கும் நல்லதாயிருந்தால், வேறொரு திட்டம் குஜராத்துக்கும், பஞ்சாபுக்கும் ஏன் நல்லதாயிருக்க வேண்டும்? இந்தியாவின் நாற்றிசைகளிலும் வசிக்கும் ஜனங்களுக்குள்ளே மகத்தான வித்தியாசம் கிடையாது என்றும் அவர்களுடைய மூலாதாரக் கருத்துகள் ஒரே வகையானவை யென்றும் கருதப்படலாம். அப்படியாயின் பழைய நிலைமையை மாற்றவே கூடாது என்ற முடிவுக்கு வரவேண்டி வரும். ஜனங்களுக்கு எது தேவை அல்லது எது நன்மை பயக்கும் என்பதைப்பற்றி பொருளாதாரத் துறையில் ஆராய்ச்சி கூடாது போலும்! தற்போதைய நிலைமைகளை மாற்ற முயற்சி கூடாது போலும்! மக்களின் உள்ளங்களை மாற்றுவதுதான் தேவை போலும்! இது மத சம்பந்தமான மனப்பான்மையாகும். இதற்கும் அரசியலுக்கும் சம்பந்தம் இல்லை, இதற்கும் பொருளாதாரத்துக்கும் சம்பந்தமில்லை. இதற்கும் ஜனநிர்மாணத்துக்கும் சம்பந்தமில்லை. என்றாலும், காந்திஜீ அரசியலிலும் தேசிய இயக்கத்திலும் இதனையும் கடந்து செல்லுகின்றார்.

இந்தியாவில் இப்போது இருக்கும் முரணான வியப்புகளில் இவை சிலவாகும். நாம் நம்மைச் சுற்றிப் பல முடிச்சுகளை போட்டுக் கொண்டு விட்டோம். அந்த முடிச்சுகளை அவிழ்த்து எறிந்தாலொழிய, நாம் முற்போக்கடைய முடியாது. வெறும் உணர்ச்சி மூலமாகவே அந்த விடுதலை ஏற்பட்டு விட்டது. “அறிவின் மூலமாக ஏற்படும் விடுதலை உயர்ந்ததா? அல்லது உணர்ச்சியின் பந்தம் உயர்ந்ததா?’ என்று ஸ்பினோஸா வெகு காலத்துக்கு முன்னர் கேட்டார். அறிவின் மூலமாக ஏற்படும் விடுதலையே உயர்ந்தது என்று அவர் கொண்டார்.

## LXIII

## மனமாற்றமா அல்லது பலாத்காரமா?

பதினறு வருஷங்களுக்கு முன்பு காந்திஜீ தமது அஹிம்சா தர்மக் கொள்கையின் மூலமாக இந்தியாவைப் பரவசப்படுத்தினர். அது முதல் அந்தத் தத்துவம் இந்திய வானத்தில் ஆட்சி செலுத்தி வருகின்றது. யோசனைகூடச் செய்யாமல் ஏராளமான மக்கள் அதை ஏற்றுக் கொண்டு திருப்பித் திருப்பிச் சொல்லுகிறார்கள். பலர் அதோடு மல்யுத்தம் செய்து பின்னர் ஏற்றுக்கொண்டார்கள். மற்றும் பலர் அரைமனதுடனும், வேறு பலர் பூரணமாயும் அதை ஏற்றுக் கொண்டார்கள். சிலர் அதை பகிரங்கமாகவே கேலி செய்தார்கள். நம்முடைய அரசியல் ஜன நிர்மாண வாழ்வில் அது மகத்தான வேலை செய்திருக்கிறது. வெளி உலகத்தின் கவனத்தையும் அது இழுத்திருக்கிறது. இந்தத் தத்துவம் மனித வர்க்கத்தின் பழைய கருத்துதான். ஆனால், அரசியலில் ஆசார திருத்த இயக்கங்களில் விரிவான அளவில் பிரயோகம் செய்ததில் காந்திஜீதான் முதன் முதலானவர். முன் காலத்தில் அது தனிப் பேர்வழிகளின் சங்கதியாகவே இருந்தது. மதநோக்கை சிறப்பாகக் கொண்டிருந்தது. அதன் நோக்கம் மனிதனுடைய தன்னடக்கமாகும். அகம்பாவத்தை அறவே ஒழித்து, வாழ்க்கைப் போராட்டத்தினின்றும் விடுபட்டு, தனிமனிதன் முக்தியை அடையவேண்டுமென்பது தான் அதன் லட்சியமாகும். மறைமுகமாக அல்லாமல் நேர்முகமாக அரசியல் பிரச்னைகளையும் ஜனசமூக நிலைமைகளையும் மாற்றும் நோக்கம் அதற்குக் கிடையாது. அமுலிலிருந்து வரும் பழைய திட்டத்தை அதனுடைய ஏற்றத் தாழ்வுடனும் அநீதியுடனும் ஏற்றுக் கொள்வதே இந்த தத்துவத்தின் மூலக் கருத்தாகும். ஆனல் காந்திஜீயோ இந்த தனிப்பேர்வழி தத்துவத்தை ஜன சமூகத்தை மாற்றவல்ல இலட்சியமாகவும் தத்துவமாகவும் செய்ய முயன்றார். அரசியல் நிலைமைகளையும் ஆசாரத் திருத்த நிலைமைகளையும் மாற்றுவ

தற்கு அவர் சங்கற்பம் கொண்டார். இந்த நோக்கத்தைத் தமது லட்சியத்தில் வைத்துக்கொண்டு வேண்டுமென்றே அவர் சாத்வீக முறையை விரிவான பிரச்னைகளுக்கும் பிரயோகம் செய்தார். "மனிதவாழ்விலும் உலகத்திலும் தீவிரமான மாறுதல்களை உண்டாக்க விரும்புகின்றவர்கள் ஜனசமூகத்தில் கலக்கமுண்டாக்காமல் அதைச் செய்து முடிக்க முடியாது. அதைச் செய்வதற்கு இரண்டே இரண்டு வழிகள்தான் உண்டு. சாத்வீகம், பலாத்காரம். பலாத்காரம் பிரயோகிக்கப்படும் மனிதர்களை மிகவும் பாதிக்கின்றது. பலாத்காரத்தை உபயோகப்படுத்துவோர்கள் சீரழிந்து போகிறார்கள். அதற்கு இரையாகிறவர்கள் மனந்தளர்ந்து போகிறார்கள். ஆனால் சாத்வீக சக்தியோ ஆத்ம தியாகத்தின் மூலமாக வேலைசெய்வதால், முற்றிலும் மாறான வழியில் மனிதனை மாற்றுகின்றது. அது மனிதனுடைய உடலைத் தொடுவதில்லை. யார்பேரில் சாத்வீகம் பிரயோகம் செய்யப்படுகின்றதோ அவனுடைய மனச்சாட்சியைத் தொட்டு அது வலுப்படுத்துகின்றது" என்று காந்திஜீ எழுதியிருக்கிறார்.

இந்தக் கருத்து ஓரளவில் இந்திய மனப்பான்மைக்கு ஒத்ததாகும். எனவே நாட்டில் உற்சாகத்துடன் மேலெழுந்த வாரியாகவேனும், இந்தக்கருத்து ஏற்றுக்கொள்ளப்பட்டது. இந்தக்கருத்துக்கு அடிதாங்கியாயிருந்த "கருத்து செயல்" பின்னல்களை ஒரு சிலர்தான் உணர்ந்தார்கள். அவ்வாறு உணர்ந்தவர்கள்கூட நம்பிக்கையிலும் காரியத்திலும் சரண்புகுந்தார்கள். ஆனால் காரியத்தின் வேகம் தணிந்ததும், சிலர் மனதில் ஏராளமான கேள்விகள் தோன்றின. அவைகளுக்கு விடைகள் காணுவது மிகவும் கஷ்டமாயிருந்தது. தற்போது அரசியலில் பின்பற்றவேண்டிய முறையை இந்தக் கேள்விகள் பாதிக்கவில்லை. சாத்வீக எதிர்ப்பின் தத்துவத்தின் பின்னே நின்ற தத்துவத்தை அவைகள் பாதித்தன. அரசியல் துறையில் சாத்வீக இயக்கம் இதுவரையிலும் வெற்றிபெறவில்லை. ஏனென்றால் இந்தியா இன்னும் சாம்ராஜ்யமென்ற பிணைப்பில் அகப்பட்டுக்கொண்டு கிடக்கின்றது. ஆசாரத் திருத்தத்திலும் அதனால் தீவிர மாறுதல் ஏற்படவில்லை. என்றாலும் அலட்சியமாக பார்ப்பவர்கள் கூட கோடிக்கணக்கான இந்தியர்களிடம் மகத்தான மாறுதல்களை அது உண்டாக்கி விட்டது என்பதைத் தெரிந்து

கொள்ளக்கூடும். சாத்வீக எதிர்ப்பு இந்தியர்களுக்கு வலிமையையும், தன்னம்பிக்கையையும், உறுதியையும் கொடுத்திருக்கின்றது. இவைகள் விலைபெற்ற பொக்கிஷங்களாகும். இவைகளில்லாமற் போனல், அரசியலிலும் ஜனநிர்மாணத்திலும் யாதொரு முற்போக்கையும் அடைவது கஷ்டம். அடைந்தாலும் அதை நிலைக்க வைத்துக்கொள்வதும் கஷ்டமாகும். சந்தேகமில்லாத இந்த லாபங்கள் சாத்வீகத்தின் விளைவுகளா, அல்லது போராட்டத்தின் விளைவுகளா? எது என்று சொல்லுவது முடியாது. பலாத்காரப் போராட்டத்தினல் இத்தகைய லாபங்கள், அநேக சந்தர்ப்பங்களில், வேறு பல மக்களால் வேறு நாடுகளில் அடையப் பெற்றிருக்கின்றன. என்ருலும் சாத்வீக முறை நமக்கு விலைமதிக்க முடியாத உபயோகமாக இருந்து வருகிறது என்று நிச்சயமாகச் சொல்லலாம் என எனக்குத் தோன்றுகிறது. காந்திஜீ குறிப்பிட்ட ஜன சமூக கலக்கத்தை உண்டாக்குவதற்கு அது நிச்சயமாக துணையாக இருந்தது. அந்தக் கலக்கம் ஒரளவு மூலாதாரமான காரணங்களாலும் நிலைமைகளாலும் ஏற்பட்டது என்று சிலர் சொல்லலாம். புரட்சி மாறுதலுக்கு முன்னே, ஜனத்திரளில் ஏற்பட வேண்டிய வேகத்தையும் ஆத்திரத்தையும் சாத்வீக எதிர்ப்பு உண்டாக்கி விட்டது.

சாத்வீகத்துக்கு சாதகமான கட்சி இது. ஆனல் இதனல் நமது மனதில் பூரணமான முடிவு ஏற்பட முடியாது. உண்மையான பிரச்னைகளுக்கு பரிகாரம் ஏற்படவில்லை. துர்ப்பாக்கியமாக அந்தப் பிரச்னையைத் தீர்ப்பதற்கு காந்திஜீயும் நமக்கு ஒத்தாசை செய்யவில்லை. இந்த விஷயமாக கணக்கற்ற சந்தர்ப்பங்களில் எழுதியிருக்கிருர்; பேசியுமிருக்கிருர். ஆனல் எனக்குத் தெரிந்த வரையில் சாத்வீகத்தை தத்துவ ரீதியாகவும், சாஸ்திர ரீதியாகவும் பகிரங்கமாக அவர் ஒருபொழுதும் அலசிப் பார்த்து கவனித்ததேயில்லை. லட்சியத்தைக் காட்டிலும் சாதனம் உயர்ந்தது என்றும், பலாத்காரத்தைக் காட்டிலும் மனமாற்றம்உயர்ந்த தென்றும் அவர் வற்புறுத்திப் பேசுகிருர். சாத்வீகமும் உண்மையும் ஒன்றென்றும், சாத்வீகமும் நன்மையும் ஒன்றென்றும் அவர் கருதி இந்தச் சொற்களை ஒரே அர்த்தத்தில் உபயோகப்படுத்துகிருர். இந்த வியாக்யானத்துக்கு உடன்படாதவர்கள் நாகரிகத்தினின்றும் விலகியவர்களென்றும்,

அவர்கள் தர்மத்திற்கு விரோதிகளென்றும் கருதும் மனப்பான்மை அவரிடம் இருக்கின்றது. அவருடைய பக்தர்களில் சிலரிடம் விநோதமான மனப்பான்மை ஏற்பட்டிருக்கிறது. அவர்கள் தாங்கள் தான் தர்மவாதிகள் என்று இறுமாந்து கிடக்கின்றார்கள்.

இந்த நம்பிக்கை இல்லாத மற்றவர்களுக்கு பலவித சந்தேகங்கள் உண்டாகின்றன. இந்தச் சந்தேகங்கள் நடைமுதல் தேவைகளுக்கு பொருத்தமானவைகளல்ல. மனிதனுக்கு ஒரு ஆசை உண்டு. தனிப் பேர்வழிக்கும், ஜனசமூகத்திற்கும் பொதுவானதாக பயன்தரக் கூடிய கர்மயோக தத்துவம் வேண்டுமென்று ஆசைப் படுகின்றான். இந்த ஆசைக்கு காந்திஜீயின் சாத்வீகத் தத்துவத்தில் பரிகாரம்-திருப்திகரமான பரிகாரம்-கிடைக்கவில்லை; நான் பலாத்காரத்தை எதிர்க்கத்தான் செய்கிறேன்; என்றாலும் என் உள்ளத்தில் பலாத்கார உணர்ச்சி நிறைந்து கிடக்கின்றது. தெரிந்தோ தெரியாமலோ நான் பிறரைப் பலவந்தப்படுத்த முயலுகின்றேன். காந்திஜீ மனமாற்றமென்று சொல்லுகிறாரே அதிலே பலாத்காரம் இல்லையா? சாத்வீகத்தில் இருக்கும் சூட்சுமமான பலாத்காரத்தினால் அவருடைய பக்தர்கள் அப்படியே ஸ்தம்பித்துப் போயிருக்கிறார்கள்.

ஆனால் உண்மையான கேள்வி வேறு. சமூகம், தனிப் பேர்வழியின் தத்துவமாகிய சாத்வீகத்தை ஏற்க முடியுமா? ஏனென்றால் ஒரு கூட்டம் அதை ஏற்கவேண்டு மென்றால், அது மனோ நிலையில் உயர்ந்த தரத்துக்கு வந்து, அன்பையும் நல்ல தனத்தையும் கைக்கொள்ள வேண்டியிருக்கிறது. இந்த தரத்துக்கு மனிதவர்க்கம் முழுதும் உயர வேண்டியதுதான். இறுதி லட்சியமாகும். பகைமையையும், சுயநலத்தையும் அவலட்சணத்தையும் ஒழிப்பது சரியான லட்சியம்தான். அது சாத்தியமா, இல்லையா என்பது முடிவு சொல்ல முடியாத கேள்வியாகும். ஆனால் சாத்தியமாகும் என்ற நம்பிக்கையில்லாமல் போனால், வாழ்க்கை முட்டாள் சொன்ன கதையாக முடியும். ஆத்திரமும் கூச்சலும்தான் அந்தக் கதையிலிருக்கும். அதற்குப் பொருள் இல்லை. இந்த லட்சியத்தை அடைவதற்கு இந்தத் தன்மைகளை மட்டும் உபதேசம் செய்து கொண்டிருந்தால் போதுமா? இவைகளை அடைய முடியாதபடி தடுக்கும் தடைகளைப்பற்றி கவலைப்படவேண்டியதில்லையா? இவைகளின் மூலமாக ஏற்படும்

மாறுன மனப்பான்மையை கவனிக்க வேண்டியதில்லையா? முதலிலே இந்தத் தடைகளை நாம் நீக்க வேண்டாமா? நீக்கிஞல்தான் அன்பு, அழகு, நல்லதனம் முதலிய தன்மைகள் வளருவதற்கு சாதகமான நிலைமை ஏற்படும்; அல்லது இரண்டு முறைகளையும் நாம் கைக்கொள்ளலாமா?

சாத்வீகத்திற்கும் பலாத்காரத்திற்கும், கட்டாயத்துக்கும் மனமாற்றத்திற்கும் இடையே எவ்வளவு வித்தியாசமிருக்கிறது? சில சமயங்களில் பலாத்காரத்தைக் காட்டிலும் சாத்வீகம் பயங்கரமான பலாத்காரக் கருவியாக விளங்குகின்றது. சாத்வீகமென்ருல் உண்மை என்று அர்த்தமா? உண்மையென்பது என்ன? இது மிகப் பழைய கேள்வி? இதற்கு ஆயிரம் விடைகள் இதுவரையிலும் அளிக்கப்பட்டிருக்கின்றன. ஆனல் ஒன்றும் சாரமில்லை. கேட்ட கேள்வி அப்படியேதானிருக்கிறது. உண்மை யென்பது எதுவாயிருந்தாலும் சரியே, அதுவும் சாத்வீகமும் ஒன்று அல்ல என்பது உறுதியாகும். பலாத்காரம் கெட்டது என்ருலும் அது இயற்கையிலேயே தர்மத்திற்கு விரோதமானது என்று சொல்லவும் முடியாது. எத்தனையோ விதமான தரங்கள் இருக்கின்றன. கேவலமான நிலைமையைக் காட்டிலும் பலாத்காரம் சில சமயங்களில் மிக உயர்ந்ததாகும். கோழைத்தனம், அச்சம், அடிமைத்தனம் போன்ற இந்த ஜாப்தாவில் சேர்த்துக் கொள்ளக் கூடிய தீயதன்மைகளைக் காட்டிலும் பலாத்காரம் உயர்ந்தது என்று காந்திஜீயே சொல்லியிருக்கிருர். பலாத்காரத்திலே பகைமை உணர்ச்சி கலந்திருக்கின்றது என்று சாதாரணமாகச் சொல்லுவதில் உண்மை இருக்கிறது. ஆனல் சாஸ்திர ரீதியாகப் பார்த்தால், பகைமை உணர்ச்சி இருக்க வேண்டிய தேவையே இல்லை. ஸர்ஜன் செய்வதுபோல நல்லெண்ணத்தோடு பலாத்காரத்தை உபயோகப்படுத்தலாம். இந்த முறையைத் தழுவி எதுவும் அடிப்படையிலேயே அதர்மமாக இருக்க முடியாது. கடைசியாகப் பார்க்கப்போனல், தர்மத்திற்கும் நியாயத்திற்கும் நிலைத்த சோதனைகள் என்ன? நல்லெண்ணம் இருக்கிறதா, அல்லது கெட்டெண்ணம் இருக்கிறதா என்பதுதான் சோதனையாகும். அறமுறையில் பலாத்காரத்தை ஆதரிக்க முடியாவிடினும், அந்த நோக்கின்படிக்கு அது அபாயமாகக் கருதப்பட்டாலும், எப்பொழுதும் அது அப்படித்தான் இருக்க வேண்டும் என்பதல்ல.

வாழ்க்கை முழுதும் பலாத்காரமும் போராட்டமும் நிறைந்து நிற்கின்றது. பலாத்காரத்தால் பலாத்காரம் விளைகின்றது. பலாத்காரத்தை பலாத்காரத்தின் மூலமாக ஒழிக்கமுடியாது என்பதும் உண்மைதான். ஆனால் பலாத்காரத்தை அடியோடு மறுத்து விடுவது என்றால் அது வாழ்க்கைக்கு சற்றேனும் பொருத்தமில்லாத மனப்பான்மையை உண்டாக்கிக் கொள்வதாகும். உலகத்தில் எல்லா அரசாட்சிகளுக்கும், ஜனநிர்மாண திட்டத்திற்கும் ஜீவசத்து போன்றது பலாத்காரமாகும். அரசாங்கத்தின் பலாத்காரக் கருவிகள் இல்லாமற் போனாலும், வரிவசூல் செய்ய முடியாது. மிராசுதார்கள் தங்கள் குத்தகைப் பணத்தை வாங்க முடியாது. தனிப் பேர்வழியின் சொத்துரிமை மறைந்து போய்விடும். பலாத்கார சக்திகளின் துணை மூலமாக, சட்டம் தனிப் பேர்வழியின் சொத்தை மற்றவர்கள் அனுபவிக்க முடியாமல் தடுத்து வருகின்றது. தற்காப்புக்கும் தாக்குவதற்கும் பலாத்கார வலிமை இருப்பதினாலேதான், உலகத்தில் அரசாங்கம் என்ற ஸ்தாபனம் நிலைத்திருக்கிறது.

காந்திஜீயின் சாத்வீகம் வெறும் மலட்டுச் சரக்கல்ல என்பது உண்மைதான். சாத்வீகத்தில் எதிர்ப்பே இல்லையென்று சொல்லுவது தவறு. சாத்வீக எதிர்ப்பு, வெறும் சாத்வீகத்திலிருந்து மாறுபட்ட கர்மயோக முறையாகும். பழைய திட்டத்தை அச்சத்தோடு ஏற்றுக்கொண்டிருக்கும் நபர்களுக்கு அந்தத் தத்துவம் பொருந்தினதல்ல. ஜன சமூகத்தில் கலக்கத்தை உண்டு பண்ணுவதற்காக அந்த முறை ஏற்பட்டதாகும். தற்போதைய நிலைமைகளை மாற்றுவதற்கு பிரயோகம் செய்யப்படும் கருவியாகும். சாத்வீகத்தில் மனமாற்ற யோசனை எப்படியிருந்தாலும் சரியே, அது வல்லமை பொருந்திய ஒரு பலாத்காரக் கருவியாகவும் அனுபவத்தில் விளங்குகின்றது. ஆனால் அந்த பலாத்காரம் ஆட்சேபணை சொல்ல முடியாத மகா நாகரிக முறையில் வேலை செய்கின்றது. முன்பெல்லாம் காந்திஜீ 'பலவந்தப்படுத்துதல்' என்ற வார்த்தையை உபயோகப்படுத்தினர் என்பது இங்கு குறிப்பிடத்தக்கது. பஞ்சாப் ராணுவச் சட்ட அமுலைப்பற்றி 1920-ம் வருஷம் வைஸிராய் செம்ஸ்போர்டு பிரபு பேசிய பேச்சைக் கண்டித்து எழுதுகையில், காந்திஜீ பின்வருமாறு கூறியிருக்

கிறுர்: "சட்ட சபையைத் திறக்கும் காலையில் மேன்மை தங்கிய வைஸிராய் அவர்கள் செய்த பிரசங்கத்தினின் றும் ஒருமனப்பான்மை எனக்குப் புலப்படுகின்றது. அத்தகைய மனப்பான்மையுடன் கூடிய அவரோடும் அவ ருடைய அரசாங்கத்தோடும் ஒத்துழைப்பது தன் மதிப் புள்ளவர்களுக்கு சாத்தியப்படாத சங்கதியாகும்." பாஞ் சாலத்தைப்பற்றி வைஸிராய் குறிப்பிட்டதிலிருந்து, பரிகாரம் அளிக்க அவர் முற்றிலும் மறுக்கிறுர் என் பது தெளிவாகிறது. விரைவில்வரும் எதிர்காலப் பிரச்னை களில் நாம் நமது கவனத்தை செலுத்த வேண்டுமென்று அவர் விரும்புகிறுர். பஞ்சாப் விஷயத்தில் பலவந்தப்படுத்தி, அரசாங்கம் தன்னுடைய தவறைப் பகிரங்கமாக ஒப்புக் கொள்ளச் செய்யவேண்டியதுதான் நமது தற்போதைய, எதிர்கால வேலையாகும். இதைப்பற்றி யாதொரு விளக்கமும் ஏற்படவில்லை. இந்தியாவின் மானத்தை பாதிக்கும்படியான ஜீவாதாரமான பல விஷயங்களில் தமது அபிப்பிராயத்தை மாற்றிக் கொள்ளவில்லை என்று சொல்லுவதுபோல, அர சாட்சியை கண்டனம் செய்பவர்களுக்கு பதிலளிக்க, வைஸி ராய் மறுக்கிறுர். இந்தப் பிரச்னைகளை சரித்திரத்தின் தீர்ப் புக்கு விட்டுவிடலாம் என வேதாந்தம் பேசுகிறுர். இத் தகைய பாஷைதான் இந்தியர்களின் உள்ளத்தில் தீப்பொ றியை உண்டாக்கக் கூடியது என்று எனக்குத் தோன்று கிறது. இப்பொழுது அவமானப்பட்டுக் கிடக்கும் மனிதர் களுக்கும், நம்பிக்கையும் பொறுப்பும் கொண்ட உத்தியோ கங்களை வகிக்க அறவே தகுதியில்லாதவர்களென்று காண் பித்துக்கொண்ட உத்தியோகஸ்தர்களின் காலடியில் கிடக் கும் மனிதர்களுக்கும் சரித்திரத்தின் சாதகமான தீர்ப்பு என்ன பயனைத் தரும்? பஞ்சாபுக்கு நியாயம் வழங்கமுடி யாது என்று சொல்லுகையில், ஜனங்களிடமிருந்து ஒத்து ழைப்பு வேண்டுமென்று அரசாங்கத்தார் பேசுவது குறைத் துக் கூறுமிடத்து வஞ்சகமாகும்."

மேற்கூறியவாறு காந்திஜீ எழுதியிருக்கிறுர். அரசாங் கங்கள் பலாத்காரத்தின்பேரில் அமைக்கப்பட்டவைகளா கும். பகிரங்கமான பலாத்காரத்தைக் கொண்ட சேனைகள் மட்டுமல்ல; அதைக் காட்டிலும் அபாயகரமான பலாத்கா ரத்தை அரசாங்கம் கொண்டிருக்கிறது. உழவர்கள், ஒற்றர் கள், தேசபக்தர்களைப்போல பாசாங்குசெய்து பின்பு தேச

பக்தர்களைக் காட்டிக்கொடுக்கும் ரகசியப் போலீசார், கல்வி முதலிய துறைகளால் பொய்ப்பிரசாரம், மதம் முதலியகருவிகளால் பயமுறுத்துதல், பணமில்லா நிலைமை, பட்டினி முதலிய சூக்ஷ்மமான பலாத்காரக் கருவிகள் அரசாட்சியினிடம் இருக்கின்றன. இரண்டு அரசாங்கங்களுக்குள் பேச்சு நடைபெறுமாயின், எத்தகைய பொய்யையும் துரோகத்தையும் நாடலாம் என்றும் அவைகள் மட்டும் கண்டு பிடிக்கப்படலாகாது என்றும் சாதாரணமாக கருதப்படுகிறது. சமாதான காலத்திலிருப்பதைக் காட்டிலும் போர்க் காலத்தில், இவைகள் அதிகமாக கையாளப்படலாம் என்றும் கருதப்படுகிறது. முன்னூறு வருஷத்துக்கு முன் இருந்த கவியும், பிரிட்டிஷ் தூதருமான ஸர் ஹென்றி வோட்டன் என்பவர், "தன்னுடைய தேசத்தின் நன்மைக்காக வெளி நாடுகளுக்கு பொய் சொல்லுவதற்காக அனுப்பப்படும் யோக்கியமான மனிதனுக்குத்தான் தூதன் என்று பெயர்" என வேடிக்கையாகச் சொல்லியிருக்கிறார். இப்பொழுது தூதர்களுக்கு துணையாக, ராணுவ, கடல் படை வியாபார ஸ்தானீகர்கள் வேலைசெய்து வருகிறார்கள். இவர்களுடைய உத்தியோகம் என்னவெனில் அவர்கள் அனுப்பப்படும் நாட்டில் உளவு வேலை செய்வதாகும். இவர்களுக்கு சாதகமாக ரகசியப் போலீஸ் கூட்டம் வேலை செய்கிறது. இந்தக் கூட்டம் ரகசியக் கொலை, லஞ்சம் கொடுத்தல், தாக்குதல் முதலிய எத்தகைய கேவலமான வேலைகளையும் செய்யத் தயங்குவதில்லை. சமாதான காலத்திலேயே இவைகள் யாவும் கெட்டவைகள். எனினும் போர்ச் சமயத்தில் இவைகள் எவ்வளவோ மடங்கு அதிகரித்து விடுகின்றன. சென்றமகா யுத்தத்தில் பொய்ப் பிரசார வேலைகள் எவ்வளவு நடந்தது? எதிரி நாடுகளில் நம்பத்தகாத பொய்களைப் பரப்பினார்கள். இவைகளுக்காக எவ்வளவு பணம் செலவழிக்கப்பட்டது? இப்பொழுதுதான் என்ன? பெயருக்கு மட்டும் சமாதானம். இரண்டு யுத்தங்களுக்கு இடையே உள்ள காலத்துக்கு சமாதானம் என்று பெயர்.

புதிதாக ஒரு போருக்கு முயற்சி; இந்தக் காலத்தில் பொருளாதாரம் முதலிய துறைகளில் போராட்டம் நிற்பதில்லை. தோற்றவர்களுக்கும் ஜெயித்தவர்களுக்கும் தகராறு; சாம்ராஜ்ய நாடுகளுக்கும் அவைகளுக்குக் கீழிருக்கும் குடியேற்ற நாடுகளுக்கும் பிணக்கு; உரிமைகள் படைத்த கூட்

டத்துக்கும் சுரண்டப்படும் கூட்டங்களுக்கும் தகராறு; சமாதான காலத்தில் கூட, போர்க் காலத்தில் இருக்கும் பலாத்காரமும் பொய்யும் ஓரளவில் இருந்து வருகின்றன. இவைகளை எதிர்த்து, நிலைமைக்கு பரிகாரம் தேட ராணுவ உத்தியோகஸ்தர்களும், ஸிவில் உத்தியோகஸ்தர்களும் பயிற்சி செய்யப்படுகிறார்கள். "யோக்கியமாய் இருத்தலே சிறந்த மார்க்கம் என்ற நம்பிக்கையோடும், உண்மைதான் இறுதியில் வெல்லும் என்றும் நாம் சொல்லிக் கொண்டிருக்கலாம். ஆனால் இவைகள் குழந்தைப்பிள்ளைகளுக்குகந்த பாடங்களாகும். இவைகளை நம்பிபோரில் இறங்கும் மனிதன் தன்னுடைய கத்தியை வெளியே எடுக்காமல் சாசுவதமாக உரைக்குள்ளேயே போட்டு விடலாம்" என்று ஊல்ஸ்லி பிரபு தன் சிப்பாய்களுக்கு எழுதியிருக்கும் நூலில் குறிப்பிடுகிறார்.

தற்போதைய நிலைமைகளில், நாட்டுக்கு நாடு எதிரியாயிருக்கையில், ஒரு கூட்டத்துக்கு ஒரு கூட்டம் பகைமையோடு இருக்கையில், பலாத்காரத்தையும் பொய்யையும் தவிர்க்க முடியாதுபோல தோன்றுகிறது. சலுகை பெற்ற நாடுகளும் கூட்டங்களும் அதிகாரத்தையும் தங்களுடைய உரிமைகளையும் தங்களுக்கே சாசுவதமாக வைத்துக்கொள்ள ஆசைப்படுகின்றன. அவைகள் தாங்கள் அடக்கி ஆளும் கூட்டத்தார்களுக்கு வளர்ச்சிக்கு சந்தர்ப்பங்களே கொடுக்காமல் இருக்க நினைக்கின்றன. எனவே, அந்தக் கூட்டங்கள் பலாத்காரத்தையும் பொய்யையும் துணைக்கொண்டு வேலை செய்ய வேண்டியிருக்கின்றது. பொது ஜன அபிப்பிராயம் வளர்ந்து, போராட்டங்களின் உண்மையான தன்மைகள் வெளிவரும் பொழுது, பலாத்காரம் அநேகமாக சிறிதளவு குறைந்து போகலாம். ஆனால், அனுபவத்தில் வேறு மாதிரியிருக்கிறது. பழைய ஸ்தாபனங்களை மாற்றி அமைக்க முயற்சி செய்தால், அந்த ஸ்தாபனங்களை நிர்வாகம் செய்பவர்கள் மற்றவர்களின் பேரில் பலாத்காரத்தை அதிகமாகப் பிரயோகம்செய்ய தற்பொழுது துவக்கி இருக்கிறார்கள். வெளிப்படையான பலாத்காரம் குறைந்து வந்தாலும், அது சூக்ஷுமமானதும் அபாயகரமானதுமான உருவங்களைப் பெற்று நடமாடுகின்றது. விவேகம் வளர்ந்தாலும், தர்ம புத்தி செழித்தாலும், ஆஸ்திகத்தன்மை ஓங்கி நின்றாலும்கூட, பலாத்காரப் போக்கு குறைந்தபாடில்லை.

தனிப்பேர்வழிகள் நாகரிகத்தில் உயர்ந்து இருக்கிறார்கள். இத்தகைய உயர்ந்த தன்மை கொண்ட பேர்வழிகள் பண்டைக் காலத்தைக் காட்டிலும் இப்பொழுது அதிகமாக இருக்கிறார்கள். ஜனசமுதாயம் ஓரளவு முன்னேறி இருக்கின்றது. நாகரிகமற்ற உணர்ச்சிகளை அடக்கி ஆளுவதற்கு ஜனசமுதாயம் சிறிதளவு முயற்சி செய்து வருகின்றது. ஆனால், மொத்தத்தில் வகுப்புகளும் கூட்டங்களும் அதிகமாகத் திருத்தமடையவில்லை. தனிப் பேர்வழி அதிகமாக நாகரிகமடைந்து விட்டால், அவன் தனது துர்க்குணங்களில் பலவற்றைத் தன் பிறந்த கூட்டத்துக்குப் பரிசாக அளிக்கின்றான். இரண்டாந்தரப் பேர்வழிகளுக்குபலாத்காரத்தைக் கண்டால் பிடித்தம். எனவே இந்தக் கூட்டங்களின் தலைவர்கள் முதல்தரமான பேர்வழிகள் அல்ல.

ஆனால், அரசாங்கத்தினின்றும் பலாத்காரத் தன்மை கொஞ்சம் கொஞ்சமாக நீங்கிவிடுமென்று நாம் வைத்துக்கொண்டாலும், அரசாட்சிக்கும் ஜனசமுதாயக் கட்டுப்பாட்டுக்கும் ஓரளவு பலாத்காரம் தேவை என்ற உண்மையை மறப்பது சாத்தியமில்லை. ஜனசமுதாயவாழ்க்கைக்கு ஏதாவதொரு வகையான அரசியல் தேவை. அதிகாரப்பதவியில் வைக்கப்படுபவர்கள் என்ன செய்வார்கள்? அவர்கள் ஜனசமுதாய வாழ்வை அழிக்கக் கூடிய சுயநலப் போக்குகளை வளர வொட்டாமல் தடுக்க முயலுவார்கள். ஆனால், இந்த ஹத்தையும் மீறி அவர்கள் போய் விடுகிறார்கள். ஏனென்றால் அதிகாரத்தை அடைபவன் தானாகவே அந்த அதிகாரச் செருக்கினால் சீரழிந்து போகின்றான். அதிகாரப் பேர்வழிகள் சுதந்திரப் பிரியர்களாய் இருக்கலாம். அவர்கள் பலாத்காரத்தை வெறுக்கலாம். என்றாலும், அரசாட்சிக்கு அடங்கின ஒவ்வொரு பேர்வழியும் பக்குவம்பெற்று, தன்னலத்தை ஒழித்து, பொதுநலத்தில் ஈடுபடும் வரையில், ஜனசமுதாயத்துக்கு விரோதமானவர்களை நிர்வாகிகள் கட்டாயமாக அடக்கி ஆளத்தான் வேண்டும். அரசாங்கத்தை வெளியிலிருந்து தாக்கும் கூட்டங்களை அது பொறுத்துக் கொண்டிருக்க முடியுமா? எனவே, அரசாங்க நிர்வாகிகள் பலாத்காரத்துக்கு எதிராக பலாத்காரத்தை உபயோகித்து தற்காப்பு தேடிக்கொள்ள வேண்டியதுதான். உலகம் முழுதும் ஓர் அரசாட்சியின் கீழ் வரும்போது, இத்தகைய பலாத்காரத்துக்கே அவசியமில்லாமல் போகலாம்.

பலாத்காரமும் நிர்ப்பந்தமும், உள் ஒற்றுமைக்கும் வெளிக் காப்புக்கும் தேவையானல், எந்த இடத்தில் சாத்வீகத்தைக் கொள்ளுவது, எந்த இடத்தில் பலாத்காரத்தைக் கொள்வது? அரசியலில் பலாத்காரத்தை உபயோகப்படுத்தலாம் என்று ஏற்றுக் கொள்ளப்படுமாகில், சமுதாய ஒற்றுமைக்கு பலாத்காரம் தேவையான கருவி என்று ஏற்றுக் கொள்ளப்படுமாகில், சாத்வீக நிர்ப்பந்தத்திற்கும் பலாத்கார நிர்ப்பந்தத்திற்கும் வித்தியாசம் சொல்ல முடியாது. அரசாங்கத்தார் உபயோகப்படுத்தும் பலாத்காரத்துக்கும் புரட்சிக்காரர்கள் உபயோகப்படுத்தும் பலாத்காரத்துக்கும் வித்தியாசம் கூற முடியாது.

வெளியேயிருந்து தாக்கப்பட்டால், தனக்குத் தற்காப்பு தேடிக்கொள்ளுவதற்காக, பக்குவம் பெருத இந்த உலகத்திலே தேசிய அரசாங்கம் பலாத்காரத்தைக் கைக்கொள்ளத்தான் வேண்டும் என காந்திஜீ ஏற்றுக் கொள்ளுவார் என்று நினைக்கிறேன். ஆனல், நிச்சயமாக எனக்குத் தெரியாது. ஒவ்வொரு அரசாங்கமும் தனது பக்கத்து நாடுகளோடும் அரசாங்கங்களோடும் நல்ல நட்பு உறவோடு இருக்கத்தான் வேண்டும். இருந்தாலும் தான் தாக்கப்படாது என்று அந்த அரசாங்கம் நினைத்துக் கொள்ளுவது அபத்தமாகும். அரசாங்கமும் பலாத்காரத் தன்மை கொண்ட சில சட்டங்களை ஆக்கிக் கொள்ளும். அதாவது பல வேறு கூட்டங்களிலிருந்தும் சிற்சில பாத்தியங்களையும் சுதந்திரங்களையும் பறிமுதல் செய்து, செயல் சுதந்திரத்தை கட்டுப்படுத்த வேண்டிவரும். எல்லா சட்டங்களும் ஓரளவில் கட்டாயத்தன்மை கொண்டவைகளே. "பொது மக்கள் சுரண்டப்படுவதை ஒழிக்கும் பொருட்டு, அரசியல் விடுதலையில் பட்டினி கிடக்கும் கோடிக் கணக்கானவர்களையும் உண்மையான பொருளாதார விடுதலையையும் சேர்க்கவேண்டும்" என்று காங்கிரஸின் கராச்சித்திட்டம் கூறுகின்றது. இந்த விருப்பத்தக்க உணர்ச்சியை அமுலுக்குக் கொண்டு வரவேண்டுமானல், அதிகமான உரிமை படைத்தவர்கள் குறைவாக உரிமை படைத்தவர்களுக்கு மிகுதியும் விட்டுக் கொடுக்க வேண்டும். தொழிலாளிகளுக்கு வாழ்க்கைக்குப் போதுமான கூலியும் ஏனையவசதிகளும் இருக்க வேண்டும். சொத்தின் பேரில் பிரத்யேகமான வரிகள் விதிக்கப்படும். மூலாதாரமான தொழில்களையும், உத்தியோகங்களையும்,

உலோகச் செல்வங்களையும், ரெயில்வேக்களையும், கால்வாய்களையும், கப்பல்களையும் மற்றும் போக்குவரத்து சாதனங்களையும் அரசாங்கம் தனது சொத்துக்களாக ஆக்கிக்கொள்ள வேண்டும்; அல்லது அவைகளை அடக்கி ஆள வேண்டும். மேலும் மதுபான வகைகளும் லாகிரி வஸ்துக்களும் அறவே ஒழிக்கப்படவேண்டும். இவைகளெல்லாம் கராச்சி திட்டத்தில் காணப்பட்டிருக்கின்றன. இவைகளை எல்லாம் ஏராளமான மக்கள் ஆட்சேபிப்பார்கள். அவர்கள் ஜனசமூகத்தின் பெரும்பான்மையோரின் விருப்பத்துக்கு கட்டுப்படலாம். ஆனால் அவர்கள் கட்டுப்படுவது, மீறி நடந்தால் தங்களுக்கு விபரீதங்கள் சம்பவிக்குமே என்ற பயத்தினால் தான். ஜனநாயக மென்றால் பெரும்பான்மையோர் சிறுபான்மையோரை அடக்கி ஆளுவது என்று அர்த்தமாகிறது.

சொத்து உரிமைகளைப் பாதிக்கும், அதாவது அவைகளைப் பெரும் பகுதியில் ஒழிக்கும் சட்டத்தை பெரும்பான்மையோர் ஆக்குவார்களாகில், அதைக் கட்டாயப்படுத்துதல் என்ற காரணம் காட்டி ஆட்சேபிக்க முடியுமா? முடியாது. ஏனெனின் ஜனநாயக சட்டங்கள் எல்லாவற்றிலும் இதே முறைதான் அனுஷ்டிக்கப்பட்டு வருகின்றது. எனவே, பலவந்தம் என்ற காரணத்தால் ஆட்சேபிக்க முடியாது. பெரும்பான்மையோர் தவறாகவோ அல்லது அதர்மமாகவோ நடந்துகொண்டார்கள் என்று சொல்ல வேண்டும். அப்படியானால் கவனிக்கப்பட வேண்டிய பிரச்னை என்னவெனில் பெரும்பான்மையோரால் ஆக்கப்பட்ட சட்டம் எந்த அறக் கொள்கைக்கும் விரோதமானதா என்பதே ஆகும். இதற்கு யார் தீர்ப்பு சொல்லுவது? தங்களுடைய சொந்த நலங்களுக்குத் தக்கவாறு தர்மத்துக்கு வியாக்யானம் செய்ய தனிப் பேர்வழிகளுக்கும், கூட்டங்களுக்கும் உரிமை கொடுக்கப்படுமாகில், ஜனநாயக நடவடிக்கையே முடிவுக்கு வந்துவிடுகிறதெனலாம். தனி நபருக்கு சொத்து உரிமை கொடுப்பது ஜனசமூகத்தின்பேரில் அவன் அதிகாரம் செலுத்த அபாயமான வல்லமையைக் கொடுக்கிறதென்றும், எனவே மொத்தத்தில் ஜன சமுதாயத்துக்கு தீமை என்றும் நான் என் மட்டும் நினைக்கிறேன். அது குடியைக்காட்டிலும் கேடானதென்றும், ஜன

சமுதாயத்தைக் காட்டிலும் தனிப்பேர்வழிக்கு தீமை உண்டாக்குகிறதென்றும் நான் கருதுகிறேன்.

சாத்வீக தத்துவத்தில் நம்பிக்கை கொண்டிருப்பதாக பாத்தியம் கொண்டாடும் சிலர், தனிப்பேர்வழியின் சொத்தை சொந்தக்காரரின் சம்மதத்தைப் பெறுமல் தேசப் பொதுவுடமையாகச் செய்ய முயலுவது பலவந்தமென்றும் ஆகவே அது சாத்வீகத்துக்கு விரோதமென்றும்கருதுகிறுர்களென்று நான் கேள்விப்படுகிறேன். இந்தக் கருத்தைப் பெரிய ஜமீன்தார்கள் என்னிடம் வலியுறுத்தி யிருக்கிறுர்கள். ஆனல் ஜமீன்தார்களோ அரசாங்கத்தின் உதவியைக் கொண்டு பலவந்தமாக தங்களுடைய குத்தகைப்பணங்களை வசூல் செய்வதில் தயங்குவதில்லை. தொழிற்சாலைகளுக்குச் சொந்தக்காரர்களான முதலாளிமார்கள், தங்களுடைய இலாகாக்களில் தனியான தொழில் சங்கங்கள் இருப்பதற்குக் கூட இடம் கொடுப்பதில்லை. பெரும்பான்மையோர் மாறுதல் விரும்புகிறுர்கள் என்ற விஷயம் போதாதாம். மாறுதலினல் நஷ்டப்படக்கூடிய ஒரு சில மக்களின் மனத்தை மாற்றவேண்டுமா? கையாள வேண்டிய முறை இதுவாயின், தேவையான மாறுதலைக் கூட ஒரு சில விஷமிகள் குறுக்கே நின்று தடுத்து விடலாம்.

சரித்திரத்திலிருந்து நாம் ஒன்று தெரிந்து கொள்ளக் கூடுமாகில் அது இதுதான். பொருளாதார உரிமைகளும் சலுகைகளும் கூட்டங்களின்,வகுப்புகளின் அரசியல் நோக்கங்களுக்கு அடிதாங்கியாய் இருக்கின்றன. விவேகத்தாலும், அறநோக்குகளாலும் இந்த உரிமைகளை மாற்ற முடியாது. தனிப் பேர்வழிகளை மாற்றலாம். அவர்கள் தங்களுடைய சிறப்பான உரிமைகளை விட்டுக் கொடுத்து விடலாம். இப்படிச் செய்வதுகூட அபூர்வமானதாகும். ஆனல் வகுப்புகளும், கூட்டங்களும் தங்கள் உரிமைகளை விட்டுக் கொடுப்பதில்லை. உரிமை பெற்று அரசாளும் கூட்டம் தனது அதிகாரத்தையும், அநியாயமான உரிமைகளையும் விட்டுக் கொடுக்கும்படியாக மனமாறச் செய்ய முயலும் முயற்சி இதுவரையிலும் தோற்றுப் போய்விட்டது. எனவே, எதிர்காலத்தில் அது வெற்றிபெறும் என்று எண்ண இடமில்லை. விவேகம் வளருவதாலும், மதசம்பந்தமான பக்தி செழிப்பதாலும் மனிதர்களுடைய அகம்பாவம் கொஞ்சம் கொஞ்சமாக

குறைந்து வருகிறதென்றும், இந்த முறையைப் பின்பற்றிக் கொண்டே போனால், ஜனசமுதாயத்தில் எல்லாக் கூட்டங்களுக்கு மிடையே ஒற்றுமையை நாட்டலாமென்றும் எண்ணிக்கொண்டிருக்கும் அறவாதிகளின் கட்சியை ரீன்ஹோல்ட் நீபூர் தமது புத்தகத்தில் கண்டிக்கிறார்! "இவர்கள் இயற்கையாக மனித சுபாவத்தில் புதைந்து கிடக்கும் அம்சங்களை உணர்வதில்லை. அந்த உணர்ச்சிகளை மனச்சாட்சிக்காவது விவேகத்துக்காவது கட்டுப்படுத்த முடியாது என்பதை நியாயத்திற்காகப் போராடும் அரசியல் போராட்டங்களில், இவைகளை அறவாதிகள் நன்றாகக் கவனிப்பதில்லை. சாம்ராஜ்யமோ, அல்லது ஒரு கூட்டமோ தன்னை வலுப்படுத்திக்கொண்டு பலவீனமுள்ளவர்களைச் சுரண்டப் பார்க்கையில், அதன்பேரில் பலாத்காரத்தைப் பிரயோகம் செய்தாலொழிய அதை அழிக்க முடியாது. மேலும் விவேகமே ஓரளவு தன்னலத்தின் வேலைக்காரனாக இருக்கின்றது. எனவே சமூக நியாயத்தை விவேகத்தின் மூலமாக மட்டும் பரிகாரம் செய்ய முடியாது. போராட்டம் கண்டிப்பாய் நேர்ந்துதான் தீரும். இந்தப் போராட்டத்தில் ஒரு சக்தியை மற்றொரு சக்தியால்தான் எதிர்க்க முடியுமென்று அவர் கூறுகிறார்.

எனவே ஒரு கூட்டத்தையோ அல்லது ஒரு தேசத்தாரையோ விவேகம் பொருந்திய கட்சியினாலும், நியாய புத்திக்கு மனுச் செய்துகொள்வதாலும், மனமாற்றத்தை உண்டாக்கிவிடலாம் அல்லது போராட்டத்தைத் தடுத்து விடலாம் என்று நினைப்பது தன்னை ஏமாற்றிக் கொள்வதாகும். பயன் தரக்கூடிய முறையில் பலாத்காரத்தைப் பிரயோகம் செய்யாமலே சாம்ராஜ்ய வல்லரசு தன்னுடைய சாம்ராஜ்யத்தைவிட்டுக் கொடுத்துவிடும் என்றும் ஒரு கூட்டம் தனது உயர் பதவியையும் உரிமைகளையும் தியாகம் செய்து விடும் என்றும் எண்ணுவது மயக்கமாகும்.

கட்டாயம் என்று சொல்லா விட்டாலும் அத்தகைய பலாத்காரத்தைப் பிரயோகம் செய்ய காந்திஜீ விரும்புகிறார் என்பது வெளிப்படை. தமது முறை ஆத்ம தியாகம் என்றும், தானே துயரை அனுபவிப்பது என்றும் அவர் கூறுகிறார். இதை ஊன்றிக் கவனிப்பது சிறிது கஷ்டமாகும்; அவர் கூறுவதில் அத்யாத்மிகப்பகுதி துளி இருப்பதால்

அதை அளந்து கட்டமுடியாது. வேறு காணக்கூடிய முறையாலும் அதைக் கணக்கிட முடியாது. காந்திஜீ கையாளும் முறையினால் எதிரியினிடம் தக்க பயன் ஏற்படுகின்றது என்பதில் சந்தேகமேயில்லை. அது அவனுடைய மனச்சாட்சியின் பலவீனங்களை வெளிப்படுத்துகின்றது. அவனைக் கட கடக்க அடித்து விடுகின்றது. அவனுடைய உயர்த்தன்மையைப் போய்த் தாக்குகின்றது. ராஜிக்கு எப்பொழுதும் தயாராகக் கதவைத் திறந்து வைத்துக் கொண்டிருக்கிறது. அன்பினாலும் ஆத்ம தியாகத்தினாலும் எதிரியின் மனத்திலும், பார்ப்போர்களின் உள்ளங்களிலும் மகத்தான மாறுதல்கள் ஏற்படுகின்றன என்பதில் சந்தேகமே இல்லை. காட்டு மிருகத்தை ஒருவன் எப்படி அணுகுகின்றான் என்பதைப் பொருத்திருக்கிறது வேட்டை என்பது அநேகமாக வேட்டைக்காரர்கள் எல்லோருக்கும்தெரியும்;வேட்டை மிருகம் வேட்டைக்காரனுடைய மனப்பான்மையை நன்றாகஉணர்ந்து கொள்ளுகிறது. வேட்டையாடும் மனிதன் தன்னை யறியாமலே தனக்குள் பயத்தை வைத்துக் கொண்டிருப்பானாகில், அது எப்படியோ வேட்டை மிருகத்துக்கு தெரிந்து விடுகிறது. உடனே மிருகம் மனிதனைத் தாக்குகின்றது. சிங்கத்தைப் பழக்குபவனுடைய நரம்பு திடீரென்று ஒரு நிமிஷம் கீழே படுத்துக் கொள்ளுமாகில், உடனே தாக்கப்படும் ஆபத்து அவனுக்கு உண்டு. ஏதாவது ஒன்று விபரீதமாக நேர்ந்தாலொழிய, கொஞ்சம்கூட பயமில்லாத மனிதன் காட்டு மிருகங்களிடமிருந்து ஆபத்தை எதிர்பார்க்க வேண்டியதில்லை. எனவே, மனிதர்களும் இத்தகைய பிரயோகங்களுக்கு மாறுகின்றார்கள் என்பது இயற்கையே. ஆனால் தனிப் பேர்வழிகள் மனமாறலாம். ஒரு கூட்டம் அம்மாதிரி மாறுமோ என்பது சந்தேகம். ஏன் எனில் அந்தக் கூட்டம் சத்தியாகிரகம் செய்யும் எதிர்க்கூட்டத்தோடு நெருங்கிப் பழகுவதேயில்லை. மேலும், இந்த சத்தியாகிரகத்தைப்பற்றி அந்தக் கூட்டம் கேள்விப்படும் வரலாறுகளும் அறைகுறையாய் இருக்கின்றன. தனது அதிகாரத்தைப் பிடுங்குவதற்காக முயற்சி செய்யும் கூட்டத்தைக் கண்டு, அது ஆத்திரப்படுவதுதான் இயற்கை. மற்ற எல்லா சில்லறை உணர்ச்சிகளும் அந்தக் கோபத்திலே அமிழ்ந்து போய் விடுகின்றன. தன்னுடைய உயர்வான நிலைமையையும், உரிமைகளும் ஜனசமுதாய நலத்திற்காக தேவை என்று அந்தக் கூட்டம் இதுவரையிலும் எண்ணிக்கொண்டு

வந்திருக்கின்றது. எனவே அதற்கு எதிரிடையான கருத்தெல்லாம் மஹா பாதகம் என்று அது கருதுகிறது. சட்டம், ஒழுங்கு, பழைய திட்டத்தை அப்படியே காப்பாற்றுதல் என்பன அந்தக் கூட்டத்துக்கு முக்கியமான கடமைகளாகின்றன. அவைகளை எதிர்த்துப் போராடும் முயற்சிகள் கொடிய பாவச் செயல்களாக கருதப்படுகின்றன.

எதிர்க்கட்சி சம்பந்தப்பட்ட வரையிலும் மனமாற்ற முறை வெகுதூரம் செல்வதில்லை. எதிரி சாதுவாயும், சாந்தமாயும் இருப்பின் எதிர்க் கட்சியார் அதிகமாகக் கோபமடைகின்றார்கள். ஏனெனில் எதிரியின் சாதுத்தனத்தால் தாங்கள் கெட்டவர்களாகத் தோற்றமெடுக்கின்றார்கள். தான் தவறான கட்சியில் இருக்கக்கூடுமோ என்று ஒருவன் தன்னையே சந்தேகித்துக் கொள்ள துவக்குவானாகில், அவனுடைய ஆத்திரம் அதிகப்படுகின்றது. என்றாலும் சாத்வீகப் போராட்டத்தினால், எதிர்க் கட்சியிலிருக்கும் தனி நபர்கள் ஓரளவு பாதிக்கப்படுகின்றார்கள். எனவே எதிர்ப்பு கொஞ்சம் குறைகின்றது. அது மாத்திரமல்ல. இரண்டு கட்சியிலும் சேராமல் இருப்பவர்களுடைய அனுதாபத்தை சத்தியாக்கிரகம் தன் பக்கத்தில் இழுத்துக் கொள்ளுகிறது. உலக அபிப்பிராயத்தை தனக்கு சாதகப்படுத்திக்கொள்ள அது வல்லமை பொருந்திய சாதனமாகயிருக்கிறது. ஆனால் ஒரு சிறு துளி கூட செய்தியை வெளி யுலகத்துக்கு அனுப்பாமல் அரசாளும் வர்க்கத்தினர் தடுத்துவிடக் கூடும்; அல்லது செய்தியை அறைகுறையாக உயிர் இல்லாமல் அடித்து வெளி யுலகத்திற்கு அறிவிக்கக்கூடும். ஏனென்றால் பிரசாரகர்கள் அதிகார வர்க்கத்தினரின் கைக்குள்ளிருக்கின்றனர். ஆகவே உண்மையான சங்கதிகள் வெளியுலகத்திற்கு தெரியாமல் செய்து விடலாம். சாத்வீக முறையின் முக்கியமான பயன் என்னவெனில் கவலையற்றுக்கிடக்கும் தேசமக்களை அது ஓரளவு எழுப்புகின்றது. தேச மக்கள் சத்தியாகிரகத்தினால் மனமாறுகின்றார்கள். சத்தியாகிரகத்தை உத்சாகத்துடன் ஆதரிக்கின்றார்கள். போராட்டத்தின் லட்சியத்தை தேச மக்கள் பொதுவாக ஏற்றுக் கொள்வதால், அவர்களுக்கு அதிகமாக மனமாற்றம் ஏற்படவேண்டிய தேவையில்லை. மாறுதலே வேண்டாம் என்று நினைப்பவர்களின் உள்ளங்களில் தெளிவான மாற்றத்தைக் காண முடியவில்லை. ஒத்துழையாமையும், சட்ட

மறுப்பும் இந்தியாவில் வெகு விரைவே பரவிப் போயின. சாத்வீக இயக்கம் ஏராளமான ஜனங்களிடையே எவ்வளவு தூரம் அதிகாரம் செலுத்துகின்றது. எத்தனை சந்தேகங்களை மாற்றியிருக்கிறது என்பதற்கு மேற்கூறியது அத்தாட்சியாகும். அதற்கு எதிரிடையாய் இருந்தவர்களை சிறப்பான அளவில் அது மாற்றவில்லை. இயக்கம் வெற்றி பெற வெற்றி பெற, எதிரிகளின் அச்சம் அதிகப்பட்டு இன்னும் அதிகமான பகைமையை அவர்கள் கொண்டார்கள்.

தன்னுடைய சுதந்திரத்தைப் பாதுகாத்துக் கொள்ள, அரசாங்கம் பலாத்காரத்தை உபயோகப்படுத்திக் கொள்ளலாம் என்பது ஏற்றுக் கொள்ளப்படுமாகில், அதே சுதந்திரத்தை அடைய முயற்சி செய்யும் கூட்டம் பலாத்காரம் கொண்ட முறைகளை ஏன் கையாளக் கூடாது என்பதை அறிவது கஷ்டந்தான். பலாத்கார முறை விரும்பத்தகாததாய் இருக்கலாம். உசிதமில்லாததாய் இருக்கலாம். ஆனால் அதை முற்றிலும் தடை செய்வதற்கு ஆதாரமே கிடையாது. அரசாங்கம் பயிற்சி பொருந்திய சேனைகளை வைத்துக்கொண்டிருப்பதால், அதற்கு வல்லமை அதிகம்தான். என்றாலும் அதனால் பலாத்காரத்தை உபயோகப்படுத்த அதற்கு அதிகமான பாத்தியம் ஏற்படவில்லை. சாத்வீக முறையில் புரட்சி வெற்றி பெறுவதாக வைத்துக் கொள்வோம். அரசாட்சியை அது கைப்பற்றுவதாக வைத்துக் கொள்வோம். முன்னர் அதற்கு இராத பலாத்காரத்தை உபயோகிக்கும் பாத்தியம் அதற்கு உடனே வந்துவிடுமா? அதனுடைய அதிகாரத்திற்கு விரோதமாக கலகம் ஏற்படுமாகில், சாத்வீகத்தால் அதை எப்படி அடக்குவது? பலாத்கார முறைகளைக் கையாள அதற்கு இயற்கையாகவே விருப்பம் இருக்காது. நிலைமையை பந்தோபஸ்து செய்துகொள்ள சமாதான முறைகள் யாவற்றையும் அது கையாண்டு பார்க்கும். ஆனால் பலாத்காரத்தை உபயோகிக்கும் பாத்தியத்தை அது விட்டுவிட முடியாது. மாறுதலுக்கு விரோதமாக அதிருப்திகொண்ட அம்சங்கள் பல ஜன சமூகத்தில் இருபது நிச்சயம். அந்தக் கூட்டங்கள் பழைய நிலைமையை திருப்பிக் கொண்டுவர முயற்சி செய்யும். தங்களுடைய பலாத்காரத்தை அடித்து வீழ்த்த புதிய அரசாங்கம் கட்டாய முறைகளை கைக்கொள்ளாது என்று அந்தக் கூட்டங்கள் எண்ணுமாகில், அவைகள் இன்னும் அதிகமாக பலாத்

காரத்தில் ஈடுபடும். எனவே பாலத்காரத்திற்கும் சாத்வீகத்திற்கும், கட்டாயத்திற்கும் மனமாற்றத்திற்கும் இடையே தெளிவான கோடு கிழிப்பது சாத்தியமில்லை என்று தோன்றுகிறது. அரசியல் மாறுதல்களைப்பற்றி கவனிக்கையிலேயே இந்தக் கஷ்டம் உண்மையாக இருக்கிறது. உரிமை பெற்ற கூட்டங்களுக்கும் உரிமையை இழந்த கூட்டங்களுக்கும் இடையே போராட்டம் நேருமாகில், அந்தக் கஷ்டம் இன்னும் அதிகப்படுகின்றது.

ஒரு லட்சியத்திற்காக கஷ்டப்படுவது என்பதை நாம் மரியாதையோடு ஏற்றுக் கொள்கிறோம். ஒரு இயக்கத்தின் பொருட்டு பதிலுக்கு பதிலாக ஒன்றும் செய்யாமலும் தளர்ந்து போகாமலும், இன்னல்களுக்கு ஆளாவது மிகப் பெருந்தன்மை ஆகும். அது கம்பீரம் கொண்டதாகும். அதை ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும். என்றாலும் கஷ்டதிற்காக கஷ்டத்தை அனுபவிப்பதற்கும், லட்சியத்திற்காக கஷ்டத்தை அனுபவிப்பதற்கும் இடையே அதிகமான வித்தியாசமில்லை. கஷ்டத்தின் பொருட்டு கஷ்டத்தை அனுபவிக்கவேண்டும் என்று சொல்லுவதால் மனிதன் சிறிதளவு சீர்குலைந்து போகக்கூடும். பலாத்காரத்தால் அரக்கத்தன்மை ஏற்படுமாகில் ஓட்டமில்லாத சாத்வீகத்தினால் மறத்தன்மை உண்டாகிவிடும். மேலும் சாத்வீகம் என்ற போர்வையிலே கோழைத்தனத்தையும், சோம்பலையும் வளர்த்து, பழைய திட்டத்தைக் காப்பாற்றுவதற்கு ஒரு வகை தூண்டுதல் ஏற்படக் கூடும்.

ஜன நிர்மாணத்தில் தீவிரமாக மாறுதல்கள் ஏற்பட வேண்டுமென்ற கருத்து, சில வருஷங்களாக இந்தியாவில் தோன்றியது முதல், இந்த மாறுதல்களுக்காக பலாத்காரத்தை பிரயோகிக்க வேண்டுமென்றும் ஆகவே இந்த மாறுதல்களைப் பற்றி பிரசாரம் செய்யக் கூடாதென்றும் அடிக்கடி சொல்லப்பட்டு வருகின்றது. பூரணமான ஒத்துழைப்பு கட்சிக்கு பங்கம் நேரும் என்றும் சாத்வீக முற்போக்குக்கு தடை யுண்டாகுமென்றும் காரணம் சொல்லி வகுப்புப் போராட்டங்கள் கூடாதென்று கூறப்படுகிறது. ஏதேனும் ஓர் நிலைமையில் பலாத்காரத்தை உபயோகிக்காமல் ஜன நிர்மாண பிரச்னைக்குப் பரிகாரம் தேடுவது முடியாது என்று தோன்றுகிறது. ஏனென்றால் உரிமை

யாளர்கள் தங்கள் உரிமைகளைப் பாதுகாப்பதற்காக பலாத்காரத்தை உபயோகப்படுத்த தயங்கமாட்டார்கள் என்பது நிச்சயம். ஆனால் மகத்தான அரசியல் மாறுதலை சாத்வீகப் போராட்டத்தினல் ஆக்கக் கூடுமாகில் ஜன நிர்மாண திட்டத்தில் தீவிரமான மாறுதல்களைச் செய்வதற்கு சாத்வீக முறையால் ஆகாதோ? சாத்வீக முறையினல் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தை இந்தியாவிலிருந்து விலக்கித் தள்ளி நாம் அரசியல் சுதந்திரத்தைப் பெறக்கூடுமானல், சுதேச மன்னர்கள், ஜமீன்தார்கள் முதலிய ஜன நிர்மாண பிரச்னைகளை அதே முறையில் தீர்த்துப் பரிகாரம் தேடி அபேத்வாத அரசாங்கத்தை ஏன் அமைக்க முடியாது? சாத்வீகத்தின் மூலமாக இவைகளெல்லாம் சாத்யமா என்பது முக்கியமான கேள்வியில்லை. சாத்வீகத்தின் மூலமாக இந்த இரண்டு லட்சியங்களையும் அடைய முடியுமா அல்லது அடைய முடியாதா என்பதுதான் கேள்வியாகும். சாத்வீக முறையை அன்னிய அதிகார வர்க்கத்திற்கு விரோதமாக மட்டும்தான் பிரயோகம் செய்யமுடியும் என்று சொல்லக்கூடாது. நாட்டிற்குள்ளேயே இருக்கும் சுயநல வாதிகளுக்கு விரோதமாக அந்த முறையைக் கையாண்டால் பயன் இன்னும் எளிதிலே கைகூடும். ஏனெனில், உள்ளூர்க்காரரிடத்தில் மனமாற்றம் அதிக எளிதாக ஏற்படலாம்.

சாத்வீகத்திற்கு விரோதமானவை என்று காரணம் சொல்லி, லட்சியங்களையும் திட்டங்களையும் கண்டிக்கும் தன்மை இந்தியாவில் இப்போது இருந்து வருகிறது. அத்தன்மையான பிரச்னைகளை நன்ருக சோதித்துப் பார்ப்பது தலைகீழான முறை என்று எனக்குத் தோன்றுகிறது. பதினைந்து ஆண்டுகளுக்கு முன் நாம் சாத்வீக முறையை ஏற்றுக் கொண்டோம். ஏன்? அதன் மூலமாக நம்முடைய லட்சியத்தை விரும்பத்தக்க முறையிலும், பயன் தரக் கூடிய முறையிலும் அடையலாம் என்ற நம்பிக்கை கொண்டோம். ஆனல் நமது லட்சியம் சாத்வீகமல்ல. நமது லட்சியம் சாத்வீகத்தோடு ஒட்டிக்கொண்ட வாலல்ல. நமது லட்சியம் சாத்வீகத்தின் விளைவும் அல்ல. சாத்வீக முறைகளால் அடையக்கூடியதாயிருந்தால்தான் விடுதலையையும், பூர்ண சுதந்திரத்தையும் பற்றி யோசிக்க வேண்டுமென்று அப்பொழுது ஒருவரும் சொல்லவில்லை. ஆனல் இப்பொழுதோ சாத்வீகத்தோடு இணைத்து நம்முடைய லட்சியம் குறிப்

பிடப்படுகின்றது. சாத்வீகத்தோடு ஒவ்வாத லட்சியம் வேண்டாமென்று தள்ளப்படுகிறது. சாத்வீகம் என்ற கருத்து வளைத்து நிமிர்த்த முடியாதது; தத்துவமாக ஆகி விட்டது. அதை எதிர்த்துப் பேசக்கூடாது என்கிறார்கள். எனவே அறிவாளிகள் சாத்வீகத்தின் உயர்தன்மையை குறைத்து மதிக்கத் துவக்கி விட்டார்கள். அதைச் சிலர் மத மாகவும், நம்பிக்கையாகவும் கொண்டுவிட்டார்கள். மேலும் பரம்பரை உரிமைக்காரர்களுக்கு, இந்தப் பேச்சு அடைக் கலமாகவும் ஆகிவிட்டது. பழைய திட்டத்தை காப்பாற்றிக் கொள்ள அவர்கள் இதை உபயோகப்படுத்திக் கொள்ள துணிந்து விட்டார்கள்.

சாத்வீக எதிர்ப்பு முறையும், அந்தப் போராட்ட சாஸ்திரமும் இந்தியாவுக்கும் உலகத்தின் மற்றய பகுதி களுக்கும் மகத்தான தேவை என்று நான் நம்புகிறேன். சாத்வீக எதிர்ப்பு விஷயத்தில் உலகம் விசேஷ கவனம் செலுத்தும்படியாக காந்திஜீ செய்து விட்டார். சாத்வீக எதிர்ப்புக்கு எதிர் காலத்தில் மிகவும் அவசியம் இருக்கிற தென்று நான் நம்புகின்றேன். இந்த நிலைமையில் சொத் துரிமைக்காரர்களுக்கு அது அடைக்கலமாக ஆகி விடு மாகில் அது மிகவும் வருந்தத்தக்கதே யாகும். சாத் வீகத்தை முற்றிலும் பின்பற்ற மனித வர்க்கம் போது மான அளவு முற்போக்கடையாம லிருக்கலாம். “குரு டனுக்கு மெழுகுவர்த்தி வெளிச்சத்தை அளிப்பதால் என்ன லாபம்? அவனுக்கு அது யாதொரு பயனையும் உண்டாக்காது” என்று ஏ. இ. அவர்கள் எழுதியிருக் கும் ‘இண்டர்ப்ரடர்ஸ்’ என்ற நாடகத்தில் பாத்திரம் ஒன்று கூறுகின்றது. தற்போது மனிதர்களுக்குப் பார்வை போதாமல் இருக்கலாம். ஆனால் எல்லா மகத்தான கருத் துக்களைப் போலவும் சாத்வீக எதிர்ப்பின் செல்வாக்கு கொஞ்சம் கொஞ்சமாக வளர்ந்து, நம்முடைய செயல்களில் அதிகமாக கலந்துநின்று அவர்களுடைய போக்கைப் பாதிக் கும். ஒத்துழையாமை அதாவது தீமை என்று கருதப் படும் அரசாங்கத்தினிடமிருந்து அல்லது ஜனசமூகத்தினிட மிருந்து ஒத்துழைப்பை விலக்கிக் கொள்வது, மிகவும் வல் லமை பொருந்திய பயன் தரக்கூடிய கருவியாகும். நடை நேர்மையுள்ள ஒரு சிலர் அதை கைக்கொண்டாலும் கூட அதனுடைய பயன் நீளப் பரவுகின்றது; அதிகமாக வளர்

கின்றது. ஏராளமான பேர்வழிகள் அதைக் கைக்கொள்வார்களாகில், அதனுடைய வெளித்தோற்றமே வல்லமை பொருந்தியதாக இருக்கிறது. ஆனால் சாத்வீக எதிர்ப்பின் உயர்ந்த அறப்போக்கை மறைக்கக்கூடிய விதமாக வேறு சில பிரச்னைகள் தோன்றி விடுகின்றன. இந்த அம்சங்கள் பரவவே, சாத்வீக எதிர்ப்பின் கனலைப் போன்ற வேகம் சிறிதளவு தணிந்து விடுகின்றது. கூட்டத்தின் சாத்வீக எதிர்ப்பு தனி மனிதனுடைய சாத்வீக எதிர்ப்பைக் காட்டிலும் குறைந்த வல்லமை கொண்டதாகும்.

ஆனால் சுத்த சாத்வீகத்தை அதிகமாக வற்புறுத்துவதால், அது வாழ்க்கைக்குப் பொருந்தாத ஒன்றாகப்போய் விடுகின்றது. அதை மத பக்தியோடு சேர்த்துக்கொண்டு குருட்டுத்தனமாக ஜனங்கள் நம்புகிறார்கள்; அல்லது அதை நம்ப மறுத்து விடுகின்றார்கள். அறிவால் அதை ஆராய்ச்சி செய்து பார்த்து, அதை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்ற எண்ணம் விலகிப்போகிறது. 1920-ம் வருஷத்தில் இந்தியாவிலுள்ள பலாத்காரப் புரட்சிக்காரர்கள் பலரின் மனதை அது மாற்றியது. பலாத்கார கோஷ்டியினின்று பலர் சாத்வீக எதிர்ப்புக்கு மாறிவிட்டார்கள். சந்தேகங் கொண்டு பலாத்காரக்கூட்டத்தில் தங்கியிருந்தவர்கள் கூட தங்களுடைய பலாத்கார அலுவல்களை நிறுத்திக்கொண்டார்கள். ஆனால் இப்பொழுது புரட்சிக்காரர்கள் அதை அதிகமாக நம்புவதில்லை. காங்கிரஸ் கூட்டங்களில் கூட ஒத்துழையாமையிலும் சட்ட மறுப்பு இயக்கங்களிலும் முக்கியமான பங்கெடுத்துக்கொண்டு சாத்வீக முறையில் தத்துவங்கள் யாவையும் ஒருவாறு உணர்ந்து அவ்வைகளின் படி சிரத்தையுடன் நடக்கமுயன்றவர்கள் கூட, உண்மையான தேச பக்தர்களல்ல, உண்மையான காங்கிரஸ்கார்ர்களல்ல என்று இப்பொழுது கருதப்படுகின்றார்கள். ஏனென்றால் அவர்கள் சாத்வீகத்தை அழுத்தமாக ஒப்புக்கொள்ளவில்லையாம்! அவர்கள் அபேதவாத அரசாட்சிக்கு பாடுபட்டு உழைக்கிறார்களாம், சொத்து உரிமைகளையும் பரம்பரைபாத்தியங்களையும் ஒழித்துவிட்டு, திட்டமான அபேதவாத ஆட்சியை அமைத்து அவர்கள் எல்லோருக்கும் நியாயமும் சமவசதியும் வழங்க முயலுகின்றார்களாம்! காந்திஜீ எப்பொழுதும் போலவே சாத்வீக எதிர்ப்பில் முக்கியஸ்தராக விளங்குகின்றார். அவருடைய சாத்வீகம் தேக்கங் கொண்டதல்ல;

அது வெள்ளப் பிரவாகத்தைப் போன்றதாகும். அவர் மீண்டும் நாட்டை எப்பொழுது கிளப்பி விட்டு போராட்டத்தை நடத்துவாரென்று ஒரு வரையறையிட்டுச் சொல்ல முடியாது. நினைத்த சமயத்தில் செய்யக் கூடிய ஆற்றல் கொண்டவர். அவர் சாதாரண ஜனங்களை நிமிஷ நேரத்தில் ஒன்று திரட்டிப் போர் முழக்கத்திற்கு நடத்திச் செல்லும் ஆற்றல் படைத்தவர். அவரிடம் இருக்கும் தன்மைகள் முரண் கொண்டவைகளாக இருக்கலாம். ஆனால் அவர் மகாப் பெரியவர். அவரை வழக்கமாயுள்ள அளவுகளைக் கொண்டு அளக்க முடியாது. சாதாரண மனிதர்களை நாம் நிதானிப்பதுபோல, அளப்பது போல, யாரும் அவரை அளக்கவோ நிதானிக்கவோ முடியாது; மதிக்கவும் முடியாது. ஆனால் அவரை சாத்வீகத்தில் பின்பற்றுவதாக சொல்லிக் கொள்பவர்களில் பலர் வெறும் 'சோடைப் பேர் வழிகள்' டால்ஸ்டாய் வர்க்கத்தைச் சேர்ந்த சாத்வீகிகள்! அவர்கள் அர்த்தமில்லாத சமாதானப் பிரியர்கள். வாழ்க்கைக்கும் உண்மைக்கும் பொருத்தமில்லாமல் வாழும் சிறு கூட்டத்தினர். அவர்கள் தங்களைச் சுற்றி சில பேர்வழிகளை வளைத்து வைத்துக் கொண்டிருக்கிறார்கள். தற்போதைய நிலைமையை மாற்றக்கூடாது என்றும், மாற்றினால் சாத்வீக லக்ஷியம் மறைந்து போகுமென்றும் அவர்கள் வரட்டு வியாக்யானம் செய்கிறார்கள். இவ்வாறு சமயோசித புத்தி, லேசாக நுழைந்து கொள்ளுபவர்கள், எதிரியை மனமாறச் செய்யும் முயற்சியால், 'சாத்வீகம்' என்ற பெயரை வைத்துக்கொண்டு தாங்களே எதிரியின் கட்சியில் போய் சேர்ந்து கொள்ள நேரிடுகின்றது. உற்சாகம் குறைந்து, நாம் பலவீனமடையும் பொழுது, அந்த சந்தர்ப்பத்தில் லேசாகப் பின்னடைய நேரிடுகின்றது. அப்பொழுது ராஜி மனப்பான்மை ஏற்படுகிறது. எதிரியை மனம் மாறச் செய்யும் சாமர்த்தியம் இது என்று தங்களையே சௌகர்யமாக சமாதானப் படுத்திக் கொள்ளுகிறார்கள். சில சமயங்களில் நம்முடைய பழைய நண்பர்களையே பறிகொடுத்துவிட்டு, இந்த ராஜி மனப்பான்மையில் லாபத்தை அடையப் பெறுகின்றோம். அந்த சமயத்தில் நம்முடைய பழைய நண்பர்களின் அதிகப் பிரசங்கித்தனத்தையும் நம்முடைய புதிய நண்பர்களுக்கு ஆத்திரமூட்டக்கூடிய அவர்களுடைய பேச்சுக்களையும் நாம் குறைத்துப் பேசுகின்றோம். நமக்குள்ளிருக்கும் ஒற்றுமையைக் குலைக்க அவர்கள் முயலுவதாகவும் அவர்கள் பேரில்

குற்றம் சாட்டுகின்றோம். ஜன நிர்மாணம் செய்து, உண்மையான மாறுதலை நாடாமல் தர்மத்தையும் கருணையையும் வற்புறுத்திப் பேசி தற்போதைய திட்டத்தை ஆதரித்துச் சொத்து உரிமைகளை அப்படியே காப்பாற்ற வேண்டும் என்ற எண்ணமும் உண்டாகி விடுகின்றது.

சாதனங்களின் முக்கியத்தை காந்திஜீ வற்புறுத்திப் பேசியதால், நமது நாட்டுக்கு அவர் பெரும் தொண்டு செய்திருக்கிறார் என்று நான் உறுதியாக நம்புகிறேன். என்றாலும் இறுதியாக லக்ஷியத்தைத் தான் அவசியமாக வற்புறுத்திச் சொல்லவேண்டும் என்று நான் சந்தேகமில்லாமல் நம்புகிறேன். லக்ஷியத்தை நாம் திட்டப்படுத்திக் கொண்டாலொழிய நமக்குத் தெளிவே ஏற்படாது. குறியில்லாத வழிப்போக்கர்களாகி விடுவோம். சாரமில்லாத சில்லரை விஷயங்களில் நம்முடைய வலிமைகளை வீணாக்கிவிடுவோம். ஆனால் சாதனங்களை அலட்சியம் செய்யவே கூடாது. அற சம்பந்தமான காரணம் ஒருபுறமிருக்க, அனுபவத்திற்கு இசைந்த காரணமும் உண்டு. அறத்திற்கு ஒவ்வாத கெட்ட சாதனங்களால், நாம் கொண்டிருக்கும் லக்ஷியமே தோற்றுப்போகின்றது. மேலும், புதிது புதிதாக மகத்தான பிரச்னைகளையும் கிளப்பி விடுகின்றது. ஒருவன் அனுஷ்டானம் செய்யும் முறையைக் கொண்டுதான், நாம் அவனை உண்மையாக மதிக்க முடியும். அவன் கொண்டிருக்கும் லக்ஷியத்தின் மூலமாக அவனை உண்மையாக மதிப்பிட முடியாது. அனாவசியமான போராட்டத்தையும், மூட்டை மூட்டையாகப் பகைமைகளையும் உண்டாக்கக்கூடிய சாதனங்களை கைக்கொள்ளுவதால் லக்ஷியத்தை அடைவது மிகவும் கஷ்டமாகி விடுகின்றது; லக்ஷியம் எட்டச் சென்று கொண்டே இருக்கிறது; லக்ஷியமும் சாதனங்களும்ஒன்றை ஒன்று பின்னிக்கொண்டு கிடக்கின்றன. அவைகளைப் பிரிக்கவே முடியாது. போராட்டத்தையும், பகைமையையும் கூடுமானவரையில் குறைத்து, நல்லெண்ணத்தை வளர்க்கும்படியாக, சாதனங்கள் அமையப் பெற வேண்டியது அவசியமாகும். ஆகவே, அது சிறப்பான முறை என்று சொல்ல முடியாவிட்டாலும் எண்ணம், மனப்பான்மை, கருத்து முதலியவைகளை சம்பந்தப்படுத்திய கருவியாக அமைந்திருக்கிறது. இந்த அடிப்படையான கருத்தைக் கொண்டுதான் காந்திஜீ சாதனங்களை வற்புறுத்துகிறார். மனித சுபாவத்தை அவர் அதிகமாக மாற்றி விடாவிட்டாலும், கோடிக்கணக்

கானவர்கள் கலந்துகொண்ட மகத்தான தேசிய இயக்கத்தில் இந்த நோக்கத்தை இணைத்து, வற்புறுத்திப்பேசி, அதை ஏற்கும்படியாக செய்து விட்டார். ஒழுங்கான அறப் பயிற்சி வேண்டுமென்று அவர் வற்புறுத்துவதும் மிகவும் அவசியமாகும். ஆனால் தனிப் பேர்வழிகளுக்கு அவர்கூறும் பொதுவான பயிற்சி முறைகள் ஒருக்கால் வாதத்திற்கு உகந்தவையாக இருக்கலாம். தனிப் பேர்வழிகளின் குறைகளையும் பாபங்களையும் பெரிதாகக் கருதி, ஜனசமூகத்தின் குறைகளையும் பாபங்களையும் அவ்வளவு முக்கியமானவையாக அவர் கருதவில்லை. இந்தப் பயிற்சியின் அவசியத்தைப் பற்றிக் காரணம் சொல்லத் தேவையில்லை. ஏனெனின் லாப மில்லாத கூட்டத்திலிருந்து விலகிப்போய், அதிகாரப் பதவி யிலுள்ள உரிமையானவர்களின் கூட்டங்களோடு சேர்ந்து கொள்ள வேண்டும் என்ற தூண்டுதலினால் அநேக காங்கிரஸ் காரர்கள் காங்கிரஸை விட்டு விலகிப் போய் விட்டார்கள். ஓரளவு செல்வாக்குபெற்ற காங்கிரஸ்காரர்களை அதிகாரிகள் வரவேற்க, எப்பொழுதும் தயாரா யிருக்கிறார்கள்.

இப்பொழுது பலதரப்பட்ட நெருக்கடிகளுக்குள் அகப்பட்டுகொண்டு, உலகம்முழுதும் தவித்துக்கொண்டிருக்கிறது. ஆனாலும் இந்த நெருக்கடிகளுக்குள் மகத்தானது ஆன்ம சம்பந்தமானதாகும். இந்த நெருக்கடி இப்பொழுது ஆசியாவில் அதிகமாக தோன்றியிருக்கிறது. ஏனென்றால் ஆசியாவில் ஏற்பட்டிருக்கும் சமீபகாலத்து மாறுதல்கள், வேறு இடங்களைக் காட்டிலும் விரைவாக ஏற்பட்டவையாகும். எனவே பழமையும் புதுமையும் திடீரென்று இணைந்து போவது கஷ்டமாக இருக்கிறது. இப்பொழுது நம்முடைய கவனத்தை ஈர்த்து வரும் அரசியல் பிரச்னை மிகவும் சிறிய பிரச்னையாகும். என்றாலும் அது நமக்கு மிகவும் முக்கியமானது. ஆகவே ஜன சமூகத்தின் உண்மையான பிரச்னைகளுக்கு பரிகாரம் தேடு முன்னர், அரசியல் விடுதலைப் பிரச்னையை சரிவரத் தீர்த்துக் கொள்ளவேண்டும். பல நூற்றாண்டுகளாக மாறுதலே இல்லாத ஜன நிர்மாண திட்டத்திற்கு நாம் ஆளாகிக் கிடக்கின்றோம். ஆக்வே அந்தத் திட்டம் ஒன்றுதான் சாத்தியமான திட்டமென்றும், அதுதான் ஜன நிர்மாணத்தின் சரியான முறையென்றும் எண்ணி அதற்கு ஏற்றாற்போல நம்முடைய தர்ம சம்பந்தமான மனப்போக்குகளை அமைத்துக் கொண்டிருக்கிறோம். ஆனால்

பழைமையோடு புதுமையை இணைப்பதற்காக நாம் செய்யும் முயற்சிகள் நிச்சயமாக தோற்றே போகும். "விஷயத்தை முடிவாக யோஜித்துப் பார்த்தால், பொருளாதாரத் தேவைகளைத் தழுவியே அறமுறைகள் வகுக்கப்படுகின்றன" என்று அமெரிக்கப் பொருளாதார நிபுணர் வெப்ளென் அவர்கள் எழுதியிருக்கிறார். இன்றைக்கு நமக்கு இருக்கும் தேவைகளினால் புதியதொரு அறத் திட்டத்தை அவைகளுக்கு இணங்க அமைத்துக் கொள்ளும்படி, நாம் கட்டாயப்படுத்தப் படப்போவது நிச்சயம். இந்த ஆன்ம நெருக்கடியிலிருந்து நாம் வெளியேற வேண்டுமானால், ஆன்ம சம்பந்தமான உண்மையான கருத்துகளை நாம் உணரவேண்டுமானால், பிரச்னைகளைத் தைரியமாகவும் மறைமுகமில்லாமலும் நாம் ஆராயவேண்டும். எந்த மதத்தின் கோட்பாடுகளுக்குள்ளும் அடைக்கலம் புகுந்து கொள்ளக்கூடாது. மதம் போதிப்பது நல்லதாக இருக்கலாம்; அல்லது கெட்டதாகவும் இருக்கலாம். ஆனால் அதைச் சொல்லும் முறையும், அதை நாம் நம்ப வேண்டுமென்று கட்டாயப்படுத்தும் நோக்கமும்; அறிவு மூலமாக எந்தப் பிரச்னைக்கும் பரிகாரம் தேட வழிகாட்ட முடியாது. ஏனென்றால் "மதக் கோட்பாடுகளை நம்பவேண்டும். ஏனெனில் நம்முடைய மூதாதைகள் ஏற்கனவே அவைகளை நம்பினார்கள். இரண்டாவதாக பண்டைக்காலத்திலிருந்து நமக்கு பரம்பரையாக வந்த ருசுக்கள் நம்மிடமிருக்கின்றன. மூன்றாவதாக அவைகள் உண்மையானவையா என்ற பிரச்னையை கிளப்பவே கூடாது என நாம் தடுக்கப் பட்டிருக்கிறோம்" என்று ப்ளூட் அவர்கள் குறிப்பிடுகிறார்.

மத நோக்கோடு கோட்பாடு என்ற முறையில் சாத்வீகத்தைப் பற்றி நாம் யோசித்துப் பார்ப்போமாகில் வாதத்திற்கு இடமே இல்லை. அது ஒரு வகுப்பாரின் குறுகிய தத்துவமாக ஆகிவிடுகிறது. எனவே ஜனங்கள் அதை ஏற்கலாம், அல்லது ஏற்காமலிருக்கலாம். அது அதனுடைய ஜீவ சத்தை இழந்து விடுகிறது. தற்போதைய பிரச்னைகளுக்கு அதைப் பிரயோகம் செய்யவும் ஆகாது. தற்போதைய நிலைமைகள் சம்பந்தமான முறையில், அதை விவாதம் செய்வதற்கு நாம் தயாராக இருப்பின், உலகத்தை மாற்றியமைக்கும் முயற்சிகளில் நமக்கு அது பெரும் துணையாக இருக்கக் கூடும். இதை யோசிக்கும் பொழுது மனிதத்திர

னின் இயற்கையையும், பலவீனங்களேயும் கருத்தில் கொள்ளல் வேண்டும். பெருவாரியான அளவில் செய்யக் கூடிய வேலேகள், முக்கியமாக தீவிரமான புரட்சி மாறுதல்களேக் குறிவைத்து செய்யும் வேலேகள், அவைகளேச் செய்யும் தலேவர்களால் மட்டும் பாதிக்கப்படுவதில்லே. அப்பொழுதிருக்கும் நிலேமைகளாலும் அந்த வேலேகள் பாதிக்கப்படுகின்றன. அது மட்டுமல்ல; எந்த ஜனத்திரள் மூலமாக காரியத்தை செய்து முடிக்க தலேவர்கள் கருதுகின்ருர்களோ, அந்தக் கூட்டம் இந்த அலுவல்களேப் பற்றி என்ன நினேக்கின்றது என்பதையும் பொருத்திருக்கின்றது.

உலக சரித்திரத்தில் பலாத்காரம் மகத்தான வேலே செய்திருக்கிறது; இன்றைக்கும் அது மகத்தான வேலே செய்து வருகின்றது; இன்னும் வெகு காலத்திற்கு நல்ல வேலே செய்யவும் போகிறது. பண்டைக் காலங்களில் ஏற்பட்ட மாறுதல்களில் அநேகமாக எல்லாம் பலாத்காரத்தாலும் கட்டாயத்தாலும் ஏற்பட்டவையாகும். "இந்த நாட்டில் ஜனங்களுக்கு அரசியல் நெருக்கடிகள் ஏற்படும் காலத்தில், பலாத்காரத்தை வெறுக்கும்படியாகவும் அமைதியை நேசிக்கும்படியாகவும் பொறுமையை உபயோகப்படுத்தும்படியாகவும் மட்டும் உபதேசம் செய்து, வேருெரு உபதேசமும் செய்யப்படாவிடில், இந்த நாட்டின் மக்கள் சுதந்திர உரிமைகளே ஒரு நாளும் அடைந்திருக்க முடியாது என்று நான் கண்டிப்பாய்க் கூறுவேன்'' என டபிள்யூ. கி. கிளாக்ஸ்டன் ஒரு சமயம் சொல்லியிருக்கிருர்.

பண்டைக் காலத்திலும் சரி, தற்காலத்திலும் சரி, பலாத்காரத்தின் பிராதான்யத்தை அலட்சியம் செய்வது சாத்தியப்படாததாகும். அதை அலட்சியம் செய்தால் வாழ்க்கையையே அலட்சியம் செய்வதாகும். என்ருலும் பலாத்காரம் சந்தேகமில்லாமல் கெடுதல் தான். அதனுல் தீமையான பல விளேவுகள் தொடர்ச்சியாக ஏற்படுகின்றன. பலாத்காரத்தைக் காட்டிலும் கொடுமையானவை, பகைமைக் கருத்துகள், குரூரம், பழிவாங்குதல், தண்டனே, இவைகள் பலாத்காரத்தின் பயன்கள் என்றே சொல்லவேண்டும். பலாத்காரம் அதனுடைய தன்மையினுலேயே கெடுதல் என்று சொல்லமுடியாது. பலாத்காரத்தோடுகலந்துபின்னிக்கொண்டிடக்கின்ற நோக்கங்களால் தான் பல கேடுகள் உண்டாகின்

றன. மேற்கூறிய கெட்ட நோக்கங்களே இல்லாமல் பலாத்காரத்தைக் கையாளலாம். நல்லலட்சியத்திற்கும் சரி, தீயலட்சியத்திற்கும் சரி பலாத்காரத்தை உபயோகிக்கலாம். ஆனால் இந்த நோக்கங்களிலிருந்து பலாத்காரத்தைப் பிரிப்பது மிகவும் கஷ்டமான வேலையாகும். எனவே கூடுமான வரையில் பலாத்காரத்தை ஒதுக்கி வைப்பது விரும்பத்தக்கதாகும். அதைத் தள்ளிவைப்பதால், அதைக் காட்டிலும் மகத்தான தீமைகளுக்கு உடன்படும் நோக்கத்தைக் கொள்ளவே கூடாது. பலாத்காரத்துக்கு குனிந்து கொடுப்பதும், பலாத்காரத்தைத் தழுவி நடைபெறும் அநியாயமான ஆட்சியை ஏற்றுக்கொள்வதும் சாத்வீக தத்துவத்திற்கு நேர் விரோதமானவையாகும். சாத்வீக முறையை இந்த உலகில் நிலைக்க வைக்கவேண்டுமானால், அதை ஜீவசத்து கொண்டதாக ஆக்க வேண்டும். தீவிரமான மாறுதல்களையும், புரட்சி பூர்வமான ஜனநிர்மாணத்தையும் ஆக்கக் கூடிய வல்லமை அதனிடம் இருக்கும்படி செய்ய வேண்டும்.

அவ்வாறு அது ஆக்கப்பெறுமா அல்லவா என்பது எனக்குத் தெரியாது. நம்மை அது முற்போக்கில் நெடுந் தூரம் இட்டுச் செல்லமுடியும் என்று நான் கருதுகிறேன். இறுதி லட்சியத்திற்கு அது நம்மைக் கொண்டு போய் விடுமோ என்பது எனக்குச் சந்தேகம். உள்ளபடியே ஏதாவது ஒருவகையில் பலவந்தம் தேவை என்று எனக்கு தோன்றுகிறது. உரிமைகளையும் அதிகாரத்தையும் தங்களிடம் வைத்துக் கொண்டிருப்பவர்கள் கட்டாயப்படுத்தப் பட்டாலின்றி, அந்த உரிமைகளை விட்டுக் கொடுத்தாலன்றி தங்களுக்குத் தீமை உண்டாகும் என்ற நிலைமைகளைத் தோற்றுவித்தாலல்லாமல், அவர்கள் தங்கள் உரிமைகளையும், அதிகாரத்தையும் எளிதிலே விட்டுக் கொடுத்து விடுவதில்லை. ஜன சமூகத்தில் தற்போது தோன்றியிருக்கும் போராட்டங்களுக்கு பலவந்த மூலமாயில்லாமல் பரிகாரம் தேட முடியாது. பெரிய துறையில் மனமாற்றம் ஏற்படத்தான் வேண்டும். ஏனென்றால் ஏராளமான மக்கள் மனமாற்றம் அடையாத வரையில் ஜனசமூக மாறுதல் இயக்கத்திற்கு உண்மையான அஸ்திரவாரமே கிடையாது. சிலரைப் பலவந்தப் படுத்தித்தான் ஆகும். அஸ்திவாரமாயுள்ள இந்தப் போராட்டங்களில் மறைத்து வைத்து அவைகள் இல்லவே யில்லையென்று வெளிக் காண்பிக்கப் பார்ப்பது நமக்கு

நேர்மையானதல்ல. அவ்வாறு செய்தால் அது உண்மையை மறைப்பது மட்டுமல்ல; தற்போதைய உளுத்துப்போன திட்டத்தை ஆதரிப்பதாக முடியும். அதிகாரங்களை படைத்திருப்பவர்கள் இவ்வாறு உண்மையை மறைப்பதைத் தான் வேண்டுகின்றார்கள். தங்களுடைய சிறப்பான உரிமைகளை எப்பொழுதும் காப்பாற்றி வைத்துக் கொள்ள அவர்கள் ஆதாரம் தேடுகின்றார்கள். அதற்கு உண்மையை மறைத்தல் சாதகமாக ஆகி விடுகின்றது. அநியாயமான ஒரு திட்டத்தை எதிர்த்துப் போராட வேண்டுமானால், அதற்கு அடி தாங்கியாயிருக்கும் தவறான கட்சி வாதங்களை வெளிப்படுத்தி, உண்மையைச் சொல்ல வேண்டும். ஒத்துழையாமையின் சிறப்பான நல்ல தன்மைகளில் ஒன்றியாதெனில் இத்தகைய தவறான கட்சி வாதங்களை வெளிக் காண்பித்து விடுவது. அத்தகைய அநியாயமான ஜனசமூக திட்டத்தோடு ஒத்துழைப்பதா இல்லையா என்பது நம்மையே பொருத்திருக்கிறது.

நம்முடைய இறுதி லக்ஷியம் என்ன; வகுப்புகளில்லாத ஜனசமூகமாக இருக்கவேண்டும்; எல்லோருக்கும் சமமான பொருளாதார நியாயமும் சந்தர்ப்பமும் அளிக்கப்பட வேண்டும். மனித வர்க்கத்தைத் திட்டமான முறைகளைக் கொண்டு உயர்ந்த தரங்களுக்கு ஏற்றுவதற்கான முயற்சி செய்யும் ஜன சமூகமாய் இருத்தல் வேண்டும். அந்த ஜன சமூகத்தில் ஒத்துழைப்பு, சுயநலமின்மை, தொண்டுசெய்யும் ஆவல், நியாயமான காரியத்தைச் செய்ய விருப்பம், நன்னோக்கம், அன்பு இவைகள் மிளிர வேண்டும். இவைகள் உலகம் முழுதும் பாவி நிற்க வேண்டும். இவைகளுக்குக் குறுக்கே நிற்பவர்களை நீக்கவேண்டும். கூடுமானால் சாந்தமாக, தேவையானால் பலாத்காரத்துடன் நீக்கவேண்டும். அடிக்கடி பலவந்தம் தேவையாயிருக்கும் என்பதைப்பற்றிச் சந்தேகமேயில்லை. ஆனால் பலாத்காரத்தை உபயோகப்படுத்தினால், அதைப் பகைமை உணர்ச்சியோடு அல்லது குரூரத்தன்மையோடு உபயோகப்படுத்தலாகாது. தடையை நீக்க வேண்டும் என்ற சுயநலமற்ற விருப்பத்தோடு பலாத்காரத்தைக் கையாள வேண்டும். அது கஷ்டமான வேலை; எளிதல்ல; இலகுவான மார்க்கமல்ல. படுகுழிகள் பல குறுக்கே நேரும். அவைகளை அலட்சியம் செய்வதால் கஷ்டங்களும் படுகுழிகளும் மறைந்து போகமாட்டா. அவைகளுடைய உண்மை

யான தன்மையை உணர்ந்து அவைகளோடு நேர்முகமாகப் போராடினால்தான் அவைகள் மறையலாம். இவையெல்லாம் வெறும் வேதாந்தமாக சிலர் காதில் விழலாம். இத்தகைய உயர் நோக்கங்களோடு ஏராளமான மக்கள் தொண்டு செய்ய வருவார்கள் என்பதும் நிச்சயமல்ல. ஆனால் அவைகளை நோக்கத்தில் வைத்துக்கொண்டு வற்புறுத்த வேண்டும். அந்த முறையின் மூலமாக நம்முடைய உள்ளங்களில் நிரம்பிக் கிடக்கும் பகைமைகளையும் வெறிகளையும் அவைகள் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைக்கக் கூடும்.

நம்முடைய சாதனங்கள் இந்த லக்ஷியத்திற்கு நம்மைக் கொண்டுபோய் விடவேண்டும். இந்த நன்னோக்குகளை அவைகள் தழுவி நிற்கவேண்டும். ஆனால் ஒருவாறு மனித சுபாவத்தையும் நாம் நன்றாக உணர்ந்து கொள்ளவேண்டும். ஜனசமூகம் உபதேசங்களுக்காகவும், நம்முடைய மனுக்களுக்காகவும், உயர்ந்த அறநெறிகளுக்காவும் செவிசாய்த்து முன்னேற ஒரு நாளும் சம்மதிக்காது. மன மாற்றத்தோடு பலவந்தத்தையும் உபயோகப்படுத்தத்தான் வேண்டியிருக்கும். கூடுமானவரையில் இந்தக் கட்டாயத்தை ஒரு வரையறைக்குள் கொண்டு வந்து, அதன் தீமை குறையும்படியான வகையில் நாம் அதை உபயோகப்படுத்துவதுதான் நமக்கு சாத்தியமான சங்கதியாகும்.

## LXIV

## மீண்டும் டேராடூன் சிறை

அலிப்பூர் சிறையில் நான் சௌக்கியமாக இல்லை. என் எடை மிகவும் குறைந்துபோய்விட்டது. கல்கத்தா காற்றும், அதிகரித்துக் கொண்டு வந்த சூடும் எனக்குத் தொந்தரவு கொடுத்தன. நல்ல சீதோஷ்ண ஸ்திதி வாய்ந்த இடத்திற்கு என்னை மாற்றப்போகிறார்கள் என்று வதந்திகள் இருந்து வந்தன. மே மாதம் 7-ம் தேதி என் சாமான்களை எடுத்துக் கொண்டு சிறைக்கு வெளியே போகும்படியாகச் சொன்னார்கள். டேராடூன் சிறைக்கு என்னை அழைத்துச் செல்லுவதாகத் தெரிந்தது. ஒதுக்கமாக சில மாதங்கள் வசித்துவந்ததற்குப் பிறகு சாயந்திரக் குளிர்காற்றில் கல்கத்தா வழியாக வண்டியில் செல்வது மனதிற்கு இன்பமாக இருந்தது. பெரிய ஹௌரா ஸ்டேஷனில் கூடியிருந்த கூட்டத்தைப் பார்த்து நான் சந்தோஷப்பட்டேன்.

என்னுடைய சிறை மாற்றத்துக்காக நான் சந்தோஷமடைந்தேன். டேராடூனையும், அதனருகேயிருந்த மலைகளையும் காண ஆவல் கொண்டேன். ஆனால் நான் அங்கு போய்ச் சேர்ந்ததும், ஒன்பது மாதங்களுக்கு முன் அதை விட்டு நைனிக்குச் சென்றபொழுது டேராடூன் எப்படி இருப்பது வழக்கமோ அப்படியில்லை என்று தெரிந்தது. நான் புதிய இடத்தில் வைக்கப்பட்டேன். அது பழைய ஆடுமாடு கட்டுகிற இடம்; சுத்தம் செய்யப்பட்டிருந்தது; வாசத்துக்கு உரிய வசதிகள் செய்யப்பட்டிருந்தன.

அறை என்ற அம்சத்தில் இது அவ்வளவாக பாதகமானதல்ல. அதற்குப் பக்கத்திலே ஒரு சிறிய தாழ்வாரம் இருந்தது. ஒரு முற்றமும் இருந்தது. அது சுமார் ஐந்து அடி நீளம் இருக்கலாம். நான் டேராவில் ஏற்கனவேயிருந்த அறையைக் காட்டிலும் இந்தப் புதிய அறை நன்றாய் இருந்தது. ஆனால் ஏனைய மாறுதல்கள் நன்றாயில்லை என்று

விரைவில் தெரிந்தது. அறையின் சுவர் முன்பு பத்து அடிதான் இருந்தது; இப்பொழுது என்பொருட்டு பதினான்கு அல்லது பதினைந்து அடியாக உயர்த்தப்பட்டிருந்தது. குன்றுகள் தெரியுமென்று ஆசைப்பட்டுக் கொண்டிருந்த என் எண்ணத்தில் மண் விழுந்தது. ஒரு சில மரங்களின் உச்சிக் கிளைகளைத்தான் என்னால் பார்க்க முடிந்தது. இந்தச் சிறையில் மூன்று மாதங்களுக்கு அதிகமாக இருந்தேன். அந்தக் காலத்தில் மலை கண்ணில்பட்டதே கிடையாது. முன்பிருந்ததைப்போல சிறைக் கதவுக்குமுன்பாக வெளியே உலவ நான் அனுமதிக்கப்படவில்லை. என்னுடைய புதிய முற்றமே அதற்குப் போதுமானது என்று கருதப்பட்டது போலும்!

இவைகளும் இன்னும் மற்ற புதிய தடைகளும் எனக்கு ஏமாற்றத்தை உண்டாக்கின; எனக்குக் கோபம் உண்டாயிற்று; இருப்பே கொள்ளவில்லை. என்னுடைய முற்றத்தில் செய்யக் கூடிய தேகப் பயிற்சியைச் செய்வதற்குக் கூட மனமில்லை. இந்த மாதிரி தனிமையாக உலகத்தினின்றும் அறவே ஒதுக்கப்பட்டது இதுதான் முதல் தடவை. இந்த தனிக் காவலினால் என்னுடைய நரம்புகள் சீர்கெட ஆரம்பித்து விட்டன. உடலிலும் மனத்திலும் நான் க்ஷீணமடைந்து கொண்டுவந்தேன். சுவருக்கு அந்தப் பக்கத்தில் சில அடி தூரத்துக்கு அப்பால் பசும் புல்லும், நயமான மிருதுவான மண்ணும், நல்ல காட்சிகளும் இருந்தன என்று மணத்தின் மூலமாக தெரிந்து கொண்டேன். ஆனால் அவைகளெல்லாம் எனக்குக் கிட்டக்கூடாதவைகள். என்னுடைய கண்கள் அந்தச் சுவர்களைப் பார்த்துப் பார்த்து அலுத்துப் போய்விட்டன. சாதாரணமான சிறை நடமாட்டம் கூட என் கண்ணில் படவில்லை. ஏனென்றால் என்னைத் தனியாக ஒதுக்கி வைத்திருந்தார்கள்.

ஆறு வாரங்களுக்குப் பிறகு பருவ மழை துவக்கி பிரவாகமாகப் பெய்தது. முதல் வாரத்தில் பன்னிரண்டு அங்குல மழை. ஆகாசத்தில் மாறுதலேற்பட்டு புதிய உயிரின் காட்சி தோன்றுமோ என இருந்தது. சூடு தணிந்தது; உடம்புக்கு ஒரு வகை ஆறுதல் உண்டாயிற்று. ஆனால் கண்களுக்கும் மனதுக்கும் ஆறுதல் உண்டாகவில்லை. சில சமயங்களில் என்னுடைய இருப்பிடத்தின் இரும்புக் கதவு திறக்கும். ஒரு வார்டர் உள்ளே வருவான்; அல்லது

வெளியே போவான். இந்தச் சமயங்களில் இரண்டொரு விநாடிகளில் வெளியுலகத்தின் காட்சி திடீரென்று எனக்கு ஏற்படும். பச்சப்பசேல் என்ற கழனிகள், மாங்கள் பார்க்கப் பார்க்கத் தெவிட்டாத நிறமும் ஒளியும் படைத்து நிற்கும். அவைகளின் பேரில் முத்துக்களைப் போன்ற மழைத் துளிகள் இருப்பதைக் காண வெகு அழகாக இருக்கும். இவை யாவும் சில விநாடிகளுக்குத்தான். பின்னர் எல்லாம் மின்னலைப் போல மாயமாய் மறைந்து விடும். கதவு முழுதும் திறக்கப்படுவதில்லை. கதவின் பக்கத்தில் நான் இருப்பதாகத் தெரிந்தால், கதவைத் திறக்கக்கூடாதென்று வார்டர்களுக்கு உத்தரவு கொடுக்கப்பட்டிருந்ததாகத் தெரிந்தது. கதவைக் கொஞ்சம் தான் திறக்க வேண்டுமாம். இவ்வாறு செய்வதுகூட சில விநாடிகளுக்கு மட்டுமே! பச்சையைக் காணுவதால் எனக்கு இன்பம் உண்டாகவில்லை. அந்தக் காட்சியே தலைவலியையும், மூக்கில் ஒரு அரிப்பையும் உண்டாக்கி விட்டது. கதவு திறக்கும் பொழுது வெளியே பார்ப்பதையும் நிறுத்திக் கொண்டேன்.

ஆனால் இந்தத் துயரம் யாவும் உண்மையிலேயே சிறையால் நேர்ந்ததல்ல. சிறை அதைக் கொஞ்சம் அதிகப்படுத்தியிருக்கலாம். வெளியேயிருந்து வந்த செய்திகளின் பயனாக இந்தமனத்துயரம் ஏற்பட்டது. கமலாவின் நோயும், என்னுடைய அரசியல் கவலைகளும் காரணங்களாகும். மீண்டும் கமலா அவளது பழைய நோயின் பிடிப்பில் அகப்பட்டுக் கொண்டாள் என்பதை உணர்ந்து கொண்டேன். ஆனால் நான் அவளுக்கு எத்தகைய உதவியையும் செய்ய முடியாத திக்கற்ற நிலைமையிலிருந்தேன். நான் அவள் பக்கத்திலிருந்தால், அவளுக்கு ஆறுதல் ஏற்பட்டிருக்கும் என்பது எனக்குத் தெரியும்.

அலிப்பூரைப் போல இல்லை; டேராடூன் சிறையில் எனக்கு தினசரிப் பத்திரிகை கிடைத்தது. எனவே வெளியே நேரும் அரசியல் முதலிய பல மாறுதல்களையும் அறிந்து கொண்டு வந்தேன். பாட்னாவில் மூன்று வருஷத்திற்கு பிற்பாடு அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூடிற்று. (இது வரையிலும் அது சட்ட மீறிய அமைப்பாகக் கருதப்பட்டது.) கமிட்டியின் நடவடிக்கைகள் மிகவும் வருத்தத்தைத்தரக்கூடியவையாக இருந்தன. அதனுடைய இந்த முதல் கூட்டத்

தில், இந்தியாவிலும் உலகத்திலும் இதுவரையிலும் நேர்ந்த தைப்பற்றி யாதொரு விஸ்தாரமான ஆராய்ச்சியும் வாதமும் ஏற்படாததைக் கண்டு நான் ஆச்சரியப்பட்டேன். நடவடிக்கைகள் பழைய சுவடுகளேயே இன்னும் பற்றிக்கொண்டு வந்தன. எட்டத்திலிருந்து பார்த்த எனக்கு காந்திஜீ மீண்டும் பழைய சர்வாதிகாரியாகத் தோன்றினர். "நீங்கள் என்னுடைய தலைமையை வேண்டினல், நான் வகுக்கும் நிபந்தனைகளை ஏற்றுக் கொள்ளவேண்டும்'' என்று அவர் சொன்னர். அவருடைய கோரிக்கை மிகவும் நியாயமானது. ஏனெனில் அவர் தலைவராகவும் இருந்துகொண்டு, அவருடைய மனச்சாட்சிக்கும் கொள்கைகளுக்கும் விரோதமாக அவர் நடக்க வேண்டும் என்று அவரைத் தொந்தரவு செய்வது முரணுகும். ஆனல் நடவடிக்கைகளில் பரஸ்பர விவாதம் இல்லாமல் எல்லாவற்றையும் ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று காந்திஜீ கட்டாயப்படுத்தியதாகத் தோன்றிற்று. தெளிவான மார்க்கம் எதையும் கமிட்டி காணவில்லை. இவ்வாறு காந்திஜீ மனிதர்களேப் பலவந்தப்படுத்தி விட்டு, அவர்கள் திக்கற்ற தன்மையில் இருக்கிருர்கள் என்று பின்னர் அவர் முறையிடுவது விநோதமாகவே இருக்கிறது. அவரிடம் மக்களுக்கு பக்தியும், கீழ்ப்படியும் தன்மையும் இருந்ததுபோல எந்தத் தலைவரும் அத்தகைய பாக்கியத்தைப் பெறவில்லை. இருந்தாலும் அவர் எதிர்பார்த்த அளவு பாமர மக்கள் மேலேறி வரவில்லையென்று பழி சுமத்துவது நேர்மையாகாதென்று தோன்றுகிறது. பாட்ணு கூட்டத்தில் அவர் கடைசி வரைக்கும் கூட இருக்கவில்லை. அவரது ஹரிஜன சுற்றுப் பிரயாணத்துக்குக் கிளம்பி விட்டார். "காரியத்திலே கருத்தாயிருங்கள். நிர்வாக சபை கொண்டு வந்திருக்கும் தீர்மானங்களே விரைவில் நிறைவேற்றி வையுங்கள்'' என்று அவர் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக்கு உபதேசம் செய்துவிட்டுப் போய் விட்டார்.

நீண்ட நேரம் வாதம் செய்ததால் விஷயங்கள் சீர்பட்டிருக்க முடியாது என்பது அநேகமாக உண்மையாக யிருக்கலாம். அங்கத்தினர்கள் குழப்பத்தில் இருந்தார்கள். தெளிவு இல்லை; பலர் எதையும் கண்டிக்கத் தயாராய் இருந்தாலும் அவர்கள் ஆக்க யோசனைகள் எதையும் செய்யவேயில்லை. அப்போதைய சந்தர்ப்பத்தில் இது இயற்கைதான். ஏனெனின் போராட்டத்தின் சுமையெல்லாம் மாகாண

தலைவர்களின்பேரில் வெகுவாக சுமந்து கிடந்தது. அவர்கள் அலுத்துப் போயிருந்தார்கள். உற்சாகமில்லை. போராட்டத்தை நிறுத்தி, சட்ட மறுப்பை தற்காலிகமாக நிறுத்த வேண்டும் என்று அவர்களுக்குப் பட்டது. அதற்கப்புறம் என்ன? எனவே இரண்டுகூட்டங்கள் பிரிந்தன. சட்ட சபைகளின் மூலமாக சட்ட வரம்புக்கு உள்பட்ட கிளர்ச்சிகளைச் செய்யவேண்டும் என்பது ஒரு கூட்டத்தின் நோக்கம். மற்றொரு கூட்டம் மோகமாக அபேதவாதத் துறைகளில் கருத்தைச் செலுத்திற்று. ஆனால் கமிட்டியின் பெரும்பான்மை அங்கத்தினர்கள் இந்த இரண்டுகூட்டங்களிலும் சேரவில்லை. மீண்டும் சட்ட வரம்புக் கிளர்ச்சி அவர்களுக்குப் பிடிக்கவில்லை. அதே சமயத்தில் அபேதவாதம் அவர்களுக்கு சிறுதிகிலை உண்டாக்கிற்று. அபேதவாதத்தின் மூலமாக காங்கிரஸில் பிளவு உண்டாகுமோ என்று அவர்கள் பயந்தார்கள். அவர்களிடம் ஆக்கத்துக்கும் ஒன்றுமில்லை. எனவே அவர்கள் காந்திஜீயின் யோசனையை எதிர்நோக்கி நின்றார்கள். காந்திஜீதான் அவர்களுக்கு அடைக்கலமாக விளங்கினார். எனவே காந்தி சொன்னது அவர்களுக்கு பிடித்தமில்லாமலிருந்தாலும், அவர்கள் அவருடைய யோசனையை ஏற்றுக் கொள்ளும்படியாய் விட்டது. காந்திஜீ காங்கிரஸில் நிதானக் கட்சியை ஆதரித்ததால் அந்தக் கட்சிக்கு காங்கிரஸில் ஏற்றமுண்டாயிற்று.

இவையாவும் எதிர்பார்த்ததுதான். ஆனால் நான் எண்ணியதைக் காட்டிலும் அதிகமான பிற்போக்கு காங்கிரசைப் பின்னே தள்ளிக் கொண்டே போய்விட்டது. பிற்போக்கின் பயனாக 1925-ம் வருஷ மத்தியில் தோன்றிய சுயராஜ்ய கட்சிகூட இந்தப் புதிய காங்கிரஸ் தலைமையைக் காட்டிலும் முற்போக்குள்ளதாய் இருந்தது. சுயராஜ்யக் கட்சியில் இருந்ததைப்போல வல்லமை பொருந்திய பேர்வழிகள் இப்பொழுது இந்த காங்கிரஸ் புதுத் தலைமையில் இல்லை. ஆபத்துக்கிடமாயிருக்கும் வரையில் இயக்கத்தினின்று ஜாக்கிரதையாக விலகி நின்ற பலர் இப்பொழுது கூட்டமாக காங்கிரஸுக்குள் நுழைந்து பிராதான்யம் பெற்றார்கள்.

காங்கிரஸ் சட்ட மீறிய ஸ்தாபனம் என்பதை அரசாங்கம் ரத்துசெய்து விட்டது. எனவே காங்கிரஸ் சட்ட

வரம்புக்குட்பட்ட அமைப்பாக ஆகிவிட்டது. ஆனல் அதைச் சார்ந்த பல ஸ்தாபனங்களும், கிளை ஸ்தாபனங்களும் இன்னும் சட்டம்மீறிய அமைப்புகளாகவே கருதப்பட்டு வந்தன. உதாரணமாக தொண்டர் இலாகா, சேவாதளம், பல குடியானவர் சபைகள், பல கல்வி ஸ்தாபனங்கள், வாலிபர் சங்கங்கள் முதலியன. இவைகளில் குழந்தைகளின் ஸ்தாபனம் ஒன்று கூட சேர்க்கப்பட்டிருந்தது. முக்கியமாக 'குதாய் கித்மத்கர்' அல்லது 'எல்லைப்புற செஞ்சட்டையார்கள்' இன்னும் சட்டமீறிய கூட்டத்தார்களாகவே கருதப்பட்டார்கள். இந்த அமைப்பு 1931-ம் வருஷத்தில் காங்கிரஸின் ஒழுங்கான ஒரு பகுதியாக ஆகிவிட்டது. எல்லைப்புற மாகாணத்தில் அது காங்கிரஸிற்கு பிரதிநிதியாக விளங்கிற்று. காங்கிரஸ் நேர்முறையான போராட்டத்தைப் பூரணமாய் வாபஸ் வாங்கிக் கொண்டு சட்ட வரம்புக்குட்பட்ட கிளர்ச்சிப் படிக்குக் கீழே வந்துவிட்டபோதிலும், சட்ட மறுப்புக்காக ஏற்பட்ட எல்லா சிறப்பான சட்டங்களையும் அரசாங்கத்தார் அப்படியே வைத்துக் கொண்டார்கள். அது மட்டுமல்லாமல், காங்கிரஸ் அமைப்பின் முக்கியமான சில கிளையமைப்புகளை சட்டமீறியவை என்றும் சொல்லி வந்தார்கள். குடியானவர்கள் இயக்கங்களையும் தொழிலாளர் சங்கங்களையும் அடக்க சிறப்பான கவனம் செலுத்தப்பட்டது. அதே சமயத்தில் ஜமீன்தார்களையும், நிலச்சுவான்களையும் தங்களை வலுப்படுத்திக் கொள்ளுமாறு பெரிய பெரிய சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் உபதேசம் செய்தது குறிப்பிடத்தக்கது. இந்த நிலச்சுவான்களின் அமைப்புகளுக்குத் தேவையான வசதிகள் யாவும் அளிக்கப்பட்டன. ஐக்கிய மாகாணங்களில் இரண்டு பெரிய நிலச்சுவான் சங்கங்களின் சந்தாப் பணத்தை அதிகாரிகள் அரசாங்க கிஸ்தியோடு சேர்த்து வசூல் செய்து கொடுத்தார்கள்.

ஹிந்து அல்லது முஸ்லீம் வகுப்புவாத அமைப்புகளிடத்தில் தனித்தனியே நான் ஒருபொழுதும் பட்சபாதம் காட்டவேயில்லை. ஆனல் ஒரு சம்பவத்தின் மூலமாக எனக்கு ஹிந்து மகா சபையின்பேரில் மிகுதியும் கசப்பு உண்டாயிற்று. செஞ்சட்டையர்கள்பேரில் ஏற்பட்டிருந்த தடை நீடித்திருக்க வேண்டும் என்று ஸர்க்கார் உத்தரவை அங்கீகரித்து ஹிந்து மகாசபையின் காரியதரிசிகளில் ஒரு

வர் வழி தடுமாறிப்போய் சொல்லிவிட்டு அரசாங்கத்தை ஆதரித்தார். போராட்டம் இல்லாத ஒரு காலத்தில் மூலாதாரமான உரிமைகள் பறிமுதல் செய்யப்படுவதைக் காரியதரிசி அங்கீகரித்தது எனக்கு வியப்பாக இருந்தது. கொள்கை ஒரு புறமிருக்க, போராட்டம் நடந்த இந்த வருஷங்களில் எல்லைப்புற மக்கள் அதிசயப்படும்படியாக நேர்த்தியாய் நடந்துகொண்டார்கள். அவர்களுடைய தலைவர் கான் அப்துல் கபார்கான் இந்தியாவிலேயே மிகுந்த தைரியசாலி; கண்யம் மிகுந்தவர். அவர் சிறையிலிருக்கிறார்: அரசாங்கக் கைதி, விசாரணையேயில்லை. இந்த நிலையில் வகுப்புப் பகைமை இதைக்காட்டிலும் அதிகமாகப் போகமுடியாது என்று எனக்குத் தோன்றிற்று. ஹிந்து மகா சபையைச் சேர்ந்த பிரபல தலைவர்கள் தங்கள் தோழரின் இந்தக் கூற்றை விரைவில் மறுப்பார்கள் என்று நான் எதிர்பார்த்தேன். ஆனால் எனக்குத் தெரிந்த வரையிலும் ஒருவராவது ஒரு வார்த்தை கூட சொல்லவில்லை.

ஹிந்து மகா சபை காரியதரிசியின் இந்த அபிப்பிராயத்தைக் கண்டு, நான் மிகுதியும் மனங்கலங்கிப் போனேன். அவர் வெளியிட்ட கருத்து தானாகவே எப்பொழுதுமே கெட்டதாகும். ஆனால் இப்பொழுது அந்தக் கருத்து வெளிவந்தது நாட்டில் தோன்றியிருக்கும் புதிய நிலைமையின் அடையாளமாக அது எனக்குப் பட்டது. கோடைகாலமானதால் மத்தியானம் தூங்கிப்போனேன். அந்தச் சமயம் விநோதமான சொப்பனம் கண்டேன். அப்துல் காபர்கான் நாலா பக்கங்களிலிருந்தும் தாக்கப்படுவதாயும், அவரைக் காப்பதற்காக நான் சண்டை போடுவதாயும் கனவு கண்டேன். கண் விழித்தேன்; உடல் தளர்ச்சி; மனதிலே துயரம்; என்னுடைய தலையணை முழுதும் கண்ணீர் நிரம்பிக் கிடந்தது. இது எனக்கு ஆச்சரியமாக இருந்தது. ஏனெனில் விழித்திருக்கும் எந்த சமயத்திலும் கண்ணீர்ப் பெருக்கு எனக்கு ஏற்பட்டதேயில்லை.

அந்த நாட்களில் எனது நரம்புகள் ரொம்பவும் கெட்டுப் போயிருக்க வேண்டும்; நல்ல தூக்கமில்லை; அடிக்கடி விழித்துக் கொள்வேன். இந்த மாதிரி நேருவது எனக்கு வழக்கமேயில்லை. எல்லா வகை அமுக்குப் பிசாசுகளும் ஒன்று சேர்ந்து என்னிடம் உறவு கொண்டாடின. சில சம

யங்களில் என்னுடைய தூக்கத்தில் உரக்கக்கத்துவேன். ஒரு சமயம் வழக்கத்துக்கு அதிகமாக கூச்சல் போட்டிருப்பேன்போலும்! நான் விழித்துப் பார்த்ததும் என்னுடைய படுக்கைக்குப் பக்கத்தில் சிறை வார்டர்கள் இரண்டு பேர் என்னுடைய கூச்சலைக்கேட்டு கவலையுடன் நிற்பதைக் கண்டேன். நான் கழுத்து முறிக்கப்படுவதாக சொப்பனம் கண்டேன்.

இதே சமயத்தில் காங்கிரஸ் காரியக் கமிட்டியின் தீர்மானம் ஒன்று என் உள்ளத்தில் துன்பத்தை யுண்டாக்கிற்று. தேசத்தில் சிலர், அனுவசியமாக வகுப்புப் போர் நேருமென்றும் தனி நபர்களிடமிருந்து சொத்து பறிமுதல் செய்யப்படுமென்றும் பேசிக் கொண்டுவருகிறார்களாதலால், இந்தத் தீர்மானம் செய்யப்பட்டதாக பீடிகை போட்டுக் கொண்டு, "கராச்சி தீர்மானத்தில் நியாயமான காரணமும், ஈடும் இல்லாமல் சொத்துப் பறிமுதலை நோக்கமாகக் கொள்ளவில்லை. வகுப்புப் போரை ஆதரிக்கவுமில்லை. வகுப்புப் போரும் சொத்துப் பறிமுதலும் காங்கிரஸின் சாத்வீக கொள்கைக்கு விரோதமானதாகும்" என்று கூறப்பட்டது. தீர்மானத்தின் வாசகம் கடுமையானதாக இல்லை. வகுப்புப் போர் இன்னதென்று தெரியாதவர்கள் அந்த தீர்மானத்தின் வார்த்தைகளை அமைத்திருக்க வேண்டும். காங்கிரஸ் அபேதவாதக் கட்சியை மண்டையிலடிப்பதற்காக இந்தத் தீர்மானம் செய்யப்பட்டது என்பது சொல்லாமலே விளங்கும். சொத்துப் பறிமுதல் செய்யப்படுமென்று அபேதவாதக் கட்சியைச் சேர்ந்த பொறுப்பு வாய்ந்த எவரும் சொன்னதே கிடையாது. ஆனால் தற்போதைய நிலைமைகளில் வகுப்புப்போர் நடந்து வருகின்றது என்பது மட்டும் அடிக்கடி அவர்களால் குறிப்பிடப்பட்டு வந்திருக்கிறது. ஆகவே இந்த வகுப்புப்போர் இருந்து வருவதில் நம்பிக்கை கொண்டயாரும் காங்கிரஸின் சாதாரண அங்கத்தினனாகக்கூட இருக்கக் கூடாதென்று காரியக் கமிட்டியின் தீர்மானம் குறிப்பிடுவதுபோலத் தோன்றிற்று. காங்கிரஸ் அபேதவாதமாக மாறிவிட்டதாகவும், அல்லது சொத்து உரிமைக்கு விரோதமாக இருப்பதாகவும் யாரும் அதன் பேரில் பழி சுமத்தினதேயில்லை. காங்கிரஸில் சிலர் இந்த அபிப்பிராயங்களை வைத்துக் கொண்டிருந்தார்கள். அத்தகைய அபிப்பிராயங்களை வைத்துக் கொண்டிருப்பவர்

களுக்கு தேசத்தைப்போல பரந்து கிடக்கும் காங்கிரஸ் அமைப்பிலே இனி இடம் கிடையாது என்று சொல்லுவது போல தோன்றிற்று.

அரசன் முதல் ஆண்டி வரையிலுள்ள எல்லா கூட்டத்தார்களுக்கும் காங்கிரஸ் பிரதிநிதியாக விளங்குகின்றது என்று அடிக்கடி சொல்லப்படுவதுண்டு. தேசிய இயக்கங்கள் யாவும் அடிக்கடி இந்த பாத்தியத்தை கொண்டாடுவதுண்டு. அதாவது தேசத்தில் பெரும் பான்மையோரான மக்களுக்கு அந்த இயக்கங்கள் பிரதிநிதிகளென்றும் அவைகளின் வேலைத் திட்டம் எல்லா மக்களின் நன்மைக்கென்றும் சொல்லப்படுவதுண்டு. ஆனால் இந்த பாத்தியம் அடிப்படையிலேயே செல்லத்தக்கதல்ல. ஏனென்றால் எந்த அரசியல் ஸ்தாபனத்திலும் முரணான கூட்டங்கள் அங்கம் படைத்திருக்க முடியாது. அப்படி இருப்பின் அந்த அமைப்பு வெறும் மொத்தையாய்விடும். சிறப்பான தன்மைகளும், லக்ஷியங்களும் அதனிடம் இருக்கமாட்டா. அரசியலதிகாரத்தை அடைந்து அதைத் தேசநன்மைக்காக உபயோகப்படுத்தும் லக்ஷியமும், முறையும் கொண்ட அரசியல் ஸ்தாபனமாக காங்கிரஸ் இருக்கவேண்டும். அல்லது தனக்கே சொந்த அபிப்பிராயம் யாதுமில்லாத ஒரு ஜீவகாருண்ய அமைப்பாக இருந்துகொண்டு எல்லாரையும் வாழ்த்திக் கொண்டிருக்க வேண்டும். அந்த லக்ஷியத்தையும் முறையையும் பொதுவாக ஏற்றுக் கொள்ளுபவர்களுக்குத்தான் காங்கிரஸ் பிரதிநிதியாய் இருக்கமுடியும். இந்த லக்ஷியங்களை எதிர்ப்பவர்கள் தேச விரோதிகளென்றும், சமூக விரோதிகளென்றும், பிற்போக்காளர்களென்றும் கருதப்பட்டு அவர்களின் செல்வாக்கைக் குறைத்தோ அல்லது ஒழித்தோ தன்னுடைய திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வர காங்கிரஸ் பாடுபடும். சாம்ராஜ்யத்துக்கு விரோதமான ஒரு தேசிய இயக்கத்தில் எல்லாவித கூட்டங்களும் கலந்துகொள்ளலாம் என்பது உண்மை. ஏனெனின் அந்தப் போராட்டத்தில், வகுப்பு விரோதங்கள் கவனிக்கப்பட மாட்டா. எனவே இந்தியாவின் பெரும்பான்மை மக்களுக்கு காங்கிரஸ் ஒவ்வொரு வகையில் பிரதிநிதியாக இருந்து, பரஸ்பரம் முரண் கொண்ட கூட்டங்களையும் தன்னகத்திற்கு இழுத்து ஆங்கில சாம்ராஜ்யத்தோடு போர் தொடுத்தது. இந்தப் போராட்டத்தில்கூட காங்கிரஸிற்குள்ளிருந்த கூட்

டங்களிடையே சில்லரை வித்தியாசங்கள் இருந்தன. சாம்ராஜ்யப்போராட்டக் கொள்கையில் மாறுபட்டு நின்றவர்கள் காங்கிரஸைவிட்டு விலகிப்போய்தங்கள் சக்திக்குத்தக்க அளவு பிரிட்டிஷ் அரசாங்கத்தோடு ஒட்டிக்கொண்டார்கள். எனவே காங்கிரஸ் என்பது சாசுவதமான எல்லாக்கட்சி மகாநாடாக ஆகிவிட்டது. பலதிரப்பட்ட கூட்டங்கள் அதற்குள் இருந்தன. பொதுவான நம்பிக்கையாலும், காந்திஜீயின் நிகரற்ற வல்லமையாலும் அவைகள் கலகலத்துப் போகாமல் பின்னிக் கொண்டு இருந்தன. வகுப்புப்போர் சம்பந்தமாக செய்யப் பட்ட தங்கள் தீர்மானத்தை விளக்கிக் காண்பிக்க காரியக் கமிட்டி பின்னர் முயன்றது. அந்தத் தீர்மானத்தின் முக்கியம் அதனுடைய வாசகத்தால் அமையப் பெறவில்லை. காங்கிரஸ் எந்த வழிபோய்க் கொண்டிருக்கிறது என்பதற்கு அறிகுறியாக அந்தத் தீர்மானம் விளங்கிற்று. வரப்போகும் இந்திய சட்டசபை தேர்தலில்முதலாளிகளின் ஆதரவைப் பெறுவதற்காக காங்கிரஸின் சட்டசபைக் கூட்டத்தின் யோசனைக்கிணங்க அந்தத்தீர்மானம் செய்யப்பெற்றதாகத் தோன்றிற்று. அவர்களுடைய தூண்டுதலின்பேரில் நாட்டிலிருந்த நிதானஸ்தர்கள் யாவரையும் ஒன்றுசேர்க்க காங்கிரஸ் முயன்றது. சட்டமறுப்புக் காலத்தில் காங்கிரஸுக்குவிரோதமாயும் அரசாங்கத்துக்கு சாதகமாயும் இருந்தவர்களுக்குகூட ஆறுதலானவார்த்தைகள் சொல்லப்பட்டன. இத்தகைய ராஜீமன மாற்றவழியில் அபேதவாதிகள் குறுக்கே நிற்பதாக கருதப் பட்டார்கள். தீவிர கட்சியாரின் கடிக்கு பயந்து தங்கள் புதிய பாதையிலிருந்து காங்கிரஸ்நிர்வாகஸ்தர்கள் துளிகூட விலகப்போவதில்லையென்று காரியக் கமிட்டியின் தீர்மானமும், இன்னும் பலருடைய பிரசங்கங்களும் தெளிவுபடுத்திவிட்டன. தீவிரகட்சி சரியான முறையில் நடந்துகொள்ளாவிட்டால், அதன்பேரில் ஏறி உட்கார்ந்து காங்கிரசைவிட்டு ஒதுக்கித் தள்ளப்படும் என்று எச்சரிக்கை செய்யப் பட்டது. காங்கிரஸ் பார்லிமெண்டரி போர்டு விடுத்த அறிக்கையில் காணப்பட்ட திட்டம் மிகவும் நிதான திட்டமாய் இருந்தது; ஜாக்கிரதைத் திட்டமாக இருந்தது. சென்ற பதினைந்து ஆண்டுகளாக இத்தகைய திட்டத்தை காங்கிரஸ் ஆதரித்ததேயில்லை.

காந்திஜீயைத் தவிர காங்கிரஸில் பேர்பெற்ற தலைவர்கள் இருந்தார்கள். விடுதலைப் போராட்டத்தில் மிகவும்

துவண்டவர்கள். யோக்கியப் பொறுப்புக்கும் அச்சமின்மைக்கும் பேர்போனவர்கள். ஆனால் காங்கிரஸின் புதிய திட்டத்தால் காங்கிரஸ் தலைமைப் பதவிக்கு லக்ஷியத்தில் கருத்து உள்ளவர்கள் என்று சொல்லமுடியாத பலர் வந்து சேர்ந்துவிட்டார்கள். காங்கிரஸுக்குள் லக்ஷியப் பற்றுக்கொண்டவர்கள் நூற்றுக் கணக்கில் இருந்தார்கள். ஆனால் இப்பொழுதோ சமயோசித வாதிகளுக்கும், சுயநல வாதிகளுக்கும் முன்னைக்காட்டிலும் அதிகமாக கதவு திறந்து வைக்கப்பட்டுவிட்டது. கட்டுக்கும், கணக்குக்கும் அகப்படாத காந்திஜீ காங்கிரஸில் சர்வாதிகாரம் படைத்திருந்தபோதிலும் காங்கிரஸிற்கு இரண்டு முகங்கள் இருப்பதாகத் தோன்றிற்று. சுத்தமான அரசியல் பகுதி ஒன்று விருத்தியடைந்து கொண்டு வந்தது. இன்னொரு பக்கத்தில் பக்தி நிறைந்த பிரார்த்தனைக் கூட்டம் செழிக்கத் தலைப்பட்டது.

அரசாங்கமோ வெற்றி முரசு கொட்டிக்கொண்டிருந்தார்கள். சட்ட மறுப்பையும் அதன் விளைவுகளையும் அடக்குவதற்காக, தான் கையாண்ட முறை வெற்றியடைந்ததற்குப் பின்னர் தனது வெற்றிப் பார்வையை அது ஏன் மறைத்துக் கொள்ள வேண்டும்? சஸ்திரம் (ஆபரேஷன்) செய்தது பலித்துவிட்டது. நோயாளி பிழைத்தானா செத்தானா என்பதைப்பற்றி அந்த நிமிஷத்தில் எதற்காக கவலைப்படவேண்டும்? காங்கிரசை ஒருவாறு வளைத்துக் கொண்டுவிட்டாலும், தாங்கள் கையாண்ட முறையையே சில்லரைத் திருத்தங்களோடு மீண்டும் கையாள அரசாங்கத்தார் தீர்மானித்தார்கள். காங்கிரஸ் சட்டமறுப்பை வாபஸ் வாங்கிக்கொண்டது தற்காலிகம், என்பது அவர்களுக்குத் தெரியும். அடிப்படையான பிரச்னை தீராத வரையிலும் வாபஸ் என்பது தாற்காலிகமாகத்தான் இருக்க முடியும் என்பது அவர்களுக்குத் தெரியும். ஆகவே அடக்கு முறையைத் தளர்த்திவிட்டால், அதனால் காங்கிரஸ் சீக்கிரமாக வலுவடைந்து விடும் என்றும் அரசாங்கத்தார் எண்ணினார்கள். மேலும் காங்கிரஸிலுள்ள தீவிர கூட்டங்களையும், விவசாய தொழிலாளக் கூட்டங்களையும் அடக்குவதால் காங்கிரஸிலிருக்கும் சில தலைவர்களுக்கு அதிகமாக ஆத்திரம் உண்டாகாது என்றும் அரசாங்கத்தார்கள் எண்ணினார்கள்.

ஓர் அளவில் டேராடூன் சிறையில் என்னுடைய கருத்துகள் இந்தப் போக்குகளில் சென்று கொண்டிருந்தன. நிகழ்ச்சிகளின் போக்கை திட்டமாக நிலைத்து நிதானித்துக் கொள்ளும் படியான நிலைமையில் நான் இல்லை. ஏனென்றால் அவைகளிடம் எனக்கு தொடர்பு விட்டுப் போயிற்று. அலிப்பூரில் எனக்கு அறவே தொடர்பு இல்லை. டேராடூனில் அரசாங்கத்தார் பொறுக்கி யனுப்பிய பத்திரிகையின் மூலமாக ஒரு தலைப்பக்கமாக நிகழ்ச்சிகள் எனக்குத் தெரிந்தன. நான் வெளியே இருக்கும் எனது தோழர்களோடு நிலைமையைக் கூர்ந்து கவனித்திருப்பேனேயாகில், ஓரளவில் என்னுடைய அபிப்பிராயங்களை மாற்றிக் கொள்ளவும் கூடும் என்பதை ஒப்புக் கொள்ளுகிறேன்.

நிகழ் காலத்தைப் பற்றி எனக்கு வருத்தம். எனவே இறந்த காலத்தைப் பற்றி யோசித்தேன். நான் பொது ஜன கிளர்ச்சியில் கலந்து கொண்ட காலமுதல் இந்தியாவில் அரசியல் சம்பந்தமாக நேர்ந்தவைகளைப்பற்றி யோசிக்கலானேன். நாங்கள் செய்ததில் எவ்வளவு தூரம் சரி? எவ்வளவு வரையில் தவறு? நான் யோஜிப்பதை காகிதத்தில் எழுதி வைத்தால், அது ஒழுங்காகவும் ஒத்தாசையாகவும் இருக்குமென்று எனக்குத் தோன்றிற்று. மேலும் இது மனதுக்கு திட்டமான வேலை யொன்றைக் கொடுத்தது போலவும் ஆகும். மனதினின்றும் கவலையும், தொல்லையும் நீங்கலாம். ஆகவே 1934-ம் வருஷம் ஜுன் மாதம் டேராடூன் சிறையில் நான் இந்தச் சுயசரித வரலாறை ஆரம்பித்தேன். எனக்கு எழுதவேண்டும் என்ற மனது ஏற்பட்ட போதெல்லாம் சென்ற எட்டுமாத காலமாக நான் எழுதிக் கொண்டு வந்திருக்கிறேன். சில சந்தர்ப்பங்களில் எழுதவே எனக்கு விருப்பம் இருக்காது. இந்த மாதிரி மூன்று சந்தர்ப்பங்களில், ஒவ்வொரு மாதம் நடுவே எழுதவேயில்லை. என்றாலும் எப்படியோ தொடர்ந்து எழுதிக் கொண்டே போனேன். அநேகமாக சுயசரித்திரத்தின் முடிவுக்கு வந்து விட்டேன். எனக்கு மனதில் துயரமும் சஞ்சலமும் அதிகமாயிருந்த சந்தர்ப்பங்களில், இந்த எழுத்தில் பெரும் பாகமும் எழுதப்பட்டதாகும். எனவே அந்தத் தன்மைகளை ஒருக்கால் என் எழுத்தில் காணவும் கூடும். ஆனால் நிகழ்காலத் தொல்லைகளிலிருந்து என்னை நான் விடுவித்துக்கொள்ள இந்த எழுத்து வேலை எனக்கு மிகுதியும்

ஒத்தாசையாக இருந்தது. நான் எழுதும்பொழுது இதை வெளியார் எவரேனும் படிப்பார் என்ற எண்ணமே கிடையாது. எனக்கு நானே பிரசங்கம் செய்து கொண்டேன், கேள்விகள் போட்டுக் கொண்டேன். என்னுடைய தேர்ச்சிக்காக அவைகளுக்கு நானே விடைகளும் கொடுத்துக் கொண்டேன். இந்த வழியினால் சில சமயங்களில் எனக்கு ஒருவகை இன்பமும் உண்டாயிற்று. கூடுமான வரையில் நேர்மையுடன் யோசிக்க வேண்டுமென்று எண்ணினேன். இந்தப் பழைய நிகழ்ச்சிகளின் வரலாறு அதற்குப் பெரிதும் பயன்படும் என்று எண்ணினேன்.

ஜூலை மாதக் கடைசியில் கமலாவின் நிலைமை மிகவும் மோசமாகப்போய் இரண்டொரு நாட்களில் நெருக்கடிக்கு வந்தது. ஆகஸ்ட் மாதம் 11-ம்தேதி டேரா சிறையிலிருந்து வெளியே போகும்படியாக திடீரென்று என்னிடம் சொன்னார்கள். அதே இரவில் போலீஸ் பந்தோபஸ்துடன் அலகாபாத்துக்கு அனுப்பப்பட்டேன். மறுநாள் சாயங்காலம் பிரயாகை ஸ்டேஷனுக்கு வந்துசேர்ந்தேன். சுகக் கேடாய் இருக்கும் எனது மனைவியை பார்க்கும் பொருட்டு நான் தற்காலிகமாக விடுதலை செய்யப்பட்டிருப்பதாக ஜில்லா மாஜிஸ்டிரேட் என்னிடம் ஸ்டேஷனில் தெரிவித்தார். நான் கைதுசெய்யப்பட்ட நாளிலிருந்து அன்று வரையில் ஒரு நாள் குறைவாக ஆறு மாதமாயிற்று.



பண்டித ஜவஹர்லால் நேருவின் மனைவி காலம் சென்ற
ஸ்ரீமதி கமலா நேரு

## LXV

## பதினேரு நாட்கள்

வாளால் உறை நைந்து போகிறது;
ஆத்மாவால் உடல் நலிந்து போகிறது.

—பைரன்.

எனது விடுதலை தற்காலிகம்தான். டாக்டர்கள் கட்டாயமாக எவ்வளவு வரையிலும் தேவை என்று சொல்லுகிருர்களோ அந்தக் காலத்துக்கோ அல்லது இரண்டொரு நாட்களுக்கு மட்டுமோ எனக்கு விடுதலை என்று எனக்குத் தெரிவிக்கப்பட்டது. அது விநோதமான நிலைமை; நிச்சயம் எதுவுமில்லாத நிலைமை; ஆகவே எதிலும் திட்டமாக அமர்ந்து வேலை செய்ய சாத்தியமில்லாமல் போய் விட்டது. குறிப்பிட்டு ஒரு காலத்தை வரையறுத்து என்னிடம் சொல்லியிருந்தால், நிலைமை எனக்குத் தெளிவாய்ப் போயிருக்கும். அதன்படி காரியத்தை அமைத்துக் கொண்டிருப்பேன். தற்போதய ஏற்பாட்டின்படி நான் எந்த நிமிஷமும் மீண்டும் சிறைக்குக் கொண்டு போகப்படலாம்.

இந்த மாறுதல் திடீரென்று ஏற்படவே, நான் அதற்குத் துளிகூட தயாராக இருக்கவே இல்லை. சற்றுமுன் தனிக்காவல்; இப்பொழுதோ வீடு, உறவினர்கள், டாக்டர்கள், தாதிமார்கள் ஒரே கூட்டம்; சாந்தி நிகேதனத்திலிருந்து என் பெண் இந்திராவும் வந்திருந்தாள். நண்பர்கள் என்னைப் பார்க்கவும், கமலாவின் உடம்பைப்பற்றி விசாரிக்கவும் வந்து கொண்டே இருந்தார்கள். வாழ்க்கைத் தரமும் முற்றிலும் மாறுபட்டு விட்டது. வீட்டு சௌகரியங்களும், உயர்ந்த சாப்பாடும் ஏற்பட்டு விட்டன. இதெல்லாம் ஒருபுற மிருக்கட்டும்; இவைகளுக்குப் பின்னல் ஒரே கவலைமயம்: கமலாவின் உடல் நெருக்கடிக்காக கவலை. அவள் அங்கே படுக்கையில் கிடந்ததால் உடல் மெலிந்து கிடந்தது. முற்றிலும் பலவீனம்; துரும்பு என்று சொல்லலாம். நோயை எதிர்த்துப் போராடிக் கொண்டிருந்தாள்; ஆனல் பலவீனமான போராட்டம்; அவள் என்னை

விட்டுப் பிரிந்து போய்விடுவாளோ என்ற எண்ணம் எனக்குத் தாங்கமுடியாத பெரிய எண்ணமாய்ப் போய்விட்டது. எங்களுக்குக் கலியாணமாகி பதினெட்டரை வருஷங்களாகின்றன. என்னுடைய மனது அந்தக் கலியாண நாளுக்கு மீண்டும் சென்றது. அதன்பின் ஒவ்வொன்ருய் வந்த வருஷங்களைப்பற்றி சிந்தனையுடன் என் மனம் அலைந்து திரிந்து கொண்டிருந்தது. கலியாண காலத்தில் எனக்கு வயது இருபத்தாறு. கமலாவுக்கு பதினேழு நிரம்பவில்லை. வினைத் தெரியாத கன்னிகையாயிருந்தாள். எங்களுக்குள் வயது வித்தியாசம் ஜாஸ்தி; ஆனுல் எங்களுடைய மனோபாவங்களுக்குள் இருந்த வேற்றுமை இன்னும் ஜாஸ்தி. ஏனெனில் நான் அவளைக் காட்டிலும் மிகவும் அதிகமாக வளர்ந்துவிட்டேன். உலகானுபவத் தோற்றத்தோடு நான் காணப்பட்டாலும் நான் ரொம்ப 'சின்னப்பிள்ளை' யாயிருந்தேன். கமலா மெல்லிய, கூச்சமுள்ள கன்னி; அவளைச் சாந்தமாகவும் ஜாக்கிரதையாகவும் வளர்த்து அபிவிருத்திக்குக்கொண்டு வரவேண்டுமென்பதை நான் அப்பொழுது சரிவர உணரவே இல்லை. எங்களுக்கு ஒருவர் மற்றவர் பேரில் வாஞ்சை, நன்ருக ஒருவரோடொருவர் பழகிக்கொண்டோம். ஆனுலும் எங்களுடைய அடிப்படைத்தன்மைகள் மாறு கொண்டவை. ஆகவே முழுதும் ஒட்டிக்கொள்ள முடியவில்லை. சிற்சில சமயங்களில் எங்களுக்குள் 'சச்சரவுகள்' உண்டாகிவிடும். அற்ப விஷயங்களுக்காக இரண்டு குழந்தைகளைப்போல சில்லரைச் சண்டைகள் போட்டுக் கொள்ளுவோம்; நீடித்த சண்டையல்ல; ராஜி உடனே ஏற்பட்டுவிடும். நாங்கள் இருவரும் முன் கோபிகள்; ஒருவாறு தொட்டாற் சுருங்கிகள்; ஒவ்வொருவருக்கும் தனித்தனியே கௌரவம் இருப்பதாயும், அதை அவரவர் காப்பாற்றிக் கொள்ளவேண்டுமென்ற குழந்தை எண்ணமும் எங்களிடம் குடிகொண்டிருந்தது. என்ருலும் எங்களுடைய அன்பு வளர்ந்து வந்தது. ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்து ஒட்டிக்கொள்ளும் பழக்கம் சிறிது சிறிதாகத்தான் வளர்ந்தது. எங்களுக்கு கலியாணமாகி இருபத்தோரு மாதத்திற்குப் பின்னர் எங்கள் ஒரே குழந்தையான (பெண்) இந்திரா தோன்றினுள்.

எங்களுடைய கலியாண காலமும், அரசியலில் மாறுதல்கள் ஏற்பட்ட காலமும் அநேகமாக ஒன்றுதான்.

அரசியல் கிளர்ச்சியில் நான் தலைகால் தெரியாமல் கலந்து கொண்டேன். முதலில் சுயஆட்சிக் கிளர்ச்சி; பின்னர் பஞ்சாபில் ராணுவ அமுல் ஆட்சி; அதற்குப் பிறகு ஒத்துழையாமை. இவைகளால் ஏற்பட்ட கிளர்ச்சிப் புழுதியில் நான் சிக்கிக் கொண்டேன். நான் மிகவும் தீவிரமாக இவைகளில் கலந்துகொண்டமையால், என்னை அறியாமலே நான் கமலாவை கவனிக்காமல் இருந்து விட்டேன். என்னுடைய பூரண உதவி அவளுக்குத் தேவையாயிருந்த அந்தப் பருவத்தில் தன்னந்தனியே அவளை கவனிக்காமல் விட்டு விட்டேன். என்றாலும் எனக்கு அவளிடமிருந்த அன்பு வளர்ந்துகொண்டே இருந்தது. எனக்கு ஆறுதல் அளிப்பதற்காக அவள் எப்பொழுதும் தயாராக இருந்தாள் என்பதைத் தெரிந்துகொண்டதில் எனக்கு ஒருவகையில்ஆறுதல் இனிப்பு உண்டாயிற்று. அவள் எனக்கு வல்லமை தந்தாள். ஆனால் உள்ளூரவே அவள் மிகவும் கஷ்டமடைந்திருக்க வேண்டும். நான் கவனிக்கவில்லையே என்று மனமுருகி இருக்க வேண்டும். இம்மாதிரி அவளிடம் அசட்டையாக இருப்பதைக் காட்டிலும், அவளுக்கு வேண்டுமென்றே ஏதாவாது அன்புக்குறைவான காரியம் செய்திருந்தாலும் அது கூட அவளுக்கு மேலாக இருந்திருக்கும்.

அடுத்தடுத்து அவளுக்கு நோய் வர ஆரம்பித்து விட்டது. எனக்கோ அடுத்தடுத்து சிறைவாசம் ஏற்பட்டது. சிறை பேட்டிகளிலேதான் நாங்கள் ஒருவரையொருவர் காண முடிந்தது. சட்டமறுப்பு இயக்கத்தில் போராடுபவர்களின் முன்னணி வரிசையில் அவள் எப்படியோ வந்து விட்டாள். தானும் சிறைக்குச் சென்றபொழுது அவள் குதூகலமடைந்தாள். எங்களுடைய அபூர்வமான சந்திப்புகள் விலை மதிக்க முடியாதவைகளாக ஆகிவிட்டன. அந்தச் சந்திப்புகளுக்கு ஆவலுடன் காத்திருப்போம். நடுவே குறுக்கிடும் நாட்களை ஒவ்வொன்றாக எண்ணுவோம். ஒருவருக்கொருவர் அலுத்துப்போக முடியவே இல்லை. ஏனெனில் நாங்கள் சந்திக்கும் கால எல்லை மிகவும் அற்பமானது. சந்திக்கும் பொழுதெல்லாம் எங்களிடம் பரஸ்பரம் புதியதொரு தோற்றமும் இளமையும் காணப்பட்டன. ஒவ்வொருவரும் மற்றவரிடத்தில் புதிது புதிதாக குணங்களைக் கண்டு பிடித்துக் கொண்டு வந்தோம். இந்தக் குணங்கள் பரஸ்பரம் இனிப்பைத் தரக் கூடாமல் இருக்கலாம். எங்களுக்குள்

இருந்த வேற்றுமைச் சச்சரவுகளில் கூட சிறுபிள்ளைத் தனம் அதிகமாக இருந்தது.

கலியாணமாகி பதினெட்டு ஆண்டுகள் முடிந்த பின்னரும் அவளுடைய கன்னித்தோற்றம் மாறவே இல்லை. 'அத்தைப்பாட்டித்' தோற்றம் துளிகூட அவளிடம் இருந்ததில்லை. எங்கள் வீட்டுக்கு நெடுநாளைக்குமுன் வந்த மணப்பெண்ணாகவே அவள் காணப்பட்டாள். ஆனால் நானோ அடியோடு மாறிப்போனேன். என் வயதுக்கு அதிகமான சுறுசுறுப்பும், தகுதியும், லாகவமும், (இவைகள் இப்பொழுதும் என்னிடமிருக்கின்றன என்று சொல்லுகிறார்கள்) இருந்தபோதிலும் என்னுடைய பார்வைகள் என்னைக் காட்டிக் கொடுத்துவிட்டன. எனக்கு சிறிதளவு வழுக்கை; தலை நரைத்து விட்டது; முகத்திலே கோடுகளும், சுருக்கங்களும் விழுந்துவிட்டன. சென்ற நான்கு வருஷத்திய கவலைகளாலும் தொல்லைகளாலும் என்னிடம் மிகுதியும் மாறுதல்கள் ஏற்பட்டுவிட்டன. பின்னர், அடிக்கடி நானும் கமலாவும் ஊருக்குப்போனால், அவள் 'உங்கள் மகளா?' என்று நான் திகைத்துப் போகும்படியாக சந்தேசித்து என்னைக் கேட்பார்கள். கமலாவும் இந்திராவும் இரண்டு சகோதரிகளைப்போலக் காணப்பட்டார்கள்.

பதினெட்டு வருஷ இல்லற வாழ்வு! இவைகளில் எத்தனை வருஷம் சிறை அறையிலிருந்திருக்கிறேன்! கமலா எத்தனை ஆஸ்பத்திரிகளிலும், சுக விடுதிகளிலும் இருந்திருக்கிறாள்! நானோ மீண்டும் சிறையில் இருந்துவிட்டு, சிலநாட்களாக வெளியே இருக்கிறேன். அவளோ உயிருக்கு மன்றாடிக்கொண்டு படுகிடையாகக் கிடக்கிறாள். தன்னுடைய உடம்பைப்பற்றி அவள் அலக்ஷியமாக இருந்ததற்காக நான் அவளிடம் கொஞ்சம் ஆத்திரப்பட்டேன். என்றாலும் நான் அவளை எவ்வாறு குறைகூறக் கூடும்? தேசியப் போராட்டத்தில் பூரணமான பங்கு தான் எடுத்துக்கொள்ள முடியவில்லையே என்று அவள் வருந்தினாள். தன்னுடைய அசக்தத்திற்காகவும், வேலைசெய்ய முடியாத நிலைமைக்காகவும் அவள் தன்னையே நொந்து கொண்டாள். ஒன்றும் செய்ய முடியாத நிலைமைக்கு அவளுடைய தேகம் வந்துவிடவே, அவள் ஒழுங்காக வேலையில் இறங்கவும் கூடவில்லை. சிகிச்சை செய்து கொள்ளவும் விருப்பப்படவில்லை. அவளுக்

குள்ளே யிருந்த ஆவல் தீ அவளைத் தின்று கொண்டிருந்தது. அவள் எனக்கு எவ்வாறு தேவை என்பதை இப்பொழுதுதான் நான் உணர்ந்தேன். இந்தச்சந்தர்ப்பத்தில் அவள் என்னைவிட்டுப் பிரிந்து போகலாமா? நாங்கள் ஒருவரையொருவர் இப்பொழுதுதான் நன்ருக தெரிந்து கொள்ள ஆரம்பித்தோம். எங்களுடைய கூட்டு வாழ்வு இப்பொழுது தான் முறையாகத் துவக்கிற்று. நாங்கள் ஒருவரையொருவர் நம்பி இருந்தோம். நாங்கள் சேர்ந்து எவ்வளவோ செய்ய வேண்டும். அவளைப் படுக்கையில் நாழிகைக்கு நாழிகை, நாளுக்குநாள், கவனித்துக்கொண்டே இருக்கையில், இவ்வாறு எல்லாம் சிந்தனைகள் தோன்றின. நண்பர்களும் தோழர்களும் என்னைக் காண வந்தார்கள். எத்தனையோ சங்கதிகள் நேர்ந்ததை அவர்கள் என்னிடம் சொன்ஞர்கள். அவைகள் நேர்ந்தது எனக்குத் தெரியாது. தற்போதய அரசியல் பிரச்னைகளைப்பற்றி என்னிடம் விவாதித்தார்கள்; என்னைக் கேள்விகள் கேட்டார்கள். அவைகளுக்கு பதில் சொல்வது எனக்குக் கஷ்டமாயிருந்தது. கமலாவின் நோயினின்றும் என்னுடைய கவனத்தை வேறு எதிலும் செலுத்த என்ஞல் முடியவில்லை. சிறையில் தனித்து ஒதுங்கிக் கிடந்தமையால் உயிருள்ள பிரச்னைகளுக்கு திடீரென்று உத்தரம் கொடுக்க என்ஞல் முடியவில்லை. சிறையில் கிடைக்கும் சில்லறைச் செய்திகளைக் கொண்டு தேசத்தின் நிலைமையை சீர் தூக்கிப் பார்ப்பது சாத்தியப்படாத சங்கதி என்பது என்னுடைய நீண்ட கால அனுபவமாகும். நிகழ்ச்சிகளில் கலந்துகொண்டு, நிலைமையை சீர் தூக்கிப் பார்த்தாலொழிய, தோழர்களோடு கலந்து பேசி முடிவுக்கு வந்தாலொழிய, எந்த அபிப்பிராயமும் வெறும் மலட்டு அபிப்பிராயமாகத்தானிருக்கும். அதற்கும் உண்மைக்கும் சம்பந்தமிருக்க முடியாது. காந்திஜீயையும், காங்கிரஸ் காரியக் கமிட்டியின் எனது பழய தோழர்களையும் கலந்து பேசுவதற்குமுன் காங்கிரஸின் போக்கைப்பற்றி எதையும் திட்டமாகச் சொல்லுவது அவர்களிடம் ஒருமையுடன் நடந்து கொள்வதாக ஆகாது. செய்த காரியங்களைப்பற்றி நான் ஏராளமாகக் குறை கூறினேன். ஆஞல் உருப்படியான யோசனைகள் எதையும் கூற நான் தயாராக இல்லை. சிறையிலிருந்து அப்பொழுது விடுபடுவேன் என்று சூசனையே எனக்குக் கிடையாது. ஆகவே உருப்படியான யோசனைகளைப்பற்றி சிந்தனை செய்யவே இல்லை. என்னுடைய மனைவி

யைப் பார்த்து அவள் பக்கத்திலிருக்க சர்க்கார் எனக்கு அனுமதி கொடுத்தார்கள். அவர்கள் காண்பித்த மரியாதையை நான் காப்பாற்ற வேண்டும். எனவே, இந்தக் காலத்தை அரசியல் வேலைகளுக்காக செலவிடத் துணிவது தகாதகாரியம் என்று நான் எண்ணினேன். இத்தகைய அலுவல்களில்நான் தலையிடுவதில்லையென்று அரசாங்கத்தாருக்கு எவ்வித உறுதியும், ஒப்பந்தமும் செய்து கொடுத்ததில்லை; என்றாலும் மேற்கூறிய எண்ணம் என்னைவிட்டு அகன்றதே இல்லை.

தவறான வதந்திகளை மறுப்பதற்காக அல்லாமல், பகிரங்கமாக எத்தகைய அறிக்கையையும் நான் வெளியிடவில்லை. நண்பர்களுடன் அந்தரங்கமாகப் பேசிக்கொண்டிருக்கையில்கூட திட்டமாக எதையும் நான் சொன்னதில்லை. ஆனால் கடந்த காலத்தில் நேர்ந்த சம்பவங்களைப் பற்றி கூசாமல் தாராளமாக ஆராய்ச்சி செய்து விமர்சனம் செய்தேன். காங்கிரஸ் அபேதவாதக் கட்சி அப்பொழுதுதான் உருவெடுத்துத் தோன்றிற்று. என்னுடன் நெருங்கிப் பழகிய தோழர்களில் பலர் அந்தக் கட்சியில் இருந்தார்கள். நான் அவர்களிடமிருந்து கிரகித்துக்கொண்ட வரையிலும், அவர்களுடைய பொது நோக்கத்தில் எனக்கு உடன்பாடுதான். ஆனால் அந்தக் கட்சியோ ஒருவினோதமான மிசிரமான (பல ரகங்கள் அமைந்த) கூட்டமாயிருந்தது. நான் சிறையிலில்லாமல் வெளியே இருந்திருந்தாலும்கூட, திடீரென்று அந்தக் கூட்டத்தில் சேர்ந்திருக்கமாட்டேன். சில்லரை அரசியல் தகவல்களும் எனது கவனத்தை இழுத்தன. ஏனென்றால் அலகபாத்திலும், ஏனைய இடங்களிலும் காங்கிரஸ் கமிட்டிகளின் தேர்தல் காலங்களில் அனாவசியமான கசப்பும் பகைமையும் பிரசாரத்தில் காண்பிக்கப்பட்டன. கொள்கையைப் பற்றிய வேற்றுமை அல்ல; ஆள்களைப்பற்றிய மனஸ்தாபம் இத்தகைய மனஸ்தாபங்களைத் தீர்த்து வைப்பதற்காக என்னுடைய உதவியை நாடினார்கள்.

இந்தச் சங்கதிகளில் பிரவேசிக்க எனக்கு துளிகூட விருப்பமே கிடையாது. மேலும் போதிய நேரமும் இல்லை. என்றாலும் நிகழ்ச்சிகளில் சில எனது பார்வைக்கு வந்தன. அவைகளினால் நான் மிகவும் துயரமடைந்தேன். ஸ்தல காங்கிரஸ் தேர்தல்களில் ஜனங்கள் மதிமயங்கிப் போய் சச்சர

விடுவது எனக்கு ஆச்சரியமாக இருந்தது. சொந்தகாரணங்களின் பொருட்டு, சென்ற போராட்டத்திலிருந்து விலகி நின்றவர்களே பெரும்பாலும் இப்பொழுது தேர்தலில் ஆரவாரம் செய்தனர். சட்ட மறுப்பு வாபஸ் வாங்கப்பட்ட உடனே, மேற்சொன்ன சொந்தக் காரணங்கள் மறைந்து போய்விட்டன. எனவே அவர்கள் திடீரென்று முன்னுக்கு வந்து, நாக்கிலே நரம்பில்லாமல் கடுமையாகவும், கேவலமாகவும் ஒருவரையொருவர் தாக்கிப் பிரசாரம் செய்தார்கள். ஒருகட்சி மற்ற கட்சியை அமுக்கவேண்டுமென்ற வெறியிலே சாதாரண நாகரிக கோட்பாடுகளைக்கூட அவர்கள் மறந்து போனதுதான் மிகவும் ஆச்சரியமாக இருந்தது. இந்த ஸ்தல தேர்தல்களுக்காக கமலாவின் பெயரும், அவளுடையநோயும் இழுக்கப்பட்டது எனக்கு ஆருத்துயரை அளித்தது.

ஏனைய பிரச்னைகளைப் பற்றியும் தோழர்களுடன் நான் கலந்து பேசினேன். இந்தியா சட்ட சபைத் தேர்தலில் காங்கிரஸ் கலந்துகொள்ளவேண்டும் என்று தீர்மானம் செய்ததைப் பற்றியும் சம்பாஷணை நடைபெற்றது. இளைஞர் கூட்டத்தில் பலர் இந்த முடிவை எதிர்த்தார்கள். இந்த முறைவெறும் சட்டவரம்புக்குட்பட்ட அரசியல் கிளர்ச்சித் திட்டம் என்பது அவர்களுடைய எண்ணம். ஆனால் இதற்கு மாற்றாக அவர்களால் எதையும் குறிப்பிடமுடியவில்லை. காங்கிரஸ் இல்லாமல், வேறு ஸ்தாபனங்கள் தேர்தல்களில் கலந்துகொள்வதைப் பற்றி இந்த ஆக்ஷேபணைக்காரர்களுக்கு யாதொருஆக்ஷேபணையுமிருக்கவில்லை.ஆக்ஷேபணை இல்லாதது உயர்ந்த கொள்கையைப் பொருத்தது என்றார்கள். ஆனால் வகுப்புவாத அமைப்புகளுக்கு அரங்கத்தை பூராவும் விட்டுவிடவேண்டுமென்பது அவர்களுடைய நோக்கம் போலும்!

ஸ்தல சச்சரவுகளிலும், புதிய அரசியல் போக்கைக் கண்டும்நான் வெறுப்படைந்தேன். அவைகளின் சுருதி எனக்குச் சேரவில்லை. இத்தகைய விஷயங்களை கவனிக்கும்படியான காலம் எனக்கு ஏற்படுமாகில், இந்தச் சச்சரவுக்கிடையே என்னால் என்ன செய்யமுடியுமென்று எண்ணி ஆச்சரியப்படலானேன். கமலாவின் நிலைமையைப் பற்றி நான் காந்திஜீக்கு எழுதினேன். மீண்டும் நான்சிறைக்குப் போகக்கூடுமென்றும், எனக்கு வேறு சந்தர்ப்பம் கிடைக்காதென்றும் நான் கருதியதால், நான் ஒருவாறு எனது உள்ளத்தை வெளியிட்டு

அவருக்கு எழுதினேன். சமீபத்தில் நடந்த நிகழ்ச்சிகளால் நான் மிகுதியும் கசப்பும் துயரமும் அடைந்தேன். இவைகளினுடைய சாயை கடிதத்தில் சிறிதளவு இருந்தது. என்ன செய்யப்படவேண்டும் அல்லது என்னசெய்யப்படவேண்டாமென்பதைப்பற்றி நான் ஒன்றுமே எழுதவில்லை. நேர்ந்த சம்பவங்களினல் என் மனம் எவ்வாறு அல்லல்பட்டு உழன்று கொண்டிருந்தது என்பதை மட்டுமே காந்திஜிக்குத் தெரிவிக்க முயன்றேன். அடக்கினதும், அடக்காததுமான மனக் கொதிப்பு அந்தக் கடிதத்தில் நிறைந்திருந்தது. இந்தக் கடிதத்தைக் கண்டு காந்திஜீ மிகுதியும் வருத்தப்பட்டார் என்று பின்னர் எனக்குத் தெரிய வந்தது.

நாட்கள் ஒவ்வொன்ருகக் கழிந்தன. மீண்டும் சிறைக்கு உத்தரவை எதிர்பார்த்தேன்; அல்லது ஏதேனும் ஒரு செய்தியை அரசாங்கத்தாரிடமிருந்து எதிர்பார்த்தேன். மறுநாள், அல்லது அதற்கடுத்த நாள் புதிய உத்தரவுகள் பிறப்பிக்கப் படுமென்று எனக்கு அறிவிக்கப்பட்டது. என்னுடைய மனைவியின் உடல்நிலையைப்பற்றி தினசரி அறிக்கையை அரசாங்கத்தாருக்கு அனுப்புமாறு டாக்டர்கள் கேட்டுக்கொள்ளப்பட்டார்கள். நான் வந்த பிறகு கமலாவிற்கு உடம்பு கொஞ்சம் குணமடைந்து வந்தது. சாக்காரின் நம்பிக்கைக்குப் பாத்திரமாயிருந்தவர்கள் ஒரு சேதி சொன்னர்கள். நான் பூரண விடுதலையை அடைந்திருக்கக்கூடுமாம்; ஆனல் அதற்கு இடையூருக இரண்டு சம்பவங்கள் குறுக்கிட்டுவிட்டனவாம். பம்பாயில் அக்டோபர் மாதம் நடக்கப் போகிற காங்கிரஸ் முதல் இடையூறும். நவம்பர் மாதத்தில் வரவிருந்த சட்டசபைத் தேர்தல்கள் மற்ருென்றும். இவைகள் நேரும் பொழுது நான் சிறையை விட்டு வெளியே இருந்தால் அது அரசாங்கத்துக்கு சங்கடமாயிருக்குமாம். எனவே மீண்டும் என்னைச் சிறைக்கு அனுப்பி மூன்று மாதம் வைத்திருந்து பின்னர் விடுதலை செய்யக்கூடும் என்று அவர்கள் ஹேஷ்யம் சொன்னர்கள். ஒருக்கால் என்னை சிறைக்கு அனுப்பாமலும் இருக்கலாமென்று எனக்குத் தோன்றிற்று. விடுதலையுடன் இருக்கும் நாட்கள் அதிகரிக்க அதிகரிக்க, இந்த எண்ணம் வளர்ந்து கொண்டே வந்தது. காலத்தை முறையாகச் செலவிடுவதற்கு ஏற்பாடுகள் செய்து கொண்டிருந்தேன். ஆகஸ்டு மாதம் 23-ம் தேதி விடுதலையாகி பதினேருவது நாள் போலீஸ் மோட்டார் வண்டி வந்து நின்

றது. போலீஸ் உத்தியோகஸ்தர் என்னிடம் வந்தார். 'காலம் முடிந்துவிட்டது; நைனி சிறைக்குப் புறப்படுங்கள்' என்று சொன்னார். என்னுடைய உறவினர்களிடம் விடைபெற்றுக் கொண்டேன். நான் போலீஸ் வண்டியில் ஏறிக் கொண்டிருக் கையில் கைகளை நீட்டிக் கொண்டு சௌக்கியமில்லாத என் தாயார் என்னிடம் ஓடிவந்தார். அவருடைய அப்போதைய முகம் என் மனதை விட்டு நீண்ட காலம் அகலவே இல்லை.

# LXVI

## மீண்டும் சிறைவாசம்

"நிழல் அதன் போக்கிலேயே வளர்ந்து கொண்டு போகிறது; சூரிய வெப்பமோ அதன் தன்மைக் கேற்ற வாறு சிறு தூளியாய்த் திகழ்கின்றது. ஆனால் அதை நிழல் எப்பொழுதும் பன்னூறு மடங்காக தூரத்திக் கொண்டு திரிகிறது. அது போல, துன்பம் இன்பத்தி னின்றும் தனித்து நிற்கும் பொருளாகும். எல்லையில் லாத துன்பங்களின் தொந்தரவுகளாலும் தாக்குதல் களாலும் இன்பம் சுருங்கி நிற்கின்றது"

—ராஜதரங்கிணி.

மீண்டும் நைனி சிறைக்கு வந்தேன். புதிதாக மறுபடியும் சிறைவாசத்தை ஆரம்பிப்பதாக எனக்குத் தோன்றிற்று. உள்ளே இருந்து வெளியே; வெளியேயிருந்து மீண்டும் உள்ளே. இது என்ன பந்தாட்டம்! இத்தகைய மாறுதல்கள் என்னுடைய உணர்ச்சி நிலையையே அடியோடு அசைத்து விட்டன. இத்தகைய மாறுதல்களுடன் எளிதிலே ஒத்துப் போகவும் முடியவில்லை. ஏற்கனவே நீண்ட காலம் நான் இருந்த அறையில் இப்பொழுது வைக்கப்படுவேன் என்று நான் எதிர்பார்த்துச் சென்றேன். என்னுடைய மைத்துனர் ரஞ்சித பண்டிட் ஏற்கனவே பயிர் செய்த மலர்கள் பல அங்கே இருந்தன. அறைக்குப் பக்கத்தில் நல்ல தாழ்வாரமொன்றும் இருந்தது. ஆனால் இந்தப் பழைய 6 ரெ. விதிக்கு அரசாங்கக் கைதி ஒருவர் வந்து சேர்ந்து விட்டார். அவருக்கு விசாரணை கிடையாது; தண்டனையுமில்லை. நான் அவரோடு சேர்ந்திருப்பது உசிதமல்லவென்று கருதப்பட்டது. எனவே என்னை சிறையின் வேறொரு பக்கத்தில் வைத்தார்கள். அது ஒரே மூட்டம்; பசுமை கிடையாது; மலர்களுமில்லை. ஆனால் என்னுடைய காலத்தைக் கழித்த இடத்தைப்பற்றி எனக்குக் கவலையேயில்லை. ஏனென்றால் என்னுடைய மனம் வேறெங்கேயோ இருந்தது. கமலாவின் உடம்பு குணமாகிக் கொண்டு வந்ததில், மீண்டும் எனது சிறைவாச அதிர்ச்சியினால் கெட்டுப் போகுமென்று

பயப்பட்டேன். நான் எண்ணியபடியே நேர்ந்தது. டாக்டரின் தினசரி அறிக்கை சிறையில் எனக்கு வந்து சேருமாறு சில நாட்களுக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. இந்த அறிக்கை 'கோணக் கோண கோவிந்தா' மார்க்கமாக எனக்கு வந்து சேரும். போலீஸ் தலைமை காரியாலயத்திற்கு டாக்டர் டெலிபோன் செய்ய வேண்டும். போலீஸார் அதைச் சிறைக்கு அனுப்பி வைப்பார்கள். டாக்டர்களுக்கும், சிறை சிப்பந்திகளுக்கும் நேர் சம்பந்தம் இருப்பது உசிதமல்லவென்று கருதப்பட்டது போலும்! ஏதோ ஒவ்வொன்றாக, இந்த அறிக்கைகள் இரண்டு வாரங்கள் எனக்குக் கிடைத்தன. கமலாவின் நிலைமை கேவலமாகிவந்த போதிலுத் இந்த அறிக்கைகள் இரண்டு வாரங்களுக்குப்பிறகு நிறுத்தப்பட்டன.

கெட்ட செய்தியாலும் செய்திக்காகக் காத்திருப்பதாலும் பகல் பொழுது கழிவது மிகவும் கஷ்டமாகத் தோன்றிற்று. இரவைப்பற்றி சொல்லத் தேவையில்லை. காலம் நகர மறுத்து விட்டதாகத் தோன்றிற்று; அல்லது மிகவும் மெதுவாக ஊர்ந்து சென்றதாகத் தோன்றிற்று. ஒவ்வொரு மணிநேரமும் சுமையாகவும் பயங்கரமாகவுமிருந்தது. இத்தகைய கூர்மையான அளவில் இத்தகைய உணர்ச்சி என்னிடம் ஒரு பொழுதும் இருந்ததே இல்லை. பம்பாய் காங்கிரஸ் நடந்தேறியதற்குப் பிறகு, அதாவது இரண்டு மாதங்களுக்குப்பின் என்னை அநேகமாக விடுதலைசெய்து விடுவார்களென்று எண்ணினேன். ஆனால் அந்த இரண்டு மாதங்களும் யுகமாகத் தோன்றிற்று. மறுபடியும் சரியாக ஒரு மாதத்திற்குப் பிறகு போலீஸ் உத்தியோகஸ்தர் ஒருவர் என்னைச் சிறையிலிருந்து கமலாவைப் பார்க்க அழைத்துச் சென்றார். என்னுடைய மனைவியை இவ்வாறு பார்க்க வாரமிருமுறை அனுமதிக்கப்படுவேன் என்று அவர் என்னிடம் சொன்னார். இதற்காக நேரம் முதற்கொண்டு குறிப்பிடப்பட்டது. நாலாம்நாள் காத்துப் பார்த்தேன். எனக்காக யாரும் வரவில்லை. ஐந்தாவது, ஆறாவது, ஏழாவது நாளும் அப்படியே காத்துக் காத்து அலுத்துப்போனேன். அவளுடைய நிலைமை மறுபடியும் நெருக்கடிக்கு வந்துவிட்டதென்று எனக்குச் செய்தி கிடைத்தது. வாரமிருமுறை அவளைக் காண நான் அழைத்துச் செல்லப்படுவேன் என்று சொன்னது குறும்புத்தனம் என்று நான் எண்ணினேன்,

கடைசியாக செப்டம்பர் மாதமும் முடிந்தது. இந்த முப்பது நாட்கள்தான் எனது வாழ்விலேயே மிகவும் நீளமாகத் தோன்றின காலமாகும்; மிகவும் துன்பத்தைக் கொடுத்த காலமுமாகும்.

என்னுடைய சிறைக்காலம் முடியும்வரையில் அரசியலிலிருந்து ஒதுங்கி நிற்பதாக பொதுவாக நான் வாக்குறுதி கொடுத்தால், கமலாவின் பக்கத்தில் இருக்கும்படியாக விடுதலை செய்யப்படுவேனென்று பலர் மூலமாக எனக்கு யோசனைகள் சொல்லப்பட்டன. அந்தச் சமயத்தில் எனக்கு அரசியல் நினைப்பே கிடையாது. நான் வெளியே இருந்த பதினொரு நாட்களில் நான் கண்ட அரசியல் கிளர்ச்சி எனக்கு மிகுதியும் வெறுப்பைக் கொடுத்தது. ஆனால் உறுதிகொடுப்பதா! என்னுடைய கொள்கைக்கும்,இயக்கத்துக்கும்,தோழர்களுக்கும், எனக்கும்துரோகமாய் நடந்துகொள்வதா?என்ன நேர்ந்தாலும் அது சாத்தியப்படாத சங்கதி. அவ்வாறு செய்தால், நான் எதெதை புனிதமாகக் கொண்டிருக்கின்றேனே அதைச் சிதைத்து பங்கப்படுத்துவதாகும். என்னுடைய வாழ்க்கையின் ஆணி வேர்களுக்கு தீங்கு உண்டாக்குவதாகும். கமலாவின் நிலைமை கேவலமாகிக்கொண்டு வருகிறதென்றும், நான் பக்கத்திலிருந்தால், அதனால் சாவுக்கும் வாழ்விற்கும் உள்ள வித்தியாசம் ஏற்படுமென்றும் என்னிடம் சொன்னார்கள். இத்தகைய அரிய சந்தர்ப்பத்தை அவளுக்காக அளிப்பதைக் காட்டிலும் என்னுடைய சொந்த பெருமையும் அகம்பாவமும் உயர்ந்ததா? அது ஒரு பயங்கரமான அவஸ்தையாக எனக்கு இருந்திருக்கும். ஆனால் நல்ல வேளையாக தர்மசங்கடம்அந்த வகையில் எனக்கு ஏற்படவில்லை. நான் எவ்வித ஒப்பந்தம் கொடுப்பதையும் கமலாவே அழுத்தமாக ஆக்ஷேபிப்பாள் என்றும், அவ்வாறு ஏதேனும் செய்துவிட்டால் அது அவளைத் தாக்கி அவளுக்குத் தீங்கை இழைக்கும் என்றும் எனக்குத் தெரியும்.

அக்டோபர் மாதத் துவக்கத்தில்,அவளைப் பார்க்க மறுபடியும் அழைத்துச் செல்லப்பட்டேன். கடுமையான காய்ச்சல்; ஸ்மரணையின்றி கிடந்தாள். நான் பக்கத்திலேயே இருக்கவேண்டுமென்பது அவளுடைய ஆவல். ஆனால் அவளை விட்டு மீண்டும் சிறைக்குச் செல்லும் சமயத்தில் அவள் என்னைப் பார்த்து தைரியமாக புன்சிரிப்புச் சிரித்

தாள். நான் கீழே குனிய வேண்டுமென்று ஜாடை காட்டினாள். நான் குனிந்ததும், "அரசாங்கத்துக்கு நீங்கள் உறுதி கொடுக்கப் போவதாகச் சொல்லிக் கொள்ளுகிறார்களே அதென்ன? உறுதி கொடுக்க வேண்டாம்' என்று காதோடு காதாய்ச் சொன்னாள்.

சிறையைவிட்டு வெளியே இருந்த பதினொரு நாட்களில் கமலா சற்று குணமடைந்ததும் அவளை சிகிச்சைக்காக வேறு தகுதியான இடத்திற்கு அனுப்பவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது. அதுமுதல் அவள் குணமடைவாள் குணமடைவாள் என்று காத்துக்கொண்டிருந்தோம். அதற்குப் பதிலாக அவள் இறங்கிக் கொண்டே வந்தாள். இப்பொழுதோ, ஆறு வாரங்களுக்குப் பிறகு, இன்னும் கேவலமான நிலைமை அவள் உடம்பில் காணப்பட்டது. ஆகவே காத்துப் பயனில்லையென்று கண்டோம். அவளுடைய தற்போதைய நிலையிலேயே, குன்றுகளிலிருந்த போவாலிக்கு அவளை அனுப்புவதென்று தீர்மானிக்கப்பட்டது. அவள் போவாலிக்கு புறப்படுவதற்கு முதல் நாளன்று, அவளுக்கு விடை கொடுத்தனுப்புவதற்காக நான் சிறையிலிருந்து அழைத்துச் செல்லப்பட்டேன். பிறகு அவளை நான் எப்பொழுது பார்க்கப்போகிறேன் என்று எண்ணினேன். உண்மையிலேயே பார்ப்பேனா? அன்றைக்கு மிகுந்த உற்சாகத்துடன் இருப்பதாக அவள் காணப்பட்டாள். நீண்ட காலமாக இருந்ததைக் காட்டிலும் அன்றைக்கு நான் அதிக மகிழ்ச்சியுடனிருந்தேன்:

சுமார் மூன்று வாரங்களுக்குப் பின்னர் நைனி சிறையிலிருந்து அல்மோரா ஜில்லா சிறைக்கு மாற்றப்பட்டேன். கமலாவுக்கு அருகாமையில் இருப்பதற்காக; போவாலி நடுவழியே இருக்கிறது. நானும் எனது பந்தோபஸ்து போலீஸ் அதிகாரியும் போவாலியில் சில நாழிகைகள் தங்கி இருந்தோம். கமலாவின் உடம்பு குணப்பட்டு வருவதைக்கண்டு நான் பெருமகிழ்ச்சி யடைந்தேன். அவளைவிட்டு அல்மோராவிற்குப் போகும்பொழுது நான் கலகலப்பான உள்ளத்துடன் சென்றேன். உள்ளபடியே, நான் அவளைப் பார்ப்பதற்கு முன்னதாகவே மலைகளின் அற்புதக் காட்சி எனக்குள் ஆனந்தத்தை நிரப்பி விட்டது.

இந்தப் பர்வதங்களுக்கிடையே மீண்டும் இருப்பதைக் கண்டு, நான் சந்தோஷமடைந்தேன். சுற்றிச்சுற்றிச் செல்லும்

பாதையில் எங்களுடைய மோட்டார் கார் போகும்பொழுது காலையில் குளிர்ந்த காற்று வீசிற்று. மலர்ந்து வரும் ஒளியில் எழுந்த காட்சித் தோற்றம் உற்சாகத்தை உண்டாக்கிற்று. உயர உயர போய்க் கொண்டே இருந்தோம். சந்து வெளிகள் ஆழமாகத் தோன்றின. சிகரங்கள் மேகங்களில் மறைந்து கொண்டன. ஸ்தாவர ராசிகள் மாறிப் போயின. குன்றுப்பக்கங்களில் பைன் தேவதாரு மரங்கள் நிறைந்திருந்தன. பாதை ஒரு பக்கத்தில் திரும்பும்; திடீரென்று புதிய குன்றுகளும் பள்ளத்தாக்குகளும் தோன்றும். இடையே சலசலவென்று ஓடும் அருவியின் சத்தமும் கேட்கும். தெவிட்டாத காட்சி! என்னுடைய ஆசையைப் பூர்த்தி செய்து கொள்ள முடியவில்லை. அவைகளைக் காட்சிப் பசியோடு பார்த்தேன். அவைகளை மனதில் நிறைத்துக் கொண்டேன். அவைகளை நேரே பார்க்க முடியாத காலத்தில், மனதிற்குக் கொண்டுவந்து ஆனந்தப்படலா மல்லவா?

குன்றுகளின் பக்கங்களில் சிறிய சிறிய மலைக்குடிசைகள் கட்டப்பட்டிருந்தன. அவைகளைச் சுற்றி சிறு சிறு கழனிகள். அகப்பட்ட சரிவுகளிலெல்லாம் ஏராளமாய் வேலை செய்து கழனிகள் ஆக்கப்பட்டிருந்தன. தூரத்திலிருந்து பார்த்தால், அவைகள் படிக்கட்டுகளைப் போலத் தோன்றின. கீழே யிருக்கும் பள்ளத்தாக்குகளிலிருந்து மலை உச்சி வரைக்கும் கட்டிவிடப்பட்டிருக்கும் பெரிய படிக்கட்டுகளாக அவைகள் தோன்றின. இங்கே ஜனங்களோ கம்மி; அவர்களுக்குக்கூட சிறிதளவு உணவிற்காக எவ்வளவு அரும்பாடு படவேண்டியிருக்கிறது! அவர்களுடையதேவைக்குப் போதுமானதைப் பெறுவதற்காக அவர்கள் சலிப்பில்லாமல் எப்படி உழைக்க வேண்டி யிருக்கிறது! உழப்பட்ட அந்தப் படிக்கட்டுகள் குன்றுகளின் பேரில் மனிதன் கொண்ட ஆதிக்கத்தை நிரூபத்தின. மரமடர்ந்த சரிவுகளும், புல் பச்சையேயில்லாத சரிவுகளும் மேற்சொன்ன கழனிகளுக்கு எவ்வளவு விநோத முரணாகக் காணப்படுகின்றன.

பகலில் மிகவும் இன்பமாயிருந்தது. சூரியன் மேலே ஏறஏற, சூடும் மலைகளுக்கு ஒருவித உயிரைக்கொண்டு வந்து கொடுத்தது. அப்பொழுது அவைகள் தங்களுடைய ஒதுக்கத்தை விட்டுவிட்டு மனிதர்களுடன் நேசப் பான்மையோடு தோழமை பாராட்டுவது போலத் தோன்றின. ஆனால்

பொழுது சாயச்சாய மலைகள் தங்கள் தோற்றத்தை மாற்றிக் கொள்ளுகின்றன. இரவு தனது அசுர நடையோடு உலகத்தில் பவனி வரும் பொழுது மலைகள் எவ்வளவு பயங்கரமாயும் குளிராயும் ஆகிவிடுகின்றன! அந்தச் சமயத்தில் உயிர் மறைந்து ஒளிந்து தன்னைத்தானே காப்பாற்றிக் கொண்டு, எதேச்சையான இயற்கையை அதன் வழிக்கு விட்டு விடுகிறது. சந்திர ஒளியினாலும், நக்ஷத்திர ஒளியினாலும் ஏற்படும் அறைகுறை இருளிலே மலைகள் பயமுறுத்துவதாகவும், அபாரமாகவும், மூடமந்திரமாகவும் தோன்றுகின்றன! பள்ளத்தாக்கிடையே யிருந்து காற்றின் அழுகைக் குரல் கேட்கும். தனிவழிப் பாதை நடக்கும் பிரயாணி மெய் நடுங்குகின்றான். எல்லாம் தனக்கு விரோதமாக இருப்பதாக எண்ணிக் கொள்ளுகிறான். காற்றின் குரல்கூட அவனை ஏளனம் செய்து சண்டைக் கிழுப்பது போலத் தோன்றுகிறது. வேறு பல சமயங்களில் காற்றசைவோ, வேறு எந்தச் சத்தமோ இருப்பதில்லை. பூரணமான நிசப்தம்; அதனுடைய கொடுமை சகிக்க முடிவதில்லை. தந்திக் கம்பிகள் மட்டும் லேசாக சத்தமிடுகின்றன. நக்ஷத்திரங்கள் அதிகமான பிரகாசத்துடன் ஒளி வீசுவதாகத் தோன்றுகின்றன. அவைகள் முன்னைக் காட்டிலும் கிட்ட இருப்பதாகத் தோன்றுகின்றன. மலைகளோ பயங்கரத் தோற்றத்துடன் கீழே நோக்குகின்றன. பயமுறுத்தும் ரகசியத்திற்கு எதிரே தான் நிற்பதாக மனிதனுக்குத் தோன்றும். பள்ளத்தாக்குகளில் இரவுகளில் ஒரு பொழுதும் இப்படி சத்தமில்லாமல் இருப்பதில்லை. அங்கே உயிரை சத்தமாகக் கேட்கலாம். விலங்குகள் சத்தமிடுவதாலும் "பூச்சி புட்டுகள்" முணுமுணுப்பதாலும் இரவின் மௌனம் குலைக்கப்படுகின்றது.

அல்மோராவுக்குப் போகையில் இன்னும் பொழுது சாயவில்லை. குளிரும் வரவில்லை. எங்கள் பிரயாணம் முடிவடைகிற தருணத்தில் பாதை திரும்பிற்று. மேகங்களும் மறைந்தன. புதிய காட்சி யொன்று தோன்றிற்று. அடங்காத ஆனந்தத்துடன் அதை நான் கண்டு களித்தேன். இமய மலையின் பனி மூட்டம் கொண்ட சிகரங்கள் எட்டத்தில் ஜொலித்துக் கொண்டு நின்றன. அவைகளுக்கும் எங்களுக்கும் நடுவே மரங்களடர்ந்த காட்டுமலைப் பிரதேசங்கள். சிகரங்கள் சாந்தமயமாயும் ரகசியம் விள்ள முடியாததாயும் தோன்றின. அவைகளிடம் கடந்த யுகங்களின் ஞானம்

ஜொலித்துக் கொண்டிருப்பதாகத் தோன்றிற்று. பரந்து கிடக்கும் இந்தியப் பள்ளத்தாக்குக்கு சூரர்களான காவலாளிகளைப் போல் அவைகள் காணப்பட்டன. அவைகளைக் கண்டவுடனே மூளையிலிருந்த கொதிப்பு குளர்ந்து போய்விட்டது. சில்லறைச் சச்சரவுகளும் சூதுகளும், பள்ளத்தாக்குகளின் வெறிகளும் பொய்களும் இவைகளுடைய சாச்வதமான வாழ்க்கைக்கு முன்னே மிகவும் அற்பமாகத் தோன்றின.

அல்மோராவின் சிறிய சிறை ஒரு சரிவில் தொங்கிக் கொண்டிருந்தது. அதிலே எனக்கு விஸ்தாரமான விடுதியொன்று அளிக்கப்பட்டது. ஒரு பெரிய மண்டபம்; 51 அடி நீளம்; 11 அடி அகலம்; மட்டப்படுத்தப்படாத தரை; செல்லரித்த கூரை; அது சிறு சிறு தூள்களாக விடாமல் விழுந்துகொண்டே இருந்தது. பதினைந்து ஜன்னல்கள்; ஒரு கதவு; சுவர் அத்தனையும் துளைகள் என்று சொல்லவேண்டும். எனவே நல்ல காற்றுக்குப் பஞ்சமே ஏற்படவில்லை. அதிகமாகக் குளிர் ஆரம்பித்தவுடனே சுவரோட்டைகளை கயிற்றுப் பாயினால் மூடுவது வழக்கம். டேராடூன் அறையைக் காட்டிலும் மிக விகாரமாக இந்த விடுதியில் நான் தனிமையான கம்பீரத்துடன் வாழ்ந்து வந்தேன். ஆனால் நான் தனித்திருக்கவில்லை. ஏனென்றால் நாற்பது குருவிகள் சந்து விட்டுப்போன கூரையில் கூடு கட்டிக் கொண்டிருந்தன. சில சமயங்களில் பறந்து திரிந்து செல்லும். மேகம் என்னை வந்து பார்க்கும். சுவர்களிலே இருந்த ஓட்டைகளின் வழியாக குளிர்ந்த மூடுபனி வந்து அறையை நிறைத்து விடும்.

இங்கே என்னுடைய கடைசி உணவு மாலை நாலரை மணிக்கு முடிந்ததும் சுமார் ஐந்து மணிக்கு என்னுடைய விடுதி பூட்டப்படும். காலை 7 மணிக்கு பூட்டின கதவைத் திறந்து விடுவார்கள். பகலில் என்னுடைய விடுதியிலோ, அல்லது பக்கத்திலிருந்த முற்றத்திலோ உட்கார்ந்துகொண்டு சூரிய வெப்பத்தில் குளிர் காய்வேன். என்னைச் சுற்றியிருக்கும் சுவர்களுக்கு மேலே சுமார் ஒரு மைலுக்கப்பால் மலைச் சிகரமொன்றைக் காணுவேன். திட்டுத் திட்டாக மேகங்கள் இருக்கும். பரந்த நீல வானத்தையும் பார்ப்பேன். இந்த மேகங்கள் அற்புதமான உருவங்களைக் கொள்ளுகின்றன. அவைகளைக் கவனிப்பதில் நான் அலுப்படைந்ததே இல்லை.

மேகங்களிலே எல்லா வகை மிருகங்களின் உருவங்களையும் காண்பதாக எண்ணிக் கொள்வேன். சில சமயங்களில் மேகங்கள் ஒன்று கூடிக்கொண்டு பிரம்மாண்டமான சமுத்திரத்தைப் போலத் தோன்றும்; அல்லது மணல் பரந்து கிடக்கும் கடற்கரை போலத் தோன்றும். நெருக்கமான மரங்களின் இடையே இருந்து வரும் காற்றின் ஓசை எட்டத்திலிருக்கும் கடலின் பருவ காலத்து அலையைப்போல ஒலிக்கும். சில சமயங்களில் மேகம் தைரியமாய் எங்களை நோக்கவரும்; மிகவும் கெட்டியாயிருப்பதாகத் தோன்றும். ஆனல் கிட்ட நெருங்கியதும் அது சிதறுண்டு போய் எங்களை அப்படியே மூடிக் கொள்ளும்.

சிறிய அறையைக் காட்டிலும் என்னுடைய விஸ்தாரமான விடுதி எனக்குப் பிடித்தமாயிருந்தது. சிறிய அறையைக்காட்டிலும் தனிமை அதிகமாக இருந்தபோதிலும் எனக்குப் பிடித்தமாயிருந்தது. வெளியே மழை பெய்தாலும் உள்ளே நான் நடந்து கொண்டிருக்க முடியும். ஆனல் குளிர் அதிகப்பட அதிகப்பட உற்சாகம் கம்மியாகிவிட்டது. உஷ்ணம் மிகவும் குறைந்த அளவுக்கு வந்ததும் புதிய காற்றிலும் வெட்ட வெளியிலும் எனக்கிருந்த ஆசை தணிந்து விட்டது. புதிய வருஷத்தில் நல்ல பனி; எனக்குச் சந்தோஷமாயிருந்தது. சாதாரணமாக அசடு தட்டிக் கிடக்கும் சிறையின் சுற்றுப்புரங்கள் கூட அழகாகிவிட்டன. சிறையின் சுவர்களுக்கு வெளியே மரங்கள் பனி உடையில் காணப்பட்டபொழுது மிகவும் அழகாகவும், அற்புதமாகவும் இருந்தன.

கமலாவின் தேகம் அடிக்கடி குணமடைவதும் கெட்டுப் போவதுமாக இருந்ததைக் கண்டு நான் கவலை அடைந்தேன். கெட்ட செய்தி யொன்று எனக்கு எட்டிற்று. கொஞ்ச நேரத்திற்கு அது என்னை மிகவும் கலக்கி விட்டது. ஆனல் குன்றின் காற்று என்னைச் சாந்தப்படுத்தி எனக்காறுதலளித்தது. மீண்டும் நன்ருகத் தூங்கும் எனது பழைய வழக்கத்தில் வீழ்ந்து விட்டேன். தூக்கம் வந்து கொண்டிருக்கும் சமயத்தில், எவ்வளவு ஆச்சரியப்படத்தக்க சங்கதி. தூக்கம் என்று நான் அடிக்கடி யோசித்தேன். ஒருவர் தூக்கத்திலிருந்து எதற்காக விழித்துக் கொள்ள வேண்டும்? நான் ஏன் விழித்துக் கொள்ள வேண்டும்?

முன்னே இருந்ததைக் காட்டிலும் அதிகமாக இப்பொழுது சிறையிலிருந்து வெளியேறுவதற்கு விருப்பம் எனக்கு உண்டாயிற்று. பம்பாய் காங்கிரஸ் கூடிமுடிந்து விட்டது. நவம்பர் மாதமும் வந்துபோய் விட்டது. அசெம்பிளித்தேர்தல்களின் பரபரப்பும் ஓழிந்துபோய் விட்டது. நான் விரைவில் விடுதலை செய்யப்படலாம் என்று அறைகுறையாக எதிர்பார்த்தேன்

ஆனால் கான் அப்துல் கபார்கான் அவர்களைக் கைது செய்து சிறைக்கனுப்பிய செய்தியைக் கேள்விப்பட்டேன். சுபாஷ் சந்திர போஸ் இந்தியாவில் சிறிது காலம் தங்கவந்ததிற்காக அவர்பேரில் சாதரா செய்யப்பட்ட ஆச்சரியமான உத்தரவுகளைப் பற்றிய செய்தியும் எனக்குக் கிடைத்தது. இந்த உத்தரவுகளில் ஈவிரக்கம் ஒன்றுமே இல்லை. சுபாஷ் பாபு அவருடைய தகப்பனாரை சாகும் தருவாயில் பார்க்க வந்தார். சுபாஷ் பாபுக்கே உடம்பு குணமில்லை. லக்ஷக்கணக்கான இந்தியர்களின் அன்புக்கும், மாரியாதைக்கும் பாத்திரமான ஒருவர் பேரில் இத்தகைய உத்தரவுகள் சாதரா செய்யப்பட்டன. சுபாஷ் பாபு தகப்பனாரை உயிருடன் பார்க்க முடியவில்லை. இத்தகைய மனப்பான்மை அரசாங்கத்தாருக்கு இருக்குமாயின், என் காலத்துக்கு முந்தியே நான் விடுதலை அடைவேன் என்று எண்ண இடமே இல்லை. உத்தியோக அறிக்கைகளிலிருந்து பின்னர் இது தெளிவாகத் தெரிந்தது.

அல்மோரா சிறையில் ஒரு மாத காலம் இருந்திருப்பேன். அப்பொழுது கமலாவைப் பார்க்க என்னை போவாலிக்கு இட்டுச் சென்றார்கள். அதன் பின்னர் அநேகமாக மூன்று வாரங்களுக் கொருதடவை அவளை நான் பார்த்து வந்தேன். வாரத்திற்கு ஒன்று அல்லது இரண்டு தடவைகள் என்னுடைய மனைவியைக்காண எனக்கு அனுமதி கொடுக்கப் கப்பட்டதென்று இந்தியா மந்திரி ஸர் ஸாமுவேல் ஹோர் அடுத்தடுத்து சொல்லியிருக்கிறார். மாதம் ஒன்று அல்லது இரண்டு தரம் என்று அவர் சொல்லியிருப்பாராகில் அது ஒருவாறு உண்மையாயிருந்திருக்கும். அல்மோராவில் நான் இருந்த மூன்றரை மாத காலத்தில் நான் கமலாவை ஐந்து தடவைகள் பார்த்திருக்கிறேன். இதை நான் இப்பொழுது குறையாகச் சொல்லவில்லை. ஏனென்றால் இந்தச்

சங்கதியில் அரசாங்கத்தார் எனக்கு அதிகமான தாக்ஷண்யம் காட்டியிருக்கிறார்கள். எனினும் கமலாவைக் காணுவதற்கு அசாதாரணமான வசதிகளை எனக்கு ஏற்படுத்திக் கொடுத்தார்கள் என்றும் நான் அறிவேன். இதற்காக நான் அவர்களுக்கு நன்றி பாராட்டுகிறேன். அவளை நான் பார்த்த பேட்டிகள் எனக்கு பொக்கிஷங்களாயிருந்தன. ஒருக்கால் அவைகள் அவளுக்குப் அப்படியே இருந்திருக்கலாம். கமலாவை நான் காணும் நாட்களில் வைத்தியர்கள் தங்கள் 'ஆளுகை'யை நிறுத்திக்கொண்டு நீண்ட நேரம் அவளிடம் பேசுமாறு எனக்கு வசதி ஏற்படுத்திக் கொடுத்தார்கள். இந்தப் பேட்டிகளால் நாங்கள் ஒருவருக்கொருவர் மிக்க நெருக்கமடைந்தோம். அவளை விட்டுப் பிரிவது மிகுந்த சங்கடமாயிருந்தது. பிரிவதற்காகத்தான் நாங்கள் சந்தித்தோமோ என்று தோன்றும். முடிவான பிரிவு ஒருநாள் நேரக்கூடுமென்று எண்ணி சில சமயங்களில் நான் மனம் கலங்குவேன்.

என்னுடைய தாயார் வைத்தியத்திற்காக பம்பாய் போயிருந்தார். ஏனென்றால் அவருடைய நோய் இன்னும் முழுதும் குணமாகவில்லை. அவர் குணமடைந்து வருவதாகத் தோன்றிற்று. ஜனவரி மாதம் மத்தியில் ஒரு நாள் காலையில் நான் திகைத்துப் போகும்படியாக ஒரு தந்தி வந்தது. அவருக்கு பார்சவாயு உண்டாயிற்றாம். அவரை நான் பார்க்கும் பொருட்டு பம்பாய் சிறை ஒன்றுக்கு மாற்றப்படும் சந்தர்ப்பம் இருக்கலாமென்று தோன்றிற்று. ஆனால் அவர் சிறிது குணமடைந்ததால் நான் அனுப்பப்படவில்லை.

ஜனவரி பிப்ரவரி மாதங்கள் கழிந்தன. வசந்த காலத் தோற்றம் ஆகாயத்தில் உண்டாயிற்று. குயில் முதலிய பறவைகள் மீண்டும் வந்து சேர்ந்தன. தங்கள் கானத்தைத் துவக்கி விட்டன. மண்ணிலிருந்து சிறுதளிர்கள் தோன்றி இந்த விநோத உலகத்தை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தன. குன்றங்களில் பல வர்ணமுள்ள மலர்கள் பூத்து வெளிவந்தன. நாட்கள் கழிந்துவந்தன. எனது அடுத்த போவாலிப் பிரயாணத்தை நினைத்துகொண்டு செல்லும் நாட்களை எண்ணிக்கொண்டிருந்தேன். கொடுமை, பிரிவு, அடக்குதல், இவைகளுக்குப் பின்னர் வாழ்க்கையின் அமிர்தமயமான கொடைகள் ஒருவனுக்கு வந்து சேருகின்றன என்ற

வாக்கியத்தில் எவ்வளவு உண்மை இருக்கிறது என்று ஆச்சரியப்பட்டேன். வேறு விதமாயிருந்தால் இயற்கையின் சன்மானங்களை மதித்து அனுபவிக்க இயலாதோ என்னவோ? தெரிந்த யோசனைக்கு, துன்பத் தூண்டுதல் தேவையாக இருக்கலாம். ஆனால் மிதமிஞ்சிய துன்பம் மூளையை குழம்பச் செய்து விடும். சிறை ஆத்மபோதனைக்குத் தகுதியான இடம். சிறையிலேயே நான் நீண்ட காலம் இருந்ததால் எனக்குள்ளாகவே சிந்தனைசெய்து பார்க்கும் பழக்கம் அதிகமாக ஏற்பட்டு விட்டது. இத்தகைய தன்மை எனக்கு சுபாவமாகவே இருந்ததில்லை. 'எஸ்ஸன்ஸ் காபி' யைப் போல சிறைவாழ்க்கை வேலை செய்ததால், எனக்கு இந்தத் தன்மை உண்டாயிற்று. உள் சோதனை, வெளிச் சோதனை இவைகளை அளப்பதற்காக புரொபஸர் மாக்டுகல் அவர்களுடைய முப்பட்டைச் சித்திரத்தை நான் வரைந்து அதைக் கவனித்துக் கொண்டிருப்பேன். உள் சோதனையும், வெளிச் சோதனையும் எப்படி அடிக்கடி இடமாறி வேலை செய்கின்றன என்பதைக் கவனித்தேன். அவைகள் வெகு விரைவில் இடம் மாறுவதாகத் தோன்றின.

# LXVII

## சில சமீபகால சம்பவங்கள்

இரவின் இறுதியில் உதயம் திரும்பி வருகிறது; ஆனால் வாழ்க்கையின் கடந்த நாட்கள் திரும்புவதில்லை.

கண்ணில் தூர வானத்தில் தீர்க்க தர்சனமிருக்கிறது; உள்ளத்திலோ வசந்த பருவத்தின் காயம் ஆழமாய்ப் பதிந்து கிடக்கிறது.

—லி. டாய். போ.

எனக்குக் கொடுக்கப்பட்டிருந்த பத்திரிகையிலிருந்து பம்பாய் காங்கிரஸின் நடவடிக்கைகளை கவனித்து வந்தேன். அதனுடைய தலைவர்களிடத்திலும் அதன் போக்கிலும் எனக்கு பற்று இருந்தது சகஜம் தானே? இருபது வருஷகாலமாக அத்துடன் நெருங்கி சம்பந்தப் பட்டிருந்தால் என் போக்கே அதில் அநேகமாகக் கலந்து விட்டது. அறியக் கூடாத சில பாசங்கள் நான் அதில் வகித்த பதவிகளையும் பொறுப்புகளையும் காட்டிலும் அதிகமாக, என்னை அதனிடமும், அதிலிருந்த என் ஆயிரக் கணக்கான தோழர்களிடமும் லயிக்கச் செய்தன. ஆனாலும் அதன் நடவடிக்கைகள் எனக்கு ருசிகரமாகவில்லை. சில முக்கியமான தீர்மானங்களைச் செய்திருந்தும் அந்த காங்கிரஸ் ஸ்வாரஸ்யமில்லாததாய் இருந்தது. என் மனதிற்கு உவந்த விஷயங்கள் காங்கிரஸில் கவனிக்கப்படவில்லை. நான் இருந்தால் என்ன செய்திருப்பேன் என்று எனக்குத் தெரியாது; அப் புது நிலைமையிலும், சூழ்விலும் நான் எவ்வாறு நடந்து கொண்டிருப்பேன் என்பதும் என்னால் சொல்ல முடியாது. அவசியமில்லாதபொழுது, என் மனதை எதற்காக தொந்தரவு செய்து, உபயோகமற்ற ஒரு தீர்மானத்திற்கு வர வேண்டுமென்று எனக்குத் தோன்றிற்று. பிரச்னைகளை ஆராய்ந்து என் அரசியல் வாழ்க்கையின் போக்கை நிர்த்தாரணம் செய்ய வேண்டிய காலமும் வரும்; அதை எதிர்பார்த்து இப்பொழுதே ஒரு தீர்மானத்திற்கு வருவது

பிசகு; அந்த சந்தர்ப்பம் எனக்கு வருவதற்குள் நிலைமையே மாறலாம்.

என்னுடைய தனித்த மலை வாசத்திலிருந்து எட்ட நின்று பார்த்ததில், பம்பாய் காங்கிரஸில் இரண்டு அம்சங்கள் சிறப்பாகத் தோன்றின; ஒன்று, காந்திஜீயின் பெருமித வல்லமை வாய்ந்த தன்மை; இரண்டு, பண்டித மதன்மோஹன் மாளவியாவும் ஆனேயும் சேர்ந்து எழுப்பிய வகுப்புவாத எதிர்ப்பு சீர் குலைந்துபோனது; இந்தியாவில் வசிக்கும் நடுத்தர வகுப்பார்களையும் குடியானவர்களையும் பற்றி தெரிந்தவர்களுக்கு ஒரு விஷயம் எளிதிலே புலனாகும். இந்தியாவிலே எஜமானத்துவத்தை யொத்த தலைமைப் பதவியில் காந்திஜி ஒருவர்தான் இருக்கமுடியும் என்பது அவருக்கு எளிதிலே புலனாயிருக்கும். காந்திஜீயின் அரசியல் கீர்த்தி தேய்ந்து போய்விட்டதென்றும், அவருடைய செல்வாக்கு மிகுதியும் குறைந்து விட்ட தென்றும், சர்க்கார் உத்தியோகஸ்தர்களும் தனித்துவாழும் அரசியல் வாதிகளும் அடிக்கடி வீணாக எண்ணிக் கொள்ளுகிறார்கள். ஆனால் காந்திஜீ மறுபடியும் தமது பழைய வலுவுடனும் கீர்த்தியுடனும் வெளித்தோன்றும்பொழுதெல்லாம், அவர்கள் திடுக்கிட்டுப்போய் விடுகிறார்கள். இத்தகைய மாறுதலுக்கு, அவர்கள் காரணத்தைத் தேடப் புகுந்து விடுகிறார்கள். காந்திஜீ காங்கிரஸிலும் தேசத்திலும் சர்வாதிகாரத்துடன் விளங்குவதற்குக் காரணம் அவர் கொண்டிருக்கும் கருத்துக்கள் அல்ல; அவருடைய கருத்துக்களை அநேகமாக தேசம் ஏற்றுக்கொண்டு விட்டது. தனித்தன்மை வாய்ந்த அவருடைய மூர்த்திப் பிரதாபமே அந்தச் செல்வாக்குக்குக் காரணமாகும். எங்கேயும் எப்பொழுதும் மூர்த்திப் பிரதாபத்திற்குத் தான் மதிப்புண்டு. அதிலும் இந்தியாவிலே அதற்கு அதிகமான மதிப்பு ஏற்பட்டிருக்கிறது.

காங்கிரஸிலிருந்து காந்திஜீ விலகிக் கொண்டது அந்த வருஷத்து காங்கிரஸின் சிறப்பான அம்சமாகும். காங்கிரஸிலும் இந்திய சரித்திரத்திலும் ஒரு சகாப்தம் முடிந்து விட்டதாக வெளித்தோற்றத்தில் அது பட்டது. ஆனால் சாரத்தை நோக்குங்கால் அது அவ்வளவு சிறப்பாகக் கூறக் கூடியதல்ல. ஏனெனின் காந்திஜீ விரும்பினாலுமே அவர் தமது இணையற்ற பதவியினின்றும் விலகிக் கொள்ளவே

முடியாது. எந்த உத்தியோகத்தினாலும் அல்லது வேறு எந்த பிணிப்பினாலும் அவருக்கு அந்தப் பதவி கிடைக்க வில்லை. இன்றைக்கும் காங்கிரஸ் அவருடைய முறையையும் நோக்கத்தையும் தான் பிரதிபலித்துக் காட்டுகிறது. அது அவருடைய மார்க்கத்தினின்றும் விலகிப் போனாலுமே காந்திஜீ தம்மை அறியாமலே காங்கிரஸையும் தேசத்தையும் மகத்தான அளவில் ஆட்டி வைத்துக் கொண்டு தானிருப்பார். அந்தச் சுமையையும் பொறுப்பையும் அவரால் தன்னை விட்டுத் தள்ளி விடமுடியாது. தற்போதிருக்கும் இந்தியாவின் நிலைமைகளைச் சீர்தூக்கிப் பார்ப்பின், ஒவ்வொருவருடைய கவனத்திலும் அவருடைய மூர்த்தி எப்படியோ நுழைந்துகொண்டு விடுகிறது. அதை அலக்ஷியம் செய்யக் கூடவில்லை.

காங்கிரஸை திக்குமுக்கல் நிலைமையில் வைக்கக் கூடாது என்று எண்ணி தற்காலிகமாக அவர் அதை விட்டு விலகியிருக்கிறார் எனத் தோன்றுகிறது. ஏதோ தனித்து நின்று நேர்முறை போராட்டமொன்றைப்பற்றி அவர் யோசித்துக் கொண்டிருக்க வேண்டும். யோசனை பழுத்தால் அவர் அரசாங்கத்தோடு போர் தொடுப்பது நிச்சயம். அந்த நிலைமையில் அந்தப் போராட்டத்தை பொதுவான காங்கிரஸ் பிரச்னையாக மாற்ற அவர் விரும்பவில்லை.

தேசத்தின் அரசியல் அமைப்பை நிர்ணயம் செய்வதற்கு தேசப் பொது ஜன சபை கூட வேண்டுமென்று காங்கிரஸ் தீர்மானம் செய்தது எனக்குச் சந்தோஷம். அரசியல் அமைப்புப் பிரச்னையைத் தீர்ப்பதற்கு வேறு வழியில்லை என்று எனக்குத் தோன்றிற்று. இத்தகைய சபையொன்று எப்பொழுதாவதொரு சமயம் கூடவேண்டி வரும் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை. வெற்றியுடன் கூடிய புரட்சி நேர்ந்தாலொழிய, பிரிட்டிஷ் அரசாங்கத்தின் சம்மதமின்றி அது கூட முடியாது. தற்போதைய நிலைமைகளில் இந்த சம்மதம் எளிதிலே கிடைக்காது என்பதும் நிச்சயம். போதுமான வல்லமை தேசத்தில் திரண்டு துரிதப்படுத்தும் வரைவில் உண்மையான பொதுஜன சபை கூடுவதற்கு வழியில்லை. அதாவது அந்தக்காலம்வரையில் அரசியல் பிரச்னையும் தீராமலே நிற்கும் என்பது இதன் பொருளாகும். காங்கிரஸ் தலைவர்களில் சிலர் பொதுஜன சபை தேவை

என்பதை ஒப்புக்கொண்டாலும், அந்த யோசனையை சுத்தக் கட்டையாய்ச் செய்து விட்டார்கள். பழைய சர்வகட்சி மகாநாட்டைப்போல, அதுவும் ஒன்று என்று எண்ணத் துணிந்தார்கள். அப்படியாயின் அது அறவே வீணான வேலையாகும். அதே பழைய நபர்கள் (தங்களைத் தாங்களே தேர்ந்தெடுத்துக் கொண்டவர்கள்) கூடி அபிப்பிராய பேதத்துடன் கலைவார்கள். பொதுஜன சபை என்பதென்ன ? அது பொதுஜனங்களின் பிரதிநிதியாக விளங்க வேண்டும். பொது மக்களின் வலுவும் உற்சாகமும் பொதுஜனசபையின் கண் பிரதிபிம்பித்திருக்க வேண்டும். இத்தகைய கூட்டம் உடனே உண்மையான பிரச்னைகளை ஆராய்ந்து முடிவு செய்யும். அடிக்கடி நாம் அகப்பட்டுக்கொண்ட வகுப்பு வாதம் முதலிய பழைய சுவடுகளில் அது அகப்பட்டுக் கொள்ளாது.

இந்தக் கருத்தைச் சிம்லாவிலும் லண்டனிலும் எப்படி வரவேற்றார்கள் என்பதை கவனிப்பது விநோதமாயிருந்தது. இதை கவர்ன்மெண்டார் ஆக்ஷேபிக்கமாட்டார்கள் என்று பாதி உத்தியோக தோரணையில் அறிவிக்கப்பட்டது. தட்டிக் கொடுக்கிறதுபோல் அதை அவர்கள் ஏற்கிறார்கள். "பழைய சர்வகட்சி மகாநாட்டைப்போல இது ஒன்று; ஆதலால் அது முறிந்துபோகுமென்றும், அதன்மூலம் தங்கள் பக்ஷம் வலுவடைந்து விடுமென்றும் அரசாங்கத்தார் முதலில் கனவு கண்டார்கள். பொதுஜனசபை என்ற கருத்தின் சாத்தியா சாத்தியங்களையும் ஆபத்துகளையும் பின்னர் அவர்கள் உணர்ந்து கொண்டு, அதைச் சுறுசுறுப்புடன் எதிர்க்கத் துவக்கினார்கள்.

பம்பாய் காங்கிரஸுக்கு அடுத்தாற்போல் அசெம்ப்ளித் தேர்தல்கள் வந்தன. காங்கிரஸின் பார்லிமெண்டரி திட்டத்தில் எனக்கு அதிகமான உற்சாகமில்லை. என்றாலும் தேர்தலில் எனக்கு மிகுந்த சிரத்தை; காங்கிரஸ் அபேக்ஷகர்கள் ஜெயிக்க வேண்டுமென்பது எனது விருப்பம். சரியாக சொல்லப்போனால், காங்கிரஸ் அபேக்ஷகர்களை எதிர்ப்பவர்கள் தோற்க வேண்டுமென்பதுஎனது ஆசை. காங்கிரஸ் அபேக்ஷகர்களோடு எதிர் நின்று போட்டி போட்டவர்களுள் பல ரகமானவர்கள் இருந்தார்கள். சுயநல வாதிகள், வகுப்பு வாதிகள், கக்ஷி துரோகம் செய்தவர்கள், அடக்குமுறைக் கொள்கையில் அரசாங்கத்தை விடாமல் ஆதரித்துக் கொண்டு வந்

தவர்கள்; இத்தகைய நபர்கள் அடியோடு தோற்கடிக்கப்படு வார்களென்பதில் சந்தேகமில்லை. ஆனால் துர்ப்பாக்கிய வசமாக வகுப்பு வாதத் தீர்ப்பு உண்மையான பிரச்னையை திரை போட்டு மூடிவிட்டது. பெரும்பான்மையோர் வகுப்பு அமைப்புகளின் விரிந்த இறக்கைகளுக்குள் அடைக்கலம் புகுந்தார்கள். எப்படியானபோதிலும் காங்கிரஸுக்கு பெருமித வெற்றி கிடைக்கும். தகாத பேர்வழிகளில் பலர் தோற்கடிக்கப்பட்டார்கள் என்பதில் எனக்குச் சந்தோஷம்.

காங்கிரஸ் தேசீயக்கட்சி என்பவர்களுடைய நோக்கம் மிகவும் வருந்துதற்குரியதா யிருந்தது. அவர்கள் வகுப்புத் தீர்ப்பை எதிர்ப்பதில் அர்த்தமுண்டு; ஆனால் தங்கள் நிலைமையை வற்புறுத்திக் கொள்ளுவதற்காக தீவிர வகுப்புவாத அமைப்புகளோடு உறவு கொண்டாடினார்கள். சனாதனிகளோடு சேர்ந்து கொண்டார்கள். அரசியலிலும் ஆசார திருத்தத்திலும் இந்தியாவில் மிகவும் பிற்போக்குகொண்ட கூட்டம் சனாதனிகளின் கூட்டத்தைத் தவிர வேறெதுவுமில்லை. இவர்களோடு மட்டுமல்லாமல் அரசியல் பிற்போக்காளர்களோடும் காங்கிரஸ் தேசீயக் கட்சி உறவு கொண்டாடிற்று. வங்காளத்தில், சிறப்பான சில காரணங்களுக்காக காங்கிரஸ் கூட்டங்களிலொன்று தேசீயக் கட்சியை ஆதரித்தது. ஆனால் மற்ற மாகாணங்களில் காங்கிரஸ் தேசீயக் கட்சி எந்த வகையிலும் காங்கிரஸுக்கு விரோதமாகவே இருந்தது. எதிர்க்கூட்டத்தில் நிலச்சுவான்கள், மிதவாதிகள், உத்தியோகஸ்தர்கள், எல்லோரும் சேர்ந்து வேலை செய்தபோதிலும் காங்கிரஸ் அபேக்ஷகர்கள் பெருமித வெற்றி பெற்றார்கள்.

வகுப்புத் தீர்ப்பு சம்பந்தமாக காங்கிரஸின் நோக்கம் வினோதமாயிருந்தது. இருந்தாலும் அப்போதைய நிலைமையில் அது வேறு விதமாக இருக்க முடியாது. காங்கிரஸின் பழைய பலவீனங் கொண்ட நடுநிலைமைக் கொள்கையின் பயன் அதுவேயாகும். துவக்கத்திலேயே கண்டிப்பான நோக்கம் கொண்டு, என்ன நேர்ந்தாலும் அதைப் பின்பற்றுவதென்று இருந்தால், அது கௌரவமுள்ளதாயும் சரியானதாகவு மிருந்திருக்கும். ஆனால் அத்தகைய நோக்கை ஏற்றுக்கொள்ள காங்கிரஸ் விரும்பவில்லையாதலின், அது இப்பொழுது எடுத்துக் கொண்ட வழியைத் தவிர வேறு

வழியே இல்லை. வகுப்புத் தீர்ப்பு சுத்த அபத்தமான ஒன்றாகும். அதை எற்றுக் கொள்வது சாத்தியமே இல்லை. ஏனெனில் அது இருக்குமளவும் எத்தகைய சுதந்திரத்தையும் அடையவே முடியாது. வகுப்புத் தீர்ப்பு முஸ்லீம்களுக்கு அதிகமாக உரிமைகளைக் கொடுத்திருக்கிறது என்ற காரணத்தால் அல்ல; முஸ்லீம்களுக்கு தேவையானதை வேறு வழியில் அவர்களுக்குக் கொடுத்திருக்க முடியும். வகுப்புத் தீர்ப்பின்படி பரஸ்பர எதிரிகளாக பல கூட்டங்களை இந்தியாவில் பிரிட்டிஷ் அரசாங்கம் உண்டாக்கி விட்டது. ஒரு கட்சி மற்றதின் பேரில் பாய்ந்து கொண்டிருக்கையில், அன்னிய ஆட்சி சாசுவதமாக தலை நிமிர்ந்து நிற்க முடியுமல்லவா? இந்தியா பிரிட்டிஷ் அரசாங்கத்தைக் கட்டாயமாக சார்ந்திருக்க வேண்டுமென்று ஏற்பாடு செய்து விட்டது.

வங்காளத்தில் மட்டும் சிறுபான்மையோரான ஐரோப்பியர்களுக்கு அதிகமான சலுகை காண்பிக்கப்பட்டு, ஹிந்துக்களுக்கு அநியாயம் வழங்கப்பட்டது. இத்தகைய தீர்ப்பை, எதிர்த்துப் போராடுவது இயற்கையாகும். அந்தத் தீர்ப்பை கட்டாயத்தால் ஏற்றுக்கொண்டாலும் சரி, அல்லது அரசியல் காரணங்களுக்காக தற்காலிகமாகப் பொறுத்துக்கொண்டாலும் சரி, அதனால் நீடித்த தொந்தரவும் சச்சரவும் தான் விளையும். என் சம்பந்தப்பட்டவரையில் அதனுடைய கெட்ட தன்மையே அது ஒழிந்துபோவதற்குச் சாதகமான அம்சம் என்று நான் நினைக்கிறேன். ஏனென்றால் எதற்கும் அது சாசுவதமான அடிப்படையாக ஒரு பொழுதும் இருக்கவே முடியாது.

தேசியக் கட்சியும், அதைக் காட்டிலும் அதிகமாக ஹிந்து மஹா சபையும், வேறு வகுப்புவாத அமைப்புகளும் இந்தக் கட்டாயத் தீர்ப்பை ஆக்ஷேபித்தன. ஆனால் அவைகள் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் தேவையை ஒப்புக்கொண்டே வகுப்பு வாதத் தீர்ப்பை எதிர்த்தன. இந்த மனப்பான்மையினால், அவைகள் வரவர விநோதமான பாதையில் செல்ல வேண்டி ஏற்பட்டது. எனவே அது ஏன் அரசாங்கத்தாருக்கு இனிப்பாயிராது? வகுப்புத் தீர்ப்பால் வெறி பிடித்துப் போய் அவைகள் மூலதாரமான விஷயங்களில் தங்களுடைய எதிர்ப்பைக் குறைத்துக்கொண்டு, அரசாங்கத்

தைக் கெஞ்சிக் கூத்தாடியோ அல்லது வேறு எதேனும் செய்தோ வகுப்புத் தீர்ப்பைத் தங்களுக்குச் சாதகமாக மாற்றிக் கொள்ளலாமென்று பித்துப் பிடித்தலைகின்றன. இந்தத் துறையில் ஹிந்து மஹாசபை கடைசிக் கோடி வரையிலும் போய்விட்டது. ஹிந்து மஹாசபை கையாண்ட முறை மிகவும் கேவலமான தென்றும், அதனுல் வகுப்புத் தீர்ப்பை மாற்ற முடியாது என்பதும் தவிர முஸ்லீம்களுக்கு ஆத்திரம் உண்டு பண்ணி அவர்களை எட்டத் தூரத்திவிடும் என்றும் அதற்குத் தோன்றவே இல்லை. தேசிய வாதிகளை தங்களோடு சேர்த்துக் கொள்ள, பிரிட்டிஷ் அரசாங்கத்தா ரால் முடியவே முடியாது. இருவருக்குள்ளும் மகத்தான பிளவு இருக்கின்றது. இருவருடைய லாபலோபங்களும் வெவ்வேறு தன்மை கொண்டவை. வகுப்பு வாதம் என்ற குறுகிய பிரச்னையில், ஹிந்து வகுப்பு வாதிகளையும் முஸ் லீம் வகுப்பு வாதிகளையும் ஏக காலத்தில் அரசாங்கத்தார் திருப்தி செய்வது என்பதும் சாத்தியப்படாத சங்கதி யாகும். அவர்கள் இரண்டு கூட்டத்தில் ஒன்றை தங்க ளோடு சேர்த்துக் கொள்ள வேண்டும். அவர்களுடைய நோக்கம் பலிப்பதற்காக அரசாங்கத்தார் முஸ்லீம் வகுப்பு வாதிகளுக்கு சலுகை காட்டினது சரியான முறையாகும். கைப்பிடியிலடங்கக் கூடிய ஹிந்து வகுப்பு வாதிகளை தங் களிடம் சேர்த்துக் கொள்வதற்காக, தங்களுடைய புராதன லாபகரமான வழியை விட்டு விட்டு, தலைகீழாய்க் காரியம் செய்து, அரசாங்கத்தார் முஸ்லீம்களுக்கு ஆத்திரம் உண் டாக்குவார்களா?

அரசியல் சம்பந்தப்பட்ட வரையிலும் ஹிந்துக்கள் முற்போக்குக் கருத்துக் கொண்டவர்கள். நாட்டு விடுதலை யில் அவர்களுக்கு ஆசை. இந்தத் தன்மைகளே அவர்க ளுக்கு விரோதமாக வேலை செய்யாதா? சில்லரை வகுப்புச் சலுகைகளால் ஹிந்துக்களின் அரசியல் பகைமையை அர சாங்கத்தார் தீர்த்துவிட முடியாது. ஆனுல் இதே சலுகை களை முஸ்லீம்களுக்குக் காண்பித்தால் தற்காலிகமாக வேனும், அரசாங்கத்திற்கு லாப மேற்படலாம்.

ஹிந்து மஹா சபைக்கும் முஸ்லீம் கான்பரன்ஸுக் கும் பக்க பலமாயிருந்தவர் யாவர் என்று அசெம்பிளித் தேர்தல்களிலிருந்து நன்ருகத் தெரிய வந்தது. அவர்களை

ஆதரித்தவர்களும், அவர்களுடைய அபேக்ஷகர்களும் பெரிய நிலச்சுவான் இனத்தையும் வங்கி லேவாதேவி இனத்தையும் சேர்ந்தவர்களாகும். கடன் தொல்லைகளிலிருந்து நிவர்த்தியைத் தேடுவதற்காக கொண்டுவரப்பட்ட மசோதாக்களை ஹிந்து மஹாசபை எதிர்த்து முதலாளிமார்களிடம் தனக்கிருந்த அன்பைக் காட்டிக் கொண்டது. ஹிந்து ஜன சமூகத்தின் உச்சாணியில் இருந்த சிறு தொகையினரான முதலாளிமார்கள்தான் ஹிந்து மஹா சபையாகும். அவர்களில் சிலரும் உயர்தரத் தொழில்களில் அமர்ந்திருக்கும் சிலரும் சேர்ந்து மிதவாதக் கூட்டம் போட்டிருக்கிறார்கள். இவர்களுக்கு ஹிந்து ஜன சமாஜத்தில் அதிகமாக செல்வாக்கு கிடையாது. ஏனெனில் ஹிந்து சமாஜத்தின் கீழ் நடுத்தர வகுப்பினர் அரசியல் கிளர்ச்சியில் கண் விழித்துக் கொண்டார்கள். ஆலை முதலாளிகளும் இந்த மிதவாதக் கும்பலில் வருவதில்லை. ஏனென்றால் பரம்பரை நிலச்சுவான்களுக்கும், வளர்ந்து வரும் அவர்கள் கூட்டத்திற்கும் இடையே ஒரு வகைப் போராட்டமிருந்து வந்தது. ஆலை முதலாளிகளுக்குப் பயம். எனவே அவர்கள் நேர் முறைப் போராட்டத்திலும், வேறு ஆபத்து விளைவிக்கக் கூடிய வழிகளிலும் இறங்காமல், அரசாங்கத்தாருக்கு பல்லைக் காண்பித்துக் கொண்டு, காங்கிரசுக்குத் தங்கள் இறக்கைகளைக் காண்பித்துக்கொண்டு (வௌவால்களைப் போல) இருக்கின்றார்கள். அவர்கள் மிதவாத வகுப்புவாத கும்பல்களின் கூச்சலுக்கு செவி சாய்ப்பதே இல்லை. தொழில் அபிவிருத்தியும், லாபமும் தான் அவர்களுடைய முக்கியமான நோக்கங்களாகும்.

முஸ்லீம்களுக்குள் இந்த கீழ் நடுத்தர வகுப்பார்களுக்கு இன்னும் கண் விழிப்பு ஏற்படவில்லை. தொழிலபிவிருத்தி துறையிலும் அவர்கள் பிற்போக்கில் தானிருக்கிறார்கள். ஆகவே அவர்களுடைய வகுப்பு வாத ஸ்தாபனங்களில் தலைமை வகித்து நடத்துபவர்கள் மோசமான பிற்போக்காளர்கள், பரம்பரை உரிமையாளர்கள், மாஜி உத்தியோகஸ்தர்கள்; இவர்களுக்கு முஸ்லீம் சமாஜத்தில் செல்வாக்கதிகம். முஸ்லீம் கான்பரன்ஸில் 'ஸர்' பட்டம் பெற்ற மாஜி மந்திரிகள், பெரிய நிலக்கிழவர்கள், ஜோதி மயமாய் விளங்கினார்கள். என்றாலும் முஸ்லீம் பாமர மக்களிடம் அதிகமான வலுவு இருப்பதாக நான் கருதுகிறேன். ஏனெனின் அவர்களுக்குள் சமூக உறவுகளில் ஹிந்துக்களைக் காட்டி

லும் அதிகமான சுதந்திரம் இருக்கிறது. எனவே அவர்கள் நகரமட்டும் ஆரம்பித்துவிட்டால், அபேதவாதத் துறையில் வெகு விரைவில் செல்லுவார்களென்று தோன்றுகிறது. தற்போது முஸ்லீம் அறிவாளிகள் அறிவிலும் உடலிலும் பாரிசவாயு பற்றிக்கொண்டு கிடக்கின்றனர். அவர்கள் நகர வலுக்கொண்டிருக்கவில்லை. பழைய சம்பிரதாயிகளை அவர்களால் வம்புக்கிழுத்து அவர்கள்பேரில் வெற்றிபெற முடியவில்லை.

அரசியலில் காங்கிரஸ்தான் மிகவும் முற்போக்குக் கொண்ட கூட்டமாகும். சாதாரண பாமர மக்கள் இருக்கும் நிலையைக் கருதி, தீவிர போக்கைக் கொள்ள வேண்டியதிருக்க, காங்கிரஸே மிகவும் எச்சரிக்கையுடன், நகர்ந்து செல்லுகின்றது. காங்கிரஸ் தலைவர்கள் காங்கிரஸை ஆதரிக்க வேண்டுமென்று பொதுஜனங்களைக் கேட்டுக் கொள்ளுகிறார்கள். ஆனால் அவர்களுடைய அபிப்பிராயத்தைக் கோருவதில்லை. அவர்களுடைய துயரங்கள் இன்னதென்று விசாரிப்பதுமில்லை. அசெம்பளித் தேர்தல்களுக்கு முன்பாக காங்கிரஸ் தலைவர்கள் தங்கள் துக்கத்தைக் குறைத்துக் கொண்டு, காங்கிரஸ் அல்லாதவர்களுடைய ஆதரவை சேகரிக்கப் பார்க்கிறார்கள். ஆலயப் பிரவேச மசோதா முதலிய திட்டங்களில் கூட அவர்களுடைய நோக்கம் வெவ்வேறாயிருந்தன. சென்னை மாகாணத்தில் வைதிகர்களுக்கு உறுதிகள் கொடுக்கப்பட்டன. நேர்மையான போராட்டத்தைத் தழுவிய தேர்தல் திட்டத்தை அமைத்து, அதைப் பிரசாரம் செய்வதென்றால் அது ஜனங்களுக்கு உற்சாகத்தைக் கொடுத்து மிகுந்த படிப்பினையாயிருந்திருக்கும். காங்கிரஸ் மீண்டும் சட்ட சபை முறைக்கு திரும்பி விட்டபடியால், ஒரு சில ஓட்டு லாபத்துக்காக அரசியல் ஜன நிர்மாணத் துறைகளில் பிற்போக்காளர்களாயிருப்பவர்களுக்குக் கூட சலுகை காண்பித்து பிரசாரம் செய்ய வேண்டி வரும். அதனால் காங்கிரஸுக்கும் பொது மக்களுக்கும் அதிகமான பிளவு உண்டாகக் கூடும். சட்ட சபையில் நேர்த்தியான பிரசங்கங்கள் செய்யப்படலாம். உயர்ந்த சட்ட சபை முறைகள் கையாளப்படலாம். அடிக்கடி சட்ட சபையில் சர்க்கார் கட்சியைத் தோற்கடிக்கலாம். அந்தத் தோல்விகளை அரசாங்கம் ஏற்கனவே செய்ததுபோல அமைதியோடு அலக்ஷியம் செய்யும்.

சென்ற சில வருஷங்களுக்கு முன்பு, காங்கிரஸ் சட்ட சபைகளைப் பகிஷ்காரம் செய்த காலத்தில் அசெம்பிளியும் மாகாண சட்ட சபைகளும்தான் உண்மையான ஜனப் பிரதிநிதித்வம் வாய்ந்தனவென்றும், அவைகள்தான் பொதுஜன அபிப்பிராயத்தை பிரதி பிம்பித்துக் காண்பிக்கக் கூடியவை என்றும் சர்க்கார் அதிகாரிகள் அடிக்கடி நம்மவர்களுக்குச் சொல்வதுண்டு. தீவிரவாதிகள் அசெம்பிளியில் பிரவேசித்ததும் அதிகாரிகளின் இந்தக் கருத்து மாறிப்போனதுதான் மிகவும் விநோதமாக இருக்கிறது. தேர்தல்களில் காங்கிரஸ் வெற்றியைப் பற்றிப் பேசினால் வாக்காளர்களின் தொகுதி மிகச் சிறிதென்றும், முப்பது கோடியில் முப்பது லக்ஷம் தான் வாக்காளர்கள் என்றும் சொல்லப்படுகிறது. சர்க்காரின் அபிப்பிராயப்படி ஓட்டில்லாத கோடிக்கணக்கானவர்கள் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்குப் பக்க பலமாக நிற்கின்றார்கள் போலும்! பரிகாரம் கையிலேயே இருக்கிறதே! சர்வ ஜன வாக்குரிமை கொடுத்துப் பார்த்தால், இப்பொழுது ஓட்டில்லாத கோடிக் கணக்கானவர்கள் என்ன எண்ணிக் கொண்டிருக்கிறார்கள் என்பதை நாம் தெரிந்து கொண்டு விடலாம்.

அசெம்பிளி தேர்தல்கள் முடிந்ததும், இந்திய சீர்திருத்தத்தைப் பற்றி கூட்டுக்கமிட்டி யாதாஸ்து வெளியிடப் பட்டது. அதை பல கூட்டங்கள் பல மாதிரியாகக் கண்டனம் செய்தன. இந்திய ஜனங்களை நம்பாமல் சந்தேகத்தைக் கொண்டு, இந்தத் திட்டம் ஆக்கப்பட்டதென்று பொதுவாக யாவரும் அழுத்திக் கண்டித்தார்கள். இந்தக் கண்டன முறை எனக்கு மிகவும் விநோதமாகப்பட்டது. நமது தேசிய ஜன நிர்மாண பிரச்னைகளை நோக்கும் முறை இதுதானா? பிரிட்டிஷ் சாம்ராஜ்யக் கொள்கைக்கும் நமது தேசிய நலங்களுக்கும் இடையே மகத்தான வேற்றுமைகள் இல்லையா? எதைப் போற்றிக் காப்பாற்றுவது என்பது தான் கேள்வி. ஆங்கில சாம்ராஜ்யக் கொள்கையை நீடிக்கச் செய்வதற்காகவா நாம் சுதந்திரத்தை வேண்டுகிறோம்? அப்படி நினைப்பது பிரிட்டிஷ் அரசாங்கத்தின் மனப்போக்காகும். பிரிட்டிஷ் கொள்கைக்கு ஏற்றவாறு தக்கமுறையில் நடந்துகொண்டு, நமது சுயராஜ்யத் தகுதியை நிரூபிப்போமானால், பாதுகாப்புகள் உபயோகப்படுத்தப்பட மாட்டா என்று அவர்கள் சொல்லுகிறார்கள். இந்தியாவில் பிரிட்டிஷ் கொள்கை நீடித்திருக்க வேண்டுமானால், அரசாட்சி

நம் கைக்கு வந்து விடவேண்டும் என்று நாம் ஏன் இவ்வளவு கூப்பாடு போட வேண்டும்.

இந்திய வியாபாரம் சம்பந்தப்பட்ட துறையில் தவிர, பொதுவாக பொருளாதாரத் துறையில் ஒட்டவா ஒப்பந்தங்களால் இங்கிலாந்துக்கு அதிக நன்மை ஏற்படவில்லையென்பது யாவருக்கும் தெரிந்த சங்கதியாகும். இந்தியாவின் நலங்களுக்குக் கேடு ஏற்பட்டு, இந்தியாவில் பிரிட்டிஷ் வியாபாரம் செழித்ததுதான் ஒட்டவா ஒப்பந்தங்களின் பயன் என்று நிபுணர்கள் கூறுகிறார்கள். ஆனால் ஒட்டவா ஒப்பந்தங்களினால் கானடா, ஆஸ்திரேலியா முதலிய குடியேற்ற நாடுகளுக்கு லாபம். அவைகள் பிரிட்டனோடு பிடிவாதமாக பேரம் செய்தன. பிரிட்டனுக்கு நஷ்டமேற்பட்டாலும், தங்களுக்கு லாபங்களையே சம்பாதித்துக் கொண்டிருந்தன. இவ்வாறானாலும் அவைகள் ஒட்டவா ஒப்பந்தங்களை ரத்து செய்ய, பிடிவாதமாக விடாமல் முயன்று வருகின்றன. அப்படிச் செய்தால்தான் தங்களுடைய தொழில்கள் செழித்து, தங்கள் அன்னிய நாட்டு வியாபாரம் விருத்தியடையுமென்று அவைகள் எண்ணுகின்றன. கானடாவில் தாராளக் கட்சியார் வெகு விரைவில் தேர்தலில் ஜெயித்து, மந்திரிகள் ஆகப் போவது நிச்சயம். அவர்கள் ஒட்டவா ஒப்பந்தத்தைத் தொலைத்து விடவேண்டு மென்று கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறார்கள். ஆஸ்டிரேலியாவிலோ, ஒட்டவா ஒப்பந்தத்துக்கு பலவந்த அர்த்தம் கற்பித்து, சில ரக துணிமணிகளுக்கும் நூல்களுக்கும் அதிகமான சுங்கவரி போட்டு விட்டார்கள். இதை லங்காஷயர் பருத்தி வியாபாரிகள் நொந்து கொண்டு, ஒட்டவா ஒப்பந்தத்திற்கு இது துரோகம் என்று பேசுகிறார்கள். ஆக்ஷேபணையாகவும் பழிவாங்கும் பொருட்டும், ஆஸ்டிரேலிய சாமான்களை பகிஷ்காரம் செய்வதென்று லங்காஷயரில் ஒரு இயக்கம் ஏற்பட்டு வருகிறது. இந்தப் பூச்சாண்டியைக் கண்டு, ஆஸ்டிரேலியா பயப்படவில்லை. தங்கள் பழைய நோக்கம் போல ஆஸ்டிரேலியர்கள் நடந்து கொண்டார்கள்.

கானடா, ஆஸ்டிரேலியா ஜனங்களுக்கு பிரிட்டனிடம் பொருளாதாரத் துறையில் சச்சரவுகள் இருந்தன. அது மனஸ்தாபத்தால் அல்ல. இத்தகைய மனத்தாங்கல் அயர்லந்துக்கு பிரிட்டன் பேரில் இருந்தது. சச்சரவுகளுக்கு கார

ணம் லாப நஷ்ட கணக்கினால் ஏற்பட்டதாகும். இத்தகைய சச்சரவுகள் ஏற்படும் பொழுது, இந்தியாவில் பிரிட்டிஷ் உரிமைகளும் லாபங்களும் காக்கப்படவேண்டியதற்காகவே, பாதுகாப்புகள் உபயோகப்பட வேண்டும் என்பதற்காகத் தான் பாதுகாப்பு ஷரத்துகள் புதிய அரசியல் அமைப்பில் புகுத்தப்பட்டிருக்கின்றன. சமீபத்தில் இந்தியாவுக்கும் பிரிட்டனுக்கும் வியாபார ஒப்பந்தம் ஏற்பட்டது. அது மிகவும் ரகசியம். இந்தியத் தொழில் முதலாளிகள் ஆக்ஷே பித்தார்கள். அந்த ஒப்பந்தத்தை இந்தியா சட்ட சபை ஏற்றுக் கொள்ளவில்லை. இருந்தாலும் அரசாங்கத்தார் பிடிவாதமாக அதை வற்புறுத்தினார்கள். பாதுகாப்புகள் எவ்வாறு உபயோகிக்கப்படும் என்பது இதனின்றும் தெளி வாக விளங்குகின்றதல்லவா? இந்தப் பாதுகாப்புகளை கான டாவிலும், ஆஸ்டிரேலியாவிலும், தென் ஆப்பிரிக்காவிலும் அல்லவா அவசரமாக உபயோகப்படுத்த வேண்டும்? ஏனென்றால் அந்த நாட்டு மக்கள்தான் பிரிட்டிஷ் சாம்ராஜ் யத்திலிருந்து வியாபாரத் துறைகளில் பிரிந்து நின்று, சாம் ராஜ்யத்தின் ஒற்றுமையை குலைத்து விடுவார்கள் போல் இருக்கிறது!

சாம்ராஜ்யமென்றால் கடன் என்று அர்த்தம் என சொல்லப்படுகிறது. அப்படியானால் பிரிட்டிஷ் சாம்ராஜ் யம் என்ற லேவாதேவிக்காரன் தன் கீழ் அகப்பட்டுக் கொண்டிருக்கும் கடன்காரனை குரல் வளையைக் கெட்டி யாய் பிடித்துக் கொண்டு, தன்னுடைய பிரத்தியேகமான உரி மைகளையும் அதிகாரங்களையும் அப்படியே சாச்வதமாக வைத்துக் கொள்ள வேண்டுமென்பதற்குத்தான் பாதுகாப்பு கள் என்ற யுக்தி கண்டுபிடிக்கப்பட்டது போலும்! காந்திஜீ யும் காங்கிரசும் பாதுகாப்பு என்ற கருத்தை ஏற்றுக் கொண்டார்கள் என்றும், 1931-ம் வருஷத்திய டில்லி ஒப் பந்தத்தில் இந்தியாவின் நன்மையை உத்தேசித்து பாது காப்புகள் தேவை என்ற ஷரத்து காணப்படுகிறதென்றும் அதிகாரிகள் திருப்பித் திருப்பிச் சொல்லி வருகிறார்கள்.

வியாபார சம்பந்தமான ஒப்பந்தங்களும், பாதுகாப்பு களும் சில்லரை சங்கதிகளாகும். நீண்ட காலமாக இந்திய மக்களை சுரண்டுவதற்காகவும், அவர்களுடைய பணத்தை யும், அரசியல் உரிமையையும் வடிக்கட்டி ஒன்றுமில்லாமல்

அடிப்பதற்காகவும் கையாண்ட முறைகளைசட்டத்தின் மூல மாக பிரிட்டிஷார் வலுப்படுத்திக் கொண்டதுதான் குறிப் பிடத் தக்கது. இந்தப் பாதுகாப்புகளும் ஷரத்துகளும் இருக்குமளவும், எந்தத் துறையிலும் இந்தியாவுக்கு உண் மையான முற்போக்கு ஏற்பட முடியாது. சட்ட வரம்புக்கு உள்பட்ட முறைகளால் தேசத்தை முன்னேறச் செய்யும் படியாக ஒருவித வசதியும் இந்தப் புதிய அரசியல் திட்டத் தில் இல்லை. என்ன முயற்சி செய்து பார்த்தாலும், அது பாதுகாப்புகள் என்ற சுவரிலே போய் மோதிக் கொள்ள வேண்டியிருக்கும். அதனின்றும் என்ன தெரிய வருமென் ருல், சட்ட வரம்புக்கு உள்பட்ட கிளர்ச்சியால் எதையும் பெற முடியாது என்பதுதான். அவலக்ஷணமான சமஷ்டி யென்ற கொள்கையைத் தாங்கிய இந்தப் புதிய அரசியல் அமைப்பை எந்த வகையில் நோக்கிப் பார்த்தாலும், அது ஒரு அபத்தமான திட்டமாகும். இதில் அபேதவாதத் திற்கான மார்க்கம் வேண்டுமென்றே தடுக்கப்பட்டிருக்கிறது. அதிகாரப் பொறுப்பு இந்தியர்களுக்கு முன்னைக் காட்டி லும் அதிகமாக இதன் மூலம் அளிக்கப்பட்டிருக்கிறது என்பது கொஞ்சம் உண்மைதான். ஆனல் உண்மையான சீர்திருத்தங்களை செய்வதற்கான வசதியும், அதிகாரமும் கொடுக்கப்படவில்லை. பொறுப்பை யேற்காமல் உண்மை யான அதிகாரம் எல்லாவற்றையும் பிரிட்டன் தன் கையி லேயே வைத்துக்கொண்டு விட்டது. இந்தப் பட்டவர்த்தன மான சர்வாதிகாரத்தை பாவனையால் கூட மறைத்துக் கொள்ள யாதொரு முயற்சியும் செய்யப்படவில்லை. உலகமே இப்பொழுது விரைவாக மாறிக்கொண்டு வருகிறது. அந்த வேகத்திற்கு தக்கபடி நீண்டு வளைந்து கொடுக்கும்படியான அரசியல் அமைப்பு வேண்டும். வேகமாக முடிவுக்கு வரவும் அந்த முடிவை அமுலுக்குக் கொண்டு வரவும் அதிகாரம் படைத்த அரசியல் அமைப்புவேண்டும். நவீன உலகத் திலே மாறுதல்கள் விரைந்துவந்து கொண்டிருக்கையில் பிரான்ஸ், இங்கிலாந்து, முதலிய தேசங்களில் நடைபெற்று வரும் ஜனநாயக ஆட்சிமுறை சரியாக அரசியல் பொறுப் பை ஏற்று நடத்த முடியுமா என்பது சந்தேகம். ஆனல் அந்தக் கேள்வி இந்தியாவில் எழுவதற்கு இடமேயில்லை. இந்தியா நகர முடியாமல் சங்கிலிகளாலும், தளைகளாலும் இந்தப் புதியஅரசியல்திட்டம் மூலமாகக்கட்டப்பட்டுஇருக் கிறது. புதிய சீர்திருத்தம் என்ற மோட்டார் காரில்

எஞ்சின் கிடையாது. எல்லாம் 'பிரேக்' தான் புதிய திட்டம் ராணுவ அமுக்கு சமானம் என்று சொல்லலாம். பலாத்கா ரத்தைக் கொண்டவன் தான் தலைகுப்புற கவிழ்ந்து போகாம லிருப்பதற்கு, ராணுவ அமுலைத் தவிர வேறு எதையும் கையாள முடியாது.

புதிய திட்டத்தினால் கொஞ்சம் கூட சுதந்திரம் கொடுக்கப்படவில்லை என்பது தெளிவு. ஏனென்றால் இந் தியாவிலுள்ள மகா மிதவாத கூட்டங்கள் கூடி அதை பிற்போக்கான திட்டம் என்று கண்டித்திருக்கின்றன. சர்க் காரை வழக்கமாக ஆதரிப்பவர்கள் தங்கள் மிருதுவான பழைய சுருதிகளிலேயே திட்டத்தை கண்டித்திருக்கிறார் கள். மற்றவர்கள் அதிகமான ஆத்திரத்தோடு கண்டித் திருக்கிறார்கள்.

இந்தியா பிரிட்டிஷ் ஆட்சிக்குள் வந்தது தெய்வா தீனம்தான் என்று சதா ஜபித்துக் கொண்டு வாழ்த்துக் கூறி வந்தமிதவாதிகள்கூட, இந்தத்திட்டத்தைக் கண்டபிறகு தங் களுடைய பழைய நம்பிக்கையை பூராவாக வைத்துக்கொள்ள முடியவில்லை. அவர்கள் திட்டத்தை வலுவாகக் கண்டித்தார் கள். ஆனால் நிலைமையின் உண்மையான தன்மையை அறிந்து கொள்ளாமல், சொல் மோகத்தில் அகப்பட்டுக் கொண்டு அவர்கள், யாதாஸ்திலும், மசோதாவிலும், 'குடியேற்ற நாட்டு அந்தஸ்து' என்ற சொற்கள் காணப்படவில்லையே என்று வருந்தி, அதற்காகக் கூக்குரலிட்டார்கள். ஸர். சாமு வல் ஹோர் அந்த அந்தஸ்தைப்பற்றி ஒரு விதமாக அறிக் கையை வெளியிட்டதும், தங்கள் கௌரவம் காப்பாற்றப் பட்டதாக மிதவாதிகள் எண்ணிக் கொண்டார்கள். குடி யேற்ற நாட்டு அந்தஸ்து என்பது அர்த்தமில்லாத ஒரு சங் கதி. அதை ஒரு நாளும் நாம் அடையவே முடியாது. அதைப்பற்றி மிதவாதிகள் கனவு கண்டு கொண்டு பிரசங்க மாரி செய்யக்கூடும். பிரிட்டிஷ் பார்லிமெண்டையும், பிரிட் டிஷ் பொது மக்களையும் நம்பாமல், ஸர். தேஜ் பகதூர் சாப்ரூ மன்னனுக்கு மனுச்செய்து கொண்டிருக்கிறார். அவர் கைதேர்ந்த வக்கீல். எனவே புது மாதிரியான வேடிக்கை கொண்ட கொள்கை ஒன்றை பிரகடனம் செய்தார். "பிரிட் டிஷ் பார்லிமெண்டும் பிரிட்டிஷ் பொதுமக்களும் இந்தியா வுக்கு ஏதாவது நன்மை செய்யலாம்; அல்லது செய்யாம

யிருக்கலாம். ஆனால் இவர்களுக்கு மேலே அரசர் இருக்கின்றார். அவர் இந்தியக் குடிமக்களின் நலத்தைப் பாதுகாத்து, இந்தியாவின் அமைதியையும், செழிப்பையும் நிலைநாட்டுவார்'' என்று சாப்ரூ சொல்லுகிறார். விநோதமான கொள்கையல்லவா! இனி இந்தியர்களுக்கு யாதொரு தொல்லையுமேயில்லை! அரசியலமைப்பு, சட்டம், அரசியல் மாறுதல் முதலியவைகளைப்பற்றி இந்தியர்கள் இனி யாதொரு முயற்சியும் எடுத்துக் கொள்ள வேண்டாமல்லவா?

ஆனால் மிதவாதிகள் இந்தத் திட்டத்திற்கு தங்கள் எதிர்ப்பைக் குறைத்துக் கொண்டார்கள் என்று குறிப்பிடுவது நேர்மையாயிராது. தற்போதைய கெடுதலான ஆட்சி முறையே போதுமென்றும், இந்தியாவின்பேரில் பலவந்தமாக திணிக்கப்படும் இந்த தேவையில்லாத புது ஆட்சி முறை வேண்டாமென்றும் அவர்களில் பெரும்பான்மையோர் தெளிவாகக் கூறிவிட்டார்கள். இவ்வளவுதான் அவர்கள் செய்யக்கூடிய காரியம். ஏனெனில், இதைக் காட்டிலும் அதிகமாக ஆக்ஷேபித்து எதிர்த்துப் போராடுவதற்கு அவர்களுடைய கொள்கைகளே இடந்தரமாட்டா. ஆனால் அவர்கள் அழுத்தமாக இந்தத் திட்டத்தை கண்டித்துக் கொண்டே போவார்கள் என்று தாராளமாகக் கொள்ளலாம். "முதலிலே நீ வெற்றிபெறுவிடின் மீண்டும் கூக்குரல் போடு'' என்ற பழைய வாக்கியத்தையே அவர்கள் தங்கள் கக்ஷிக்கு சூத்திரமாகவும் மகுடமாகவும் கொள்ளலாம்.

பிரிட்டனிலே தொழிற் கக்ஷியார் வெற்றிபெற்று அவர்கள் மந்திரிப் பதவிக்கு வருவதால், லாபம் உண்டென்று மிதவாதத் தலைவர்கள் யாவரும் சில காங்கிரஸ்காரர்களும் மற்றும் பலரும் எண்ணினார்கள். பிரிட்டனிலுள்ள தீவிர கக்ஷிகளின் ஒத்துழைப்பை இந்தியா நாடக் கூடாது என்று சொல்வதற்கில்லை. பிரிட்டிஷ் தொழில் கக்ஷியார் மந்திரிப் பதவி ஏற்றுக் கொள்வதை இந்தியா உபயோகப்படுத்திக் கொள்ளக் கூடாது என்பதற்குமில்லை. ஆனால் பிரிட்டனில் சுற்றிக் கொண்டிருக்கும் அதிர்ஷ்ட சக்கரத்தின் மாறுதல் ஒன்றையே, திக்கற்றத்தனமாக நம்பிவாழ்வது இந்தியாவின் கௌரவத்திற்கு துளிகூட பொருந்தாததாகும். கௌரவம் ஒரு புறமிருக்க, அது அறிவுடைமையும் ஆகாது. பிரிட்டிஷ் தொழிற் கக்ஷிகளிடமிருந்து நாம் ஏன் அதிகமாக

எதையும் எதிர்பார்க்கவேண்டும்? ஏற்கனவே இரண்டு தடவைகள் தொழிற் கக்ஷி மந்திரி சபைகள் இருந்தனவே? அந்த சமயத்தில் இந்தியாவுக்கு அந்த ஆட்சியால் ஏற்பட்ட கேடுகளை நாம் மறக்கவே முடியாது. ஸ்ரீ ராம்ஸே மாக்டனால்டு தொழிற் கக்ஷியை விட்டு பிரிந்து போயிருக்கலாம். ஆனால் அவரது பழைய நண்பர்கள் அதிகம் மாறிவிட்டதாக காணப்படவில்லை. 1934-ம் வருஷம் அக்டோபர் மாதம் கூடிய சவுத் போர்ட்டு தொழிற் கக்ஷி மகாநாட்டில் ஸ்ரீமான் வி. கே. கிருஷ்ணமேனன் ஒரு தீர்மானம் கொண்டு வந்தார். 'இந்தியாவுக்கு பூரண சுயராஜ்யம் ஏற்படுவதற்காக, சுய நிர்ணயக் கொள்கையை இந்தியா சம்பந்தமாக உடனே ஏற்றுக் கொள்ளவேண்டும்' என்பதுதான் தீர்மானமாகும். ஸ்ரீ ஆர்தர் ஹெண்டர்ஸன் இந்தத் தீர்மானத்தை வாபீஸ் வாங்கிக் கொள்ளவேண்டுமென்று வற்புறுத்தினர். இந்தியாவுக்கு சுய நிர்ணயக் கொள்கையை அமுலுக்குக் கொண்டு வரும் விஷயத்தில் தொழிற் கக்ஷி நிர்வாகிகள் யாதொரு உறுதியும் கொடுக்க முடியாதென்று அவர் மனதைவிட்டுச் சொல்லிவிட்டார். "இந்தியாவிலுள்ள எல்லா கூட்டத்தார்களையும் கலந்துகொள்ளப் போகிறோம் என்று தெளிவாகவும் திட்டமாகவும் சொல்லிவிட்டோம். அதைக் கொண்டு இந்தியர்கள் திருப்தி அடைய வேண்டும்'' என்று அவர் சொன்னர். சென்ற தொழிற்கக்ஷி அரசாங்கமும், தேசீய அரசாங்கமும் இவ்வாறேதான் சொல்லின. அவைகளின் பயனென்ன? வட்டமேஜை மகாநாடு, வெள்ளைக் காகிதம், கூட்டுக் கமிட்டி யாதாஸ்து, இந்தியா சட்டம் இவைகள்தான். எனவே ஹெண்டர்ஸன் அவர்களின் கூற்றால் அதிகமாக என்ன திருப்தி உண்டாகப் போகிறது?

சாம்ராஜ்யத்தின் பொது விஷயங்கள் சம்பந்தமாக இங்கிலாந்தில் தொழிற் கக்ஷிக்கும் கன்ஸர் வேடிவ் கக்ஷிக்கும் வேற்றுமையே கிடையாது என்பது மிகத் தெளிவான சங்கதியாகும். தொழிற் கக்ஷியைச் சேர்ந்த சாமானியர்கள் தீவிர கருத்துக்கொண்டவர்கள் என்பது உண்மை. ஆனல் அவர்களுக்கு தொழிற் கக்ஷியை நடத்தி வரும் தலைவர்களிடம் அதிகமான செல்வாக்கு கிடையாது. தொழிற்கக்ஷியில் தீவிர வாதிகள் வலுவடைந்து வருகிறார்கள். ஏனெனின் நிலைமை விரைவில் மாறிக்கொண்டு வருகிறது. ஆனல் இத்தகைய மாறுதல்கள் பிரிட்டனில் ஏற்படப் போகின்

றன என்பதை நம்பி இந்திய இயக்கங்கள் தேக்க முற்று தூங்கிக் கொண்டிருக்க வேண்டுமோ?

நமது மிதவாத நண்பர்கள் பிரிட்டிஷ் தொழிற்கக்ஷியாரிடம் நம்பிக்கை வைப்பதில் விநோதம் ஒன்றிருக்கிறது. ஒருக்கால் பிரிட்டிஷ் தொழிற் கக்ஷி தீவிரக் கொள்கையை ஏற்று, அபேதவாதத் திட்டத்தை இங்கிலாந்தில் அமுலுக்குக் கொண்டுவருமாகில், அப்பொழுது இந்திய மிதவாதிகளும் மற்றும் நிதானக் கூட்டத்தார்களும் இந்தியாவில் என்ன செய்வார்கள்? இவர்கள் யாவரும் ஜனநிர்மாணத் துறையில் மிகுதியும் பிற்போக்கு கொண்டவர்கள். இவர்கள் தொழிற் கக்ஷியின் பொருளாதாரத் திட்டங்களை விரும்ப மாட்டார்கள். அவைகள் இந்தியாவுக்கு அமுலுக்கு வரக் கூடாது என்று அஞ்சுவார்கள். பிரிட்டனில் அபேதவாதத் திட்டத்தை ஆதரிப்பதென்று வந்து விட்டால், ஒருக்கால் இவர்கள் பிரிட்டிஷ் சம்பந்தத்தை அறுத்துக் கொள்ள வேண்டுமென்று ஆசைப் படவும் கூடும். ஏனென்றால் அபேதவாதத் திட்டம் இவர்களுக்கு பிடிக்காத ஒன்றாகும். பிரிட்டிஷ் சம்பந்தம் கூடாதென்றும், இந்தியாவுக்கு பூரண சுதந்திரம் வேண்டுமென்றும் சொல்லிக் கொண்டிருக்கும் என்னைப் போன்றவர்கள் அப்பொழுது அபேதவாத பிரிட்டனோடு முறித்துக்கொள்ள வேண்டாமென்றும், நெருங்கிய உறவு வைத்துக் கொள்ள வேண்டுமென்றும் தங்களுடைய மனதை மாற்றிக் கொள்ளவும் கூடும். பிரிட்டிஷ் பொது ஜனங்களோடு ஒத்துழைப்பதில், நம்மில் யாருக்கும் ஆக்ஷேபணையே இராது. நாம் ஆட்சேபிப்பதெல்லாம் பிரிட்டிஷ் சாம்ராஜ்யக்கொள்கையைப்பற்றித்தான். அந்தக் கொள்கை இருந்த இடம் தெரியாமல் தொலைந்து போகுமாகில் நாம் ஏன் பிரிட்டிஷ் பொது மக்களோடு ஒத்துழைக்கக் கூடாது? அப்பொழுது மிதவாதிகள் என்ன செய்வார்கள்? அப்பொழுதும் அந்தப் புதிய நிலைமையை ஏற்றுக்கொண்டு 'ஆண்டவன் லீலை' என்று தங்கள் மனதை தேற்றிக் கொள்ளவும் கூடும்.

வட்டமேஜை மகாநாட்டின் பயனாக சமஷ்டி என்ற திட்டம் ஏற்கப்பட்டதினால், இந்தியாவிலிருக்கும் சுதேச மன்னர்களுக்குத் அதிகமாக மரியாதை கொடுப்பதுபோல ஆயிற்று. பிரிட்டனி லிருக்கும் பிற்போக்காளர்கள் சுதேச

மன்னர்களை தழுவ ஆரம்பித்தது முதல், அவர்களுக்கு புதிய உயிர் உண்டாயிருக்கிறது. இவ்வளவு காலம் வரையில் அவர்களுக்கு இப்பேர்ப்பட்ட பிராதான்யம் ஏற்படவேயில்லை. இதற்கு முன்னே அவர்கள் பிரிட்டிஷ் ரெஸிடெண்டு ஸிறின கோட்டை கடக்க பயப்படுவார்கள். இந்திய அரசாங்கத்தாரோ, சுதேச மன்னர்களில் பலரை பகிரங்கமாக நிந்தை மனப்பான்மையுடன் நோக்கினுர்கள். சுதேச சமஸ்தான விஷயங்களில் இந்திய சர்க்கார் அடிக்கடி தலையிட்டார்கள். தலையிட்டது சரிதான். இன்றைக்கும் பல சமஸ்தானங்கள் இந்திய அரசாங்கத்தாரால் "கடனுக" கொடுக்கப்பட்ட உத்தியோகஸ்தர்களால் நிர்வாகம் செய்யப்பட்டு வருகின்றன. ஆனுல் இவ்வாறு தலையிடக் கூடாதென்று சர்ச்சிலும், ராதர் மீர் பிரபுவும் பிரசாரம் செய்ததால், இந்திய சர்க்கார் சிறிதளவு அச்ச மடைந்து, தலையிடும் விஷயத்தில் இப்பொழுது எச்சரிக்கையுடன் நடந்து கொள்கிறுர்கள். எனவே இப்பொழுது சுதேச மன்னர்களும் கொஞ்சம் தங்கள் குரலை உயர்த்திக் கொண்டு ஜோராகவே பேசுகிறுர்கள்.

இந்திய அரசியல் அரங்கத்தில் தரை மட்டத்திற்கு மேல் எழுந்த இவைகளை நான் ஒருவாறு ஆராய்ச்சி செய்ய முயன்றிருக்கிறேன். ஆனுல் இந்த எழுச்சிகள் இந்தியாவின் உண்மையான உள்ளக்கிடைக்களுக்கு பொருத்தமுள்ளவைகளல்ல. இந்த நிகழ்ச்சிகளுக்குப் பின்னே யிருக்கும் தூண்டுதல் எனக்கு மிகுதியும் வருத்த்த்தையுண்டாக்குகிறது. எவ்விதமான சுதந்திர தாகத்தையும் அடக்கி விடவேண்டும் என்ற தூண்டுதல் ஒரு பக்கம்; ஏராளமான கஷ்டங்கள், முன்னேறவிடாமல் தடுத்தல், நல்லெண்ணத்தை முறித்தல், பல தீய தன்மைகளை ஆதரித்து வளர்த்தல், இவைகள் இந்த எழுச்சிகளுக்குப் பின்னே நின்று வேலைசெய்கின்றன. ஆயிரக்கணக்கான இளைஞர்கள் சிறையிலேயிருந்து, வருஷங்களை எண்ணிக் கொண்டு, தங்கள் இதயத்தையே தின்று கொண்டு தவிக்கின்றுர்கள். அவர்களுடைய குடும்பத்தார்கள் உற்றுர், உறவினர், நண்பர்கள் முதலியோர் கசப்படைந்து போகிறுர்கள். மிருகபலத்திற்கு முன்னே அவமானத்தோடும், திக்கற்ற நிலைமையிலும் இருக்கின்றேம் என்ற எண்ணம் அவர்களை கவ்விக்கொள்கிறது. சாதாரண காலங்களிலேயே, பல ஸ்தாபனங்கள் சட்டத்திற்கு மீறியவையென்று அறிவிக்கப்படுகின்றன. 'அவசர அதிகாரங்களும்',

'அமைதிச் சட்டங்களும்' அரசாங்கத்தாரின் அம்புராத் தூணியில் சாசுவதமாக இடம் பெற்று விட்டன. தனி நபர்களின் உரிமைகளைக் குறைப்பது என்ற நிகழ்ச்சி சாதாரணமாகி விட்டது. அநேக நூல்களும், பத்திரிகைகளும் வெளியில் பரவாமல் தடுக்கப்படுகின்றன. 'கடல் சுங்கன் சட்ட' மூலமாக பல நூல்களும், பத்திரிகைகளும் இந்தியாவிற்குள் வராமல் தடுக்கப்படுகின்றன. அபாயகரமான இலக்கியங்களை வைத்துக்கொண்டிருந்தால் நீண்ட காலம் சிறைவாசம் நேரும். அரசியலைப்பற்றியோ தற்கால பொருளாதார பிரச்னைகளைப்பற்றியோ, மனதை விட்டு அபிப்பிராயத்தை சொன்னாலும் சரி, அல்லது ரஷ்யாவில் ஏற்பட்டிருக்கும் சமூக நாகரீக முன்னேற்றப்படித் தரங்களைப்பற்றி சாதகமாக எழுதினாலும் சரி, கண்காணிப்பு அதிகாரிக்கு கோபம் வந்து விடுகிறது.

ரவீந்திரநாத் டாகூர் ரஷ்யாவிற்குப் போய் பார்த்த பிறகு ஒரு கட்டுரை எழுதினர். அதை "மாடர்ன் ரெவ்யூ" பத்திரிகை பிரசுரித்ததற்காக, வங்காள அரசாங்கத்தார் அதை எச்சரிக்கை செய்தார்கள். "அந்தக் கட்டுரையில் இந்தியாவில் நடைபெற்றுவரும் பிரிட்டிஷ் ஆட்சியின் பயன்கள் சீர்கேடான முறையில், குறிப்பிடப்பட்டிருக்கின்றன. அதனால் எச்சரிக்கை செய்யப்பட்ட"தென்று பார்லிமெண்டு சபையில் உதவி இந்தியாமந்திரி சமாதானம் தெரிவித்தார். பிரிட்டிஷ் ஆட்சியின் பயன்களைப்பற்றி தீர்ப்பு சொல்லக் கூடிய நீதிபதி, கண்காணிப்பு அதிகாரி தான்போலும்! அவருக்கு விரோதமான கருத்தை நாம் வைத்துக் கொள்ளவும் கூடாது; வெளியிடவும் கூடாது. ரவீந்திரநாத் டாகூர் டப்ளின் நகரத்திலிருக்கும் நண்பர்களின் சங்கத்திற்கு வாழ்த்துச் செய்தி அனுப்பியதைப் பற்றியும் வங்காள அரசாங்கத்தாரால் ஆட்சேபணை செய்யப்பட்டது. கலை நாகரிக விஷயங்களில் சிரத்தை கொண்டவரும், வேண்டுமென்றே அரசியலிலிருந்து விலகி நிற்பவரும், இந்தியாவின் பூஜ்யரும், உலக கீர்த்தி கொண்டவரும் முனிவருமான, டாகூர் அவர்களே அவ்வாறு அடக்கி ஒடுக்கப்பட்டால், மட்டமான பேர்வழிகளின் கதி என்னவாகும்? அடக்கி ஒடுக்கிவிட்டாலும் பாதகமில்லையே? இந்தச் செயல்களால் உண்டாகும் பொதுஜன அச்சம் தான் பொறுக்க முடியாததாக யிருக்கிறது. இந்த நிலமை

யில் யோக்கியமாக பத்திரிகை நடத்த முடியாது. சரித்திரத்தை சரிவர ஆராய முடியாது. அதைப் பள்ளிக்கூடத்தில் உண்மயான முறையில் சொல்லிக் கொடுக்கவும் முடியாது. பொருளாதாரத்தையும், அரசியலையும், தற்கால விஷயங்களையும்பற்றி உண்மையாக மதிப்பிட முடியாது. இவைகளையெல்லாம் பின் பலமாக வைத்துக் கொண்டு, சீர்திருத்தங்களையும் பொறுப்பாட்சியையும் வழங்கப் போகின்றதாம்!

உலகத்தில் இப்பொழுது அறிவுக் குழப்பம் ஏற்பட்டு வருகிறதென்று புத்திசாலிகளெல்லோரும் அறிவார்கள். தற்போது இருக்கும் நிலைமைகளில் உலக மக்களுக்கு துளிக் கூட திருப்தியில்லையென்பதும் அவர்களுக்குத் தெரியும். நமது கண்கள் முன்னாலேயே, நீண்ட காலம் வரைக்கும் தாங்கி, எதிர்காலத்தை உருவாக்கும் மாறுதல்கள் நேர்ந்து வருகின்றன. எதிர்காலம் எவ்வாறு அமைக்கப்பெற்றாலும், அதைப்பற்றி வெறும் தத்துவம் மட்டும் பேசுகிற சங்கதியல்ல. ஒவ்வொரு தனி நபரையும் பாதிக்கக் கூடிய விளைவுதான் எதிர்காலத்தில் நேரும். ஆகவே இந்த மாறுதல்கள் நேரும்பொழுது, தான் என்ன செய்வதென்று ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய மனதையும் செயலையும் திட்டப்படுத்திக் கொள்ள வேண்டும். எதிர்கால விளைவுகளுக்கு தூண்டுதல்களாக இருக்கும் சக்திகளையும் அவன் ஆராய வேண்டும். பழைய உலகம் முடிவடைந்து புதிய உலகம் உருவெடுத்து வருகின்றது. ஒரு பிரச்னைக்கு பரிகாரத்தை நாடினால், முதலிலே அந்தப் பிரச்னை யாது என்பதை விளக்கமாக தெரிந்து கொள்ள வேண்டும். பரிகாரம் தேடுவது எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியம் பிரச்னையைத் தெரிந்து கொள்ளுவதுமாகும்.

நமது அரசியல் வாதிகள் உலக நிகழ்ச்சிகளை அலட்சியம் செய்கிறார்கள். அவைகளை நேரே அறிந்து கொள்ளுவதில்லை. இது துர்ப்பாக்கியமாகும். இந்த அறியாமை இந்தியாவிலிருக்கும் அதிகாரிகளின் மத்தியில் பரவிக் கிடக்கின்றது. ஏனென்றால் சிவில் சர்விஸ் கூட்டத்தார் தங்களுடைய சிறிய உத்தியோக உலகத்தில் தற்பெருமையோடு சுகமாக வாழ்ந்து வருகிறார்கள். உத்தியோகஸ்தர்களில் உச்சியில் இருப்பவர்கள்தான் இந்தப் பிரச்னைகளைப் பற்றி யோசிக்க வேண்டிய நிலைமையில் இருக்கின்றார்கள்,

இந்திய அரசாங்கம் உலக நிகழ்ச்சிகளின் படிக்கு தன்னுடைய போக்கை நிர்ணயித்துக்கொள்ளவேண்டி யிருக்கிறது. இந்தியா ஆங்கில ஆதிக்கத்தின் கீழ் இருக்கும் காரணத்தால் பிரிட்டிஷ் அந்நிய நாட்டுப் போக்கு மிகுதியும் பாதிக்கப்படுகிறதென்பது எல்லோருக்கும் தெரிந்த சங்கதி. ஜப்பானிய சாம்ராஜ்யத்துக்கும், சோவியத் அரசாங்கத்தில் வளரும் வல்லமைக்கும், ஸிங்கியாங்கில் ஆங்கிலேயர்களும், ரஷ்யர்களும், ஜப்பானியர்களும், தனித்தனியே செய்யும் சூழ்ச்சிகளுக்கும், மத்திய ஆசியா, ஆப்கனிஸ்தானம், பர்ஷியா முதலிய தேசங்களில் நடைபெறும் நிகழ்ச்சிகளுக்கும், இவைகளுக்கும் இந்திய அரசியல் போக்குக்கும் எவ்வளவு நெருங்கிய சம்பந்தம் இருக்கிறதென்று நமது இந்திய அரசியல் வாதிகளில் எத்தனை பேர்கள் யோசிக்கிறார்கள்? மத்திய ஆசியாவின் நிலைமை காஷ்மீரத்தைப் பாதிக்கிறது. எனவே பிரிட்டிஷார் காஷ்மீரத்தை கண்ணும் கருத்துமாகப்பார்த்துக்கொண்டு, அதைத் தங்களுக்கு தற்காப்பு வச்தியாக வைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

உலக முழுதிலும் இப்பொழுது விரைவில் நேர்ந்து வருகிற பொருளாதார மாறுதல்களை இன்னும் முக்கியமாக கவனிக்க வேண்டும். பத்தொன்பதாம் நூற்றாண்டில் அமுலிலிருந்த திட்டம் ஒழிந்துபோய்விட்டது. அந்தத்திட்டத்துக்கும், தற்போதைய தேவைகளுக்கும் சம்பந்தமே இல்லை. இதை நாம் உணரவேண்டும். ஒவ்வொரு படியாக அமைத்துக்கொண்டு போகவேண்டும்: அதாவது ஒரு தீர்ப்பைக்கொண்டு வேறொரு தீர்ப்பு என்று வழக்கறிஞர்கள் சொல்லுவது போல பொருளாதார திட்டத்தில் ஒன்றும் நடவாது; ஏனெனின் அப்பேர்ப்பட்ட முந்தின தீர்ப்பே கிடையாது. மாட்டுவண்டியை தண்டவாளங்களில் கொண்டு போய் நிறுத்தி அதை ரயில் வண்டி என்று சொல்ல முடியாது. மாட்டு வண்டி ஒழிந்துபோய், புது வண்டிக்கு இடம் கொடுக்க வேண்டியதுதான். ருஷ்யாவில் மட்டுமல்ல, மற்ற நாடுகளிலும் புதிய திட்டங்களும், பெருத்த மாறுதல்களும் பேசப்பட்டு வருகின்றன. தலைவர் ரூஸ்வெல்ட் முதலாளித் திட்டத்தை வைத்துக்கொண்டு, அதை வலுப்படுத்த வேண்டுமென்ற விருப்பம் கொண்டவர்; எனினும் அமெரிக்க வாழ்க்கையையே அடியோடு மாற்றும்படியான பிரம்மாண்டமான

திட்டங்களை தைரியங்கொண்டு நிர்மாணம் செய்துவிட்டார். அதிக உரிமை படைத்தவர்களை சிறிது துடைத்து, உரிமை குறைந்தவர்களைக் கை தூக்கிவிட வேண்டுமென்று அவர்பேசுகிறார். அவர் வெற்றிபெறலாம், அல்லது தோற்றுப் போகலாம்; ஆனல் அந்த மனிதனுடைய தைரியத்தையும், பழைய சுவடுகளிலிருந்து தம்முடைய தேசத்தை இழுத்து வேறு சுவட்டுக்கு மாற்றவேண்டுமென்ற அவரது ஆசையையும் எவரும் மறுக்க முடியாது. தம்முடைய போக்கை மாற்றிக் கொள்ளவும், தவறுகளை ஒப்புக்கொள்ளவும் அவர் அஞ்சுவதில்லை. இங்கிலாந்திலே லாயிட் ஜார்ஜ் அவர்கள் புதிய திட்டம் ஒன்றை வெளிக் கொணர்ந்திருக்கிறார். இந்தியாவில் நமக்கும் பல புதிய திட்டங்கள்வேண்டும். "எதெது தெரிந்து கொள்ள வேண்டுமோ அதை ஏற்கனவே தெரிந்துகொண்டாய்விட்டது; எதெது செய்யத் தகுதிபெற்றதோ அதை ஏற்கனவே செய்தாகிவிட்டது" என்று சொல்லும் பழம்பேச்சு அபாயமானதாகும்.

நாம் பல பிரச்னைகளைத் தீர்க்க வேண்டும். அவைகளுக்கு தைரியமான பரிகாரங்களை நாட வேண்டும். பாமர மக்களின் நிலைமையை மிகுதியும் சீர்படுத்த முடியாமற்போனல் தற்போதைய ஜன நிர்மாண, பொருளாதாரத் திட்டம் நீடித்திருப்பதற்கு எவ்வாறு உரிமை பெற்றிருக்கிறது? வேறு ஏதேனும் ஒரு திட்டத்தால் பொது மக்களின் நிலைமை சீர்படுமா? அரசியல் மாறுதலால் மட்டும் எல்லாத் துறைகளிலும் தீவிரமான அபிவிருத்தி ஏற்படுமா? பரம்பரை உரிமையாளர்கள் மிகத் தேவையான மாறுதல்களுக்குக் குறுக்கே நிற்பார்களாகில் பொதுமக்கள் எவ்வளவு வறுமையிலும் கஷ்டத்திலும் இருந்தாலும் சரியென்று முன் சொன்னவர்களின் உரிமைகளைக் காப்பாற்ற முயலுவது நியாயமாகுமா? அல்லது அறிவுடைமையாகுமா? உரிமையாளர்களை தொந்தரவு செய்ய வேண்டுமென்பது நோக்கமில்லை. ஆனல் அவர்கள் மற்றவர்களுக்குக் கெடுதி செய்யாமல் தடுக்க வேண்டியதுதான் நோக்கமாகும். பரம்பரை உரிமைகளோடு ராஜிக்கு வரக்கூடுமானல் அது நல்ல காரியம்தான். இத்தகைய ராஜி நியாயமா அநியாயமா என்று அபிப்பிராய பேதமிருக்கலாம். ஆனல் அத்தகைய ராஜி தேவை என்றும், உசிதம் என்றும் எல்லோரும் ஏற்றுக்கொள்ளுவார்கள். இத்தகைய ராஜியினல் ஒரு உரிமையைக் களைந்தெரிந்துவிட்டு, வேறொரு

உரிமையை நிலை நாட்டுவது என்றால் அது ராஜியல்ல. தேவை யானபொழுதும், சாத்தியமானபொழுதும் நஷ்டஈடு கொடுப் பது சிலாக்கியமே. ஏனென்றால் போராட்டம் என்று வந்து விட்டால், அதிகமாக செலவு பிடிக்கும். ஆனால் உரிமையா ளர்கள் இத்தகைய ராஜிகளை ஏற்பதில்லையென்று சரித்திரத் தில் அழுத்தமாகக் காணக் கிடக்கிறது. ஜனசமூகத்தில் ஜீவாதாரமான வேலைகளை செய்யாத கூட்டங்களுக்குப் பொதுவாக அறிவும் யோசனையு மிருப்பதில்லை. அந்தக் கூட்டங்கள் முழுப்போடாக எல்லாவற்றிற்கும் ஆசை கொண்டு சூதாட்டம்போல் காரியம் செய்கிறார்கள். எனவே அவர்கள் முற்றிலும் மறைந்துபோய் விடுகிறார்கள்.

காங்கிரஸ் காரியக் கமிட்டி சொல்லுவதுபோல பறி முதல் முதலிய சங்கதிகளைப்பற்றி உருப் பிரியாத பேச்சு வெகுவாக பேசப்பட்டு வருகிறது. தற்போதைய பொரு ளாதார திட்டத்தின்படி, பிடிவாதமாயும் தொடர்ந்தும் பறி முதல் நடந்து கொண்டே வருகிறது. இதை ஒழிக்கும் பொருட்டே ஜனசமூக மாறுதல்கள் தேவையென்று சொல் லுகிறோம். தொழிலாளியின் தினசரி வேலையின் ஊதியத்தில் ஒரு பகுதி அன்றாடம் பறிமுதல் செய்யப்பட்டு வருகின் றது. குடியானவனுடைய குத்தகையையும், கிஸ்தியையும் உயர்த்தி உயர்த்தி, அதை அவனால் செலுத்த முடியவில்லை. அதை வசூலிப்பதற்காக அவனுடைய நிலம் பறிமுதல் செய்யப்படுகின்றது. முன் நாட்களில், பொது நிலங்கள் தனி நபர்களால் ஆக்கிரமிக்கப்பட்டு, பறிமுதல் செய்யப் பட்டதினால் அவைகள் பெரிய எஸ்டேட்டுகளாக மாற்றப் பட்டன. இவ்வாறு சிறு குடியானவர்களைத் தொடைத்து விட்டார்கள். பறிமுதல் என்பது தான் தற்போதைய திட் டத்தின் அஸ்திவாரமும், மூச்சுக்காற்று மாகும்.

இதற்குப் பரிகார முயற்சியாக ஜனசமூகம் பலவித உபாயங்களைக் கையாளுகின்றது. அவைகள் யாவும் பறி முதல் மாதிரிதான்; உதாரணமாக பளுவானவரிகள், மரண வரிகள், கடன் நிவர்த்திச் சட்டங்கள், நாணய மதிப்புயர்த் தல் முதலியன. நாட்டுக் கடன்களையே கொடுக்க முடியா தென்று ரஷியா மட்டுமல்ல, முதலாளி தத்துவம் அமுலி லிருக்கிற நாடுகள் கூட சமீபத்தில் சொல்லி விட்டன. அமெரிக்க ஐக்கிய மாகாணங்களுக்குத் தான் கொடுக்க

வேண்டிய கடனைக் கொடுக்க முடியாதென்று பிரிட்டன் சொல்லி விட்டது. இதே உதாரணத்தை பிரிட்டன் சம்பந்தப்பட்ட வரையிலும் இந்தியா கைக்கொள்ளுமாகில் காரியம் எவ்வளவு மோசமாய்ப் போய்விடும். ஆனால் பொது மக்களை செழிப்பாக்குவதற்கு இத்தகைய கடன் மறுப்புகளும், பறிமுதல்களும் அதிகமாகப் பயன் படுவதில்லை. அடிப்படையான நோய் தொலைவதில்லை. ஆகவே புதிதாக ஜன நிர்மாணம் செய்யவேண்டுமானால், மூலக் காரணத்தை அடியோடு அகற்ற வேண்டும்.

தற்போதைய நிலைமையை மாற்றுவதற்காக புதிய முறையை யோசிக்கும் பொழுது எல்லாவகைகளிலும் அதனுடைய லாப நஷ்டக் கணக்குகளைப் பார்த்து விடவேண்டும். குறுகிய யோசனையுடனிருக்க முடியாது. மனிதவர்க்கம் அறிவிலும் பொருளிலும் செழித்து, சந்தோஷ மடைந்து, முற்போக்கு அடைய வேண்டிய நோக்கத்திற்கு புதிய முறை எவ்வளவு தூரம் பயன்படும் என்பதை நாம் யோசிக்க வேண்டும். இந்த தற்போதைய நிலையை மாற்ற விட்டால், எவ்வளவு நஷ்டம் உண்டாகிறது என்பதையும் கணக்குப் போடவேண்டும். பட்டினி, துன்பம், முன்னேறிச் செல்ல முடியாத வாழ்க்கை, எல்லாவகையிலும் சீரழிவு, அவமானம் முதலியவைகளைக் கணக்குப் போடவேண்டும். அடிக்கடி விடாமல் நேர்ந்து வரும் வெள்ளத்தைப் போல தற்போதைய பொருளாதாரத்திட்டம் ஏராளமான மக்களை நாசத்திற்கு அடித்துக் கொண்டே போய்விடுகிறது. நம்மில் சிலர் தொட்டிகளில் வெள்ளத்து நீரை வெளியேற்றுவதால், பிரவாகத்தைத் தடுக்கவும் முடியாது. இந்த மக்களை காப்பாற்றவும் முடியாது. அணைகள் போட வேண்டும். கால்வாய்களை வெட்டியமைக்க வேண்டும். தண்ணீரின் நாசகாரியான வேகத்தை உபயோகமுள்ள பாதைகளில் செலுத்தி, அதை மனிதவர்க்கத்திற்கு பயன்படும்படியாகச் செய்ய வேண்டும்.

அபேதவாதம் குறிக்கொண்டிருக்கிற ஏராளமான மாறுதல்களை, இரண்டொரு சட்டங்களை திடீரென்று செய்வதன் மூலமாக கொண்டு வர இயலாது என்பது வெளிப்படை. அடிப்படையான அதிகாரமும் சட்டங்களும் தேவை. அப்பொழுதுதான் அஸ்திவாரத்தை வலுவாய்

அமைத்து முன்னேறிச் சென்று அபிவிருத்தி அடைய முடியும். அபேதவாத ஜனசமூகத்தை நிர்மாணம் செய்ய வேண்டுமானால், அதை அப்படியும் இப்படியும் அறை குறையாயும் செய்ய முடியாது. முக்கியமான தடைகளை முதலிலே நீக்கிவிட வேண்டும். கெடுப்பது நோக்கமல்ல; கொடுப்பது நோக்கம். நிகழ் காலப் பஞ்சத்தை எதிர்காலச் செழிப்பாக மாற்றுவது நோக்கமாகும். அந்த நோக்கத்தைப் பூர்த்தி செய்யும் காலையில் ஜனசமூகத்தைத் தேக்கத்தில் வைத்துக் கொண்டிருக்கும் தடைகளையும், சுயநலப் போக்குகளையும் களைந்தெறிய வேண்டும். நாம் கைக்கொள்ளும் முறை நமக்கு பிடித்ததா இல்லையா என்பதைப் பொருத்ததல்ல; வெறும் மலட்டு நியாயத்தைப் பொருத்ததுமல்ல. அந்த முறையினால் அபிவிருத்தி ஏற்படுமா? அந்த முறை பொருளாதார ஆராய்ச்சிக்கு ஏற்றதா? மாறிக் கொண்டு வரும் நிலைமைகளுக்குத் தோதாக வேலை செய்யக் கூடியதா? அதனால் எல்லா மக்களுக்கும் நன்மை உண்டாகுமா? இவைகளை யோசிக்க வேண்டும்.

இந்த மாறுதல்களை உண்டாக்கு முன்னர் போராட்டம் நிச்சயமாக நேரும். சமரஸ வழி கிடையாது. ஆகவே நம்மில் ஒவ்வொருவரும் நாம் எந்தக் கட்சியில் இருக்க வேண்டுமென்பதை முன் கூட்டியே தீர்மானித்துக் கொள்ள வேண்டும். எந்தக் கட்சியில் சேருவது என்பதைப் பற்றி தீர்க்கமாக யோசித்துச் செய்ய வேண்டும். அபேதவாதம் வேண்டும் என்று உணர்ச்சிப் பெருக்கு மட்டும் இருந்தால் போதாது. அபேதவாதம் இன்னதென்று அறிவின் மூலமாக ஆராய்ச்சி செய்து பார்க்க வேண்டும். அனுபவங்களையும், கட்சி வாதங்களையும், நிகழ்ச்சிகளையும் ஒன்று திரட்டிப் பார்த்து விமர்சனம் செய்து, விரிவாய் ஆராய்ந்து முடிவுக்கு வரவேண்டும். மேல் நாட்டில் இது சம்பந்தமான இலக்கியம் நிறைய இருக்கிறது. ஆனால் இந்தியாவில் அதிகமாக இல்லை. மேலும் அநேக நல்ல நூல்கள் இந்தியாவிற்கு வரமுடியாமல் தடுக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் அன்னிய நாட்டு நூல்களை மட்டும் படித்தால் போதாது. இந்தியாவில் அபேதவாதத்தை நிர்மாணம் செய்ய வேண்டுமானால், அதை இந்திய நிலைமைகளுக்கு ஏற்றவாறு வளரச் செய்யவேண்டும். இந்த நிலைமைகளை கவனத்துடன் ஆராய்ச்சி செய்ய வேண்டும்; இவைகளை

ஆராய்ச்சி செய்து விவரமான திட்டங்களைத் தயார் செய்யக் கூடிய நிபுணர்கள் நமக்குத் தேவை. துர்ப்பாக்கியமாக நமது நிபுணர்களில் பெரும்பான்மையோர் சர்க்கார் உத்தியோகத்திலிருக்கிறார்கள்; அல்லது அரசாங்கக் கண்காணிப்புக்குக் கீழிருக்கும் சர்வகலாசாலைகளில் இருக்கிறார்கள். இந்தத் துறையில் விரிவாக ஆராய்ச்சி செய்ய அவர்களுக்கு தைரியம் இருப்பதில்லை.

தீர்க்கமாக யோசித்தால் மட்டும் போதாது. அதனால் அபேதவர்தத்தை நிர்மாணம் செய்ய முடியாது. வேறு சக்திகளும் தேவை. ஆனால் மேற்கூறிய யோசனையில்லாமல் விஷயத்தை நேரே அறிந்து கொள்ளவாவது அல்லது சக்தி வாய்ந்த இயக்கத்தை உண்டாக்கவாவது நம்மால் முடியாது என்று நான் உறுதியாய்க் கூறுவேன். தற்சமயத்தில் இந்தியாவில் விவசாயிகளின் பிரச்னைதான் மிகவும் முக்கியமானது. அதுதான் முக்கியமான பிரச்னையாக இருக்க முடியும். ஆனால் தொழிற்சாலைகளும் வளர்ந்து கொண்டு வருகின்றன. நம்முடைய லக்ஷியம்தான் என்ன? விவசாயிகளின் அரசாங்கமா அல்லது தொழிலாளிகளின் அரசாங்கமா? நம்முடைய நாடு விவசாய நாடாகத்தான் இருக்க முடியும். ஆனால் தொழிற்சாலைகளையும் விருத்தி செய்யவேண்டுமென்று நான் நினைக்கிறேன்.

நம்முடைய தொழில் முதலாளிகள் தங்களுடைய கருத்துக்களில் அதிகமான முற்போக்கு கொண்டவர்கள் அல்ல. முதலாளி தத்துவத்தைக் கூட அவர்கள் நன்றாகத் தெரிந்து கொள்ளவில்லை. பொதுமக்கள் மிகவும் ஏழைகளாக இருக்கிறார்கள். ஆலைச் சாமான்களை தொழிலாளிகள் வாங்க முடியாதபடிக்கு வறுமையில் ஆழ்ந்திருக்கிறார்கள். முதலாளிகள் தொழிலாளிகளின் கூலியை உயர்த்துவதற்கும், வேலை நேரத்தைக் குறைப்பதற்குமான யோசனைகளைக் கடுமையாக எதிர்த்துப் போராடுகிறார்கள். சமீபத்தில் பஞ்சாலைகளில் வேலை நேரம் பத்து மணி நேரத்திலிருந்து ஒன்பது மணி நேரத்துக்குக் குறைக்கப்பட்டது. இதனால் ஆலை முதலாளிகள் கூலியையும் குறைத்து விட்டார்கள். அதிக நேரம் உழைத்ததற்காக ஏற்பட்ட தனிக் கூலியையும் நிறுத்திவிட்டார்கள். எனவே வேலை நேரம் குறைக்கப்பட்டதால், கூலியும் குறைந்து போயிற்று. ஏழைத் தொழிலாளியின் வாழ்க்

கைத் திட்டம் சௌகரியத்திலும் குறைந்து போய்விட்டது. தொழிலாளியின் கூலி உயராமல்அவனுடைய வேலை மட்டும் அதிகப்பட்டு வருகின்றது. அவன் அதிக வேலையால் அயர்ந்து போகிறான். ஆலை முதலாளிகளின் நோக்கமோ பத்தொன்பதாம் நூற்றாண்டின் துவக்கத்தில் இருந்த நோக்கமாக இன்னும் இருந்து வருகிறது. சமயம் நேர்ந்த பொழுது அவர்கள் ஏராளமாக லாபம் சம்பாதிக்கிறார்கள். ஆனால் தொழிலாளியோ எத்தகைய சௌகரியமும் ஏற்படாமல் முந்திய நிலையிலேயே இருக்கிறான். சந்தை மந்தமாய்ப் போய், சாமான்கள் தேக்கமடைந்து போனால், கூலிகளைக் குறைக்காமல் ஆலைகளை நடத்த முடியாதென்று முதலாளிகள் முணுமுணுக்கிறார்கள். இந்தச் சந்தர்ப்பங்களில் அவர்கள் அரசாங்கத்தின் உதவியை மட்டுமல்லாமல், நடுத்தர வகுப்பைச் சேர்ந்த நமது அரசியல் வாதிகளின் அனுதாபத்தையும் அடைந்துவிடுகிறார்கள். இருந்தாலும் ஆமதபாத்தில் இருக்கும் பஞ்சாலைத் தொழிலாளியின் நிலை பம்பாயிலிருக்கும் தனது சகோதரத் தொழிலாளியின் நிலைமையைக் காட்டிலும் கொஞ்சம் சௌகரியமாக இருக்கிறது. வங்காள சணல் தொழிலாளிகளையும், சுரங்கத் தொழிலாளிகளையும் பார்க்கிலும் பஞ்சாலைத் தொழிலாளிகள் மொத்தத்தில் அதிக சௌகரியத்துடனிருக்கிறார்கள். நன்றாகவும், வலுவாகவும் அமைக்கப்படாத தொழில்களில் வேலைசெய்யும் தொழிலாளிகளின் நிலைமை மிகவும் கேவலமாக இருக்கிறது. 'சணல்' கோடீசுவரர்களும் 'பஞ்சு'ப் பிரபுக்களும் கம்பீரமான அரண்மனைகளில் வாழ்ந்து வருகிறார்கள். ஆடம்பர வாழ்வில் ஆழ்ந்து கிடக்கின்றார்கள். கற்பனை செய்ய முடியாத சுகத்திலிருக்கிறார்கள். ஆனால் பாதி உடைதரித்த தொழிலாளிகளோ இடிந்து விழும் குடிசைகளில் வசிக்கிறார்கள். இவையிரண்டையும் சீர் தூக்கிப் பார்த்தாலே போதும்; தக்க படிப்பினையாக இருக்கும். ஆனால் "விதி" என்று இந்த ஏற்றத் தாழ்வுகளை நாம் ஏற்றுக்கொள்ளுகிறோம். யாதொரு உணர்ச்சிப் பெருக்கும் இதனால் நமக்கு ஏற்படுவதில்லை.

இந்திய ஆலைத்தொழிலாளியின் கதி மோசமாயிருந்த போதிலும்கூட வருமானம் சம்பந்தப்பட்ட வரையில், குடியானவனுடைய நிலையைக் காட்டிலும் உயர்ந்ததாகும். ஆனால் விவசாயிக்கு ஒரு லாபமிருக்கிறது. அவன் நல்ல காற்றுக்கிடையே வசிக்கிறான். நெருக்கடியின் இன்னல்

களுக்கு ஆளாவதில்லே. ஆனல் குடியானவன் தன்னேத் தானே மிகவும் தாழ்த்திக்கொண்டு காந்திஜீ சொல்வதுபோல நல்ல காற்று வீசும் கிராமத்தை "குப்பைமேடா"க அடித்து விட்டான். கூட்டுறவு உணர்ச்சி அவனிடமில்லே. சமுதாய நலத்துக்காக அவன் சேர்ந்துழைப்பதுமில்லே. இதற்காக அவனேக் கண்டனம்செய்வது எளிது. ஆனல் துர்ப்பாக்கியவானை அவன் என்னதான் செய்வான்? அவனுக்கு எதிராக எல்லோரும் சேர்ந்து அவனே தலேகுப்புற விழ்த்தத் தயாராக இருப்பதாக அவனுடைய வாழ்க்கை அவனுக்குத் தோன்றுமாகில், அவன் என்னதான் செய்வான்? அவன் எவ்வாறு பிழைத்திருக்கிருன் என்பதே நம்பத்தகாத ஆச்சரியமாகும். பஞ்சாபில் 1928-29-ல் குடியானவனுடைய சராசரி தினசரி வருமானம் சுமாராக ஒன்பது அணுவாக இருந்தது. ஆனல் 1930-31-ல் இது ஒன்பது தம்பிடியாகப் போய்விட்டது. பஞ்சாப் குடியானவன், பீஹார் வங்காள ஐக்கிய மாகாணக் குடியானவனேக் காட்டிலும் அதிகமாக செழிப்புடையவன் என்று கருதப்படுவதுண்டு. ஐக்கியமாகாணம் கோரக்பூர் முதலிய சில ஜில்லாக்களில் செழிப்புக் காலங்களில் வயல் வேலேக்கு தினசரி கூலி இரண்டணு. நடுக்க முண்டாக்கும் படியான இத்தகைய நிலேமைகளே ஜீவகாருண்ய முயற்சிகளாலும், கிராமப் புனருத்தாரண முயற்சிகளாலும் சீர்திருத்தம் செய்வதாகச் சொல்வது குடியானவனுடைய துன்பத்தைக் கண்டு ஏளனம் செய்வதைப் போலிருக்கிறது.

இந்த உளேயிலிருந்து நாம் எவ்வாறு வெளியேறுவது? மிகக் கேவலமான நிலேமையில் விழுந்து கிடக்கும் பொதுமக்களே உயர்த்துவது கஷ்டமான வேலேயாயிருந்த போதிலும் கண்டிப்பாய் சாதனங்களே கண்டுபிடித்து விடலாம். ஆனல் உண்மையான கஷ்டம் இத்தகைய மாறுதல்களே விரும்பாத சுயநலம் தேய்ந்த கூட்டத்தார்களிடமிருந்து தான் உண்டாகின்றது. ஆங்கில சாம்ராஜ்யத்தின் கீழ் இருக்கையில், இந்த மாறுதலேப்பற்றி நினேப்பதே முடியாததாகும். எதிர்காலத்தில் இந்தியா எந்தப் பாதையில் செல்லும்? இந்த யுகத்தின் முக்கியமான போக்குகள், பொது உடைமையும் 'பாஸிஸ'முமாகும். இவைகளுக்கு நடுவே நிற்கும் போக்குகளும் கூட்டங்களும் கொஞ்சம் கொஞ்சமாக ஒழிந்து வருகின்றன. இந்திய தேசிய அபேதவாதப் போக்கில் அதாவது ஒருவாருன பாஸிஸ்ட் போக்கில் செல்லு

மென்று ஸர் மால்காம் ஹெய்லி ஜோஸியம் சொல்லி இருக்கிறார். அடுத்தாற்போல் வரும் எதிர்காலம் சம்பந்தப்பட்ட வரையில் ஒருக்கால் அவர் சொல்லுவது சரியாக இருக்கலாம். இந்தியாவின் இளைஞர்களிடமும், யுவதிகளிடமும் தெளிவான பாஸிஸ்ட் தன்மைகள் இப்பொழுதே காணப்பட்டு வருகின்றன; சிறப்பாக வங்காளத்திலும், ஓரளவு ஒவ்வொரு மாகாணத்திலும் இந்தத்தன்மை வெளித்தோன்றியிருக்கிறது. இதன் பிரதி பிம்பம் காங்கிரஸிலும் தெரிய வருகிறது. பாஸிஸ்ட் தத்துவத்திற்கும், முரட்டுத்தனமான பலாத்கார முறைகளுக்கும் நெருங்கிய சம்பந்த மிருப்பதால், சாத்வீகத்தை ஏற்றுக் கொண்டிருக்கும் காங்கிரஸ் தலைவர்களுக்கு பாஸிஸ்ட் தத்துவத்தில் வெறுப்பு. ஆனால் பாஸிஸ்ட் கொள்கையின் அடிதாங்கியாயிருக்கும் அம்சங்கள், அதாவது, தனி நபரின் சொத்துரிமை, பரம்பரை உரிமைகள் குறைக்கப்படுதல், 'கார்ப்பொரேட்' அரசாட்சி இவைகள் காங்கிரஸ் தலைவர்களுக்கு ஒருக்கால் பிடித்தமா யிருக்கலாம். பார்வைக்கு இது பழைய திட்டத்திற்கும் புதிதிற்கும் சமரஸமான ராஜிபோல் தோன்றுகிறது. ஆனால் இரண்டையும் ஒன்று சேர்த்து அமுலுக்குக் கொண்டு வரமுடியுமா என்பதுதான் சந்தேகம்.

ஆனால் பாஸிஸ்ட் கொள்கைக்கு உண்மையான ஆதரவு நடுத்தர வகுப்பின் இளைஞர்களிடமிருந்து தான் இயற்கையிலேயே கிடைக்கும். தற்சமயம் இந்தியாவில் புரட்சிக்காரர்களாயிருப்பது நடுத்தர வகுப்பைச் சேர்ந்தவர்கள் தான்; தொழிலாளிகளல்ல. ஆனால் ஆலைத் தொழிலாளிகள் அதிக புரட்சித் தன்மை வாய்ந்திருக்கலாம். பாஸிஸ்ட் கொள்கைகள் செழிப்பாக தேசிய நோக்கம் கொண்ட நடுத்தர வகுப்பார்களிடம் வளரக் கூடும். ஆனால் அன்னிய ஆட்சி இருக்குமளவும், ஐரோப்பாவில் பேசிக் கொள்ளுகிற பொருளில், நம் நாட்டில் பாஸிஸம் பரவ முடியாது. இந்திய பாஸிஸம் இந்தியாவின் பூர்ண விடுதலைக்காகப் பாடுபட வேண்டும். ஆகவே அது பிரிட்டிஷ் சாம்ராஜ்ஜியத்தோடு ஒட்டிக் கொண்டிருக்க முடியாது. அது இந்தியப் பொது மக்களின் ஆதரவைத் தேடவேண்டும். பிரிட்டிஷ் ஆட்சி முற்றிலும் நீக்கப்படுமாகில், பாஸிஸம் விரைவில் வளரக் கூடும்; ஏனென்றால் அதற்கு அப்பொழுது நடுத்தர, மேல் வகுப்பார்களும் உரிமையாளர்களும் நிச்சயமாய் ஆதரவு காண்பிப்பார்கள்.

ஆனல் பிரிட்டிஷ் ஆட்சி விரைவில் ஒழியாது. அதற்கிடையே பிரிட்டிஷ் அரசாங்கத்தார் கடுமையாக அடக்கு முறையைக் கையாண்ட போதிலும், பொது வுடைமை அபேதவாதக் கொள்கைகள் பரவிவருகின்றன. பொதுவுடைமைக் கட்சி இந்தியாவில் சட்டமீறிய கூட்டமாகும். தீவரமான திட்டங்களில் அனுதாபம் கொண்டிருப்பவர்களேயும், தொழிலாளர் சங்கங்களேயும் அர்த்தமில்லாமல் பொதுவுடைமைக் காரர்களென்று சொல்லப்பட்டு வருகிறது.

பாஸிஸம் பொதுவுடைமை என்ற இரண்டும் சம்பந்தப் பட்ட வகையிலும், என்னுடைய அனுதாபங்கள் யாவும் பொதுவுடைமைப் பக்கத்தில்தான். ஆனல் நான் அசல் பொதுவுடைமைக்காரனல்லவென்பது இந்த வரலாறிலிருந்து நன்கு தெரிந்திருக்கலாம். நான் பத்தொன்பதாம் நூற்றாண்டின் பரம்பரையில் வளர்ந்தவன். தாராளக் கட்சியின் போக்கில் அகப்பட்டுக்கொண்டு வந்தவன். ஆகவே அதினின்றும் பூரணமாக வெளியேறுவது முடியாத காரியம். இந்த குட்டி முதலாளி மனப்பான்மை அஸ்திவாரம் என்னிடம் இருப்பதால், பொதுவுடைமைக்காரர் பலருக்கு என்னிடம் இயல்பாகவே கோபமுண்டாகிறது. அதட்டி உருட்டிப் பேசுவதில் எனக்கு நம்பிக்கை இல்லே. கார்ல் மார்க்ஸ் நூல்களேயோ, வேறு எந்த நூல்களேயோ வேதவாக்கென்றும், அவைகளேப்பற்றி கேள்விகள் கேட்கக் கூடாதென்றும் சொல்லுவதை நான் வெறுக்கிறேன். நவீன பொதுவுடைமைக்கு முக்கிய அம்சமாக "துரோகிகளே கண்டுபிடிப்பது" என்பது இருந்து வருகிறது. அந்த வேட்டையை நான் வெறுக்கிறேன். பலவந்தப்படுத்துவதையும் வெறுக்கிறேன். ரஷியாவில் நேர்ந்த பல சம்பவங்கள் எனக்குப் பிடித்தமாயிருக்கவில்லே; சிறப்பாக, அந்நாட்டில் சாதாரண காலங்களிலேயே மிதமிஞ்சிய பலாத்காரம் உபயோகப்படுத்தப்படுவது எனக்குப் பிடிக்கவில்லே; என்றாலும் எனக்குப் பொதுவுடைமைத் தத்துவத்திலேதான் அதிகமான சார்பு இருக்கிறது.

மார்க்ஸ் அவர்கள் தாம் எழுதிய சிலவற்றில் தவறுகப் போயிருக்கலாம். அவர் மதிப்பிடும் தத்துவம் சரியாயில்லாமலிருக்கலாம். இதைப்பற்றித் தீர்ப்புக் கூற நான் தகுதியற்றவன். ஆனல் அவருக்கு ஜனசமூக நிகழ்ச்சிகளில்

அசாதாரணமான பார்வை இருந்ததாக எனக்குப் படுகிறது. இத்தகைய கூர்மையான பார்வைகள் கைகண்ட சாஸ்திரரீதியான முறையினால் ஏற்பட்டதாகும். இந்த முறையைக்கொண்டு பழைய சரித்திரத்தையும், தற்கால நிகழ்ச்சிகளையும் ஆராய்ச்சி செய்தால், வெகு நுட்பமான விஷயங்கள் கண்ணுக்குப் புலப்படுகின்றன. நடுத்தர வகுப்பார்களின் மத்தியில் புரட்சி மனப்பான்மை சமீப காலமாக வளர்ந்து வருவதை மார்க்ஸ் அவர்கள் சரியாக மதிப்பிடவில்லை அல்லது கவனிக்கவே இல்லை என்று சொல்லுவது எளிதான வேலையாகும். ஆனால் மார்க்ஸ் அவர்களின் தத்துவத்தின் சிறப்பு எங்கே இருக்கிறது தெரியுமா? அந்தத் தத்துவம் எதையும் அர்த்தமில்லாத அழுத்தத்தோடு சொல்லுவதில்லை. எதையும் சீர்தூக்கிப் பார்க்க வேண்டுமென்றும், காரியத்தின் மூலமாகத்தான் பலனைப் பெற முடியுமென்றும் குறிப்பிடுவதில் அதன் சிறப்பு விளங்குகின்றது. அந்த மனோபாவத்தினால் நம்முடைய காலத்தின் ஜனசமூக நிகழ்ச்சிகளைத் தெரிந்து கொள்ள, நமக்கு அது துணையாயிருக்கிறது. மேலும் நமக்கு காரிய முறையைக் காண்பித்து விடுதலைக்கு வழியையும் குறிப்பிடுகின்றது.

காரியமுறை கூட மாறக் கூடாத திட்டமான சூத்திரமல்ல. சந்தர்ப்பங்களுக்குத் தக்கவாறு மாற்றிக்கொள்ள வேண்டும். இது மார்க்ஸ் அவர்களின் நோக்கமோ என்னவோ, நிச்சயமாக லெனின் அவர்களுடைய நோக்கமாகும். லெனின் மாறிவரும் சந்தர்ப்பங்களுக்கு ஏற்றவாறு காரிய முறையை புத்திசாலித்தனமாக அமைத்துக்கொண்டு, தமது இந்தக் கொள்கையை நிரூபித்து விட்டார். "ஒரு நிலைமையில், அந்தக் காலத்தில் இருக்கும் நிகழ்ச்சிகளை கிரமமாக வரிசைப்படுத்தி விரிவாக ஆராய்ந்து பார்க்காமல் போராட்ட சாதனங்களைப்பற்றி 'ஆமாம்' அல்லது 'இல்லை' என்று ஒரு வார்த்தையில் பதில் சொல்ல முயலுவது மார்க்ஸ் அவர்களின் கொள்கையை விட்டு அடியோடு புரண்டு போவதாகும்" என்று லெனின் சொல்லுகிறார். "எதுவும் முடிவானதல்ல. சந்தர்ப்பங்களினின்றும் நாம் கற்றுக் கொள்ள வேண்டும்" என்று மீண்டும் அவர் சொல்லுகிறார்.

இப்பேர்ப்பட்ட விரிவான மனப்பான்மை இருப்பதினாலேதான் சமூக வாழ்வின் ஒன்றுபட்ட உயிருள்ள தன்

மையை உணர்ந்து, விவேகியான பொதுவுடைமைக்காரன் தன்னை ஓரளவு வளர்த்துக் கொள்ளுகிறான். அரசியலை அவன் சமயோசித சங்கதியாகக் கொள்ளுவதில்லை. அதை இருட்டில் தடவுகிறதைப் போலவும் அவன் கருதுவதில்லை. அவனுடைய நோக்கங்களும், அவன் எதற்காக உழைக்கிறானோ அந்த இலக்கியங்களும் போராட்டத்திற்கு ஒரு பொருளைத் தந்து, அவன் மேற்கொள்ளும் தியாகங்களுக்குத் தூண்டுதலாய் நிற்கின்றன. மனிதவர்க்கத்தின் தலைவிதி இன்னதுதானென்று அறிவதற்காக முன்னேறிச் செல்லும் கம்பீரமான சேனையில் தானும் ஒரு பகுதி என்ற எண்ணம் அவனிடமிருக்கிறது. தானும், சரித்திரமும் இணை பிரியாமல் கூடக்கூட நடந்து செல்வதாக அவனுக்கு எண்ணமுண்டாகின்றது.

ஆனால் அநேக பொதுவுடைமைக்காரர்கள் இதை நேரே உணர்ந்து கொள்ளவில்லை. லெனின் ஒருவருக்குத்தான் சமுதாய வாழ்க்கையின் உயிருள்ள தன்மை முழுதும் தென்பட்டது போலும்! அதினாலேதான் அவர் ஆணித்தரமாக காரியம் செய்தார். பொதுவுடைமைத் தத்துவத்தை அறிந்து கொண்ட ஒவ்வொரு பொதுவுடைமைக்காரனுக்கும் ஓரளவு இந்த அறிவு ஏற்பட்டிருக்கிறது.

பொதுவுடைமைக்காரர்களில் பலரை சகித்துக்கொண்டிருப்பது கஷ்டம். பிறருக்கு கோபம் உண்டாக்கும் வினோதமான சக்தி அவர்களிடமிருக்கிறது. ஆனால் மிகுந்த சோதனைகளுக்கு ஆளானவர்கள் அவர்கள். பொதுவுடைமை, ருஷியாவிற்கு வெளியே அவர்கள் ஏராளமான கஷ்டங்களை எதிர்த்துப் போராட வேண்டியிருந்தது. அவர்களுடைய மகத்தான தைரியத்தையும், துணிவையும், தியாக வல்லமையையும் நான் எப்பொழுதுமே கண்டு வியந்திருக்கிறேன். கோடிக்கணக்கானவர்கள் பலவகைகளில் துன்பம் அநுபவிப்பதுபோல அவர்களும் கஷ்டத்தை அநுபவிக்கிறார்கள். ஆனால் சர்வ வல்லமையும் துன்பத்தைப் பார்த்துக் களிக்கும் தன்மையும் கொண்டதுபோல இருக்கும் விதிக்கு குருட்டுத்தனமாகப் பயந்து அவர்கள் துயருறுவதில்லை. அவர்கள் மனிதர்களைப்போலத் துன்பத்தை அநுபவிக்கிறார்கள். அவர்கள் துன்பம் அநுபவிப்பதில் ஒரு கம்பீர சோகம் இருக்கிறது.

ருஷியாவில் நடைபெற்றுவரும் ஜனநிர்மாண சோதனைகளின் வெற்றியை அல்லது தோல்வியைக் கொண்டு, மார்க்ஸ் அவர்களின் தத்துவத்தை அளந்து மதிப்பிட முடியாது. அநேக எதிர்பாராத சம்பவங்களும் சந்தர்ப்பங்களும்சேர்ந்து கொண்டு, இந்தச் சோதனைகளை வெற்றிபெருமல் ஒருக்கால் தலைகுப்புற வீழ்த்திவிடலாம். அவ்வாறு நேருவது சகஜமல்ல; என்றாலும் வல்லமை பொருந்திய ஜனசமூக எழுச்சிகள் தோற்றுப்போனாலும் அவைகளால் லாபமுண்டு. ருஷியாவில் நேர்ந்த பல நிகழ்ச்சிகளில் எனக்கு இயற்கையாகவே வெறுப்பு. இருந்தாலும் அங்கே நடைபெறும் சோதனைகளாலேதான் மனிதவர்க்கத்திற்கு உய்வுண்டாகும் என்று நான் நம்புகிறேன். எனக்கு அதிகமாக அவைகளைப் பற்றித் தெரியாது. அவர்களுடைய செயல்களைப் பற்றித் தீர்ப்புக் கூறும்படியான நிலையில் நான் இல்லை. அங்கே அடக்குமுறையும், பலாத்காரமும் அதிகமாகக் கையாளப்பட்டு வருகின்றன. அவைகளின் விளைவுகளை இலேசாக ஒதுக்கித் தள்ளிவிட முடியாது என்று நான் அஞ்சுகிறேன். ருஷியாவின் தலைவிதிக்குத் தற்போதைய எஜமானர்களாகத் தோன்றுபவர்கள் தங்களுடைய தவறுகளினின்றும் படிப்பினை கற்றுக் கொள்ள அஞ்சுவதே இல்லை. அதன் பொருட்டு அவர்கள் பாராட்டுக்கு உரியவர்கள். அவர்கள் மீண்டும் பின்னே வந்து புதிதாக ஒன்றை நிர்மாணம் செய்ய முடியும். ஆனால் அவர்கள் தங்களுடைய லக்ஷியத்தை ஒரு பொழுதும் மறப்பதே இல்லை. சர்வ தேச பொதுவுடைமைச் சங்கத்தின் மூலமாக அவர்கள் அயல் நாடுகளில் செய்துவந்த பிரசார வேலைகள் பயனற்றுப் போய்விட்டன. அத்தகைய பிரசார வேலையை இப்பொழுது அதிகமாகக் காணோம்.

உலகத்தில் நிகழும் நிகழ்ச்சிகளின் வேகத்தினால், நிலைமை மாறினால் ஒழிய இந்தியாவில் அபேதவாதமும், பொதுவுடைமையும் நிலைப்பதற்கு நீண்ட காலமாகுமென்று தோன்றுகிறது. நாம் பொதுவுடைமைப் பிரசாரம் மட்டும் செய்தால் போதாது. ஆனால் முதலில் வகுப்பு வாதத்தை அடியோடு ஒழிக்கவேண்டும். வகுப்புவாதம் சம்பந்தப்பட்ட வரையிலும் இந்தியா பல நூற்றாண்டுகள் பின்னே இருந்து வருகிறது. காரியம் செய்யக் கூடிய வல்லபம் படைத்தவர்கள் சில்லரைச் சங்கதிகளில் தங்கள் ஊக்கத்தை வீணுக்கு

கின்றார்கள். ஒருவர் மற்றவரை வீழ்த்துவதற்காக சதி செய்கிறார்கள். உலகத்தை உயர்ந்ததாகவும், ஒளி பொருந்தியதாகவும் செய்ய வேண்டுமே என்ற ஆவல் அவர்களிடமில்லை. ஒருக்கால் இது தற்காலிகமாக இருந்து விரைவில் மறைந்து போகலாம்.

காங்கிரஸ் இந்த வகுப்புவாத இருளுக்கு வெளியே இருந்தபோதிலும் அதனுடைய மனப்பான்மை குட்டி முதலாளித்துவமே. ஆகையால் மற்ற பிரச்னைகளைப்போல இதற்கும் அந்த மனப்பான்மையைக் கொண்டு விமோசனம் தேடுகிறது. அதனால் அந்த வழியில் அதற்கு வெற்றி நிச்சயமில்லை. இன்று நடுத்தர வகுப்பின் மனப்பான்மையையே அது காட்டுகிறது. ஏனெனில் அதுதான் இப்பொழுது செல்வாக்குடையதாக இருக்கிறது. ஆனால் காணப்படுவதைப் போல, அது அவ்வளவு தீவிரமாக இல்லை. அதன் இரண்டு பக்கங்களிலும் இரண்டு சக்திகள் அதை அமுக்கிக் கொண்டிருக்கின்றன. ஒன்று மிகவும் பலமுள்ளது; மற்றொன்று இப்பொழுது பலவீனமாக இருந்தாலும் வேகமாக வளருவது. இப்பொழுது அது தன் நிலைமையின் ஒரு நெருக்கடியில் இருக்கிறது. இனிமேல் அதற்கு என்ன ஏற்படும் என்று சொல்வது அசாத்தியம். தனது பிரபல நோக்கமான தேசிய விடுதலையை அடைவதற்குமுன், பலமுள்ள கட்சியுடன் சேர்வதற்கில்லை. ஆனால் காங்கிரஸ் அந்த வெற்றியை அடையுமுன், வேறு பல சக்திகள் பலங்கொண்டு தங்கள் மார்க்கத்தில் திருப்பக் கூடும். அதற்கு பதிலாக ஆதிக்கம்கூட கொள்ளக்கூடும். ஆனால் இந்தியாவிற்கு கணிசமான அளவு சுதந்திரம் வரும்வரை காங்கிரஸ்தான் எல்லாக் காரியங்களையும் இழுத்துப் பிடித்துக்கொண்டு, ஜனங்களின் உள்ளங்களில் ஆதிக்கம் செலுத்தி வரும்.

எத்தகைய பலாத்கார வேலையும் கூடாது. அது இந்தியாவிற்கு கெடுதியை உண்டாக்கும். மேலும் வீண் பிரயத்தனம். சிற்சில இடங்களில் பயங்கரச் செயல்கள் நேர்ந்தாலும், பலாத்காரச் செயல்களின் பயனற்ற தன்மையை இந்தியா முழுவதும் மக்கள் உணர்ந்திருக்கிறார்கள் என்றே நம்புகிறேன். பலாத்காரத் துறையால் நாம் ஒரு அங்குலம் கூட முன்னேறிச் செல்ல முடியாது. தேசபக்தர்களின் பலாத்காரத்திற் கெதிராக அரசாங்கத்தாரின் பலாத்காரம்

வெளித்தோன்றும். இவ்வாறே சுற்றிச் சுற்றிப் போய்க் கொண்டிருக்கும். முடிவு ஏற்படாது.

நமக்குள் ஒற்றுமை ஏற்படுமென்றும், நாம் எல்லோரும் ஒன்று சேர்ந்து எதிரியை எதிர்த்துப் போராட வேண்டுமென்றும் நம்மிடத்தில் அடிக்கடி சொல்லுகிறார்கள். கவிதை ஆவேசத்துடன் இதை ஸ்ரீமதி சரோஜனி நாயுடு உபதேசம் செய்கிறார். அவர் கவி; ஆகவே லயத்தினுடையவும், ஒற்றுமையினுடையவும் நேர்த்தியைப்பற்றி வற்புறுத்திச் சொல்ல அவருக்கு உரிமை உண்டு. எதிர்த்துப் போராடும் மனோபாவம் இருக்குமாகில் ஒன்று சேருவது என்பது விரும்பத் தக்க சங்கதிதான். ஆனால் ஒன்று சேர்வது என்ற சொற்களை அலசிப் பார்தால் உண்மை வெளியாகின்றது. அதாவது உச்சியிலிருக்கிற சில தனிப்பேர்களுக்குள் ஒப்பந்தம் அல்லது ராஜி என்பது தான் உண்மையான சங்கதியாகும். இவ்வாறு ஒன்று சேர்வதில் என்ன ஆபத்து நேருமென்றால், அந்தக் கூட்டத்திலுள்ள மிக நிதானஸ்தர்களாக இருக்கப்பட்டவர்களின் லட்சியத்தைத்தான் ஏற்றுக் கொள்ள வேண்டியதாயிருக்கும். அவர்களுடைய செயல் முறையையும், காரியவேகத்தையும் தான் ஏற்றுக்கொள்ள வேண்டியதாயிருக்கும். இத்தகைய பேர்வழிகளில் பலருக்கு, எந்தக் கிளர்ச்சியும் பிடிப்பதில்லை. ஆகவே முடிவு என்னவெனில் யாதொரு எதிர்ப்பையும் செய்யாமல், வாளாவிருந்து தேங்கிக் கிடப்பதுதான். ஒன்று சேர்ந்து மார்பைக் காட்டுவதற்குப் பதிலாக, எல்லோரும் ஒன்று சேர்ந்து விஸ்தாரமாக முதுகுகளைக் காண்பிக்க வேண்டியிருக்கும்.

மற்றவர்களோடு ராஜி செய்யவும் ஒத்துழைக்கவும் மாட்டோம் என்று சொல்லுவது அபத்தமாகும். நேர்கோடு முறையில், வாழ்க்கையையும் அரசியலையும் பற்றி சிந்தனை செய்வது தவறாகும். "ராஜியில்லாமலும், செல்லும் பாதையை விட்டு சில சமயங்களில் விலகிச் செல்லாமலும் முன்னேறிச் செல்லலாம் என்று நினைப்பது குழந்தை யோசனையாகும். அது புரட்சிக் கூட்டத்தாருடைய சிறந்த சாதனமாக இருக்கவே முடியாது" என்று பிடிவாதக்கார லெனின் கூடச் சொல்லுகிறார். ராஜிகள் ஏற்படவேண்டியது தான். ராஜிகள் ஏற்படத்தான் செய்யும். அவைகளைப் பற்றி நாம் அதிகமாகத் தொல்லை படக்கூடாது. நாம் ராஜி

செய்தாலும் சரி, அல்லது ராஜிக்கு மறுத்தாலும் சரி; முக்கியமான விஷயங்களை முதலில் செய்ய வேண்டும். சில்லரை சங்கதிகளைப் பின்னே செய்து கொள்ளலாம். இந்த விதியைத் தான் எப்பொழுதும் கருத்தில் கொண்டிருக்க வேண்டும். நம்முடைய கொள்கைகளும், லக்ஷியங்களும் நம் கண் முன்னே தெளிவாக இருக்குமாகில், தற்காலிக ராஜிகளில் கெடுதி ஏற்படாது. நம்முடைய பலவீனமான சகோதரர்களுக்கு வருத்தம் வருமே என்று பயந்து நம்முடைய லட்சியங்களையும் கொள்கைகளையும் விட்டுக் கொடுக்கும் பொழுதுதான் ஆபத்து உண்டாகும். அவர்களுடைய கோபமும் வருத்தமும் பெரிதல்ல. தவறான பாதையில் மக்களை இட்டுச் செல்வதுதான் மோசமாகும்.

தற்காலிக சம்பவங்களைப் பற்றி மோகமாயும், அனுபவத்துக்கு ஒவ்வாததும் போல ஏதோ எழுதிக் கொண்டு போகிறேன். சாட்சியைப் போல சொல்லிக்கொண்டு போகிறேன். ஆனால் காரியம் கண்ணைக் காட்டி அழைக்கும் போது நான் வெறும் வேடிக்கை பார்ப்பவனாக இருந்ததில்லை. தகுந்த காரணம் இல்லாமலிருக்கையிலேயே முரட்டுத் தனமாக காரியம் செய்யும் சுபாவம் என்னிட மிருக்கிறது என்று அடிக்கடி என் பேரில் பழி சுமத்தப்பட்டிருக்கிறது. இப்பொழுது நான் என்ன செய்வேன்? எனது நாட்டார் என்ன செய்ய வேண்டு மென்று நான் யோசனை கூறுவேன்? தீர விசாரிக்காமல் எதையும் திட்டமாகச் சொல்லக் கூடாது என்ற இயற்கையான எச்சரிக்கையோடிருக்கும் பொது ஜன ஊழியனுடைய தன்மைதான் என்னிடம் இப்பொழுது மேலோங்கி இருக்கிறது. உண்மையைச் சொல்ல வேண்டுமானால், எனக்கு ஒரு பாதையும் புலப்படவில்லை. பாதையைக் காண்பதற்கு நான் முயற்சி செய்யவும் இல்லை. எப்பொழுது ஒன்றும் செய்யக் கூடாத நிலைமையில் நான் இருக்கிறேனோ, அப்பொழுது என்ன செய்வதென்பதைப்பற்றி ஏன் கவலைப்பட வேண்டும்? ஆனால் நான் கவலைப்படத்தான் செய்கிறேன். அதைத் தவிர்க்க முடியாது. ஆனால் நான் சிறையிலிருக்கும் வரையில் இன்னது செய்வது என்பதைப்பற்றி யோசிக்காமல் தப்பித்துக் கொள்ள முயலுகிறேன்.

சிறையில் என்ன வேலை யிருக்கிறது? சிறையில் ஒருவன் காரியவாதியாக இருக்க முடியாது. அவன் நிகழ்ச்சி

களுக்கு இலக்காகத்தான் இருக்கமுடியும். ஏதாவது ஒன்று நேராதா என்று ஒருவன் காத்துக் கொண்டே இருக்க வேண்டியிருக்கிறது. இந்தியாவையும் உலகத்தையும் கலக்கிக்கொண்டு வரும் அரசியல் ஜன நிர்மாணப் பிரச்னைகளைப்பற்றி நான் எழுதிக் கொண்டு வருகிறேன். ஆனால் வீடு மாதிரி ஆகிவிட்ட சிறையின் இந்த சிறிய அறையில் அவைகளால் என்ன பயன்? கைதிகளுக்கு ஒரே ஒரு சங்கதியிலே தான் அதிகமான சிரத்தை யிருக்கிறது. விடுதலை நாள் தான் அந்தச் சங்கதியாகும்.

நைனி சிறையிலும், அல்மோரா சிறையிலும் பல கைதிகள் என்னிடம் வந்து 'ஜுகிலி'யைப்பற்றி ஆவலோடு விசாரித்தார்கள். 'ஜுகிலி' என்றால் முதலில் எனக்குப் புரியவேயில்லை. 'ஜுகிலி' என்பது 'ஜுபிலி' என்று பின்னர் தெரிந்து கொண்டேன். அவர்கள் ஜார்ஜ் மன்னருடைய வெள்ளி விழாக் கொண்டாட்ட வதந்திகளைப்பற்றி பிரஸ்தாபம் செய்தார்கள். ஆனால் அது இன்னதென்று அவர்களுக்குத் தெரியவில்லை. நெடுநாள் பழக்கத்திலிருந்து அவர்களுக்கு ஜுகிலி என்ற வார்த்தைக்கு ஒரு அர்த்தம் தான் தெரியும். 'ஜுகிலி' சமயத்தில் பலர் விடுதலையடைவார்கள்; அல்லது தண்டனை குறைக்கப்படும். இதுதான் அவர்களுக்குத் தெரியும். ஆகவே நீண்டகாலம் சிறைவாசம் செய்யும் ஒவ்வொரு கைதிக்கும் 'ஜுகிலி' விஷயத்தில் சிரத்தையுண்டு. அவர்களுக்கு 'ஜுகிலி' என்பது அரசியல் சீர்திருத்தங்களைக்காட்டிலும், பார்லிமெண்டு சட்டங்களைக் காட்டிலும், அபேத வாதத்தைக் காட்டிலும் உயர்ந்த ஒன்றாகும்.

# LXVIII

## முடிவுரை

> உழைப்பதுதான் நமது கடமை; நம்முடைய ஜீவிய காலத்தில் நம்முடைய உழைப்பின் லக்ஷியத்தை நாமே பூர்த்தி செய்வதென்பது முடியாத காரியம்.
>
> —நால்மட்.

வரலாற்றின் இறுதிக்கு வந்துவிட்டேன்; என்னுடைய வாழ்க்கைப் பிரயாணத்தின் ஆத்மசரிதம் அல்மோரா ஜில்லா சிறையில் 1935ம் வருஷம் பிப்ரவரி மாதம் 14-ந் தேதி வரை கொண்டுவந்து நிறுத்தப்பட்டிருக்கிறது. இன்றைக்கு மூன்று மாதங்களுக்கு முன் என்னுடைய நாற்பத்தைந்தாவது ஆண்டு இந்த சிறையில் நிறைந்தது. இன்னும் பல வருஷங்கள் நான் உயிரோடு இருக்கக் கூடும். சில சமயங்களில் அலுப்பும் கிழத்தன்மையும் மெள்ள என்னிடம் கன்னம் போட்டுகொண்டு வருகின்றன. வேறு சில சமயங்களில் மகா சுறுசுறுப்பும் ஜீவசத்தும் நிறைந்திருக்கின்றேன். எனக்கு சாதாரணமாக நல்ல கெட்டியான தேகம். நான் திடுக்கிட்டுப் போனாலும் அதிலிருந்து வலுக்குலையாமல் வெளிவரும் சக்தி என்னிடமிருக்கிறது. திடீரென்று எனக்கு தலைவிதி நேர்ந்தாலொழிய, நீண்டகாலம் உயிரோடிருப்பேன் என்று நான் நினைக்கிறேன். ஆனால் அந்த வருஷங்கள் முடிந்த பிறகுதானே, பின் கதையை எழுத முடியும்?

பிரயாணப் போக்கில் பரபரப்பைத் தரும்படியான நிகழ்ச்சிகள் நேராமல் இருக்கலாம். பல வருஷங்கள் சிறையிலேயே கழிக்க நேர்ந்ததால் பரபரப்புள்ள நிகழ்ச்சிகள் எப்படி நேரமுடியும்? மேலும் அவைகள் சிறப்பான எந்தத் தன்மையும் வாய்ந்தவையல்ல. என்னைப் போலவே பதினாயிரக் கணக்கான சகோதர சகோதரிகள் இந்த நாட்டில் வாழ்ந்திருக்கிறார்கள். எனவே என்னுடைய இந்த வரலாறு அவர்களைப் பற்றிய வரலாறும்தான். எங்களுக்குப் பொது

வாயுள்ள மனவெழுச்சியும், மனத்துயரமும், அலுப்பில்லாத சுறுசுறுப்பும், பலவந்தமான தனிமையும் எங்களுக்குப் பொதுவானவை. நான் திரளில் ஒரு துளி. அதோடு சேர்ந்து செல்லுகிறேன். சில சமயத்தில் அதன்பேரில் ஆதிக்கம் செலுத்துவேன். வேறு சமயங்களில் அது தான் என்னை இழுத்துக் கொண்டு செல்லும். ஆனால் ஏனைய துளிகளைப் போல நானும் திரளுக்கு இடையே என்னுடைய தனி வாழ்வு வாழ்ந்து வந்தேன். பல சமயங்களில் நாங்கள் வெறும் பாவனை செய்திருக்கிறோம். வேறு பல சமயங்களில் உண்மையாகவும், சிரத்தையுடனும் நாங்கள் வினையாற்றி யிருக்கிறோம். இதனால் நாங்கள் எங்களுடைய சிறிய தன்மைகளை மறந்து மேலேறிச் சென்று வேறு வகையில் கிடைக்கக் கூடாத பிராதான்யத்தை அடைந்திருக்கிறோம். சில சமயங்களில் எங்களுடைய செயலும் லக்ஷியமும் ஒவ்வினதுபோல இருக்கும். அந்தச் சமயங்களில் அத்தகைய வாழ்க்கையால் ஏற்படும் பரிபூரண உயிரை நாங்கள் அனுபவித்து ஆனந்தமடைந்திருக்கிறோம். இந்த லக்ஷியங்களைக் கைவிட்டுவிட்டு மிருக பலத்திற்குக் குனிந்து கொடுத்தால், அது வீணான வாழ்க்கையென்றும், அதனால் அதிருப்தியும், உள்ளக் கலக்கமும் அதிகரிக்கு மென்றும் நாங்கள் உணர்ந்து கொண்டோம்.

இந்த வாழ்க்கையினால் எனக்குப் பல சன்மானங்கள் கிடைத்தன. அவைகளில் ஒன்று மிகச் சிறந்ததாகும். வாழ்க்கை மிகவும் ருசியான தென்றும், அதில் செய்ய வேண்டியது எவ்வளவோ இருக்கிறதென்றும் அதிலிருந்து கற்றுக் கொள்ளவேண்டியது எவ்வளவோ இருக்கிறதென்றும் நான் தெளிவாக உணர்ந்து கொண்டேன். நான் வளர்ந்துகொண்டு போவதாக என்னிடம் எண்ணம் இருந்து கொண்டேயிருக்கிறது. அந்த எண்ணமே நான் படிப்பதற்கும் செயல் செய்வதற்கும் தூண்டுதலாக இருக்கிறது. அதனால் வாழ்க்கை மிகவும் ருசியுள்ளதாக ஆகிவிட்டது.

இந்த வரலாற்றை எழுதுகையில், ஒவ்வொரு சம்பவமும் நடக்கிற சமயத்தில், என்னுடைய எண்ணங்களும், என்னுடைய மன ரீதிகளும் எப்படி இருந்தன என்றும், அந்த சமயத்தில் என்னுடைய உணர்ச்சிகள் எப்படி மாறு பட்டனவென்றும் தெளிவாக எடுத்துக்காட்ட முயன்றிருக்

கிறேன். இறந்த காலத்தில் இப்படித்தான் மனமிருந்தது என்பதை ஞாபகப்படுத்தி வரைவது கஷ்டமாகும். ஆனல் அதன் பின் விளைவுகளை மறப்பது எளிதல்ல. ஆகவே, முன்னே நடந்தவைகளுக்கு பின்னே என் மனதில் உதித்த எண்ணங்களின் மூலமாகச் சிறிது வர்ணம் தீட்டப்பட்டிருக்கலாம். ஆனல் இந்த வரலாற்றை எழுதுவதன் நோக்கம் என்னவென்ருல், நான் என்னுடைய மனதில் எவ்வாறு வளர்ந்தேன் என்பதை நான் தெரிந்து கொள்ளும் பொருட்டுத்தான். நான் எவ்வாறு இருந்தேன் என்பதை இந்த வரலாறு குறிப்பிடாமல், நான் எவ்வாறு இருக்க ஆசைப்பட்டேன் என்பதைக்குறிப்பிட்டிருக்கலாம்; அல்லது நான் எவ்வாறு இருந்ததாக கற்பனை செய்து கொண்டேனே அதைக் குறிப்பிட்டிருக்கலாம்.

சில மாதங்களுக்குமுன், என்க்கும் பொதுஜனங்களுக்கும், ரத்தத்திலும் உள்ளத்திலும் தொடர்பு, கிடையாதென்றும், ஆனல் என்னுடைய தியாகங்களாலும் லட்சியத்தாலும், கருத்துத் துடிப்பாலும் நான் அபாயமானவன் என்றும், தன் மயக்கம் கொண்டவன் என்றும் ஸர். ஸி. பி. ராமஸ்வாமி அய்யர் பகிரங்கமாகச் சொன்னர். தன் மயக்க நோயால்பீடிக்கப்பட்டிருக்கும் ஒருவன் தன்னைத் தானே சரியாய் அளந்து நிதானித்துக் கொள்ள முடியாது. அது எப்படிப்போனலும், இந்தச் சொந்த விஷயத்தில்நான் ஸி. பி. யோடு சச்சரவு செய்யத் தயாராயில்லை. நாங்கள் சந்தித்து பல ஆண்டுகள் ஆகின்றன. ஆனல் முன்னெரு காலத்தில் நாங்கள் இருவரும் சுய ஆட்சி லீக்குக்கு கூட்டுக் காரியதரிசிகளாக இருந்தோம். அதன் பின்னர் பல நிகழ்ச்சிகள் நேர்ந்து விட்டன. ஸி. பி. ஒவ்வொரு படியாக ஏறி மேகமண்டலம் வரையிலும் போய் விட்டார். நான் மண்ணேடு மண்ணுக ஒட்டிக் கொண்டு கிடக்கிறேன். நாங்கள் இருவரும் இந்த நாட்டில் பிறந்தோம் என்பதைத் தவிர எங்களுக்குகிடையே வேறு எத்தகைய பிணிப்பும் இப்பொழுது கிடையாது சென்ற சில ஆண்டுகளாக அவர் இந்தியாவில் நடந்துவரும் பிரிட்டிஷ் ஆட்சிக்கு மன்னிப்புக் கேட்டுக் கொள்ளுவதுபோல. அதை ஆதரித்துப் பேசுகிருர். இந்தியாவிலும் சரி, வெளி நாடுகளிலும் சரி அவர் எதேச்சாதிகாரத்தைக்கண்டு ஆனந்தக் கூத்தாடுகிருர். அவரே சுதேச சமஸ்தானம் ஒன்றில் எதேச்சாதிகாரத்துக்கு அணிகலனுக விள

பம் கொடுக்கப்படுமாகில், எனது தற்போதைய வாழ்வில் நான் பல மாறுதல்களைச் செய்வேன் என்பதில் சந்தேகமில்லை. ஏற்கனவே செய்ததில் பல வழிகளில் திருத்தி சீர்படுத்த முயலுவேன். ஆனால் பொதுஜன வாழ்க்கையில் நான் கொண்ட முக்கியமான தீர்மானங்களை ஒரு நாளும் மாற்றவே மாட்டேன். என்னால் மாற்றமுடியாது. ஏனென்றால் அவைகள் என்னைக் காட்டிலும் வலுக் கொண்டவையாகும். என் கட்டுக்கு மீறிய சக்தியொன்று என்னை அவைகளுக்குள் துரத்தி யடிக்கின்றது.

நான் சிறைக்குச் சென்று அநேகமாக ஒரு வருஷமாகிறது. என்னுடைய இரண்டு வருஷ தண்டனையில் ஒருவருஷம் போய்விட்டது. பூரணமாக இன்னும் ஒரு வருஷம் இருக்கிறது. வெறுங் காவலுக்கு வஜா கிடையாதாகையால், இந்தத் தடவை எனக்கு தண்டனையில் தள்ளுபடி இருக்காது. சென்ற ஆகஸ்டுமாதத்தில் நான் வெளியே இருந்த நாட்களையும் தண்டனையிலிருந்து கழித்திருக்கமாட்டார்கள். இந்த வருஷமும் முடிந்து போய், நான் சிறைக்கு வெளியே போகக்கூடும். அதற்கப்புறம்? எனக்கொன்றுமே தெரியாது. ஆனால் எனது வாழ்க்கையில் ஒரு பகுதி முடிந்து விட்டதென்றும், புதியதொரு சகாப்தம் தோன்றுமென்றும் எனக்குப் படுகிறது. அது எந்த மாதிரியாக இருக்கும் என்பதை நான் தெளிவோடு ஊகம் செய்யமுடியாது வாழ்க்கையென்ற நூலின் ஏடுகள் பார்வையினின்றும் மறைந்து கிடக்கின்றனவே!

## பின்னுரை

பேடன் வெய்லர், ஷ்வார்ஸ் வால்ட்,
25, அக்டோபர்' 1935.

சென்ற மே மாதம் என்னுடைய மனைவி போவாலியை விட்டு மேற்கொண்டு வைத்தியம் பார்த்துக் கொள்ளுவதற்காக ஐரோப்பாவிற்குப் போனாள். அவள் சென்றபின் நான் போவாலிக்குப் போகவே இல்லை. பக்ஷத்திற்கு (15 நாளைக்கொருதரம்) மலைப்பாதைகளிலே சவாரி செய்வதும் நின்று போய் விட்டது. இவைகள் இல்லாமற்போகவே எனக்குத் துயரமுண்டாயிற்று. அல்மோரா சிறை முன்னைக் காட்டிலும் அதிகமான பயங்கரத்தோடு தோன்றிற்று.

குவெட்டா பூகம்பச் செய்தி வந்தது. சிறிதுகாலம் மற்ற யாவும் மறந்துபோய் விட்டன். ஆனால் அதிக காலத்துக்கல்ல. தன்னையும் தன்னுடைய விநோதமான வழிகளையும் நாம் மறந்து விடும்படியாக இந்திய அரசாங்கம் நம்மை விடுவதே இல்லை. காங்கிரஸ் தலைவரும், பூகம்ப நிவாரண வேலையைப்பற்றி இந்தியாவில் வேறெவரைக் காட்டிலும் அதிகமாகத் தெரிந்தவருமான ராஜேந்திரபிரசாத் நிவாரண வேலைக்காக குவெட்டாவிற்குப் போகாமல் அரசாங்கத்தார் தடுத்து விட்டார்கள். காந்திஜீக்கும் அவ்வாறே குறிப்பிட்டபோது ஜன ஊழியர் எவரும் போகமுடியவில்லை. குவெட்டாவைப் பற்றி கட்டுரைகள் எழுதியதற்காக பல இந்தியப் பத்திரிகைகள் தங்களுடைய ஜாமீன் தொகையை ஆளாகி இழந்தன.

எங்கேயும் ராணுவ மனப்பான்மை, போலீஸ் பார்வை. அஸெம்பிளியில் அரசாட்சி நடத்துவதில், எல்லைப்புறத்தில் வெடிகுண்டு எறிவதில் எங்கும் ராணுவ மனப்பான்மை. இந்தியாவிலிருக்கும் பிரிட்டிஷ் அரசாங்கம் இந்தியர்களில் பெரும்பான்மையரோடு நிரந்தரப் போர் தொடுத்துக்கொண்டிருப்பதாகத் தோன்றிற்று.

போலீஸ் தேவைதான்; உபயோகமுள்ள படைதான். ஆனால் போலீஸ்காரர்களும், போலீஸ் தடிகளும் நிறைந்திருக்கிற இடம் வசிப்பதற்கு அவ்வளவாக ஏற்ற இடமல்ல. எவனொருவன் கட்டுக் கடங்காமல் மிருக பலத்தை உபயோகிக்கிறானோ அவனும், யார் பேரில் அத்தகைய மிருக பலம் பிரயோகம் செய்யப்படுகின்றதோ அவனும் உருக்குலைந்து சீரழிந்து போகிறார்கள் என்று அடிக்கடி சொல்லுவதுண்டு. இந்த உண்மை இந்தியாவில் நிதர்சனமாக, காலக்கிரமத்தில் நிரூபிக்கப்பட்டு வந்திருக்கிறது. முக்கியமாக இந்திய சிவில் சர்விஸ் வர்க்கத்தார் எல்லா வகைகளிலும் சீர்குலைந்து வருவதைக் காணலாம். இந்தச் சீர்குலைவை சிறப்பாக உயர்தர உத்தியோகஸ்தர்களிடையே தெளிவாகக் காணலாம். ஆனால் பொதுவாக இது எல்லா உத்தியோகஸ்தர்களுக்கிடையேயும் சரடுபோல ஓடிக்கொண்டிருக்கிறது. புதிதாக உயர்ந்த உத்தியோகத்திற்கு ஆள் நியமிக்கவேண்டிய சந்தர்ப்பம் ஏற்படும் பொழுதெல்லாம் இந்தப் புதிய ராணுவ ஆவேசம் படைத்தவர்களே அநேகமாகத் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள்.

என்னுடைய மனைவியின் நிலைமை நெருக்கடியாயிருக்கிறதென்ற செய்தி கிடைத்ததும், திடீரென்று செப்டம்பர் மாதம் 4ந் தேதி நான் அல்மோரா சிறையிலிருந்து விடுதலை செய்யப்பட்டேன். ஜர்மெனியில் ஷ்வார்ஸ் வால்ட் என்ற பிராந்தியத்திலிருந்த பேடன்வெய்லர் என்ற ஊரில் அவள் வைத்தியம் பார்த்துக் கொண்டிருந்தாள். என்னுடைய பாக்கி தண்டனை நிறுத்தி வைக்கப்பட்டிருக்கிறதென்று எனக்கு அறிவிக்கப்பட்டது. ஐந்தரை மாதத்திற்கு முன்னேயே விடுதலை செய்யப்பட்டேன். ஆகாய மார்க்கமாக ஐரோப்பாவிற்கு பறந்தோடிச் சென்றேன்.

என்ன ஐரோப்பா! ஒரே குழப்பம்! எப்பொழுதும் யுத்தம் நேருமென்ற பீதிதான் ஒரே கலக்கம்; பொருளாதார நெருக்கடிகள் நேர்ந்து விடுமோ என்று ஸதா கிலி; அபிஸீனியா ஆக்கிரமிக்கப்பட்டு அதனுடைய மக்கள் வெடிகுண்டுகளுக்கு இரையாகிக் கொண்டிருக்கிறார்கள். சாம்ராஜ்யங்களுக்குள்ளே தகராறுகள்; ஒன்றையொன்று பயமுறுத்திக் கொண்டிருக்கின்றன; சாம்ராஜ்ய வல்லரசுகளுக்குள் முதன்மை பெற்று விளங்குகின்ற இங்கிலாந்து உலக சமா

தானத்திற்காகவும், சர்வதேச சங்க ஒப்பந்தத்திற்காகவும் உயிரைக் கூட விடுவதாகச் சொல்லிக் கொண்டிருக்கிறது. ஆனால் அது தனக்குக் கீழிருக்கும் குடி மக்களை தாக்ஷிண்யமின்றி வதைத்து அடக்கி, வெடிகுண்டுகளுக்கு இரையாக்குகின்றது. ஆனல் இங்கே (ஜெர்மனி) எல்லாம் சாந்திமயமாக இருக்கின்றது. நாஜி அடையாளமான ஸ்வஸ்திகாவைக்கூட காணேம். பள்ளத்தாக்கிலிருந்து எழும் மூடுபனி எட்டத்திலிருக்கிற பிரான்ஸின் எல்லைப்புறத்தை என் பார்வையினின்றும் மறைத்து விடுகிறது. அதற்குப் பின்னே என்ன மூண்டுகொண்டிருக்கிறதோ யார் கண்டார்கள்?


KOVILOOR ANDAVAR LIBRARY, KOVILOOR
A. No. 18992

---

## அனுபந்தம் 1

## பூரண சுயேச்சை தின பிரதிக்ஞை

## 1930ஷு ஜனவரி 26உ

"உழைப்பின் பலனை ஆண்டு அனுபவிக்கவும், சுகவாழ்வினுக்குரிய தேவைகளைப் பெறவும், ஏனைய தேச மக்களைப் போல் இந்திய மகாஜனங்களுக்கும் சுதந்திரமுண்டு. அப்பொழுதுதான் இந்திய மக்கள் உலக வாழ்வில் முன்னேறுவதற்குரிய பூரணமான சந்தர்ப்பங்கள் வாய்க்கும். இது எவரும் மறுக்கமுடியாத உண்மையாகும். மேலே சொல்லிய உரிமைகளையும் சந்தர்ப்பங்களையும் எந்த அரசாங்கமேனும் பறிக்குமாயின், அந்த அரசாங்கத்தை மாற்றவோ அல்லது மாய்க்கவோ மகா ஜனங்களுக்கு உரிமையுண்டு.

"இந்தியாவில் ஆட்சி செலுத்தும் பிரிட்டிஷ் அரசாங்கம் இந்திய மக்களின் சுயேச்சையையும், சுதந்திரத்தையும் பறித்துளது; அன்றியும் பாமர ஜனங்களைச் சுரண்டி அவர்களது நலபலன்களை ஏகபோகமாக அனுபவிப்பதையே அடிப்படையாகவும் கொண்டுளது; மேலும் பொருளாதாரம், ராஜீயம், ஞான மார்க்கம், ஆத்மார்த்தம் ஆகிய துறைகளிலும் இந்தியாவை நாசப்படுத்தி விட்டது. ஆதலால் இந்திய மகாஜனங்கள் அத்தகைய பிரிட்டிஷ் தொடர்பை அறவே கைவிடுத்து பரிபூரண சுயேச்சையை அடைதல் வேண்டும்.

செல்வ அபிவிருத்தி வகையில் இந்தியா தேசம் அழிக்கப்பட்டுக் கிடக்கின்றது. நமது மக்களிடமிருந்து வாங்கப்படும் வரிப்பணமோ வருவாய்க்கு மிகவும் மிதமிஞ்சியதாகும். நமது சராசரி வருமானம் அன்றாடம் ரூ. 0—1—9 தான். நம்மவர் செலுத்தும் பளுவான வரிகளால் நூற்றுக்கு இருபது பங்கு விவசாயிகளிடமிருந்து நிலவரியாக வாங்கப்படுகிறது. இன்னும் அவ்வரிகளில் நூற்றுக்கு

மூன்றுபங்கு உப்பு வரியாகும். அந்த உப்புவரி ஏழை மக்களுக்கு ஒரு பெருஞ் சுமையாகும்.

“ராட்டையில் நூல் நூற்றல் போன்ற கிராமத்தொழில்கள் நிர்மூலமாக்கப்பட்டு விட்டன. அதனால் ஏழை மக்கள் வேறு குடிசைத் தொழில் இல்லாமல் ஆண்டு தோறும் நான்கு மாதம் சோம்பிக் கிடந்து அறிவு குன்றுகின்றனர். கிராமக் கைத்தொழில்கள் நாசம் செய்யப்படின் ஏனைய தேசங்களிலே அம்மக்களுக்கு அரசாங்கம் வேறு தொழில் தேடித் தரும். நம் தேசத்திலோ அரசாங்கம் அவ்வாறு வேறு தொழில் ஒன்றும் ஏழை விவசாயிகளுக்குத் தேடித் தரவில்லை.

“விவசாயிகளின் தலையில் இன்னும் சுமையைத் தூக்கி வைக்கும் முறையில் கடல் சுங்கமும், நோட்டுச் செலாவணியும் வகுத்து அமைக்கப்பட்டுள்ளன. நமது தேசத்தில் இறக்குமதியாகும் பொருள்களிலே பெரும்பாலானவை பிரிட்டிஷ் சாமான்களேயாம். கடல் சுங்க வரிகளுமே, வெளிப் படையாகப் பட்சபாதம் பிரிட்டிஷ் சாமான்களுக்கு நன்மை தருவனவாக விருக்கின்றன. தவிர அக்கடல் சுங்க வருமானத்தைக் கொண்டு பாமர மக்களின் வரிச் சுமையைக் குறைக்காமல் அபாரமாக செலவுக்கு இடமாகவுள்ள நிர்வாகத்தை நிலைநிறுத்துவதற்கான செலவு நடக்கிறது. நாணய மாற்று எனப்படும் பரிவர்த்தனை விகிதத்தில் கையாளப்படும் திரிசமனோ மேற் சொல்லியதை விட இன்னும் கேள்வி முறையற்றதாகும். அதன் விளைவாக இத்தேசத்திலிருந்து லட்சக் கணக்கான பணம் வெளி நாடுகளுக்குக் கொள்ளை போய் விடுகிறது.

“இந்தியாவின் ராஜீய வாழ்வோ பிரிட்டிஷ் பரிபாலனத்தின் கீழ் மிகவும் கேவலமாகும். இத்தகைய இழி நிலை இதற்குமுன் எக்காலத்திலும் இத்தேசத்திற்கு நேர்ந்ததில்லை. எந்தச் சீர்திருத்தமும் நமக்கு உண்மையான அரசியல் அதிகாரத்தை அளிக்கவில்லை. நம்மவரில் மிகவும் மகிமை வாய்ந்தவர்கள் கூட அன்னிய ஆதிக்கம் கண்டு தலை குனிய நேருகின்றது. தாராளமான பேச்சுச் சுதந்திரமும், பரஸ்பரம் நாம் கூடி வாழ்வதற்கான சங்க சுதந்திரமும் நமக்கு அளிக்கப்படாமல் மறுக்கப்பட்டுள. நமது மக்களிலே பலர்

தேசப்பிரஷ்டர்களாய் வெளிநாடுகளில் வசிக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டுளது. அவர்கள் தங்கள் தாயகத்திற்குத் திரும்பி வர வகையில்லை. அரசியல் துறையில் நமக்குள்ள விசேஷமான சாமர்த்தியத்தைக் கையாள வகையின்றி அது மாய்க்கப்பட்டுளது. ஜனங்களோ கிராம உத்தியோக வேலையும், குமாஸ்தா வேலையும் கொண்டே திருப்தியடைய நேர்ந்துளது.

"ஞான மார்க்கமாகப் பார்த்தாலோ, அறிவுத் துறையில் நெடுங்காலமாக நடுநாயகம் வகித்து வந்த நம்மைத் தற்கால கல்வி முறை கீழே வீழ்த்தி விட்டது. அன்றியும் நமக்குக் கிடைக்கும் கல்வியில் பயிற்சி பெற நம்மைக் கட்டிப் போட்டிருக்கும் அடிமைச் சங்கிலியில் மோகம் கொண்டு கிடக்கும்படி செய்கிறது.

"நமக்கு ஆயுதம் தரிக்க வகையில்லை. அதனால் நாம் ஆண்மையற்றவர்களாகி விட்டோம். நம்மை ஓங்க வொட்டாமல் தடுத்து, நம் தேசத்தைப் பற்றி நிற்கும் அன்னியச் சேனை நம்மை எப்பொழுதும் நசிக்கிக் கொண்டிருக்கிறது. ஆகவே நாம் நம்மைப் பாதுகாத்துக் கொள்ள முடியாது. அன்னியரின் படை யெடுப்பை எதிர்த்து நிற்க நம்மால் இயலாது. கள்வரும் கொள்ளைக்காரரும் கயவர்களும் நமது வீடுகளில் புகுந்து நமது மனைவி மக்களைத் தாக்கினால் அம் மனைவி மக்களைக் காக்கவும் நமக்கு வலுவில்லை என்ற எண்ணமே நமக்கு உண்டாகும்படி செய்து விட்டது.

"ஆதலால், மேலே சொல்லிய வண்ணம், நான்கு வகையிலும் நம் தேசத்திற்கு அனர்த்தம் விளைத்திருக்கும் ஆட்சிக்கு நாம் இனி ஒரு கணமும் உட்பட்டிருக்க முடியாது; உட்பட்டிருப்பின் அது மக்களுக்குப் பாவம் இழைத்ததாகும்; ஆண்டவனுக்கும் குற்றம் புரிந்ததாகும். எனினும் நமது சுதந்திரத்தை அடைவதற்குரிய திறமையான மார்க்கம் ஹிம்சையில் அன்று என்பதை நாங்கள் அறிவோம். ஆதலால் பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு வலுவில் உதவிபுரிவதை நம்மால் கூடியவரையில் நிறுத்திக்கொள்ள நாம் நம்மைத் தயார் செய்து கொள்ளுவோம்; மேலும் வரி கொடாமை உள்பட சட்டமறுப்பு செய்யவும் நாம் ஆயத்தமாவோம்.

"ஆத்திர மூட்டப்பட்டபோதிலும் ஹிம்ஸை வழியி லிறங்காமல் அரசாங்கத்துக்கு வலுவில் உதவியாயிருப்பதை விடுத்து, வரி மறுப்பும் செய்யக்கூடுமோயின் கருணையற்ற ஆட்சி முறை ஒழிந்து போவது நிச்சயம் என்று நாங்கள் நம்பிக்கை கொண்டுளோம். ஆகவே பூரண சுயராஜ்யத்தை நிலைநாட்டுவதற்காக அவ்வப்பொழுது காங்கிரஸ் மஹா சபைவெளியிடும் அறிக்கையின்படி நடக்க நாங்கள் இப் பொழுது திரிகரண சுத்தியாய் தீர்மானம் செய்கிறோம்"

---

## அநுபந்தம்—2

### சமாதான நிபந்தனைகள்

*சமாதானத்திற்கான நிபந்தனைகளைப்பற்றி யோசனை கூறி எரவாடா சிறையிலிருந்து காங்கிரஸ் தலைவர்கள் 1930-ம் வருஷம், ஆகஸ்டு மாதம் 15-ந் தேதியன்று ஸர் தேஜ்பகதூர் சாப்ருவுக்கும், ஸ்ரீமான் எம். ஆர். ஜெயகருக்கும் அனுப்பிய கடிதம்:—*

எரவாடா மத்திய சிறை,
15—8—30.

அன்பார்ந்த நேயர்களே,

பிரிட்டிஷ் கவர்ன்மெண்டுக்கும் காங்கிரஸுக்குமிடையே சமாதான ஏற்பாடு ஒன்றைச் செய்யும் முயற்சியை உங் கள் கடமையாக் கொண்டிருப்பதற்காக நாங்கள் உங்களுக் குப் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறோம். உங்களுக்குப் மேன்மை தங்கிய வைஸ்ராய் அவர்களுக்கும் நடந்த கடிதப் போக்கு வரத்தைப் பார்த்த பிறகும் உங்களுடன் பன்முறை சம்பாஷித்ததற்குப் பிறகும் நமக்குள் விஷயங்களை விவா தித்ததற்குப் பிறகும் நமது தேசத்திற்கு கௌரவமான முறையில் ராஜி ஏற்படுத்திக் கொள்ளுவதற்கான காலம் இன்னும் வரவில்லை என்ற முடிவிற்கு நாங்கள் வந்திருக் கிறோம். சென்ற ஐந்து மாதங்களாக பாமர மக்களிடையே ஏற்பட்டுள்ள எழுச்சி அற்புதமானதாக விருக்கிறது; பொது மக்கள்—எல்லா வகுப்பினரும்—எவ்வளவோ தியாகங்கள் செய்து வருகின்றனர்; எனினும் உடனே முடிவைக் காண் பதற்கு போதுமான தியாகம் இன்னும் செய்யப்படவில்லை என்பதே எமது கருத்து. சட்டமறுப்பியக்கத்தால் தேசத் திற்குப் பாதகமேற்பட்டிருக்கிறதென்றோ அல்லது அது